உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

மெய்கண்ட சாத்திரம்

என வழங்கும்

# சித்தாந்த சாத்திரம்

## பதினான்கு

## மூலமும் உரையும்

உந்தி[1] களிறு[2] உயர்போதம்[3] சித்தியார்[4]
பிந்திருபா[5] உண்மை[6] பிரகாசம்[7]—வந்தஅருட்[8]
பண்புவினா[9] போற்றி[10] கொடி[11] பாசமிலா நெஞ்சுவிடு[12]
உண்மைநெறி[13] சங்கற்ப[14] முற்று.

சைவ சித்தாந்த மகா சமாஜம்

திருவருளகம், 22-வ, கல்லுக்காரத் தெரு

மயிலாப்பூர், சென்னை.

1934



தனிப்பிரதி
நான்கு பிரதிகள்

# பதிப்புரை

“பண்டைமறை வண்டாற்றப் பசுந்தேன் ஞானம்
பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக்
கண்டஇரு தயகமல முகைகளெல்லாங்
கண்திறப்பக் காசினிமேல் வந்தஅருட் கதிரோன்
விண்டமலர்ப் பொழில்புடைசூழ் வெண்ணெய் மேவு
மெய்கண்ட தேவன்மிகு சைவ நாதன்
புண்டரிக மலர்தாழச் சிரத்தே வாழும்
பொற்பாதம் எப்போதும் போற்றல் செய்வாம்”

திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், சிவஞானபோதம், சிவஞானசித்தியார் (பரபக்கமும் சுபக்கமும்), இருபாவிருபஃது, உண்மை விளக்கம், சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினாவெண்பா, போற்றிப் பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, உண்மைநெறி விளக்கம், சங்கற்பநிராகரணம் ஆகிய பதினான்கு நூல்களும் சித்தாந்தசாத்திரம் எனப்படும். மெய்கண்டசாத்திரம் என்ற பெயரும் இவைகட்கு வழங்கப்படுகிறது. இவற்றுள் திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார் ஆகிய இரண்டும் மெய்கண்டார்காலத்துக்கு முந்தியனவென்பது பல பேரறிஞர்கள் தங்கள் ஆராய்ச்சியிற் கண்ட முடிபு. சிவஞானபோதம் மெய்கண்ட தேவர் அருளிச்செய்தது. இது வடமொழி இரௌரவாகமத்திலுள்ள சிவஞானபோதச் சூத்திரங்களின் மொழி பெயர்ப்பென்று இதுவரை கருதப்பட்டுவந்தது. ஆனால் இப்போது திரு. கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் முதலிய சிலர், கூர்த்த மதிகொண்டு ஆராய்ச்சி செய்ததில் சிவஞானபோதம் தமிழ்முதல் நூலேயொழிய மொழி பெயர்ப்பு நூலல்லவென்பது நன்கு புலனாகின்றது. இதன் விரிவை “மெய்கண்டாரும் சிவஞானபோதமும்” என்ற நமது சமாஜவெளியீட்டிற் காண்க. இச்சிவஞானபோதத்துள் பன்னிரண்டு சூத்திரங்களை மட்டுமே மெய்கண்டதேவர் அருளினர் என்பது சிலருடைய கொள்கை. ஆனால் பழைய வரலாறு கூறுவது சூத்திரங்கள், உதாரணச் செய்யுட்கள், வார்த்திகம் என்னும் பொழிப்புரை ஆகிய மூன்றையுமே மெய்கண்டதேவர் அருளிச்செய்தார் என்பதே.

சிவஞானசித்தியார் என்ற நூலே இப்பதினான்கு சாத்திரங்களுள் மிக விரிவானது. அவ்விரிவும் அதனாலுண்டாகும் தெளிவும் பற்றியே இது இப்பதினான்கனுள்ளும் சிறந்ததெனப் போற்றப்படுகிறது. சிவத்தின்மேல் தெய்வமில்லை சிவஞானசித்திக்குமேல் சாத்திரமில்லை யென்றும், பார்விரித்த நூலெல்லாம் பார்த்தறியச் சித்தியிலே ஓர் விருத்தப்பாதிபோதும் என்றும் இதன்பெருமை மிகுந்த ஆர்வத்தோடு கூறப்படுவதுண்டு. இந்நூல் பரபக்கம், சுபக்கமென இருகூறாக அமைந்துள்ளது. பரபக்கமென்பது ஏனைய சமயச்

கொள்கைகளை விளக்கி அவைகளைப் பூர்வபக்ஷம் செய்கிறது. சுபக்க மென்பது சைவசித்தாந்தத்தை விளக்கி அதற்குப் பிறர்கூறும் தடைகளைப் பூர்வபக்ஷம் செய்கிறது. பரபக்கத்துள் உலகாயதன்முதல் பாஞ்சராத்திரி ஈருகவுள்ள பதினுன்கு சமயிகள் மதங்களும் அவற்றின் மறுதலையும் உள்ளன. இவற்றுள் பாஞ்சராத்திரி நீங்கலாக ஏனைய சமயிகள் கூறும் தத்துவக் கொள்கைகளை ஆசிரியர் மறுத்து, பாஞ்சராத்திரி மதத்திலும் மறுதலையிலும் மட்டும் தத்துவ ஆராய்ச்சியை விடுத்துப் புராண வரலாறுகளைக் கொண்டே ஆராய்ச்சி செய்கின்றனர். இக்காரணம்பற்றிப் பாஞ்சராத்திரி மதமும் மத மறுதலையும் அருணந்தி சிவாசாரியர் வாக்கல்லவென்றும் பிற்காலத்தோரால் எழுதிச் சேர்க்கப்பட்டனவென்றும் சிலர் கூறுகின்றனர்.

இருபாவிருபஃது என்ற நூல் அருணந்தி சிவாசாரியர் இயற்றியது. உண்மை விளக்கம் என்பது திருவதிகை மனவாசகங்கடந்தார் இயற்றியது. இவரைப்பற்றிய வரலாற்று விவரங்கள் எவையும் கிடைத்தில. இவர் பெயரால் திருவதிகையில் தெற்குவீதியில் ஒரு மடம் இருக்கிறது. சென்னை அரசாங்கத்தாரால் பதிவுசெய்யப்பட்ட கல்வெட்டொன்றில் (1901ஆம் ஆண்டு 205-ஆம் கல்வெட்டு) மனவாசகங்கடந்தார் என்ற பெயர் வருகிறது. அக்கல்வெட்டின் முக்கிய பகுதி கீழ்வருமாறு:—ஸ்வஸ்திஸ்ரீ விக்கிரமசோழ தேவர்க்கு யாண்டு ஆறுவது [கி. பி. 1124] பிரம்மதேசம் காய்வான் தண்டலமாகிய சதுர்வேதி மங்கலத்து......பள்ளீசுரமுடையார்க்கு அர்ச்சனைக்கும் அமுதுபடிக்கும் நிமந்தமில்லாமையால் திருப்பணி செய்கிற ஆண்டார் **மனவாசகங்கடந்தார்** எங்களிடையில் விலையிட்டுக் கொண்ட பூமி யாவது......" இக்கல்வெட்டிற்கண்ட மனவாசகங்கடந்தார் இந்நூலாசிரியராயின் இவர் மெய்கண்டார் காலத்துக்கு முந்தியவராதல் வேண்டும். ஆனால் இவரது நூலில் முதற்பாட்டிலேயே மெய்கண்டாய் விண்ணப்பம் என்றும், திருவெண்ணெய் வித்தகா என்றும் கூறுதலாலும், இவர் மெய்கண்டாருடைய சகல மாணவர்களுள் ஒருவரெனப் பழைய வரலாறு கூறுவதாலும் இக்கல்வெட்டு இவர் காலத்தைக் குறிக்கப் பயன்படாது. அக்காலத்தில் மனவாசகங் கடந்தார் என்ற பெயர் மக்கட்கு இடப்பட்டிருந்த வழக்காறு இக்கல்வெட்டாற்றுலங்கும்.

சிவப்பிரகாசம் முதல் சங்கற்ப நிராகரணம் ஈருகவுள்ள எட்டு நூல்கட்கும் சித்தாந்த அஷ்டகம் என்றொரு தொகைப்பெயர் வழக்கிலுண்டு. இவ்வெட்டு நூல்களும் சித்தாந்த சாத்திரம் பதினுன்கனுள் சேர்ந்தன வென்றும் இவற்றை இயற்றியவர் உமாபதிசிவாசாரியார் என்றும் கூறுவது மரபு. ஆனல் இப்போது திரு. எஸ். அனவரத விநாயகம் பிள்ளை, எம். ஏ., எல். டி., அவர்கள் இந்நூல் கூஅ0-கூஅஉ

பக்கங்களுள் சுருக்கமாகவும், செந்தமிழ்ச் செல்வி சிலம்பு எ-ருசஙு-ருசஅ பக்கங்களில் விரிவாகவும் செய்துள்ள ஆராய்ச்சியால் இவ்வஷ்டகத்துள் 'உண்மைநெறி விளக்கம்' என்ற நூல் உமாபதிசிவாசாரியார் இயற்றியதல்ல வென்றும், அந்நூல் பதினான்கு சாத்திரங்களுட் சேர்க்கப்படுதற்குப் பதிலாகத் 'துகளறுபோதம்' சேர்க்கப்பட வேண்டுமென்றும் புலனாகும். 'உந்திகளிறு' என்று (இந்நூல் தலைப்புத்தாளில்) வரும் வெண்பா எக்காலத்தில் எவரால் இயற்றப்பட்டதென்பது புலனாகவில்லை. திருமுறைகளைப் பன்னிரண்டாக வகுத்த செய்தி திருமுறைகண்ட புராணத்திற் கூறப்படுதல் போலச் சாத்திரங்களைப் பதினான்கென வகுத்த வரலாறு யாண்டும் கூறப்பட்டிலது. நமது வெளியீட்டில், பழைய மரபையொட்டி உண்மைநெறி விளக்கத்தைப் பதினான்கிற் சேர்த்து உரையோடும், புதிய ஆராய்ச்சியை யொட்டித் துகளறுபோத மூலத்தைமட்டும் அநுபந்தமாகவும் அச்சிட்டுள்ளோம்.

இனி இப்பதினான்கு சாத்திரங்களின் காலத்தை ஆராய்வாம். இவைகளின் வரலாறும் இவற்றின் ஆசிரியர்கள் உரையாசிரியர்கள் வரலாறும் ஒவ்வொரு நூலின் தொடக்கத்திலேனும் இறுதியிலேனும் விளக்கப்பட்டுள்ளன. மெய்கண்டார் காலம் கி. பி. பதின்மூன்றாம் நூற்றாண்டென்பது பலரும் ஒப்பமுடிந்த உண்மை. அவர் மாணாக்கராகிய அருணந்திசிவாசாரியரும் மனவாசகங் கடந்தாரும் அந்நூற்றாண்டினரே. உமாபதிசிவாசாரியர் 'சங்கற்ப நிராகரணம்' இயற்றியது சாலிவாகன சகாப்தம் கஉஙரு (கி. பி. 1313) என்பது ஷெ நூலின் பாயிரத்துள்,

"ஏழஞ் சிருநூறு எடுத்த ஆயிரம்
வாழுநற் சதனம் மருவா நிற்ப."

என்ற உசு, உஎ-ம் அடிகளால் (கூஅஎ-ம் பக்கம் பார்க்க) துலங்குகின்றது. எனவே, இவர் கி. பி. பதினான்காம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்தவ ரென்பது கிடைக்கிறது. திருவுந்தியார் திருக்களிற்றுப்படியார் ஆசிரியர்கள் மெய்கண்டார் காலத்துக்கு முந்தியவர்க ளென்பது பழைய மரபு.

இப்பதினான்கு சாத்திரங்களனைத்தையும் உரையுடன் கோன்றைமா நகரம், ஷண்முகசுந்தர முதலியாரவர்கள் ஏறக்குறைய 50 ஆண்டுகட்கு முன் அச்சிட்டனர். பிறகு காஞ்சி நாகலிங்கமுதலியாரவர்கள் 1897ம் ஆண்டில் உரையுடன் வெளியிட்டனர். அதன் பிறகு மூலமும் உரையுமடங்கிய பிரதி வெளிவரவில்லை. இது சித்தாந்த சாத்திரங்களைப் பயில விரும்பும் மாணவர்கட்கும் ஏனையோருக்கும் ஒரு பெருங் குறையாக விருந்தது. இக்

குறையை நீக்கித் திருமுறைகளை அடக்க விலைக்கு வெளியிட்ட நன்முறையைப் பின்பற்றிப் பதினான்கு சாத்திரங்களையும் மூலமும் உரையுமாக வெளியிட நமது சமாஜம் ஏற்பாடு செய்தது. இவ்வெளியீட்டில் சித்தாந்த அஷ்டகம் என்ற எட்டு நூல்களையும், இருபாவிருபஃது, துகளறுபோதம் என்ற இரண்டையும் பல ஏட்டுப் பிரதிகள், கையெழுத்துப் பிரதிகள், அச்சுப் பிரதிகளைக் கொண்டு பரிசோதித்து மிகத் திருத்தமாகவும் செம்மையாகவும் அவை வெளிவரத் துணைபுரிந்த பெரியார், சென்னைப் பல்கலைக்கழகத் தமிழாராய்ச்சித் தலைமைப்புலமை நடாத்தும் சைவத் திருவாளர் - எஸ். அனவரத விநாயகம்பிள்ளை, எம். ஏ., எல். டி., அவர்களேயாவர். அவர்களுடைய நன்முயற்சியால் சிவப்பிரகாசம், திருவருட்பயன், உண்மைநெறி விளக்கம் ஆகிய மூன்று நூல்கட்கும் இதுவரை அச்சிடப்பெறாத சிந்தனையுரை இவ்வெளியீட்டில் அச்சிடப்பட்டிருக்கின்றது. அவர்கள் இதற்காக உழைத்த உழைப்பு அளவிடற்பாலதன்று. அவர்கட்குத் துணை செய்தவர் ஷை கழகத் தமிழ்ப்பேரகராதிப் பதிப்பாசிரியர், சைவத் திருவாளர் - எஸ். வையாபுரிப்பிள்ளை, பி. ஏ., பி. எல். அவர்களே. இவ்விரு பெரியார்கட்கும் நமது சமாஜத்தின் நன்றியை மிக மகிழ்ச்சியோடு செலுத்துகின்றோம்.

இந்நூலை மிகச் செம்மையாகவும் விரைவாகவும் வழக்கம்போல் சாது அச்சுக்கூடத்தினர் அச்சிட்டுதவினர். அவ்வச்சுக்கூட உரிமையாளர் திரு. வி. உலகநாத முதலியாரவர்கள் இந்நூல் வெளிவருதற்காகக் காட்டிய ஊக்கம் பாராட்டத்தக்கது. அவர்கட்கும் சமாஜத்தின் நன்றி பெரிதும் உரித்து.

சித்தாந்த சாத்திரங்களைப் பயில்வதன் பயன் மும்மலங்களை எரிப்பது. முக்கட்பரமன் முப்புரமெரித்தது இத்திருவதிகைவீரட்டானத்திலே நிகழ்ந்தது. 'முப்புரமாவது மும்மல காரியம்' என்பது திருமூலர் திருவாக்கு. திருவதிகையில் இப்பதினான்கு சாத்திரங்களுள் ஒன்றாகிய உண்மைவிளக்கத்தை மனவாசகங்கடந்தார் அருளிச் செய்தார். எனவே, இந்நூல் இத்திருப்பதியில் வெளியிடப்பெறுதல் மிகப் பொருத்தமேயாகும்.

இவ்வெளியீடு சைவ நன்மக்கட்கு எல்லா நன்மைகளையும் அளிக்குமாறு இறைவன் திருவருளை வழுத்துவோமாக.

இங்ஙனம்

ம. பாலசுப்பிரமணியன்
காரியதரிசி
சைவ சித்தாந்த மகா சமாஜம்.

திருவதிகைவீரட்டானம்
பவ௵ மார்கழி௴ ௮௳
பூச நன்னாள்
23—12—1934

சிவமயம்

# உள்ளுறை

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

## திருவியலூர் - உய்யவந்ததேவர்

அருளிச்செய்த

# திருவுந்தியார் மூலமும் சிவப்பிரகாசர் உரையும்

---

இதில் முற்பட்ட கடவுளாகிய பரமாசாரியரை அருளிச் செய்கின்றார் :

*அகளமாய் யாரும் அறிவரி தப்பொருள்*
*சகளமாய் வந்ததென் றுந்தீபற*
*தானாகத் தந்ததென் றுந்தீபற.*

(உரை) அநாதியே நிர்மலமாய்த் தன்னைக் கூடினவர்களாலும் கூடாதவர்களாலும் அறிதற்கரிய பரிபூரணமான அந்தப் பெரும் பொருள், நம்பொருட்டால் ஒரு திருமேனிகொண்டு எழுந்தருளி வந்தது ; இப்படி எழுந்தருளிவந்த அந்தப்பொருள் தீக்ஷையிலே சஞ்சிதத்தையும் ஒழித்து, பிராரத்தம் புசிக்கச்செய்து அதிலழுந்தாத படியுங் காட்டி, ஆகாமியம் ஏறாதபடி நிலையிலே நிறுத்தி, மாயாபடலத்தையும் உரித்து, மூலமாகிய நிகளத்தையும் விடுவித்து, அருளாகிய அமிர்தத்தைப் புசிப்பித்து, தன்னுடைய திருவடியிலேகூட்டி வேறற நிற்கத் தந்தது.

உந்தி யென்றது குழாங்கூடிய மகளிரது விளையாட்டு. பற - ஒருமைப் பன்மை மயக்கம். பறக்க என்னும் வியங்கோளைப் பறவென விகாரமாக்கி உம் தீ பற எனப் பிரித்து உமது அனாதி குற்றத்தை விளக்கும் மும்மலங்களையும் கருவி கரணாதிகளையும் தேகாதிப் பிரபஞ்சங்களையும் விட்டுப் போம்படி இந்த ஞான சாத்திரத்தின் கருத்தே கருத்தாக நிற்பாரெனக் கொள்க. பறக்க வென்னும் எச்சத்

தைப் பறவென விகாரமாக்கி உம்முடைய தீமைகளெல்லாம் பறந்து போகும்படிக் கருதி நிற்பீர் எனினும் அமையும். க

இனி அநாதியே கூடிப் போந்த பிரபஞ்சவாதனையைக் கூடாத படி இந்தப் பொருளிலே அனவரதமும் வாதனைப்படு முறைமையை அருளிச் செய்கின்றார் :

பழக்கந் தவிரப் பழகுவ தன்றி
உழப்புவ தென்பெணே யுந்தீபற
ஒருபொரு ளாலேயேன் றுந்தீபற.

(உரை) (உபாய குருவாலே இரக்ஷிக்கப்பட்டவர்களுக்குப் பிரா ரத்த காரணமாய தேகம் நிற்கையால் அநாதிகாலந் தொடங்கி இந் திரியாதிகளுடன் கூடிவருகிற வாதனையை விடுதற்கு அரிதாயிருக் கும்; அதென்போலவெனின்:—பிறவிக் குருடனாய்த் திரிந்தவனுக் குக் கடாக்ஷத்தாலே கண்விழித்தாலும், அநேககாலம் அந்தகாராதி வந்தனை பண்ணிப் போந்ததால் மருட்சியாய் வழியைக் குழியென்று சந்தேகித்தும் முன் வந்தாரை யாவரெனக் கேட்டும் நிற்பன். அது போலப்) பிராரத்தத்தாலே இந்திரியாதி விடயங்கள் வந்தடுத்தகாலத் தில், இவற்றின் ஐக்கியத்தாலே ஜநநங் கூடாநிற்கும் ; இது கூடாத படி, பிராரத்தமான கன்மம் அனுபவிக்கும்போதே, அவற்றினைத் துண்ணுமற் கூடுகிற உபாயத்தைத் திருவருள் கண்ணுகக் கண்டு, இப்படிக் காட்டுகிற கண்ணுனை திருவருளிலே வாதனை பண்ணுவ தொழிந்து, பேய்த்தேர்போல் நிலையில்லாத பிரபஞ்சத்தை மெய் யெனக் கருதிப் பெறும்பேறென் நெஞ்சமே! ஒப்பில்லாத பொருள் கண்ணுகை அந்தப் பொருளுடனே வாதனை பண்ணி நில்.

இதில் நெஞ்சத்தைப் பெண்ணென்றதேதெனில், தன்னிடத் தில் நாயகரான தம்பிரானுர் அநாதியாயிருக்க, அவருடைய திருவடி யைப் பேணுமல், ஐம்புல வேடர் வசத்திலொழுகி, நாயகரால் முனி யப்படு மிக்கத் துயரமாகிய நரக சுவர்க்கங்களிலே உழன்று, அழிவில் லாத சுகத்தை யனுபவிக்கப் பெருது போக்குவாருடனே திரிகை யால், தன்னுடைய நெஞ்சத்தைப் பார்த்து என் பெண்ணே தகாத வற்றிற் குட்படுகின்ருயென்ப் பேதைமை யதனுல் நெஞ்சத்தைப் பெண்ணெனக் கூறியது. உ

மேலிந்த வுபாயங் கூடினவர்களுக்கு ஜநநமரணங் கூடாதென்று அருளிச்செய்கின்றார் :

கண்டத்தைக் கொண்டு கரும முடித்தவர்
பிண்டத்தில் வாராரென் றுந்தீபற
பிறப்பிறப் பில்லையென் றுந்தீபற.

(உரை) தம்முடைய பாக்கியத்தாலே தமக்குப் பிராணனன் சிவன் கோசரமாக, இப்படி ஆசாரியராக எழுந்தருளியவரைக் கொண்டே தீக்ஷையாற் சஞ்சிதமான கன்மத்தையும் போக்கி, தேகத்துடனே பிராரத்த கன்மத்தையும் போக்கி, அவர் நிறுத்தின அருட்கண்ணாலே ஆகாமியத்தையும் போக்கி, இப்படி மூன்று கன்மத்தையு முடித்துத் தீர்த்த ஆசாரியர் கைப்பட்டு நின்றவர்கள், ஒருகாலுந் தேகவாதனையின் வழி நில்லார்கள் ; ஆகையாலே கன்மங் கூடாதபடி ஆசாரியர் கடாக்ஷத்தாலே சிவனது திருவடியிலே நின்றவர்கட்கு ஒருகாலத்திலும் ஜநநமரணமில்லை. ரு

இந்நிலையிலே நின்று சிவனை அனுபவித்தலா லுண்டான சுகம் வாக்கால் உரைக்க வாராதென்று அருளிச் செய்கின்றார் :

எங்ஙனிருந்ததென் றெவ்வணஞ் சொல்லுகேன்
அங்ஙனிருந்ததென் றுந்தீபற
அறியு மறிவதன் றுந்தீபற.

(உரை) தன்னுடைய நிலையுஞ் சிவசொரூபத் தன்மையும் இந்தச் சிவரூபங் கண்ணுகவே அறிந்து, இந்தச் சிவரூபத் துடனே வேறற நின்றனுபவிக்கத் தக்க ஐக்கிய முண்டானபோது, அதனால் விளைந்த பரமசுகத்தை வாக்கால் உரைக்க எண்ணுமளவில் அனுபோகமானது உரைக்கப்படா தாகையாலும், மனவாக்குக் காயங்கள் மாயாவிகற்ப மாகையால் இவற்றுக்கு அதீதமா யிருக்கையாலும், இப்பொருட்கு ஒரொப்பில்லா தொழிகையாலும் இப்படி இருந்ததென்று எப்படி உவமித்துச் சொல்லுவேன் ; ஒருவனுக்குக் கன்மந் துலைபோலொத்து, மலபரிபாகமும் பிறந்து, தேசிகனுடைய திருவடியைப் பெற்றுச் சிவசொரூபத்தையு முணர்ந்து, இரண்டறக் கூடிப் பரமானந்தமும் விளைந்து, அந்தப் பரம சுகத்திலே அழுந்தின காலத்து, அவனுக்கு எப்படி யிருந்ததோ அப்படியே என்னும தொழிந்து,

இன்னபடியென்று அளவு படுத்தி உரைக்குமதன்று ; ஆதலால் அப்படியே யிருந்தது. அப்படி இருந்த பொருளை ஆன்ம ஞானத்தால் அறிந்து கூடத்தக்கதன்று. ௪

இப்படிப் படர்க்கையாய் நின்ற சொரூபந்தானே, அநாதியே நமக்குத் தன்மையுமாய், முன்னிலையுமாய், கன்மவொப்பும் மலபரிபாகமும் பிறந்த பின்பு, ஆசாரியனுமாய் வந்ததென்று அருளிச்செய்கின்றார் :

ஏகனு மாகி அனேகனு மானவன்
நாதனு மானனென் றுந்தீபற
நம்மையே ஆண்டானென் றுந்தீபற.

**(உரை)** இப்படிப்பட்ட பொருளா யுள்ளவனே, அநாதியே ஆன்மாவைக் கூடிப் பிரிதற்கரிய ஞைகயாலே, ஒன்றென்னும் படியுமாய், யாம் செய்த கன்மத்துக்கீடாக உபகரிக்க வேண்டி, அவன் அவள் அதுவென்று பலவாய் நிற்கத் தக்கவனுமாய், இப்படி நின்று கன்மத்தையுந் தொலைப்பித்து, மலத்தையும் பக்குவமாக்கின இந்த அவதாரத்திலே, நமக்கு ஆசாரியனுமாய் எழுந்தருளி வந்தான். இப்படி எழுந்தருளிவந்து, அநாதியே தொடங்கி இன்றளவுந் திருவருள் கிடையாமல் நரகத்திலே யுழைத்த நம்மையே, காருண்ணியத்தின் மிகுதியாலே பெறுதற்கரிய திருவடியைத் தந்து அடிமை கொண்டான்.

ஏகாரம் இழிவின்கண் வந்தது. ௫

இப்படி எழுந்தருளி வந்து அடிமை கொண்டபோதே, தன் பாரங்கெட்டுச் சர்வமுந் தம்பிரானார்க்கே பாரமாம் முறைமையை அருளிச்செய்கின்றார் :

நஞ்செய லற்றிந்த நாமற்ற பின்நாதன்
தன்செயல் தானேயென் றுந்தீபற
தன்னையே தந்தானென் றுந்தீபற.

**(உரை)** சர்வத்தையுந் தம்பிரானார் கூடிநின்று கூட்டுவிக்கச் செய்த இந்த முறைமையை அறியாமல், தன்னாலே செய்யப்பட்டதென்று கருதும் ஆன்ம சுபாவமும் அருளாலே விட்டு நீங்கி, இப்படி நீங்கினோமென்கிற தன்னையும் அருளிலே கொடுத்துத் தானும் அருளேயாய அப்பொழுதே, கர்த்தா இவனைக் கிருகித்துக்கொண்டு,

இவன் செயலெல்லாந் தன்செயலேயாக்கி, இவனுந் தானாகவே நிற்பன்; இப்படிக் கூடி, ஒருவன் கைம்மாறு செய்யத்தக்கதாகத் தன்னையொழிந்த பொருளிலே வேண்டுவது கொடுக்கையன்றி, தன்னையே தந்தான் ஒருவனுக்குச் சிவனும் ஒரு பதங்களைக் கொடாமற் கரையற்ற பலமாக அவனைப்போலத் தன்னையும் அவனுக்கே கொடுப்பான். ௬

இப்படிப் பெற்ற பொருளுடனே ஏகீபாவம் பிறந்து ஒரு நீர்மையாய் நிற்கும் உபாயம் எப்படியென்று கேட்ட மாணாக்கனை நோக்கி மேல் அருளிச்செய்கின்றார் :

உள்ளம் உருகில் உடனாவர் அல்லது
தெள்ள அரியரென் றுந்தீபற
சிற்பரச் செல்வரென் றுந்தீபற.

(உரை) ஸ்திரீகள் தங்களுக்கு உரிய புருஷர்களிடத் துண்டாகிய *தலையன்பு இடையன்பு கடையன்பென்னும் மூவகை ஆசை மிகுதிக்கொப்பாக, நம்பொருட்டுத் திருமேனி கொண்டு எழுந்தருளி வந்த தம்பிரானார் தமக்குத் திருநாமமாகிய பஞ்சாக்ஷரத்தின் உண்மையை ஒருகால் அருளிச்செய்யக் கேட்டும், உள்ளபடி காட்டக் கண்டும், அந்தச் சொரூபம் அநாதியே தம்மிடத்திலே கூடிநிற்கிற முறைமையை யுணர்த்தி அவர் கூட்டும்முறைகளிலே கூட்டக் கூடியும், இப்படி மூன்று வகையுங்கண்ட சீவர்கள் நிருவிகாரிகளாய் (அக்கினி கலந்த மெழுகுபோல்) உருகிப் பேரன்பு கூர்ந்து கரையழிந்திருந்த காலத்து (குளிகையாலே, காளிதமறப் பேதிக்கப்பட்ட செம்பிலே யுள்ள மாற்றெழுந்து செம்பென்னும் பெயர் கெட்டுப் பொன்னென்னும் பெயர் பெற்றாற்போல) ஆன்மசொரூபம் மறைந்து சிவசொரூபமேயாய்ச் சிவனென நிற்பர். இப்படிக் கூடுகை யொழிந்து தம்முடைய போதத்தால் ஆராய்ந்து கண்டு கூடுதற்கரியர். இப்படித் தஞ்செயல் கூடாதே கூடினவர்களே மேலான ஞானசுவரியத்தை யுடையவர்கள். ௭

*நாயகன்பேர் கேட்டகாலத்தில் வசமழிகை தலையன்பு, நாயகனைக் கண்டகாலத்தில் வசமழிகை இடையன்பு, நாயகனைக் கூடின காலத்தில் வசமழிகை கடையன்பு.

இந்த நிலை கூடாத அளவில் வேறேயும் ஒருபாயம் உண்டென்று அருளிச்செய்கின்றார் :

ஆதாரத் தாலே நிராதாரத் தேசென்று
மீதானத் தேசெல்க வுந்தீபற
விமலற் கிடமதென் றுந்தீபற.

(உரை) மூலாதாரஞ் சுவாதிட்டானம் மணிபூரகம் அநாகதம் விசுத்தி ஆக்கினை யென்று சொல்லப்படாநின்ற ஆதாரங்களிலே ஒவ்வொரு ஆதாரந்தோறும் பொருந்தின தேவதைகளைத் தியானித்துச் சமாதியடைந்து, இது கைவந்தபின், நிராதார யோகமென்று சொல்லப்பட்ட ஆன்ம சொரூபத்தை உணர்ந்து ஒரு பற்றுமின்றிச் சமாதிபரனாய் நிற்க; அந்த நிராதார யோகத்துக்கு உபாய யோகமாகிய மேலான யோகத்திலே சாதித்துத் தன்னுடைய செயலற நிற்குமதைச் சாத்திரங்களின் வழிகளிலே ஆராய்ச்சி செய்து, மீதானமாகிய சிவசொரூபத்திலே கூடும்படி சிரத்தை பண்ணுவாயாக. இப்படிப்பட்ட இடமே நின்மலனாகிய சிவனைக் கூடத்தக்க இடமாவது. அ

ஆதார யோகத்துக் கிட்டவுபாயம் ஒழிந்த சாயுச்சியத்துக் கிலக்கணமான யோகம் அன்றென்று அருளிச் செய்கின்றார் :

ஆக்கில் அங்கேயுண் டாய் அல்லதங் கில்லையாய்ப்
பார்க்கில் பரமதன் றுந்தீபற
பாவனைக் கெய்தாதென் றுந்தீபற.

(உரை) தற்போதத்தாலே மூலாதார முதல் பிரமரந்திரம் ஈறாகவுள்ள ஆதாரங்களிலே ஒவ்வொரு தேவதைகளைத் தியானித்த காலத்தில் உண்டுபோலத் தோன்றியுந் தியானியாத காலத்து இல்லையாகியும், இப்படித் தியானிக்கப்பட்ட தேவதைகள் இந்தத் தேகத்தில் ஆதாரங்கள் போலப் போகத்துக்குத் தானமாகிய அண்டத்திற்குட்பட்ட பதங்களிலே அடைவிக்குமதொழிந்து, பரிபூரணமான சாயுச்சியத்தை அடைவிக்கமாட்டா; அஃதேனெனில், ஆன்மபோதமானது சீவிக்குமளவில் அதோ முகமாக வொழிந்து சீவியாதாகையால், அதனாற் கற்பிக்கப்படுமவையெல்லாந் தனக்கு அநாதியேவாதனை பண்ணிப் போந்த மாயாரூபமே யொழியத் தன்னை விட்

நீங்காத சிவசொரூபத்தை யுணர்த்தாது; ஆதலின் தன்னுடைய போதத்தாற் கற்பிக்கப்படுமவையெல்லாம் விசாரித்துப் பார்க்கில் சொரூபமல்ல. இவ்வித அவாங் மனோகோசரமாயுள்ள பொருள் இவனுடைய கற்பனையில் அகப்படாது. கூ

மேல் முன் சொல்லப்பட்ட நிராதார யோகத்தை விரித்தருளிச் செய்கின்றார் :

அஞ்சே அஞ்சாக அறிவே அறிவாகத்
துஞ்சா துணர்ந்திருந் துந்தீபற
துய்ய பொருளீதென் றுந்தீபற.

(உரை) பஞ்சபூத பரிணாமமாகிய தேகம் ஆன்மாவைக் கூடினு லொழிந்து சேட்டியாதாகையால் இந்தத் தேகத்துடனே கூடி நின்றால் உள்ள தோஷத்தை அறிந்து வேறாகக் கண்டு நீங்கி நிற்கவே இந்தத் தேகமும் பிரமாண்டமாகிய பஞ்சபூதங்கள் போல இவனுக்கு வேறாகியே நிற்கும். இவற்றை அருட் கண்ணாலே கண்டு நீங்கின ஆன்மாவுக்கு நீங்கின பொழுதே இவனுடைய இச்சாஞானக்கிரியை களுந் தொலைந்து, இவனுக்கு அநாதியே பிராணனாய் மறைந்து நின்று இரக்ஷித்த சிவனும் இவனைக் கவளீகரித்துக்கொண்டு, தானான் மாவாகியே நில்லா நிற்பன். இந்நிலை தவறாமல் நிற்கும்படி (ஒருவனோரூர்க்குப் போகுமளவில் மற்றொருவன் காட்டிவிட்ட குறிவழிச் செல்லாமற் பக்கமே செல்லத்தக்க கள்ளருடைய அடிப்பாட்டையை வழியெனக் கருதிச் சென்றாற் கள்ளராலே விதனப்படா நிற்பன். இந்த விதனங்கள் கூடாதபடி பக்கவழிகளிற் செல்லாமல் ஒருவன் காட்டிவிட்ட குறிவழிச் சென்றால் ஒரு வியாகூலமுமறப் போய்க் கருதின வூரிலே சென்று தன்னுடைய கோட்பாடு முடியா நிற்பன். அது போல) சொரூபத்திலே சென்று இரண்டறக் கூடுகிற வழிக்கு விரோத வழியாகிய மயக்க விகற்பங்களிலே விழுந்து ஜநநமரணங் களை அடையாதே, தன்னுடைய சொரூபத்திலே வந்து கூடும்படி வழி காட்டி நிற்கிற வுணர்வு கண்ணாகக் கேவல சகலத்திலே தாக்காம லிருக்கவேண்டும். இதுவே வேதாகமங்களில் தீர்வான பொருள். க0

இப்படிக் கூடும தொழிந்து தன்னுடைய போதத்தாலே கூடும் யடி விசாரிக்கில் இப்பொருள் கைகூடாதென்று அருளிச் செய்கின்றார் :

தாக்கியே தாக்காது நின்றதோர் தற்பரன்
நோக்கிற் குழையுமென் றுந்தீபற
நோக்காமல் நோக்கவென் றுந்தீபற.

(உரை) ஆன்மாவுடனே கூடி ஆன்மாவாய் நின்றும், தன்னுடைய உண்மை குன்றுமற் பரமானந்த சொரூபமாய் நிற்கிற அந்தச் சொரூபத்தைக் கூட விசாரித்து, அது தனியே ஒரு பொருளுமாக உன்னிலிரண்டு பட்டு நின்று பொருந்த விசாரிக்கில், உனக்கு அப்பொருள் கைகூடாது. அநாதியே அந்தச் சொரூபந் தன்னைத் தோற்றுமல் நீயாகி நின்ற முறைமைபோல் நீயும் உன்னைத் தோற்றுமல் அந்தச் சொரூபந்தானுகியே நிற்கில் அப்பொழுதே பரிபூரண பரமானந்த சொரூபியாய் விடுவை.

தற்பரன் என்றதைத் தனக்குப் பரனென விரித்துத் தன் னென்றது ஆன்மாவை என உணர்க. கக

இனி, இந்த வுபாயத்தை அருளிச் செய்த குருவின் பெருமையை அருளிச் செய்கின்றார் :

மூலே யிருந்தாரை முற்றத்தே விட்டவர்
சாலப் பெரியரென் றுந்தீபற
தவத்தில் தலைவரென் றுந்தீபற.

(உரை) மாதாவினிடத்துண்டான சுரோணிதத்திலே பிதாவினிடத்துண்டாகிய சுக்கிலம் பவளப்பையில் முத்தை வைத்தாற் போலப்படுகிற நாளில், சீவனுனது பிராணவாயு வாகனமாகவும், மனம் வழியாகவும், சிவனுடைய ஆஞ்ஞையாலே சென்று, சுக்கில சுரோணிதத்தின் தலையிலே பதிந்து, கன்மத்துக் கீடாக மூன்றரை கோடி யுரோமத் துவாரமும் எழுபத்தீராயிர நாடியும் வாயுவிற் பிரதானமான தசவாயுவும் நவத்துவாரமும் எண்சாணுடம்பும் எழுதாதுவும் ஆறுதாரமும் ஐந்து பொறியும் நாலு கரணமும் மூன்று மண்டலமும் இரண்டு வினையும் எனப் பெயர் பெற்று, இவற்றை ஒன்றெனப் போர்த்த புறத்தோலுமாக ரூபீகரித்து, பிராரத்தமளவுந் தன்னுடைய தேகத்தில் உந்திச் சக்கரத்தின் மேலே கிடந்து, ஆறுமாத

முதல் உந்தி நாளத்தாலே மாதாவினிடத்திலே அன்னரசமுங் கொண்டு, அவ்வன்னரசத்தின் மிகுதியாலே சுழுமுனை நாடி அடைபட்டு இடையும் பிங்கலையுந் திறந்து, பிராணவாயு புகுந்து மேனோக்கி, நாசித் துவாரங்களாலே விட்டவெழுத் தாலே நாளொன்றுக்கு இருபத்தோராயிரத் தறுநூறு சுவாசவுச்சார ணந்தோன்றி, முப்பத்திரண்டு நூறுயிரத்து நாற்பதினுயிரம் உருச் சென்றவாறே உதர கன்மந் தொலைந்து, மாதாவினிடத் துண்டான பிராணவாயுவிலே, தம்பிரானுருடைய காருண்ணியத்தாலே சத்தி யதிஷ்டித்துக்கொண்டு, இந்தச் சத்தி பலத்துடனே வாயுவானது பிரஞ்ஞையைப் பூமியிலே பதிவிக்கவேண்டிப் பிரஞ்ஞாபத்தியமென் னும் பெயர் பெற்று, இவனுடைய போதம்போல இவனுடைய தேக முங் கீழ்நோக்கி விழும்படி தன்னுடைய பலத்தாலே தலைகீழாகத் தள்ளிப் பூமியில் வந்தபின்பு, தேகத்துக்கடுத்த கன்மங்களாலே புசிப்புகளைக் கருதி இந்திரியங்களாகிய மூலைகளிலே யிருந்து, விட யங்களைப் புசித்துப் புசிப்பொழிந்தால், இவனுடைய போதமானது கீழ்நோக்கிச் சாக்கிரமுதல் அதீதமளவாக அவத்தைகளுக் கடுத்த தானங்களாகிய மூலைகளிலே அடைந்தும், இப்படி இரவு பகல் இந்த மூலைகளிலுண்டான இருளினாலே மறைந்து விகற்பித்து மயங்கியும் இப்படிப் பொய்ப்பிரகாசமான சுக துக்கங்களில் அழுந்தாமற் கீழ் நோக்கின போதத்தை ஒழித்து, உண்மையை யுணர்த்தி மேலாகிய பிரகாசமான பரமாகாச ஒளியிலே விழித்துப் பரபோகத்தில் அழுந் தும்படி கூட்டுவித்த உபாயகுரு மிகவும் அளவிடப்படாத பெருமை யையுடைய தம்பிரானுவர். அரிய தவத்திலே நின்று வழிபட்ட வர்க்கு வேண்டும் வரங்களைக் கொடுக்கவல்ல கர்த்தாவுமாவர். கஉ

இப்படிச் சொல்லுக்கும் நினைவுக்கும் எட்டாத பொருள் கூடு கைக்கு ஓரிட முண்டென்று அருளிச்செய்கின்றார் :

ஓட்டற்று நின்ற உணர்வு பதிமுட்டித்
தேட்டற் றிடம்சிவம் உந்தீபற
தேடும் இடமதன் றுந்தீபற.

**(உரை)** தனக்கொரு போக்குவா வின்றியே ஒழிவற நிறைந்து சலிப்பற நிற்கிற ஞானத்தை ஆன்மாவின் கண்ணுகக் கூடி, அந்த ஞானமேயாய், அந்த ஞானத்தின் ஐக்கியத்தாலே கூடினே மென்கிற

விகாரமும் அந்த ஞானமுஞ் சேரக் கரைந்தவிடந்தானே சிவரூபமாம். இந்தவிடம், போதங்கரைந்த விடத்திலே பிரகாசிக்கும். தொழிந்து ஆன்ம போதத்தாலே ஆராய்ந் தறியத்தக்க விடமன்று. ௧௩

இந்தவிடத்தைத் தேசிகனாலே அறிந்தே அவனறிவித்த வுபாயத்திலே அவதி கூடாமற் கூடவே, சிவம் பிரகாசிக்கு முறைமையை மேல் அருளிச்செய்கின்றார் :

கிடந்த கிழவியைக் கிள்ளி எழுப்பி
உடந்தை யுடனேநின் றுந்தீபற
உன்னையே கண்டதென் றுந்தீபற.

(உரை) ஆன்மாவை அநாதியே பொருந்திப் போதுகிற அருளாகிய சிவசத்தியை ஆசாரியன் கடாக்ஷத்தாலே பிரகாசிப்பிக்க அந்த ஞானத்துடனே கூடி அந்தமயமேயாய் நிற்பாய். அப்படி நிற்கவே சிவமானது உன்னையே கண்டு கிரஹித்துக்கொள்ளா நிற்கும். ௧௪

மலமாயை கன்மங்களைப் போக்குகிற ஞானத்தை ஆசாரியன் கடாக்ஷத்தாலே, இவன் பற்றவே அப்பொழுதே சிவபிரான் இவனைப் பற்றினே மென்கிற நினைவையும் அறுத்துத் தானாக்குவா னென்னும் முறைமையை அருளிச்செய்கின்றார் :

பற்றை அறுப்பதோர் பற்றினைப் பற்றில்அப்
பற்றை அறுப்பரென் றுந்தீபற
பாவிக்க வாராரென் றுந்தீபற.

(உரை) தேகேந்திரியப் பிராணவாயு அந்தக்கரணங்கள் முதலாயுள்ள பற்றுகளை அறுக்கத்தக்க திருவருளை ஆன்மா பொருந்தி அந்த ஞானமேயாய் நிற்கில், அப்பொழுதே ஞானமாய் நிற்கின்றோ மென்கிற பற்றையும் அறுத்துச் சிவன் தானாக்கியேவிடுவன். அல்லது சிவனைத் தியானித்துக் கூடவேண்டுமென்று விசாரிக்கில், அவன் ஒருகாலமுங் கூடப்படான். ௧௫

இப்படிக் கூடி நின்றவர்கள் ஒன்றிலும் பற்றாமல் நிற்கும் முறைமையை அருளிச்செய்கின்றார் :

உழவா துணர்கின்ற யோகிகள் ஒன்றோடுந்
தழுவாமல் நிற்பரென் றுந்தீபற
தாழ்மணி நாவேபோ லுந்தீபற.

(உரை) உணர்த்து முறைமையினும் அவத்தையினும் அழுந்தாமற் சிவனது ஞானத்தாலே சிவனைத் தரிசிக்கிற சிவயோகிகளுக்குப் பிராரத்தத்தாலே கன்மங் கூடிற்றாயினுந் திருவடிஞானங் கண்ணுகை நிற்கையாலே ஒரு விடயங்களினும் இரார்கள். தாழ்ந்த நாவையுடைய மணிபோல அசையும் ஆரவாரமும் அற்றிருப்பார்கள். கசு

இப்படிக் கூடுங்காலத்து நடுவே ஒரு குறி நிகழுமென்றும் நிகழ்ந்தாற் செய்யும் பரிகாரமும் அருளிச்செய்கின்றார் :

திருச்சிலம் போசை ஒலிவழி யேசென்று
நிருத்தனைக் கும்பிடேன் றுந்தீபற
நேர்பட அங்கேநின் றுந்தீபற.

(உரை) தம்பிரானார் திருவுள்ளத்தடைத்த ஆன்மாக்கள் கருவி காரணாதிகளாலுள்ள ஆரவாரங்களைக் கடாக்ஷந் துணையாகவே ஓட்டி வெற்றியுடனே திருவடிசேரச் செல்லுங்காலத்து (இராசாவின் குமாரன் மறுதலையான மாற்றானையோட்டி வெற்றியுடனே தன்னுடைய பதியைச் சேரச் செல்லுமளவில் இராசாவின் அருகு நின்ற வாச்சியங்கள் எதிர்கொள்ளுந் தன்மைபோல) அனவரதமும் பரமானந்த நிருத்தம் பண்ணியருளாநின்ற தம்பிரானார் திருவடிக்குச் சிலம்பும் ஓசையுமான பரவிந்து பரநாதம் அடியார் பிறவித் துக்கங்கெடும்படி ஆரவாரியா நிற்கும் ; இந்தப் பரநாதவழியே சென்று பரமானந்த நிருத்தம் பண்ணி யருளா நின்ற தம்பிரானை உன்னுடைய போதங் களைவதற்குத் தொழுவாயாக. மயக்க விகற்பமென்று சொல்லப்பட்ட உட்பக்க வழிகளாகிய கள்ளரடிப் பாட்டையிற் சென்று தட்டுப் படாமல் நல்லடிக்குச் செல்லுகிற செவ்வை வழியே சென்று. கஎ

இப்படித் திருவடிக்குச் செல்லுகிற வழிக்கு விரோதமாகிய மயக்க விகற்பங்கள் ஒருகாலமும் பொருந்தாதபடி தம்பிரானார் திருவருளை மறவாதிருக்க வென்று அருளிச் செய்கின்றார் :

மருளுந் தெருளும் மறக்கும் அவன்கண்
அருளை மறவாதே யுந்தீபற
அதுவேயிங் குள்ளதென் றுந்தீபற.

(உரை) உனதநுபூதிக்கு விரோதமாகிய மயக்க விகற்பங்கள் ஒரு காலமுங் கூடாது. அஃதெதனாலென்னில், உனக்குக் கண்ணாகிய சிவ

னருளை ஒருகாலமுங் கைவிடாமற்கூடி நிற்கில், இவ்விடத்திற் செய்ய வேண்டுங் காரியமும் அதுவே யொழிந்து வேறொன்றுமில்லை. கஅ

இப்படி அருளிலே இடைவிடாமல் நின்றாற் சிவம் பிரகாசிக்கும் விரைவை அருளிச் செய்கின்றார் :

**க**ருது வதன்முன் கருத்தழி யப்பாயும்
ஒருமகள் கேள்வனென் றுந்தீபற
உன்ன அரியனென் றுந்தீபற.

**(உரை)** இப்படி அருளிலே இடைவிடாமல் நின்றவன் இந்த அருளினாலே சிவனைக் கூடவேண்டுமென்று விசாரிக்கு மளவில், இவன் கருத்துக்குக் கருத்தாய் நிற்பது திருவருளே யாகையாலும், இவனுக்குத் தனித்தொரு கருத்தில்லாதொழிகையாலும், (குகையில் உருக்கின செம்பிலே குளிகை பாய்ந்தவளவிற் செம்புங் காளிதமு மறப் பொன்னு மாற்றுமா யிருந்தாற்போல) இவன் கருதிய அப் பொழுதே இவனையுங் கிரஹித்துக்கொண்டு இவனுடைய கருத்தை யும் ஒழித்துத் தானுந் தன்னுடைய கருத்துமாய் நில்லா நிற்பன். ஒப்பில்லாத சத்தியஞான சத்தியினை அநவரதமும் பொருந்திக் கொண்டிருக்கத் தக்க நாயகன் ஆகையால் இப்படியன்றி ஆன்ம போதத்தால் எக்காலமும் நினைந்துகூட அரிதா யுள்ளவன். ககூ

இப்படிப்பட்ட உண்மைப் பொருளைப் பெற்றகாலத்து இடை விடாதே நின்றனுபவிக்க வேண்டுமென்று அருளிச் செய்கின்றார் :

இரவு பகலில்லா இன்ப வெளியூடே
விரவி விரவிநின் றுந்தீபற
விரைய விரையநின் றுந்தீபற.

**(உரை)** உணர்ந்தகாலத்து மாயையும் ஒடுங்கினகாலத்து ஆணவ முங் கூடாமல் ஞானமும் ஆனந்தமுமே பிரகாசிக்கத்தக்க பரமாகாசத் திலே கூடிப் பொருந்தி நின்றனுபவிக்க, தேசிகனாலே அறிந்தோ மாகில், பின்பே சாதித்துக்கொள்ளுகிறோ மென்று முன்புள்ள வாசனையின் மிகுதியாலே, பேய்த்தேர் போன்ற விசுவத்தையும், விசுவாதீதமான தேகத்தையும், ஒரு நிலை நில்லாத மனாதிகளி னுடைய சிக்கென்றவைகளையும் மெய்யெனக் கருதி ஜநந மரணங்

களிலே அடையாமற் பரமானந்தத்திலே கூடி நின்று, இளைப்பாறும் படி மிக விரைந்து கூடுவாயாக. உ௦

இப்படிக் கூடத்தக்க சிவம் ஆன்ம போதத்தால் உளதென்னும் பொருளினும் இலதென்னும் பொருளினுமன்றியே உண்டான பொருளென்று அருளிச் செய்கின்றார் :

சொல்லும் பொருள்களுஞ் சொல்லா தனவுமங்கு
அல்லனாய் ஆனானென் றுந்தீபற
அம்பிகை பாகனென் றுந்தீபற.

**(உரை)** வாக்கால் அளவுபடுத்தி உரைக்கத்தக்க சொரூபாதிக ளாய் உள்ள பொருள்களும் வாக்கால் உரைக்கப்படாத முயற்கோடு போன்று இல்லாத பொருள்களும், இவையிரண்டும் இல்லாதவனு மாய் வாக்குமனாதீதத்திலே நின்று உணரத்தக்க சுபாவ சொரூபியாய் உள்ளானொருவன். அவனே காருண்ணிய சத்திக்கு நாயகனாகிய கர்த்தா. உக

இப்பொருளைக் கூடுகைக்கு வேறுமோர் உபாயம் அருளிச் செய் கின்றார் :

காற்றினை மாற்றிக் கருத்தைக் கருத்தினுள்
ஆற்றுவ தாற்றலென் றுந்தீபற
அல்லாத தல்லலென் றுந்தீபற.

**(உரை)** இடைபிங்கலைகளாற் பிராணவாயு நின்று சலிக்குமளவும் மனமும் ஆன்மாவும் ஒக்க நின்று சீவிக்குமாகையால், இப்படிச் சலித்துப் புறப்படுகிற வாயு பன்னிரண்டங்குலமும் புறம்பே சலியா மல் உள்ளேதானே சுவறும்படி குருவசனத்திலே நின்று சாதிக்க மனச் சலிப்புள்ளது அற்றுவிடும். இப்படிச் சலிக்கத் தக்க விகாரம் அற்றபொழுதே இவன் கருத்தானது அவிகாரத்திலே செல்லுமாகை யால், இந்த விகாரத்தில் விழாமல், தன்னுடைய கருத்துக்குக் கருத்தாய் நிற்கிற தம்பிரானார் திருவடியிலே கூடியிருந்து இளைப்பாறுகிறதே பொருள். இப்படிக் கூடுகிறதொழிந்து வேறொரு பிரகாரங்களாற் கூடுகிறது என்றும் நிலைநில்லாது. உஉ

இந்த உபாயத்திலே பொருந்தி நிற்கவே, இவன் சுத்தனுமாய் வீடும் எளிதாகப் பெறலாமென்று அருளிச் செய்கின்றார் :

கள்ளரோ டில்ல முடையார் கலந்திடில்
வெள்ள வெளியாமென் றுந்தீபற
வீடும் எளிதாமென் றுந்தீபற.

**(உரை)** களவு காண்பாரொருவன் தன்னுடைய சொரூபத்தை யும்பேதித்து, தன்னுடைய சாத்திரத்தின் வழியிலே, மிருந்த பதார்த் தங்களுடையா ரொருவனைப் பார்த்து, அவனை மந்திரத்தாலும் ஔட தத்தாலுந் தியானத்தாலும் பேதித்துத் தன்னுடைய வசத்திலே யாக்கி அவனகத்திலேயுள்ள பதார்த்தங்களை அவன் பொருந்திநின்று எடுப்பித்தாற்போல, தம்பிரானாரும் இவனுடைய அநாதிமலசம்பந்தத் தாலே இவனுக்குந் தெரியாதபடி கள்ளரைப்போல் மறைந்து நின்று உபகரித்துக் கன்மவொப்பும் மலபரிபாகமும் உண்டான அவசரத் திலே இவனுக்குப் பொருந்தினதொரு திருமேனியிலே பிரகாசித்துத் திருநீறென்கிற ஔடதத்தாலும் ஸ்ரீ பஞ்சாக்கரமென்கிற திருமந் திரத்தாலுஞ் சொரூபமென்கிற தியானத்தாலும் இவனைப் பேதித்து, இவனைத் தம்முடைய வசத்திலே யாக்கி, இவன் சஞ்சிதமாக நெடுங் காலங்களிலே தேடிய அத்துவாக்களாகிய அறைகளைச் சோதித் தெடுப்பிக்கிற வளவிலே, தேகமாகிய இல்லத்தையுடைய ஆன்மாவும் இதற்குப் பொருந்தி ஒரு வழிப்பட்டால், இவனுக்கு ஒரு முதலும் இல்லையாய் இவனுடைய இருதயமும் வெளிக்கு வெளியாய்ப் பர மாகாசமாய் விடும். இப்படியான காலத்து ஐம்புல வேடராகிய கள் வர்க்கு ஈடுபடாத வீடும் இவனுக்கு வருத்தமறக் கிடைக்கும். உரு

இப்படி நின்றவர்கள் பிராரத்தத்தாலே தேகத்துடனே விசு வத்திலே இருந்தார்களாயினும் அவர்கள் விசுவ மயக்கத்திற் படார்க ளென்று அருளிச் செய்கின்றார் :

எட்டுக்கொண் டார்தமைத் தொட்டுக்கொண் டேநின்
விட்டா ருலகமென் றுந்தீபற [றார்
வீடே வீடாகுமென் றுந்தீபற.

**(உரை)** பஞ்சபூதமுஞ் சந்திராதித்தரும் ஆன்மாக்களுமாக எட்டுவகையுந் திருமேனியாக எழுந்தருளி நின்ற தம்பிரானார்

அநாதியே தன்னை விட்டு நீங்காது நின்ற முறைமையை அவருடைய திருவருளாலே அறிந்து, தானும் அவரைப் போலே சிநேகிதம் புரிந்து கூடினவர்கள் பிராரத்தந் தொலையுமளவுந் தேக விசுவங் களிலே நின்றாரேயாயினுஞ் (சாக்காளி யென்னும் புழுப்போல) கருத்து வேறே பூண்டு கிடக்கையாலே விசுவத்திற்படார்கள். இப்படி விசுவத்தை அருட்கண்ணாலே பொய்யானபடி கண்டு நீங்கி நிற்கவே, ஒரு காலத்திலும் அழிவில்லாத திருப்பாதமே அவர்களுக்குப் புகலிடமாம். உச

இப்படி ஞானைசுவரியத்துடனே நிற்கப் பெற்றவர்களே புண்ணிய பாவந் துலை போலொத்த ஆன்மாக்களென்று அருளிச் செய்கின்றார் :

சித்தமும் தீய கரணமும் சித்திலே
ஒத்ததே ஒத்ததென் றுந்தீபற
ஒவ்வாத தொவ்வாதென் றுந்தீபற.

**(உரை)** அருளாலே சீவனுனது பசுத்துவ நீங்கிச் சிவத்துவமாகவுங் குற்றத்தைக் குணம்போல விளைவிக்கிற அந்தக் கரணங்கள் பசு கரணபாவங் கெட்டுச் சிவகரணமாகவும், இப்படிக் கூடினவர்களே கன்மங்கள் பக்குவத்தை யடைந்து துலையொத்த ஆன்மாக்கள். இப்படி வினைகள் துலையொவ்வாத ஆன்மாக்களுக்குத் தம்பிரானார் திருவடி கூடக் கிடையாது. உரு

இந்நிலையிலே நின்று இரண்டறச் சாதித்தாற் பின்பு விளையுமாறு அருளிச் செய்கின்றார் :

உள்ளும் புறம்பும் நினைப்பறின் நின்னுள்ளே
மொள்ளா அமுதாமென் றுந்தீபற
முளையாது பந்தமென் றுந்தீபற.

**(உரை)** கன்ம யோகிகள் கருத்துப்போலத் தானிற்கிற தேகத்திலே ஒரு தானத்தில் அவிகாரமா யிருந்தும், கிரியா பாதத்தில் நிற்கிறவர்களைப்போலப் புறம்பே பாவித்திருந்தும் இப்படிச் செய்து அநுபூதி திரிந்து பிரபஞ்சமாய் நில்லாதே, தேசிகன் கடாக்ஷத்தாலே தேகாதிப் பிரபஞ்சங்களை உணர்ந்து நீங்கின தன்னையும், தரிசிப்பித்த சொரூபத்தையும், அதன் கண்ணாகை வுணர்ந்து தேகாதிப் பிர

பஞ்சங்களையும் இல்லையாக்கித் தன்மையும் முன்னிலையும் ஒழிந்து ஒரு நீர்மையாகப் படர்க்கையாய் உள்ளென்றும் புறம்பென்றுந் தானென்றும் அவனென்றுங் கூடவேண்டு மென்றுங் கூடினே மென்றும் விசாரிக்கிற உணர்வு ஒழியில் உன்னிடத்திலே ஒருவராலு முகந்து கொள்ளப்படாத அநுபோக ரசமான ஆனந்தாமிர்தம் ஊறிப் பெருகி உன்னையே கிரஹித்துக்கொண்டு தானேயாய்விடும். இப்படியானபின் ஜநந மரணங்கள் அங்குரிக்கத்தக்க பாச விகற்பங்கள் உண்டாகா. உசு

இப்படிப் பொருந்தினவர்களுக்கே பாசவிகற்பங்களா லாகிய கிலேசந் தீர்வதென்றும், அல்லது தீராதென்றும் அருளிச் செய்கின்றார் :

அவிழ இருக்கும் அறிவுடன் நின்றவர்க்(கு)
அவிழும்இவ் வல்லல்என் றுந்தீபற
அன்றி அவிழாதென் றுந்தீபற.

**(உரை)** ஆன்மபோதம்போல ஒரு பொருளைப் பற்றிக்கொண்டு நின்று விசாரித்து மயங்காதே அநாதியே பற்றும் விகற்பமும் மயக்கமு மின்றித் தன்னுடைய ஆஞ்ஞையாலே சர்வமும் நடவா நிற்கத் தானொன்றையும் அறியாதே பரமானந்த மயமாய் எல்லாவற்றினு முளதாய் நின்றே அவற்றிற் படாமல் அநவாதமும் நின்று பிரகாசிக்கிற சொரூபத்தை ஆசாரியன் அநுக்கிரகத்தாலே பெற்று அதன் கண்ணாக அதிலே கூடி அதுவாய் நின்றவர்களுக்கு (ஆதித்தன் சந்நிதியில் ஆன்மாக்கள் கண்ணுக்கு அந்தகாரம் நினைவற அந்நியமாய் விடுந் தன்மைபோல) ஞானாதித்தனுதயந் தரிசன மானபோதே ஜநந மரணங்களுக்கு ஏதுவாய் வருகிற பாச விகற்பங்களாகிய பேராந்தகார மானது இன்ன விடத்திலே போனதென்றறியாதபடி தானே இவனைக் கைவிட்டுப்போம். இப்படி நீங்காதவளவில் வேறுருபாயங்களாலும் இந்தக் கிலேசங் கைவிடாது. உஎ

இப்படி ஜநந மரணங்களுக்கு ஏதுவாக அங்குரிக்கத்தக்க பாச விகற்பங்களைவிட்டு முத்திக்கு வித்தாகிய சத்தியஞானத்தை அபேட்

சித்தவர்கள் பெறும் பேற்றின் உறுதிப்பாட்டை அருளிச் செய்கின்றார் :

வித்தினைத் தேடி முளையைக்கை விட்டவர்
பித்தேறி னார்களென் றுந்தீபற
பெறுவதங் கென்பெணே யுந்தீபற.

(உரை) முத்திக்கு வித்தாகி அநாதியே தனக்குப் பிராணனாய் நின்று தோன்றாமல் உபகரித்துந் தொலைப்பித்தும் வருகிற அருளைத் தேசிகன் கடாக்ஷத்தாலே சந்தேகமறப் பெற்று ஜனன மரணங்களுக்கு ஏதுவாக அங்குரிக்கத்தக்க பாச விகற்பங்களை விட்ட பாக்கியவான்களே எக்காலமுந் தொலைத்தற்கரிதாகிய தேகாதிப் பிரபஞ்சங்களையுஞ் சுகதுக்க வேதனைகளையுங் கைவிட்டு மேலாகிய ஞானம் பிரகாசிக்கத்தக்க பரமானந்த சொரூபத்திலே மீளாதவழி சென்று புகுந்தவர்கள். இவ்விடத்திலே இப்படி நின்று பெறத்தக்க பேறொழிந்து பாச விகற்பங்களே பொருளென நின்றால் அவ்விடத்துப் பெறும் பேறு ஏது நெஞ்சமே. உஅ

இப்படி அரியபேற்றைப் பெறுமளவில் பெறுகைக்கு ஓரவதரமுண்டென்று அருளிச் செய்கின்றார் :

சொல்லும் இடமன்று சொல்லப் புகுமிடம்
எல்லை சிவனுக்கென் றுந்தீபற
என்றால் நாமென்செய்கோ முந்தீபற.

(உரை) இப்படிக்கூட அரிய சிவனை கூடத்தக்க இடம் ஆன்ம போதத்தால் உணர்ந்து வாக்குகளால் இன்னவிடமென்று உரைக்கத் தக்கதொரு இடமன்று; சொல்லுகைக்குக் கர்த்தாவாகிய ஆன்மா ஒரு பொருளைக் கருதி உரைப்பதாக உணருமளவில், ஒருவன் உணர்த்த உணருமதொழிந்து தானாக ஒன்றை உணரமாட்டாததலால், ஒருவன் உணர்த்த உணருவதானபடியை ஆசாரியனாலே பெற்று உணர்த்த உணருவதான எல்லையில் அவனுணர்த்துகிற தன்மையை அவனாலே யுணரின் அவ்விடமே சிவனைப் பெறுதற்கு எல்லையாயின இடம். இந்த இடத்தை அறிந்து கூடினால் யானென்றும் எனதென்றுஞ் சொல்லிநின்ற ஆன்மா அவ்விடத்து என் செய்ததோ அறிகின்றிலேன். உக

இந்த அவதாரத்திலே நின்று கூடுமுபாயத்தை மன்னிவிடாதே உணரப்பெறின் எல்லா நிலையிலும் நிற்கலாமென்று அருளிச்செய்கின்றார் :

வீட்டில் இருக்கில்என் நாட்டிலே போகில்என்
கூட்டில்வாள் சாத்திநின் றுந்தீபற
கூடப் படாததென் றுந்தீபற.

**(உரை)** எல்லாவற்றையுந் தன்னாலே விடப்பட்டுத் துறவறத்திலே இருந்தாற் பிரயோசனமென்ன; இதுவொழிந்து நாடத்தக்க அர்ச்சனாதிகளினும் தீர்த்த தரிசனங்களினும் உழன்றாலும் பிரயோசனமென்ன, (பொன்னுக்கு மாற்று நின்றாற்போல) ஆன்மாவே குகையாக அநாதியே தனக்குப் பிராணனாய் நிற்கிற திருவடி ஞானத்தைத் தேசிகன் கடாக்ஷத்தாலே உணர்ந்து தன்னுடைய சுதந்திரனத்தையுங் கர்த்தாவின் செயலென்றே கண்டு தனக்குப் பொருந்தினதொரு நிலையிலே நில்லானாகில், இப்படி உண்மையறிந்து நில்லாமல் தன்னாலே செய்யப்பட்டதாகக் கருதில் மோக்ஷங் கூடாது போதத்துக்கு விரோதமே விளையா நிற்கும்; (அஃதெப்படி எனில்:- கர்த்தாவை அறியாமல் சகலர்க்கும் இதமாக யாகம் பண்ணின தக்ஷப் பிரசாபதிக்கு விரோதமே விளைந்தும், சகலரையுங் கைவிட்டுத் தன்னுடைய செயலறக் கர்த்தாவின் வசத்திலே நின்று சண்டீச நாயனார் சிவனை அர்ச்சிக்கிறவளவில் சகலருக்கும் அகிதமான பிரமகத்தி விளைய, இதுவுஞ் சிவனுக்கு இதமாகவே பலித்துத் திருவருள் விளைந்தபடியுங் கண்டுகொள்க; ஆதலால் உண்மையறிந்து சருவமுங் கர்த்தாவின் செயலென்றே கொள்ளாமல் தன்னுடைய செயலென்றே ஒவ்வொரு தவத்திலே நின்றவர்க்கு வினை ஏறுதிராது) என்க.

இந்த உபாயத்தையுடைய சைவ சித்தாந்தத் திறமொழிந்து மற்றொரு சமயிகளின் பொருளைப் பொருளெனக் கருதவேண்டாமென்று அருளிச்செய்கின்றார் :

சாவிபோம் மற்றச் சமயங்கள் புக்குநின்(று)
ஆவிய றுதேயென் றுந்தீபற
அவ்வுரை கேளாதே உந்தீபற.

**(உரை)** ஆன்மாவுஞ் சிவமும் வேறற நிற்கும் அநுயோக ரசமாகிய சைவ சித்தாந்தத் திறம் ஒழிந்து, ஒருவன் பசிதீரச் செய்த

பயிரானது பயன்படுமளவும் பயிர்போல வந்து பலிக்கத்தக்க நாட்களிலே சாவிபோன தன்மைபோல, முடிவில் ஒன்றென்றுரைப்பார், இரண்டென் றுரைப்பார், இரண்டாய் நின்றே யொன்று மென்பார், உடலந்தானே உயிரென்பார், வாயுவை உயிரென்பார், கரண நாசமே பொருளென வுரைப்பார், மோகம் க்ஷயிக்க முத்தி யென்பார், இப்படிச் சொல்லப்பட்ட வெகுவிதமான சமயங்களிற் புகுந்து நின்று தனக்குப் பிராணனான சிவனைத் தரிசியாமல் நரகங்களி லடைவார். இப்படிப்பட்ட சமயிகள் வார்த்தை உன் சுரோத்திரத்துக்கு விடயமாகாதபடி நில். ௩க

இப்படிச் சைவசித்தாந்தத்தி னுண்மையிலே நின்றவர்கள் கருவிகரணாதிகளில் ஒரு காலங்களினுங் கூடாத துறவையுடையவர்களென்று அருளிச்செய்கின்றார் :

துரியங் கடந்தஇத் தொண்டர்க்குச் சாக்கிரந்
துரியமாய் நின்றதென் றுந்தீபற
துறந்தார் அவர்களென் றுந்தீபற.

(உரை) பிருதிவி முதலாக நாதமீறான தத்துவங்களையும் பஞ்சமலங்களையும் அருளாலே கண்டு நீக்கித் தன்னைத் தரிசித்துத் தன்னையும் பொருளன்றென்று கண்டு திருவடியிலே பொருந்தி நிற்கத்தக்க மெய்யடியார்க்குப் பிராரத்தத்தாலே சாக்கிரத்தானங் கூடிற்றாயினும், இவர்கள் திருஷ்டிக்குப் பரமதுரியமான ஞானமே பிரகாசிக்கும தொழிந்து ஒரு காலங்களினும் பிரபஞ்சத்துடன் கூடார்கள். அவர்களே துறவையுடைய கலியாணர்கள்.

இதில் முற்படுந் துரியமென்றது தற்போதத்தை, இரண்டாவது துரியமென்றது பரபோதத்தை யெனக்காண்க. ௩உ

இப்படித் துறவையுடைய கலியாணர்களுக்கும் பிராரத்தகன்மம் புசித்தே தொலைய வேண்டுகையாலும் புசிக்குமளவில் கருவிகரணாதிகள் கூடவேண்டுகையாலும் இவை கூடினாலும் இவற்றின் வசத்தில் அழுந்தாமற் புசிக்கு முபாயமும், ஆகாமிய மேறாமல் நிற்குமுபாயமும், இப்படி அருளிலே நின்றவர்க்குப் பெத்த தசையிற் சுகந்தானே முத்திதசையிற் சுகமாமுபாயமும் அருளிச் செய்கின்றார் :

பெற்றசிற் றின்பமே பேரின்ப மாம்அங்கே
முற்ற வரும்பரி சுந்தீபற
முளையாது மாயைஎன் றுந்தீபற.

**(உரை)** தேசிகன் கடாக்ஷத்தாலே சொரூபத்தை உணர்ந்த காலத்தும் பிராரத்தமானது எடுத்த உடலிலே நின்று புசித்தே தொலைய வேண்டுகையால், அந்தக் கன்மத்தாலே நிலைநில்லாத சுகங்கள் வந்து கூடும். இது கூடும்போதும் இதில் அழுந்தாமல் இந்தச் சுகத்தையுங் கன்மத்தையுங் கருவி கரணாதிகளையுந் தன்னையுங் கூட்டிப் புசிப்பிக்கிற திருவருளை அது கண்ணாக உணரவே ஜநநமுமேலுமற் கன்மமுந் தொலைந்து அவ்விடத்திற் கூடின அற்ப சுகமானது, இவன் ஞானதிருஷ்டியிலே நிற்கையாலே, பரம சுகமாம். இப்படி நிற்கவே மலமாயை கன்மங்கள் ஒரு காலத்தினும் மூளைய மாட்டா. ௫௫

இப்படி அளவிடுதற் கரிதான பரமசுகங் கைகூடின காலத்தே, இவனிடத்து வேறொன்றும் வந்து கூடாதபடி இந்தச் சுகந்தானே இவனை வேறற அடைவித்துக் கொள்ளுமென்று அருளிச் செய்கின்றார் :

பேரின்ப மான பிரமக் கிழத்தியோ(டு)
ஓரின்பத் துள்ளானென் றுந்தீபற
உன்னையே ஆண்டதென் றுந்தீபற.

**(உரை)** ஒருவனை ஓரின்பம் வந்தடுத்த காலத்தே இதற்கு ஓரளவுமுண்டாய் இது நீங்கின காலத்துச் சுகமான அந்த இரதந் துக்கமாகவும் வந்து கூடாநிற்கும் ; ஆதலால், இந்தச் சுகதுக்கங்கள் இரண்டும் வந்து கூடாதபடி தம்பிரானார் திருவடியிலே அடைந்த காலத்தே இவனை விடுதற்கரிதாகி விளைந்த அனுபோக ரசமானது பரமாநந்தமாகிய பிரமசத்தியினைக் கூடினபொழுதே ஒரு தன்மையான சுகசொரூபமாய்விடும். இப்படியே அசத்தியத்தைச் சத்தியமாகக் கொண்டொழுகின உன்னையும் மேலாயுள்ள ஞானாநந்தத்திலே சேர்த்தடிமை கொண்டது. ௫௬

இந்தப் பேற்றைப் பெற்றவர்களுக்குத் தேகம் நிற்கின்றபோதும் ஆன்மாவின் செய்கை கிளையாமல் ஒடுங்கிச் சிவனுடைய செய்தியாய் நிற்கும் நிலைமையை அருளிச் செய்கின்றார் :

பெண்டிர் பிடிபோல ஆண்மக்கள் பேய்போலக்
கண்டாரே கண்டாரென் றுந்தீபற
காணாதார் காணாரென் றுந்தீபற.

(உரை) ஆன்மாவானது ஒருத்தியைப் பேய்பிடித்த காலத்துத் தன்னுடைய சொரூபம் வேறாகாதிருக்க மனமும் வாக்குஞ் செயலும் பேயின் வசத்தேயாய்த் தன்னை மறந்து பேயென நின்ற தன்மை போலவும், நாயகரான தம்பிரானார் தேகியை ஆவேசித்த பிசாசமானது தன்னுடைய சொரூபம் ஒருவர் காணநின்று தேகியினுடைய செயலை யழித்துத் தன்னுடைய செயலே பிரகாசிப்பித்துத் தானே தேகியாய் நின்ற தன்மைபோலவும், இப்படிப் பாவனையாற் பாவமாகக் கூடி நின்றவரே சிவனை உள்ளபடி கண்டு கூடினவர்கள்; இப்படிக் கண்டு கூடாதார் எக்காலமும் விழியாத கண்ணையுடையவர்கள். ௩௫

இந்நிலை கூடாதவர்களுக்கு வேறேயு மோருபாயம் உண்டென்று அருளிச் செய்கின்றார்:

நாலாய பூதமும் நாதமும் ஒன்றிடின்
நாலாம் நிலையாமென் றுந்தீபற
நாதற் கிடமதென் றுந்தீபற.

(உரை) சுக்கில சுரோணிதத்தின் தலையிலே சீவன் பதிகின்ற வளவில் சிவனுடைய கிரியாசத்தியாலே நாலாம் பூதமாகிய வாயுவுஞ் சத்தப் பிரமமான நாதமுங் கூடப் பதிந்து சரீரம் பரிணமிக்க வாயுவானது நாடிகடோறும் பூரணமாகப் பிரதான வாயுவான பிராண வாயுவும் பின்பு மரணமுண்டாக்குதற் பொருட்டு நாபிசக்கரத்தின் கீழே சென்று பதியாநிற்குஞ் சத்தப் பிரமமான நாதாந்தந் தானந் தோறு நிற்கு மெழுத்துக்களாகிச் சென்று பின்பு மரணமுண்டாக் குகை காரணமாக மூலாதாரத்திலே பிரணவமாகப் பதிந்து கிடவா நிற்கும். இவற்றைத் தேசிகனருளாலே அறிந்து சத்திபீசத்தையுஞ் சிவபீசத்தையுங் கொடுத்துத் திருமந்திரப் பிரசாதமாக்கி மனத்தை ஒருமைப்படுத்தி, இந்தத் திருமந்திரப் பிரசாதத்தைக் கொண்டே நாதத்தை எழுப்பி, இந்த நாதத்தையும் பிராண வாயுவையுங் கூட்டிச் சுழுமுனை வழியே செலுத்தி முன்பு தோன்றின பிரமாந் திரத்திலே கூடித் தான் பரமாகாசத்தில் அழுந்தில், நாலா நிலையாகிய சாயுச்சியம் அப்பொழுதே கைகூடும். கர்த்தா எழுந்தருளியிருக்கத்தக்க இடமும் அவனைக் கூடுகைக்கு இடமும் அதுவே. ௩௬

இப்படி யன்றி வேறு வழிகளிற் சென்று தற்போதத்தாற் கூடத்தக்கதென்று பாவித்து ஜநநமரணங்களிலே விழுந்து அழுந்தா திருக்கும்படி அருளிச்செய்கின்றார் :

சென்ற நெறியெல்லாம் செந்நெறி யாம்படி
நின்ற பரிசறிந் துந்தீபற
நீசெயல் செய்யாதே யுந்தீபற.

**(உரை)** கன்மங்களுக் கீடாகத் துணை செய்கிற மனுதிகளுடனே கூடி நச்சு வழியான விலக்கடி என்னும் ஐந்து பொறிவழியுஞ் சென்று விடயங்களிலே பொருந்தி இதாகிதங்கள் கூடி மறுமைக்கு வித்தாகிய குற்றங்களை விளைவிக்கின்ற வழிதானே, ஐயமற்ற சூதானப் பெருவழியாம்படி, தேகங் கூடினபடியுந் தேகத்திலே தானிற் கிற முறைமையுங் கன்மங்கள் வந்து கூடும்முறைமையுந் தன்னுடைய போதம் இந்தவகை தெரியாமல் இந்திரிய கரணங்களுடனே கூடி நின்று சலித்த முறைமையும் (காந்தமும் பசாசமும்போலத்) தம்பிரானுர் சந்நிதியிலே கூடிச் சீவிக்கு முறைமையும் அருட் கண்ணுற் கண்டு தன் செயலற நிற்க, பிராரத்தமுந் தொலைந்து ஆகாமியமு மேருமற் பின்பு தேகாந்தத்திலுந் திருவடியிலே கூடுகைக்குக் காரணமாம்; ஆதலாற் பக்கம் நோக்காமல் ஒரு நிலையிலே நில். இப்படி யொழிந்து உன்னுடைய செயலாலே கூடத்தக்கதென்று பாவித்து ஜநந மரணங்களிலே விழுந்து அழுந்தாதே. ௩எ

இப்படித் தேசிகன் கடாக்ஷத்தாலே பெற்ற திருவருளைக் கொண்டு ஜநந மரணங்களுக்கு உற்பத்தி தேடாமல் எந்த உபாயத்தினுலேயாயினுந் திருவடியை அடைகைக்கு விரும்புவதே பொருளென்று அருளிச் செய்கின்றார் :

பொற்கொழுக் கொண்டு வரகுக் குழுவதென்
அக்கொழு நீயறிந் துந்தீபற
அறிந்தறி யாவண்ண முந்தீபற.

**(உரை)** பொன்னுலே சமைத்த கொழுவைக்கொண்டு வரகு விளைய உழுதகாலத்திற் பலமுங் குறைந்து மிகுந்த சேதமுமாய் உழவு பிழைத்த தன்மைபோல, தேசிகனுலே பெற்ற திருவருளைக் கொண்டு பிழையே பெருக்கி ஜநநமரணங்களிலே போக்குவரவு செய்ய உற்பத்தியான இந்திரிய விடயங்களில் நீ அழுந்தாதே. அந்தத்

திருவருள் முன்பு தோன்றாமல் நின்று உபகரித்த முறைமையறிந்து தோன்றின பின்பு அது கண்ணாகை அதிலே கூடியழுந்தின காலத்து ஜநநமரணங்களுஞ் சுகதுக்க வேதனைகளும் நீங்கி, ஒரு காலத்தினும் நீங்காப் பரமாநந்தமே விளையுமென்னும்படியும் அறிந்து, தன்னு டைய செயலற அதுவாய் நிற்கின்றதே நிலை. இப்பொருளை உண ராதே யுணர்ந்து நில். ௫௮

இப்படி உணர்த்தா நின்ற சிவனை உணராதே யுணரக்கூடா தாகிற் சிவனைப் பாவித்து நிற்கவே இந்த உண்மை கூடுமென்று அருளிச்செய்கின்றார் :

அதுவிது என்று அனைத்தறி வாகும்
அதுவிது என்றறிந் துந்தீபற
அவிழ்ந்த சடையாரென் றுந்தீபற.

**(உரை)** ஆன்மாவினுடைய கருத்துப்போல அநாதியே மறைத்த சகச மலத்தாலே மாயையுங் கன்மமும் பொருந்திய ஜநநத்தையே விளைவித்து இந்திரிய வியாத்தனாய் விடயங்களிலே பொருந்துங் காலத்து, இரண்டு பொருளைச் சேர வறியமாட்டாமல் ஒன்றொன்றாக அறிந்தும், அறியுங் காலத்திலே அதுவிதுவென்று சுட்டிப்பற்றி நின்று சலித்து மயக்க விகற்பங்களிலே யடைந்து பொய்யை மெய் யெனக் கருதித் தன்னுடைய உண்மை விளங்காமல் இரவுபகல் அகப் பட்ட ஆகாசம்போல இடைவிடாமல் நின்றழுந்தாதே, தம்பிரா னுடைய கருத்தானது அநாதியேயுள்ள காருண்ணியத்தின் மிகுதி யாலே ஆன்மாக்களுடைய மலமாயை கன்மங்களைத் தொலைப்பித்துத் திருவடியிலே கூட்டவேண்டுமென்கிற இச்சையாலே, ஆன்மாக் களுக்கு அநாதியே பிராணனாய் நின்றும் அவ்வக்கன்மங்களுக் கீடான வைகளைத் திருவுளத் தடைத்துச் சர்வத்தையும் ஒரு காலத்திலே சேர வுணர்ந்தும் உணர்த்துவித்தும் புசிப்பித்தும் பிரிப்பித்தும் ஒடுக்குவித்துஞ் செய்யா நிற்க, தானொன்றையும் அதுவிதுவென்று சுட்டிப் பற்றிநின்று சலியாதே தன்னுடைய அருளாலே நடக்கத் தானொழிவற நிறைந்து மயக்க விகற்பங்களுமின்றி அசைவற நில்லா நிற்கும் அந்தப் பொருள் அநாதியே இவன்றானாய் நிற்கிற முறை மையை அருளாலே யறிந்து ஆன்ம பாவனையைவிட்டுச் சிவபாவனை

யிலே நிற்க. இப்படிக் கூடி நிற்கின்ற பொருளே ஒருவராற் சுட்டப் படாத விரிந்த சடாபாரத்தையுடைய தம்பிரானுர். ௩௯

நின்மலரான தம்பிரானுர் ஆன்மாவுடனே கூடி ஆன்மாவாய் நிற்கைக்குக் காரணம் அவருடைய காருண்ணியத்தின் மிகுதியே என்று அருளிச் செய்கின்ருர் :

அவன்இவ னுன(து) அவனரு ளாலல்ல(து)
இவனவ ஞகானென் றுந்தீபற
என்று மிவனேயென் றுந்தீபற.

**(உரை)** வாக்குமன அதீதமாயிருக்கத்தக்க தம்பிரானுர் பிராணனு யிருக்கும்போதும் அநாதியே பசுத்துவமான ஆணவமலம் உண்டா கையால், இந்த ஆணவமலம் பக்குவப்பட்ட அவசரத்திலே (செம்பிற் கிடந்த மாற்றுப் பிரகாசித்து பொன்னென்னும் பெயர் பெற்ருற் போல) தம்பிரானுரும் பிரகாசித்து இவனைத் திருவடியிலே கூட்டிக் கொள்ளுதற் பொருட்டுத் தம்முடைய காருண்ணியத்தினுலே இவனுக எழுந்தருளி நின்ற தொழிந்து சிவபிரான் ஆன்மாவாகின்ருரல்லர். ஆன்மாவுந் தம்பிரானுர் திருவடியிலே கூடிப் பரமாநந்தத்தை அனுப விக்கிற தொழிந்து சிவனுலாய பஞ்ச கிருத்தியங்கள் நடத்துகை யில்லை. சிவன் தம்முடைய கருணையாலே ஆன்மாவாகியுஞ் சிவனு கியும் நிற்கவல்லர். ஆன்மாவானவன் என்றுந் தன்னுண்மை குன்ரு மற் கூடினதொன்றிலே அதுவாய் நிற்கவல்லன். ௪௦

இந்தப் பொருளைக் கூடாமல் அநாதியே யுண்டாக்கத்தக்க விக்கினமும் அது தீரும் உபாயமும் அருளிச்செய்கின்ருர் :

முத்தி முதலுக்கே மோகக் கொடிபடர்ந்(து)
அத்தி பழுத்ததென் றுந்தீபற
அப்பழ முண்ணுதே யுந்தீபற.

**(உரை)** முத்தியைப் பெறுகைக்கு முதன்மையான ஆன்மா விலே அநாதியே மறைக்கத்தக்க ஆணவ மலத்தின் காரியமான அஞ் ஞானமென்னுங் கொடி வெகு விதங்களாகப் படர்ந்து, இதாகிதங் களே விளைந்து இவை காரணமாக மயக்கத்தைச் செய்கிற மாயை யாலே பூதகாரியமான உடம்பு ஜநநந்தோறும் பலியா நிற்கும். இந் தப் பழத்தை அருந்தி நரகவேதுவாகாதே, ஆசாரியன் கடாக்ஷத்

தாலே பெற்ற அருளாகிய வாளாலே ஆணவமலமாகிய மூலத்தை வேரறுத்து முத்திப் பழமாகிய பரமாநந்தத்தை அனுபவித்துச் சிவனுடனே ஒரு தன்மையாய்விடுக. சக

இப்படி யொழியப் பரிபூரணத்துவமாக நிற்கத் தக்கதோர் உபாயம் அருளிச்செய்கின்றார் :

அண்ட முதலாம் அனைத்தும் உட்கொண்டு
கொண்டத்தைக் கொள்ளாதே உந்தீபற
குறைவற்ற செல்வமென் றுந்தீபற.

**(உரை)** அண்டமென்று சொல்லப்பட்ட சக்கரவாள கிரியும் மகாமேருவும் அண்டகோளகையும் அட்டகுல பார்வதங்களுந் திக்கயங்களும் அட்டநாகங்களுஞ் சத்த சமுத்திரங்களுஞ் சத்த மேகங்களும் பதினன்கு புவனங்களுந் தேவர் அசுரர் சித்தர் வித்தியாதரர் கின்னரர் கிம்புருடர் மற்றுமுண்டான அண்டர் முதலாக உள்ளிட்ட பேதங்களுஞ் சந்திராதித்தரும் பஞ்சபூத பரிணமங்களும் பேய்த்தேர் போன்ற வியாபாரங்களும் பொதிந்த திரட்சி ஓரண்டமாக வளர்ந்த கோடியண்டங்களும், இப்படி ஒவ்வோர் அண்டங்களைத் தசமடங்கு பொதிந்த சலமும், அந்தச் சலத்தைத் தசமடங்கு பொதிந்த அக்கினியும், இந்த அக்கினியைத் தசமடங்கு பொதிந்த வாயுவும், இந்த வாயுவைத் தசமடங்கு பொதிந்த ஆகாசமும், இவை எல்லாவற்றையுஞ் சேரப்பொதிந்த பேரண்டத்தையும், இவை எல்லாவற்றிற்கு மேற்பட்டு நின்மலமாய் நிற்கிற நாத சொரூபத்தையும், இதற்கும் அப்பாற்பட்ட நின்மலமாய் எல்லைப்படாத பரமாகாசமான பெருவெளியையும், உனக் குடம்பாகி நின்று உனக்கு நிலை நின்றவாறே உன்னை யுணர்த்தின சொரூபம் உடம்பாகி நின்று, ஆன்ம போதத்தையும் இந்தப் பரிணமங்களையுஞ் சேர நினைவற விடுவாயாக. அப்பொழுதே நீ அகண்ட பரிபூரணனாய்விடுவை. சஉ

இப்படிப் பெற்றும் இந்த வுண்மையில் நில்லாமல் தேகத்தையும் விசுவத்தையும் மெய்யென நின்றருடைய வுண்மையை அருளிச்செய்கின்றார் :

காயத்துள் மெய்ஞ்ஞானக் கள்ளுண்ண மாட்டாதே
மாயக்கள் ளுண்டாரென் றுந்தீபற
வரட்டுப் பசுக்களென் றுந்தீபற.

**(உரை)** தேகத்து நிற்கிற தேகியான சிவனுடைய சத்தியஞான மான திருவடித்தாமரையி லுண்டான பரமாநந்தத் தேனுகிய மதுவையுண்டு தேக விசுவங்களுந் தெரியாமல் தன்னையுஞ் சிவனை யும் அறியாதபடி ஜீவேசுவரத்துவத்திலே அடையாமல் (மிகவும் பசித்தாெனருவன் தன் கையில் வந்திருந்த பாற்றிரளைப் போட்டு நாவுக்கெட்டாத முழங்கையை நக்கிப் பசிதீர விசாரித்த தன்மை போல) பேய்த்தேர்போன்ற விசுவத்தையும் இந்திரசாலம் போன்ற வாழ்வையும் மெய்யெனக் கருதி நாகவேதுவான விடய சமூகங்களி னுண்டாகும் இதாகிதங்களாகிய மதுவை யுண்டார்கள். அவர்களே ஒரு காலங்களினும் பயன்படாத ஆன்மாக்கள். சங

இப்படி யாவராலும் பெறுதற்கரிய பேற்றைக் காருண்ணியத் தின் மிகுதியாலே தந்தகுருவைத் தம்முடைய சிநேகத்தின் மிகு திப்பாட்டாலே துதிக்கின்றார் :

சிந்தையி னுள்ளும்என் சென்னியி னும்சேர
வந்தவர் வாழ்கவென் றுந்தீபற
மடவா ளுடனேயென் றுந்தீபற.

**(உரை)** ஒழிவற நிறைந்த தம்பிரானுர் அநாதியே அடியேனுக் குப் பிராணனுயிருக்க, அநாதியே உண்டான மலத்தின் மிகுதிப்பாட் டாலே ஜநந மரணங்களிலே யுழன்று போக்குவரவே பொருளாகத் திரிந்த அடியேனைத் தம்முடைய காருண்ணியத்தின் மிகுதியாலே பொருந்தின திருமேனியுடனே எழுந்தருளிவந்து, மலமாயை கன் மங்களும் ஜநந மரணங்களுங் கூடாதபடி, என்னுடைய பொல்லாப் புலாற்றலையிலே யாவராலுங் குறித்தற்கரிய சிவகந்தத்தை யுடைத் தாகிய திருவடித்தாமரையைச் சேர்த்தும், அந்தத் திருவடி அடி யேனுக்கு அநாதியே பிராணனுய் நின்ற முறைமையை யுணர்த்தி யும், என்னுடைய சித்தமானது சலியாமல் அந்தத் திருவடியுடனே விட்டு நீங்காமல் ஒருவழிப்படக் கூடி வேறற நிற்கு முபாயத்தைத் தந்தும், இப்படித் துக்கசாகரத்தினின்றுங் கரையேற்றின தம்பிரா னுர் காலங்காட்டாத சுக சொரூபத்துடனே மேன்மேலும் வாழ்வார். சருவான்மாக்களும் ஈடேறுகைப் பொருட்டால் அநாதியேயுண்டான காருண்ணிய சத்தியுடனேயும் அனவரதமுங் கூடி வாழ்வார். சச

இந்தத் திருவுந்தியார் அருளிச்செய்த தம்பிரானார் இந்தச் சாத்திரத்தின் மகிமையுந் தம்முடைய திருநாமமுந் தோன்ற அருளிச்செய்கின்றார்:

ஸவைய முழுதும் மலக்கயங் கண்டிடும்
உய்யவந் தானுரை உந்தீபற
உண்மை உணர்ந்தாரென் றுந்தீபற.

**(உரை) உய்யவந்த** தேவரால் அருளிச் செய்யப்பட்ட இந்தத் திருவுந்தியா ரென்கிற சாத்திரத்தைக் குருமுகத்தாலே கேட்டு, இதனுடைய சம்பிரதாயத்தை அறிந்தவர்கள் அநாதியே தொடங்கியுழன்று போந்த தேகவிசுவங்களி னுண்மை அஞ்ஞான சாகரமென்றே விட்டேறி, உண்மை யென்னுந் திருவடியாகிய நெடுங்கரையிலே சேர்ந்து பரமாநந்தமே அனுபவித்துக் கொண்டிருப்பார்கள். சரு

---

## திருவுந்தியார் திருக்களிற்றுப்படியார் வரலாறு

திருவுந்தியார் சாலிவாகன சகாப்தம் 1070-ல் (கி. பி - 1147 - 1148) திருவியலூர் உய்யவந்ததேவ நாயனாரால் இயற்றப்பட்டது. இவர் வடநாட்டிலிருந்து சேதுஸ்நானம் செய்யவந்ததாகவும் செய்து திரும்புங்கால் சோழநாட்டிலே திருவியலூரிலே ஆளுடையதேவ நாயனார் என்பவர் இவரையணுகி உபதேசம் பெற்றதாகவும் அவருக்காகவே திருவுந்தியார் என்ற சாத்திரத்தை இவர் அருளிச்செய்ததாகவும் பின்னர் வடநாட்டுக்கே சென்றுவிட்டதாகவும் பழைய வரலாறு ஒன்று கூறுகின்றது. இதற்கு என்ன ஆதரவு உளதென்பது விளங்கவில்லை. இந்நூலின்கண் உள்ள பொருள்கள் பழைய தமிழ் முறையில் இருத்தலாலும், இந்நூலின் நடையும் திருமந்திரத்தின் நடையை நினைவூட்டுவதாலும் இந்நூலும் இவ்வாசிரியரும் தமிழ்நாட்டில் தோன்றியவர்களே யென்று ஊகிக்க இடமுண்டு.

இவ்வாசிரியரது மாணவராகிய மேற்கூறிய ஆளுடையதேவ நாயனார் தமது மாணவர் ஒருவருக்குத் தமது ஆசிரியர் பெயரைச் சூட்டி இந்நூலின் அநுபவப் பொருளை உபதேசித்தருளினார். அவரே திருக்களிற்றுப்படியார் என்னும் நூலை இயற்றிய திருக்கடவூர் உய்யவந்ததேவ நாயனார் ஆவர். அவரது நூலைத் தில்லைவாழந்த

ணர்கள் ஆங்கீகரிக்கவில்லை என்றும் அந்நூல் தில்லையம்பலத்திலுள்ள பஞ்சாக்கரப் படியின்கீழ் வைக்கப்பட்டதென்றும் உடனே அப்படியில் செதுக்கப்பட்டிருந்த யானை தனது துதிக்கையை நீட்டி அந்நூலை யெடுத்துத் தில்லைத் திருக்கூத்தன் திருவடியில் வைத்ததென்றும் இதனால் அந்நூல் திருக்களிற்றுப்படியார் என்ற காரணப் பெயர் பெற்றதென்றும் ஒரு பழைய வரலாறு கூறுகின்றது. இவ்வரலாற்றுக்கும் என்ன ஆதாரவுள்ளதென்பது விளங்கவில்லை. திருக்களிற்றுப் படியார் இயற்றிய காலம் சாலி 1100 (கி. பி. 1177 - 1178) எனப் படுகிறது. திருக்களிற்றுப்படியாரில் நால்வர் அற்புதங்கள், பல நாயன் மார் செய்திகள் சேந்தனார் களிகிவேதனம் செய்தமை முதலிய குறிப்புகள் வருவதால் இந்நூல் சேந்தனார் காலம் பெரியபுராண காலம் ஆகிய இரண்டற்கும் பிற்பட்டதென ஊகிக்கலாம். இந்நூலின் கூகூ-வது பாட்டில், "ஆளுடையான் எந்தரமும் ஆளுடையானே அறியும் - தாளுடையான் தொண்டர் தலைக்காவல்—நாளும் - திருவிய லூர் ஆளுஞ் சிவயோகி இன்றென் - வருவினையை மாற்றினான் வந்து" என்று இவ்வாசிரியர் கூறுவதால் இவ்வாசிரியர் ஆளுடையார் என்பவர் மாணாக்கர் என்பதும் அவ்வாளுடையார் திருவியலூரில் வதிந்தா ரென்பதும் விளங்கும். மேலும் திருவுந்தியாரிலுள்ள பல சொற்றொடர்களை அப்படியே எடுத்துவைத்துப் பல பாடல்களில் விளக்குவதால் இவ்வாசிரியர் கருத்து திருவுந்தியாரை விளக்கவேண்டு மென்பதும் அவ்வாசிரியரையே இவர் பரமகுருவாகக் கொண்டவ ரென்பதும் வெளிப்படை. இவ்விரு நூல்களும் மெய்கண்டார் காலத்துக்கு முந்தியன வென்பதில் ஒரு சிறிதும் ஐயமில்லை. இவ்விரு நூலுக்கும் உரை கண்டவர் திருவாவடுதுறை யாதீனத்து தில்லைச்சிற்றம்பலவர் எனப் பெயரிய சிவப்பிரகாசர். இவரது காலம் இன்னதென்று விளங்கவில்லை. இவர் வேறு; சிவப்பிரகாசத்துக்கு உரைகண்ட சிவப்பிரகாசர் வேறு. இவரது உரை சிலவிடங்களில் மூலத்துக்கு சம்பந்தமில்லாமலே யிருக்கிறதென்று சில பேரறிஞர்கள் கூறுகின்றார்கள். இதுவரை வெளிவாராத உரைகள் சில அரசாங்கக் கையேட்டுச்சாலையி லுள்ளன (Government Oriental Manuscripts Library). அவற்றைப் பரிசோதித்ததில் இவரது உரையைத் தழுவியே அவை எழுதப்பட்டனவாகத் தோன்றின. எனவே, இவரது உரையே இவ்விரு நூலுக்கும் அச்சிடப்பட்டுள்ளது.

**(உரை)** அற்றன்று, உடற்குணமேகாண் அறிவென்றது, பூத மானவை கூடுங்காலத்துப் போதமெலிவாகியும் பூதமலிவாகியுங் கூடலில் அறிவு சிறுத்துக் காயம் பெருத்ததென்றும், போதமலிவாகியும் பூதமெலிவாகியுங் கூடலில் அறிவு பெருத்துக் காயஞ் சிறுத்ததென்றும் நீ கூறின், பூதக்கூட்டத்தாற் றோன்றுமென்று நீ கூறியவுடல் பெரிதானவுடல் சிறிதாயிடாது, சிறிதானவுடல் பெரிதாயிடாது, முன்னமுள்ள முறைமைப்பாட்டில் நிற்கவேண்டும். அங்ஙனம் நில்லாது பெரியவுடல் காலஞ்சென்றாற் சிறிதாயுஞ் சிறியவுடல் காலஞ் சென்றாற் பெரிதாயும் இருத்தலாற் பூதக்கூட்டத்தில் அறிவு தோன்றுவதன்று; கன்மத்துக்கீடாக வடிவெடுத்துக் கோடலா மென்று கருதுவாயாக. (நீடுதல் - நிலைபெறுதல்.) கஉ

இயல்பு காண்இவை யென்னில் வேறிசை பெண்ணொ டாணிரு தன்மையாஞ், செயல்கொ ளாஇவர் செய்தி காரண மாக வந்து செனிப்பதென், இயல்ப தாமுடல் பூத காரிய மாவ தும்மில்லை யாகுமால், மயல தாம்வினை யாலொ ருத்தன் வகுத்த தன்மையின் வந்ததே. சரு

**(உரை)** கன்மம் உடலாக எடுத்துக் கோடற்கு அறிவில்லை; இவையெல்லாம் பூதஇயல்பென்று நீ கூறின், இயல்பு ஒருதன்மைப் பட்டிருத்தலன்றி வேற்றுமைப்படப்பொருந்தி இரண்டு தன்மை யாகிய பெண்ஆண் என்னும் முறைமையைக்கொள்ளாது. இஃதன்றியும், பூதகாரணமாகில் இரண்டு தன்மைப்பட பெண்ஆண் என்னும் முறைமை காரணமாகப் பிறப்பதென்னை? ஆகையால், இயல்பாமென்ற வுடல் பூதஇயல்புமன்றாய்ப் பூதகாரியமாவது மில்லையாம். அதனல், நீ கூறியது மயக்கத்தை யுடைத்தாம். கன்மத்துக்கீடாக ஒருத்தன் உண்டாக்கப்பட்ட தன்மையிலேவரும் உருக்களென் றறிவாயாக. கங

கார ணம்அவை யென்றதென்னை கடாதி போல்நிகழ் காரியம், நேர ணைந்து சமைந்து நின்றிடும் என்ப தும்அது நேர்கிலோம், போர ணைந்திடு மொன்றொ டொன்று பொருந்து மாகில் வருந்தியும், நீர ணங்கொரு தீயி னின்றது கண்ட தாயின் நிகழ்த்திடே. சகூ

**(உரை)** உருக்கட்குப் பெண் ஆண் செய்தி காரணமென்று நீர் கூறியதென்னை? மண்ணின்கட் கடாதிகள் தோன்றுமாறு போலப்

பூதகாரணத்திற் பெண் ஆண் காரியப்பட்டுத் தம்மிற்கூடியகூட்டத்தே உருச்சமைந்திடுமென்று நீ சொல்லுகிற இதனையாங் கொள்ளோம். அஃதெங்ஙன மென்னில், நீ கூறிய பூதங்கள்நான்குந் தம்மின் மாறுபடும் ஆதலால், அன்றி அவை மறுதலையாகாமற் கூடுமாயின் நீருந் தீயும் ஓரிடத்திற் கூடிநின்ற தன்மையை உன் காட்சியளவையிற் கண்டதுண்டாயின் வருந்தியுஞ் சொல்வாயாக. கச

பூத மேவு புணர்ச்சி யேபுரி காய காரண மாகுமேல்
காதல் ஆணொடு பெண்ணும் மேவு புணர்ச்சி காரண மாவதென்
ஆதி யேஉல கத்தில் ஆணொடு பெண்ணு மாயணை காரியம்
நாதன் நாயகி யோடு கூடி நயந்த காரணம் என்பரே. சஎ

(உரை) பூதக்கூட்டமே பொருந்தப்பட்ட காயத்துக்குக் காரணமாயின், பெண் ஆண்கள் காதலோடு புணரும் புணர்ச்சி காரணமாக உருக்கள் காரியப்படுவானேன்? அங்ஙனமானது, அநாதியே கர்த்தா நாயகியோடுகூடிப் போகத்தை விரும்ப அதுகாரணமாக ஆதியே உலகின்கண் ஆண் பெண் காரியப்பட்டு அதுகாரணமாக உருக்கள் காரியப்பட்டு வருதலின்றிப் பூதக்கூட்டங் காரணமெனப்படாது. கரு

தந்தம் வெம்மை கலந்தி டும்புனல் கன்மம் என்செய்த தென்றனை
சந்த னந்தழல் சார நீரிரு தன்மை யுற்றிடு மாறதோர்
தந்த கன்மம் இரண்ட ணைந்து தருஞ்சு கத்தொடு துக்கமும்
சிந்தி யாஎழு சீவ னுற்றிடும் வேறு டற்கிலை தேறிடே. சஅ

(உரை) புனலானது சந்தனதிகளைக்கூடிக் குளிர்ந்தும் நெருப்பைக்கூடி வெப்பங்கலந்துமிருத்தலால் அஃதென்ன கன்மஞ்செய்தது; ஆதலாற் கன்மமில்லையென்று கூறினாய், நீ உவமங்கூறிய நீர் சந்தனத்தையுந் தழலையுஞ்சார அவ்வொருபொருட்கு இரண்டுதன்மையுண்டானவாறு விசாரிப்பாயாக. கன்மம் இரண்டுவகைப்படப் பொருந்திச் சுகதுக்கங்களைக்கொடுக்கும். அந்தச்சுகதுக்கங்களை உற்றறிந்திடுவது சேதநமான உயிருக்கல்லது அசேதநமான உருக்கட்கில்லையென்றறிவாயாக. தந்த கன்மமாவது முன்ஜநநத்தில் அறிவுண்டாக்கிக் கொண்டதாய்ப் பின்ஜநநத்தில்வந்து கூடியகன்மம். சிந்தியாவெழுசீவனென்றது சுகதுக்கங்களுக்குப் பிரியாப்பிரியப்படுதலை. கசு

இன்பம் எய்தி இருந்து நீவினை இல்லை இங்கியல் பென்றிடில், துன்பம் எய்திடு வானென் மற்றிது சொல்லி டாய்சொல வல்லையேல், முன்பு செய்திடு கன்ம மென்றறி கன்ம மும்முதல் வன்ன றிந், தன்பி னூறு விக்கு மப்பயன் ஆங்க மைப்பொ டநாதியே. சசு

(உரை) நீ ஸ்திரீகளுடன்கூடிப் போகஇன்பத்தை அநுபவித் திருந்தும் அது இயல்பொழியக் கன்மமில்லையென்று கூறில், அந்த ஸ்திரீகள்நீங்கினவிடத்துத் துக்கப்படுவானேனென், இஃது எதனால்வந்த தென்று சொல்லவல்லையாகிற் சொல்லுவாயாக, ஸ்திரீகளுடன் கூடிப் போகத்தை அநுபவிப்பதும் அவரைநீங்கித் துன்பத்தை அநுபவிப்பதும் நீ முன்செய்த புண்ணியபாவங்களென்று அறிவா யாக. அந்தப் புண்ணியபாவங்களுந் தாமாக அணைவதல்ல, கர்த்தாவான வன் அறிவுகள்செய்த கன்மத்துக்கீடாக அறிந்து அநுக்கிரகத்தாலே யூட்டுவன். அறிவுங்கன்மமும் அவற்றைக்கூட்டுதலும் அநாதியே யுள்ளன. சஎ

அநாதி யேலமை வின்றெ னின்மல மாயை கன்மம் அணுச்சிவன்
அநாதி கன்மம் அணுக்கள் செய்ய அறிந்து கன்மம் உடற்செயா
அநாதி காரிய மாமு டற்கள் அசேத னம்மணு யாவறிந்(து)
அநாதி யாதி அமைக்க வேண்டும் அமைப்பி னேடும் அநாதியே.

(உரை) நீர் கூறியவை அநாதியேயாமாகில் ஒருவன் கூட்டுத லில்லையென்று கூறின், மலமும் மாயையுங் கன்மமும் ஆன்மாவுங் கர்த்தாவும் அநாதி, கன்மத்தை ஆன்மாக்கள்செய்ய அந்தக் கன்மந் தானுயறிந்து ஆன்மாக்களுக்கு உருவையெடுத்துக் கூட்டமாட்டாது, அநாதியே காரியப்பட்டு வரும்உடல்கள் அசேதனமாகையால் ஆன் மாவையறிந்து கூடமாட்டாது. ஆகையால் அநாதியாகிய கர்த்தா ஆன்மாவையும் கன்மத்தையும் அதற்குப்பொருந்தின வுருவையும் ஆதியாகக்கூட்டல்வேண்டும். அப்படி அவன் கூட்டினகூட்டரவும் அநாதியாகையால் இவையும் அநாதிதான். சஅ

காணொ ணுகர ணங்க ளுக்குயிர் கண்டி டாமையின் இன்றெனில்
காணு மோகடங் கண்ட கண்ணினைக் கண்டு நிற்பதுங் கண்ணதே

காணொ ணாதுயிர் தானு மிப்படி கண்டி டுங்கர ணங்களைக்
காணொ ணாகர ணங்க ளுக்குயி ருண்மை யாவதுங் கண்டிடே.

**(உரை)** புறக்கரணங்களுக்கு உயிர்காணவொண்ணாதாகையாற் காட்சிக்குப்புலப்படாமையின் ஆன்மாவென்றொன்றில்லையென்றுகூறின், சரீரமானது தன்னைக்கண்ட கண்ணைத்தான் காணவற்றோ? அச்சரீரத்தைக் கண்டுநிற்பதுங் கண்ணுக்குள்ள தொழிலேயாம். காட்சியளவையாகிய கண்ணுக்குக் காணவொண்ணாதென்ற உயிரும் இத்தன்மைத்து, உயிர் சேதனமாகையாற் கரணங்களைக் கண்டுநிற்கும், கண்களைச் சரீரம் அறியாதவாறுபோலக் கரணங்களும் அவ்வான்மாவைக் காணவொண்ணா, ஆகையால் ஆன்மாவை யுண்மையாக உண்டென வறிவாயாக. கக

அங்கி யானது தானு மொன்றை அணைந்து நின்று நிகழ்ந்திடும்
பங்கி யாதுயிர் தானு மிப்படி பற்றி யல்லது நின்றிடா(து)
எங்கு மார்தயி லத்தை யுண்டெழு தீப மான தெரிந்திடும்
அங்க தாம்உடல் நின்று கன்மம் அருந்தி யாருயி ராவதே. ருஉ

**(உரை)** நெருப்பானது ஓரிந்தனத்தைப்பற்றிநின்று தன்வடிவைக் காட்டுந் தன்மையன்றித் தனித்துநின்று தன்வடிவைக்காட்டுந் தன்மையை யுடைத்தன்று; அதுபோல், ஆன்மாவும் ஒருருவைக்கூடியன்றி நிற்கமாட்டாது, தகளியெங்கும் நிறைந்த எண்ணெயைப்பருகி ஓங்கிய தீபமானது எரியாநிற்கும், அப்படிக் கன்மத்தால் எடுத்துக் கொண்ட காயத்தினின்றுங் கன்மத்தைப்புசிப்பது ஆன்மாவாம். திரி காயத்திற்கும், எண்ணெய் கன்மத்திற்கும், தீபம் ஆன்மாவிற்கும் உவமை. பங்கியாது - அழியாது. உO

அறிவு தானுட லத்தின் வேறது வாயி றந்து பிறந்திடின்
அறிவு முன்புள திங்கு வந்தும் அறிந்தி டாமைய தின்றெனின்
அறிவை யோகன வத்து நீநன வத்தை அன்று தரத்திருந்
தறிவு மவ்வறி வோமய க்கறி வாத லாலறி யாதுகாண். ருஙு

**(உரை)** அறிவானது இவ்வுடலத்தின் வேறுபட்டு இறந்தும் பிறந்துந் திரியுமாயின் அவ்வறிவு முன்புள்ளதாயின் இப்பிறப்பினும் அறியாமையின்றி அறிவேயாயிருக்கவேண்டும். அஃதில்லையே யென்று நீகூறின், நீ கனவுகாணுமிடத்தே அக்கனவை நனவென்பு

தன்றிக் கனவென்பதறிதியோ? அஃதன்றியும், நீ மாதாவுதரத்தில் முன்னிருந்தறிந்த அறிவோ பூததேகமானபின்பு மயங்கினஅறிவு. ஆகையால் இறந்தும் பிறந்துந்திரிகையால் ஆன்மாவுக் கறியாமையே குணமாம். உக

இறந்தி டும்அறி வேபி றந்திடு மென்ப திங்கிசை
யாதெனின், உறங்கி டும்பொழு தின்றி நின்றுணர் விங்கு
தித்திடு மாறதோர், பிறந்த இவ்வுடல் போக வேறுடல
பின்பு வந்தமை பேசிடின், மறந்தி டுங்கன வத்தின் வேறு
டல் வந்த வாறு மதித்திடே. ருச

**(உரை)** இறந்த அறிவே பிறக்குமென்று இவ்விடத்துக் கூறியது பொருத்த முடைத்தன்றென்று நீகூறின், நீ துயில்செய்யுமிடத்து முகத்திற் பாம்பேறவும் அறிவின்றிக்கிடந்து விழித்தவிடத்து உணர் வினின்று பாம்பைக் காணவும் பயப்படுமாறு விசாரிப்பாயாக. இப் போதெடுத்துக்கொண்ட காயங் கெட்டாற் பின்பு மற்றொருகாயமுண் டாம்படி எப்படியென்று சொல்லின், நனவை மறந்திடுங் கனவில் உன்னையெடுத்துக்கொண்டு திரியும்உடல் உன்னைக் கூடியவாறு எத் தன்மை அத்தன்மையாக வென்றறிவாயாக. உஉ

கரணம் வாயு விடத்த டங்க அடங்கி வந்தெழு காரியம்
மரண மான விடத்து மற்றிவை மாய்ந்து பின்பு வருஞ்செயல்
கிரண மார்கலை கெட்டு திப்ப இறப்பி னோடு பிறப்பையும்
தரணி யோர்கள் மதிக்கு ரைப்ப ருயிர்க்கு மிப்படி சாற்றிடே.

**(உரை)** ஒருவன் மரணமானவிடத்தே இந்திரியங்கள்கெட்டுப் பின்பு அவைவரு முறைமைப்பாடு எத்தன்மைத்தென்னில்? ஒரு வன் மூர்ச்சித்தவிடத்துக் கரணங்கள் வாயுவிடத்தொடுங்க அவ்வாயு வுஞ் சேட்டைகெட்டுப் பின்பு அவன் மூர்ச்சை தீர்ந்தவிடத்து அக் கரணங்கள் சேட்டைப்பட்டாற்போலும். இஃதன்றியும், மதி யினது கிரணம்பொருந்தின கலைகள் கெட்டுந்தோன்றியும் வருதலை மதிக்கும் இறப்பும் பிறப்புமாகக் கூறுநிற்பர்கள் உலகத்தார்; அது **போல,** ஆன்மாவுக்கும் இப்படிக் கூறுவாயாக. உ௩

பூத மானவை காரி யங்கள் பொலிந்து மன்னி அழிந்திடும்
ஆத லால்ஒரு நாதன் இங்குளன் என்ற றிந்துகொள் ஐயனே

பேத மான கடாதி மண்ணினில் வந்த வாறு பிடித்திடில்
கோதி லாத குலால ஞல்வரு செய்கை யென்று குறிப்பரே.

(உரை) நீ கூறிய பூதங்கள் காரியப்பட்டுப் பொலிவினையுடைத்தாய்ப் புசிப்பளவு நிலைபெற்று மீளவும் அழியாநிற்கும்; ஆதலால், இவற்றை ஆக்கியும் அழித்துஞ் செய்வான் ஒரு கர்த்தாவுண்டென்று அறிவாயாக. மண்ணினிடத்துக் கடாதிபேதம் வந்தாற்போலப் பூதகாரியமே காயமென்னில், அம்மண்ணுங் குற்றமில்லாத குலாலனது செய்கையாற் காரியப்பட்டாற்போலக் கர்த்தாவினுடைய செய்கையாற் பூதமுங் காரியப்பட்டதென்று அறிவாயாக. ஐயனே என்றது இகழ்வின்கண் வந்தது. அசேதனமாகிய மண் சேதனனாகிய குலாலனாலே காரியப்படுமாபோலப் பிரபஞ்சம் ஈசுரனாலே காரியப்படுமென்று அறிவாயாக. உச

வேதன் நாரணன் ஆர ணம்மறி யாவி ழுப்பொருள்
பேதைபால், தூத னுயிரு கால் நடந்திடு தோழன் வன்மை
செய் தொண்ட னுக்(கு), ஆத லாலடி யார்க ளுக்கெளி யான
டிக்கம லங்கள்நீ, காத லாலணை ஈண்டன் வேண்டின
இம்மை யேதருங் கண்டிடே. ருஎ

(உரை) பிரமாவும் விஷ்ணுவும் இருக்கு யசு சாமம் அதர்வணமென்னு நாலுவேதமும் அறிதற்கரிதாகிய விழுமியபொருள், வலிந்தாட்கொண்ட சுந்தரமூர்த்திநாயனார்க்குத் தூதனாய்ப் பரவையாரிடத்தே இரவின்கண் இருகால் நடந்த துணைவன், அப்படிப் பிரமவிஷ்ணுக்களுக்கு அரியனாயினும் அடியார்களுக்கெளியனாய் எண்ணியவை யிம்மையிலே கொடுக்கத்தக்கவனாகையால், அவனது ஸ்ரீபாத கமலங்களை நீ விருப்பத்தோடும் வழிபடுவாயாக. விரும்பிய போகத்தையும் இம்மையிலே தருவனாதலால் அவனைமெய்யாகக் காண்பாயாக. வன்மைசெய் தொண்டனென்பதற்குக் கர்த்தாவை ஏவல்கொள்ளுந் தொண்டன் எனினும் அமையும். உரு

பொன்கு லாவு மணிக்க லன்கள் மலம்பு கில்கை
பொருந்திடா, மின்கு லாம்இடை யார்கள் தாமுல கத்தின்
வேட்கை விடும்பொருள், புன்பு லால்மல மூத்தி ராதி

பொசிந்து நாறு புலைக்கலம், என்கொ லாமிவர் மேல்வி ழுந்த
திவற்றின் என்பெற எண்ணியே. ருஅ

**(உரை)** பொன்னால் விளங்கப்படாநின்ற மணிகள் அழுத்திய அணிகள் மலத்திடை விழுந்தால் அம்மலத்தின் அசுத்தத்தாற் கையா லெடுத்தல் பொருந்தாது. அதுபோல, உலகத்து மின்போல நுடங்கின இடையையுடைய மகளிர்பால் மிக்க விருப்பமும் செயற்கை மண நீங்கினாலுண்டாகிய அசுத்தமிகுதிகண்டு ஆசையை விடத்தக்க பொருளாம். அஃதென்போலவென்னில், புல்லிதாய இரத்தமல மூத்திராதிகள் முதலானவை கசிந்து மிகவும் துர்க்கந்தத்தை யுடைத்தாகிய பொல்லாக்காயமாகையால், இம்மலமூத்திராதிகளில் என்ன பெறுதற்கு விசாரித்து இவர்களிடத்து விருப்பமுண்டாவது இதனால் யாதுண்டாம். உசு

தோலி ரத்தம் இறைச்சி மேதை யெலும்பு மச்சை சுவேதநீ
ராலெ டுத்த முடைக்கு ரம்பை அழுக்கி னோடு புழுக்குழாம்
நூலொ ழுக்கிடு கோழை ஈரல் நுரைக்கு மூத்திர பாத்திரம்
சேல டர்த்தகண் ணார்க ளென்பது தேர்ம லத்திரள் திண்ணமே.

**(உரை)** துவக்கு உதிரம் மாம்சம் மேதை அத்தி மச்சை சுக்கில ஜலம் இவையிற்றினாலே எடுத்துக்கொண்ட துர்க்கந்தமாகியகாயம், அன்றியும் ஊத்தையுடன் கிருமித்திரள் நூலொழுகுங் கோழை ஈரல் இவைகளாற்பொங்கி நுரைக்கும் மூத்திரபாண்டமாதலால் அப்படிப்பட்ட காயத்தையுடைய மகளிர், சேலிரண்டு அடுத்தாற்போலுங் கண்ணையுடையாரென்று சொல்லுவது எதனாலென்று விசாரிப்பாயாக; விசாரிக்குமிடத்துச் சர்வமுநிச்சயமாக மலத்தொகுதியாம். உஎ

ஆசை யுற்றுழல் சூக ரங்கள் அசுத்த மேவி அளைந்துதின்
றேசு கித்தன வாயி டுஞ்சுகம் ஏழை யோடுறும் இன்பம்நீ
மாச தற்றுளிர் நித்த சுத்த வளந்த ருஞ்சுக வாரிகாண்
ஈச னுக்கடி மைத்தி றத்தின் இசைந்து நாம்பெறும் இன்பமே.

**(உரை)** அறிவின் மகளிரோடு நீ சுகமுறுவது ஆசைமிகுத்துத் தடுமாறும் பன்றிகள் மலத்திற்புக்கு அதனைப்புசித்து அதனிற்புரண்டு மிகவுஞ் சுகத்தையடைந்தனவாய் நிற்பனபோலும். அங்ஙனமன்றியும், கர்த்தாவுக்கு அடிமைத்திறஞ்செய்து யாங்கள் பெறும் இன்ப

மாவது குற்றமற்று விளங்கும்படியாய் அழியாததாய் நின்மலமாயிருக்குஞ் சிறப்பினையுடைத்தாகிய இன்பசமுத்திரமாம். உ௮

குரோத மேகுண மாயி ருந்தவர் சாந்தி நன்மை குறிக்கொளார்
அராக மேயணை வார்க ளாசை அறுத்த இன்பம் அறிந்திடார்
பராவு தேவர் பராவு தூய பராப ரன்அடி பற்றிநீ
விராவு மெய்யில் விடாத இன்பம் விளைந்திடும்இது மெய்ம்மையே.

**(உரை)** கோபமிகுதியை இயல்பாகவுடையார் பொறையினுலுண்டாகிய நன்மையையறியமாட்டார், ஆசையேதமக்குக் குணமாகவுடையவர்கள் அவ்வாசையை அறுத்தவர்களுக்குண்டாகிய சுகத்தை அறியமாட்டார்கள்; அவர்களைப்போல நீயுஞ் சிற்றின்பமாகிய ஸ்திரீ போகத்தைக் கைக்கொண்டு பேரின்பமாகிய பிரமாநந்தத்தை அறியாய் அஃதறியவிரும்பின், இந்திராதிதேவர்களாற் பரவப்பட்ட பிரம விஷ்ணுக்களாற் போற்றிசெய்யப்படுஞ் சுத்தமான பரைக்கு மேலானவனது ஸ்ரீபாதங்களை நீ பற்றுக்கோடாகக் கொள்வாயாக; அதனுல் அப்பொழுதே உன்னுடைய சரீரந்தன்னிலே ஒருகாலும் நீங்காத சுகம் பிரகாசிக்கும். இது சத்தியம். உ௯

காம மாதி குணங்க ளைச்சுக மென்று கொண்டனை காதலால்
தூம மாரழல் அங்கி சீத மலிந்த போது சுகந்தரும்
நாம மார்தரு சீதம் வெம்மை நலிந்த போது தருஞ்சுகம்
சேம மாகிய இன்ப மாமிகு தெய்வ நன்னெறி சேரவே. ௩௦

**(உரை)** காமம் குரோதம் உலோபம் மோகம் மதம் மாற்சரியம் இடும்பை அகங்காரம் என்கின்ற இவையிற்றைச் சுகமென்று கொண்டாய் அஃதெத்தன்மை யென்னில், குளிர்மிக்ககாலத்து வெப்ப விருப்பத்தால் புகைபொருந்தின அழல்கின்ற அக்கினி சுகத்தைத் தருவதுபோலவும், வெப்பமிகுத்த விடத்துப் புனலென்று பெயரையுடைய நீரின் குளிர்ச்சியை யடைந்தபோது சுகத்தைத் தருவது போலவுமாம். கர்த்தாவினுடைய ஞானமார்க்கத்திலே கூடினுல் ஒருகாலும் விடாத இன்பமுண்டாம்; ஆதலால், அதனோடு கூடுவாயாக. காமமாதி யென்றதனுல், காமச்சுகம், சாங்கம் உபாங்கமென இருவகைத்து. சாங்கமாவது—ஆலிங்கனம், முத்தம், மிடற்றினுலுண்டாம் ஒலிபேதம், நகக்குறி, பல்லிடுகுறி, அங்கதாடனம், அங்குலிமர்த்த

நம், சும்பநம் முதலியவுமாம். உபாங்கமாவது—அன்னம், வஸ்திரம், ணம், சந்தனம், தாம்பூல முதலியவுமாம். ௩0

படிக்கு நூல்கள் சிவாகமம்பசு பாசமோடு பதித்திறம், எடுத்தி யம்புவ தீசன் வார்கழ லேத்திடுந்தொழி லென்றுமே, விடுத்தி டும்பொருள் காம மாதிகள் வேண்டிடும் பொரு ளீண்டருள், முடித்து மும்மலம் விட்டு நின்மல னோடு நின்றிடன் முத்தியே. ௬௩

(உரை) சிவநெறியாற் பேரின்பமெய்துவோர் படிக்கும் நூல்களாவன: வேதாகமங்கள், அவைகளெடுத்துச் சொல்லுஞ் சொல்லாவன: பதிபசுபாசத் திறங்கள், அவர்கள் கிரியையாவன: பரமேசுவரனுடைய ஸ்ரீபாதங்களை வணங்குகை, எப்போதும் அவர்கள் கைவிடும்பொருளாவன: காமக்குரோத முதலானவை ; அவர்கள் வேண்டும்பொருளாவது: மிக்கவருள். ஆகையால் இப்படி மூன்றுபதார்த்தத்தையு முற்றுப் பெறநிறுத்தி, மலத்திரயங்களையும்விட்டுக் கர்த்தாவோடு கூடுதல் முத்தியின்பம்; ஆதலால், நீயும் இச்செயலிலே நிற்பாயாக. இதனுள் நாலுபாதமும் அடங்கியவாறு கண்டுகொள்க. உலகாயதர் - மிச்சிரசார்வாகர், இரணியகர்ப்பசார்வாகர் என்றிருதிறத்தர். ௩௧

---

## சௌத்திராந்திகன் மதம்

நீதியார் வேத நூலின் நெறியலா அறங்கள் நாளும்
ஓதியோர் ஐந்து சீலம் உடையராய் உடல மூடிப்
போதிநீள் மரத்தின் மேவும் புத்தர்நால் வரினும் வைத்துச்
சாதிதான் இலாத கொள்கைச் சௌத்திராந் திகன்முன் சாற்றும்.

(உரை) நீதி சாத்திரத்தைத் தனக்கங்கமாகப்பொருந்திய வேத நூல்நெறியல்லாத அறநெறியாகிய பிடகநூலை நாடோறுமோதி, உருவம் வேதனை குறிப்பு பாவனை விஞ்ஞானமென்னும் ஐந்து கந்தங்களின் குணங்களையுடையராய், உடலைத் துவராடையாற் போர்த்து, அரசினைத் தெய்வம்போற்பேணி அதன்கீழ்ப் பொருந்தியிருக்கும் பௌத்தர் நால்வகையார்களையும் வைத்து அவர்களில், வருணபேதமறக்காணுஞ் சௌத்திராந்திகன் முன்னே சொல்லாநின்றான்.

புத்தர்நால்வரினும் வைத்தென்பது - பௌத்தர்நால்வரினு உட்கோளாகக் கொண்டென்க. நால்வராவார்—சௌத்திராந்திகன், யோகாசாரன், மாத்திமிகன், வைபாடிகன் என்போர். நீதியார் வேதமாவது—லௌகீகதன்மமாகிய சோதிடம், வியாகரணம், சிற்பம், பாதம், சிக்ஷை, சந்தசு என்க. நெறியலா அறங்களாவன—ஜாத்மவாதமும், அகத்திருவாதமும், ஆகாசம் காலம் திக்கு காரணத்பாவமுமில்லையென்றும், குணியும் அவயவியுமில்லையென்றும் கொள்ளுங் கொள்கை. ஐந்துசீலமாவன—அஹிம்சை, சத்தியம், அஸ்தேயம், பிரமசரியம், சங்கிரகம் என்க. அவ்வைந்து சீலமும் சாரதற்கும், சாரணற்கும் தேசசீலம், உபசம்பன்னற்கு நூறுசீலம், சுவவீரருக்குக் கோடிசீலம், இப்படி நிலைதோறுஞ் சீலம்பலவாம். க

முழுதுணர்ந் துலகிற் கோறல் முதற்செயல் முனிந்து மற்றும்
பழுதிலா அருளி னாலே பரதுக்க துக்க னாகித்
தொழுதுவா னவரும் போற்றத் தொல்பிட கங்க ளான
வழுவிலா கமங்கள் சொன்ன மாதவன் நாத னாவான். ௬௫

(உரை) சர்வத்தையுமறிந்து பிரபஞ்சத்திற் பொய் கொலை களவு கள் காமங்களை வெறுத்து, குற்றமில்லாத கிருபையாலே எவ்வுயிர்த்துன்பமுந் தன்னுயிர்த்துன்பம்போற் கொண்டு, தேவர்களுந் தொழுது துதிக்கப்பட்டுவரும் பழைய பிடகநூலாகிய இகழ்ச்சியில்லாத ஆகமங்களை யருளிய புத்தமுனியே கர்த்தாவாவான்.

பழுதிலா அருளென்பது - இராச்சியத்தைக் கொடுத்தும், பிள்ளைகளைக்கொடுத்தும், தன் கண்ணைக்கொடுத்தும், உதிரமாம்சமுதலாயின புறவுக்கரிந்து கொடுத்தும், வையங்காத்து வந்தவைமுதலியன. உ

மருவிய அளவை காட்சி மானமென் றிரண்டி வற்றால்
கருதிய பொருள்கள் ஞான ஞேயமாய்க் கணத்திற் பங்கம்
வருமுரு அருவம் வீடு வழக்கென நான்க தாகித்
தருமவை ஒன்றி ரண்டாய்த் தான்விரிந் தெட்டி னாமே. ௬௬

(உரை) பிடக நூலிற் பொருந்திக்கொள்ளப்படும் அளவையாவன : காட்சியும் அநுமானமும் எனவிரண்டாம். இக்காட்சியாலும் அநுமானத்தாலும் அறியப்படும் பொருள்கள் அறிவும் அறியப்படும் பொருளுமாய் ஒருமாத்திரையிற் கெட்டுவரும், ஞானஞேயங்களினல்

உருவும் அருவும் வீடும் வழக்குமென நான்காகி அந்நான்கும் ஒன்றிரண்டாக விரிந்து எட்டாகத்தரும்.

கணத்திற்கெடுகை நால்வகை, அவையாவன - கெட்டுவர்த்தித்தலும், கெட்டு க்ஷயித்தலும், கெட்டொத்துநிற்றலும், கெட்டுக்கெட்டேபோதலுமாம். கணம் - தாமரையிதழை அடுக்கி உளியிட்டடித்தால் எட்டிதழறு மெல்லை. ௩

உருஇயல் பூத மோடங் குபா தாய ரூப மாகும்
அருஇயல் சித்தம் கன்மம் என்றிரண் டாகும் வீட்டின்
மருவியல் குற்றம் கந்த மெனவழங் கிடும்வ ழக்கின்
இருஇயல் உள்ள தோடங் கில்லதாம் இயம்புங் காலே. ௬௭

**(உரை)** உருவினதியல்பு பூதவுருவத்துடனே உபாதாயரூபமென இரண்டாம், அருவியல்பு சித்த அருவென்றுங் கன்ம அருவென்றும் இரண்டாகும், வீட்டினது பொருந்தினவியல்பு குற்றவீடென்றும் கந்தவீடென்றும் இரண்டெனப்படும், வழக்கு இரண்டியல்புள்ளது அவை உள்வழக்கென்றும் இல்வழக்கென்றும் வழங்கப்படும் சொல்லுமிடத்து.

இயல் - இயல்பு உபாதாகம் - உபாதாயமென்றும்பேராம். உபாதாயம் - பற்றப்படுவது. உருவியல்பாவது - சைதன்னியரூபமென்றும் அசைதன்னியரூபமென்றும் இரண்டுவகைப்படும். சைதன்னியரூபம் பதினெட்டுக்கூடியது. அவை, பஞ்சேந்திரியங்களும் அவற்றின் விஷயங்களும் ஸ்திரீபும்ஸகமான பாவரூபமிரண்டும் இருதயமொன்றும் ஆகாரரூபமும் பூதநாலுமாம். அசைதன்னியரூபம் முன்சொன்ன எட்டாம். ௪

மண்புனல் அனல்கால் பூதம் வலிகந்தம் இரதம் வன்னம்
எண்டரும் உபாதா யம்தா னிவைஇரு நான்குங் கூடி
உண்டொரு பொருளு ரூபம் உறுபுலன் உபாங்க மோடக்
கண்டது சித்தம் கன்மம் நன்றுதீ தென்றல் காணே. ௬௮

**(உரை)** பூதவுருவாவது பிருதிவி அப்பு தேயு வாயு என நான்காம், உபாதாயரூபமாவது கடினம் கந்தம் இரதம் வன்னம் என நான்காக எண்ணத்தகும். எட்டுங்கூடியவிடத்தில் யாதொருபொருளுண்டாயது அஃதுருவாம். இவை புலன்கள் பொறிவழியோடியறிய அத

னைக்கண்டது சித்த அருவாம், அப்படிக்கண்ட பொருளை நன்றென்றுந் தீதென்றுங் காண்டல் கன்ம அருவாம். ௫

குற்றவீ டராக மாதி குணங்களைக் குறைத்த லாகும்
மற்றவீ டுருவ மாதி ஐந்தையு மாய்த்த லாகும்
சொற்றருந் தொகைதொ டர்ச்சி மிகுத்துரை யென்று மூன்றாய்
உற்றிடும் வழக்கி ரண்டும் ஒன்றுமூன் றாகி ஆறும். ௬௬

(உரை) இராகாதி குணங்கள் பொன்றக்கெட்டு முத்தியின்பமடையாது சேட்டைகெட முத்தியின்பமடைவது குற்றவீடாம், உருவம் வேதனை குறிப்பு பாவனை விஞ்ஞான மென்னும் ஐந்து கந்தங்களுஞ் சந்தானத்துப் பொன்றக்கெட்டடைவது கந்தவீடாம், உள்வழக்கு இல்வழக்கென்று கூறப்பட்ட வழக்கிரண்டும், தொகையுண்மைவழக்கும் தொகையின்மைவழக்கும், தொடர்ச்சியுண்மைவழக்கும் தொடர்ச்சியின்மை வழக்கும், மிகுத்துரையுண்மைவழக்கும் மிகுத்துரை யின்மைவழக்குமென ஆறாகி விரியும்.

அராகாதி குணங்களைக்குறைத்தல் குற்றவீடெனமாறுக. உருவமாதியைந்தையும் மாய்த்தல் மற்றவீடெனமாறுக. உருவமாதியைந்தாவது—உருவக்கந்தம், வேதனைக்கந்தம், சஞ்ஞானக்கந்தம், விஞ்ஞானக்கந்தம், வாசனைக்கந்தம் எனப்படும். தொகை-கூட்டம். தொடர்ச்சி சந்தானத்தொடர்ச்சி. மிகுத்துரை - தோற்றநாசம். ௬

ஒருவனென் றோதப் பட்டான் உருவாதி ஐந்தும் கூடி
வருபவ னென்று ரைத்தல் தொகையுண்மை வழக்க தாகும்
உருவமங் காதி யாய ஐந்தையும் ஒருவன் இன்று
தருவதுதொகையினின்மைவழக்கதாஞ்சாற்றுங்காலே. ௭0

(உரை) ஒரு கர்த்தாவென்றுரைக்கப்பட்டவன் உருவமுதலிய ஐந்தோடுங்கூடி வருபவனென்று கூறுதல் தொகையுண்மைவழக்காம்; உருவமுதலிய ஐந்தையும் ஒருகர்த்தா அவற்றோடுங் கூடாமல் நீங்கி நின்று உண்டாக்குவனென்பது தொகையின்மைவழக்காம்; சொல்லுங் காலத்து. ௭

காரண காரி யத்தின் தொடர்ச்சியாய்க் கால மூன்றின்
சேர்வறத் தோன்றும் கெட்டு வழியென்கை தொடர்ச்சியுண்மை

ஓர்தரின் ஒருவ னேஎக் காலத்தும் உள்ளா னென்று
தேர்வதுதொடர்ச்சியின்மைவழக்கதாம்செப்புங்காலே. எகூ

**(உரை)** காரணகாரிய மென்னுந் தொடர்ச்சியுடையவாய்க் கால மூன்றென்னும் மயக்கமறக் கெட்டுத்தோன்றும் என்னும் வழித் தொடர்ச்சியுண்மைவழக்காம்; ஒரு கர்த்தாவே காரணகாரியத்தின் தொடர்ச்சியாய் எக்காலத்து முள்ளானென்று சொல்லுவது தொடர்ச் சியின்மை வழக்காம்; உணர்விறற் சொல்லுமிடத்து. அ

தோற்றிய பொருள்க ளெல்லாம் நாசமாம் என்று சொல்லும்
மாற்றமுன் னுரைத்தல் மற்றை மிருத்துரை வழக்கி னுண்மை
போற்றிய பொருள்கண் கட்குப் போனது போல் முதிர்ந்து
வேற்றுமைப் பட்ட தென்கை மிருத்துரை இல்வழக்கே. எஉ

**(உரை)** தோன்றப்பட்ட பொருள்களெல்லாங் கெடுமென்னும் உத்தரத்தை முன்னர்ச் சொல்லுமது மிருத்துரையுண்மைவழக்கா கும், தோற்றியிரக்ஷைப்பட்ட பொருள்கள் காரியங்கெட்டுக் காரண மாய் நின்றதென்று கூறல் மிருத்துரை யின்மைவழக்காம்.

கண்கட்குப் போனதுபோன் முதிர்ந்து வேற்றுமைப்படுகை - காரியமழிந்து காரணங்கிடக்கை. மிருத்துரைமூன்றும் உள்வழக்கு இல்வழக்கு இரண்டினும் வழங்கும்வழியெனக்கொள்க. கூ

உள்வழக் கில்வ ழக்குள் ளதுசார்ந்த உள்வ ழக்கோ(டு)
உள்ளது சார்ந்த இன்மை வழக்குடன் இன்மை சார்ந்த
உள்வழக் கின்மை சார்ந்த இல்வழக் கென்றா றாகும்
உள்வழக்குளதுண்டென்கைமுயற்கோடின்றில்வழக்கே. எ௩

**(உரை)** முற்கூறிய உள்வழக்கும் இல்வழக்கும் உள்ளதுசார்ந்த உள்வழக்கும் உள்ளதுசார்ந்த இல்வழக்கும் இல்லதுசார்ந்த வுள்வழக் கும் இல்லது சார்ந்த இல்வழக்குமென்னும் நான்கோடுங்கூடி ஆறு வகையாம். அவற்றுள் உள்ளதையுண்டென்பது உள்வழக்காம்; அது யானைக்கோடுண்டென்கை. இல்லதனையில்லையென்கை இல்வழக்காம்; அது முயற்குக் கொம்பில்லை யென்கை. கய

உணர்வுசார்ந் துணர்வு திக்கை யுள்ளது சார்ந்த வுண்மை
உணர்வுபி னின்று மென்கை யுள்ளது சார்ந்த இன்மை

உணர்வுமுன் பின்றித் தோன்றல் இல்லது சார்ந்த வுண்மை
உணரினில் லதுசா ரின்மை உள்ளங்கை உரோம நாணே. எச

(உரை) அறிவைச்சார்ந் தறிவுண்டாமென்கை உள்ளதுசார்ந்த வுள்வழக்கு; அறிவுகெட்டாற் பின்பறிவுண்டாகாதென்பது உள்ளது சார்ந்த இன்மைவழக்கு; அறிவு முன்புள்ளதன்றாய்ப் பின்புண்டாமென்பது இல்லதுசார்ந்தவுள்வழக்கு; உள்ளங்கையின் மயிருண்டென்பதும் அம்மயிராற்செய்த கயிறுண்டென்பதும் இல்லதுசார்ந்த இல்வழக்கு ஆராயின்.

இவையன்றிச் சார்பு பன்னிரண்டுள. அவையாவன—பேதைமை, செய்கை, உணர்ச்சி, உருவருவவாயில், நுகர்ச்சி, வேட்கை, பற்று, கருமத்தொகுதி, முற்றோற்றம், பிணி, மூப்பு, சாக்காடு என இவை. கக

சொன்னநால் வகையு மின்றிச் சொல்லிடும் பொருள்க ளெல்லாம்
என்னையோ அறிகி லோம்பித் தேறியோ வானம் ஆன்மா
மன்னுகா லங்கடிக்கு மனமுடன் வாக்கி றந்திட்(டு)
உன்னுமோர் இறையும் உண்டென் றுரைப்பது நித்த மன்றே.

(உரை) முற்சொன்ன உரு அரு வீடு வழக்கு என்னும் நான்கும் அவற்றின் விரிவுமன்றி வானமென்றும் ஆன்மாவென்றும் நிலைபெற்ற காலங்களென்றும் திக்குகளென்றும் மனவாக்கிறந்தறியும் ஒருகர்த்தா வுண்டென்றுஞ் சொல்லுவது நிலையுடைத்தன்றாகையால், இப்படிச் சொல்லும் பொருள்கள் பித்தேறியோ சொல்லாநின்றார்கள், எப்படிச் சொல்லுகின்றார்களென்றறிகிலேம். அவை நிலைப்பட்டனவல்ல.

ஈங்குவான் செயற்கு வாரா இயம்பிய பொருள்க ளெல்லாம்
தாங்குவான் உளதே யென்னில் தரித்திடா தருவ மாதல்
ஓங்குவான் ஓசைக் காதி யெனிலதங் குருவின் கூட்டம்
நீங்குவா னின்றி எங்கும் நின்றதேல் எங்கு மின்றே. எசு

(உரை) இவ்விடத்துக் கூறப்பட்ட வானென்னும் பொருள் தொழிற்குவாராது, பூதநான்கு முதலாகச்சொல்லப்பட்ட பொருள்களெல்லாவற்றையும் தாங்குதற்பொருட்டு ஆகாசமுளதென்று கூறின் அஃதருவமாதலால் பொருள்களைத் தரிக்கற்பாற்றன்று, பெரிய வானானது சத்தத்துக்கு முதலென்று கூறின் அவ்வோசையும் உருக்கூட்

டத்தன்றித் தோன்றாது, அந்த ஆகாயம் நீங்குதலின்றி எங்கு நின்றதென்று கூறின் அஃதெங்குமில்லையாம்; ஆகையால், ஆகாய மென்றொரு பொருளில்லை. ௧௩

போதமுண் டுயிர்கட் கென்னில் வாயிலைம் புலனும் நூலும்
ஆய்தலின் றொட்டுத் தீட்டுக் கலப்பினில் அறியு மென்னில்
ஏதமுண் டிரவிற் பச்சை சிவப்புடன் ஏய்ந்த போது
கேதநின் றென்னோ என்னும் ஐயமுன் கிடத்த லாலே. ௭௭

(உரை) உயிர்கட்கு அறிவுண்டென்று சொல்லின், இந்திரியங் களும் விடயங்களுஞ் சாத்திரங்களுங் கொண்டு அறிவானேன்; அப் படியன்று இந்திரியங்களைக் கலந்தும் புலன்களைப் பரிசித்துஞ் சாத் திரங்களைப் பொருநதிநின்றும் அறிவனென்பையாகில், இருளி னிடத்துப் பச்சை சிவப்பென்னும் வன்னங்கிடக்க அவற்றைத் தொட்டுந் தீண்டியும் கலந்தும் அறியாமற் கிலேசமுற்று என்னோ என்னும் ஐயங்கிடத்தலாற் கூறியது குற்றமுண்டு. ௧௪

அறிந்திடா வாயி லின்றேல் அறிவின்றாம் ஐந்தும் பற்றி
அறிந்திடும் அறிவுண் டென்னில் ஐந்தினும் அறிவொன் றாக
அறிந்திட வேண்டும் சார்பின் அறிந்திடு மென்னில் உன்னை
அறிந்திலோம் புத்த னென்றிங் கழகிது சொன்ன வாறே.

(உரை) இந்திரியங்களில்லையாயின் உயிர் ஒன்றையும் அறியமாட் டாது, இந்திரியங்கட் கறிவில்லையாதலால் அவ்விந்திரியங்கள்ஐந்தை யும் பற்றிநின்று அறிந்திடுமறிவு உயிர்க்குண்டென்று கூறில், உயி ரறியுமாயிற் புலன்களைந்தாலும் அறியும் அறிவை ஒருபுலனாலறிய வேண்டும். அற்றன்று, உயிரறியுமிடத்துப் பொறிகளின் வழிகளிலே நின்றும் அவ்வவற்றின் புலன்களாகிய குணங்களை அறியுமெனக் கூறின், உன்னை ஆன்மவாதி யென்றறிந்தோம்; நீ சார்பிற்றோன்று மென்கையாற் புத்தனாய்; இஃதறிந்திலோம்; நீ உயிரறியுமென்று சொன்ன தழகிது. ௧௫

ஞானஞே யங்க ளன்றி ஞாதிரு என்று சொல்ல
ஆனதிங் கறிவோ அன்றோ அன்றெனில் அவனி போலும்
தானதிங் கறிவே என்னில் சமைந்திடு நன்ப ருப்புப்
போனக மதற்குத் தானே கறியெனப் புகன்ற தாமே. ௭௯

**(உரை)** அறிவும் அறியப்படும்பொருளும் அன்றி அறியும் பொருளுண்டென்று இவ்விடத்திற் கூறில் அதற்குண்டாயதறிவோ அறியாததோ, அறிவில்லாததென்று சொல்லின் மண்போலும் அசேதநமாம். அறியும் பொருள்தான் அறிவென்று கூறின், பருப்பாற் கூட்டிச் சமைத்த சோற்றுக்கு அப்பருப்புச் சோறுதானே கறியென்று கூறிய தன்மைத்தாகும்.

இதனுட் பருப்புச்சோறென்று அதற்குப் பெயராயிருக்கக் கறியும் பருப்புச் சோறென்பது புனருத்தியாய தோடமாம். அதுபோல ஞானம்அறிவாயிருக்க ஞாதிருவும் அறிவாகலில் தனித்து வேண்டா என்பது கருத்து. ௧௬

உயிரினை அருவ தென்னில் உருவுடன் உற்று நில்லா(து)
உயிரினை உருவ தென்னில் உடலினில் உடல டங்கா(து)
உயிரினை அணுவ தென்னில் உடல்பல துவார மோடும்
உயிரினை நித்த மென்னில் உணர்வுத யாந்த மின்றே. ௮௦

**(உரை)** நீ யுண்டென்று கூறியவான்மாவை அருவமென்று சொல்லின் உருவமாகிய வுடலோடு அருவமாகிய ஆன்மாப்பொருந்தில்லாது; ஆதலால் அருவமன்று, அந்த ஆன்மாவுருவமென்று கூறின் ஒருருவிலோருரு அடங்காது; ஆதலால் ஆன்மா உருவமன்று, அந்த ஆன்மாவை அணுவென்று கூறின் உடலினில்லாது பலதுவாரத்தாற் போகவேண்டும்; ஆதலால், ஆன்மா அணுவன்று, அந்த ஆன்மாவை நித்தமென்று கூறில் அறிவு தோற்றமும் கேடும் இல்லையாக வேண்டும்; இவையிற்றையுடைத் தாகையால், ஆன்மா நித்தமன்று. ௧௭

எங்குமாய் நின்ற தான்மா என்றிடின் எங்கும் இன்றாம்
தங்கிடு நிறைவு தத்தம் சரீரங்கள் தோறு மென்னின்
மங்கிடும் உடலத் தோடே வடிவினில் ஓரிடத்தே
அங்கது நின்ற தென்னில் அடிமுடி அறிவின் றாமே. ௮௧

**(உரை)** ஓரான்மா எங்குநிறைந்து நின்றதென்று கூறின் உடல்தோறும் பல பேதப்படுமாகையால் ஓரான்மா எவ்விடத்தும் உண்டாகாது; அந்த ஆன்மா தத்தம் உடல்கள்தோறும் நிறைந்துநிற்குமென்று கூறின் உடல்கெடுமிடத்துத் தானுங் கூடக்கெட வேண்டும். அந்த ஆன்மா உறுப்பிலோரிடத்தைத் தனக்கிடமாகக்கொண்டு நின்றறியு

மென்று கூறின் தானின்றவிடமன்றிப் பாதாதிகேசமளவாக அறிய மாட்டாது ; ஆதலால், அறியும்பொருளாகிய ஆன்மாவில்லை. கஅ

சாற்றிய காலம் இங்குத் தங்கிய வாறி தென்னை, தோற் றுவித் தளித்துப் போக்கும் தொழிலவை கால மென்னில், போற்றிய பொருளில் புக்குப் பிணங்கிடும் பொருட்பின் இன் றும், தேற்றிய இல்வ ழக்குத் திரவியத் தியல்பி னுமே. அஉ

(உரை) முற்கூறியகாலம் இங்கு நின்றபடியெப்படி, பதார்த்தங் களைத் தோற்றுவித்தும் நிறுத்தியும் போக்கியும் நிற்பது காலமென் னில், அந்த மூன்றுவிதப் பொருளுடன் காலங்கூடி மயங்கிடும், அப் பொருட்குக் கேடுவந்தாற் காலமுமின்றாம், பொருள் மூன்றுவிதப் பட்டதன்றிக் காலம் மூன்றுண்டென்று கூறப்பட்டது தெளிவை' யுடைய இல்வழக்காம். கக

எனக்குநீ கிழக்கி ருந்தா யாகின்மேற் கென்று மென்பால்
எனக்குமேற் கிருந்தான் என்பாற் கிழக்கென இயம்புந் திக்குத்
தனக்குநாம் கொள்வ தெப்பால் சாற்றிடாய் இல்வ ழக்குத்
தனக்குள தாகும் உண்மை தானில தாகு மன்றே. அஙு

(உரை) நீ எனக்குக் கிழக்கிருந்தாயாகில் என்னை மேற்கிருந்தா னென்று சொல்லுவை, என்மாட்டு எனக்கு மேற்கிருந்தானொருவன் என்னிடத்து யானிருந்தவிடத்தைக் கிழக்கென்று கூறுவன், ஆத லால் திக்கிற்கு நாங்கொள்வதெப்பகுதி? நீ கூறிய கிழக்கையோ அவன் கூறிய மேற்கையோ சொல்லாய், நீ கூறிய இல்வழக்கிற்கு உளதாம் உள்வழக்கு இல்லையாம். உ

உலகினைப் படைத்தான் என்றாய் ஒருவனிங் குள்ள தாயின், உலகினைப் படைக்க வேண்டா இல்லையேல் படைக்க வொண்ணா(து), உலகினுக் குபாதா நந்தான் உள்ள தாய்க் காரி யத்தாம், உலகினைப் படைக்கில் அங்கும் உளதில தாவ துண்டே. அச

(உரை) உலகத்தைப் படைத்தவன் ஒரு கர்த்தாவென்று நீ கூறி னாய், இவ்வுலகம் முன்புள்ளதாய்ப் பின்பு படைத்தானாயின் முன் புள்ளதை ஒருவன் படைக்கவேண்டுவதில்லை, இவ்வுலகம் முன்பில்லை யாயின் ஒருவன் படைக்கவுள்ள தாகாது, அவ்வலகினுக்குக் காரண

மூள்ளதாய்க் காரியங்கெடுமாதலாற் காரியப்படும் உலகினைப் படைத்தானென்றுகூறின், யாதொருபொருள் உள்ளதும் இல்லதுமாக வுண்டோ. ௨௧

உள்ளது கடாதி போல உதிப்பித்தான் என்று ரைக்கின்
மெள்ளவே யெங்கு நின்று விதித்தனன் உலகின் மீது
வள்ளல் தான்நின்று னென்னில் வந்ததாம் உலக முன்னே
தள்ளிடா தெங்கு நிற்கின் எங்குமுன் தந்த தாமே. அ௫

**(உரை)** மண்போல உலகிற்கு மூலமுள்ளதாய்க் கடாதிகளைக் குலாலன் தோற்றுவிக்குமாபோல இவ்வுலகங்களை ஒருவனுண்டாக்கினனென்று நீ கூறின், இவ்வுலகத்தை யுண்டாக்குமிடத்து மெல்ல எவ்விடத்து நின்றுண்டாக்கினன், பிரபஞ்சத்திலே நின்று கர்த்தா வுண்டாக்கினனென்று கூறிற் பிரபஞ்சம் முன்னே உண்டானதாம், நீங்கப்படாமல் எங்கு நிறைந்து நின்று உண்டாக்கினனென்று நீ கூறின் எங்குமென்பதொரு முதலாய்க் கர்த்தாவைப் பின்பு தந்ததாம். ௨௨

இல்லது கருணை யாலே இயற்றினன் இறைவன் என்னில்
கொல்லரி உழுவை நாகங் கூற்றமுங் கொண்டு தோற்ற
வல்லவன் கருணை யென்னோ வலியினல் வேண்டிற் றெல்லாம்
பல்கவே படைத்தா னுயிற் பித்தரைப் பணிந்தி டாயே. அ௬

**(உரை)** எல்லாவற்றிற்குங் கர்த்தாவானவன் இருக்குமிடம் நியமிக்கப்படாமையின் அப்படி யந்நியமான கர்த்தா காருண்ணியத்தினலே இல்லாததொன்றைப் படைத்தானென்று கூறின், கொலைத்தொழிலைப் பொருந்தின சிங்கத்தையும் புலியையும் யானையையுங் கூற்றத்தையும் உண்டாக்கிக்கொண்டு தோற்றவல்லவனுக்குக் காருண்ணியமென்னோ, கர்த்தா வல்லவனுகையாலே எல்லா ஆன்மாக்களும் வர்த்திக்கும்படி படைத்தானென்று கூறின், அஃதோர் காரணகாரியப்படாமற் பித்தர்செய்யுங் குணமாதலாற் பித்தரையே கர்த்தாவாக வணங்குவாயாக. ௨௩

பெறுவதிங் கென்ப டைத்துப் பெற்றது விளையாட் டென்னில்
சிறுமழ விறைய தாகும் செய்திடும் கன்மத் தென்னின்

உறுபெருங் கன்மஞ் செய்வோர் முன்புள ராவ ருண்மை
அறிவுறின் ஞால மெல்லாம் அநாதியென் றறிந்தி டாயே.

(உரை) சர்வான்மாக்களையும் இவ்விடத்துப் படைத்துப் பெறும் பேறென்னென்று கேட்டவிடத்துப் பெறும்பேறு விளையாட்டென்று கூறின், உன்கர்த்தா இளவறிவினனாய்ச் சிறுபிள்ளையாக வேண்டும், கன்மத்துக்கீடாகப் படைத்தானென்று கூறின், கன்மஞ்செய்வோர் அநாதியாவர், இதனை மெய்யாக அறியின், பிரபஞ்சமெல்லாம் அநாதியே யுள்ளதென் றறிவாயாக. ௨௪

உருவொடு நின்று னென்னின் உருவமுன் படைத்தார் வேண்டும்
உருவவன் இச்சை யென்னில் உலகெலாம் இச்சை யாகும்
உருவுல கத்து ளோர்கட் குறுவது கன்மா லென்னின்
உருவுடை யோர்கட் கெல்லாம் உற்றது கன்மத் தாமே. ௮௮

(உரை) உன்கர்த்தா உருபியென்று சொல்லின் அவ்வுருவத்தை முன்புண்டாக்கினோர் வேண்டும்; அவனதிச்சையாலே உருவத்தை யெடுத்துக்கொண்டானென்னின் உலகத்துள்ளோருந் தமதிச்சை யாலே உருவெடுத்துக்கொண்டாராவார்; உருவம் உலகத்திலுள்ள வர்க்கு வருவது அவரவர் கன்மத்தாலென்று நீ சொல்லின் உருவ முடையவர்களெல்லார்க்கும் உருவமுறுவது கன்மத்தாலேயே யாக வேண்டும். ௨௫

அருவெனில் பவத்தி னின்றும் எடுத்திடான் ஆகா சம்போல்
மருவினன் நிழல்போ லென்னின் மருவினோர்க் காகும் மாட்சி
பெருகிய அறிவுண் டென்று பேசிடின் நேசத் தோடும்
கருதிட உருவம் வேண்டும் இல்லையேற் கருத வின்றே. ௮௯

(உரை) உன் கர்த்தா அருபியென்று கூறில் ஆகாசம்போலச் சேட்டையிலனாகையால் ஆன்மாக்களைப் பிறவிக்கடலினின்றும் எடுத்திடமாட்டாதவனாவன்; யாவருஞ்சென்றடையத்தக்க நிழல்போல்வ னென்னின், அநநிழல் தன்னிடத்துவந்து மருவினோர்க்கே நன்மை யைக்கொடுததலால் அவனும் வியாபியல்லன்; ஏகதேசியாயினும் நிறைந்த அறிவினை யுடையனென்றுகூறின் விருப்போடுஞ் சிந்தித் தறியத்தக்கதோர் உருவுண்டாதல் வேண்டும்; அப்படியறியத்தக்க உருவில்லையாயின் அறிவுமில்லையாம். ௨௬

எங்கள்நூல் அநாதி யாக இறைவனுண் டென்னு மென்னின்
உங்கள்நூல் உரைப்பா ரின்றி ஓதுவ தழகி தாகும்
அங்கவன் தன்னை நூல்கொண் டறிந்தனம் அவனைக் கொண்டே
இங்குநூல் அறிந்தோ மென்னில் ஈதோராச் சரிய மாமே.

(உரை) எங்கள்நூலாகிய வேதாகமங்கள் அநாதியுமாகிக் கர்த்தா வுண்டென்று சொல்லுமென்று கூறின் உங்கள் நூலாகிய வேதாகமங்கள் சொல்லுவாருமின்றித் தோன்றுமென்பது அழகிதாயிருக்கும்; அவ்விடத்துக் கர்த்தா வுண்டென்று வேதங்கொண்டு அறிந்தன மென்றும் அந்தக்கர்த்தாவைக்கொண்டே வேதங்கேட்கப்பட்டதென் றுங் கூறின், ஈதிங்ஙனமே மயங்கினது இதனை முன் கேட்டுங்கண் டும் அறிந்தனவல்லவாம். ௨௭

உற்றெழு மரங்க ளாதி உயிரின்றிப் பூத ரூபம்
பற்றியிப் பாரின் மீது பாங்கினாற் பலவு மாகிப்
புற்றொடு மயிர்கொம் பாதி போலவே தோன்றி மாயும்
மற்றுள யோனி கட்குப் பயனென வழங்கு மன்றே. ௬௬

(உரை) பூமியினிடமாக நின்று வளரும்மரங்கள் முதற் புல்லீறாக வுள்ளன தாவரங்களாம்: அவை உயிர்வர்க்க மல்லவாய்ப் பிருதிவி யப்புத் தேயு வாயுவென்னும் பூதரூபத்தைப் பொருந்திய பகுதிகளா கப் பலபேதப்பட்டுப் புற்றுப்போலவும் மயிர்போலவுங் கொம்பு போலவும் உண்டாய் வளர்ந்து மீளவுந் தோன்றின முறைமைப்பாட் டிலேகெடும். இஃதியாது காரணமாயுண்டாயதென்னின், அண்ட சஞ் சுவேதசஞ் சராயுசமென்னும் மூன்று பேதத்திலுண்டாகிய ஆன்மாக்களுக்குப் பிரயோசன காரணத்தால் அநாதியேயுண்டாய் வழங்கும். ௨௮

கொன்றிட லாகா தென்றுங் கொன்றவை கொண்டு நாளும்
தின்றிட லாகு மண்ணோ டொத்திடும் செத்த வெல்லாம்
ஒன்றிய வாச மூட்டி உண்ணுநீர் வைத்த வர்க்கோ
சென்றுநின் றுண்ட வர்க்கோ புண்ணியம் செப்பி டாயே. ௬௨

(உரை) தானோர் ஆன்மாவைக்கோறல் ஒருகாலும் நியாயமன்று, மாண்டவெல்லாம் மண்ணோடொக்குமாதலால் ஒருவர் கொல்லப் பட்டவற்றைக் கைக்கொண்டு எப்பொழுதும் புசிக்கலாம், அதனல்

தோடமுண்டாகாது, மணங்களாற் கட்டுப்பட்ட நீர் அருமையான வழிகளிலே உண்டாக்கிவைத்தவர்க்குப் புண்ணியமுண்டாயதோ? வழிநடந்து தாகித்துக் குடித்தவர்க்குப் புண்ணியமுண்டாயதோ? சொல்லாய் வைத்தவர்க்கே புண்ணியம் உண்டாமாதலாற் கொன்றவர்க்கே பாவமுண்டாவது, தின்றவர்க்குப் பாவமில்லையாம். உக

ஓங்கிய உருவ மோடும் வேதனை குறிப்பி னோடும்
தாங்குபா வனைவிஞ் ஞானம் தாம்வை ஐந்துங் கூடிப்
பாங்கினுற் சந்தா னத்திற் கெடுவது பந்த துக்கம்
ஆங்கவை பொன்றக் கேடாய் அழிவது முத்தி யின்பம். கூரு

**(உரை)** மிக்க உருவம் வேதனை குறிப்பு பாவனை விஞ்ஞானமென்னும் ஐந்துகந்தமும் ஒருமைப்பட்டு ஒழுங்கிலே காரியங்கெடக் காரணங் கிடக்குமென்பது மிகுத்துரையில் வழக்குமாய்ப் பந்ததுக்கமுமாம். அவ்விடத்துச் சொல்லப்பட்ட கந்தங்கள்ஐந்தும் நேராகக்கெட்டு வீட்டையடையுமென்பது முத்தியின்பமாம்.

இனி உருவமாவதெட்டு. அவை பூதவுருநாலு, உபாதானவுருநாலு. அவை வருமாறு—பிருதிவி, அப்பு, தேயு, வாயுவெனுநாலும் பூதவுரு. வலி, கந்தம், இரதம், வன்னமெனு நாலும் உபாதானவுரு. ஆக - அ. வேதனையாவது மூன்று. அவை வருமாறு—குசலாவேதனை அகுசலாவேதனை, குசலாகுசலாவேதனை. ஆக - ௩. குறிப்பாவது ஆறு—சோத்திரம், துவக்கு, சக்ஷு, சிகுவை, ஆக்கிராணம், மனம் ஆக - ௬. பாவனை இருபது—தீக்குணம் - ௧௦. நற்குணம் - ௧௦. தீக்குணங்களாவன—பொய்சொல்லல், கோட்சொல்லல், கோபித்துச் சொல்லல், பயனிலசொல்லல் எனவாக்கின்குணம் ௪. களவிற்குப் போகுதல், வறிதே தொழில்செய்தல், கொலைசெய்தல் எனக் காயத்தின்குணம் ௩. கொலைநினைக்கை, காமப்பற்று, ஆசை எனமனத்தின் குணம் ௩. ஆக - ௧௦. நற்குணங்களாவன—மெய்யுரை, நல்வார்த்தை, இனியனகூறல், பயன்படுசொல் எனவாக்கின் குணம் ௪. பள்ளிவலம் வரல், தவம்புரிதல், தானஞ் செய்தல் எனக் காயத்தின்குணம் ௩. அருள்நினைவு, ஆசையறுத்தல், தவப்பற்று என மனத்தின்குணம் ௩. ஆக - ௧௦. ஆகப்பாவனை-௨௦. இவை, மானச வாசிக காயங்களான் வருவனவாம். விஞ்ஞானம் ஆறு. அவையாவன—சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம், சித்தம். ஆக - ௬. ஆகப் பஞ்சகந்தபேதம்-௪௩. இதற்கு

அவன் வசநம்—"எட்டிவை யுருவ மூன்று வேதனை யாறு ஞானம் - ஒட்டிய குறிப்போ ராறு செய்கையு மிருப தாகக் - கட்டிய பஞ்ச கந்தங் கணத்தினிற் பங்க மாகுந் - தொட்டநாற் பத்து மூன் றுஞ் சுகதநூற் றுணிவு தானே." என்பதாம். சந்தானமாவது— தொடர்ச்சி. அந்தத்தொடர்ச்சி நால்வகையாம். அவை—வாயு சந்தா நம், தீபசந்தாநம், தாராசந்தாநம், பிபீலிகா சந்தானம் என்பனவாம்.

அழித்திடும் அராக மாதி அகற்றிநல் லறங்கள் பூரித்(து)
இழித்திடும் புலன்கள் போக்கி இன்பொடு துன்பம் வாட்டிப்
பழித்திடாப் பழுதில் வாழ்க்கை எட்டையும் பாரித்தெல்லாம்
ஒழித்திடு ஞான சீலம் சமாதியின உறுதி யாமே. ௩௨௪

**(உரை)** நன்மையைக் கெடுக்குங் காமக் குரோத லோப மோகமத மாற்சரியங்களை நீக்கி, நன்றான தன்மங்களை நிறையச்செய்து, பொல் லாங்கைச் செய்யும் புலன்வழிச்சேறலைக் கைவிட்டு, துன்பஇன்பங் களையொழித்துப் புண்ணியபாவங்களைக் கெடுத்து, பிறராற் பழிக்கப் படாத குற்றமில்லாத நல்வாழ்க்கை எட்டையும் விரித்து, மற்றுந் தோஷங்களானவை யெல்லாமொழித்திடும் ஞானகுணமாவது சமாதி யின் உறுதியாம்.

பழுதிலாவாழ்க்கை எட்டாவன—நற்சாட்சி, நல்லூற்றம், நல்வாய்மை, நற்செய்கை, நல்வாழ்க்கை, நன்முயற்சி, நற் கடைப்பிடி, நல்லுளத்தோர் தலைப்பாடு என்க. தீவாழ்க்கை எட்டா வன—நற்காட்சி முதலாயினவற்றை மாறிக்கொள்க. சமாதியினுறுதி வாழ்க்கை இவையெட்டுங்கெட இருத்தல். இதற்கவன் வசனம்— "சகலமு மான்மாவுங் காரணனு மில்லை, சகலமுமா மநித்தஞ் சார்பாற் பிறவி, வகைவினை யுண்டுபெதி பொன்ற மாய்தல், சுகதநூன் முத்தித் துணிவு" என்பதாம். ௩௧

# சௌத்திராந்திகன் மத மறுதலை

அனைத்தினையும் உணர்ந்தானெம் இறைவ னென்றிங் கறியாது புத்தநீ அறைந்தா யென்றும், அனைத்தினையும் அறிந் திடான் அளவி லாமை ஒன்றொன்று அனைத்தினையும் அறிந்தா னென்னின், அனைத்தினையும் அளவிறந்த தென்ன வேண்டா அளவிலா ஞானத்தால் அறியின் ஞானம், அனைத்தினையும் அறியாது கணத்தில் தோன்றி அழிதலால் அறிந்தமையின் றுகு மன்றே. ௬௫

(உரை) புத்த! நீ முழுவதையும் உணர்ந்தான் எம்முடைய கடவு ளென்று அறியாமற் கூறினாய்; எப்போதும் சர்வத்தையு முணர்ந்து அறியமாட்டான் பிரபஞ்சபேதம் அளவிட அரிதாகையால், முழுதை யும் ஒவ்வொன்றாக அறிந்தானென்று நீகூறின் அப்படி அறியுமிடத் துச் செலவு கலப்பு நீக்கத்தால் அறியவேண்டும்; ஆதலால், அதனை யளவிறந்ததென்று கூறவேண்டாம், எல்லையில்லாத ஞானத்தால் அறிந்தானென்று நீகூறின் உனது ஞானம் அனைத்தினையும் அறிய மாட்டாது. அஃதியாங்ஙனமென்னில், ஒருமாத்திரையில் அறிவு தோன்றிக் கெடுமென்றும் நீ கூறுகையால் அனைத்தினையும் அறிந்தா னென்கையில்லையாம். க

சிலபொருளை அறிந்தவற்றின் திறத்தே யொட்டிச் சிந்திப்பன் எப்பொருளும் என்னிற் சென்று, பலபொருளாய் ஒன்றுபல பேத மாகிப் பயின்றுவரு மாதலாற் பார்க்கு மாறென், உலகுதனில் ஒருபொருளங் குணரும் போதின் உற்றுணர்தல் ஆராய்தல் தெளித லுண்டாய், நிலவுமத னால் உணர்வு பன்மை முன்பின் நின்றிடா தென்பையெல்லாம் நினைப்ப தெங்கே. ௬௬

(உரை) பிரபஞ்சபேதத்திற் சிலபொருள்களை அறிந்து அவற் றின் பகுதியிலே எல்லாப் பொருள்களையுமொட்டிச் சிந்திப்ப னென்று புத்த! நீகூறின், அறிவாலறியும்பொருள் பலவாகச் சென்று அவற்றின் பலபகுதியாகிப் பொருந்திவருமாகையால், ஒன்றைக் கொண்டு அவற்றின் பேதமறியுமாறெங்ஙனம்? அன்றியும், பிரபஞ்

சத்தில் ஒருபொருளை யறியுமிடத்துக் கூடியறிந்தாராய்ந்து தெளிதல் வேண்டுமாதலால் ஒன்றையறியும்போது பலபேதப்படுகையாலும் நீமுன்புண்டானவறிவு பின்பில்லையென்று சொல்லுவையாகையாலும் ஒருபொருளையறிந்து அதனோடு மற்றொருபொருளைச் சேர்த்தறியுநெறி யாண்டுள்ளது. ௨

முத்திநிலம் கண்டறங்கள் மொழிந்தா னாயின் முதல் முழுதும் பொன்றிப்பின் மொழிந்த வண்ணம், ஒத்திடுந் தேன் நெய்கூட்டி உண்டிறந்தோன் ஒருவன் உலகினில்வந் திதுதீதென் றுரைத்தால் ஒக்கும், செத்ததுபின் னென் றுரைக்கில் கதியில் செல்லாத் தோணுரை நீர்பெருகிச் செ ன்றோ டும், அத்தினள வறியாதிக் கரையோர் தம்மை யக் கரைக்கே செல்லவிடும் ஆசை யாமே. ௬௭

(உரை) வீட்டிடத்தைக்கண்டு பின்பு அறமுதலியவற்றைச் சொன்னானென்று புத்த! நீகூறின் ஒருமுதல் சோரக்கெட்டுப்போய்ப் பின்புவந்து சொன்னதென்னும் முறைமையொக்கும். அஃதென் போலவென்னில், தேனையும் நெய்யையுங்கூட்டிக் குடித்துச்செத்தோ னொருவன் மீளவும்உலகின்கண்வந்து தேனும் நெய்யுங்கூடினது விஷமென்று சொன்ன தன்மைத்து,அறமுதலியவற்றைக்கூறி வீட்டிடத்தைப் பின்பு அடைந்தானென்னில் அவன் முத்தியை யறிந்தவனல்லன். ஆதலால் அவன் கூறிய அறமுங் கதியிற்செலுத்தமாட்டாது, புத்தன் உரையானது ஜலமானது பெருகிச் சென்றோடும் ஆற்றின் அளவறியாதானொருவன் இக்கரையினின்றோரை அக்கரையிலே செலுத்திவிடுவேனென்று ஆசைப்படுதல்போலும். ௩

நீர்போல நின்றுயிர்கட் களித்தி டாதே நெருப்பாய துயர்ப்பிறப்பின் நிகழ்ந்து நின்று, பாரோருக் களித்தபடி வலையிற் பட்ட பலகலைமான் கண்டொருநீள் கலைபாய்ந் தோடி, நேரேசென் றவ்வலைக்கே நேர்ந்தா லொக்கும் நீள்பாவக் குழியில்விழு நீர்மை யாகும், ஆரோவிங் கவனைப்பார் அறத்தையாக்கப் பிறந்தறமாக் கினனென்னில் அடங்க வாமே. ௬௮

(உரை) கர்த்தா ஜலமும் அதன் இரதமும்போலச் சர்வான்மாக்களிடத்திலும் நீங்காமல் நின்று இரட்சிப்பனென்னாதே, கொடிதாகிய

தீத்தன்மையையுடைய துன்பப்பிறவியின்கண்ணே தோன்றிநின்று பிரபஞ்சத்தார்க்கு அருள்செய்வனென்னுமது, வலையிற்பட்ட பல மான்களையுங் கலைகளையுங்கண்டு அப்பாற்பட்டு நின்ற ஒரு கலையானது இவற்றை யிரக்ஷிக்கவோடித் தவறுமற்சென்று அந்தவலைக்குள்ளே தானுமகப்பட்ட தன்மைபோலும், மிக்க நரகத்திற்செல்லும் வழியா மிதனை, மெய்யே யிரக்ஷிக்கும் வழியென்று சொல்லுகிற புத்தனை யொப்பார் யாவர், அறமுதலியனவற்றை யுண்டாக்க வேண்டித் தான் பிறந்து அறத்தையுண்டாக்கினேன் என்னில், சர்வான்மாக்களுந் தருமத்தையுண்டாக்கவேண்டிப் பிறந்தார்களாம். ௪

அலகிறந்த யோனிகளில் புகுந்த தெல்லாம் அறத்தை அளித் திடவென்னில் அவற்றி னெல்லாம், நிலவுவது கன் மத்தா லாகு மன்றி நினைந்ததோர் இச்சையினால் நிகழ்ந்தா னாகில், உலகுதனி லுள்ளோர்க்கும் அதுவே யாகும் ஒருத்தி வயிற் றினிலிருந்தங் குதரந் தள்ளித், தலமதில்வந் தானென்னில் தாயைக்கொன்றான் தருமத்தை யின்றெனக்குச் சாற்றி டேலே. ௬௬

**(உரை)** எண்ணிறந்த யோனிகளிற் சாதனானதெல்லாந் தன் மத்தை யுண்டாக்கவேண்டியென்று புத்த! நீகூறின், அங்ஙனம் பல யோனிசாதனானது கன்மத்தாலாகவேண்டும்; அற்றன்று, தான் கருதிய விருப்புக்காரணத்தாற் காயமெடுத்துக்கொண்டானென்றுகூறின், பிரபஞ்சத்திலுள்ளோர் காயமெடுத்துக்கொண்டதுந் தன்மஞ்செய்ய விரும்பி யெடுத்துக் கொண்டதேயாம் ; அங்ஙனம் ஆன்மாக்கள்போல யோனிசாதனானதில்லை, மாதாவின் உதரத்தேயிருந்து அவ்வுதரத்தைப்பிளந்து பூமியின்கண்ணே வந்து அறத்தையுண்டாக்கினன் என்று நீ கூறின், அங்ஙனம் மாதாவைக்கொன்று அறத்தையுண்டாக்கினான்என்னில், அத்தாயைக் கொன்றான் கூறிய தன்மத்தை இப்போதெனக்குக் கூறுவாயல்லை.

புத்தன் பிறக்கிறகாலத்து மாதாவினுடைய வலமருங்குலாற் பிறந்தான். அவளும் ஆறுநாள் குற்றுயிரோடே கிடந்து ஏழாநாள் இறந்தாள். இது புத்தர் மாதாக்களிருபத்துநால்வர்க்கு மொக்கும். இதனை—“உலும்பிலி வனத்து ளொண்குழைத் தேவி-வலம்படு மருங்குல் வடுநோ யுறும-லான்றே னவ்வழித் தோன்றின னுதலி - னீன்

ரோ ளேழாரா ளின்னுயிர் வதைத்தான்." என்னும் விம்பசாரகதை யாற்றெளிக,—'முத்தராம் புத்தர் தோன்றித் தாய்பழுவை முறித்தே விட்டார்-கொத்துவாழ் குழலா ளாகுங் குண்டல கேசி தானுங்-கத்திரு வாங் கணவனைக் காடனையுங் கொன்றிட்டா - ரித்துணையா ரிருவரும் வந் திங்ஙனே தவமுரைப்பார்." இது சித்தாந்த வசனம். ௫

அரியினொடு நரிஉழுவை ஆதி யாக ஆனபோ தறந்
திரிந்து சோற லாதி, பரிவினொடும் செய்தனனும் இல்லை
யாகிற் பசிதனக்குத் தின்பதவன் பழுதை யோதான், கரு
திலவன் பரதுக்க துக்க னாகிற் கணவனிழந் தோர்கட்குங்
கண்ணி குத்தித், திரியுமவர் துயரினுக்கும் இரங்கு வோன்
றன் செயலறத்துக் கழகியதாஞ் செப்புங் காலே. ௧௦௦

(உரை) உன் ஆதிபுத்தன் அலகிறந்த யோனிகளிற் பிறந்தானென்றும் அப்படிப்பிறந்தது கொலைமுதலிய பாவங்களைநீங்கித் தன்மத்தைப் பரிபாலிக்க விரும்பி யென்றுங் கூறினாய்; அங்ஙனமாயின் புத்தன், சிங்கம் நரி புலி முதலிய யோனிகளிலே சாதனனைவிடத்துத் தன்மத்தை விட்டுக் கொலையை விரும்பிப் பலஆன்மாக்களையுங் கொன்றுதின்ற இது பிரியத்தோடுஞ்செய்தானாகவேண்டும்,அப்படிக் கொன்று தின்றானில்லையென்று சொல்லுவையாயின் அந்த யோனி சாதனனைத் திரிந்தவிடத்துண்டான பசிக்குப் புத்தன் தின்பது பழுதையோ? அன்றேல் மாமிசமன்றோ? ஈதன்றியும், பரதுக்கதுக்கனென்று நீ சொல்லின், பூகேதனைப் பலவான்மாக்களைக் கோறலால் பொல்லாதவனானதன்றியும், கணவனைநீங்கிச் சோரத்திற்செல்லு மகளிர் உறுந்துயரத்தினுக்கும், கண்ணி முதலியகொண்டு கொலைத் தொழில் புரிவோர் துயரத்தினுக்கும் இரங்குவனென்னில் அச்செய்தி அவன்தன்மத்துக்கு அழகிதாம் சொல்லுங்காலத்துங் கருதுங் காலத்தும். ௬

ஒருபொருளைத் தேடிஅதற் குரையுந் தேடி உரைப்
பதன்முன் உணர்விறக்கும் உனக்கு நூலென், மருவிவருஞ்
சந்தான வழியில் என்னில் வாயுரைத்த தேயுரைத்து
வழங்கு மாகும், பெருகுவது கெட்டென்னில் அதுபோலாம்
பின் பித்துரைத்த தறியாது பேதை சொல்லும், தருவது

நூல் எப்பரிசு முதல்நடுவோ டிறுதி தான்விருத்த மின்றியது சாற்றி டாயே. கOக

**(உரை)** ஒருபொருளைத்தேடி அதற்கேற்றதோர் சொல்லையுந் தேடிச் சொல்லொடு பொருளைக்கூட்டி நூலாகக் கூறுதன்முன்னே உன்ஞானங்கெடுமாதலால் உனக்கு நூலுண்டாம்படியென். அற்றனறு, அவ்வறிவுபொருந்தி வருந்தொடர்ச்சி வழித்தோன்றின நூலாமென்று புத்த ! நீகூறின், முன்சொன்ன அக்கரமொன்றையே பின்சொல்லி நிற்கவேண்டும். அற்றன்று, முன்னறிவுகெட்டுப் பின் தோன்றுமறிவு யிக்கவறிவாமென்று கூறின், அங்ஙனம் பின்தோன்று மறிவுங்கணத்திற் கெடுகையாலே முன்னறிவேயாம், உனது நூல் பித்தர்சொல்லுஞ் சொல்லும் அறியாதார் சொல்லுஞ்சொல்லுஞ் சொல்லிற்றும், நூலாவது முதல்நடுஇறுதி மாறுபாடில்லாததலால் எப்பெற்றியதுனது நூல், உன்னுடைய பழுதுநூலை யென்னுடன்சொல்வாயல்லை. எ

முன்ஞகப் பலஅறங்கள் பூரித்தெம் இறைவன் முழு துணர்ந்திங் கருளினுல் உயிர்கள் முத்தி அடையப், பின்ஞகப் பிடகநூல் உரைத்தா னென்று பேசிஞய் இவன்முன்பு பேரறங்கள் புரிநூல், சொன்ஞார் இவனைப்போன் முன்னொருவன் என்னில் அவனுக்குச் சொன்ஞார் எனத்தொடர்ச்சி யாகி, அன்ஞய்பின் அனவத்தைப் படுமொருவன் இன்றும் ஆரோஉன் பாழியிருப் பார்இதனை அறையே. கOஉ

**(உரை)** ஆதியிலே எம்முடைய கடவுள் பலதருமங்களைச்செய்து நிறைந்த சருவஞ்ஞனய் கிருபையாலே ஆன்மாக்கள் வீட்டின்பமடைதற்கும் பின்பு அறஞ்செய்தற்கும் வழியாகிய பிடகநூலை அருளினனென்று புத்த நீசொன்னுய், பெரியஅறங்களை யுண்டாக்க இவனுக்கு முன்பு நூல்சொன்னவரார். அவனுக்கு முன்பு அவனுசாரியன் சொன்னனென்று கூறின், அவனுசாரியன்றனக்குச்சொன்னர் ஆரென மேன்மேல் தொடர்ச்சிப்பட்டுப் பின்சொற்கு உத்தரமின்றி முட்டுப்படுமாகையாற் கர்த்தாவுமில்லையாம். இஃதன்றியும், உன் பள்ளியுள் நீதெய்வமென்றேத்த இருப்பாராரோ கூறுவாயாக.

அனவத்தைப்படு மொருவனென்ருய், அனவத்தையென்பதொரு தோடங்கொண்டு நின்றுசொன்ன ஞெருவனென்று யென்

பது. அநவத்தை - தலைகாணுதது அல்லது முடிவுகாணுதது. அன்ஞய் - அசை. அ

இந்நூலைச் சொன்னவன்தான் இங்கிருந்தா னென்னில்
இவனிருத்தி யேத்துமவன் எங்கிருந்தா னெவனே, அந்
நூலோ குருவந்த அடைவுமுனக் கில்லை அடைவுதரின் முடி
வின்கண் அநாதி போதன், சொன்னும் அவைவே
தாகமங்க ளாகுஞ் சுருக்கியூண் தவம்புரியச் சொல்லுவ தெல்
லோரும், உன்நூல்கண் கழுவாதே உதிப்ப தன்முன் புலா
லோ டுண்பானோர் ஊன்பிரிய னுரைத்ததொரு நூலே. கoக

(உரை) இந்தப் பிடகசாத்திரஞ்சொன்ன புத்தாசாரியன் இப்பள்ளியிலிருந்தானுகில், இவன் ஆசாரியனுக ஏத்தப்பட்டவனுவான் எவ்விடத்தான், கடவுளாவான் எவன், அவனுற் சொல்லப்பட்ட நூலெவ்விடத்தது, அவை காணப்படாமையாற் குருசந்தான அடைவும் உனக்கில்லையாம், நூலடைவு சொல்லப்புகின் சங்காரத்தின்கண் அழிவில்லாத பரமேசுவரன் சொல்லப்பட்டனவாம். அவை வேதாகமங்களென்பர், இவ்வாகமங்களின் சார்வுளார் சொல்லுவது உணவைச் சுருக்கித் தவத்தைப் புரிதலை. இங்ஙனமன்றி, உன்னுடைய பிடக நூல் கண்கழுவாது சூரியனுதிக்குமுன்னே புலாலுடன் உண்பானொரு போசனப்பிரியன் சொல்லப்பட்ட நூலாம். கூ

முன்நூலும் வழிநூலும் சார்பு நூலும் மூன்றாகும்
உலகத்து மொழிந்த நூல்கள், இந்நூலில் உன்நூலிங் கெந்நூ
லென்னில் இந்நூல்கா ணென்நூலென் றியம்ப மாட்டாய்,
உன்நூலும் ஒருநூலாய் உரைப்ப தென்னே உலட்டுநூல்
பருத்திநூல் சிலம்பி நூல்கள், அந்நூலு மல்லாதே பொய்ந்
நூல்கொண்டிங் கறநோற்றுத் திரிந்தவா றழகி தாமே. கoச

(உரை) இவ்வுலகின்கண் வழங்குநூல்கள் முதல்நூலும் வழிநூலும் சார்புநூலுமென மூன்றுவிதமாம், இங்ஙனம் மூன்றுவிதமான நூல்களில் உன்நூல் எநதநூலென்று கேட்டால் இந்த நூல்களில் என்னுடையநூல் இந்நூலென்று சொல்லவல்லாயல்லை. ஆதலால், உன்நூலை ஒருநூலாய்ச் சொல்வதெப்படி, உலண்டாற் செய்தநூல் பருத்தியாற்செய்தநூல் சிலம்பியால்செய்த நூலென்று

சொல்லப்பட்ட நூல்களின் தகுதியுமல்லாத உனது பொய்யாகிய நூலைக் கொண்டு இங்கே அறத்தையுண்டாக்கி நடந்தது ஆச்சரியம்.

புத்தனவன் பொன்றக்கெட் டுப்போனுனென்று போற்று வதிங்காரைநீ பொய்த்தவஞ்செய் புத்தா, செத்தவர்க்குச் சில கிரியை செய்ய இங்குச் செய்தவர்க்கும் புண்ணியமாமென்று செப்பின், நித்தமுயி ராதலாற் பலிக்குஞ் செய்தி நினைந்து தரு வானுமுளன் உனக்கிவ்வா றில்லை, வைத்தசுடர்த் தீப மற மாய்ந்தக்கா லதற்கு மருவுதிரி நெய்கூட்டு மதிகேடுன் வழக்கே. கப௫

(உரை) பொய்த்தவத்தைச் செய்யும் புத்தா நீ உன்னுசாரியன் முதலறக்கெட்டுப் போயினுனென்றுசொல்லி இவ்விடத்துப் போற்று வதுயாவரை; இறந்தோரைநோக்கிச்செய்த சிலநன்மை இருந்தோர்க் கும் புண்ணியமாமென்று கூறின், உயிர்கள் நித்தமாதல்வேண்டும், ஆகையால் கொடுக்கும் பலியாலுண்டாகிய புண்ணியம் இத்தன்மை யென்று நினைந்து அப்புண்ணியபலம் அருளுவானுகிய ஒரு கர்த்தாவும் உண்டாகவேண்டும். இந்நெறி உன்நூல்நெறியன்று, பொன்றக் கெட்டவர்க்குச் செய்யுஞ் சிறப்பாகிய உனது வழக்கு தீபம் பொன்றக் கெட்டவிடத்து இறந்த தீபத்துக்குபகாரமென்று கருதி நெய்யுந் திரி யுங்கூட்டும் அறிவின்மைபோலும். கக

நூலுரைத்தான் ஒருவனுளன் என்றநுமா னத்தால் நூல்கொண்டிங் கறிந்தாற்போல் நூலா நூலின், பாலுரைத்த பொருள்களெல்லாம் அநுமான மென்னிற் பரலோக பாதாள லோகங்க ளொருசொல், லாலுரைத்த நூலின்றி அறையா யின்றேல் அவையறிந்த படியெனுன தநுமான மன்றே, மேலுரைக்கும் பிரமாண முனக்கில்லை காட்சி யநுமானம் விட்டபொருள் விளக்குவதா கமமே. கப௬

(உரை) நூலைச்சொன்னவன் ஒருவனுண்டென்று நூலைக்கொண்டு அநுமித்தாற்போலச் சிறந்தநூலின் பகுதியிற்சொன்ன பொருள்க ளெல்லாமறிகை அநுமானமென்று புத்த நீகூறின், பூமிக்குமேலான வுலகங்களின் செய்தியுங் கீழானவுலகங்களின்செய்தியும் நூல்கொண்டு சொல்லுவதின்று அநுமித்துச் சொல்லலாமாயிற்சொல்லாய், அந்த

நூலில்லேயாயின் அந்தவுலகங்களின் செய்தியறிந்தபடியென், உனது அநுமானத்தாலறியும் பகுதியன்றே? ஆகையால், காட்சியானும் அநுமானத்தானும் அறியாதபொருளே அறிவிப்பது நூல்; அந்நூற்பிரமாணம் உனக்கில்லேயென்று கூறின், நீ முன்சொன்ன பிடகநூற்பிரமாணமும் உனக்கில்லேயாம். ௧௨

எப்பொருளும் அநித்தமென இயம்பிடுவை அநித்தம் இல்லதற்கோ உள்ளதற்கோ உளதிலதானதற்கோ, செப்பிடின்இல் லதற்கில்ல தென்று மில்லே சென்றடைவ துள்ளதற் கேல் உள்ளதென்று முண்டாம், அப்படிதான் உளதிலதாம் அப்பொருளுக் கென்னில் உளதிலதா காதிலதும் உள்ள தாகா, திப்பொருளுக் கநித்தமிலே என்றொன்றைக் காட்டாய் எனில்தோன்றும் பொருள்நின்றிங் கிறுதி யாமே. ௧௦௭

**(உரை)** எல்லாப்பொருளும் நித்தமில்லே அநித்தமென்று புத்தா நீசொல்லாநிற்பை, நீகூறிய அநித்தம் இல்லாதபொருளுக்கோ உள்ள பொருளுக்கோ உளதிலதான பொருளுக்கோ, அநித்தம் இல்லாத தற்கென்று நீகூறின் இல்லாதது என்றுமில்லேயாம்; ஆகையால், இல்லாததற்கு உண்டாவதில்லே. உள்ளதற்கென்றுகூறின் உள்ள தில்லேயாகாது என்றுமுண்டாகவேண்டும். உளதிலதாம் பொருட் கென்றுகூறின் அதுவும் உளதிலதாகையால், உள்ளதில்லேயாகாது இல்லாததுண்டாகாது. அதனுல் இவை யநித்தியமன்று, தோன்றும் பொருள்களின் இப்பொருள் அநித்தமல்லாத நித்தமென்றொன்றைக் காட்டாயென்று கூறின், தோன்றும் பொருளாகிய தூலவுடல் தோன்றிநின்று கெடுதலேயுடைத்தாம்.

ஆதலாற் சூக்குமவுடலுக்கு அநித்தமில்லேயென்பது கருத்து. அன்றியுந் தோன்றியிடுந் தூலதேகமும் வன்னபேதமும் ஒருகாலும் இடையருமல் தொன்றுதொட்டு வருதலால் அதுவும் நித்தியமென் னுங் கருத்தாகக்கொள்ளினும் அமையும். ௧௩

அங்குரம்வித் தின்கேட்டில் தோன்றுமது போல அனேத் துருவுங் கெட்டுவழி யாகு மென்னின், அங்கவற்றுக் காச் சக்கே டறைந்தா யெல்லாம் அநித்தமெனும் உரைமறந்தாய் அருகனுமா ணுய்நீ, இங்குமுளே யிலேமரமாய் எழுந்தீண்டிச் செல்லா திறந்ததே எழுந்தபடி நில்லா தென்னின், மங்கி

யிடாதேபால தருணவிருத் தையாய் வரும்வடிவு திரிந்து நின்று மாயுங் காணே. ௧0அ

(உரை) முளையானது வித்துக்கெடத்தோன்றும்; அதுபோல எல்லா வுருவங்களுங்கெட்டுப் பின்பு அவ்வழியே தோன்றுமென்று, புத்த! நீ கூறின், எல்லாம் அநித்தமெனுஞ் சொல்லைமறந்து உருக்களுக்கு ஆக்கக்கேடு கூறினாய். அதனால் நீயும் க்ஷமணன் மதவழியிலேயாயினாய். அற்றன்று,இவ்விடத்து அம்முளை இலையும் மாமுமாய் வளர்ந்து செல்லாத வளர்ச்சியைக் கைவிடுவானேன்; ஆதலால், எழுந்தபடி நில்லாதென்று நீகூறின் தோன்றினவுருவங் கெடாமல் நின்று பால தருண விருத்த அவத்தைகளைப்பொருந்தி அவ்வவத்தைகள்தோறும் பேதப்பட்டுப் பின்பு தூலவுடல் கெட்டுப்போம். ௧௪

உடல்பூத மெனின்ஒன் றுக் கொன் றுபகை ஒன்று வுதிர சுக் கிலமென்னின் மரத்தினுளுக் கல்வி, னிடமாகத் தவளை யுரு வந்தவா றியம்பாய் இருவினைகா ணெனின்வினைக ளிரண் டுருவாய் நிற்கும், திடமாக வன்னமுரு வெனின்உண்ணா வுண்ணச் சென் றுவள ருங்காயந் தேயுமுணர் வென்னின், மட வோனே அருவுணர்விங் கசேதனமாய் உருவாய் வளராது வருமில்லா தெனின்மலர்வான் வருமே. ௧0௯

(உரை) புத்த! நீ உருக்கள் பூதரூபமென்றுகூறின் பூதங்களொன்றோடொன்று பகையாதலால் அவை தம்மிற்கூடி யுருவாகாது, சுக்கில சுரோணிதங்கள்கூடி உருவாமென்று நீகூறின், மாமிடமாகத் தோன்றும் உளுவுங் கல்லினிடமாகத்தோன்றுந் தவளையும் உருப்பெற்றதற்குச் சுக்கில சுரோணிதங்கள் கூடிவந்தவாறுசொல்லாய், புண்ணியபாவங்கள் தாமே உருவமாமென்றுகூறிற் புண்ணியம் பாவமிரண்டுந் தம்மிற்கூடி யோருருவந் திரண்டதாக வேண்டும்; அது கூடாது. நிச்சயமாகவே அன்னசாரமே யுருவாமென்றுகூறிற் போஜனத்தால் வளருங்காயம் விருத்தாவத்தையில்வளராது தேய்தல் காண்டும். அதனால் அன்னசாரமுமன்று, உணர்வுதானே யுருவமெடுத்துக்கொண்டதென்றுகூறின் அறியாதவனே அருவமாயிருக்குமறிவு அசேதநமாயிருக்கும் உருவமா யிவ்விடத்து வளராது, இல்லாததொன்று உருவமாய் வருமென்று கூறின் இல்லையாயதில்லையேயாம்; ஆகையால், நீ கூறிய இது ஆகாயப்பூப்போலப் பொய்யாகவரும். ௧௫

என்றுமிலா தொன்றின்ருய் வருமுருவம் வித்தின் எழு மரம்போ லெனின்வித்தி னுண்டாய்நின் றெழுங்காண், நின்ற தேல் வித்தின்மரங் கண்டதில்லை யென்னின் நெற்கமுகாய் நீளாது நெல்லாயே நீளும், ஒன்றிலொன்றங் கிலாமையினு லுதியாகா ரணம்பெற் றுதிப்பதுகா ரியமதுவு முள்ள தாகும், மன்றமதிக் கலைபோலக் கந்த மைந்து மருவியுள தெனும்உரையும் மறந்தனையோ இன்றே. ககO

(உரை) யான்கூறிய பொய்யன்று, என்றுமில்லாததொன்றுண் டாய்வரும்; அஃதெங்ஙனென்னின், வித்தினிடத்திலே மரந்தோன் றுமாபோலவென்று, புத்த ! நீ கூறின், அம்மரம் வித்தினிடத்திலே யுண்டாய் நின்று எழுதலன்றி யில்லையாய் நின்று எழாதுகாண், அப் படிவித்திலே மரமுண்டாமாயின் வித்தினிடத்திலே காணவேண்டும். வித்தினிடத்தின் மரங்கண்டதில்லையென்று கூறின் நெல்வித்துக் கமுகாய்வளராது நெல்லேயாம், ஒருமரத்தில் ஒருமரம் உண்டாகா தாகையால் இல்லாததுண்டாகாது, வித்துக்காரணமாக மரங்காரியப்படு தல் உள்ளதாம், நிச்சயமாக மதியுங்கலையும் போலக் கந்தங்கள் ஐந்தும் பொருந்தி உருவுண்டாமென்னுஞ் சொல்லும் இன்றுமறந்தாயோ. கசு

உருவமெலாம் பூதவுபா தாய சுத்தாட் டகவுருவ மென் னின் நீ உலவத்துக்கு, மருவும்அன லோடுநீர் மண்கந்த மிர தம் வன்னம்இலை வன்னிக்கு வளிநீர்மண் வாசந், தருமிரத மிலைநீர்க்குத் தழல்கால்மண் கந்தந் தானில்லைத் தலத்தினுக் குச் சலமனல்கால் கூடி, வருவதிலை இந்திரிய விடயமான மாபூதங் களுமறியாய் மதிகெட்டாயே. ககக

(உரை) புத்த! நீ சுத்த உருவமெல்லாம் பூதவுருநான்கும் உபா தானவுரு நான்குமாகிய எட்டுங்கூடியே வருமென்றுகூறின், அவை யெட்டும் ஒன்ருேடொன்றுகூடாது. அஃதெங்ஙனமென்னில், காற் றுக்குத் தன்குணமாகிய சலித்தலொழிந்து அனலும் நீரும் மண்ணும் என்பவற்றின் குணமாகிய உருவம் இரதங் கந்தங்கள் கூடுவதில்லை யாம். அக்கினிக்குத் தன்குணமாகிய வுருவமொழிந்து வாயுவும் நீரும் மண்ணும் என்பவற்றின் குணமாகிய பரிச ரச கந்தங்கள் கூடுவதில்லை யாம். அப்புவுக்குத் தன்குணமாகிய இரதமொழிந்து அக்கினியும் வாயுவும் பிருதிவியும் என்பவற்றின் குணமாகிய ரூப சலந கந்தங்கள்

கூடுவதில்லையாம். பூமிக்குத் தன்குணமாகிய கந்தமொழிந்து ஜலமும் அக்கினியும் வாயுவும் என்பவற்றின் குணமாகிய இரதமும் உருவமுஞ் சலித்தலுங் கூடுவதில்லையாம். ஆகையால் இவையெட்டுங் கூடியுரு வாகாது. அந்தமகா பூதமுங் குணமும் இந்திரியவிடயங்களென்பதும் அறியாய் புத்தியில்லாதாய். ௧௭

மருத்தெண்ணெய் தனின்மருந்து நின்றாற் போல
மறைந்தெட்டும் சூக்குமமாய் மருவு மென்னில், திருத்து
மவன் மருந்தெண்ணெய் சேர்த்தாற் போலச் சேர்ப்ப
வன்வே றுண்டெல்லா வுருவும் எட்டும், பொருத்தியதே
லொருதன்மை யாம்பொருள்க ளொன்றின் குணமொன்றிற்
புகாதறைகை பொருளறியாய் பூத, உருப்பொருள்வே றுபா
தாயப் பொருள்வேறு காட்டா யுபாதாயம் பூதகுணங் குண
குணியா முலகே. ௧௧௨

(உரை) மருத்தெண்ணெயின் மருந்துதோன்றாமற் கரந்துநின்று நன்மையைத் தருமாபோல, பூதவுருவும் உபாதாயவுருவுமாகிய எண் வகையுந் தூலங்கெட்டுச் சூக்குமவுருப்பெற்று நிற்குமென்று புத்த! நீ கூறின், வியாதியைத்தீர்க்கும் மருத்துவன் அவ்வெண்ணெயையும் மருந்தையுஞ் சேர்த்தாற்போல, பூதவுருவையும் உபாதாயவுருவை யுங்கூட்டி உண்டாக்குவான் ஒரு கர்த்தாவேண்டும்; எல்லா உருவத் தையும் இவ்வெட்டுமே யுண்டாக்குகின்றனவென்று கூறின் அப் பொருள்களெல்லாம் ஒருதன்மைப்படவேண்டும். அவ்வுருக்களின் குணங்களில் ஒன்றின்குணம் ஒன்றிற்கூடாது; ஆகையாற் சொல்லு கைக்குப்பொருள் அறியாய், அன்றிப் பூதவுருப்பொருளையும் உபா தாய வுருப்பொருளையும் வேறுகாட்டவல்லையாயிற் காட்டாய்; உபா தாயமாவது பூதகுணமாம்; அந்தக் குணத்தையுடையது பிரபஞ்ச மாம். ௧௮

அழிந்துணர்வை உணர்வுதரு மெனின்அழிந்த தாக்கா
தாமுணர்விற் பொருள்வினைகள் அணையா வாகும், அழிந்தி
டுவ தாக்கியெனின் முன்னொரு காலத்தே அறிவிரண்டு நில்
லாதங் கறக்கே டின்றி, அழிந்துணர்வை உணர்வுதரு
மெனின்நித்தா நித்தம் அடையும்உணர் வுக்கநித்த மாயே

*செல்லா, தழிந்தெருவை ஆக்குவது போலாக்கு மென்னின்*
*ஆம்பொருள்வே றழிந்துசத்தி கிடந்தாக்கும் அவையே.*

**(உரை)** *தோன்றிய அறிவு கெட்டுப் பின்னோறிவையுண்டாக்கு மென்று புத்த! நீ கூறின், கெட்ட அறிவு மற்றோறிவையுண்டாக்க மாட்டாது; அன்றியும் ஆகிற அறிவும் முன்னறிவுகெடுதலாற் கெட்ட அறிவும் அறியும்பொருளையுஞ் செய்யும் வினையையும் அறிந்துஞ் செய்யவுமாட்டாது, முன்னையறிவு பின்னையறிவை யுண்டாக்கிக் கெடுமென்று கூறின் ஒருகாலத்தே இரண்டறிவு தோன்றிநில்லாது, அவ்விடத்து முன் அறிவு முற்றக்கெடாது சிறிதுநின்று மேலோ ரறிவை யுண்டாக்கிப் பின்னிறந்திடுமென்று நீகூறின், உணர்வுக்குச் சுபாவம் நித்தாநித்தமாதலால் உணர்வு அநித்தமென்று கூறியது பொருந்தாதாம். பயிருக்கிடும் எருவும் வைக்கோலுந் தாங்கெட்டுப் பயிருக்கு நன்மைகொடுப்பதுபோல, முன்னை யறிவுகெட்டுப் பின்னை யறிவையும் உண்டாக்கும் என்றுகூறின், அவ்வெருவும் வைக்கோலுந் தூலங்கெட்டுச் சூக்குமமாகிய வீரியங்கிடந்து பயிர்க்கு நன்மை கொடுக்கும்; அதுபோல, உன்னறிவுசேரக்கெடாதென்ன வேண்டு மாகையால், நீ கூறிய அதற்கு நித்திய மில்லையென்ன வேண்டா; ஆம்பொருள் வேறென்றதனால் எருவால் நன்மைபெறும் பயிர் வேறா றாற்போல அறிவாலாம் பொருளும் வேறென்க.* ௧௧௩

கேடிலாச் *சந்தானத் தேபலிக்கு மென்று கிளக்கும்நீ சந்தானம் நித்தமாகும், ஓடுநீர் போலழிந்தா முணர்வொழுக்க மென்னின் ஒழுகுநீ ரிட்டதெல்லா முடன்கழிதல் போலத், தேடுபொருள் சீலம்பா வனைகுறிவிஞ் ஞானஞ் சென்றவுணர் வோடேகு நின்றுணர்வின் ஏயா, நீடுநீர் முன்னொழுகிக் கெடாதுநிறைந் தோடு நிகழுணர்வுங் கேடின்றி நிறைந்து செலுங் காணே.* ௧௧௪

**(உரை)** *உணர்வுகெடாத தொடர்ச்சியாலே உணர்வுதோன்று மென்று புத்த! நீகூறின் அந்தத்தொடர்ச்சிதான் நித்தமாகவேண்டும். ஆற்றின்கண்ணோடு நீர் முன்சென்றது வற்றப் பின்சென்றது அவ் வெல்லையி னிறந்துபோமாறுபோல, முன்னையறிவுகெடப் பின்னை யுண்டாகிய அறிவு மிக்க அறிவாமென்று நீகூறின், ஓடுகின்ற நீரின் கண் உண்டானவையெல்லாம் அந்நீரோடுகூடக் கழிந்துபோகப் பின்*

ணர்செல்லுநீர் அவற்றைக்கூடமாட்டா; அதுபோல, முந்தையறி வால்தேடும் பொருள்கள் சீலம் பாவனை குறி விஞ்ஞானம் இவை யெல்லாம் முன்னையறிவோடு கெடுமாகையாற் பின்னையுண்டாம் அறி விற் கூடமாட்டா. விடாமலோடுநீர் முன்னொழுகிய தன்மைகெடா மல் நிறைந்தோடியவாறுபோல, அறிவு இடையறாமற்றோன்று மென்று நீகூறின், அப்படியுண்டாம் அறிவு அநித்தியமன்று; நித்த மாய் நிறைவுபெற்றுச் செல்லவேண்டும். உ௦

சந்தானங் காரணமோ காரியமோ இரண்டின் தன்மை யதோ காரணமுங் காரியமும் நித்தம், வந்தாருஞ் சந்தானத் தொடர்ச்சியெனின் அதற்கும் வருநித்தந் தோற்றக்கே டடைதலின்மற் றொன்றேல், ஐந்தான கந்தங்களன்றாய் நித்தம் அடைபொருளாம் அறிவும்அறி வடைவு மின்றிச், சிந்தாமுன் பின்னாகிப் பின்முன் னாகித் திரிந்துவருந் திரி வறிந்துதேரா தேரே. ககரு

(உரை) நீ தொடர்ச்சியென்றது காரணமாய் நின்றதோ, காரிய மாய்நின்றதோ, காரணகாரியமாய் நின்றதோ, காரணமென்னில் என்றுங் காரணப்பட்டுவருகையால் நித்தமாம்; காரியமென்னின் என்றுங் காரியப்பட்டுவருகையால் அதுவும் நித்தமாம். காரணகாரிய தொடர்ச்சி மீளவந்து பொருந்துமென்று நீகூறின் அப்படிக் காரண காரியப்படுதலுமாய்த் தோன்றுதலுங் கெடுதலுமாய் தொன்று தொட்டு வருதலால் அதற்கும் நித்தியத்துவமுண்டாம். மற்றோரறி வென்னில் அப்படிக் காரணகாரியப்படுதற்கு இந்திரியங்களோ டொருபொருளாகாமல் அவ்வறிவு வேறொரு பொருளாகலானும் இந்திரியங்கள் அவ்வறிவுக்கு மூலமல்ல வாகையானும் அவ்வறிவு நித்தியமாக அடையும் பொருளாம். அங்ஙனமாயின், ஆன்மாவும் ஆன்மாவால் அடையும் பொருளுமாக அறிதலின்றி முறையே கெட்டு இந்திரியங்களறிவாகவும் அறிவு இந்திரியங்களாகவும் முறை பிறழ்ந்து வரும்; இவற்றின் திரிவையறிந்து விசாரியாய்; புத்தனே. உக

ஒருகாலத் துணர்வுகெட்டா மெனின் உதிப்பீ றொன்றாம் ஒருபொருளின் திரிவுனக்குக் கால மானால், வருகால நிகழ் காலங் கழிகால மென்று வழங்குவதென் பொருள்வரவு நிலைகழிவால் இன்றேல், திரிகாலம் செப்பிடாய் பொருட்

செயலு மொன்றும் செயல்மூன்றும் ஒருகணத்தே சேரு
மென்னில், தருகால மூன்றாகும் தாமரைநூ றிதழில் தள்
ளூசி யுங்கால மூன்றினையுந் தருமே. ககசு

(உரை) காலம்பேதப்படாது ஒருகாலத்திலே அறிவு கெடுதலும் உண்டாதலுஞ் செய்யுமென்று புத்த! நீ கூறின் சங்காரமுஞ் சிருஷ்டியும் ஒரு தொழிலாகவேண்டும், ஒருபொருளின் திரிவே உனக்குக் காலமென்று சொல்லையானால், எதிர்காலமென்றும் நிகழ்காலமென்றும் கழிகாலமென்றும் வழங்குவானேன்? அப்படி வழங்கியது பொருள்களானது வருதலும் நிற்றலுங் கழிதலுமாதலாற் காலமில்லை யென்று சொல்லுவையாயின், மூன்று விதமான காலத்தின் பெயரை நீ சொல்வாயல்லை. அங்ஙனங் காலபேதமில்லையாயின், இருது பேதாதிகளுங் குணபேதாதிகளுமில்லையாய்ப் பொருள்களெல்லாம் ஒரு செயலாகவேண்டும். அப்படிப் பேதித்த மூன்று செயலும் ஒருகணத்திலே சேருமென்னில், அப்படிக் கணத்திலே யுண்டாயதுவுங் கால மூன்றினையும் உடைத்தாம்; அஃதெங்ஙனமென்னில், தாமரை யிதழ் நூறடுக்கிற் செலுத்தின வூசியும் இதழ்தோறும் பற்றுகையும் உருவுகையுங் கழிகையுமாய் மூன்றுகாலத்தைத் தருமாதலாற் பொருட்செயலன்று காலமுண்டா மென்றறிவாயாக. உஉ

உணர்வுகா ரணமுணர்வுக் கென்னின் நித்தம் உணர்வுக்
குண்டாகிநின் றுணர்வையுதிப் பியாதிங், குணர்வுசந் தான
விடத் தொழிந்தாற் பின்னை யுண்டாகா துடலுணர்வுக் குபா
தாந மென்னின், உணர்வுடலின் இடையறு துதிக்க வேண்
டும் உடலுணர்வின் வினையினுல் உணர்வுதிக்கு மென்னில்,
உணர்வுவினை யுளதொடுங்கா துணர்வுதருஞ் செய்தி உணர்
வைவினை தரிஞெருவன் செயல்வினையின் ருமே. ககஎ

(உரை) அறிவுகாரணமாக மற்றோரறிவுண்டாமென்று புத்த! நீ கூறின், நீ அநித்தியமென்று கூறுகையால் அறிவுக்கு நித்திய முண்டாகி நின்று மற்றோரறிவையுண்டாக்க மாட்டாது. அன்றியும், அவ்வறிவுதான் வருகிற தொடர்ச்சியிலே கெட்டாற் பின்னையறிவு தோன்றாது. உணர்வுக்கு மூலகாரணமாகி நின்று உடலந்தோற்றுவிக்குமென்னில் அவ்வறிவு உடலில் உறக்கத்தின் கண்ணும் இடையறாமல் உண்டாகவேண்டும்; உடலுணர்வின் வினையாலே உணர்வு

தோற்றுமென்று கூறின், இந்திரியங்கள் எப்பொழுதுங் கன்மத்தை யுடைத்தாதலால் அதனாலுண்டாமறிவு அழியப்படாது, அதுவன்றி உணர்வுவினையைத் தருமென்றும் வினை உணர்வைத்தருமென்றும் நீ கூறின் ஒருவர்க்குச் செய்யப்பட்ட கன்மமென்பதன்றே. உரு

வினையுணர்வு தரும்வினையை உணர்வுதரு மென்றும் விளம்பின்நீ உணர்வுபோல் வினையி னுக்கு, நினைவுவரும் ஒன் றையொன்று நிகழ்த்தி டாபின் நிலையின்மை யானிகழ்த்திக் கெடுதல் செய்யா, கனல்விறகில் பிறந்ததனைப் பொடிசெய் தாற்போல் கருத்துவினை யிற்றோன்றிக் கழிக்கும்வினை யென்னின், முனமுணர்வு பிறந்தளவே வினைகெடுக்கும் முன் பின் உதியாது முகிழ்நெருப்பின் விறகுதியா வாறே. ககஅ

(உரை) கன்மம் அறிவை யுண்டாக்குமென்றுங் கன்மத்தை அறிவுண்டாக்குமென்றும் புத்த! நீ கூறின், அறிவுக்கு நினைவுண்டா னாற்போலக் கன்மத்துக்கு நினைவுண்டாகவேண்டும். அப்படிக்கன்மத் துக் கறிவில்லையாகையால் ஒன்றையொன் றுண்டாக்கமாட்டாது. அவை அநித்தியமென்று சொல்லுகையால் ஒன்றை யொன்றுண் டாக்கிக் கெடமாட்டாது. காட்டத்திலே அக்கினிதோன்றி அந் தக்காட்டத்தைத் தகித்தாற்போல, அறிவு கன்மத்திலே பிறந்து மீளவும் அக்கன்மத்தையே கெடுக்குமென்று நீகூறின், முன்பிறந்த அறிவு பிறந்தபோதே கன்மத்தைக்கெடுக்கும். பின் அக்கன்மம் அறிவை யுதிப்பிக்கமாட்டாது. அறிவும் பின்னர்க் கன்மத்தை யுதிப் பிக்கமாட்டாது. அஃதென்போல வென்னில், காட்டத்திலுண்டாம் அக்நி அக்காட்டத்தைச் சுட்டால் மீண்டொரு காட்டத்தை யுண் டாக்க மாட்டாதுபோல். உச

பேயுநர கரும்சுரரும் பிரமருமாய் உலகிற் பிதாமாதா ஆதாரமொன்று மின்றிக், காயமொடு தாம்வருவர் என் றுரைப்பை காயங் காரியமாய் வருதலினால் காரணமுண் டாகும், ஆயுமுணர் வோசுத்த அட்டகமோ கன்மம் வடித் ததோ வடிவுசெய்து வைத்தாரும் உண்டோ, ஆயுமுணர் வுண்டாகில் அறைந்திடாய் உலகுக் காதிதுணை நிமித்தகா ரணமறிவ தறிவே. ககக

(உரை) பேயென்றும் நரகரென்றுஞ் சுரரென்றும் பிரமா முதலாயினரென்றுஞ் சொல்லப்படுவார் உலகின் மாதா பிதாக்களுமின்றி இருப்புமின்றிக் காயத்தோடுகூடின வடிவமுடையராய் வருவரென்று புத்த! நீ கூறுவை. அக்காயம் காரியப்பட்டு வருகையினால் ஒருகாரணத்தானன்றி யுண்டாகாது. அக்காரண காரியங்களை அறியாய். அறிவையாகில், அக்காயங்கள் நீ ஆராய்ந்த வுணர்வுதானோ, சுத்தாட்டகமோ, அன்றிக்கன்மம் உண்டாக்கியதோ, அன்றி அவ்வடிவையுண்டாக்கினோர் ஒருவருண்டோ? உனக்காராயத்தக்க அறிவுண்டாயிற் சொல்லாய். அவற்றை உண்மையாக அறியுங்காலத்துப் பிரபஞ்சவுற்பத்திக்கு ஆதிகாரணமென்றுந் துணைக்காரணமென்றும் நிமித்தகாரணமென்றும் உண்டாம். அதனை யறிவதுகாண் அறிவு.

உருவாதி கந்தங்கள் ஐந்துங் கூடி ஒருவன்வே றொருவனிலை யென்றுரைக்கும் புத்தா, உருவாதி ஐந்தினையும் உணர்பவன்வே றென்ன உணருமவிஞ் ஞானமென்றாய் அஞ்ஞானம் உணர்ந்தவரார், உருவாதி பொருள்காட்டித் தனைக் காட்டும் சுடர்போல் உணர்வுபிறி தினையுணர்த்தித் தனையுணர்த்து மென்னின், உருவாதி பொருளினையும் சுடரினையும் காணும் உலோசனம்போல் உணர்வுபொருள் உணர்வதுவே றுண்டே. க௨0

(உரை) உருவம் வேதனை குறிப்பு பாவனை விஞ்ஞான மென்கின்ற கந்தங்கள் ஐந்துங்கூடி ஆன்மாவன்றித் தனித்தோரான்மா இல்லையென்று கூறும் புத்தா, அவ்வுருவம் முதலிய கந்தங்கள் ஐந்தையும் அறிவானொருவனுளனென்று நாங்கூறுவதன்று அவற்றையறிவது சித்தமேயென்று கூறினாய், அந்தச் சித்தத்தை யுணர்ந்தவர் ஆரென்று வினயவிடத்து, உருவங்கள் முதலாய பொருள்களையுங்காட்டித் தன்னையுங்காட்டும் விளக்குப்போல, சித்தமும் பிறிதுண்டாகியவற்றையும் அறிவித்துத் தன்னையும் அறிவித்து நிற்குமென்றுகூறின், உருவங்கள் முதலாகிய பொருள்களையும் அவற்றைக் காட்டி நிற்கும் விளக்கையுங் கண்டுநிற்குங் கண்போல, சித்தத்தையும் விடயத்தாலறியும் இந்திரியங்களையும் உணர்வானொருவன் வேறுண்டென்று அறிவாயாக. உ௬

காயமுடன் இந்திரியம் மனம்நான் என்று கதறுவாய் காயம்உறக் கத்தறியா வாகும், வாயில்களும் அப்படியி லொன்றையொன் றங் கறியா மனங்கணத்திற் கெடுங்கால மூன்றின்வர வறியா(து), ஆயுமறி வாகிவுடல் பொறிமனமூன் றறிந்தாங் கவைநானல் லேனென்றும் அறிந்துமனத் தாலே, ஏயுமொரு பொருள்கருதி இந்திரியப் பாலே இசைவித்துக் காயத்தால் இயற்றுவதான் மாவே. ௧௨௧

(உரை ) உடம்புடன் இந்திரியங்களும் மனமுமே ஆன்மா, வேறே ஆன்மா வென்றொன்றில்லையென்று கூப்பிடும் புத்தா ! அக் காயம் உறக்கத்தினிடத் தறியாமையையுடைத்தாம். இந்திரியங்களும் அக்காயம்போல் உறக்கத்திலும் வியாத்தியிலும் ஒன்றறிந்த விட யத்தை யொன்றறியமாட்டா. மனமுங் கணத்திற்கெடும் காலமூன் றின் செய்தியையும் அறியமாட்டாது; ஆகையால், இவை ஆன்மா வல்ல, உடல்முதலாயின மூன்றினையும் ஆராயத்தக்க அறிவாய் அவற் றின் குணங்களை யறிந்தும் அவற்றை என்னுடல் என்பொறி என்மன மென்று சொல்லியும் அவை நானல்லே னென்றறிந்தும் மனத்தாற் பொருந்தத் தக்கதொரு பொருளைக்கருதி இந்திரியங்களின் பகுதி காட்டக்கண்டு காயத்தாலே தொழிலைச்செய்வது ஆன்மாவென்று அறிவாயாக. காலமூன்றுவன—பூத பௌஷ்ய வர்த்தமானமாம். ௨௭

கழிந்தஉணர் வேபின்னும் யானறிந்தே னென்று கருத லினவ் வுணர்வறிந்த தென்னின் முன்னே, மொழிந்தமொழி நான்மொழிந்தே னென்றால் வாய்தான் மொழிந்ததோ மொழிந்தவன்வே றானாற் போல, எழுந்தவுணர் வெல்லாங் கொண் டியானறிந்தே னென்ற தெதுஅதுகாண் உயிருணர் வால் வாக்கான் மற்றை, ஒழிந்தகா யந்தன்னால் உணர்ந்து ரைத்துச் செய்தங் குணர்வினுக்கும் ஆதார மாய்நிற்கும் உயிரே. ௧௨௨

(உரை) முன்னொரு பொருளையடுத்துக் கெட்ட அறிவுதானே பின்புண்டாகியவற்றை யான்அறிந்தேனென்று விசாரிக்கையாலே அவ்வறிவேகாணு மறிவதன்றி ஆன்மா வென்றொன்றில்லை யென்று புத்த! நீ கூறின், முன்னே சொன்னசொல்லும் நான் சொன்னே னென்று சொல்லுதல் வாயாற் பிறத்தலால் வாய்சொன்னதோ

அன்றே, அச்சொல்லைச் சொன்னவன் ஒருவனுண்டானாற்போல, உண்டாய அறிவுகளெல்லாவற்றையுங் கொண்டறிந்து அதனை யான் அறிந்தேனென்றது எது அதுகாண் ஆன்மா. மனத்தாலும் வாக்காலும் ஒழிந்ததாகச் சொல்லப்பட்ட காயத்தாலும் அறிந்துஞ்சொல்லியுந் தொழில்செய்தும் அம்மனத்திற்குப் பற்றாய்நிற்கும் ஆன்மா. உஅ

இந்திரிய வீதிஎழுஞ் சித்தம்நெஞ்சத் தெழுஞ்சித்த மென்றிரண்டு மொன்றுகெட்டே யொன்று, வந்தெழுவ தெனில்கனவில் கண்டபடி நனவின் வாய்திறவார் நனவு கண்ட படிகனவிற் காணார், அந்தனுரு வன்னங்க ளறிந்திடா னின்றேல் அறிகனவும் இறந்துணர்வும் அழிந்துறக்கம் அடைந்தால், உந்துவதோர் சந்தான மில்லையுணர் உதிப்ப உயிர்கனவு நனவினையும் உணருங் காணே. கஉ௫

(உரை) இந்திரிய வியாபாரத்தால் உண்டாம் அறிவென்றும் மனத்திலுண்டாம் அறிவென்றும் இரண்டாய் ஒன்றுகெட்டொன்று தோன்றுமென்று புத்த! நீ கூறின், கனவிற்கண்டதெல்லாம் நனவிற் சொல்லமாட்டார்; நனவிற்கண்டதெல்லாங் கனவிற் சொல்லமாட்டார். அன்றியும், பிறவிக்குருடன் பிறர் வடிவத்தையும் வன்னத்தையும் அறியமாட்டான். இந்திரியக் குறைவாலே அறிவுதோன்றிற்றில்லையென்று நீ கூறின், அறியத்தக்கனவும் அழிந்து உணர்வும் அழிந்து உறக்கத்தையும் அடைந்தால் உண்டாகத்தக்க தொடர்ச்சியில்லை, ஆன்மாக்களுக்கு இச்சா ஞானக்கிரியைகளுண்டாகக் கனவினையும் நனவினையும் அறியாநிற்கும். (இன்றேலெனவே - இந்திரியங்கள் அறிவிக்குமென்பது புலப்பட்டது. வீதி - நேரே செல்லுதல். அந்தன் - அந்தகன்.) உ௯

ஒருகாலத் தோரிடத்தில் ஒருணர்வேல் செவிதான் ஒன்றுணரா திருசெவியும் உணரும் ஓசை, ஒருகாலத் திருகண்ணும் இருசெவியும் மனமும் ஒருவனைக்கண் டவனுரை கேட் டுணர்ந்திடுமைம் பொறியும், ஒருகாலும் உணராவுள் உணர்வின்றிப் பொறிகள் ஒன்றொன்று வுணர்வதுள் ளுணர் வைந்தும் உணரா, ஒருகாலும் பொறிவிகற்பித் துணராவுள் ளுணர்வுக் குள்ளதுகாண் விகற்பமிரண் டும்முணர்வ துயிரே. கஉ௬

**(உரை)** ஒருகாலத்திலே ஒருபொறியிடத்திலே ஒருணர்வாக அறியுமென்று புத்த! நீ கூறிஞய். அப்படியாயின், இரண்டுசெவியும் அறியும் ஓசையை ஒருசெவியறியமாட்டாது ; இரண்டுசெவியாலும் அறியவேண்டும். அஃதன்றியும், ஒருகாலத்தே இரண்டுகண்ணும் இரண்டுசெவியும் மனமுங்கூடி ஒருவனைக்கண்டு அவன்வார்த்தை கேட்டு அதனையறியாநிற்கும். ஐம்பொறிகளும் மனங்கூடாமல் தனித்தொருகாலும் அறியமாட்டா. பொறிகளோரோவொன்ருகத் தாமறியும்விஷயத்தை யறியும்அத்தனையே. அம்மனமும் ஏககாலத்து ஐம்பொறியின் விஷய அறிவுகளைந்துங்கூடி யறியமாட்டா. அதுவுமன்றி, பொறிகள் ஒருகாலுந் தாமறியும் அறிவன்றி விகற்பித்தறியமாட்டா. அந்தப் பொறிகளுடனே கூடிநின்று விகற்பித்தறிவது மனத்துக்குள்ள குணங்காண். இப்பொறிகளையும் மனத்தையுங் கொண்டறிவது ஆன்மாவாம். ௩௦

அருஉணர்வு மாய்ஆறும் மாறி மாறி அங்கங்கே தோன்றி யிடின் அகத்துநிலை யின்றி, உருவிஞெடு பாலதருண விருத்தா வத்தை உண்டாகா துறக்கத்தின் உடல்தட்ட அழைப்ப, வருவதுணர் வெங்கிருந்து நெஞ்சிலிருந் தென் னில் வாயில்வினை யறிந்தெழுப்ப ஆயுஅறி யாதாம், திரி யொழிய இடிஞ்சில்தொடத் தீபமெழா அடக்கஞ் சென்ற பொழு தாலுணர்வு நின்றநிலை செப்பே. ௧௨௫

**(உரை)** மனமானது அருவுமாய் உணர்வுமாய்ப் பொறிகளேந் தோடுங்கூடி ஆறுவிதமாய் மாறிமாறித் தோன்றியிடுமென்று புத்த! நீகூறின், மனம் அருவமாகையால் உருவின் நிலையுடையதுமன்ருய்க் காயத்தோடுகூடிப் பால தருண விருத்தாவத்தையும் உண்டாகாதாதல் வேண்டும். அஃதன்றியும், அவத்தைப்பட்ட விடத்து உடலிற்றட்டவும் அழைப்பவும் அறிந்து வருமறிவு எவ்விடத்திருந்தென்று சொல்லாய்; நெஞ்சிலிருந்தென்று நீகூறின், சத்தாதிவிடயங்களிலே செல்லுந்தொழிலையறிந்து செலுத்தமனமறியாதாம்; அஃதென்போலென்னில், திரியைப்பற்றி நின்றவொளி அத்திரிமாய்ந்தால் உடன் மாய்தலன்றி இடிஞ்சிலைப்பற்றித் தோன்ருதாகையால், உணர்வுக்கு மூர்ச்சைவந்த பொழுது அறிவு நின்றநிலை சொல்வாயாக. (ஆயு-மனம். உரு-தேகம். ஆல்-அசை. இடிஞ்சில்-அகல்.) ௩௧

இச்சைவெறுப் பியற்றலின்பத் துன்பம்ஞானம் இவை யணுவின் குறியாகும் இவற்றில் இச்சை, நச்சிநுகர்ந் தொரு பழத்தின் இனங்கண்டு முன்பு நான்நுகர்ந்த கனியினின மென்று நச்சல் பின்பு, மெச்சவெறுப் பாதிகளும் இப்படியே யாகும் இவைமுன்பும் பின்புமுணர்ந் திடுத லாலே, நிச்சய கர்த் தாவொருவ னுளனென்று நல்லோர் கிறுத்திடுவர் வெறுத் திடுவர் நின்னுடைய பொருளே. ௧௨௬

**(உரை)** ஆசை வெறுத்தல் தொழில்செய்தல் சுகதுக்கப்படுதல் அறிவு இவை முதலியவெல்லாம் ஆன்மாவின் குணங்களாம். இவற்றில் ஆசையாவது முன்னொருபழத்தை ஆசைப்பட்டு நுகர்ந்து பின்பு அதனை யொப்பதொரு கனியைக்கண்டு முன்புநானுகர்ந்த கனியின் இனம் ஈதென்று பின்பும் அதனை யாசைப்படுதல், ஒழிந்த வெறுப்பு முதலாயினவும்,இத்தன்மையேயாகும். அவ்விச்சாஞானக்கிரியை முதலாயினவற்றை ஆன்மா முன்பும் பின்பும் அறிகையாலே நிச்சயமாக ஆன்மா வொருவனுளனென்று சொல்லுவர் பெரியோர். நீ ஆன்மா இல்லையென்று சொல்லுஞ்சொல்லை அப்பெரியோர் தள்ளாநிற்பர்.

எப்பொருட்கும் இரந்தரமாய் இடங்கொடுத்து நீங்கா திருளொளிதா னன்றிஇரண் டினுக்குமிட வகையாய், ஒப் பில்குணஞ் சத்தமதாய் வாயுவாதி உதித்தொடுங்க நிற்கும்வா னுயிர்முன்னே சொன்னோம், செப்பிடுங்கா லம்பொழுது நாளாதி யாகித் திரிவிதமாய்த் தீமைநன்மை செய்யுந் திக்குத், தப்பில்குணக் குக்குடக்குத் தெற்குவடக் காதி தானாகித் திரியாதே நின்றுபலந் தருமே. ௧௨௭

**(உரை)** முன்னர் வானமும் ஆன்மாவுங்காலமுந் திக்கும் இல்லையென்ற புத்தனே! நீ கேட்பாயாக. எல்லாப்பொருளுஞ் செல்லுதற்கு வழியாய் இடங்கொடுத்து நீக்கமின்றி இருளும் ஒளியுமன்றாய் இரண்டும் நிற்கத்தக்கவிடமாய் உவமையில்லாத குணம் சத்தமாய் வாயுமுதலிய பூதங்கள்நாலுந் தோன்றி யொடுங்குதற்குத்தாரகமாய் நிற்கும்வானம், ஆன்மாவுண்டென்று முன்னமேசொன்னோம், சொல்லத்தக்க காலமானது காலையும் உச்சியும் மாலையுமென்னும் பொழுதாயும், நெருநல் இன்று நாளை என்னும் நாளாயும் மற்றுமுள்ளனவாயும், இத்தன்மையிலே மூன்றுவிதமாய் வேற்றுமைப்பட நன்மை

தீமைகளைச்செய்யும், திக்கானது கிழக்கு மேற்கு தெற்கு வடக்கென்று தவறில்லாததாய் அநாதியிலும் ஆதியிலும் உள்ளதாய்ப் பிறழாமல் அத்திசைகளை நோக்கிக் கன்மஞ்செய்தோர்க்குக் கன்மபலத்தைக் கொடுக்கும். ஆகையால், ஆகாசமும் ஆன்மாவும் காலமுந் திக்கும் உண்டென்றறிவாயாக. ருரு

காரியமாய் உலகெலாம் இருத்த லாலே கடாதிகள்போல் காரியகர்த் தாவொருவன் வேண்டும், ஆரியமாய் அறம் பொருளோ டின்பவீ டெல்லாம் அறைந்துயிர்கட் கறிவு செயல் அளிப்பதுநூல் அந்நூல், சூரியராய் உள்ளவர்கள் ஓத ஓதிக் கொண்டுவர லான்முன்னே குற்ற மின்றிச், சீரியபே ரறிவுடையோன் செப்ப வேண்டும் செயலினுக்குங் கரிவேண்டுஞ் சிவனுளனென் றறியே. கஉஅ

(உரை) கர்த்தாவும் நூலுமில்லையென்று கூறிய புத்தனே! பிரபஞ்சமெல்லாங் கடாதிகள்போலக் காரியப்பட்டுவருதலாலே இதனைச்செய்வானொருகர்த்தாவேண்டும். வடமொழியாய் அறம்பொருள் இன்பம் வீடென்னும் நான்கு காரியமுஞ்சொல்லி ஆன்மாவுக்கறிவையுஞ் செயலையுங் கொடுப்பது வேதாகமங்கள் காண்; அவ்வேதாகமங்கள் குசலராயுள்ள பிரமாதிகள் ஓதுவிக்க மகாவிருடிகளாலே ஓதப்பட்டு அவர்கள் வழியாகத் தொன்றுதொட்டு வருதலால் ஆதியிலே தவறின்றி மிக்க பெரிய அறிவையுடையோனாலே சொல்லப்படவேண்டும். அவ்வேதாகமங்களாற் சொல்லப்பட்ட கன்மத்துக்குக் காண்பானொரு சாட்சியும்வேண்டும். ஆகையாலே சிவனாலே நூல் சொல்லப்பட்டதென்றும் அவனே கர்த்தா என்றும் அறிவாயாக.

மரங்களுயி ரல்லவென்று மறுத்துச் சொன்னாய் வாடுதல்பூ ரித்தலால் மரங்களுயி ராகும், திரங்குநீர் பெறுதொழியிற் பெறிற்சிரத்தை சேரும் சீவனல எனினுலகில் சீவனெல்லாம், உரங்கொள்வ தூண்பெறிற் சோரும் ஊண்பெருவேல் உலர்ந்தமர நீர்பெற்று லுய்யாதுள் ளுயிர்கள், காந்தசினை முட்டைகட்கு வாயிலின்று வாயில் கண்டிலதேற் பூத்துக்காய்த் தெழல்மரங்கள் உயிரே. கஉகூ

(உரை) மரம்முதலியன உயிருள்ளன அல்லவென்று புத்த! நீ சொன்னாய். அவைமெலிதலாலும் பருத்தலாலும் அம்மரமுதலியவை உயிருள்ளனவாகும். மரம்முதலியன நீர்பெறாதொழியில் வாடுதலும் அந்நீர்பெற்றாற் பூரித்தலும் இயல்பு, சிரத்தைபெற்ற ஆன்மாவல்லவென்று நீகூறில், உயிருள்ளவற்றுக்கெல்லாம் ஊண் பெற்றாற் பருத்தலும் ஊண்குறைந்தால் மெலிதலுங் குணமாகையால் உலர்ந்தமரத்துக்கு நீரைவிட்டாற் பரிணமமில்லை யாதலான் மரம் முதலிய வுயிருடையவாம். அற்றன்று. மரம்முதலியனவற்றுக்கு இந்திரியங்களில்லையாகையால் உயிரல்லவென்று கூறின், ஆன்மாவை யுள்ளடக்கிநிற்கும் முட்டை சினை முதலியவற்றிற்குவாயில் தோன்றா வாறுபோல மரம்முதலியவற்றுக்கும் வாயில்தோன்றா. அம்முட்டை சினை முதலியவற்றுக்கு வாயில் பின்புதோன்றக்கண்டனம், இவற்றிற்கு வாயில்தோன்றக் கண்டதில்லையென்று கூறில், அம்மரம்முதலியனவற்றுக்கு இந்திரியங் கட்புலனாகாதாயினும் பூத்துக்காய்த்து வளர்தலுங் காண்டலால் இந்திரியமும் உயிரும் மரம்முதலியனவற்றுக்குண்டென்று அறிவாயாக. ௩௫

ஒருமரத்தின் உயிரொன்றேல் கொம்பொசித்து நட்டால் உய்யுமுயிர் ஒன்றுபல வாமோ வென்னில், கருமரத்தின் வித்துவேர் கொம்புகொடி கிழங்கு கண்கலந்து கொள்ளுமுயிர் அண்டம் வேர்ப்புத், தருபிறப்புச் சராயுசங்கள் சநநமும்பெற் றாற்போல் தானடையும் உற்பிச்சம் தலநடவா வென்னில், பெருநிலத்தில் காலிலார் நடப்பரோ பேதாய் பிறப்பின்விதம் அநேகங்காண் பேசுங் காலே. ௩௬0

(உரை) மரத்துக்கு ஆன்மா வுண்டாமாயின் ஒருமரத்தின் கொம்பை முறித்து நட்டால் அதனைப்போல வளர்தலால், ஒருயிர் பலவுயிராமோவென்று புத்த! நீ கூறில், மரத்தினுண்டாகிய வித்து வேர் கொம்பு இவற்றையும் பிறவற்றிற் கொடி கிழங்கு கணுக்கள் இவற்றையுங் கருப்பமாகக்கொண்டு ஆன்மாக்கள் தோன்றும். முட்டையிலுங் கசிவிலுந்தோன்றிய ஆன்மாக்கள்போல நடைபெற்று வித்திற்றோன்றும் மரம்முதலியன பூமியிடத்து நடைபெறாவாகையால் ஆன்மா அன்றென்று நீகூறில், சொல்லுங்காலத்துக் காலிலார் பெரிய

பூமியிடத்து நடக்கவல்லரோ அப்படியே இந்திரியக்குறைவான ஆன்மபேதம் அநேகமாகவுண்டு பேதையே. ௩௬

தின்னுமது குற்றமிலை செத்ததெனும் புத்தா தின்பை யெனக் கொன்றுனக்குத் தீற்றினர்க்குப் பாவம், மன்னு வதுன் காரணத்தால் தின்று தார்க்கு வதைத்தொன்றை இடாமையினால் வதைத்தவர்க்கே பாவம், என்னிலுனை யூட் டினர்க்குப் பாவஞ் சேர என்ன தவம் புரிகின்றாய் புலால் கட வுட் கிடாயோ, உன்னுடலம் அசுசியென நாணி வேறோர் உடலுண்ணில் அசுசியென உணர்ந்திலைகாண் நீயே. ௧௩௧

**(உரை)** தான் கொல்லுமது குற்றமுடைத்து; செத்தது தின்னு மது குற்றமில்லையென்று கூறும் புத்தா! நீதின்பையென்று கருதி உனக்கு ஒன்றைக்கொன்றூட்டினர்க்குப் பாவம் உன் காரணத்தா லுண்டாம். அஃதெங்ஙனமென்னில், தின்றுதார்க்குக் கொன்றூட் டுவாரில்லை யாகையால். என் காரணத்தாற் பாவமுண்டாகாது கொன் றவர்க்கே பாவமுண்டென்றுகூறின், உன்னைப் பரிந்தூட்டினவர்க் குப் பாவமுண்டாக நீ என்ன தவத்தைச் செய்கின்றாய். அஃதன்றி யும், நீ புலால் நுகருங்காலத்தே உன்கடவுளுக்கும் புலாலையூட்டுவை. அஃதன்றியும், உன்னுடம்பு சுத்தமில்லையென்று வெட்கி நீ பிற வூனை நுகருமது சுத்தமில்லையென்று அறிந்தாயில்லை. ௩௭

குடைநிழலும் கண்ணாடிச் சாயையும்போல் பிறப்புக் கொள்ளும்உணர் வென்னில்கா ரணமழிய அழியும், அடை நிழல்போல் கந்தமைந்தும் அழியுமுனக் கிங்கே அவையழிந் தால் அருங்கதியின் அணையுமுணர் வின்றாம், இடைகனவில் எழுமுணர்வு நனவுணர்வா றூற்போல் எழுமுணர்வு கன்மத் தால் நினைந்துகதி யென்னில், மிடைசினையும் அந்தனுமுட் டையுமுயிர்விட் டக்கான் மேவுவதென் பிறப்பினுடல் விடாது கன்ம வுணர்வே. ௧௩௨

**(உரை)** குடையின்கட் குடைபோல நிழல்தோன்றுந் தன்மை யும் கண்ணாடியிற் காட்டின வுருப்போல உருத்தோன்றுந் தன்மையும் போல இக்காயம்விட மற்றொருகாயத்தை எடுத்துக்கொள்ளுமென்று புத்த! நீ கூறின், குடையுங் கண்ணாடியுமாகிய காரணங்கெட அவற்

திற்பொருந்திய நிழலாகிய காரியங்கெட்டாற்போல, கந்தங்கள் ஐந்தும் உனக்கிவ்விடத்தேகெடும் ; அவைகெடவே, இந்திரியங் காரணமாகக் காரியப்படும்அறிவும் இங்கே யழியுமாகையால், காரணமாகிய கந்தங்கள் ஐந்தும் அழிந்தால் அரியகதியையடையும் அறிவில்லையாம். கனவிடையெழும் அறிவு மெய்யறிவாய்ப் பரிணமித்தாற்போல, கன்மங்கட்கீடாக நினைந்துண்டாமுணர்வு கதியிற்கூடுமென்று நீகூறின், இந்திரிய அறிவுகெட்டால் தம்மினெருங்கிய சினையும் பிறவிக்குருடனும் முட்டையும் உயிர்போனாற் பெறுங்கதியாது. அதனால், பிறப்பினுடலைக் கன்மவுணர்வு விடாது.

சன்மவுணர்வென்பது - ஆன்மஞானம். சினையும் அந்தகனும் முட்டையும் பூர்வகன்மத்துக்கீடாகத் தொழின்மறந்து கிடக்கையாற் கதியடையாவென்பதாயிற்று. கதியென்றது - நற்பிறப்பு. ௩௮

ஐந்துகந்தம் சந்தானத் தழிதல்பந்த துக்கம் அறக்
கெடுகை முத்தியின்பம் என்றறைந்தாய் கந்தம், ஐந்துமழிந்
தால்முத்தி அணைபவர்யா ரென்ன அணைபவர்வே றில்லை
யென்றாய் ஆர்க்குமுத்தி யின்பம், ஐந்தினுணர் வினுக்கென்
னில் அழியாத உணர்வுண் டாகவே அவ்விடத்தும் உருவாதி
கந்தம், ஐந்துமுள வாமதுவும் பந்த மாகி அரந்தைதரும்
முத்தியின்பம் அறிந்திலைகாண் நீயே. ௧௩௩

(உரை) கந்தங்கள் ஐந்துந் தொடர்ச்சியிலே சேட்டை கெடுதல் பந்ததுக்கமென்றும் அவை கர்ப்பூரதீபம்போலச் சேரக்கெடுகை முத்தியின்பமென்றும் புத்த ! நீ கூறினாய், கந்தள் ஐந்துங்கெட்டால் முத்தியிற்செல்வார் யாரென்றுழிச் செல்வாரொருவருமில்லையென்று கூறினாய். முத்திபெறுவாரில்லையாயின் முத்தியின்பம் யாவர்க்கு ? கந்தங்கள் ஐந்திற்றோன்றும் அறிவிற்கென்று கூறின், மனத்தால் அறியுமறிவு கெடாதிருக்குமாயின், அவ்விடத்திலும் உருவம் வேதனை குறிப்பு பாவனை விஞ்ஞானமென்னுங் கந்தங்கள் ஐந்தும் உண்டாதல் வேண்டும். அவை யுண்டாகவே, முத்தியிடத்திலும் பந்ததுக்கமுண்டாய்க் கிலேசத்தையுந் தரும்; ஆதலால், நீ மோக்ஷசுகத்தை அறிந்திலை அதனைக் கேட்பாயாக. ௩௯

அநாதிமுத்த னப்பரனாய் அசலனாயெல்லா அறிவு
தொழில் அநுக்கிரக முடையஅரன் கன்மம், நுனதிகமற்

ளொத்தவிடத் தேசத்தி நிபாத நுழைவித்து மலங்களெல் லாம் நுங்க நோக்கி, மறுதிகர ணங்களெல்லாம் அடக்கித் தன்னை வழிபடுநல் லறிவருளி மாக்கருணைக் கையால், இறுத பிறப் பினில்நின் று மெடுத்து மாறு இன்ப முத்திக் கேவைப் பன் எங்கள் முத்தி யிதுவே. ௧௩௪

**(உரை)** அநாதியிலே மலரகிதனாய் எப்பொருட்குமேலாய்ச் சலநமில்லாதவனுமாய்ச் சர்வஞ்ஞத்துவமுஞ் சர்வகிருத்தியமுஞ் சர் வாநுக்கிரகமும் உடையனாகியபரமேசுவரன் ஆன்மாக்கள்செய்த புண் ணியபாவ மிகுதி குறைவறத் துலையொத்தவிடத்து அருட்சத்திபநி வித்துக் குருமூர்த்தியா யெழுந்தருளி மலங்கள்கெடத் திருக்கண் சாத்தியருளி மநமுதலாகிய வுட்கரணங்களையும் இந்திரிய முதலாகிய புறக்காரணங்களையுங் கெடுத்துத் தன்னை வழிபடு நால்வகையாகிய வழிபாட்டையுமருளி மிகுந்த காருண்ணியக் கையாலே பொல்லாப் பிறவிக்கடலில் வீழாமலெடுத்து ஒழியாத இன்ப முத்திக்கரையிலே வைத்தருளுவன் ; இதுவே எங்கள் முத்தியாகையால், நீயும் இவ் வழியினின்று முத்தியின்பத்தை அநுபவிப்பாயாக.

நூனுதிகம் - நுனுதிகமென விகாரப்பட்டது. ௪௦

---

## யோகாசாரன் மதம்

போதமே பொருளாய்த் தோன்றும் பொருளதாய் எழ லாற் போதம், வாதனை அதனாற்கூடி வருதலால் வடிவி லாமை, ஆதலாற் கனவே போலும் சகமுள தறிவே யாமென்(று), ஓதினான் ஓதா னாய உணர்வினால் யோகா சாரன். ௧௩௫

**(உரை)** அறிவே இந்திரியங்களுமாய்த் தோன்றப்பட்ட உருக் களுமாய் வருதலானும், அவ்வறிவு இந்திரியவாதனையினாலே கூடி வருதலானும், அவ்வறிவு அரூபமாதலானும், அநித்தியரூபமாகிய பிர பஞ்சம் சொப்பனம் போலும். யோகாசாரன் சாத்திரத்தை உண ராத அறிவினாலே சௌத்திராந்திகளில் வேறுபட்டு இந்திரியவாத னையால் அறிவுண்டாமென்றும் பிரபஞ்சங் கனவேபோலும் என்றும் அறிவேயுள்ளதென்றுங் கூறினான். ௧

---

# யோகாசாரன் மத மறுதலை

போதமுந் தவிர வேறோர் வாதனை புகன்றாய் போதம்
வாதனை இரண்டுண் டென்றாய் போதவா தனையும் என்னிற்
காதலாற் பொருளி னோடு கலந்தபின் எழுங்க ருத்தாம்
வாதனை கனவு கண்ட பொருளின்மேல் வருங்க ருத்தே.

(உரை) யோகாசார! நீ அறிவொழிய வேறொரு வாதனையுண் டென்று சொன்னாய். அப்படியாயின், போதமென்றும் வாதனை யென்றும் இரண்டுண்டென்று கூறாய். வாதனைதானும் அறிவே யென்று கூறின், அறிவு சத்தாதிவிடயத்திலே கலக்க வேண்டுமென் னும் இராகத்தாற் கலக்க அக்கலப்பிலே பலகாற்கருத்தைச் செலுத்து தலே வாதனை; ஆகையால், வாதனை அறிவன்று. கனவானது நன விற் கண்ட பொருளின்மேற் கருத்தைச் செலுத்துவதாதலாற் பிரபஞ் சங் கனவுமன்று; அதனால், நீ கூறியது மித்தையேயாம். க

அறிவதே பொருள தாயின் அகம்சடம் என்ன வேண்டும்
பிறிபொரு ளாகும் பேதித் திதம்பிர பஞ்ச மென்னில்
உறுபொருள் உருவந்தோய்ந்தால்உணர்வுமவ்வுருவாய்நிற்கும்
செறிபொரு ளதுவாய் நிற்கும் தெளிபளிங் கதுவேபோல.

(உரை) யோகாசார! நீ கூறிய அறிவுதானே பிரபஞ்சரூப மென்று கூறின், நான் உடம்பென்று சொல்லவேண்டும். அறிவும் உருவும் வேறுபாட்டையுடைத்து. அறிவும் உருவும் வேறுபாட்டை யுடைத்தாமென்னில், உருவை நீங்கிநின்ற அறிவுதானே நான் பொருளென்று கூறும் பகுதியாம். அறிவு உருவத்தோடு கூடினால் அவ்வறிவு உருவந்தானாய் நிற்கும்; அஃதென்போல என்னில், அடுத்த வன்னத்தோடு கூடிய பளிங்கு அவ்வன்னந்தானாகத் தோன்றுமா போல. உ

## மாத்தியமிகன் மதம்

அவயவம் பொருளாய்த் தோன்றும் அவயவம் ஒழிந்தாற் பின்னை, இவைபொரு ளென்ன வேறொன் றிலாமை யாற் பொருள்கள் இன்றாம், அவைபொருள் இலாமை யாலே அறிவுமின் றாகு மென்று, நவைதரு மொழியி னாலே நவிலு மாத் தியமி கன்றான். கந௲அ

**(உரை)** இந்திரியம் பத்தும் பொருளாய்த்தோன்றும், இந்திரியங்கள் கெட்டாற் பின்பொருள் இவையென்றறிதற்கு ஒன்றுமில்லாமையாற் பொருளு மில்லையாம். அந்தப் பொருள்களில்லாமையினாலே பொருளைக் கூடிநின்றறியும் அறிவுமில்லையாம், என்றிப்படிக் குற்றத்தைத்தருஞ் சொல்லாலே மாத்தியமிகன் சொல்லுவான் : க

---

## மாத்தியமிகன் மத மறுதலை

கடத்தினில் அவயவங்கள் படத்தினில் புகாமற் காத்தும், படத்தினில் அவயவங்கள் கடத்தினிற் புகாமற் கொண்டும், இடத்தினில் நிற்கும் ஆகும் அவயவி இரண்டுங் கூடி, உடைத்தொரு பொருளுண் டாகப் பொருளுமுண் டுணர்வும் உண்டே. கந௲கூ

**(உரை)** மாத்தியமிக! நீ அவயவமே பொருளாவது அவயவியில்லையென்று கூறினாய்; கடாதிகளின் அவயவங்கள் படாதிகளிற் செல்லாமை நீக்கிக்கொண்டும், படாதிகளின் அவயவங்கள் கடாதியிற் செல்லாமை நீக்கிக்கொண்டும், அவ்வவ்வவயவங்களிலே அவ்வவ்வவயவி நிற்குமாகையால், அவயவமும் அவயவியுங் கூடியே ஒரு பொருளாக வுண்டாவது, அப்படி யுண்டாகவே அதுபோலப் பொருளாகிய சரீரமும் உண்டு உணர்வும் உண்டென்று அறிவாயாக.

கடாதிகட்கு அவயவி மண். படாதிகட்கு அவயவி நூல். பொருள் - அவயவம், உணர்வு - அவயவியாகிய ஆன்மா. க

கருவியும் ஒளியும் வேறு கருதிடுங் கருத்தும் நிற்கப்
பொருள்புண ராமை யாலே போதம்வந் தெழுவ தின்றாம்

மருவிடும் பொருளுண் டாக வந்தெழும் புந்தி யானல்
பொருளுள தாகு மாகப் போதமும்உள்ள தாமே. ௧௪௦

(உரை) இந்திரியங்களும் இந்திரிய விடயமாகிய சத்தாதிகளும் அவற்ருற் காணப்படும் பொருள்களை வேறுபட ஆராயும் அந்தக் கரணங்களுமுண்டாய் நிற்கவும் ஆன்மாவந்து கூடாததுகொண்டு ஒருபொருளையுந் துணிந்தறியும் அறிவில்லையாம். இந்திரிய விடயங் களோடும் அந்தக்கரணங்களோடுங் கூடிநின்றறியும் ஆன்மாவுண்டாக அறிவுமுண்டாமாகையால் ஆன்மாவுண்டாகும். அஃதுண்டாகவே அறிவுமுள்ளதாம். (இவ்விடத்துப் பொருளென்றது - ஆன்மாவை.)

---

## வைபாடிகன் மதம்

அரிசனம் நூறு கூட வருணம்வந் தெழுந்தாற் போல
விரிசகம் பொருள்கள் ஞானம் விரவிட மேவித் தோன்றும்
தெரிசன மிதுவே யென்று தெளிந்திடும் தேரர் வீடு
பரிவொடும் அடைவீ ரென்று பகரும்வை பாடி கன்ருன்.

(உரை) மஞ்சளுஞ் சுண்ணும்புங் கூட ஒரு சிவப்புநிறந் தோன் றுமாபோல, காணப்பட்ட பொருள்களும் இந்திரிய விடயமான அறி வுங் கூடினபோது பிரபஞ்சப்பொருள்கள் பொருந்தித்தோன்றும். இதுவே ஞானதரிசனமென்று தேறுவீராக. அப்படித் தெளிந்தீரா யின், புத்தர் வீடுதரும் இன்பத்தை அடைவீரென்று பரிவோடுஞ் சொல்லாநிற்பன் வைபாடிகன். ௧

---

## வைபாடிகன் மத மறுதலை

பொருளது புறம்ப தாகும் போதம்அந் தரம தாகும்
தெருளிடின் இரண்டுஞ் சென்று சேர்ந்திடு மாற தின்ரும்
அருவுணர் உருவ தேய மாதலி னுலுங் கூடா
உருவரு வுடைய வைபா டிகற்கினி மாற்றம் இன்றே. ௧௪௨

(உரை) அறியப்படும்பொருள் புறத்ததாகும்; அறியுமறிவு அகத்த தாகும்; ஆதலால், தெளிய அறியுமிடத்து இரண்டுஞ்சென்று கூடுந் தொழிலில்லையாம். அன்றியும் ஞானமாகிய அறிவு அருபமாகை

யாலும், ஞேயமாகியபொருள் உருவமாகையாலுங் கூடா. உருவும் அருவுங் கூடுமென்ற வைபாடிகனுக்கு இனிச்சொல்லும் உத்தரமில்லையாம் (பொருள் - பிரபஞ்சம், ஞேயமுமது.) உ

---

## நிகண்டவாதி மதம்

**வா**ச மாமலர் அசோகு பேணிமறை நீதி யோடுமலையுந்தவத்(து), ஆசை யாலுடை அகன்று மாசினை அடைந்தில் வாழ்தரும் அறத்தினில், பாச மானது தவிர்ந்து பண்டிபட வுண்டு பாயிஞெடு பீலிமேல், நேச மாயவை தரித்துளோர்களின் நிகண்ட வாதியை நிகழ்த்துவாம். ௧௪௩

**(உரை)** மணமும் வண்டும் பொருந்திய மலர்களையுடைய அசோக விருட்சத்தைத் தெய்வம்போலப்பேணி வேதமார்க்கத்தோடு மறுதலைப்பட்டுரைக்குந் தவத்தினை ஆசைப்பட்டு உடுக்கையைக் கைவிட்டுக் குளிக்குந் தன்மையின்மையின் அழுக்கடைந்து பிரமசரிய முதலாகிய ஆச்சிரம மூன்றுக்கும் பற்றாயிருக்கிற கிருகத்தாச்சிரமத்தை விட்டு வயிறுபெருக்கவுண்டு பாயுடுத்துப் பீலி கைப்பிடித்து இங்ஙனஞ் சொல்லியவற்றிலே சிநேகமாய் அவற்றைத் தரித்துள்ளோர்களின் நிகண்டவாதிமதத்தைச் சொல்லுகின்றேம்.

கண்டம் - உடை. நிகண்டம் - உடையின்மை. அஃது க்ஷமணரில் நிகண்டவாதி எனக்கொள்க. ஆசீவகர்க்கு உடையுளதாம். மறை நீதியோடு மலையுந்தவம் - எக்கியாதி, கர்மம், கர்த்திருவாதம், பஸ்ம ருத்திராக்ஷம் முதலியவைகளை நீக்கிய கன்மம். ௧

ஈறி லாதன அநந்த ஞானமுதல் எண்கு ணங்களெனும் ஒண்குணம், மாறி லாதமதி மேவு சீதமென மன்னி வானவர் வணங்கவே, வேறு லாவுகுண ஞானஆவரணி யாதி எட்டினையும் விட்டசீர், ஏறு பான்மையுடை நீடு வாழ்அருகன் எங்க ளுக்கிறைவன் என்றனன். ௧௪௪

**(உரை)** கேடில்லாதனவான அநந்தஞானமுதலிய நற்குணம் எட்டையும் கோணுத மதிக்குக் குளிர்ச்சி தன்னிடத்திலே தோன்றினுலொப்பத் தோற்றுவித்து, அந்த நற்குணங்களோடு கூடாது பரந்த

தீக்குணங்களென்று சொல்லப்பட்ட ஞாஞவாணிய மாதியாகிய எட்டுக்குணங்களையும் விட்ட அழகினையும், இந்திராதிதேவர்கள் போற்ற மிக்க பான்மையையுடைத்தாய் செடிது வாழ்கின்ற அருகபரமன் எங்கள் கர்த்தாவென்று கூறினன்.

நற்குணம் எட்டாவன—அநந்தஞானம், அநந்ததரிசனம், அநந்தவீரியம், அநந்தசுகம், நிர்நாமம், நிர்க்கோத்திரம், நிராயுஷியம், சம்மியதாபாவம் என்பன. சம்மியதாபாவம் - அழிவின்மை. ஞாஞவர்ணியம் எட்டாவன—ஞாஞவர்ணியம், தரிசஞவர்ணியம், வேதநீயம், மோகநீயம், ஆயுஷியநாமம், கோத்திரநாமம், ஆயவந்தராயம், காயவந்தராயம் என்பன. இவையே தீக்குணங்களென்றும் பெயர்பெறும். சீரேறுபான்மை யென்பது - நின்மலத்துவ முதலியன. உ

கருவி கண்படு தொடக்கொ ழிந்துவரு கால மூன்றின்
நிகழ் காரியம், பெருக நின்றொருகணத்திலேஉணர் பெருந்த
வக்கடவுள் பீடிஞல், மருவி நின்றுவழி பட்ட வர்க்கும்மலை
வுற்ற வர்க்கும்மனம் ஒத்திடும், குரிசிலெங்களிறை யென்று
பின்னுநிகழ் குற்ற மின்மையது கூறுவான். கசரு

(உரை) இந்திரியவிடயத்தால் வருந்தொடக்கைத் தன்னிடத்து நின்றுங் கைவிட்டுப் பெருங்காலமுதலாக மூன்றுகாலத்திலும் உள்ள காரியங்களை மிகவும் ஒரு கணமாத்திரத்தாலே அநந்தஞானத்திலே அறியத்தக்க பெரிய தவத்தையுடைய தேவன், தனது பெருமையினாலே பொருந்தநின்று வழிபாடு செய்தவர்க்கும் மாறுபட்டவர்க்கும் ஒருநீர்மையான தலைவன், எங்கள் சுவாமியென்றுகூறி அவனுக்குக் குற்றமில்லாத தன்மையைப் பின்னுஞ் சொல்லுவான். மனமொத்திகை - சமதரிசனமாகை. ரு

பசித்தல் தாகபய செற்றமோடுவகை மோக சிந்தனை
பழித்தனெய், நசித்தல் வேர்வினெடு கேத மோடுமதம்
வேண்ட லீண்டதி சயித்தலும், புசிப்பு வந்திடு பிறப்பு றக்க
மிவை விட்டொ ரட்டகுண பூதனுய், வசித்த வன்னுலகின்
மேலிருந்தொருசொல் இகல ஞுக்கருளுடம் என்றனன். கசகூ

(உரை) பசித்தல் - பசித்தல்,—தாகம் - ஆசை,—பயம் - அச்சம்,—செற்றமொடு - மாற்சரியம் ஆகிய இவற்றுடனே,—உவகை -

ஒன்றன்மேற் பிரியப்படுதல்,—மோகம் - மயக்கம்,—சிந்தனை - ஒன்றைச்சிந்தித்தல்,—பழித்தல் - ஒன்றை நிந்தித்தல்,—நோய் - வாத பித்த சிலேஷ்மம்,—நசித்தல் - சாதல்,—வேர்வினெடு - வியர்வோடும்,—கேதமோடு - கிலேசப்படுதலோடும்,—மதம் வேண்டல் - கர்வத்தைவிரும்பல்,—ஈண்டு அதிசயித்தலும் - இவ்விடத்து அதிசயப்படுதலும்,—புசிப்பு - உணவு,—வந்திடு பிறப்பு - ஜநித்தல்,—உறக்கம் - மூவகை நித்திரை,—இவைவிட்டு - ஆகிய இவை பதினெட்டையும் முற்றக்கைவிட்டு,—ஓரட்டகுண பூதனாய் - அநந்த ஞானமாதியாகச் சொல்லப்பட்ட எட்டுக்குணங்களையுடையனாய்,—வசித்தவன் உலகின்மேல் இருந்து ஒருசொல் இகலனுக்கு அருளுமென்றனன் - உலகத்துக்கு மேலாகிய பொன்னெயில் வட்டத்திருந்து சித்தபரமேட்டிகள் கேட்டதொரு சொல்லினுக்கு உத்தரமருளுமென்று கூறினான்.

பிறப்பு - தேவ மநுஷிய நரக விலங்கென நால்வகை. மூவகை நித்திரையாவன—நித்திராநித்திரை,பிரசலாப்பிரசலே,நிக்கிரககதி அனுக்கிரக கதியென்க. இதற்கருகன்கூறிய சொல்லாவது—பொன்னெயில் வட்டத்திருக்கிற சித்தபரமேட்டி என்னும் சகலாத்தரை இகலாத்தர் "தன்மம்பகவ" என்றுகேட்க, முரசுதாக்கச் சத்தங் கிளம்பினாற் போல வொருசொல் "பஞ்சாஸ்தமயம்" என்று சகலாத்தர் சொல்ல, இதுகொண்டு விசாரித்தான் எனக்கொள்க. ௬

அந்த வாய்மொழியி னால்அவன்சரண மாதி யோகமுத லானநூல், இந்த மாநிலம் மயங்கி டாதவகை இங்கி யம்பினன் இதன்பொருள், வந்த காலமுயிர் தன்ம தன்மிஅறம் மற்றும் விண்மருவு புற்கலம், பந்தம் வீட்டினெ டாதியா யிவை படைப்ப தின்றியுள பத்துமே. ௧௪௭

(உரை) அந்தப் பஞ்சாஸ்தமயமாகிய வாக்கியத்தினாலே அந்தச் சித்தபரமேட்டி சரணமாதியாகிய யோகமுதனூலே இப்பெரிய நிலத்துள்ளோர் மயங்காதவகை இவ்விடத்துச் சொன்னான். இந்தநூலிற் கூறியபொருள், உண்டானகாலம் ஆன்மா தன்மம் அதன்மம் புண்ணியம் பாவம் ஆகாசம் அணுவாய்த்திரண்டான்மத்தன்மை பொருந்தின புற்கலம் பந்தம் வீட்டோடுகூடப் பத்தும் ஒருவராற் படைக்கப்படாததாய் அநாதியே யுள்ளனவாம். தன்மமென்பது-தன்மாத்திகாயத்தை.

தன்மியென்பது - அதன்மாத்திகாயத்தை. சரணம்—ஆதிசரணம், சித்தசரணம், ஆசரியசரணம், தன்மசரணம் என நான்கு. மற்றுள்ளனவுங் கொள்க. ௫

நிற்ற லோடுதலை போதல் அன்மையை நிகழ்த்து நீடு வெதி ரேகமும், உற்ற தாம்இவை கணத்தி லேமருவி உள்ள வாபுரியு மாறுதான், கற்ற காலமள வெய்தி வாழுமுயிர் காய மேவிநிறை வானதே, பெற்று வேறுவரு தன்மை நேரறிவு பெற்ற தாகியுள பேசிலே. ௧௪அ

(உரை) அராதிப்பொருள் பத்திலே காலமானது நிகழ்காலமும் இறந்தகாலமும் இவையல்லாமையை விளக்காநின்ற நிலைபெற்ற எதிர் காலமுமாகிய மூன்றையும் பொருந்தியதாம். அன்றியும் இம்மூன்று காலத்தையும் ஒருகணப்பொழுதிலே பொருந்தியுண்டான தகுதியைச்செய்யுந் தொழிலையும் அந்தக் காலங்கற்றதாம், அக்காலத் தெல்லையைப் பொருந்திவாழும் ஆன்மாவானது சரீரியாய் அந்தச் சரீரமுழுதும் நிறைந்த தன்மையைப்பொருந்திப் பால தருண விருத்த அவத்தைகளினும் வேறுவேறாகவருந் தன்மையோடு பொருந்தின அறிவு பெற்றதாகியுள்ளதாம் சொல்லுங்காலத்து. ௬

பரந்து மீதுதரு மாத்தி காயம்அழி வித்து அநித்தமது பண்ணிடும், நிரந்து கீழதரு மாத்தி காயமது நித்த மாய்மிக நிறுத்திடும், புரந்த புண்ணிய மிதற்கு நன்மைபுகல் பாவ மானவது தீமையே, தரும்பொ ருட்கிடம தாகும் வானமிகு புற்க லன்களவை சாற்றுவாம். ௧௪௧

(உரை) விரிந்து மேலாகிய தன்மாத்திகாயமானது பூதகாயத்தை மேலும் எடாதபடி அழிவித்து அதனை அநித்தியத்தைச் செய்யும், நிரைபட்டுக் கீழாகிய அதன் மாத்திகாயமானது பூதகாயத்தோடு கூடி நித்தமாய் மிகவும் நிலைபெறுவித்திடும், மன வாக்குக் காயங்களாற் செய்யப்பட்ட புண்ணியமானது இத்தன்மாத்திகாயத்தைத் தருவதற்கு நன்மையாம். சொல்லப்பட்ட பாவமானது தீமையேதரும் அதன்மாத்திகாயத்துச் கேதுவாம். எல்லாப்பொருட்கும் இடங்கொடுத்து நிற்கும் ஆகாயம், இதனிடத்தில் தோன்றும் புற்கலப் பொருளை மேலே சொல்லுவாம்.

தன்மாத்திகாயமாவது - புண்ணியத்தால் எடுக்கும் தேகம். அதன் மாத்திகாயமாவது - பாவத்தால் எடுக்கும் தேகம். எ

ஏணும் ஒன்றுடைய வாகி எங்கும்அணுவாய் இரும்புகல் மரங்களும், பூணும் அங்குருவெ லாமு மாகுமிவை புற்க லப் பொருள்கள் என்னலாம், காணும் அங்கறு வகைத்தொ ழில் களவை கட்டு விட்டநெறி கன்மமேல், மாண நின்றுவரு மாறி மாறிமுன் வகைந்த துண்டுவிட மாட்சியே. ௧௫0

**(உரை)** ஒரு வலியுமுடையவாய் எவ்விடத்திலும் உருவமாய்த் திரண்டு இரும்பு கல்மரங்கண் முதலியனவுமாய் இவை யொழிந்தெடுத்துக் கொள்ளப்பட்ட உருக்களெல்லாமுமாய்த் திரியக்கணுபூர்வமென்னும் ஆன்மப் பெயரையுமுடையவாய் நிற்கும்; அவற்றைப் புற்கலப் பொருளென்று சொல்லலாம். பொல்லாங்காய்க் காணப்பட்டுள்ள அறுவகைத்தொழில்களே பந்தம், அப்பந்தத்தைவிட்ட ஒழுங்கே தவம். அத்தவந்தான் உடல் மேன்மேல்வருந் தவமாட்சிமையுண்டாய் நிலைபெற்று வர்த்திக்கும் ஆன்மாவுக்கு முன்பே புசிப்பதாக வுண்டாகப்பட்ட புண்ணியபாவங்கள் தொலையப்புசித்து விட்டமாட்சிமையே வீட்டைத்தரும்.

அணுபூர்வமாவன—தெய்வகதியாவைபூர்வம்,மனுஷியகதியாவைபூர்வம், நரககதியாவைபூர்வம், பக்ஷிமிருககதியாவைபூர்வம், திரியக்காதியாவைபூர்வம் எனவிவை. இவற்றுள் திரியக்காதியாவைபூர்வம் - புற்கலப்பொருள். அறுவகைத்தொழிலாவன—கந்தம், ரசம், ரூபம், பரிசம், சத்தம், பரிணமம் எனவிவை. காமாதி யறுவகையுமாம். அ

---

## நிகண்டவாதி மத மறுதலை

அருக னுக்க னந்த ஞான மாதி ஆதி யாகவே
பெருக நிற்றல் சீதம் மாம திக்க டைந்த பெற்றியேல்
ஒருவும் இட்ட ஒப்ப வன்னு யிர்த்தி றத்தி னுள்ளபின்
மருவு மிக்க குற்றம் மேல் அறத்தின் மன்னி னெனில்.

**(உரை)** அருக பரமனுக்கு ஞானவரணியமாதியாகிய தீக்குணங்களெட்டு நீங்கப்பட்டு, அனந்தஞானமாதியாகிய நற்குணங்களெட்டுஞ் சந்திரனுக்குச் சைத்தியம்போல இடையேயுண்டாமென்று கூறி

ஞய் ; அஃதுவே முறையாயின், நீகூறிய உவமையின் நீங்கப்படும் ; அஃதெங்ஙனமென்னில், கர்த்திருகுணமின்றியே சிலகுணத்தை விட்டுச் சிலகுணம்வந்து கூடிற்றென்பது ஆன்மகுணமாகையால், அவனும் ஆன்மகுணத்தை யுடையவனுவன்; ஆகவே விடப்பட்ட தீக்குணங்கள்எட்டும் முன்புண்டாய்விட்டவாம். அற்றன்று, அவன் ஞாஞவரணியமாதியாகிய குணங்களைநீங்கி அநந்த ஞானமாதியாகிய குணங்களைக் கூடுதன்மேலான அறத்தின்கண்ணே பொருந்தின னுகையாலெனில். க

அறத்தின் மன்னு வித்தவன் ஒருத்த ஞய் அவன்அறத்
திறத்தி னிற்றல் மற்றொ ருத்த ஞல்வி ளைந்த செய்தியாம்
மறத்தின் அற்ற வர்க்கெ லாம்வ ணக்கம் உன்இறைக்குமேற்
பிறக்கு மிங்க வத்தை கொண்ட தாரை யின்று பேசிடே.

(உரை) அவன் அத்தருமத்திஞலே பொருந்திஞுயின் அத் தன்மத்திலே நிலை பெறுவித்தவன் ஒருவனுளஞய் அவனுற கூறப் பட்ட தன்மநெறியிலே நிற்குந்தகுதி ஒருவன் கற்பித்ததொழிலை ஒருவன்செய்த செய்தியாம். கொலையை நீங்கினவர்க்கெல்லாம் வணக்கமாகப்பட்ட உன்கர்த்தாவுக்கு மேலுமொருவனுளன் என்ப தோர் எல்லையுண்டாமாகையால், முன்னர்க் கூறியவனையோ, அவன் கீழ்நின்றிந்திரியத் தொடக்குப்படாமல் தவஞ் செய்தவனையோ, நீ கர்த்தாவாகக் கொண்டது யாவரையென்று இப்போது சொல் வாயாக. உ

கருவி தன்தொ டக்கொ ழிந்து கண்டு வாழு மென்றியேல்
உருவு கொண்டு நின்ற தென்னில் உண்டு தான்ம நாதிகள்
ஒருவி நின்ற தென்னில் அத்த மொன்றையும் உணர்ந்திடான்
பொருள்தெ ரிந்து போகை கால மொன்றி லேபுணர்ந்திடான்.

(உரை) உன் கர்த்தாவாகிய அருகபரமன் மனுதிகளாகிய கருவி களினின்று அறியுமறிவை நீங்கிச் சர்வமுங் கண்டிருக்குமென்று கூறி ஞய். அப்படியாயின், அவனைச் சரீரம் பொருந்தி நின்றதென்று கூறின் மனமுதலாகிய கருவிகளுண்டாம். அவையொழிந்து காண டற்கு வழியுமில்லை; அவனைச் சரீரநீங்கி நின்றதென்று கூறின், அவன் எல்லாவற்றையுங் கண்டு வாழுமென்று சொல்லுதலும் மித்

தியாவாதமாய் மற்றொன்றையும் உணர்ந்ததில்லையாவன். ஒரு பொருளை அறிதற்குக் கருவியான மூன்று காலத்தையும் ஒருகாலத்திலே உணருந்தன்மையனும் அல்லன். கூ

ஆர்வ கோப மான வைஅ டைந்தொ ழுப்ப வர்க்கெலாம்
சேர்வ தின்மை செப்பில் இன்று சீவன் மேவு காயமால்
ஒரு மன்னர் போல வேஉ யிர்க்க ளித்த லென்றியேல்
ஏர்கொள் பொன்எ யிலிடத்தி ருத்தல் பெற்ற தென்கொலோ.

(உரை) காமக்குரோத முதலியவற்றோடுங் கூடி அக்கூட்டுறவு தீதென்றறிந்து நீக்கப்படுவார்க்கெல்லாம் இன்று முத்தியடைதலில்லையாம்; சொல்லுமிடத்து உன்அருக பரமனுஞ் சீவனோடுகூடின காயமுடைமையால். அற்றன்று, க்ஷத்திரிய தன்மமான சாத்திரத்தை ஆராய்ந்த ஒப்பற்ற அரசரைப்போல உயிர்க்குத் தலையளி செய்தலே அருகபரமனுக்கு முறைமையென்று கூறுவையாயின், அவ்வரசரைப் போலத் துஷ்ட நிக்கிரகமுஞ் சிஷ்டபரிபாலனமுஞ் செய்யவேண்டும். அவ்வரசரைப்போல ஒரு நிலத்திலிருந்து துஷ்ட நிக்கிரகமுஞ் சிஷ்டபரிபாலனமுஞ் செய்யாது அழகிய பொன்னெயில் வட்டத்திருக்கப் பெற்றதியாது. அதுவுமன்றி "மருவி நின்றுவழிபட்டவர்க்கு மலைவுற்றவர்க்கு மனமொத்திடுங் குரிசில்" என்று நீ முன்னர்க் கூறுகையானும் அரசர் இவ்வுலகத்திருத்தலானும் உன்னருக பரமன் அரசரையொக்குந் தன்மையும் உடையனல்லன். ச

சொல்ல தொன்று கொண்டி கலின் ஆத்தன் நாட வேசொலின்
இல்லையாம் மநாதி தான் இயம்பு மாற தெங்ஙனே
நல்ல வாம் மநாதி தான் அவர்க்கு நாட வேயிலை
ஒல்லை ஊமர்ஊம ருக்கு ரைத்த வாற தொக்குமே. கருரு

(உரை) உன் அநாதி அருகபரமனாகிய சகலாத்தன் ஒரு சொல்லைக்கொண்டு ஆதி அருகபரமனாகிய இகலாத்தன் கேட்க மாறுபாடில்லாத பொருளைச் சொன்னானென்று கூறின், உன்னாதி அருகபரமனுக்கு மநாதிகளில்லையென்று நீ கூறுகையால் அநாதி அருகபரமனுடன் ஒரு சொற்கேட்டுப் பலவிதமாக நூல் சொன்னபடி எப்படி? அஃதன்றியும், உன்னாதி அருகபரமனுக்கு நன்றாகிய மநமுதலாகிய கருவியும் அறிதற்கில்லையாகையால் அவன் கேட்டபடி எப்படி,

அநாதி அருகபரமன் ஒரு சொற்சொல்ல அதனை ஆதி அருகபரமன் கேட்டுப் பலவிதமாக நூல்செய்தானென்று நீ சொல்லுமது, ஊமர் சொல்லவூமர் கேட்டு நூல்செய்தாரென்னுந் தன்மையை யொக்கும்.

இன்ப பூமி சேரி கலில்நாதன் இவ்வி ருநிலத்
துன்பம் ஆங்கு ணர்ந்திடாமை இங்கு வந்த சொல்லிடான்
இன்ப பூமியில் இருந்தி ருந்தி யாவும் எய்திடில்
துன்ப பூமி யாமுணர்ந்து சொல்ல வல்ல தில்லையே. கரு௬

**(உரை)** புண்ணிய பூமியாகிய பொன்னெயில் வட்டத்திருக்கிற மாறுபாடில்லாத அநாதி அருகபரமன் இப்பெரிய பூமியிடத்துண்டாகிய துன்பங்களை அறியானுகையாலும் மநாதிகள் இல்லை யாதலானும் இப்பூமியில்உண்டானவற்றை இப்படிச் சொல்லென்று சொல்ல மாட்டான். புண்ணிய பூமிப் பொன்னெயில் வட்டத்திருந்து அநாதி அருகபரமன் பூமியில் துன்பம் யாவையுமறிந்து சாத்திரஞ் செய்யச் சொன்னுனென்று சொலின், புண்ணிய பூமியாகிய பொன்னெயில் வட்டமுந் துன்பபூமியாகையால் நீ தலைமயங்கச் சொல்லுஞ் சொல்லுக்கு யாமறிந்துசொல்லுஞ் சொல்லில்லையாம். ௬

நிறைந்து காய மோடு சீவன் நின்ற தாகில் இவ்வுடல்
குறைந்த போது தானும் இத்தொ டொக்க வேகு றைந்திடும்
இறந்து போகும் இக்கடம் இறந்த போது நீர்குடத்(து)
உறைந்து டைந்தி டக்குடம் உலர்ந்த வாற தொக்குமே.

**(உரை)** இச்சரீரத்தோடு ஆன்மாவானது நிறைந்து நிற்குமென்று கூறினுய்; அங்ஙனம் நிறைந்துநின்றதாகில் ஆன்மாநின்ற காயங் குறைந்தபோது ஆன்மாவுங்குறைந்து அறிவு குறையவேண்டும். அன்றியும், கெட்டுப்போகின்ற இச்சரீரமானது, கெட்டபோது, குடத்தின்கண் நிறைந்துநின்ற நீர் குடமுடைய அந்நீருங் கெட்டாற்போல, ஆன்மாவுங்கூடக் கெடவேண்டுமாகையால் ஆன்மா சரீரமுழுதும் நிறைந்து நிற்குமென்று சொல்வாயல்லை. எ

கண்ட நூல் தருந்தன் மாத்தி காய மோட தன்மமும்
உண்டு மீது கீழ் உலாவி உற்று நின்றி டப்பொருள்
கொண்ட தென்னில் அத்த மிவ்வி ரண்டு தன்மை கூடிடா
வண்டு புட்கள் போலெ னின்வ ழங்கி டாக ணத்திலே. கருஅ

**(உரை)** ஆன்மாவானது தான்செய்த புண்ணியத்தாலே தன் மாத்திகாயத்தை யெடுத்துக்கொண்டு மேலாகப்பொருந்தி நன்மையைப்புசித்து அதிலே பாந்திடுமென்றும், தான்செய்த பாவத்தாலே அதன்மாத்திகாயத்தை யெடுத்துக்கொண்டு கீழாகப்பொருந்தித் தீமையைப் புசித்து அதிலே பாந்திடுமென்றும் இப்படி இரண்டுகாயத்தை ஒருகாலத்திலே மாறிமாறிக் கைக்கொண்டதென்று அருகபரமன் அருளியநூல் சொல்லிற்றென்னின், ஆன்மா ஒருகாலத்திலே நின்று இரண்டுரு எடுத்துக்கொள்ளமாட்டாது, மயிர்க்குட்டிப் புழுவண்டானாற்போலவும் மற்றொருபுழு வேட்டுவாளியானாற்போலவும் வேறுபடக் காயம் எடுத்துக்கொள்ளுமென்று நீகூறின், அந்த ஜந்துக்களுங் கணப்பொழுதிற் பேதித்தனவில்லையாம். ஆகையால், ஆன்மா வேற்றுருவத்தை விரைய எடுத்துக்கொள்ளமாட்டாது.

ஆன்மா தானின்ற தூலகாயத்தை விட்டுப்போய்ச் சூக்கும காயத்துடனே நின்று நன்மைதீமைப் பயனை அநுபவிக்குமதொழிந்து நின்ற தூலகாயத்திலே பேதப்பட்டு வேற்றுரு எடாதென்பது கருத்து. அதன்மம் - அதன்மாத்திகாயத்தை. பொருள் - அத்தம் - இரண்டும் ஆன்மா. அ

நீடு பாவ புண்ணி யங்க ளால் நிரய வானகம்
கூடு வோர்கள் இன்று நின்று கூட்டு வோர்கள் இன்மையின்
ஓடு மாக ணைத்தி றத்தின் உற்ற வாறு ரைத்தியேல்
வீடு மாக ணைக்கு நாடும் வில்லி போல வேண்டுமே. கடுகூ

**(உரை)** ஆன்மாக்கள்செய்த புண்ணியபாவங்களை அறிந்துநின்று அவற்றிலே செலுத்துவிப்போன் ஒரு கர்த்தாவில்லையென்று நீ சொல்லின், மிக்கபாவங்களால் நரகங்களையும் மிக்க புண்ணியங்களாற் சுவர்க்கங்களையும் பொருந்திநின்று அநுபவிப்பாரில்லையாம். விரைந்த செலவையுடைய பெரிய அம்பு இலக்கிலேபட்டாற்போலச் செய்யப்பட்ட புண்ணியபாவங்கள் செய்தவனிடத்தே விரையத்தானே சென்று பற்றுமென்று நீ சொல்லுகின்றாயாயின், அப்படி விடப்பட்ட பெரியகணைக்கும் இலக்கைநாடி யெய்வானொரு வில்லிபோல வேண்டுமாதலால், ஆன்மாக்கள்செய்த கன்மங்களை அநுபவிக்கும்படி கூட்டுவான் ஒரு கர்த்தாவேண்டும். கூ

ஏண தோன்று புற்க லத்தின் எய்து மென்னின் நாசமே
காண லாகும் அக்க டம்க ழிந்த தன்மை இல்லவை
பூண வேண்டும் மேலு றும்பொ ருந்தமின்மையொன்றினின்
மாணவே அணுப்பொ ருள்நிகண்ட வாதி வைத்ததே. கசுo

(உரை) நீ கூறிய புற்கலப் பொருளாகிய கல்லும் இரும்பும் மரமும் ஓரறிவை யுடையவென்று நீ கூறின், ஓரறிவை யுடைய எல்லாந் தானே கெடுதல் காணலாகும்; அக்கல்லிரும்புகள் தானே வடிவுகெடுமுறைமை காண்டலில்லை. அன்றியும், பொருந்த ஓரறிவுண்டாயிற் கல் இரும்பு மேல் நரக சுவர்க்கம் பொருந்தவேண்டும். அது பொருந்தாமையுங் காணலாகும். ஒன்றினும் ஓரறிவுடைத்தென்று சொல்லப்படாத கல்லிரும்புகள் அணுப்பொருளாக மாட்சிமைப்படவைத்து நிகண்டவாதி நீ சொன்னாய் இதனை வேறு சொல்வாரில்லை. கo

ஆறு காரி யங்கள் மாற வேத வங்க ளாமெனின்
மாறி வாணி கஞ்செ யாதி ருக்க வந்தி டாதனம்
ஈறி லாத வூழ தென்னின் எங்கு முள்ள தாழதே
பேறு காரி யம்வி டப்பி றப்ப தில்லை பேசிலே. கசுக

(உரை) அறுவகை உவர்ப்புக்களும் நீங்கவே தவமாமென்று நீ கூறின், பொருள்களைப் பரிவர்த்தனைசெய்து வாணிகஞ் செய்யாதிருப்பப் பொருள்வந்தடையாது. அதுபோல, உவர்ப்புமாறி ஒருதவஞ்செய்யாதிருந்தால் தவம்வந்து கூடாது, கேடில்லாத முன்னை வினைப்பயனாலே தவமுண்டாமென்று சொல்லின், உவர்ப்பைக் கைவிடுதல் முதலாயினவும் முன்னை வினைப்பயனுமாதலால், தவமாகியபேறு தவஞ்செய்தலாகிய காரியத்தைவிட்டால் உண்டாகாது சொல்லுங்காலத்து.

கந்த ரச ரூப பரிச சத்த பரிணமம் ஆறும் உவர்ப்புக்கள். தவ ஒழுக்கங்களினின்று தவஞ்செய்தால் அல்லது ஆறுகாரியத்தை விடுதலினாலே தவஞ்சித்தியாதென்பது கருத்து. ஆறுகாரியம்—உழவு, தொழில், வரைவு, வாணிகம், சிக்ஷை, சிற்பம் என்பாருமுளர். கக

உடல்வ ருந்தல் மாதவங்கள் உறுதி யென்று ரைத்திடில்
படவ ருந்து நோயி னோர்கள் படர்வர் பொன்னெ யில்லனுய்

திடவ ருந்த இன்பம் இச்சை செய்தல் செய்தல் செய்தியேல்
கெடஅ ரிந்திடாய் உன்நாசி கேடில் இன்பம் உன்னியே.

(உரை) சரீரம் வருந்துதலே பெரியதவத்திற்கு உறுதியென்று நீ சொல்லின், துக்கமாகவுடல் வருந்தச் சரீரஇன்பத்துக்கு மாறுபாடு செய்தலைச் செய்வதுவே கேடில்லாத மோக்ஷத்தின் செய்தியென்றமையான் நோயினுன் மனேதுக்கிகளாய் மெலிவோர் பொன்னெயில் வட்டஞ் சேர்குவரென்று நீ சொல்லாய், முத்தியின்பத்தை ஆசை செய்தல் சரீரம்வருந்தச் செய்தற்றன்மையே யென்னின், அந்த முத்தியின்பத்தைக் கருதி உன்மூக்கைக் கெடுக்கும்படி அறுத்திடு வாயாக. ௧௨

பூர்வ கன்மம் அற்றிடப் புசித்த பின்பு பொன்னெயில்
நேர்வ தென்னின் அக்கன் மத்து நிச்சய மிலாமையில்
தீர்வ தின்மை தீரின் வாயில் சேர்வ தின்மை தெண்கடல்
நீர்வ றந்த பின்பு பூனை மீன ருந்த நின்றதே. ௧௧௩

(உரை) முன் ஜநநங்களிலுள்ள கருமந்தொலைய இந்த ஜநநத்திலே புசித்தபின்பு பொன்னெயில்வட்டத்தைச் சென்று பொருந்துமென்று நீசொல்லின், அக்கன்மத்துக்கு அளவின்மையால் நியமிக்க அறிவது இல்லையாய்ப் புசித்துத்தொலையாதாம், கன்மம் புசித்துத் தொலைவுபெற்றால் இந்திரியங்களுடன் சத்தாதி கூடுவதின்மையாம்: அவை கூடாதொழியவே மோக்ஷ வுபாயமான தவஞ்செய்தலும் இல்லையாம்; ஆதலால், கன்மத்தைத் தொலையப்புசித்துப் பொன்னெயில் வட்டத்தை அடைவோமென்று நீ கருதியிருத்தல், பூனை தெளிந்த சமுத்திரத்து நீர் வற்றினவுடனே மீன் தின்னக்கடவோமென்று கருதி அது வற்றுமளவும் பார்த்திருந்த தன்மையை ஒக்கும்.

கூறு கூவல் மன்னும்அக் குடம் குறித்து நீள்கரை
ஏற லுற்ற தன்மை நீஒருத்த ரின்றி ஏறுதல்
வேறொ ருத்தன்அக்கு டத்தை மீது நின்றெ டுக்கவே
ஏற லுற்ற தன்மை யில்சிவன்தி றத்து நின்றிடே. ௧௧௪

(உரை) சொல்லப்பட்ட கிணற்றினுட்கிடக்குங் குடம் கரையை நோக்கித் தானே யேறினாற்போலும் ஒரு கர்த்தாவின்றிப் பொன்னெயில் வட்டத்தை நீ சேர்குவமென்னுந் தன்மை, ஒருத்தன் அந்

தக் கிணற்றிற்கிடந்த குடத்தை மேலே நின்றெடுக்க அக்குடங் கரை யேறிய தன்மைபோலக், கர்த்தா நின்று கன்மத்தைத் தொலைவித்து மேலாகிய வீடுபேற்றைக் கொடுக்கவேண்டும்; அப்படிக் கொடுப்பான் சிவன் ஆகையால் அந்தச் சிவனையே தெய்வமாகக்கொண்டு அவனரு ளிய வேதாகமங்களின் திறமாகிய சரியை கிரியா யோகஞானங்க ளிலே நீயும் நிற்பாயாக. ௧௪

---

## ஆசீவகன் மதம்

என்உயி ரதற்குப் போல எவர்க்கும்ஒத் திருப்பன் என்று
தன்னுயிர் வருந்தத் தானும் தலையினைப் பறித்துப் பார்மேல்
மன்உயிர் எவற்றி னுக்கும் வருந்தலே அறங்கள் சொல்லும்
அன்னதோர் வாய்மைஆசீ வகன்அம ணர்களிற் கூறும். ௧௩௫

(உரை) எனதான்மாவுக்கு யான் கிருபைசெய்யுந் தன்மைபோல எல்லா ஆன்மாக்களுக்கும் யான் கிருபைசெய்திருப்பனென்று சொல் லின், தன்னுடைய ஆன்மா வருத்தப்படத் தன் தலைமயிரைப் பறித்து, உலகின்கண் நிலைபெற்ற ஆன்மாக்கள் எல்லாவற்றினுக்கும் வருத்தம் உறுவதுவே அறங்களாகச் சொல்லுமென்னுந் தன்மையா கிய சொல்லை அமணர் இருவகையாரில் ஆசீவகன் சொல்லும். ௧

வரம்பிலா அறிவன் ஆதி வைத்தநூற் பொருள்கள் தாமும்
நிரம்பவே அணுக்கள் ஐந்து நிலம்புனல் தீகால் சீவன்
பரந்திவை நின்ற பான்மை பாரது கடினம் சீதம்
தரும்புனல் சுடும்தீ வாயுச் சலித்திடும் உயிர்போ தத்தாம்.

(உரை) அநந்தஞானனாகிய அருகபரமன் ஆதியிலே யுண்டாக் கப்பட்ட நூலிற் பொருள்கள்தாமும் பூரணமாக ஆன்மாக்கள் ஐந் தென்றுகூறும்; அவையாவன,—பிருதிவி அப்பு தேயு வாயு ஆன்மா. அவ்வான்மாக்கள் ஐந்தும் விரிந்துநின்ற முறைமை சொல்லிற் பிருதிவி கடினமாம், அப்பு சைத்தியமாம், அக்கினி உஷ்ணமாம், வாயு சலநமாம், ஆன்மா போதத்தை யுடைத்தாம். ௨

பார்புனல் பரக்கும் கீழ்மேல் படர்ந்திடும் தேயு வாயுச்
சேர்வது விலங்கின் உள்ளம் அவற்றொடும் சேரும் வேறு

சார்வது பெற்ற போது சார்ந்தஅப் பொருளின் தன்மை
நேர்வது மாகி நிற்கும் இதுபொருள் நிகழ்த்து மாறே. ௧௬௭

(உரை) பிருதிவியும் அப்புவும் கீழே விரிவை யுடைத்தாய் நிற்கும். தேயுவும் வாயுவும் மேலே விரிவை யுடைத்தாய் நிற்கும். ஆன்மாவானது காயத்தோடுஞ் சேருஞ் சேர்வையை நீங்கினுற் பிருதிவி அப்பு தேயு வாயுவாகிய நாலான்மாக்களோடுங் கூடி நிற்கும். இவற்றை வேறுபடக் காயத்தைச் செறிவாகப் பெற்றவிடத்துக் காயத்தை இடமாகக்கொண்டு அதனது தன்மை தானுகப் பொருந்தி நிற்கும். இது பஞ்சான்மாக்கள் செய்தியைச் சொல்லும் வழி. ௩

உணர்தரா அணுக்கள் நான்கும் ஒன்றுகெட் டொன்ற தாகா
புணர்தரா ஒன்றில் புக்கொன் ருயினும் பொருந்தி வாழும்
அணைதரா புதிய வந்திங் கழிதரா பழைய வான
இணைதரா ஒன்றொன் ருகி மாறுதல் ஒன்றும் இன்றே. ௧௬௮

(உரை) ஜீவனையொழிந்த நான்கான்மாக்களும் ஒன்றையொன்றறியுந் தன்மையல்லவாம். அவ்வான்மாக்கள் நான்கும் ஒன்றுகெட்டு ஒன்றுமாகா. ஓரான்மாவினிடத்திலே புக்கு ஓரான்மா கூடிநில்லாது. அப்படிக் கூடாதாயினுங் காயமாமிடத்துப் பொருந்தியும் நிற்கும். அவ்வான்மாக்கள் அநாதியிற் கூட்டமன்றி இவ்விடத்துப் புதிதாக வந்து கூடுவதுஞ்செய்யா. பழைய ஆன்மாத்தன்மை கழிதலும் உண்டாகாது. அவ்வான்மாக்கள் கூடுமிடத்துச் சேரக்கூடுவதொழிந்து ஓரொன்ருகக் கூடுவதுஞ் செய்யா. இவையிற்றின் செய்தி ஒருகாலும் ஒழிவதில்லை. ௪

கோண்டுமுன் விரித்தல் நீட்டல் குறுக்குதல் குவித்தல் ஊன்றல், உண்டுதின் றுலர்த்தல் மீட்டல் உடைத்திடல் ஒன்றும் ஒண்ணு, விண்டுபின் புறம்பும் போகும் வேறுநின் றுள்ளு மேவும், பண்டுமின் றென்றும் எங்கும் பரந்தொரு தன்மைப் பாலே. ௧௬௯

(உரை) முன்கூறிய ஆன்மாக்களை முன்னே யுண்டாக்கிக் கொண்டு பரப்புதலும் அதனை வர்த்திப்பித்தலும் அதனை எல்லையிலே குறுக்குதலும் சேர எடுக்குதலும் அவற்றிலே யுற்றுநிற்றலும்

அதனை உண்டு தின்று கெடுத்தலும் மீளவுண்டாக்குதலும் அவற்றைப் பிளந்திடுதலும் என்னும் இவற்றின் ஒன்றுஞ் செய்ய ஒண்ணாது. விரிந்த அண்டகோளகைக் கப்புறத்தும் போகும். அதற்கு வேற்றுமைப்பட்டு உருக்களுள்ளும் பொருந்தும். முற்காலத்தும் இக்காலத்தும் எக்காலத்தும் எவ்விடத்தும் நிறைந்து ஒருதன்மைப் பகுதியாயிருக்கும்.

விரிதல் - பரப்புதல், அஃதாவது சிருஷ்டி. நீட்டல் - வர்த்திப்பித்தல், அஃதாவது திதி. குறுக்கல் - ஒடுக்குதல், அஃதாவது சங்காரம். குவித்தல் ஒன்றினுட் செறித்தல், அஃதாவது சருவசங்காரம். ஊன்றல் - உற்றுநிற்றல், அஃதாவது முத்தியின்கட்சேறல். உண்டு தின்றுலர்த்தல் - உண்டுதின்று கெடுதல், தின்ற பகுதியும் உணவாகலின் உண்டு தின்றென்று கூறிற்று. மீட்டல் - மீளவிடுதல், அஃது உமிழ்தல். உடைத்திடல் - சின்னப்படுத்தல், அஃதண்டங்களைக் கெடுத்தல். இவ்வணுக்கள் ஒருவரால் நியமிக்கப்பட்டனவல்ல.

கண்ணினில் காண வொண்ணு சனித்தந்தக் கன்மத் தாலே
நண்ணிடும் உருக்க ளாகி நின்றபின் நரரோ காண்பார்
விண்ணினில் தேவர் காண்பர் ஓரணு மிக்க நான்காய்
எண்ணிய பொருள்க ளெல்லாம் இசைவதென் றியம்புமின்னே.

**(உரை)** முற்கூறிய அணுக்கள் ஐந்தில் ஆன்மா என்னும் அணுப்பொருள் கண்ணிற் காண்டற்கரிதாகி அக்கன்மத்தாலே ஜநித்து உருக்களாகப் பொருந்தி நின்றிடும். அக்கன்மவுருவொடு நின்றபின் நரரோகாண்பார். விண்ணுகிய பொன்னெயில் வட்டத்தில் தேவனுகிய அருகபரமனே காணவல்லான். ஆன்ம அணுவொன்றும் தன்னையொழிந்த அணுக்கள் நான்குமாய், எண்ணப்பட்ட வுருக்களெல்லாவற்றுள்ளும் இப்படிச் சென்று பொருந்தும் என்று கண்டநூல் சொல்லும். ௬

ஒன்றினை ஒருவி மூன்றங் குற்றிடா திரண்டு விட்டு
நின்றிடா திரண்டு கூடு நெறிநில நான்கு நீர்மூன்(று)
இன்றிரண் டழல்கா லொன்ருய் இசைந்திடும் பூமி யிவ்வா
றென்றுநீர் தீகா லாகி ஈண்டுவ தென்றி யம்பும். ௧௭௧

(உரை) ஆன்மாவொழிந்து நிலனாதியான அணுக்கள் நான்கும் தம்மிற் கூடுமிடத்து ஓரணுவைவிட்டு மூன்றணுத் தம்மிற்கூடி நில்லாது; இரண்டணுவை விட்டு இரண்டணுக்கூடாது. (எனவே கூடுமிடத்திவை நான்குங்கூடி நிற்குமென்பது கருத்து.) இவை நான்கும் தம்மிற் கூடிநிற்கு மென்று சொல்லு முறைமையாவது எங்ஙனமென்னில், இப்பொழுது பிருதிவியில் கந்த ரச ரூப பரிசம் நான்கும், அப்புவில் இரச ரூப பரிச மூன்றும், அக்கினியில் ரூபம் பரிசம் இரண்டும், வாயுவிற் பரிசம் ஒன்றுமாகிய குணங்கள் பொருந்தியிருக்கும். இந்த முறைமையிலே பிருதிவி அப்பு தேயு வாயு என்று கூறும் அணுக்களின் குணங்கள் கூடிநிற்கும் என்று சொல்லும் நூல்கள். எ

வெண்மைநன் பொன்மை செம்மை நீல்கழி வெண்மை பச்சை
உண்மையிவ் வாறின் உள்ளும் கழிவெண்மை ஓங்கு வீட்டின்
வண்மைய தாகச் சேரும் மற்றவை உருவம் பற்றி
உண்மையவ் வொட்டுத் தீட்டுக் கலப்பினில் உணரும் என்றான்.

(உரை) வெண்மையும் நன்றாகிய பொன்மையும் சிவப்பும் நீலமும் மிக்கவெண்மையும் பச்சையுமாகிய ஆறுவன்னமுள; இவ்வாறு வன்னத்தினுள்ளும், மிக்க வெண்மையென்று கூறிய வன்னமே பெரிய பொன்னெயில் வட்டத்துக்குச் சிறப்புடைத்தான வன்னமாகச்சேரும்,—ஒழிந்த வெண்மை பொன்மை சிவப்பு நீலம் பச்சை என்னும் ஐந்து வன்னமும் மற்றை அணுக்கள் நான்கினை வடிவுகளைக் கூடிநிற்க, அந்த ஆன்மாவானது இவ்வுருக்களைப்பற்றுதல் இழிதல் கூடுதல் இவையிற்றால் அறியுமென்றான். அ

பேறிழ விடையூ றின்பம் பிரிவிலா திருக்கை மற்றும்
வேறொரு நாட்டிற் சேறல் விளைந்திடு மூப்புச் சாதல்
கூறிய எட்டும் முன்னே கருவினுட் கொண்ட தாகும்
தேறிய ஊழிற் பட்டுச் செல்வதிவ் வுலகம் என்றான். கஎஎ

(உரை) செல்வம் முதலிய கூடுதலும் அவை நீங்குதலும் துக்கமுறுதலும் சுகமுறுதலும் உடலொடு நீங்காமையும் வேற்று நாட்டுச் சேறலும் விருத்தாவத்தையும் மரணமும் என்று சொல்லப்பட்ட எட்டும் முற்பிறப்பின் வினையிலுள்ளதாய்க் கர்ப்ப கோளகையிலே கைக்கொள்ளப்பட்டுள்ளதாம். ஆதலால், தெளிவாக முற்பிறப்பிற்

செய்த வினையில் அகப்பட்டு இம்முறைமையிலே நடந்து செல்வது இவ்வுலகமென்றான். ௯

புண்ணிய பாவம் என்னும் இரண்டனுப் பொருந்த வைத்தே
எண்ணிய இவற்றி னோடும் எழெனை எங்க ளோடு
நண்ணிய ஒருவன் கூறும் ஞானமிவ் வாற தென்று
கண்ணிய கருத்தி னோர்கள் கதியினைக் காண்பர் என்றான்.

**(உரை)** புண்ணிய பாவமென்னும் இரண்டினோடும் அணுக்கள் ஐந்தையுங் கூடவைத்து இவற்றோடும் எழெனவெண்ணி, எங்கள் சமயத்தினோடு பொருந்திய கர்த்தாவான ஒப்பற்ற அருகபரமன் அருளிய ஞானம் இத்தன்மைத்தென்று அதனைக்கூடக் கருதுங் கருத்தை யுடையவர்களே நற்கதியாகிய பொன்னெயில்வட்டத்தைக் காணலுறுவார் என்றான். ௧௦

---

## ஆசீவகன் மத மறுதலை

வாராநெறி வீடானபின் மண்மேல் அவன் வந்து
தாராமையின் நூலானது தானேஉள தின்றாம்
சேராமையில் அணுவானவை ஐந்தும்ஒரு தேயத்(து)
ஓராதொரு காலத்தினில் ஒன்றாமுணர் வின்றாம். ௧எ௫

**(உரை)** மோக்ஷமென்பது மீண்டு காயமெடுத்துவாராவழியால் அடையத்தக்கதாம். அப்படியானவிடத்து, வீட்டுலகத்திருந்த அருகபரமன் பூமியிடத்துவந்து நூல்தருமுறைமை யில்லையாகையால் நூலானது தானுண்டாம் வழியில்லையாம். ஒப்பற்ற தேசமாகிய பொன்னெயில் வட்டத்தில் ஐவகை அணுவுஞ் சேராதாகையால் சரீரியாந் தன்மையில்லையாகும். அதனால், ஒன்றையும் ஒருகாலத்தில் விசாரிக்க மாட்டானும். அன்றியும் கீழான அணுக்களிரண்டின் செய்தியை அறியவுமாட்டான். ஆகையால், அணுக்கள் எல்லாவற்றையுங் கூட்டி ஒன்றாகவும் உணரும் உணர்வையும் உடையனல்லன். ௧

இருபான்மையர் இவர்மண்டலர் செம்போதகர் என்றே
வருபான்மையர் இவர்மண்டலர் மண்மேல்வரு நூலும்
தருபான்மையர் எனின்நீதல மதில்வாழ்பவர் தம்போல்
ஒருபான்மையின் உளராகுவர் உணராதுரை செய்தாய். ௧எ௬

**(உரை)** இவ்வருகபரமர் இரண்டு பகுதியராயிருப்பர். மண்டலரென்றும் செம்போதகரென்றும்; அவ்விருவரின், இப்படி வரும் பகுதியையுடைய இவர் மண்டலர். மண்டலராகிய இவர் உலகத்தின் கண்ணே வந்து அணுக்கள் ஐந்தின் செய்தியும் ஒருங்கே யறிந்து உலகத்தின்கண்ணே நடக்கும் நூல்செய்த பகுதியை யுடையரென்று நீ சொல்லுகின்றாயாயின், அம்மண்டலர் பூமியில் வாழும் ஆன்மாக்களைப்போல் ஒரு பகுதியிலேயாகுவர்; ஆகவே ஒருரு இரண்டு பேதப் பட்ட அவற்றில் ஒன்று மானுடத் தன்மையும் ஒன்று தெய்வத் தன்மையும் பெறுதல் இல்லையாம்; ஆதலால், விசாரியாமற் சொன்னாய். ௨

உயிரானவை உடல்தீண்டிடல் ஒட்டுக்கலப் பெய்தும்
பயில்வால் உணர் வெய்தும்மெனும் மொழியானவை பழுதாம
துயிலார்தரு மவர்பாலகர் தொடரார்அறி வினைநீ
செயிரார்தரும் உரையேதரும் அதுவோஉன செயலே. ௧௭

**(உரை)** ஆன்மாக்களானவை உடலைப்பற்றியும் உற்றும் கலந்தும் செய்யுந்தொழிலாலே அறிவைப் பொருந்துமென்று நீ சொல்லுஞ்சொல் குற்றமுடைத்தாகும். அஃதெங்ஙனமென்னில், மிக்க வுறக்கம் பொருந்தினவரும் பாலவவத்தை யடைந்தவரும் பற்றியும் உற்றும் கலந்தும் அறிவினை யறியமாட்டார். நீ சொல்லுஞ் சொற்றானே குற்றத்தை மிகவுந் தரும். உன்றொழிலும் அத்தனையோ? ௩

அணுவானவை கீழ்மேல்உள வாணுல்அவ யவமும்
நணுகாவென லாமேவரின் நாசம்அவை யெய்தும்
அணுகாவெனின் இவைதொள்ளைகொள் ஆகம்முள வாகும்
துணிவாலிவை கலவாபல தொகையாம்வகை இலவாம். ௧௮

**(உரை)** ஆன்மா ஒழிந்து அணுக்களென்று கூறப்பட்ட பிருதிவி முதலான நான்கிலே கீழே யிரண்டுளவாயும் மேலே யிரண்டுளவாயும் நிற்குமாயின், அவை காரணமான சரீர அவயவங்களுங் கூடாவாய் கீழும் மேலுமாய் வேறுபட்டு நிற்குமென்று சொல்லலாமே. அஃதன்றியும்,—அவ்வணுக்கள் நான்கும் சரீர அவயவத்திற் கூடிவருமாயின், அவ்வணுக்களை நித்தியமென்று நீ முன்னர்க் கூறியது மித்தியையாம்; அவை சரீர அவயவங்களிலே பொருந்தா

தென்று நீ கூறின், அவ்வணுக்களின் குணங்களாகிய உதிர மாமி சாதிகளுங் கலந்து நில்லாததுமாய் அணுக்கள் நான்கின் கூறுபலவுங் கூடிய திரட்சியுங் காயத்திற்கில்லையுமாய்த் துணிந்தறியுமிடத்துச் சரீர முறைமையாகாததுமாய்ப் புரைபட்டு நிகழ்ந்ததில்லையாம். சு

மிகையாம்அணு உளவாகையின் அவையாம்மிக வென்னில்
தொகைநாலிடை அறலால்அவை தொகுமாறில வாகும்
பகையாகையின் மிசைதாழ்மையின் நிலையாவகை பண்ணும்
நகையாம்உரை கழியாயிரம் அவைதூணென நண்ணு. களகூ

**(உரை)** இவ்வணுக்கள் நான்குமன்றி வேறே அறியத் தக்கதொரு மிக்க அணுவுண்டாகையினாலே மிகவும் யோனிபேதங்களாகிய உருக்களாமென்று நீ கூறின், அணுக்கள்நாலின் கூட்டம் மிகவும் பொருந்தாமல் நடுநீங்கிக் கிடக்கையால் அறியுமணு இவற்றைக் கூட்ட அவை கூடிநிற்கும் வழியில்லையாம். அஃதன்றியும், அவ்வணுக்கள் நாலும் மேலுங்கீழுமாய் நிற்கையாலுந் தம்மிற் பகையாகையாலும் ஆன்மா ஓரிடத்துக் கூடாவகையைச் செய்யாநிற்கும். கோல் ஆயிரங் கூடினாலும் தூணாகாத தன்மைபோல அணுக்கள் கூடியது கொண்டே உருக்களாகாதாகையால் நீ கூறியது நகையாம். ரு

கூடாஅணு அறியாமையின் வளிகூட்டுதல் கூறின்
நாடாவளி அணுவானவை நணுகச்செயும் அவரை
நீடாவினை தன்னாலெனின் நினைவின்றது இன்றாம்
தேடாயொரு வனைநீஇவை செய்வானுள னென்றே. கஅ0

**(உரை)** நீ கூறிய ஐவகை யணுக்களும் தமக்கென அறிவில்லாவாகையால் அவ்வடிவெடுத்துக்கொள்ள வல்லனவல்ல. வாயுவணு ஒழிந்த அணுக்கள் மூன்றையும் ஆன்மாவாகிய அணுக்கூடும்படிக்குக் கூட்டுமென்று நீ கூறின், வாயுவானது அவ்வணுக்களைக் கூட்டுதற்குக் கன்மஞ்செய்யும் ஆன்மாக்களை அறியமாட்டாது, பழைய கன்மத்தினாலே வாயுக்கூட்டுமென்னில், அந்தக் கன்மமும் அறிவையுடையதன்று ஆகையால் தானுங் கூடமாட்டாது; வாயுவைக்கொண்டு கூட்டுவிக்கவு மாட்டாது. இவ்வணுக்கள் ஐந்தையுங் கன்மத்தையுங்கூட்டிக் காயமுண்டாக்குவான் ஒரு கர்த்தாவுளனென்பதனை ஆராய்வாய். கூ

வேதமே யோதி நாதன் இலையென்று விண்ணில் ஏறச்
சேதமாங் கன்மஞ் செய்யச் சைமினி செப்பு நூலின்
நீதியே கொண்டு பட்டா சாரியன் நிகழ்த்து நீர்மை
ஓதநீர் ஞாலத் துள்ளே உள்ளவா றுரைக்க லுற்றும். கஅக

**(உரை)** இருக்கு யசுர் சாமம் அதர்வணம் என்னும் நாலுவேதத்தையுமே ஓதி அவ்வேதமொழியக் கர்த்தாவில்லையென்று சுவர்க்கம் புகுதற்குத் தனச்சேதமாம்படி சோமயாக முதலாகிய கன்மங்களைச்செய்தற்குச் சைமினி பகவானுலே அருளப்பட்ட சூத்திரத்தின் வழியைக் கொண்டு பட்டாசாரியன் என்பான் பாட்டமாகச் சொல்லுமுறைமையை ஒலிபொருந்தின சமுத்திரத்தாற் சூழப்பட்ட பூமியிடத்தே உள்ளபடியே சொல்லாநின்றேம். க

உற்றிடுங் காம மாதி குணங்கள் தாம் உயிர்கட் குண்டாம்
மற்றிவை தருமே யாகின் மறைமொழி வாய்மை யின்றும்
கற்றநூல் அளவாற் போதம் கலப்பது கல்வி யின்றேல்
பெற்றிடும் மழவு மூங்கை என்னவே பேச லாமே. கஅஉ

**(உரை)** ஆன்மாக்களுக்கு அநாதியே பொருந்திய காமம் குரோதம் உலோபம் மோகம் மதம் மாற்சரியம் அகங்காரம் இடும்பையாகிய குணங்கள் கூடிநிற்கும். இக்குணங்களே ஆன்மாவுக்கு அறிவைத் தருமாகில் வேதவசனத்தால் ஒரு நன்மையுமில்லையாம். ஆகையால், ஆன்மாக்கள் கற்றநூல் எவ்வளவோ அவ்வளவே அறிவுண்டாம். நூல்கற்றலில்லாத ஆன்மாக்களைப் பிறந்து முதிராத பாலரென்றும் ஊமையென்றுஞ் சொல்லலாம். உ

உண்டொரு கடவுள் வேதம் உரைத்திட உயிரின் தன்மை
கொண்டவன் அல்லன் என்றுங் கூறிடின் உருவங் கூடில்
பண்டைய உயிரே யாகும் படித்தநூ லளவு ஞானம்
கண்டிடும் உருவ மின்றேல் கருதுவ தில்லை என்றுன். கஅங

**(உரை)** சுயம்புவாகிய வேதத்தைக் கூறுதற்கு ஒரு கர்த்தாவுண்டென்றும் அக்கர்த்தா ஆன்மத்தன்மையன் அல்லன் என்றுஞ் சொல்லின், வேதத்தைச் சொன்னுனென்ற கர்த்தாவானவன் வேதஞ்

சொல்லுமிடத்துச் சரீரியாய்ச் சொல்லவேண்டும்; ஆகையால், அப்படிச் சரீரியாகில் ஆன்மத்தன்மையனுவன். அப்படிச் சரீரியான ஆன்மா தான் கற்றநூல் அளவே அறிவையுடைத்தாம். அத்தனையே, வடிவில்லையாயின் நூலைக் கருதிச்சொல்லுந் தன்மையுமில்லையாம். ஆதலால் வேதஞ் சுயம்புவேயாம். ௩

தேவரும் முனிவர் தாமும் சித்தரும் நரரும் மற்றும்
யாவரும் உரைப்பர் வேதம் இயம்பினர் இன்ன ரென்னப்
போவதன் றென்று நாளும் பரம்பரை புகல்வ தாகும்
கூவல்நீ ரென்னில் கொளளேம் மறுமையைக் குறித்த லாலே.

(உரை) பிரம விஷ்ணுக்கள் முதலாகிய தேவர்களும் அகத்தியர் வசிட்டராதி இருடிகளும் சித்தர்களும் ஒழிந்த வித்தியாதரர் கந்தருவர் கின்னரர் கிம்புருடர் பைசாசர் இயக்கர் முதலாயினுரும் நரர்களும் வேதம் இன்னுர் சொன்னுர் என்று தம்மால் அறியப்படுவதன்றென்று சொல்லாநிற்பர்; ஆகையால், காலந்தோறும் பழையதாக வருமென்றே சொல்லப்படுவதாம். கூவலில் நீர்போலத்தானே வந்து தோன்றப்பட்டதென்று சொல்லும் உவமையும் கொள்ளேம். அஃதொருவனுற் செய்யப்படுதலானும் மறுமையெய்தத் தக்கதாயிருத்தலானும். ௪

உன்னிய அங்க மாறும் மூன்றுப வேதந் தானும்
தன்னுளே அடக்கி வேறு தங்கிடா வகையைச் சார்ந்து
முன்னமோர் தோற்ற மின்றி முடிவின்றி நித்த மாகி
மன்னியோர் இயல்பே யாகி வழங்கிடும் மறைய தென்ருன்.

(உரை) வேதமானது கருதப்பட்ட ஆறங்கங்களையும் மூன்றுப வேதங்களையும் தனக்குள் அடக்கி, அர்த்தங்கள் எல்லாம் தன்னிடத்தடங்குவதொழிந்து வேறொரு நூலின் அர்த்தந் தன்னிடத் தில்லையென்னுமையைப் பொருந்தி, ஆதியிலும் ஓரிடத்தில் தோன்றிற்றென்னும் முறைமையுமின்றி, ஒரு காலத்திலுங் கேடின்றி நித்தமுமாய், ஒருதன்மையாய் நிலைபெற்றுப் பேதிக்கப்படாததாய், இப்படி வழங்காநிற்கும் அவ்வேதமென்று கூறினன்.

ஆறங்கமாவன—சிக்ஷை, கற்பம், வியாகரணம், நிருத்தம், சோதிடம், சந்தோவிசிதி. மூன்று உபவேதமாவன—ஆயுர்வேதம், தநுர்வேதம், காந்தர்வ வேதம். ௫

செய்தியும் நெறியும் மேவுந் தேவரும் பொருளும் எல்லாம்
எய்திய பன்மை யாலே ஓரியல் பியம்பா தாகும்
ஐயமில் காலம் மூன்றும் அறிந்தபின் நெஞ்ச கத்தாய்
மெய்யதாய் வந்து தோன்றி விளங்கிடும் வேத நூலே. ௧௮௭

(உரை) படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் பலசெய்திகளுஞ் செய்திசெய்யும் வழியும் அவ்வழியிலே மேவுந் தேவரும் அவர்களாற் கொடுக்கப்பட்ட இகலோக பரலோக சாத்தியமான வர்த்தங்களும் இவையெல்லாம் பன்மையாகப் பொருந்தி நின்றனவாகையாலும் இவற்றைச் சொல்லவேண்டுகையாலும் வேதமுமொரு நெறிப்படச் சொல்லாதாம். அம்மூன்று தொழிலாலே மூன்றுவிதப்பட்டு இறந்தகாலம் நிகழ்காலம் எதிர்காலம் என்று எல்லாராலும் அறியப்பட்டபின், வேதமானது ஒருவடிவைப்பொருந்தி அவ்வடிவின் நெஞ்சகத்தேபொருந்தி உலகத்திலே விளங்காநிற்கும். (காலமூன்றுமறிந்தபின் வேதம் உருவாமென்பதனால் அநாதியில் அருவாமென்னும் பொருள்பயந்தது.) ௬

தப்பிலா வாகுந் தாது பிரத்தியந் தன்னி னோடே
ஒப்பிலா தாம்பி ராதி பதிகமாம் உறுப்புங் கொண்டு
செப்புமாம் வேதம் சொன்ன விதிப்படி செய்யச் சேம
வைப்பதாம் வீடு பாசம் மருவலாம் ஒருவ லாமே. ௧௮௬

(உரை) வேதமானது தவறில்லாதனவாகிய பகுதி விகுதிகளோடு உவமையில்லாததாகிய பெயர்ப் பகாப்பதம் என்னும் அவயவங்களையுந் தன்னிடத்திலே அடக்கிக்கொண்டு சொல்லுவதாம். அந்த வேதஞ்சொன்ன விதிப்படி கன்மத்தைச்செய்யப் பாசக்கட்டு விட்டு நீங்கலாம் ; அது நீங்கவே வீட்டின்பமும் ஆப்த தநமாகக்கூடும்.

போக்கொடு வரவு காலம் ஒன்றினில் புணர்வ தின்றி
ஆக்கவே றொருவ ரின்றி அநாதியாய் அணுக்க ளாகி
நீக்கிடா வினையிற் கூடி நிலமுத லாக நீடி
ஊக்கமா ருலகம் என்றும் உள்ளதென் றுரைக்க லாமே.

(உரை) ஊக்கம் ஆர் உலகம் போக்கொடு வரவு காலம் ஒன்றினில் புணர்வது இன்றி - வலிமைபெற்ற பிரபஞ்சமானது சங்காரமுஞ் சிருட்டியும் ஒருகாலத்திலும் உண்டாகாததாய்,—ஆக்க வேறு

ஒருவர் இன்றி - இரக்ஷிக்க ஒரு கர்த்தாவுமில்லையாய்,—அநாதியாய் - அநாதியே யுள்ளதாய்,—அணுக்களாகி - ஆன்ம சம்பந்தியாய்,—நீக்கிடா வினையிற்கூடி - நீக்கப்படாத புண்ணிய பாவங்களோடுகூடி,—நிலமுதலாக நீடி - பிருதிவி முதலாகிய தத்துவங்களாக நிலைபெற்று, என்றும் உள்ளதென்று உரைக்கலாமே - என்றும் உள்ளதென்று சொல்லலாம். அ

நித்தமாய் எங்கு முண்டாய் நீடுயிர் அறிவு தானாய்ப்
புத்திதான் ஆதி யாய கருவியின் புறத்த தாகிச்
சுத்தமாய் அருவ மாகித் தொல்லைவல் வினையின் தன்மைக்(கு)
ஒத்ததோர் உருவம் பற்றிப் புலன்வழி உணர்ந்து நிற்கும்.

**(உரை)** பிரபஞ்சத்திலே நிலைபெற்ற ஆன்மாவானது அழிவில்லாததாய் நிறைவையுடைத்தாய்,—அறிவே தனக்கு வடிவமாய்,—புத்திமுதலாகிய தத்துவங்களிடத்துக் கலவாது நிற்பதாய், தத்துவங்கள் நீங்கின விடத்தே அழுக்கற்று நிற்பதாய்,—அருவமாய்ப் பழையதாய்வரும் புண்ணிய பாவங்களினது முறைமைக்கிடான காயத்துடனே கூடி இந்திரியங்கள் வழியாகக் கண்டு கேட்டு உண்டுயிர்த்துற்றறியாநிற்கும்.

புத்திதானாதியாய கருவிகளாவன - இந்திரிய முதற் பிரகிருதியீறாய தத்துவம் இருபத்தாறாலும். புறம் - ஏழாம்வேற்றுமை யிடப்பொருள். ஒத்ததோருருவம் - வினைகளுக்கேற்ற வடிவம். சுத்தமாகிறது கன்மவசமாயுழலுமோவென்னில் சுத்தமாகாதாகின் முத்தியிலுஞ் சுத்தனாகான். சத்காரியவாதமுங் கெடுமென்பது கருத்து. இஃது ஆன்ம லக்ஷணம். ௯

செயல்தரு வினைகள் மாய்ந்து சிந்தையிற் சேர்ந்து நின்று
பயனொடு பலியா நிற்கும் பலாலமுந் தழையு மெல்லாம்
வயல்தனின் மருவி நாசம் வந்தபின் பலத்தை வந்திங்(கு)
இயல்பொடுந் தந்தாற் போல என்றும்பின் இயம்புகின்றான்.

**(உரை)** முற்சநநத்தின் மனவாக்குக் காயங்களின் தொழில்களாலே யுண்டாகிய புண்ணிய பாவங்கள் அக்காயத்துடனே தூலங்கெட்டுச் சூக்குமமாக ஆன்மாவோடும் பொருந்தி இந்தச் சநநத்திற் பிரயோசநத்தோடு ஆன்மாவுக்குண்டாகா நிற்கும். அஃதென்போல

என்னின், வைக்கோல் தழை முதலானவைகளெல்லாங் கழனியைப் பொருந்திநின்று வடிவுக்கேடு வந்தபின்பு அவ்வயலின் பயிருக்கு நன்மையைக் கொடுத்தாற் போலவென்றும் கூறி வேறுஞ் சில சொல்லாநின்றான். ௧௦

நீதியா நித்த கன்மம் நிகழ்த்திடச் சுபத்தை நீங்கார்
தீதிலா இச்சா கன்மஞ் செந்தழல் ஓம்பிச் செய்ய
ஏதுதான் வேண்டிற் றெல்லாம் எய்தலாஞ் சோம யாகம்
ஆதிதான் ஆசை வீசி அமைத்திட வீட தாமே. ௧௧

(உரை) அவரவர் சூத்திர முறைமையிலே சந்தியா அநுஷ்டானம் காயத்திரி செபமுதலிய பிராமணர் செய்ய ஏனைய வருணத்தாருந் தமக்குக் கற்பித்த விதிவழாமற் செய்யவே நன்மையை எப்பொழுதும் நீங்கார். குற்றமில்லாத இச்சாகன்மமாகிய வைசுவதேவ பலி கரணாதிகளும், தக்ஷிணாக்கினி காருகபத்தியம் ஆகவனீயம் முதலிய அக்கினிகளுஞ் செய்யத் தான் விரும்பியது யாது அவையெல்லாம் எய்தலாம். சோமயாக முதலிய யாகங்களைச் செய்யுமிடத்து அர்த்தத்தை மிகவுஞ் செலவழித்துச் செய்ய வீட்டின்பம் உண்டாகும். ௧௧

கருதிய கன்மம் ஞானம் இரண்டுங்கா லாகக் கொண்டு
மருவிட லாகும் வீடு மதிதனை மதித்துச் செய்தி
ஒருவிடில் பதித னாகும் பதிதனைக் கதியின் உய்க்கத்
தருவதோர் நெறிதான் இல்லை என்னவுஞ் சாற்றி னானே.

(உரை) சூத்திர விதிகளாலே கருதப்பட்ட கன்மமும் வேதஞ் சுயம்புவென்னு ஞானமும் ஆகிய இரண்டையும் இடமாகக்கொண்டு வீட்டின்பத்தைப் பொருந்தலாகும்; வேதம் சுயம்புவென்றறியும் ஞானமே அமையுமென்று நிச்சயித்துக் கன்மத்தைக் கைவிடிற் கன்ம சண்டாளனாகும். கன்ம சண்டாளனை மீள நல்லநெறியிலே யேறவிடுவதற்கு உண்டாவதோர் வழி வேதத்திலும் இல்லையென்று சொன்னான். ௧௨

பசுப்படுத்(து) யாகம் பண்ணப் புண்ணியம் ஆவ தென்று
வசிப்பினன் மறைகள் சொன்ன வழக்கினால் வாய்மை யாக
நசிப்பிலா மந்தி ரங்கள் நவிற்றலின் இன்ப மாகும்
பசிப்புளான் ஒருவன் உண்ணப் பசியது தீர்ந்த பண்பே.

**(உரை)** எப்பொழுதும் பசுபந்தனஞ் செய்து யாகங்களைச் செய்வது புண்ணியமாமென்று, குற்றமில்லாத இருக்கு யசு சாமம் அதர்வணம் என்னும் நாலுவேதங்களுஞ் சொன்ன விதிப்படி உண்மையாகக்கொண்டு கேடில்லாத மந்திரங்களைச் சொல்லுதலாற் போக மோக்ஷமாகிய இன்பத்தைத் தரும். அஃதென்போலவென்னில், மிகவும் பசிப்புளான் ஒருவன் உண்டல்செய்தாற் பசிதீர்ந்தின்பமுற்ற தன்மையாம். ௧௩

---

## பட்டாசாரியன் மத மறுதலை

வேதஞ் சுயம்புவென வேதந்த வாய்மொழியில் வேறும்
ப்ரமாண முளதேல், நீதந்து காணிங்கு மாதுங்க பாரதமும்
நேர்கண்ட தாகும் அதுபோல், ஓதுஞ் சொலாய்வருத
லானுங்க டாதிபட மோவந்தி டாஒருவரா, லேதந்த தாம
றைக ளாய்வந்த வாய்மொழியும் வேறிந்து சேக ரனதே.

**(உரை)** வேதஞ் சுயம்புவென்று பட்டாசாரிய! நீ கூறியவுண்மையொழிய நான் சுயம்புவென்று அவ்வேதந்தான் கூறிற்றில்லையாம். அஃதன்றியும், வேதம் அநாதியென்பதற்கு வேறு பிரமாணமில்லை. உண்டாயின் நீ சொல்லிக்காண் இவ்விடத்தே. மிகவும் பெருமையுடைய மகாபாரதம் பிரமாணமென்று நீசொல்லின் அதுவும் வியாசராலே சொல்லப்பட்டு வேதத்திற் கொப்பாய் ஐந்தாம் வேதமென்று வழங்கப்படுவதாம்; அதனாலும் அந்த மகாபாரதம்போல, ஒருத்தனாலே சொல்லுஞ் சொல்லாய் வருதலானும், மண்பாவையுங் கிழிப்பாவையும் செய்வார் ஒருவரின்றி வந்து தோன்றாமையானும், அவ்வேதமும் ஒருவனாலே சொல்லப்பட்டதேயாம். வேதம் ஒருவன் சொன்னதென்று சொல்லப்பட்டு வேறு இரகசியங்களாய் வருகிற சத்திய வசநமும் சந்திர சேகர னிடத்ததே. ௧

உரைதந்தி டான்ஒருவன் எனிலிந்த வானினிடை ஒலி
கொண்டு மேவி உளதாம், புரைதந்த வம்மறைகள் அபி
வெஞ்ச மாயொளிர்கை பொருள்தந்த தீப மதுவேல், வரை
தந்த தாலிவுரை கபிலன்சொ லாகுமது மறைகின்ற வாறும்.

வரவும், விரைவின்சொ லாயிதனை யெதுகொண்டு மேவுவது
விடைகொண்ட தாலு னுரையே. ௧௬௫

(உரை) வேதம் தானே யுண்டானதன்றி ஒருவன் சொல்லா னென்று நீ சொல்லின், இவ்வாகாசத்தின்கண்ணே பொருந்திய ஓசையைக்கொண்டு உண்டானதாக வேண்டும்; ஆகையால், வேதங் களுஞ் சொல்லும் பொருளும் விளங்காமற் குற்றத்தை யுடையவாம். அற்றன்று, வேதஞ் சர்வத்தையும் விளக்குவித்துத் தானும் நின்று விளங்குகை, விளக்கு பொருளைக்காட்டித் தானும் நின்று பிரகாசித் தாற்போல என்று கூறின், வேதத்தின் பெருமை இல்லையாய் ஓரெல்லைக்குள் அகப்பட்டதாம்; ஆகவே நீ உவமை கூறல் நிரீசுர சாங்கியன் சொல்லுஞ் சொல்லாம். அவ்வேதம் அருவாம் முறைமை யும் உருவாய்த் தோன்றும் முறைமையும் இங்ஙனமென்று விரை விலே சொல்லுவாயாக. வேதம் முன் அருவாய்ப் பின் உருவாய்த் தோன்றிச் சொல்லும், பொருளும் விளங்கச் சொல்லுமென்று நீ சொல்லுகின்ற இதனை யாது பிரமாணமாகக் கொள்வது? ஆதலால், நீ சொல்லுகின்ற சொல் பயனற்றுப் போனதாம். ௨

உருவின்க ணேமருவி வரில்இன்று தேரைஉரை உள
துங்கள் நூலின் மறையும், தருகின்ற நாதரவர் இவரென்று
நாமமது தரவந்தி டாமை யதனல், வருமென்று நேடியெனில்
வளர்கின்ற தீவதனில் வருகின்ற வாடை பலவால், ஒருதந்து
வாயனவன் இவனென்ற போதிலிவை உளதென்று நீடிய
வையே. ௧௬௬

(உரை) உருவின்கணே மருவிவரில் - வேதமானது யாதோர் உருவைப்பற்றி மனத்திடத்ததாய்ப் பிரகாசிக்குமென்று நீ சொல் லில்,—இன்று தேரை உரை உளது உங்கள் நூல் இன்மறையும்-ஒருரு வைப்பற்றி வருமென்னும் நியமம் இல்லாதபடியாலே இப்பொழுது தேரையிடத்துண்டாகிய சத்தத்திலும் உங்கள் நூலாகிய இனிய வேதம் உண்டாகும்,—தருகின்ற நாதரவர் இவரென்று நாமமது தர வந்திடாமையதனல் வருமென்று நேடியெனில் - வேதத்தை யுண் டாக்கியவன் இன்னனென்று பேர் குறித்து வேதஞ் சொல்லாதாகை யால் தானே தன்னை ஓதத்தக்க உருவைத் தேடி அஃதிடமாகத் தோன்றுமென்று நீ சொல்லில்,—வளர்கின்ற தீவதனில் வருகின்ற

ஆடைபலவால் - பல வளங்களும் வளர்கின்ற] தீவின்கண்நின்று வருகின்ற புடைவை பல பேதங்களையுடைத்து ; ஆகையால், ஒரு தந்துவாயனவன் இவனென்றபோதில் இவை உளதென்று நீடியவைபே - பல பேதப்பட்ட புடைவைகளைக் கண்டபொழுதே தந்துவாயனென்று சொல்லப்பட்டவனாலே இப்புடவை யுண்டானதென்று அறிந்தாற்போல வேதமுஞ் சத்தார்த்தமாகையால் ஒருவனாலே செய்பட்ட தென்றறிவாயாக. ௩

மறைநின்று நாலுதிசை யவர்ஒன்ற தாகவரும் உரை தந்த வாய்மை அதனால், நிறைவென்று நீடுமெனில் வனையுங்க டாதிபல சொலவொன்றி நீடியு ளதாம், குறைவின்றி நாடும் மொழி அவைசென்று கூடுவதோர் குணமுண்ட தாகு மலர் தான், உறைகின்ற மாலைதனில் உளதென்ற தாகுமெனின் உணர்வின்ற தாழி ஒலியே. ௧௬௭

(உரை) நான்கு திக்கிலும் பாஷை பேதிக்கப்பட்ட ஜாதிபேதங்களும் மற்றொரு நூல்போலாகாமல் ஒருமைப்பட ஓதிவரும் உண்மையாலே, வேதம் அநாதியாய் நிறைவையுடையதாய் நிலைபெறுமென்று கூறின், குலாலனால் உண்டாக்கப்படுங் கடாதிகள் பல பேதம் பொருந்தி அநாதியிலே உள்ளதாகிறதுபோலக், குற்றமின்றி யறியப்படுஞ் சொல்லும் பொருளுங் கூடும்படிக்குக் கூட்டுவதோர் கர்த்தாவுண்டாகவேண்டும் ; அற்றன்று, மாலையினுறையும் பூவுமணமும் அந்த மாலையினிடத்தினுள்ள வல்லவாய் முன்பே யுண்டாயவற்றைப் பின்பு மாலையாகக் கூட்டினாற்போலச் சத்தமும் அர்த்தமும் முன்பே யுள்ளவாய்ப் பின்பு மூர்த்திகளாலே கூட்டப்பட்டவென்று கூறின், அம்மூர்த்திகள் சத்தத்தை அறிந்து கூட்டப்பட்டார்கள் அன்றாகில் உன்வேதம் ஆழியின் ஓசையை ஒக்கும். ௪

உடல்நின்று நாமுணரு மதுகண்ட வாரொருவன் உலகங்க ளேஉ ருவமாய், இடைநின்று மாமறைக ளவைஅன்று வாய்மொழிய இவைகொண்டு லோக நெறியின், கடனின்று வாழுமது கருதும்பின் ஆணைவழி கருமஞ்செய் காசினியுளோர், திடமென்று சீர்அரச னுரைதங்கும் ஓலைதிரு முகமென்று சூடு செயலே. ௧௬௮

(உரை) சரீரத்தினின்று நாமுணருமது கண்டபடியாலே, ஒரு கர்த்தாவானவன் பிரபஞ்சமே திருமேனியாய்ப் பிரபஞ்சத்திடையிலே யெழுந்தருளி நின்று, மகிமையுடைய வேதங்களை அநாதியிலே திருவாய் மலர்ந்தருள, பின்பு அவ்வநாதியைக்கொண்டு பிரபஞ்சமானது அவ்வேதங்களின் முறையிலே நின்று வாழுமதனைக் கருதி அநாதியென்றுஞ் சுயம்புவென்றுஞ் சொல்லாநிற்கும்; அஃதென் போலவென்னின், உலகநாயகனாகிய ஓரரசன் ஆணைவழி யொழுகும் உலகத்தினுள்ளார்க்குத் திடமாக அவ்வரசனுரை வரைந்த ஓலையைத் திருமுகமென்று மங்கல மரபினாற் கூறித் தலையில் தரித்து அவ்வரசனைப்போலச் சிறப்புச் செய்கையாம். ரு

முடிவின்றி வேதியர்கள் முதல்வந்த மூவர்களும் மொழியுஞ்சொல் ஆரிய மெனில், கடிவின்றி யேகணித ரவர்கண்டவாறதுவென் வடகண்ட சாதி கடியா(து), ஒடிவின்றி ஓதுவதென் உரைதங்கு வேதமொழி உளதென்று கூறுமவர்தாம், அடியின்று தானெனும தறிவின்றி ஈனுமவர் இலையென்ற ஆதரவதே. ௧௧௬

(உரை) ஆரியமாகிய வேதமே கேடில்லாத பிரம க்ஷத்திரிய வைசியர் என்னும் மூன்று சாதியும் ஓதுஞ்சொல்லென்று நீசொல்லின், ஏனைய வருணத்துள்ளாராய்ச் சோதிடஞ்சொல்லுமவர்கள் வேதத்துக்கங்கமாகிய சாத்திரத்தை ஓதாமல் அறியும்படி எங்ஙனம்? அஃதன்றியும், இந்தத்தீவின் வடகூற்றினுள்ளார் மற்ற வருணத்தார் வேதத்தை ஓதத் தகாரென்று நீக்கப்படாமல் எல்லாராலும் ஓதப்படுவானேன்? ஆதலால் நீக்கப்படாதாயிற்று. எல்லார் சொல்லுந் தன்னிடத்திலே யுடைத்தானவேதம் சத்தமாகவுள்ளதென்று கூறுமவர் தாமும், வேதத்துக்கு மூலகர்த்தாவில்லையென்று சொல்லுமது, பிறந்த பிள்ளைக்குப் பெற்றவர் இல்லையென்று அறிவிலாது விரும்பிக் கூறுதல்போலும்.

கடிவின்றி - நீக்கமின்றி. ஒடிவின்றி-தவிர்தலின்றி. ஈனுமவர் - உண்டாக்குமவர். ஆதரவு - இலக்கணை. முடிவின்றி வேதியர்கள் - அளவிறந்த பிராமணர்கள். முதல்வந்த மூவர்களும் - பழைய பிரம விட்டுணு ருத்திரர்களும். கடிவின்றியே கணிதரவர்கண்டவாறது வென் - கடியாது கணித நூல்களும் ஒருவர் சொல்லாமல் வந்ததாம்.

வடகண்ட சாதிகடியா - வடபூமியிலுள்ளாருங் குறைபடாமல் வேதஞ் சுயம்புவென்றே சொல்லா நின்றார்கள் என்றலுமாம். ௬

அறிகின்ற பான்மைஅவ யவநின்ற தாகில்அணு அழி யுங்க டாதி யெனவே, செறிகின்ற வாறதிலை யெனின்வந்து சேருமது திடமன்றுகூட வொருவன், குறிகொண்டு காரின் முளை வருகின்ற பீசமவை குலையொன்றி வேனி லழியும், உறுகின்ற காலமவை உடனின்று போயழியும் உலகென்று நீடி யிலதே. ௨00

(உரை) ஆன்மாவானது பேதப்பட்டுச் சரீரவவயவத்தைத் தானறி யும் பகுதியிலே கூடிநின்றதாயின் அழியுந் தகுதியையுடைய சரீ ராதிபோல ஆன்மாவும் அழிந்துபோம். ஆன்மா அந்தச் சரீரவவயவத் தைச்சேராது சரீரவவயவந்தானே சென்று ஆன்மாவைச் சேருமென்று கூறின், சரீரவவயவந்தானே ஆன்மாவைக்கூடும் நிலைமையுடைத் தன்று; கர்த்தாவொருவன் குறிக்கோளாகக்கூட்டுகையாலே ஆன் மாவுஞ் சரீரமுங் கூடிவரும், முளைகளானவை கார்காலத்து விதையி னின்று முளைத்துவரும் வேனிற் காலத்துத் தகுதி வேறுபட்டழி யும்; அங்ஙனம்போல், பிரபஞ்சமானது சிருஷ்டி திதி சங்காரமென்று கூறப்பட்ட மூவகைத்தொழிலுற்ற காலத்துடனே கூடித்தோன்றி நின்று கெடுமாகையாற், காலத்தோடுங் கூடிவரும் பிரபஞ்சமானது எந்நாளும் நிலைபேற்றையுடையதன்றாம். ௭

நிறைவெங்கு மாகில்உயிர் நெறிநின்று போய்வருதல் அணைவின்ற தாம் உடலிலே, குறைவின்றெ லாமும்உள குடகந்த மாகில்அவை விடநின்ற வாறு குறியா, உறைகின்ற மாதவர்கள் உடனின்று போய்வறிதோர் உடல்கொண்டு மீள்வ துணராய், மறைதந்த வாய்மைதனில் நிறைவின்றி யேயுலகின் மலைகின்ற தாலுன் உரையே. ௨0௧

(உரை) ஆன்மாவானது பிரபஞ்சமெங்கும் நிறைந்து நிற்கு மாயின், ஆன்மாவானது நித்திய கன்மமுதலாகிய நெறிகளிலே பொருந்தி நின்று அந்த நெறிக்குத் தக்க சுவர்க்காதிபதங்களிலே சென்று புண்ணியப்பயனை புசித்துப் புண்ணியகன்மந் தொலைந்தால் மீளவும் வருமென்னும் வேத வாய்மையில்லையாம்; அற்றன்று,

எல்லா ஆன்மாக்களும் சரீரத்திலே குடத்திற்கட்டின பூமணம்போல நிறைந்துநிற்குமென்று கூறுகின்றாயாயின், அவ்வான்மாக்கள் சரீரங் கெட்டபோது தாங்கெடாமல் உடலைவிட்டு நிற்கிறவழியைக் குறிக் கொள்ள மாட்டா,—உடலின்கண் உறைகின்ற மகாயோகிகள் அவ் வுடலைவிட்டுப் பரகாயப்பிரவேசஞ் செய்வதும் வருவதும் அறியாய். வேதஞ் சொன்ன சத்தியமான அர்த்தத்தில் உனக்கு நிறைவில்லை யாதலால் நீ சொல்லுகின்ற சொல்லும் உலகத்தின்கண் மாறுபாடு பொருந்திற்று. அ

அழிகின்ற தால்வினைகள் ஆகின்ற வாறெனொரு வது மங்கி யான பரிசேல், ஒழிவின்றி ஓதநமும் அறவுண்ண நாம் வினைகள் உறுகின்ற வாறதெனலாம், கழிகின்ற தாலறிவு வினைதந்தி டாவினைஞர் கருமங்கள் நாடி யுறுவோர், பழு தின்றி யேஉதவும் அதுபண்ப தாகஅருள் பரமன்க ணாகும் வினையே. உ೦உ

**(உரை)** ஒருவன் செய்த கன்மங்கள் இக்காயங்கெடக் கூடக் கெடுமாகையாற் கன்மம் மேலைக்கு வந்துண்டாம்படி எங்ஙனம், வய லுக்கிட்ட எரு தனது தூலமுறைமைகெட்டுச் சூக்கும முறைமை யாகி வீரியங்கிடந்து பயிருக்கு நன்மை கொடுக்குமாறுபோலச் செய்த கன்மமும் உடலோடு தூல முறைமைகெட்டு ஆன்மாவோடு சூக்கும முறைமையாகிப் பொருந்து மென்று நீசொல்லின், நாம் நாடோறும் உண்ணும் உணவு செரிக்கக் கழிந்தமலம் பயனை அனுப விக்க வினைவருகின்றவாறு மீளவும் நமக்கு நன்மையைத்தருமென் பார் கூறுங்கூற்றெனலாம், காயத்தோடுஞ்செய்த வினைகெடுகையால் அவ்வினை ஆன்மாவையறிந்து கூடமாட்டாது ; அதுகூடும்படி, தொழில்செய்தோர்க்குச் செய்ததொழில்கண்டு தொழில்கொள் வோர் அவ்வவர்தொழிற்குத் தக்கதொத்துப் பழுதறக்கொடுக்குந் தன்மைபோல, ஆன்மாக்கள்செய்த புண்ணிய பாவங்களையறிந்து அப்புண்ணிய பாவங்களுக்கீடான புசிப்புக்களைக் கொடுத்தருளிப் புசிப்பிக்குந்தொழில் பரமேசுவரனதாகும். கூ

கருமங்கள் ஞானமது வுடன் நின்ற லால்மருவு கதி தங்க லாகு மெனின்நீ, தரும் அங்க ராகமுதல் அவைதங்க

மேலறிவு தவிரும்பின் வீடும் அணையா, பொருள் நின்று தே
டிவரு பயன் உண்டு போகவினை புரிகின்ற வாற தெனவே,
திருநின்ற போகம் வளர் அவிசென்று மேவியது செலவுண்டு
சூழ்வ செயலே. ௨௦௩

**(உரை)** நித்திய கன்மமுதலிய கன்மங்களை ஞானங்கூடி நிற்றலாலே அழிவில்லாமையைப் பொருந்தின வீட்டின்பத்தைப் பொருந்தலாம் என்று நீ கூறின், கன்மங்கள் செய்யுமிடத்துத் திரவியார்ஜிதம் வேண்டுகையாலே ஆசைமுதலியனவுண்டாம். அவ்வாசை முதலியனவுண்டாகவே ஆன்மாப் பாசஞானமாய்நிற்கும். அந்தப் பாசஞானத்தாலே மோக்ஷமும் அடையாது; ஒருவன் பொருளைத்தேடி அதனால் உண்டாயபயனை அதிலேநின்று புசித்து அந்தப் பொருள்மாளவே மீளவும் பொருள்தேடுதற்கு முயல்கின்றதனையொப்ப, வெகுவான ஆகுதி செய்கையினாலே அவ்வாகுதிசென்ற புண்ணியத்தால் மிக்க சுவர்க்கபோகங்களைப் பொருந்தி அப்புண்ணியந் தொலையுமளவும் புசித்துத் தொலைய மீளவும் புண்ணியகன்மஞ்செய்ய நினைக்கின்ற செயல் உன் செயல். ௪௦

---

## பிரபாகரன் மதம்

அருந்தவனும் சைமினிபண் டாரணநூல் ஆய்ந்தானாய்த்
திருந்தும்உல கினிற்கொண்டு செப்பியநூல் திறமதனைப்
பரிந்துபிர பாகரன்பட் டாசானில் வேறாகிப்
புரிந்துரைசெய் நெறியதனைப் புவனிமிசைப் புகன்றிடுவாம்.

**(உரை)** அரிய தவத்தினையுடையனாகிய சைமினி முனிவன் முன் வேதநூலை ஆராய்ந்தானாய் நல்ல வுலகின்கண்ணே தான் சொல்லுகின்ற வழிக்குப் பொருந்தத்தக்கவற்றை வேதத்திலே நின்றெடுத்துக்கொண்டு சொல்லப்பட்ட அவனது சூத்திர முறைமையினைப் பொருந்திப் பிரபாகரன் பட்டாசாரியனாற் சொல்லப்பட்ட பாட்டத்தின் நெறியிலே வந்து அதிற் சிறிது வேறுபடச் சொன்ன வழியதனை யெடுத்து நாமும் பூமியின்கண்ணே சொல்லா நின்றோம்.

அருஞ்செயலின் அபாவத்தே அபூர்வமெனும் அது
தோன்றித், தருஞ்செயல்நின் றழியில்பின் பலிப்பிப்ப தாகு

மது, வருஞ்செயல்லொன் றின்றியே மண்சிலைபோ லாமுத்
தித், தருஞ்செயலீ தெனவுணர்ந்து தாரணிமேல் அவன்
சாற்றும். ௨0௫

(உரை) அரிதாகச் செய்யுங் கன்மத்தை யொழிந்தவிடத்திலே அபூர்வமென்ப தொன்றுண்டாய், அந்தக் கன்மத்திலே அறிவு கூடி நின்று தொழிற்பட்டுக் கன்மமுடிந்தபொழுது, பின்புதானின்று பிரயோஜநப் படுப்பிப்பதாம், அவ்வறிவுங் கன்மமுங்கூடி வருந் தொழிலொன்று மின்றியே, வீட்டுநெறியைத் தருகிற செய்தியாவது மண்போலவுங் கல்லுப்போலவும் அறிவுந்தொழிலும் அற்றிருத்த லாம். மண்போலவுங் கல்லுப்போலவும் அறிவுஞ்செயலும் அற்றிருப் பதே முத்தியென அறிந்து பூமியின்கண்ணே இத்தன்மைத்தென்று பிரபாகரன் சொல்வான். ௨

---

## பிரபாகரன் மத மறுதலை

வேறுபலந் தருவதுதான் வினையென்று வேதங்கள்
கூறவோர் அபூர்வந்தான் கொடுக்குமெனக் கொண்டவுரை
மாறுதரு மறையோடு முன்பின்றி வந்ததால்
தேறியவிண் பூமுடிமேற் சேர்ந்துமணந் திகழ்ந்ததுவாம்.

(உரை) முன் ஜநநத்திற்செய்த இருவினையும் இந்த ஜநநத் திலே பலபேதப்பட்டுச் சுகதுக்கங்களைக் கொடுக்குமென்று உன் வேதங்கள் சொல்லாநிற்கவும், முன் ஜநநத்திற் செய்த வினைக்கு இந்த ஜநநத்திலே பலத்தைக்கொடுப்பது அபூர்வமென்பதொன் றென்று பிரபாகரா! நீ மெய்யாகக்கொண்டு சொல்லப்பட்ட சாத்திரம், வேதத்தோடு மறுதலைப்படும். செய்த கன்மத்தினுடைய பலம் அநாதி யிலில்லையாய்ப் பின்பு அபூர்வமென்பதொன்றினாலே வந்ததாயின், வாட்டமில்லாத குளிர்ந்த ஆகாயப்பூவுக்கு முன்பு மணமில்லாமல் தலையிலே சேர்ந்தபின்பு மணமுண்டானதென்று சொல்லுந்தன்மை போலும். க

ஆநந்தம் கதியென்ன அறிவழிகை வீடென்கை
ஊனம்பின் உணர்விழந்தோர்க் குளதாகும் உயர்முத்தி

தானிங்குச் சிவப்பொழியத் தழல்நிற்கு மாறில்லை
ஞானங்கெட் டுயிர்நிற்கும் எனுமுறைதான் நண்ணுதால்.

(உரை) பரமாநந்தமே வீடென்று வேதங்கள் சொல்லவும் நீ ஆன்மாவினதறிவுகெட்டு மண்போலவுங் கல்லுப்போலவு மாதல் வீட்டின்பமென்று கூறியது குற்றமுடைத்து; அப்படி அறிவுகெட்ட ஆன்மா முத்தியடைவானுயின், மூர்ச்சைவந் தறிவுகெட்டவர்களுக் கும் மிக்க வீட்டின்பம் உண்டாகவேண்டும்; அஃதன்றியும் இவ் விடத்து நெருப்பானது தன்சொரூபமாகிய சிவப்புக்கெட்டால், தானுங்கூடக் கெடுதலன்றி அந்நெருப்பு நிற்கும் வழியில்லையாம்; அதுபோல, ஆன்மாவானது தன்சொரூபமாகிய அறிவுகெட்டால் தானுங்கூடக் கெடுதலன்றி ஆன்மாநின்று வீட்டின்பத்தை அநுப விக்குமென்று சொல்லுஞ் சொற்பொருந்தாது; ஆகையால், அறிவு கெட்டுக் கல்லுப்போலவும் மண்போலவுமாய் முத்தியடையும் என்னு மது குற்றமுடைத்து. ௨

## சத்தப்பிரமவாதி மதம்

உரையா னதுமை யலினுல் உலகாம்
புரையோ ருணரும் பொருள்பொய் யிதனை
விரையா துணரும் அதுவீ டெனவே
வரையா துரைவா திவகுத் தனனே. ௨0அ

(உரை) சத்தமானது மயக்கத்தினுலே பிரபஞ்சமாம். அறியா தார் அர்த்தமுஞ் சத்தத்துக்கு உண்டென்று விசாரிப்பது மெய்யன் றும். சத்தமே பிரமமாவது, அர்த்தமில்லையென்றறியும் அறிவே வீட்டின்பமாவதென்று,—சத்தப்பிரமவாதி பிரபஞ்ச பேதத்தை யெல்லைப்பட அறியாது சத்தமேயுள்ளதென்று வகுத்துச்சொன் னுன். க

பரிணு மம்விவர்த் தநம்மா யம்அதில்
தருமாம் உலகுள் ளதுசத் தமதே
பொருளா வதுசொல் நலம்அல் லவெனில்
மருவா துபொருட் டிறமற் றிலையே. ௨0க

**(உரை)** சத்தத்தாலே பரிணமித்து மிகவும் உண்டாதலே மயக்கமாம். அந்த மயக்கத்திலே உலகத்தை யுண்டாக்கப்படுவது மாகையால், உள்ளதாகக் காணப்பட்டது சத்தமொன்றுமே, சத்தத்துக்கு அர்த்தமென்று சொல்லப்பட்டது அச்சத்தத்தின் நன்மையேயாகும். சத்தத்தின் நன்மையன்று அர்த்தம் அர்த்தத்தின் நன்மையே சத்தமென்றுகூறின், சத்தங்கூடா தொருபொருளுண்டாவதில்லை; ஆதலாற் சத்தத்தின் நன்மையே அர்த்தமாம். உ

பூமா வெனவே உரையும் பொருளும்
ஆமாம் பொருளொன் றில்அனைந் திலதால்
நாம்ஆ தரவெய் துசொல்நன் கருவாய்த்
தாமாம் பொருள்நெற் பொரிதா னெனவே. உகO

**(உரை)** பூவெனவும் மாவெனவும் இரண்டுசொல்லுளவாய் அவற்றிற்குப் பொருள் கூறுமிடத்துப் புட்பமென்றும் இலக்குமியென்றுங் கூறப்படும். அப்படிக் கூறப்படும் பொருளொன்றிலே சத்தம் அடங்காமற் பூமியெனவும் விலங்கெனவுஞ் சொல்லப்பட்ட பொருளையுங் கொள்ளப்படுமாதலால், நாம் விருப்பத்தைக்கொண்டு சொல்லுஞ்சொல்லே நல்ல கருப்பமாகக்கொண்டு பல பொருள்களுமுண்டாம்; அஃதென்போல வென்னில், நெல்விற்றோன்றும் பொரிக்கு நெல்லே கருப்பமானாற்போல அர்த்தத்துக்குச் சத்தமே கர்ப்பமாம்.

பொரிக்கு வன்னபேதமும் நாமபேதமும் உண்டாயினும் நெல்லே அதற்குக் கருப்பமானாற்போல அர்த்தம் பலபேதப்படினுஞ் சத்தமே கருப்பமாமென்பது கருத்து. ங

சொல்வந் தெழலும் பொருள்தோன் றுதலால்
சொல்லே பொருளென் றுணிந் திடுநீ
சொல்லும் பொருளும் உடனின் றதெனின்
சொல்லும் பொருளின் றுசொல்நின் றதுவே. உகக

**(உரை)** யாதொருசொல் தந்ததால் ஓட்டங்களாலே யுண்டாக அந்தச்சொல்லிலே பொருளும் உண்டாமாதலாற் சொல்லே பிரதானமென்று நீ தெளிந்திடுவாயாக; அற்றன்று,—சொல்லும்பொருளும்

உடனிற்கையாற் பொருளுந்தனியே யொருமுதலென்றுகூறின், ஒருசொற்குப் பொருளுரைக்குமிடத்துப் பொருளுஞ்சொல்லாமாத லாற் சொல்லொழிந்து பொருளொன் றொன்றுண்டாவதில்லை; அத னாற் சத்தமே பிரமமென்று கொள்வாயாக. ௪

---

## சத்தப்பிரமவாதி மத மறுதலை

உரையா னதுமை யலினுல் உலகேல்
உரையாய் ஒருமை யலும்உள் ளதென
வரையா துணரும் அதுவண் கதியேல்
வரையா மறையோ டுமலைந் தனையே. ௨௧௨

(உரை) சத்தமானது பரிணாமவிவர்த்தனமாகிய மயக்கத்தினாலே பிரபஞ்சமாமென்று கூறினாய்; அங்ஙனமாயின், சத்தமே சர்வமுமாம் என்பதன்றிச் சத்தத்திலேகின் றுண்டாகத்தக்கதொரு மயக்கமும் உண்டென்று சொல்லாய். அஃதன்றியும் பொருளை வரையாமல் சத்தத்தைப் பிரமமென்று குறித்துணர்தலே நல்ல முத்தியென்று கூறினாய்; அங்ஙனமாயின் வேதத்திற் சொல்லப்பட்ட கன்மத்தை யும் ஞானத்தையும் செய்வதும் உணர்வதுஞ் செய்யாமல் முத்தி யடையலாமென்று வேதத்தோடு மறுதலைப்பட்டுக் கூறினாய்.

வேதஞ்சொன்னபடி கன்மஞ் செய்தானாயினும் ஞானமுணரா தார்க்கு முத்தியில்லையென்று வேதாகம சாத்திர புராணங்கள் சொல் லவுஞ் சத்தமே பிரமமென்றறியும் அறிவால் முத்தியடையலாமென் பது மாறுபாடு. ௧

அருவம் உரையா தலின்அவ் வுருவாய்
மருவும் பரிணா மம்மறந் திடுமாம்
பருகுந் ததியா னதுபா லதெனில்
உருவம் அதுவாய் அழியும் உரையே. ௨௧௩

(உரை) அந்தச் சத்தமானது அரூபமாதலாற் பிரபஞ்ச ரூபமாய்ப் பரிணமித்துப் பொருந்துதலை நினைக்கமாட்டாதாம்; அற்றன்று, குடிக்கும் பகுதியான பாலானது தின்னும் பகுதியாகிய தயிராய் உருப்பெற்றாற்போல அருவமாகிய சத்தம் உருவமாகிய பிரபஞ்சமா யுருப்பெறுமென்று நீ கூறின், அத்தயிர் மீளவும் பாலாகுந் தன்மை

யின்றித் தயிராய்நின்றழியுந் தன்மைபோல, சத்தமும் பிரபஞ்சமாய் உருப்பெற்றால் மீளவுஞ் சத்தமாகுந் தன்மையின்றிப் பிரபஞ்சமே யாய் நின்றழியும். உ

ஆயம் உடன்அந் தவிவர்த் தநமும்
மாயவ் வுளதென் றுசொல் எவ்விடமு
மாய்நின் றமையின் உரையின் நலமும்
ஆயும் பொருளுக் கறிநா மமதே. உகச

(உரை) சத்தத்தின் வரவு பிரபஞ்சமாய் வருதலும் பலரூபங் களாய்ப் பரிணமித்து வருதலுஞ் செய்கையால் சத்தத்துக்கு இப்போ தழிவுண்டாதல் வேண்டுமென்று சொல்லாய்; அஃதன்றியும், சத்தத் துக்கு நன்மை யென்றபொருள் எவ்விடமுமாய் நின்றமையின் அப் பொருளை யாராயுமிடத்து அப்பொருளுக்குப் பெயர்ச்சொல்லாய் நின்று பொருளை விளக்குவதே நன்மையென்றறிவாயாக.

எனவே, சத்தத்தினும் அர்த்தமே சிறப்பையும் நிலைபேற்றை யும் உடைத்தென்பது கருத்து. பரிணாமமாகின் நெருப்பென்ற போது நெருப்பா யெழுந்திருக்கவேண்டும்; விருத்தியாகின் நெருப் பென்றபோது வாய்வேகவேண்டும்; ஆதலால் தாதான்மியமுமன்று ததுற்பத்தியுமன்று இடுகுறிப்பெயரா மென்றதெனக்கொள்க. ங

உரைபோல் பொருளுக் குருவின் மையினவ்
உரையே பொருளென் றணைஇன் றரியென்
உரையே கவிமா லவனுக் குளதாம்
உரையாய் கவியா கவொர்மா லிணையே. உகரு

(உரை) சத்தத்தைப்போல அர்த்தத்திற்கும் உருவமில்லாமை யினால் அச்சத்தமே அர்த்தமென்று கூறினாய். இன்று அரியென்று சொல்லப்பட்ட சத்தம் திருமாலினுக்குங் குரங்குக்கும் மற்றும் பல பொருட்கும் பெயராகச்சொல்லலாம்; அதனைப் பொருள்தன்மை யிலே நின்றுஞ் சத்தங்கொள்ளாமற் சத்தத்தின் தன்மையிலே நின் றும் பொருள் கொள்ளலாமாகில், திருமாலைக் குரங்காகச் சொல்வா யாக.

எனவே, சொல்வேற்றுமையும் பொருள்வேற்றுமையும் உண் டென்பதாயிற்று. இதனால், சத்தமும் பொருளும் ஒன்றுபட்டிருந் தாலும் இரண்டும் வேறென்றே காண்க என்றதாம். ச

'நெல்லில் பொரியா வதுநீ டழலில்
சொல்லில் பொருளொன் றுடுதொக் கிடலால்
கல்வித் திறமாம் உரைகாட் சியினால்
மல்லற் பொருள்சா லவளந் தருமே. ௨௧௬

(உரை) பொரிக்கு நெல்லே கர்ப்பமானாற்போலப் பொருட்கெல்லாஞ் சொல்லே கர்ப்பமென்று கூறினாய்; அங்ஙனமாயின், நெல்லு மிக்க நெருப்பினைச் சேர்ந்தாற் பொரியாவதாதலால் நீ கூறியது உவமையன்று. பூமா முதலிய வொருசொல்லிலே பல பொருள்கூடி நிற்றலால் அதனை யறியக்கற்பதே சத்தம்; அப்பொருளைப் பிரித்தறியப்பட்டால் நல்ல வளப்பத்தினையுடைய பொருள்தானே நின்று மிகவும் நன்மையைத் தருமாதலால் நீ கூறிய சத்தத்திலும் அர்த்தமே சிறப்புடைத்து. ௫

முன்கண் டபொருள்பெயரா தலினால்
பின்கண் டபிழம் புணரும் பெயரால்
நன்கண் டபொருட் கொருநா சமதின்(று)
என்கண் டனைகா ரணமின் றழிவே. ௨௧௭

(உரை) முன் அறிவினாற் காணப்பட்ட அர்த்தமே சத்தமான பெயராய் நிற்கையாலும், பின்காணப்பட்ட உருக்களைச் சத்தமான பெயரைக்கொண் டறிகையினாலும், நன்றாகக் காணப்பட்ட அர்த்தத்துக்குக் கேடில்லையாம்; எனவே, சத்தத்துக்குக் கேடுண்டாம், காரியமாகிய சத்தமழிதலே யன்றிக் காரணமாகிய அர்த்தம் அழியுமென்று சொல்லுகை எப்படி யறிந்தாய்.

எனவே, அர்த்தங் காரணமென்றும் பிரதானமென்றுமாயிற்று. என்கண்டனை யென்பது - ஏதுகொண்டு கண்டாயென வினாவியது.

பொருள்இந் திரியம் உணர்வோ டுமான்
இருளின் றியிடும் ஒளிஇத் தனையும்
மருவும் பொழுதில் வருஞா னமதின்
ஒருவும் பெயர்அர்த் தம்உதித் திடுமே. ௨௧௮

(உரை) ஆன்மா ஒரு விடயத்தை யறியும்போது, அறியப்படு பொருளும் அதனைக் காட்டும் இந்திரியமும் அதனோடு கூடியுணரும் அந்தக் கரணங்களும் அவற்றிற்கு மூலமாகிய பிரகிருதியும் அவற்றை

வெளியாகத் தோற்றுவிக்கிற திரோதான சத்தியுமாக இத்தனையுங் கூடுமளவில் ஆன்மாவுக் கறிவுண்டாம். அவ்விடத்திற் பெயர் நீங்கப் படும் பொருள் தோன்றப்படுமாதலால் அர்த்தமே பிரதானம்.

இருளின்றியிடும் ஒளியென்பது - கன்மத்துக்கீடான புசிப்பிற் செலுத்துகையால் திரோதாயி ஒளியென்றாயிற்று. ஒருவும் - நீங்கும். ஆண்பனையிற் குரும்பை தோன்றினது பெரியோர் வசனமாகிய சத்தத்திலே யன்றோவென்னில், அவர் சிவோகம் பாவனு பலத்தினுல் உண்டான தொழியக் கேவலஞ் சத்தத்திலுண்டானதன்று; உண்டாகில் எல்லா வசனங்களினும் உண்டாக வேண்டுமெனக் கொள்க. எ

அத்தம் தெளிதற் கொளியா னதுபோல்
சத்தம் பொருள்தான் அறிதற் குளதாம்
நித்தம் அதுவன் றுரைநின் றழியும்
சித்தன் ஒருவன் உரைசெய் தனனே. உகசு

**(உரை)** இருளின்கட் கிடக்கும் பல பொருள்களைத் தெரிதற்குக் கைவிளக்குண்டான தன்மையைப்போல, பல பேதப்பட்ட பொருள்களையும் அறிதற்குச் சத்தமுண்டானதாம், அந்தச் சத்தம் நிலைபேறுடைத்தன்றாய்ப் பொருளாகிய காரண மில்லையாயில் தானுங் காரியப்படாதழியுமாகையால், இந்தச் சத்தஞ் சித்தனாகிய பரமேசுவரனாலே யுண்டாக்கப்கபட்டதாதலால், அதனைப் பிரமமென்று சொல்லக்கடவையன்று. அ

---

## மாயாவாதி மதம்

நானே பிரமம் என்றுரைத்து ஞாலம் பேய்த்தேரெனஎண்ணி, ஊனே புகுந்து நின்றுயிர்கட் குபதேசங்கள் உரைத்துவரும், மாறு மதிகே டனுமாய மாயா வாதி பேயாகித், தானே உரைக்கும் அந்நூலின் உண்மை தன்னைச் சாற்றுவாம். உ௨௦

**(உரை)** ஆன்மாவுஞ் சிவமு மென்னுது அகம்பிரமமென்று சொல்லிப் பிரபஞ்சமெல்லாம் கானற்சலம்போலப் பொய்யெனக் கருதிக் கருப்பாசயம் நீங்காமல் நின்று தான் மற்றுள்ள ஆன்மாக்

களுக்கு உபதேசங்கள் சொல்லித் திரிகின்ற நாணமில்லாத அறி வீனனாகிய மாயாவாதி பித்தேறி வேதாகமங்களுக்குப் பொருந்தாமல் தனக்குப் பொருந்தத்தானே சொல்லிக்கொள்ளும் அந்த நூலினது உண்மையின் தன்மையைச் சாற்றுவாம்.

ஊனே புகுந்துநின் றெனபது - தான் பிரமமாயின் ஊனிற்புகு தல் வேண்டாவென்பது கருதியென்க. உயிர்கட் குபதேசங்களு ரைத்து வருமென்பது - சர்வ ஆன்மாக்களுந் தன்னைப்போலப் பிரம மாகையால் உபதேசஞ் சொல்லவேண்டா என்பது கருதியென்க. க

அறிவாய் அகில காரணமாய் அநந்தா நந்த மாய்அரு வாய்ச், செறிவாய் எங்கும் நித்தமாய்த் திகழ்ந்த சத்தாய்ச் சுத்தமாய்க், குறிதான் குணங்க ளொன்றின்றிக் கூறும் வேதம் தனக்களவாய்ப், பிறியா அநுபூ திகந்தனக்காய் நின்ற தநதப் பிரமந்தான். உ௨க

**(உரை)** ஞானமே சொரூபமாய்ப் பிரபஞ்சத்துக்குக் காரணமாய் எல்லையில்லாத ஆனந்தமாய் உருவமின்றி அருவமாய் எங்கும் நிறைந்து நிற்பதாய்க் கேடிலாதாய் விளங்குஞ்சத்தாய் அசுத்தத் துடன் கூடாது சுத்தமேயாய், ஓரடையாளமும் ஒருகுணமுமில்லை யாய்ச் சொல்லத்தக்க வேதங்கட்கு வரம்பாய் நீக்கமில்லாத அநுபூதி தனக்கே யுடைத்தாய் நின்றது உயர்ந்த பிரமம்.

பிறியா வநுபூதிகந்தனக்காய் என்றதனல், ஞாதிரு ஞான பேத மில்லை என்பதாயிற்று. உ

ஒன்றும் இரவி பலபாண்டத் (து)உண்டாம் உதகத் தங் கங்கே, நின்றாற் போல உடல்தோறும் நிகழ்ந்து நிற்கும் பொருள் மேற்கண், சென்றாற் போலப் புலன்களுக்குஞ் சிந்தை தனக்குந் தெரிவரிதாம், என்றால் காட்சி முதலாய இருமூன் றளவைக் கெட்டாதால். உ௨உ

**(உரை)** ஓராதித்தன் ஆகாசத்திலே நிற்கப் பல பாத்திரங்களி லும் உண்டாகிய ஜலங்களிலே தனித்தனியே தோன்று மாறுபோல, ஏகமாகிய பிரமம் உடல்கள் தோறுந் தனித்தனியே தோன்றப்பட்டு நிற்கும், அவ்வாதித்தன் பாத்திர வுதகங்களில் அகப்படாமல் மேற்பட இயங்குகின்றாற்போல, அந்தப் பிரமம் உடலில் அகப்படாது மேற் பட்டு இந்திரியங்களுக்கும் கரணங்களுக்கும் அறிதற்கரிதாய் நிற்கும், இப்படிச் சொல்லப்படுகையாலே காட்சி முதலாய ஆறளவைக்குந் தெரிதற் கரிதாம். ௩

பொருள்மேற்கண் பாத்திரத்திடத்துக் கண்ணன தோடிக் கண்டாற்போல அறிவுகளுக் கிராவணன் பலதலையுங்கொண்டு வியாபரித்தாற் போலவும் ஆயிரம் பணாமுடியையுடைய அநந்தனைப்போலவும் ஒருவனுமே பலமுகமாய் வழங்காநின்றான். இருமூன்றளவை—பிரத்தியக்ஷம், அநுமானம், ஆகமம், உபமானம், அருத்தாபத்தி, அபாவம்.

இருளில் பழுதை அரவெனவே இசைந்து நிற்கும்
இருங்கதிர்கள், அருளப் பழுதை மெய்யாகி அரவும் பொய்
யாம் அதுவேபோல், மருளில் சகமுஞ் சத்தாகி மருவித்
தோன்றும் மாசில்லாத், தெருளில் சித்தே சத்தாகும் பித்
தாம் சகத்தின் செயலெல்லாம். உஉ௩

**(உரை)** இருளின்கட் புற்றருகே ஒரு பழுதை கிடப்ப, அதனைக் கண்டோர் பாம்பெனவே பொருந்திநிற்கும் அளவில் ஆதித்த கிரணங்கள் தோன்றப் பழுதை மெய்யாய்ப் பாம்பு பொய்யாம் அதுபோல், பொய்யாகிய பிரபஞ்சத்தினுடைய செயலும் மயக்கத்தாலே மெய்யாகப் பொருந்தித் தோன்றும், மயக்கமற்ற பிரமஞானம் விளங்கின காலத்துப் பிரமமே யுண்மையாகப் பிரபஞ்சத்தின் செயலெல்லாம் பொய்யாம். ச

உலகந் தானும நிருவசநத் துண்டாம் இன்றேல் உதியாது
நிலவி யுண்டேல் அழியாது நிற்ப தாகும் மித்தையால்
இலகு சுத்தி கனல்சேர இன்றும் வெள்ளி நின்றதாம்
குலவு சகமும் அவிகாரம் பரமார்த் தத்தில் கொள்ளாதால்.

**(உரை)** பிரபஞ்சமானது வசநரகிதமான பிரமத்திலே நின்றுந் தோன்றும். அந்தப் பிரமத்தினின்றுந் தோன்றாதாகில் வேறோர் உபாதாந முண்டாய்ப் பிரபஞ்சந் தோன்றுவதுமில்லை. பிரபஞ்சத்தை ஒருவர் தோற்றுவிக்காமல் தானே யுண்டாமாகில் அதுவும் ஒரு முதலா யழியாது நிற்கத்தகும் ; அஃதன்றி அழியப்படுவதி யாங்ஙனமென்னில், பிரபஞ்சம் மெய்போலத் தோன்றினும், பொய்யாகை நிச்சயமாகையால் ; அஃதன்றிப் பிரபஞ்சம் மெய்போலத் தோன்றிப் பிரகாசிக்கிறபடியும் பாரமார்த்தத்திற் பொய்யாகிறபடியும் எங்ஙனமென்னில், வெள்ளிபோலப் பிரகாசிக்கும் இப்பியையும் வெள்ளியையுங் கனலிலிட்டால் இப்பி கெட்டு வெள்ளிநின்றாற்

போல மெய்போலத் தோன்றும் பிரபஞ்சமும் அவிகாரமாகிய பிரம மும் பரமார்த்தத்தில் நிரூபணஞ்செய்தால் அவிகாரமாகிய பிரமமே மெய்யாய்ப் பிரபஞ்சம் பொய்யாகக் கொள்ளப்படும்.

நிருவசநம் அவிகாரம் என்பன பிரமத்துக்கோர் ஆகுபெயர். சுத்தி - இப்பி, கிளிஞ்சில். ரு

தாங்கும் உலகுக் குபாதாநம் சத்தாம் சிலம்பி நூல்தன் பால், வாங்கி வைத்துக் காப்பதுபோல் வையமெல்லாம் தன் பக்கல், ஓங்க உதிப்பித் துளதாக்கி நிறுத்தி ஒடுக்கத் தில தாக்கும், ஆங்கு வந்த வாறதனால் சத்தாம் சகத்தின் அமை வெல்லாம். உஉரு

(உரை) ஆதாரமாகிய பிரபஞ்சத்துக்கு உபாதாநம் சத்தாகிய பிரமமேயாம் ; அஃதென்போல என்னில், சிலம்பியானது நூலைத் தன்னிடத்திலே நின்றுந் தோற்றுவித்து அந்த நூலை ஓரிடத்திலே யுண்டாக்கிவைத்துப் பாதுகாத்துப் பின்பந்த நூலழியும்படி தானீங் குந் தன்மைபோலப் பிரமமும் பிரபஞ்சபேதம் எல்லாவற்றையுந் தன் னிடத்திலே நின்றும், விளங்கத் தோற்றுவித்தும் அவற்றை உளதாக இரக்ஷித்தும் பின்னில்லையாம்படி சங்கரித்திடும். அப்படிப் பிரமத் திலே தோன்றி நின்று கெடுகையாற் பிரமத்தினுடைய நியமமே பிரபஞ்சத்தின் செயலெல்லாம். சூ

மன்னும் பிரமந் தனின்வானாய் வானின் வளியாய் அந்தவளி, தன்னின் அழலாய் அழலின்பால் சலமாய்ச் சலத்தில் தாரணியாய்ச், சொன்ன இதனின் மருந்தாகித் தோற்றும் மருந்தில் அன்னமாய், அன்ன மதனில் துவக் காதி ஆறு தாது ஆயினவால். உஉசூ

(உரை) கேடில்லாத பிரமத்திலே ஆகாசந்தோன்றி ஆகாசத் திலே வாயுதோன்றி அவ்வாயுவிலே அக்கினி தோன்றி அக்கினி யிலே ஜலந்தோன்றி ஜலத்திலே பிருதிவி தோன்றி, கூறிய இப் பிருதிவியிலே ஒஷதியாய்த் தோற்றிய வோஷதியிலே உணவாய் அவ்வுணவிலே காயப்பகுதிப்பட்ட தாதுக்களாறும் உண்டாயின.

தாதுக்கள் ஆறுவன—தோல், எலும்பு, நரம்பு, மச்சை, சோரி சுக்கிலம் என்பவை. இவை காயத்தின் பகுதிக்கோர் பொதுப் பெயர். எ

ஆறு தாதுக் களுங்கூடி வந்த கோசம் அன்னமயம்
மாறில் பிராண கோசமயம் மன்னு மதனில் மனோமயந்தான்
வேறு வரும்விஞ் ஞானமயம் மேவும் அதனின் அதுதன்னில்
கூறி வரும்ஆ நந்தமயம் கோச மயம்பின் கூடியதால் ௨௨௭

(உரை) அவ்வாறு தாதுக்களுங்கூடி யுண்டாகியது அன்னமய கோசம், பொருந்திய அந்த அன்னமய கோசத்திலே மாறில்லாது வாயுப்பரந்து துடிப்புண்டானது பிராணமயகோசம். அந்தப் பிராண மயகோசத்திலே மயக்கம் நீங்கிப் பழையமனங் கூடுவது மனோமய கோசம், பொருந்திய அந்த மனோமயகோசத்திலே வேறாகவருஞ் சோத்திராதிகள்கூடி அறிவாயிருப்பது விஞ்ஞானமய கோசம்; அந்த விஞ்ஞானமய கோசத்திலே கூறுகின்ற வாக்காதிகள் கூடி ஆநந்தமாயிருப்பது ஆநந்தமயகோசம், மயமென்னுஞ் சொல்லின் பின்னே கோசமென்னுஞ் சொற்கூடியதாம் அ

கோச உருவில் பிரமந்தான் கூடித் தோன்றும் நீடுமொரு
காசம் மருவும் கடந்தோறும் நின்றாற் போலக் கதிரவன்தன்
வீசு கிரணம் உருவின்கண் வெளிப்பட் டிடுவ ததிற்பற்றும்
பாசம் அதனுக் கின்றாகும் என்றாற் பாத்திற் பற்றுண்டோ.

(உரை) பஞ்சகோசமாகிய உருவின்கண்ணே பிரமமானதுகூடிப் பிரகாசிக்கும்; அஃதென்போலவென்னில் எட்டுதற்கரிதாய ஒப் பற்ற ஆகாயத்தின் கண்ணே பொருந்திநிற்கும் ஆதித்தனது மிகுந்த கிரணமானது பூமியின்கண் வைத்த கடந்தோறுந் தனித்தனியே தோன்றுமாபோல, அந்தப் பிரமமும் ஆதித்தனைப்போல எட்டா தாயினும் உருக்கள்தோறுந் தனித்தனியாய் நிற்கும், பிரமம் அப்படிப் பாசத்தோடுகூடி நின்றதாயினும் பிரமத்தைப் பாசஞ் சென்று பற்றுவதில்லையாம், பிரமத்தைப் பாசம் பற்றாதாகையால் அந்தப் பிரமத்துக்குப் பாசத்தோடு பற்றில்லை. ௯

அலகில் மணிக ளவைகோவை அடைந்த பொழுதின்
அங்கங்கே, நிலவும் ஒருநூல் பலநிறமாய் நின்றாற் போல
நீடுருவம், பலவும் மருவு பேதத்தால் பன்மை யாகும் பிர
மந்தான், குலவு போக போக்கியங்கள் கொள்ளும் போன்று
கொள்ளாதால். ௨௨௯

எண்ணிறந்த பல வன்னமாகிய மணிகளைக் கோவையாகக் கோத்தவிடத்தே ஒரு நிறப்பட்ட நூல் அம்மணிகளாலே பலநிறமாய் நின்றாற்போல, பிரபஞ்சத்தில் தோன்றப்பட்ட யோனிகள் பலவாகப் பேதிக்கப்படுகையால் அவற்றோடுங் கூடிய பிரமமும் பல பேதப்பட்டாற்போல அங்கங்கே தோன்றும்; ஆகையால் மணிகளிற் பொருந்தின நூலுந் தன் தன்மைகெடாது நின்றாற்போலப் பிரமமும் போக போக்கியங்கள் கொள்வாரைப் போன்று கொள்ளாதாய் நிற்கும். ௧0

போற்றும் செயலால் பலநாமம் புனைந்து போக போக்கி யத்தில், தோற்றும் நனவு கனவினுடன் சுழுத்தி துரியம் எய்தும் இதற்(கு), ஏற்ற கரணம் நிரைநிரையே ஈரேழ் நாலொன் றெல்லாமும், மாற்றி நிற்கும் கேடின்றி வந்த போகம் மாய்ந்திடவே. ௨௩0

(உரை) பிரபஞ்சத்தார் துதிக்குந் தொழிலாலே பரமான்மா வென்றும் ஜீவான்மாவென்றும் அந்தரான்மாவென்றும் நரகான்மா வென்றுந் திரியக்கான்மாவென்றும் பல பெயர்களையும் பொருந்தி, போகத்திலும் போக்கியத்திலும் கூடி அநுபவிப்பாரைப்போலத் தோன்றும். சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தி துரியமென்னும் நாலவத்தையும் பொருந்தும், அவ்வவத்தை நாலிற்குங்கூடி நிற்குங்கரணம் அடைவே நிரைநிரையாகக் கொள்ளுமிடத்துச் சாக்கிரத்துக்குப் பதினாலும், சொப்பனத்துக்கு நாலும், சுழுத்திக்கொன்றும், துரியத்துக்குக் கேடில்லாத வந்தப் புண்ணியபாவங்கள் கெடும்படி எல்லா வற்றையும் நீங்கி நிற்கு மிடமுமாக நிற்கும்.

சாக்கிரத்திற் பதினான்கு கருவியாவன—சோத்திராதி யைந்து, சத்தாதியைந்து, அந்தக்கரணம் நான்கு ஆகப் பதினான்காம். சொப்பனத்தினாலாவன—அந்தக் கரணங்கள். சுழுத்தியிலொன்றாவது - உள்ளம், இதனையே சித்தமெனக்கூறுவர். பிரகிருதி புமான் மகான் புருடன் அவித்தை அவ்வியத்தம் மூலப்பிரகிருதி என்பன ஒரு பொருட்கிளவி. பிரமமொழிய எல்லாம் நீங்கி நின்றவிடந் துரியம். போகம் - புண்ணியபாவம். போக்கியம் - மனம். இவை யிரண்டிற் குஞ் சாட்சிபூதம் பிரமமென்பது கருத்து. அவத்தை யென்பது - பிரமம் உபாதிகளோடுங் கூடினாற் பேதிக்குமவதாம். சாக்கிரம் - விழிப்பு. சொப்பனம் - பிரகிருதி யவதாம். சுழுத்தி - பிர

கிருதி ரூபம். போகபோக்கியம் என்பது - புசிப்பும் புசிப்புக்கிடமாகிய பதார்த்தங்களும். துரியமாவது கருவிநீங்கின விடமெனக் கொள்க. கக

கருவி யெல்லாம் நானெனவே கருதல் பந்தம் அக்கருத்தை
ஓருவ முத்தி யுண்டாகும் உள்ளம் வித்தாம் செய்தியினல்
மருவும் மாயா காரியங்கள் அவித்தை மாய வேமாயை
பிரியும் பிரிய ஞானமது பிறக்கும் பிறவா பேதமே. உ௩க

**(உரை)** கருவிகள் பதினுலோடுங்கூடி அவற்றை நானென்று கருதி நிற்பது பந்தமாம். அக்கருவிகள் பதினுலோடுங் கூடாமல் நீங்கித் துரியத்துநிற்கவே தற்சொரூபமாகிய சிவோகம்பாவம்பிறந்து முத்தியுண்டாம், பந்தத்துக்கு வித்தாவது மூலப்பிரகிருதி, அந்த மூலப்பிரகிருதியின் செயலாலே மாயாகாரியங்களாகிய சுகதுக்கங்கள் பொருந்தும், அவித்தையாகிய மூலப்பிரகிருதியின் செயல்கெடவே மாயைநீங்கும், அம்மாயை நீங்கவே ஞானமுண்டாம்; அந்த ஞானமுண்டாகியவிடத்தே அந்தஞானம் பந்தந்தோன்றுமற் சிவோகம் பாவம் பிறக்கும்.

கருவியெல்லாம் என்றது - தொண்ணூற்றாறு கருவிகளும். உள்ளம் வித்தாஞ் செய்தியினல் மருவுமென்பது - அவித்தையாகிய அறியாமையின் காரியத்திலே பொருந்துமென்க. கஉ

ஆன கன்ம அநுட்டயங்கள் அந்தக் கரண சுத்திதரும்
ஊன மின்றி அச்சுத்தி ஞான மதனை உண்டாக்கும்
ஞான மதுதான் பிரமத்தை நானென் றுணர்த்தும் நான்பிறந்தால்
வான மதிநீர்த் துளக்கமெனக் காணுந் தன்னை மாயையிலே.

**(உரை)** உண்டான கன்மாநுஷ்டானங்களாகிய வாகிய சுத்தியாலே அந்தக்கரணத்துக்குச் சுத்தியுண்டாம், குற்றமின்றி அச்சுத்தியானது ஞானத்தையுண்டாக்கும், அந்த ஞானந்தானே அகம்பிரமம் என்பதனை அறிவிக்கும், அங்ஙனந் தானனதன்மையிலே கருத்துமுற்றினல் ஆகாசத்திலுண்டாகிய சந்திரன் சலத்தின்கண்ணே நின்று விளங்கித் தோன்றும் உருவம்போல மாயையிலே தற்சொரூபமுந் தெரியும்.

துளக்கப்பாடு, சலத்துக்கொழியச் சந்திர பிரதிபிம்பத்துக் கில்லாமைபோல், அலைவு கருவிகளுக்கொழியப் பிரமத்திற்கில்லை என்க.

தானே தானாய் அநுபோகம் தன்னில் தன்னை அநுபவித்திட்(டு)
ஊனே உயிரே உணர்வேயென் றொன்று மின்றி உரையிறந்து
வானே முதலாம் பூதங்கள் மாய மாயா தேமன்னி
நானே பிரமம் எனத்தெளியும் ஞானம் பிரம ஞானமே.

(உரை) அகம்பிரமமாய் அநுபூதியுந் தன்னிலே தன்னை அநுபவித்து, காயமென்றுங் கரணமென்றும் வாயுவென்றும் ஒருபேதமுமின்றி இன்னபடியென்று சொல்லுதற்கோர் சொல்லுமின்றி, ஆகாசமுதலாகிய பூதங்கள் கெடவுந் தாமொருகாலுங் கெடாதே நிலைபெற்று, அகம்பிரமம் எனத்தெளியும் ஞானமே பிரமஞானம். ௧௪

சாற்றும் மறைதத் துவமசிமா வாக்கி யங்கள் தமையுணர்ந்தால்
போற்றி அதுநீ யாணுயென் றறைவ தல்லால் பொருளின்றே
தேற்று மிதனைத் தெளியாதார் தெளியப் பஞ்ச ஆதநமேல்
ஏற்ற இயம நியமாதி யோகம் இருநான் கியற்றுவரால்.

(உரை) சொல்லப்படும் வேதத்தின் முடிவாகிய தத்துவமசி முதலாகிய மகாவாக்கியங்கள் சொல்லும் பகுதியை யுணருங்காலத்து விரும்பி அது நீயாணுய் என்பதல்லாது மற்றொருபொருள் சொல்லுதற்கில்லையாம்; ஆதலால், இப்படித் துணியச்சொல்லும் மகாவாக்கியங்களின் உண்மையைக்கொண்டு சோகம்பாவகமாக அறியாதார் அந்த முறையைத் தெளியவேண்டிப் பஞ்சவாதன முதலாகிய பூசிக்குங்கிரியையும் மேலாகிய இயமம் முதலாகிய அட்டாங்கயோகமுஞ் செய்துதிரிவார்.

எனவே சரியை கிரியை யோகமாகியவை பிரமஞானங் கூட வேண்டிச் செய்யுந் தவமென்பது கருத்து. பஞ்ச ஆதனமாவன: கூர்மாசனம், அநந்தாசனம், சிங்காசனம், பத்மாசனம், யோகாசனமாம். அஷ்டாங்க யோகமாவன: இயமம், நியமம், ஆசனம், பிராணயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியாநம், சமாதி எனஇவை. பஞ்சசாதனம் எனப் பாடமாயின் ஆசநமும் யோகபட்டமும் தண்டும் கமண்டலமும் செபமாலையும் எனப்பொருள் கொள்க. ௧௫

---

ஏகம் நானென இயம்பி இப்படி அறிந்து முத்தியடை யின்னென, மோக மானஉரை சோகம் இன்பொடுமு டிந்தி டாதுமல டாகிய, காக மானதுக ருங்க லின்தசைப றித்த ழுங்கரிய குஞ்சியின், தாகமார்பசி தவிர்க்க வாயிடை கொடுத் ததென் றுரைசெய் தன்மையே. உ௫௫

(உரை) மாயாவாதி! நீ நான் ஏகப்பிரமமென்றுசொல்லிப் பின்பு கருவிகளை நீங்கி இப்படித் தரிசித்துமுத்தி யடையுங்களென்று மயங் கிச் சொல்லுஞ்சொல், நீ எடுத்துக் காட்டின சோகம்பாவனையேல், அங்ஙனங் கூறும் இனிய ஆன்ம வாக்கியத்தோடு கூடிமுடியாது; அஃதெங்ஙன மென்னில், அவ்வாக்கியம் அது நானுனேன் என்கை யால் இரண்டுபட்டுப் பெறுவானும் பேறுமாயொன்று கையால். அஃ தன்றியும் பிரமத்தை விகாரமற்றதாகவுங் கூறி, மீளவும் மயங்கி, அந் தப் பிரமஞ் சீவான்மாவாகப் பேதித்ததாகவுங் கூறினுய்; அதற்குக் கன்மமென் ஞெருமுதலின்றி இல்லாததனையும் உண்டாக்கி அத னைக் கூடிற்றென்றுங் கூறியது மயக்கம். அஃதென்போலவென்னில், ஒரு மலட்டுக் காகமானது அழுகின்ற தனது கரியநிறத்தையுடைய குஞ்சுக்கு மிக்க பசியைத் தணிப்பான் கரிய கல்லினுண்டான இறைச் சியைவாங்கிக் குஞ்சியின் வாயிலே கொண்டுவந்து கொடுத்ததென்று சொல்லுந் தன்மையாம்.

எனவே, நிர்விகற்பமாகிய பிரமத்திற்குவமை மலட்டுக் காகம். அப்பிரமத்திலே சீவான்மாவாகப் பேதித்த தென்றதற்குவமை அக் குஞ்சி. அந்த ஜீவான்மாவுக்குக் கன்மாதிகளுண்டாக்கிக் கொடுத்தற் குவமை கல்லின் மாம்சம். க

நீடு வேதம் அளவாக ஏகமெனும் நீதி தான்நிகழ்வ தாகுமேல், நாடி ஞாதிருவும் ஞான ஞேயமுடன் நாலு நான் மறையும் ஓதலால், ஓடு மாகுமுன(து) ஏகம் ஓதுமிவை ஊன மாகிஉரை மாறுகோள், கூடு மாகும்அநு பூதி தானுமது கூடி டாதறிவி லாமையால். உ௫௬

(உரை) அநாதியேயுண்டாகிய வேதம் வரையறையாகப் பிரம மொன்றே யென்று சொல்லுவதாக நீ சொன்னுய். அப்படியாயின்,

அந்த வேதத்தில் ஞாதிரு ஞான ஞேயமாகிய மூன்று முதலுமுண் டெனவே தெரித்து நாடோறுஞ் சொல்லுதலால், நீ ஒன்றென்று சொல்லுஞ்சொல் அவ்வேத வாக்கியங்கொண்டே பின்னிடாநிற்கும். இன்னும் நீ பிரமம் ஒன்றேயென்றும் அகம் பிரமமென்றுஞ் சொல் லுஞ் சொற்கள் குற்றப்பட்டுத் தத்துவமசி யென்னும் வாக்கியத் தோடு மாறுகோடலைப் பொருந்தும். உனக்கான்மாவில்லை யாகை யாலே அநுபூதிதானும் உண்டாக மாட்டாது.

நான்மறையும் என்கையால் ஆகமத்துணிவும் பெற்றது. உரை - மகாவாக்கியம். அறிவு - ஆன்மா. ஞாதிரு - ஆன்மா. ஞானம் - ஆன் மாவிற்குச் சகாயபூதமான சிவசத்தி. ஞேயம் - அந்தச் சத்தியாலறி யப்படும் பிரமேயமான சிவம். உ

நீதியால் ஒளிகொள் பானு வான(து)அக னீரி லேநிகழு மாறுபோல், ஆதி தானுருவ மாய காயமதின் மேவி ஆவ திலை யாகுமாம், தீதி லாஅருவ மாதலால் நிழல்கள் சேர வேறிடமி லாமையால், ஓதில் ஓர்அகலின் நீரி லேயொருவர் காணலால் இலதுன் ஏகமே. உ௩எ

**(உரை)** கிரணங்களையுடைய ஆதித்தனதுசாயை பாத்திரோத கங்கள்தோறும் முறைமையாலே விளங்குமாபோல, சர்வத்துக்கும் முதலாயிருக்கிற பிரமங் குற்றமில்லாத அரூபமாகையால் உபாதிக ளோடுங் கூடி யுருபமாகிய காயத்திலே பொருந்தி உண்டாவதில்லை யாம்; அன்றியும், பாத்திரோதகம் நிழலின்கண் இருந்தால் ஆதித்த கிரணஞ் செல்லாதாற்போலப் பிரமங்கூடாத காயமுமுண்டாக வேண் டும்; ஆகையாலும், பாத்திரோதகத்திலே ஆதித்தனைக் காண்பான் ஒருவனைப்போலக் காயத்திலே பிரமத்தைக் காண்பான் ஓரான்மா உண்டாகையாற் சொல்லுங்காலத்து உனது அகம்பிரமம் என்பதில்லை யாம்.

அருவமாதலானும, இடமில்லாமையாலும், ஒருவர் காணலாலும் என உம்மை கூட்டுக. நிழல்சேர வேறிடமிலாமையாலென்பது-பிரம மருவமாதலால் நிழல் சேர்தற் கிடமில்லையா மென்க. ௩

வேறு வாயில்புல னோடு மேல்மனமும் மேவி டாதுபிர மாணமும், கூறி டாதறிவு தானெ னுஉணர்தல் கோடு நீ

முயலின் நாடினய், ஈறி லாதபரம் ஏக மேயென இயம்பு நீ இசையும் ஞானமும், பேற தாவதிலை பேத மானஇது பேண வேயுளது பேசிலே. ௨௩௮

(உரை) ஒன்றோடொன்று கூடாமல் உணரும் பொறிகளும் புலன்களும் அவற்றின்மேலுண்டாகிய மனமுங் கூடாமல் உடலில் ஓரறிவு தனித்து நின்றறியாதிருக்கவும், அறியுமென்று சாத்திரப் பிரமாணங்களுஞ் சொல்லாதனவாயிருக்கவும், நீ பிரமங் காயத்தோடுங் கூடித்தானே தானய் நின்றறியுமென்று சொல்லிய அறிவு, கோடில்லாத முயலுக்குக் கோடுண்டென்றறிந்த அறிவிற்கொக்கும்; அன்றியும், கேடில்லாத பிரமம் ஏகமாயே நிற்குமென்று சொல்லுகிற நீ, பொருந்து ஞானத்தால் உனக்குப் பயனுண்டாவதில்லையாம். அஃதெங்ஙனமென்னில், பரப்பிரமே சீவான்மாவுமென நீ சொல்லுகையால், நீ இங்ஙனஞ்சொல்லு முறைமையின்றிப்பரமான்மாவும் அதனை யறியப்படுஞ் சீவான்மாவுமென இரண்டு முதலுண்டென்று சொல்லும் முறைமையே போற்றவுளது. ௪

இலகு சோதிமணி எனவும் ஏகமெனின் இதனில் ஏகமது விலகினய், குலவு காசுமொளி அதுவும் நீடிவளர் குணமும் நாடுவதொர் குணியுமாம், பலவு மானகுண மொருவும் ஏகமது எனவும் நீபகரில் நிகரிலா, உலக மானதனை உதவு மாறதிலை உணர்வு தானுமிலை உணரிலே. ௨௩௯

(உரை) மிக்கவொளியும் மணியும்போல ஒன்றாயிருக்குமென்று நீ சொல்லின், இந்த உவமையாலே ஒன்றென்பதனை மறுத்துக் கூறினய்; அஃதியாங்ஙனமெனின், விளங்குகின்ற மணியும் பிரகாசமும் மிகவுண்டாகிற குணமும் ஆராய்ந்தறியத்தக்க குணியுமாகையால். அன்றியும் ஒன்றான பிரமமானது இச்சா ஞானக் கிரியைகளாகிய பல குணங்களை நீங்கி நிற்குமென்று நீ சொல்லின், அந்தப் பிரமத்துக்கு இச்சா ஞானக் கிரியைகளாகிய பல குணங்களில்லையாகில், ஒப்பில்லாத பிரபஞ்சத்தை உண்டாக்குந் தொழிலில்லையாய் அதனைக் காக்கவேண்டுமென்னும் அறிவுமில்லையாம் விசாரிக்குங்காலத்து.

மணியும் ஒளியும் குணமுங் குணியுமாகையால், இரண்டுபடுமென்பது கருத்து. இச்சா ஞானக் கிரியைகளை நீங்கிய நிர்விகற்பமென்

னில், இச்சா ஞானக் கிரியையோடுங் கூடியே பிரபஞ்சத்தின் சிருஷ்டி திதி சங்காரங் கண்டு நடத்தவேண்டுகையால், அவை நீங்கி நிற்குமென்னில் அறிவுமில்லையாய்க் கர்த்தாவும் அன்றாமென்பது கருத்து. இராவணனையும் சகத்திரவாகுவையும் ஒன்று பலவானதுக் குவமையிட்டாய். இராவணனொருமுகத்தாற்கண்ட தொருமுகத் தாற் சொல்லுமாபோல. உலகத்தில் ஒருத்தன்கண்ட தொருத்த னறிந்து சொல்லக் கண்டதில்லை. சகத்திரவாகுவும் பல கரங்களா லும் இயற்றப்பட்ட வில்லும் அம்பும் வலிக்குங்காலத்து வேறுபடுகை வழங்கலும் வினையொன்றின்மேலாம். இது அப்படியன்றென்று கண்டு கொள்க. ௫

புற்றி னேர்பழுதை தொக்க போதுமயிர் புளக மாக
அர விரவிலே, உற்ற தாம்அதனை யொக்க வேஉலகுதிக்கு
மாறுமொரு சத்திலே, பெற்ற தாகுமெனின் அப்பி ராந்தி
யுடை யோரும் அப்பிரம பேதமாய், நிற்பர் நீபகரின் முற்
றும் ஐயநிலை பெற்றும் இன்பமதி லாததாம். ௨௪௦

**(உரை)** புற்றின்கண்ணே பழுதைகிடப்ப, இருளிடத்தே அந்தப் பழுதையைக் கண்டவர்க்குப் பயத்தாலே மயிர் புளகித்துப் பாம் பெனவே நினைக்கப்படுவதாம். அதுபோல, பிரபஞ்சமும் ஒப்பற்ற தாகிய பிரமத்திலே தோன்றுமாறும், அதனதயிக்கியத்தாலே அப் பிரபஞ்சமும் மெய்போலத் தோன்றும் முறைமையும் பெற்றதென்று நீ சொல்லின், அங்ஙனம் மயங்கின அறிவையுடைய ஆன்மாக்களும் இச்சா ஞானக் கிரியை யுண்டாய்ப் பிரபஞ்சகிருத்தியஞ் செய்வ தில்லையென்று நீ கூறும் பிரமத்தின் பேதமாய் நிற்பாராம். இப்படி நீ சொல்லின் நினக்கு மிக்க மயக்க அறிவேயுண்டாய்ப் பிரமமாம் இன்பமுண்டாகாது.

பழுதையைப் பாம்பென்று பிரமித்தது பிரமமாகவேண்டும் அது தான் விகாரமென்னில், காரணங்களுக் கறிவில்லையாம். பிரமத்தின் சந்நிதிமாத்திரத்திலே சலிக்குமென்னில் தெளிந்தகாலத்திற் சந்நிதி யிற் சேட்டித்தவில்லையாகவேண்டும். அதுபின் சலித்துத் தத்துவ மூங் கூடாதெனக்கொள்க. ௬

ஓதி யேஉலக மதனை நீயும்நிரு வசன மாகஉரை செய்வ
தென், பேதை யோய்உள தும் இலதும் அல்லபொருள் பேசு

வாரும்உள ரோசொலாய், ஆதி யேயுளது வருத லால்இலதி
லாவ தின்மைய தழிந்துபோம், நீதி யால்உள தி லாமை நேர்வ
தெனின் நேர்மை யாகியது நின்றதே. ௨௪௧

(உரை) நீ வேதத்தை ஓதியிருந்தும், பிரபஞ்சத்தை முன்பில்லை
யென்றும், பின்பு நிருவசனமாகிய பிரமத்திலே தோன்றப்பட்டதென்
றுஞ் சொல்லுதலுண்டானதென்; ஒரு பொருள் இல்லதுமன்று
உள்ளதுமன்று என்று சொல்லுவாருமுளரோ? ஆகையால் அறியாத
வனே சொலாய்; அற்றன்று, ஆதிதோறுந் தோன்றிவருதலால்
இல்லையென்ப தில்லையாய் உள்ளதான தழிந்துபோம்; பின்னில்
லாமையாம்படி யழிந்துபோம் முறைமையாலே இல்லாமை யுண்டா
னது; ஆகையால், உள்ளதுமில்லாததும் பிரபஞ்சத்துக்குப் பொருந்
திற்றென்று நீ கூறின், அப்படி யழிந்துபோம் பிரபஞ்சம் மீளவும்
பிரமத்திலே யுண்டாமிடத்து முன்புபோலத் தோன்றுகையால்
அதற்கு மூலகாரணங் கிடந்தழியாமல் நிற்கும். ௭

வேற தாகியது போல்இ ருந்தமையில் வெள்ளி சுத்தி
யெனில் ஐயமே, கூற லாம்ஒருப ரத்தொ டொத்தபொருள்
கொண்டு விண்டநிலை கண்டனம், மாறி டாதுநிலம் நீர தாகி
அனல் வாயு வாகிஅவை மாறியும், சேறி லாதுவிவ கார
மன்றுபர மார்த்த மாயது செறிந்ததே. ௨௪௨

(உரை) மித்தையாகிய பிரபஞ்சம் பிரமம்போல மெய்யாகத்
தோன்றினமையால் இப்பியானது வெள்ளியையொக்கப் பிரகாசித்
தாற்போலுமென்று கூறின், அந்த இப்பியை வெள்ளியென்று ஐயப்
பட்டாற்போலப் பிரபஞ்சத்தையும் பிரமமோ மித்தியையோ
என்று ஐயப்பட்டே சொல்லலாம். முன்பிந்தப் பிரபஞ்சம் ஒப்
பற்ற பிரமத்தோடொத்த பொருளாகக் கொள்ளப்பட்டு இப்பொழுது
மித்தியையாக மாறிக்கண்டனமென்னில், நிலம் நீராகியும் அனல்
வாயுவாகியும் மாறிநில்லாது, நீர்நிலனாகியும் வாயு அக்கினியாகியும்
மாறியுஞ்செல்லாது. ஆதலால், இப்பிரபஞ்சம் விவகாரத்திலே மெய்
யாதலன்றிப் பரமார்த்தத்திலும் மெய்யாகச்செறிந்தது. ௮

மாய நூலதுசி லம்பி வாயினிடை வந்த வாறதனை
மானவே, ஆய தேஉலக மான தும்பிரம மதனி லேயெனில்

அடங்கிநின்(று), ஏயு மாகுமொரு சித்து மத்துடன்நி லாத
தென்றுபின் இயம்பின்நீ, பேய னேகடம்மி ருத்தில் வந்
தது பிறப்ப தாவதிலை பேசிலே. ௨௪௫

(உரை) பொய்நூலானது சிலம்பியின் வாயிடத்தே நின்று தோன்றிநின்று கெட்டவிடத்து மீளவும் அதனிடத்தே இந்த நூலாகத்தோன்றி வந்தாற்போல, உலகமானதும் பிரமத்திலே தோன்றிநின்று கெட்டபின் மீளவும் பிரமத்திலே முன்புபோலே தோன்றி வருமென்று நீ கூறின், அரூபமா யவிகாரமாகிய பிரமமும் பிரபஞ்சத்திலே யகப்பட்டு மயங்கவுமாகுமாதலால் நீ கூறியது உவமையன்று, அந்த நூலாகிய சடத்துக்குள் அச்சிலம்பி யகப்படாது நின்றாற்போலப் பிரபஞ்சமாகிய சடத்துக்குள்ளும் பிரமங்கூடி நில்லாது காரணமாய் நிற்குமென்று கூறின், அறியாதவனே கடத்துக்கு மண் காரணமாயிருக்கவுங் காரணமாகிய மண்ணிற் கடந்தானே தோன்றாது; தோன்றுமிடத்தே ஆதிகாரணமாகிய மண்ணும் நிமித்த காரணமாகிய குலாலனும் துணைக்காரணமாகிய திரிகையுங்கூடித் தொழில் செய்யக் கடந்தோன்றுமாபோல, பிரபஞ்சத்துக்கும் ஆதி காரணமுண்டாய்த் தோன்றவேண்டும்.

எனவே, ஆதிகாரணமின்றிப் பிரமமே ஆதிகாரணமாகத் தோன்றுமென்னிற் சித்திலே அசித்துத்தானே தோன்றாதென்பது கருத்து. மிருத்து - மண். மாயநூலென்பது - இல்லாதொன்று தோன்றுவது. மாயையென்பதவன் கருத்தாதலினால் மாய நூலென்றான். பேயனேபடமென்பது பாடமாயின், புடவையானது மண்ணினிடத்துண்டாகாதெனப் பொருள்கொள்க. அஃதாவது ஒன்றின் காரணத்திலொன்றின் காரியமுண்டாகா தென்பதாம். ௬

வேற தாகும்உரு வத்தி லேபரம்வெ ளிப்ப டும்மென
விளம்பில்நீ, ஊறி லாஉருஅ சத்தி லேபிரமம் உண்டு தானு
ணர்வி லாததென், மாறி வாயுவும னாதி யானவையும் வந்தி
டாமையினி லின்றெனில், ஈறு தானுடைய தாய தோபிரம
மென்கொ லோஇவை இறப்பதே. ௨௪௬

(உரை) வன்னபேதமாகிய வேற்றுமைப்பட்ட வுருவத்திலே பிரமம் வெளிப்பட்டு நிற்குமென்று நீகூறின், குற்றமில்லாத ஜடத்தினிடத்திலே பிரமமுண்டாயிருக்க அந்த ஜடமவத்தைப்பட்ட விடத்

தறிவின்றிக் கிடப்பானேன், வாயுவும் அந்தக்கரணங்களும் நீங்கி வந்து கூடாமையினாலே அறிவில்லையானதென்று கூறின், பிரமத்தி னறிவு கெடத்தக்கதாயிற்றே? அதுவுமன்றிப் பிரமம் நிற்க வாயுவும் அந்தக்கரணங்களும் நீங்கிய வாயினவோ? ஆதலால், பிரமம் அறிவும் அறியாமையுமாகி உருக்களிலே நில்லாது. ௧0

பற்ற தின்றிஉடல் நின்றி டும்பரமெ னப்ப கர்ந்தனைப ரிந்துடன், உற்று டம்புநரை திரைகள் நோய்சிறை உறுப்ப ழிந்திவையு முள்ளபின், குற்ற மென்றிதனை விட்டி டாதுவிட வென்ற லும்குலைவு கொண்டிடும், பெற்றி கண்டுமொரு பற்ற றும்பரிசு பேச வேஉளது னுசையே. ௨௪௫

**(உரை)** பிரமமானது காயத்திலே நின்றதாயினும் அக்காயத் தோடு பற்றில்லாமல் நிற்குமென்று கூறினாய்; அங்ஙனமாயின் பிரமம் ஆர்வத்துடனே கூடிநின்ற வுடம்பு நரைதிரை நோய் சிறை இவற்றி னால் உறுப்பழிவுண்டானபின்பும் இவ்வுடம்பைப் பொல்லாததென்று நீங்கி நிற்கமாட்டாது, அவ்வுடல் நீங்கப்படு மென்னுமிடத்து மிகவும் வியாகுலப்பட்டு நடுநடுங்கா நிற்கும்; ஆகையால், இப்படிக் காயத் தோடும் பற்றிநிற்கு முறைமையை எவ்விடத்தினுங் கண்டிருந்துங் காயத்தோடு பிரமத்துக்குப் பற்றில்லையேன்று உன்னுசையாற் சொல்ல வுள்ளதன்றிப் பற்றுவிட்டதில்லை.

எனவே, பிரமஞ் சீவான்மாவாகவும் பரமான்மாவாகவும் பேதிக்குமெனவுங்கூறி இவ்விடத்துப்பிரமம் பேதியாதெனவுங் கூறி யது வழுவாம். உலகானது பேதமென்றபடியோ இல்லையாகில் அபேதமென்றபடியோ சொல்லாய். இதனால், நீ அபேதமென்றது விருத்தமாம். பேதமே யுள்ளதென்க. ௧௧

சோதி மாமணிகள் ஊடு போனதொரு நூலு மானநிலை சொல்லிடும், நீதி யால்மணிகள் பேத மாகிஒரு நூலின் நின்றமைநி கழ்த்தினாய், ஆதி தாமொருவ னாகி யேபல அநந்த யோனியில் அமர்ந்தவன், பேதி யாதநிலை பேசி னாய் உலகு பேத மேஇலத பேதமே. ௨௪௬

**(உரை)** பிரகாசத்தையுடைய மிக்க பலமணிகளுக்குள்ளே உருவி யொன்றாய் நின்றநூலுஞ் சொல்லத்தக்க முறைமையிலே கோத்த

மணிகள் பலநிறமாகப் பேதித்து ஒரு நூலிலே நின்றமையும்போலப் பிரமத்துக்கும் பிரபஞ்சத்துக்கும் உவமைகூறினாய் ; அங்ஙனங் கூறிய உவமையால், கர்த்தாவானவன் ஒருவனாய்ப் பலபேதப்பட்டு எண்ணிறந்த யோனிகள் தோறும் நின்றவன் பேதியா நிலையே கூறினாயாகையால், மணிகள் பேதம்போலப் பிரபஞ்சம் பேதமாகவுள்ளது பிரமத்துக்குப் பேதமிலதாம். ௧௨

ஒத்து நின்றுடலின் இன்ப துன்பமவை உற்றும் உற்றிடுவ தின்றெனும், பித்த உன்னுரையின் உற்ற தேயிலது பெற்ற தின்றிலது பெற்றதேல், துய்த்த லென்னுறுதல் சீவ பாவமது சொல்லி னொன்றி னுந்தோய் விலாமைநீ, வைத்து நித்தமன வாக்கி றந்தபர மென்ன மான மிலை இன்னமே.

(உரை) அஞ்ஞானமாகிய காயத்தோடு கூடிப் பிரமமும் அஞ்ஞானமாய்ச் சுகதுக்கங்களை அநுபவித்து நிற்கவும், பிரமங் காயத்தோடு கூடுவதில்லையென்று சொல்லும் பேயனே நீ அநுபவமில்லையென்னும் வார்த்தை ; உன் சாத்திரத்திலேயும் பொருந்தினதே ; சாத்திரத்தினன்றி அநுபவத்தினுமன்றி உண்டானதன்று ; அஃதன்றியும், அநுபவத்தினுமின்றி உண்டானதாயின், பிரத்தியக்ஷத்திலே நீ அநுபவத்தை யுறுவானேன் ; பரமான்மா அநுபவிப்பதில்லை ஜீவான்மாவினுடைய பாவனையென்று நீ கூறின், இப்படி அநுபவிக்கிற ஜீவான்மாவை ஒன்றினுந் தோய்விலாத பரமான்மாவாகக் கொண்டு நித்தமாய் மனவாக்கிறந்ததென்றும் அகம்பிரமமென்றுஞ் சொல்ல உனக்கு இன்னமும் நாணமில்லை. ௧௩

எங்கும் நின்றிடில் அவத்தை யின்றிடும் இசைந்தி டுங்கரண மென்னில்நீ, அங்கு நின்றபரம் எங்கொ ளித்ததது நின்ற தேல்அவை அடங்கிடா, இங்கு நின்றதொரு காந்த மானகல் இரும்பு சந்நிதிஇ யங்குநேர், தங்கி நின்றதெனில் நீங்கி மீளும்வகை தங்கி டாதுனுரை தப்பதே. ௨௪௮

(உரை) பிரமம் ஜீவான்மாவாய்க் காயந்தோறும் நிறைந்து நிற்குமென்று கூறின், நீ கூறிய அவத்தையிலகப்பட்டு அடங்குவதில்லையாம்; அப்படி யவத்தைப்படுவது ஜீவான்மாவன்று அந்தக்கரணங்களி

னது சம்பந்தமென்று நீ கூறின், கரணங்கள் அவத்தையைப் பொருந்தினவிடத்தே அவ்விடத்துநின்ற ஜீவான்மா எங்கே மறைந்துநின்றது ; அந்தக்கரணம் நாயகனாகிய ஜீவான்மா அவ்விடத்து நின்றதாயின் அவன் வழித்தாய கரணங்களும் அடங்கமாட்டா ; அற்றன்று, இவ்விடத்துண்டானதொரு காந்தக் கல்லின் சந்நிதியிலே இரும்பு அசைந்தடங்குந் தன்மைபோல, ஜீவான்மாவின் சந்நிதியிலே அந்தக் காணங்களுஞ் சேட்டைப்பட்டடங்கின வென்று நீ கூறின், நீ கூறிய இரும்பு காந்தத்தோடு கூடினாற் காந்தத்தை இரும்பு நீங்கமாட்டாத தன்மைபோல, அந்தக்கரணங்களும் ஜீவான்மாவோடு கூடினால் நீங்கப்படாதாகையால், நீ கூறிய உவமையும் பிறழ்ந்ததாம். ௧௪

இருள்பொ திந்ததொரு பரிதி இவ்வுலகில் இசையில் இன்றுடலம் நானெனும், மருள்பொ திந்ததொரு பிரம மிங்குளது மருவி நின்றஉரு ஒருவியே, தெருள்பொ திந்துபரம் நானெ னும்தெளிவு சென்ற போதுகதி யென்றிடும், பொருள்பொ திந்ததெனில் அமல னுக்குமலம் வருத லாலுளது புன்மையே. ௨௪௧

(உரை) இருளான் மூடப்பட்டதோர் ஆதித்தன் இந்த உலகின் கண்ணுண்டாகி நின்றதனை யொக்கும் காயங்கள்தோறும் நானென்று மருட்சியாலே மூடப்பட்ட பிரமம் இவ்விடத்துண்டாய் நின்றது ; அப்படி மருட்சிபொருந்தி நின்ற காயம் நீங்கி, அறிவு சூழப்பட்டுப் பரப்பிரமம் நானேயென்னுந் தெளிவுண்டானபொழுது முத்தியாய் நிற்கும்பொருளுந் தானேமென்று கூறின், மலரகிதமாகிய பிரமத்துக்கு மலங்கூடுதலும் நீங்குதலும் உண்டாகையாமென்று நீ கூறியவுரை வெளிற்றுரை.

உளதுபுன்மையே என்பது - நின்மலமாயிருக்கிற பிரமத்துக்கு மலமானது கூடுதலால் ஆபாசமாகை யுண்டாமென்க. இது கூடாதென்பது கருத்து. ௧௫

சுத்த மானதுப ரத்தி னுக்கணவ தின்று சுத்தமத நாதிநீ, வைத்த மாயமுறு சித்து அசுத்தமுற மற்ற தற்கு மலம் வைத்தனை, ஒத்த சீவன்மல கன்ம மாயையுறு கின்ற காரணமு ணர்ந்திடாய், பித்த னேவிறகி னிற்பி றப்பதெரி யென்னில்வே றுபொருள் பெற்றதே. ௨௫௦

**(உரை)** பரப்பிரமத்துக்குப் புதிதாகச் சுத்தமுண்டாயதன்று அநாதியே சுத்தமுள்ளது; நீ ஜீவான்மாவென்று பிரமத்திலே பேதித்துச் சொல்லப்பட்ட சித்தானது மயக்கமுற்று அசுத்தத்தைப் பொருந்தவே அதன் பேதமாகிய பரப்பிரமத்துக்கு மலமுண்டென்று தோற்றுவித்தனே, காயத்தோடு பொருந்தின ஆன்மா மலமுங் கன்மமும் மாயையுங்கூடி அநுபவிக்குங் காரியத்துக்குக் காரணமாகிய முதலே அறியாயாதலால், நீ பேயனே. அற்றன்று, காட்டத்திலே அக்கினி மறைப்புண்டு நின்று பிரகாசித்தாற்போல, காயத்திலே மறைப்புண்டு நிற்கும்பொழுது ஜீவான்மாவென்று நின்று பிரகாசிக்கும் பொழுது பரப்பிரமமாகநின்று பிரகாசிக்குமென்று கூறின், ஓரக்கினி இரண்டாகப் பிரிந்து காட்டத்திலே நிற்பதன்றி வேறொரு பொருளாய்த்தோன்றுமாபோல ஜீவான்மாவும் வேறொரு முதலென்றறிவாயாக.

வேறு பொருள்பெற்றதே என்பதற்கு - விறகில் நெருப்புத் தோன்றுந் தன்மை யென்பையாகில், அந்நியப் பொருளேக் காட்டி நிற்கும். கசு

**உன்னின் நீயும் அநுபோக மென்றபொழு தூற்றி டும்**
**துவி தம் மற்றதிங்(கு), என்னில் இல்லேயெனில் இல்லே நீயுமறி**
**வின்மை கண்டஇடம் உண்மையேல், மன்னு மோருணர்வு**
**வந்தி டும்முணர்வெ லாமு மாயையெனில் மாயையே,**
**சொன்ன தோர்பிரம மாயி டும்பிரமம் மாயை யாய்அறிவு**
**சோருமே.** உ௫க

**(உரை)** நானே நானுயநுபவிப்ப னென்னு மிடத்துப் பெறுவானும் அநுபவிப்பது முண்டாய் இரண்டாம், பெறுவானுக என்னிடத்திற் கண்டதில்லேயென்னிற் பேருகிய நீயும் இல்லேயாம், அஞ்ஞானங் கெட்டவிடமே உண்மையென்று நீகூறின் அந்த மயக்கஅறிவு கெட்டுக் கூடுமிடத்தே ஆன்மஅறிவு சிறிதுண்டாயிருக்கும். அற்றன்று, அப்படி அறியும் அறிவெல்லாம் மாயையறிவாம் என்று கூறின், மாயை நீங்கினவிடத்திற்றோன்றும் அறிவும் மாயையறிவென்னின் அந்தப் பிரமம் மாயையாகவேண்டும். ஆகையால் பிரமமுமாயையாய் அம்மாயையாலே அறிவுங் கெடுமென்பதேயாம். கஎ

ஆர ணங்கள் தருதத்து வம்அசிப தங்க ளின்பொருள் அறிந்திடாய், கார ணம்அதுவும் நீயும் என்றிருமை கண்டு வேறதின்மை கருதிடாய், நார ணன்பிரம னாலும் நாடரிய நாய கன்கழல்கள் நண்ணிநீ, ஏர ணைந்துபொலி சாத நங்கள்கொடு யோக ஞானமும் இயற்றிடே. ௨௫௨

**(உரை)** வேதமுடிவிலே சொல்லப்பட்ட தத்துவமசி யென்னும் மகாவாக்கியத்தையும் அதனால் தரிசிக்கப்பட்ட பதபதார்த்தங்களையும் அறியாய், காரணமாகிய கர்த்தாவுங் காரியமாகிய ஆன்மாவும் இரண்டுபட்டு நின்றமையுங்கண்டு கூடிநிற்குமதுவும் அறிந்திடாய். ஆகையால் பிரமவிஷ்ணுக்களாலும் நாடுதற்கரிய கர்த்தாவினுடைய திருவடிகளைப் பொருந்துதற்கு அழகு பொருந்திப் பொலிவினையுடைத்தாகிய சிவ சாதனங்களையும் பொருந்திக்கொண்டு யோகஞானங்களை யறிந்து செய்வாயாக.

எனவே, யோகத்தாலே மனதைப் பிரித்து ஞானத்தாலே திருவடியைச் சேர்க என்பது கருத்தாம். ௧௮

---

## பாற்கரியன் மதம்

மன்னு மறையின் முடிவென்று மாயா வாதி உடன்மலைந்து
பின்ன மாகிப் பிரமத்தைப் பேதா பேதம் சாதித்துப்
பன்னு மொருநூல் அதுவாகப் பாரின் மீது பாற்கரியன்
சொன்ன இதனை இந்நூலின் அகத்தே தோன்றச் சொல்லுவாம்.

**(உரை)** சுவயம்புவாக நிலைபெற்ற வேதம் இத்தன்மைத்தென்று மாயாவாதியோடு மாறுபட்டு நீங்கி, மாயாவாதி கூறிய பிரமத்தைப் பேதமாகவும் அபேதமாக நிலைநிறுத்தி, ஓதுநூலும் வேதமுமாயிருக்க அதனுண்மையை யறியாது பூமிமீதே பாற்கரியன் சொன்னமதத்தை இச்சிவஞான சித்தியாரிடத்தே தெளியச் சொல்லுவாம்.

பாற்கரியன் என்பான் ஓரிருடி. பாற்கரியம் எனினும் பரிணாம மாயாவாதம் எனினும் ஒக்கும். ௧

சித்தே உலகாய்ப் பரிணமித்துச் சீவனாகித் திகழ்ந்தமையால், சத்தே யெல்லாம் முத்தியினைச் சாரக் கண்ட

ஞானங்கள், வைத்தே மொழியும் மாமறைகள் சொன்ன மாபே வந்தக்கால், ஒத்தே கெட்டுப் பிரமத்தோ டொன் ருய்ப் போமென் றுரைத்தனனே. ௨௫௪

**(உரை)** அறிவாகிய பிரமமே பிரபஞ்சபேதமாய்த் தோன்றி வளர்ந்து ஆன்மாக்களுமாய் விளங்குந் தன்மையால், சர்வமும் அந்தப் பிரமமேயாம், வீட்டின்பத்தைச் சேர அறியுஞானங்களை வேதவாக்கி யங்கள் சொல்லும், அந்த வாக்கியங்களைச் சொன்னபடியே வைத்துத் தத்துவமசி பதபதார்த்தங் கண்டால் அந்தப் பிரமத்தோடே ஆன்மாக் கூடி ஆன்மத்தன்மை கெட்டொன்றிப் பிரமமாயே போமென்று பாற்கரியன் கூறினான்.

வாக்கியம் - தத்துவமசி. சத்து - நிலைநின்றது. அசத்து - நிலை நில்லாதது. ஆதலாற் சத்தே சர்வமுமா மென்பதவன் கருத்து. ௨

---

## பாற்கரியன் மத மறுதலை

இயம்பு கின்றதுல காயி டாதுசட மின்றி நின் றுசட மாகியே, முயங்கு கின்றமையில் இலவணத்திரத முழுதுமே கனதை முயல்கைபோல், பயந்த தென்னில்அறி யப்ப டும் பொருளும் அறிவு மென்றுபல வாகுமோ, தியங்கு கின்ற தெனு ரைத்தி டாய்கடின மாதி யாகிவரு சித்தனே. ௨௫௫

**(உரை)** நீ சொல்லுகின்ற பிரமம் பிரபஞ்ச பேதமாயிடமாட் டாது. ஆகையாலே, பிரமம் ஜடத்தை நீங்கிநின்றது ஜடந்தானுந் தானாகவே கூடிநின்றமை உண்டாகாது. அற்றன்று, உப்பானது ஜலத்தோடுகூடி ஒரு தன்மைப்பட்டாற்போல, வத்துவும் ஒன்றாய் நின்றதென்னில், ஜலத்தோடு கூடிய இலவணம் பேதியாது ஏகத்துவ மாய் நின்றாற்போல, பிரமமும் ஒன்றாய் நிற்கையின்றி அறியப்படும் பொருளாகிய ஜடமும் அறிவாகிய ஞானமுமாகப் பேதித்து நிற் குமோ, இப்படி மயங்குவானேன் சொல்லாய், மாபூதங்கள் முதலான வையும் நானே யாவேனென்று வரும் அறிவனே.

கடினம் - பூதகுணம். அது குணிமேல் நின்றது. இலவணத் திரத முழுதுமே கனதை முயல்கைபோ லென்றது - மண்ணின் சார

மானதை ஜலமானது கொண்டு உப்பான தொழியச் சிற்சொரூபந் திரண்டு பரிணமியாதென்பது நோக்கியாம். க

உன் னு கின் றபிர மத்தி லேசிறிதிவ் வுலக மானதென ஓதின் நீ, மன் னு கின் றசில கால மோடழியும் அழிய வந்து தவு மாயையால், தன்னி லொன் றுமெனில் வருத லோடிறுதி தருத லால்அதுச டத்ததாம், உன்னொ டச்சகமும் உண்மை யன் றுசட மென்ன வேஉறுதி மன் னுமே. உ௫௬

(உரை) யாவரும் நினைக்கப்படா நின்ற பிரமஞ் சேரப் பிரபஞ்ச மாகாது சிறிது பேதித்துப் பிரபஞ்சமானதென்று நீ சொல்லுகின்றா யாகில், அங்ஙனமாயிற் பிரபஞ்சஞ் சிறிதுகாலம் நிலைபெற்று நின்று அழியாநிற்கும். அப்படியழிந்து மீளவும் மாயையிலே தோன்றிவரு கையால் மாயையிலே ஒடுங்கி மாயையிலே தோன்றும். அற்றன்று. ஒடுங்குங் காலத்திலும் பிரமத்திலேயொடுங்கித் தோன்றுங் காலத்தி லும் பிரமத்திலே தோன்றுமென்னில், இப்படித்தோன்றி யொடுங் குவதாகிய பிரபஞ்சம் பிரமத்திலே பேதமாயில் பிரமமும் அசேதந மாக வேண்டுமாகையால், அகம்பிரமம் என்கிற உன்னுடனே பிரபஞ் சமுந் தோன்றுகையும் ஒடுங்குகையுஞ் செய்கையால் மெய்யன்று ஜடமென்றே சொல்லுதலே மெய்யாகவுடைத்து. உ

வித்தெ ழுந்துமர மாய்வி ளைந்தமை விளம்பி னாய் உவமை வேறுநீ, நித்த மென்றவுரை பொய்த்து நீடுசட மாய்எ ழுந்தழியும் நின்பரம், ஒத்தெ ழும்பொழுது வித்தி னுக்கவனி யுண்டு தாரகமு னக்கெனா, பித்த னென் றுல குரைத்தி டும்பிர மமாயி னாய்இவைபி தற்றிலே. உ௫௭

(உரை) மரங்கெட்டவிடத்து வித்திலேநின்று மாமுண்டானாற் போல, பிரபஞ்சம் அழிந்தவிடத்தும் பிரமத்திலேநின்று பிரபஞ்ச முண்டாமென்று உவமை கூறினாய். அங்ஙனமாயின், அந்தவித்து மரத்திலேயுள்ளதுமாய்ப் பின்புதானே பரிணமிக்குங் காலத்து மாந் தோன்றத் தான்கெட்டுத் தோன்றினதற்குப் பரிணாமமுண்டாய் அந் தமரம் மீளவும் வித்தையுண்டாக்கினாற்போல, பிரமமும் பிரபஞ்சத் துக்கு வேறாய் நித்தமாய் நிற்குமென்ற உரையும் பொய்யாய்ப் பிரம மும் பிரபஞ்சத்தையுண்டாக்கியும் பிரபஞ்சமும் பிரமத்தையுண்டாக்

கியும் சடத்தின் பகுதியாய்த்தோன்றிக் கெடும் நின்பிரமம். அதுவு மன்றி, அந்தவித்து மரமாம்பொழுது பூமிதரிப்பாகத் தோன்றும். அதுபோல, உன்னுடைய பிரமம் பிரபஞ்சமாம்பொழுது தரிப்பதி யாது, பிரமமாயினுய் இப்படி மயங்கக் கூறுவையாயின் உன்னைப் பேயனென்று மிக்கோர் சொல்லாநிற்பார். ௫

சூட கம்கடகம் மோதிரம் சவடி தொடரோ டாரம்முடி
தோடுநாண், ஆட கந்தருவ தாகும் அப்படிய னைத்து மப்பி
ரம மாகுமேல், நீடும் அப்பணிகள் செய்து ளோர்அவைபு
னைந்து ளோர்களை நிகழ்த்திடும், நாடி டும்சகமி யற்று வோர்
கொடு நடத்து வோர்உளர்ந விற்றிலே. ௨௫௮

(உரை) சூடகமுதல் நாணீறுகச் சொல்லப்பட்ட பேதமான பணிகளைப் பொன்னொரு முதலாக நின்று பேதித்தாற்போல, பிரம மும் பிரபஞ்சபேத மெல்லாமாகப் பேதித்து முதல்கெடாமல் நிற்கு மென்று கூறின், அப்பணிபோலப் பேதித்து எல்லாம் பிரமமாய் நிற் குமாகில், அப்பணிபேதஞ் செய்தோரையும் அப்பணி யணிந்தோரை யும் அப்பணி தானேயுண்டாக்கி நிற்றலால் அதுபோல, ஒரு முதலைக் கொண்டு சகத்தை யுண்டாக்குவோரையும் அதனை நடத்துவோரை யுஞ் சங்கரிப்போரையுஞ் சொல்லுங்காலத்து அறிந்திடுந் தன்மையை யுடைத்து. ௬

அறிவி னோடுசெயல் மாறில் வீடதனை அணுகொ
ணாதவைஇ ரண்டினுல், உறுதி யானபிர மத்தி னேடழிய
ஒன்ற லாமெனஉ ரைத்திகாண்,இறுதி யேல்அதனொ டிசைவ
தின்றிசைவ துள்ள தாயிடின்அவ் வின்பமே, பெறுதி நீஉட
லொ டுயிர்க ளாய்அறிவு பிரியு மாறுசெயல் பெறுவதென்.

(உரை) ஞானக்கிரியைகள் மாறினுல் வீட்டின்பம் அணைதற்கு அரிது ; ஞானக்கிரியைகள் இரண்டினுலுஞ்சென்று அவற்றிற் காதார மாகிய பிரமத்திலே அழியக் கூடலாமென்று கூறினுய் ; ஞானக் கிரியைகள் நிற்கப் பிரமத்தைச் சென்று கூடுதலுமில்லை ; அந்த ஞானக்கிரியைகள் கெட்டாற் பிரமத்தோடு கூடுதற்கு ஒரு முதலும் இல்லையாம் ; அன்றி அந்த ஞானக்கிரியைகள் கெடாம லொன்றுவ துள்ளவாமாயின், நீ எப்பொழுதும் அந்தச் சுகத்தை அநுபவிப்பதன்

றிக் காயத்தோடு உயிர்களின் மிக்க அறிவு நீங்கும்படி அவத்தையின் செய்தியைப் பெறுவானேன்; ஆதலால், ஆன்மாவென்று ஒன்றுண்டு.

உடலோடுயிர்களாயது பிறக்குமாறு செயல்பெற்றியால் எனப் பாடமாயின், இன்பத்தைப் பெற்று நிற்றலன்றி நீயும் உடலோடு உயிர்களாய் வந்து பிறக்குமரபு பெற்றாயெனப் பொருள் கொள்க. இதனால் உலகமும் உயிருமாய்ப் பிறந்திறந்துழலும் அவனன்றோ நீயென்றதெனக் கொள்க. ரு

## நிரீச்சுரசாங்கியன் மதம்

மூலம் புரியட் டகம்விகிர்தி யாகி மூன்றாய்ப் பிரகிருதி
தூல சூக்கம் பரமாயச் சுத்த புருடன் சந்நிதியில்
பாலன் சேட்டை புரிந்துலகம் யோனி பலவாய்ப் பரந்தொடுங்கும்
சால வென்று நிரீச்சுவர சாங்கி யன்றான் சாற்றிடுமே. உசுO

(உரை) பிரகிருதி புமானென்னும் இரண்டில், பிரகிருதியானது மூலமென்றும் புரியட்டகமென்றும் விகிர்தியென்றும் மூன்று பெயரையுடைத்தாய், தூலமாயும் சூக்குமமாயும் பரமாயும் நிற்கும்; புமானாகிய சுத்தபுருடன் பிரகிருதியின் சந்நிதியிலே மழவின் செய்தியைப்போல அறியாமையைப் பொருந்திப் பிரபஞ்சமும் யோநிபேதங்களும் நானெனவிரிந்து நின்றவிடத்து, தனக்கு விவேகஞானம்வந்து சர்வமும் பிரகிருதிக்குள்ளது தனக்குள்ளதன்றென்று காணவே, பிரபஞ்ச வியாபாரம் நன்றாக நீங்குமென்று, நிரீச்சுவரசாங்கியன் சொன்னான்.

மூலம் - சித்தம். புரியட்டகம் - சத்தாதிகள் ஐந்து மனம் புத்தி அகங்காரம் மூன்று ஆக எட்டாம். விகிர்தி - தூலதேகமும் பிரபஞ்சமும். இம்மூன்று வகையாகப் பிரகிருதி பேதிக்க இதனைப் புமான்றனதென்று கொண்டுநிற்பன். இந்தப் பதினாறு கருவிகளோடுங் கூடிப் பிரபஞ்சத்தைப் பிரகிருதிக்குள்ளதென்று நீங்கப் புமானென்றும் புருடனென்றும் வேறற்று நிற்பன். அதுவே முத்தியாம் என்பது கருத்து. நிரீச்சுரசாங்கியம் - கபிலன் மதம். இதில் விகிர்தியென்றமையால், ஆங்கார பேதத்திற்றோன்றிய ஞானேந்திரிய கன்மேந்

திரியங்களும் சத்தாதிகளிற்றோன்றிய பூதங்களும் இருபத்துநாலு தத்துவங்களும் மற்றும் பேதமுமெனக்கொள்க. இதில் ஈசுரசாங்கியன் என்றும் நிரீச்சுரசாங்கியன் என்றும் இரண்டுவகையர். இதிலே சிவசாங்கியரையும் விஷ்ணு சாங்கியரையும் ஈச்சுர சாங்கியரெனக் கொள்க. க

## நிரீச்சுரசாங்கியன் மத மறுதலை

சுத்தன் அறிவன் புருடனெனில் சூழா தாகும் பிரகிருதி
பெத்தம் நீங்கி னாலும்பின் பெத்த னவன் பேரறிவால்
கத்த மேவும் பிரகிருதி கண்டு கழிக்க மாட்டானேல்
முத்த னகான் சுத்தனுக்கு மூலப் பிரகி ருதியிலையாம். உகூக

**(உரை)** ஆன்மபுருடன் சுத்தமான அறிவை யுடையனுமாகில் அவனை அசுத்தமாகிய பிரகிருதி வளையாதாகும். அன்றியும், பெத்தனைய் நின்றவிடத்தினும் இவனைப் பந்தியாது அஞ்ஞானம். அது பிரகிருதிக்குள்ளதாய் நிற்குமென்னில், பெத்தம் நீங்கினவிடத்திலும் அறியாமல் நின்றுனைகையால், பெத்தத்தைப் பொருந்தினவனுவன்; மிக்க அறிவாகிய பரையோடுகூடி நின்றும் பொல்லாங்கைப் பொருந்தின பிரகிருதியின் செயலைத் தரிசித்து நீங்கமாட்டானையின் அஞ்ஞானம் பிரகிருதிக்குள்ளதென்று காணுந் தகுதியையுடையனல்லனைகையால், பரையுடனே கூடிநின்று பிரகிருதியை நீங்கானையின் முத்தியடையும் ஆன்மாவாகான். சுத்தனயிருக்கிற பிரமத்துக்கு மூலப்பிரகிருதி யுண்டாகாது; மூலப்பிரகிருதி கூடுவதும் நீங்குவதும் ஆன்மாவுக்கென் றறிவாயாக. (கத்தம் - பொல்லாங்கு). க

புருடன் பிரகி ருதிபெற்றால் போதம் சிறிதங் குண்டாகிக், குருடன் முதுகின் முடவனிருந் தூர்ந்தாற் போலப் பிரகிருதி, இருட னிடத்தே இருந்தியங்கும் கன்மால் இறையன் றிரண்டினையும், மருட னுருவாய்ச் சேட்டிப்பித் தறியும் அமலன் அரனேயாம். உகூஉ

**(உரை)** சுத்தபுருடனென்ற ஆன்மபுருடன் பிரகிருதியைக் கூடினவிடத்துப் பிரகிருதியாலே சிறிது அஞ்ஞான அறிவுண்டாய்,

அந்தகன் முதுகிலே முடவனிருந்து அந்தகனை நடாத்தினாற்போல, கன்மத்துக்கீடான பிரகிருதியாலே சிறிது அஞ்ஞானம்பெற்ற புருடனைப் பிரகிருதிகூடி அவனிடத்தேயிருந்து கன்மத்துக்கீடான தொழிலை நடாத்தும், ஆகையாற் பிரகிருதியுடன்கூடி நிற்பான் ஆன்மாவேயாம்; கர்த்தாவன்று. அந்த ஆன்மபுருடனையும் அவனைக் கூடிநிற்கிற பிரகிருதியையுங் கூட்டி அஞ்ஞானமே தனக்கு உருவமாகக்கொண்டு நடக்கும்படியாக நடாத்துவித்து ஆன்மாக்கள் செய்த கன்மத்தையும் அறிந்து அதற்குத் தக்க பயனையும் கொடுப்பான் மலரகிதனாகிய அரனே.

பிரகிருதிக்கு அஞ்ஞானமே சொரூபமாகையால் அவ்வஞ்ஞானத்தைப் பொருந்திநின்ற புருடனை மருடனென்று கூறப்பட்டது. அமலனென்கையால் கர்த்தா மலரகிதனென்பது கருத்து. புருடனாவான் பிரகிருதி கூடினாற் சிறிதறிவுண்டாய்க் குருடனுடைய முதுகிலே முடவனிருந்து நடாத்தினாற்போலப் பிரகிருதியாகிய விருடனிடத்தே புருடனிருந்து வழங்குங் கன்மத்தாலே வேறு கர்த்தாவாலன்றென்றெனில், அப்பிரகிருதி புருடனாகிய இரண்டையும் அருள்தன் உருவாய் நின்று சேட்டிப்பித் தறியாநிற்கும் அமலனாகிய பரமேசுவரனென்க. குருடன் முதுகில் முடவனிருந் தூர்கையாவது ஒன்றுக்குள்ள குணம் ஒன்றுக்கில்லாமல் சேட்டை கூடாதாம். உ

**அ**றியான் புருடன் பிரகிருதி அசேத நம்கா ரியத்தி னுக்குக், குறியாய் நாதன் உளனென்று கூறு முத்தி விவேக மெனில், செறிவாம் தனைபோ காதறியில் சேர்த்தோன் வேண்டும் செயலிற்போம், நெறியால் பணிசெய் துடற்பாசம் நீக்கிக் கொள்நீ நின்மலனால். உ௯

(உரை) ஆன்மபுருடன் தானொயொன்றையும் அறியமாட்டான். பிரகிருதியுஞ்சடம்; ஆதலால், இவை காரியப்படுதற்குக் காரணமாகிய கர்த்தா ஒருவனுளனென்று குறிப்பாயாக. நீ முத்தியென்று சொல்லப்பட்டது பந்தம் நமக்குள்ள தன்றென்றறியும் விவேகஞானமென்னில், எல்லாவற்றையும் அறியுமிடத்துப் பாசஞானமும் பசுஞானமுங்கூடி அறியவேண்டுமாகையாற் பாசபந்தம் நீங்காதாம். அந்தப் பாசம் நீங்குமிடத்து முன்பு கூட்டினோனே நீக்கவேண்டும். அந்தப் பாசத்தைக் கூட்டின கர்த்தாவின் காருண்ணியத்தாலே பாசபந்

தம் நீங்கும். அது நீங்கும்படிக்குச் சரியை கிரியா யோக ஞானங்களாகிய வழிகளிலே நின்று தொண்டுசெய்து நீ கர்த்தாவினுலே உன் பாசபந்தத்தை நீக்கிக்கொள்வாயாக. ௩

## பாஞ்சராத்திரி மதம்

ஆதியாய் அருவ மாகி அகண்டபூ ரணமாய் ஞானச்
சோதியாய் நின்ற மாயன் சுவேச்சையால் உருவு கொண்டு
நீதியார் கருணை யாலே நீள்கடல் துயின்று நூலும்
ஓதினு னென்று பாஞ்ச ராத்திரி உரைப்ப னுற்றே. ௨௬௪

(உரை) ஆதிபூதனுய் அரூபியாய் எவ்விடத்தினும் நிறைந்து நிற்பவனுய் ஞானசொரூபியாய் நின்ற விஷ்ணுவானவன், ஆன்மாக்களை இரக்ஷிக்கவேண்டித் தனதிச்சையாலே மீன் முதலான திருமேனிகளை எடுத்துக்கொண்டும், இரக்ஷிக்கவேண்டும் முறைமையாகப் பொருந்தின கருணையாலே நெடிய திருப்பாற்கடலிலே யோகநித்திரைசெய்தும், அநாதியாகிய வேதத்தையும் அருளினுனென்று, பாஞ்சராத்திரி யென்னும் சமயி சொல்லுவன். க

உந்தியில் அயனை ஈன்றும் அவனைக்கொண் டுலகுண் டாக்கி
அந்தநல் லுலக ழிக்க அரனையும் ஆக்கு வித்துத்
தந்திடுஞ் சகத்தி னுக்குத் திதிகர்த்தா தானே யாகி
வந்திடும் தோற்றம் ஈறும் நிலைமையும் பண்ணும் மாயன்.

(உரை) வைகுண்டத்திலே யிருக்கும் பரமபுருடன், சிருஷ்டி காரணமாகத் தனது திருவுந்தித் தாமரையிலே பிரமாவை யுண்டாக்கி அவனுலே பிரபஞ்சத்தை உண்டாக்குவித்தும், அப்படி அழகு பெறப் படைத்த பிரபஞ்சத்தைச் சங்கரித்தற்குப் பிரமாவினிடத்திலே நின்றும் உருத்திரனை உண்டாக்கி அவனைக் கொண்டு சங்கரிப்பித்தும், தன்னுலுண்டாக்கப்பட்ட பிரபஞ்சத்துக்கு இரக்ஷிக்குங் கர்த்தாவுந் தானேயாகி, இப்படி வரப்பட்ட சிருஷ்டி திதி சங்காரங்களையுஞ் செய்பவன் பரம புருஷோத்தமனென்று பாஞ்சராத்திரி சொல்லுவன்.

பஞ்சராத்திரியில் நூல்செய்கையால், பாஞ்சராத்திரி யென்று பெயராயிற்று. அரனையும் ஆக்குவித்தென்றது - பிரமாவின் முகத்திலே அரனைத் தோற்றுவித்தது. ௨

மீன்ஆமை கேழல் நார சிங்கம்வா மனனுய் வென்றி
ஆனுத இராமர் மூவர் ஆயனுய் அளித்தான் கற்கி
தானுயும் வருவன் இன்ன மென்றவன் சாற்றித் தேவர்
கோனுயும் நிற்ப னென்று கூறுவன் குறிப்பி னேடே. ௨௬௬

**(உரை)** பிரபஞ்சத்தை இரக்ஷிக்கவேண்டி மீனுகியும் ஆமையாகியும் பன்றியாகியும் நாரசிங்கமாகியும் வாமனனுகியும், வெற்றிகெடாத பரசுராமனுகியும், பலபத்திர ராமனுகியும், ஸ்ரீ ராமனுகியும், கிருஷ்ணனுகியும் இரட்சித்தான். மேற்குதிரையாகியும் வந்திரக்ஷிப்பனென்று பாஞ்சராத்திரி சொல்லி, இப்படித் தசாவதாரங் கொள்ளும்போதும் முத்திதேவன் தேவர்களுக்குக் கர்த்தாவுமாயிருப்பனென்று அறிவோடுஞ் சொல்லா நிற்பன். ௬

ஏழ்கடல் செலுவில் ஏற்றும் இருங்கிரி முதுகில் ஏற்றும்
தாழ்தலம் முழுதுங் கண்டும் தபநியன் உடல்பி ளந்தும்
வாழுல களந்தும் மன்னுய் மன்னர்க்கு மன்ன ராயும்
பாழ்பட உழறிப் பாரும் நோக்கும்பின் பரிபு மாயே. ௨௬௭

**(உரை)** மச்சரூபமாய்ச் சத்தசமுத்திரங்களையும் ஒரு செலுவிலே அடக்கியும், அமுதமர்த்தநத்திற் கூர்மரூபமாய் மகாமேருவை முதுகிலே தாங்கியும், பிரளயத்திலே தாழ்ந்துபோன பூமியை வராகரூபமாய்ப் புகுந்தெடுத்தும் நாரசிங்கரூபமாய் இரணியவதை செய்தும், வாமனரூபமாய் வாழ்கின்ற உலகளந்தும், இருபத்தொருகால் க்ஷத்திரியரைச் சங்கரித்து மண்டலநாபியாய்ப் பரசுராமனுகியும், இராமனுய் இராவணனை வதைசெய்தும், பலபாத்திராமனுய் லோகரக்ஷார்த்த மாயோகத்தினின்றும் வாசுதேவனுய் அசுரர் மாயை பாழ்படச் சிதறியும் பிரபஞ்சத்தை இரக்ஷிக்கும், இனிவரும் பிரளயகாலத்துக்குக் குதிரையாய் வந்திரக்ஷிக்குமாயன்.

மன்னர்க்கு மன்னராயும் என்றது - இராமாவதார மூன்றிலும் பொருந்தாத இராசாக்களை வென்று அவர்களுக்கு இராசாவாயும் இருந்ததென்க. ௭

போய்கைவாய் முதலை வாயில் போதகம் போத மாட்டா(து)
ஐயனே நாதா ஆதி மூலமே என்ற ழைப்ப
உய்யயாம் பணிமால் ஓல ஓலவென் றோடிச் சென்று
வெய்யவாய் முதலை வீட்டிக் கரிக்கும்வீ டருளி னானே. உகூஅ

(உரை) பொய்கையிடத்தில் தங்கிய யானை அப்பொய்கையின் கண் உண்டாகிய முதலைவாயிலே அகப்பட்டுக் கரையேறமாட்டாமல், சுவாமியே கர்த்தாவே ஆதியே மூலமே என்று நொந்து கூப்பிட் டழைப்ப, யாம் ஈடேறும்படி வணங்கப்பட்ட பரமபுருடன் கிருபை செய்தோடிச்சென்று கொடிய வாயினையுடைய முதலைவாயினின் றும் விடுவித்து, அந்த யானைக்கும் முதலைக்கும் வைகுண்டபதம் அளித்தருளினான். ரு

அலைகடல் கடைந்தும் வானோர்க் கமுதினை அளித்துந் தீய
கொலைபுரி அசுரர் தம்மைக் கொன்றுல கங்கள் காத்தும்
கலைமலி பொருளன் பர்க்குக் கருணையால் உரைத்தும் மிக்க
தலைமையில் நிற்பன் மாய னென்றும்பின் சாற்றி னானே.

(உரை) தேவர்களுக்கு நித்தியத்துவம் உண்டாகவேண்டி மகா மேரு மத்தாகவும், வாசுகி நாணாகவும் சமுத்திரத்திலே அமுதமர்த்த கஞ்செய்து தேவர்களுக்கு அமுதங்கொடுத்தும், பிரபஞ்சத்திலே கொடிய கொலைத்தொழிலைப் பொருந்தின அசுரரைக்கெடுத்துத் தேவர்கள் முதலாகிய ஆன்மாக்களை இரட்சித்தும், சர்வகலைகளும் பொருந்தின அர்த்தத்தைத் தனது கருணையாலே அடியவர்களுக் கருளியும், இப்படி மிக்க கர்த்திருத்துவங் குன்றாமல் நிற்பவன் பரம புருடனென்று சொன்னான் பின்னும் பாஞ்சராத்திரி. சூ

மாயையாய் உயிராய் மாயா காரிய மாகி மன்னி
மாயையாற் பந்தஞ் செய்து வாங்கிடும் அவனா லன்றி
மாயைபோ காதென் றெண்ணி மாயனை வணங்கப் பின்னை
மாயைபோம் போனால் மாயன் வைகுண்டம் வைப்பனன்றே.

(உரை) பரமபுருடன் பிரபஞ்ச சிருஷ்டி காலத்தில் மாயா சொரூபியாய்த் தன்வழி மயங்கும் ஆன்மாக்களுமாய் அவ்வான்மாக் களைப் பந்திக்குந் தத்துவ ஜாலங்களுந் தானேயாய் நிலைபெற்று, அம்மாயையாலே ஆன்மாக்களைப் பந்தித்து மீளவும் நீக்குவன் மாய

னுகையால் அவனலன்றி மாயை நீங்காதெதன விசாரித்து, பதிவிரதை யைப்போல மற்றொரு தெய்வத்தை நினையாமற் பரமபுருடனையே வணங்கி வழிபாடுசெய்யவே அந்தப் பந்தமாகிய மாயை நீங்கும். அம்மாயை நீங்கவே, பரமபுருடன் விரசையாற்றின் இடத்ததாகிய நன்னீராலே ஆன்மாவைச் சுத்தமாக்கி வைகுண்டத்திலே சாரூப்பிய மாக வைப்பனென்று பாஞ்சராத்திரி கூறினன். எ

---

## பாஞ்சராத்திரி மத மறுதலை

ஆதிதா னாகில் ஆதிக்(கு) அந்தமுண் டாகும் அந்தக்
கோதிலான் இறைவ னென்று கூறிடும் வேதம் ஞானச்
சோதியாய் நின்றா னாகில் தோய்ந்திடான் மாயை ஞானத்
தீதிலா உருவ மென்னில் சேர்ந்திடான் தாதுச் சென்றே.

**(உரை)** பாஞ்சராத்திரீ! நீ உன் கர்த்தாவை ஆதியென்று கூறி னாய்; அங்ஙனம் ஆதியாயின் ஆதிக்கு முடிவுண்டாய்க் கர்த்தாவும் அல்லனாவன். அஃதியாங்ஙனமென்னில், வேதநூலும் ஆதியும் அந்த மும் இல்லாதவனே கர்த்தாவென்று சொல்லாநிற்கு மாதலால் ஞானப்பிரகாசமாயும் அரூபியாயும் பரிபூரணமாயும் நின்றானாயின், மாயையினகப்பட்டு மாயாரூபமாகான். அற்றன்று, அப்படி எடுத் துக்கொண்ட திருமேனிகளும் குற்றமில்லாத ஞான சொரூபமே யென்னில் அவன் ஞானசொரூபியாயின் அந்த ஞானஸ்வரூபத்துக் குத் தாதுக்களுண்டாகா; இவனெடுத்துக்கொண்ட வடிவெல்லாந் தாதுக்களுண்டாய்ச் சங்காரப் படுகையாற் கர்த்தாவல்லன். க

தாதுவா னதுவ தென்னில் சங்கரன் பலிக்குச் செல்லத்
தீதிலாக் கோதண் டத்தைத் திறந்தவன் விட்ட போது
போதுவ துதிர மன்றோ போந்துமூர்ச் சித்து வீழ்ந்தான்
நாதனார் எழுப்பப் பின்னே நடந்தனன் கிடந்த வன்றான்.

**(உரை)** அவனுக்குத் தாதுக்களுண்டானபடி எங்ஙனமென்னில், பரமேசுவரன் விஷ்ணுவின் அகந்தையைக் கெடுப்பது காரணமாகப் பிக்ஷாபாத்திரம் வாங்கிப் பிக்ஷைசெய்ய அநேகம் பலிகளாற் பாத்திர நிறையாததால் அவ்விடத்துப் புருடோத்தமன் கருவத்தாலே யானி தனை நிறைப்பேனென்று நெற்றியின் நரம்பினைத் திறந்துவிடப்

புறப்பட்டது இரத்தமன்றோ? அந்த இரத்தம் போதுகையாலே விஷ்ணு மூர்ச்சித்துக் கிடப்பப் பிரமாதிகள் தோத்திரஞ் செய்யப் பரமேசுவரன் அருளிச்செய்தெழுப்ப எழுந்திருந்து பரமேசுவரன் பிறகே நடந்துசென்றான்; திருப்பாற்கடலிலே பள்ளிகொண்ட மூர்த்தியாகையால் தாதுக்கள் பரமேசுவரனால் உண்டென்றறிவாயாக.

பரமேசுவரன் பிக்ஷைக்கெழுந்தருள விஷ்ணுவின் அம்ஸமாகிய விண்டுசேனன் துவாரத்தே நின்று தகையப் பரமேசுவரனோடே போந்த காலவேகர் என்கிற பூதர் அந்த விண்டுசேனனைப் பிடித்தடித்துத் திரிசூலத்தே ஏற்றினார். அந்த ஆரவாரத்திலே விஷ்ணு எழுந்திருந்து ஈசுவரனை நமஸ்கரித்து இலலாடத்தைத் திறந்து கபாலம் பூரணமாக்கக்கடவேனென்று உதிரம் விட, அவ்வுதிரம் பாதிக் கபாலமும் நிறைக்கப்பெறாமலே மூர்ச்சித்து வீழ்ந்தான்; பின்பு ஈசுவரன் அவன் பத்திகண்டு பிரியப்பட்டுப் பலங்கொடுக்க, எழுந்திருந்து பின்னே சென்றானென்பது நூல் வரலாறு. உ

இச்சையால் உருவங் கொள்வன் அரியெனில் இகழ்வேள் விக்கண்
எச்சனாய் உண்ணப் புக்கங் கிருந்தஅன் றீச னாலே
அச்சமார் தலைய றப்புண் டான்தலை யாக்கிக் கொள்ளான்
நச்சினார் போற்ற நாதன் நாரணன் தலைகொ டுத்தான். ௨௭௩

(உரை) புருஷோத்தமன் சுவேச்சையாலே உருவெடுத்துக் கொண்டானென்னில் பரமேசுவரியை இகழப்பட்ட வேள்வியிடத்தே எக்கிய மூர்த்தியாய் அவிகொள்ள இருந்தனொன்று, வீரபத்திர தேவர் அச்சமுண்டாம்படி தலையறுப்ப, அந்தத் தலையிழந்தவிடத்துத் தலையுண்டாக்கிக் கொள்ளாதவனானான். பின்பு பத்தராகிய தேவர்கள் புகழ, நாரணனுக்கு மீளவும் பரமேசுவரனே தலையையுண்டாக்கினான் ஆதலால் சுவேச்சையால் உருவெடுத்தானென்று சொல்வாயல்லை. ௩

நூலினை உரைத்து வேத நூலினை நுவலும் வண்ணம்
மால்அருள் செய்தா னென்றாய் மறைநீதி உலகி யற்கை
சாலவே தெரியா தாகிக் கிடந்தநாள் சகத்தி யார்க்கும்
ஆலின்கீ ழிருந்து வேதம் அருளினான் அறைந்தான் நூலே.

(உரை) நூலினை உரைத்து வேத நூலினை நுவலும் வண்ணம் மால் அருள் செய்தானென்றாய் - புருஷோத்தமன் வேதத்தையும் அருளிச்செய்து அந்த வேதநூலில் ஆராயும் பொருள்களையும் அருளிச்செய்தானென்று கூறினாய்,—மறைநீதி உலகு இயற்கை சாலவே தெரியாதாகிக் கிடந்தநாள் சகத்து யார்க்கும் ஆலின்கீழ் இருந்து வேதம் அருளினன் அறைந்தான் நூலே - வேதநூலொழுங்கும் உலகவியற்கையுந் தெரியாதாகித் தலைமயங்கிக் கிடப்பப் பிரபஞ்சத்துள்ளோர் யாவர்க்கும் பெரிதுந் தெரியவேண்டி வடவிருக்ஷத்தின் கீழிருந்து வேதநூலை அருளிச்செய்து அதன் பொருள் தெளிய வேண்டி ஆகமநூலும் அருளினன் ஆதலால், பரமேசுவரனாலே உண்டாக்கப்பட்டன வேதாகம புராணங்களாம். ௧௨

அயன்றனைப் பயந்தா னென்றாய் அரிஅயன் சிரஞ்சே திப்பப் பயந்திடான் தலைமால் தானும் படைத்திடான் சிரத்தைக் கிள்ளும் சயந்தரும் அரனைத் தந்தான் அயனென்கை தப்பே யன்றோ தியங்கிடா துணராய் எல்லாஞ் சிவன்செய லென்று தேர்ந்தே.

(உரை) பிரமாவைப் புருஷோத்தமன் படைத்தானென்று கூறினாய், பிரமாவைப் புருஷோத்தமன் படைத்தானென்று கூறின் அஞ்சுமுகமுடைய மாதலாலே நாமும் பரமேசுவரனுக் கொப்போமென்று கருவித்தவிடத்துப் பிரமாவினுடைய நடுத்தலையைப் பரமேசுவரன் அறுக்கக்கண்டு நின்ற பிதாவாகிய விஷ்ணு பயப்படானாய்ப் பிரமாவின் தலையை உண்டாக்கமாட்டுகிலன். பிரமாவின் தலையைக் கிள்ளத்தக்க வெற்றிபெற்ற பரமேசுவரன் கர்த்தாவல்லனாய்த் தலையிழந்த பிரமா பரமேசுவரனைப் படைத்தானென்பது தவறன்றோ ? ஆதலால், எல்லாம் பரமேசுவரன் செயலேயென்று விசாரித்து மயங்காமல் அறிவாயாக. அதற்குக் காரணம் மேலே சொல்லாநின்றோம். ௫

சீவன்கள் சகநம் போலச் சிலர்வயிற் றுதித்த மாலைத், தேவென்றே உலகங் காக்கச் சுவேச்சையாற் சநித்தா னென்பீர், பூவன்பின் படைக்க மாட்டா தரனடி போற்ற வேதக், கோவந்து முகத்தில் தோன்றிச் சிருட்டியைக் கொடுத்தல் கூறும். ௨௭௬

**(உரை)** ஆன்மாக்களது பிறப்புப்போல யோனிசாதனனான புருஷோத்தமனைப் பிரபஞ்சத்தை இரட்சிக்கவேண்டிச் சுவேச்சையாலே உருவெடுத்துக் கொண்டானென்றும் அவனிடத்திலே பிரமாதோன்றிப் பிரமாவாலே பிரபஞ்சந் தோன்றிற்றென்றுங் கூறுவீர். சர்வ சங்காரஞ்செய்து பரமேசுவரன் மீளவும் பிரமா முதலான காரணேசுவரரை யுண்டாக்கிப் பிரபஞ்ச சிருஷ்டி செய்விக்கப் பிரமாவும் பிரபஞ்சத்தைச் சிருஷ்டிக்க அறியாமல் மயங்கிப் பரமேசுவரனை நோக்கித் துதிக்கவே வேத கர்த்தாவான பரமேசுவரன் பஞ்சகிருத்திய நடப்பிப்பது காரணமாகப் பிரமாவின் நெற்றியிலே தோன்றிப் பிரமாவுக்குச் சிருஷ்டியை யுண்டாக்கிக் கொடுத்தலைச் சர்வ புராணங்களுஞ் சொல்லும் ஆதலால் பரமேசுவரன் பிரமாவாலே தோற்றப் பட்டவனல்லன் என்றறிவாயாக. சு

நாரணன் அயனை யீன்றும் அயனும்நா ரணனை யீன்றும்
காரணம் ஒருவ ருக்கங் கொருவர்தாம் இருவ ருக்கும்
வாரண முரித்த வள்ளல் காரண னென்று மன்ற
ஆரணம் உரைக்கும் டக்கத் தவர்களும் அடைந்தா ரன்றே.

**(உரை)** நாரணன் பிரமாவை யுண்டாக்கியும், பிரமா நாரணனை யுண்டாக்கியும், ஒருவருக்கொருவர் காரணமாய்க் காரியப்பட்டுவருவர். அப்படி ஒருவருக்கொருவர் காரியப்பட்டு வருதற்கு முதற்காரணமாவான் யானையை யுரித்துப்போர்த்த பரமேசுவரனென்றே தெளிய வேதஞ் சொல்லாநிற்கும். பரமேசுவரன் காரணமாகையாலே விஷ்ணு வலப்பாகமும் பிரமா இடப்பாகமுமாக அடங்குவார்கள் அநாதியே. எ

அழிப்(பு)அரி யேவ லென்றாய் அரிதனை யழிக்கும் அன்றங்(கு)
அழிப்பது தவிர்க்க மாட்டான் அங்கமும் அழித்தே பூண்டான்
அழிப்(பு)அரி யேவ லென்றங் கறைந்ததும் அழிந்த தன்றோ
அழித்திடும் அரனே ஆக்கம் நோக்கமும் ஆக்கு வானே.

**(உரை)** சங்காரம் புருஷோத்தமன் ஆக்கினையென்றாய் அப்படியாயின், சர்வ சங்காரத்துப் பிரமவிஷ்ணுக்கள் முதலாகச் சங்காரப்பட விஷ்ணு தன்மேல் வாராமல் நீக்கிக்கொள்ளமாட்டான். அஃதன்றியும், பிரம விஷ்ணுக்களைச் சங்கரித்த - அவதாரங்களின் மீன் சேல் பன்றிக்கோடு சிங்கப்பல் ஆமையோடு கொக்கிறகு அன்னத்

ஆவி முதலியன அணிகையாற் புருஷோத்தமனுக்கினையாற் சங்கரித்த தின்றித் தான் கர்த்தாவாய்ச் சங்கரித்தவனும். ஆதலால் சங்காரம் விஷ்ணுவினுடைய ஆக்கினையென்று கூறியதும் அழிந்ததாம்; சங்கரிப்பிப்பதும் பரமேசுவரனே யாகையாற் சிருஷ்டி திதிகளும் அவனாலே யுண்டாமென்றறிவாயாக. அ

வானம்கீழ் மண்ணு மெல்லாம் மாயனே காப்பா னென்றாய்
தான்அஞ்சும் சலந்த ரன்தன் உடல்கீண்ட சக்க ரத்தை
ஆன்அஞ்சும் ஆடு வான்பாற் பெற்றுல களித்த வார்த்தை
தாமெனங்கு மாகு மெல்லாம் சங்கரன் காப்பே யாமே. ௨௭௯

**(உரை)** ஆகாசமுதற் கீழ்ப்பிருதிவி யீறாகவுள்ள பிரபஞ்சமெல்லாம் புருஷோத்தமனே இரக்ஷிப்பனென்று கூறினாய். சலந்தராசுரனுக்கு விஷ்ணு பயப்பட்டுப் பரமேசுவரனை நோக்கித் தவஞ்செய்ய அவ்விஷ்ணு தவத்தைக் கெடுக்கவந்த சலந்தரனைச் சக்கரத்தாலே பிளந்த பரமேசுவரனிடத்தில் அச்சக்கரத்தைப் பெறவேண்டிப் பரமேசுவரனை நெடுங்காலம் அர்ச்சித்தும் அவன் அநுக்கிரகஞ் செய்யாமையாற் பின்பு விஷ்ணு கண்ணை இடந்து மலராக அர்ச்சிக்கப் பஞ்சகவ்வியத்தில் மூழ்கும் பரமேசுவரன் மாட்டுச் சக்கரம்பெற்று அதனைக் கொண்டு மாலி சுமாலி மாலியவான் முதலாகிய அசுரரை வென்று பிரபஞ்சத்தை இரக்ஷித்தானென்னும் புராணம் பிரமாவாலே சொல்லப்பட்டுப் பிரபஞ்சமெங்கும் உண்டாயதாகையால், பிரபஞ்சத்தை விஷ்ணு இரட்சிப்பது பரமேசுவரன் இரக்ஷையேயென் றறிவாயாக. கூ

மாலினார் சேலி னாராய் வாரிகள் அடக்கிக் கொண்டன்(று)
ஆலியா உலக மெல்லாம் அழிப்பவன் நானே என்னச்
சேலினார் தமைப்பி டித்துச் செலுவினை இடந்து கண்ணைச்
சூலியார் மேல ணிந்தான் சூலிதா னுரு மன்றே. ௨௮0

**(உரை)** பிரளயகாலத்திலே பிரபஞ்சத்தை இரக்ஷிக்கவேண்டி மச்ச வடிவுகொண்டு சத்தசமுத்திரங்களையும் ஒரு செலுவிலே அடக்கினனான்று கருவித்துப் பிரபஞ்சத்துக்குச் சங்கார கர்த்தாவும் நானே யென்றுசொல்ல, விஷ்ணுவின் கருவத்தை யடக்கவேண்டி அந்த மச்சத்தைப் பிடித்துச் செலுவினையுங் கண்ணினையுமிடந்து

கூரிய திரிசூலத்தின் மேலே அணியாக அணிந்தான் சூலபாணியாகிய பரமேசுவரனுவான். ௧௦

ஆமையாய் மேருத் தாங்கி அடைகலாய்க் கிடந்த போது
நாமெனு உலகா தார நாதனென் றகந்தை பண்ண
ஆமெனு ரன்று மென்னுர் அமரரு மானுர் பார்த்துத்
தாமநாள் ஆமை யாரைத் தகர்த்தோடு தரித்தா ரன்றே.

(உரை) ஒரு காலத்துப் பிரளயம் வந்து பிரபஞ்சத்துக்கு ஆதாரமாகிய மேருமலை சலித்தபோது புருஷோத்தமன் கூர்ம ரூபமாய் அம்மலையைத்தாங்கி ஆதார சிலைபோற் கிடந்து பிரபஞ்சத் துக்கு ஆதாரமும் அதற்குக் கர்த்தாவும் நாமேயென்று அகங்கரித்த விடத்து, விஷ்ணுவின் கருவத்தைப் பார்த்தருளிக் கர்த்தாவாமென் றும் அன்றென்றுஞ் சொல்லாராய் அந்த நாளிலே ஆமையைத் தகர்த்து அந்த வோட்டை என்புமாலையோடணிந்தார் தேவரூபரு மாய் அல்லருமாகிய பரமேசுவரர் ஆதலால் இவரே கர்த்தாவென் றறிவாயாக. ௧௧

எழுதலம் இடந்து பன்றி யாய்இருங் கொம்பி லேற்றுத்
தொழுதல கிறைஞ்ச நின்ற சோதிநா னென்ற போதன்(று)
அழுதல மந்து வீழ அருங்கோடு பறித்த ணிந்தான்
கழுதல மந்து காட்டில் ஆடிடுங் கடவு ளன்றே. ௨௮௨

(உரை) ஒரு பிரளயத்து விஷ்ணு வாராகமூர்த்தியாய் அதல விதல சுதல தராதல இரசாதல மகாதல பாதாளம் என்னப்பட்ட எழு பூமிகளையுங்கீண்டு பெரியகொம்பிலே ஏற்றுக்கொண்டுநின்ற பராக் கிரமத்தினலே பிரபஞ்சத்தார் புகழ்ந்து வணங்க நின்ற கர்த்தா யானல்லது வேறில்லையென்று கர்வித்தபோது, உடனே சோகத்தி னல் துக்கித்துப் பூமியிலே விழும்படி அப்பன்றிக்கோட்டைப் பறித்து அணியாக அணிந்துகொண்டான் பேய் சுழன்றாடுங் காட்டில் ஆடலை விரும்பின கர்த்தா. ௧௨

இங்கடா வுளனே மாலென் றிரணியன் தூணை எற்ற
உங்கடா மோத ரன்றான் உருநர சிங்க மாகி
எங்கடா போவ தென்னு உடல்பிளந் திறையா னென்ன
அங்கடா சிம்பு ளாகி யெடுத்தடர்த் தான் அரன்றான். ௨௮௩

**(உரை)** ஒரு காலத்திலே இரணியனாகிய அசுரன் இவ்விடத்தில் உங்கள் புருஷோத்தமன் உளனோவென்று தூணைத்தட்டிக் காட்ட, உங்கள் தாமோதரனாகிய புருஷோத்தமன் அந்தத்தூணிலே நாரசிங்க ரூபமாகித் தோன்றி இரணியனை ஏட இனி எங்கே போவாயென்று பிடித்து உடலைப் பிளந்தமையால் உண்டான கருவத்தாலே பிரபஞ்சத்துக்கு நாமே கர்த்தாவென்ன, அவ்விடத்துச் சிம்புளென்னும் வடிவுகொண்டு நாரசிங்கத்தை எளிதாகத் தூக்கிச் சங்கரித்துத் தோலை ஆசனமாகக் கொண்டான் பரமேசுவரன். ௧௫

தானமென் றிரந்து செல்லத் தனக்குமூ வடிகொடுப்ப
வானமும் அளந்து கொண்டு மாபலி தன்னைப் பின்னை
ஈனமாஞ் சிறையி லிட்டான் இறையன்றான் நீந்தோர் தங்கட்(கு)
ஊனஞ்செய் திடுவோர் தாங்கள் உத்தம ரல்ல ராகும்.

**(உரை)** ஒருகாலத்திலே புருஷோத்தமன் வாமன வடிவு கொண்டு மாபலியிடத்திலே தானங்கொடுக்க வேண்டுமென்று இரந்து செல்ல, அவனுக்கு அவ்வரசன் தானமாக மூவடிமண் கொடுப்ப, தானம் பெற்றுப் பூமி யந்தர சுவர்க்கங்களை ஓரடியாலே யளந்துகொண்டு மற்றையடிக்கு இடமில்லாமைபற்றி மாபலியைக் குற்றமான சிறையிலிட்டானாதலால் அவன் கர்த்தாவல்லன். அஃதியாங்ஙனமென்னில், ஒருவர் ஒன்றனைத் தானஞ்செய்தால் அதனை ஏற்றுக்கொண்டவர் தானஞ்செய்தவருக்கு நன்மை செய்தலன்றித் தீமைசெய்வோர் உத்தமர் அல்லராதலால். ௧௬

மாயமான் தன்னைப் பொய்ம்மா னெனஅறி யாத ரக்கன்
மாயையி லகப்பட் டுத்தன் மனைவியைக் கொடுத்தான் தன்னை
மாயைக்கு கர்த்தா வென்பை மதிகெட்டங் கவனைக் கொன்று
நாயனார் தமைப்பூ சித்தான் கொலைப்பாவ நணுகி டாதே.

**(உரை)** ஒருகாலத்திலே இராமனாய் அவதரித்து இலக்குமியுந் தானும் வனசரிதராயுள்ளநாளில், இராவணன் இராமனை நீக்கி இலக்குமியை அபகரித்துக் கொள்வான் ஒரு பொய்மானை ஏவ, அந்த மானை இராக்ஷதமாயை யென்றறியாமல் அம்மானின் பின்னே போய்த் தன்மனைவியைப் பிடிகொடுத்தானை மாயைக்குக் கர்த்தா வென்று கூறுவீர். இலக்குமி நீங்குகையாலே மயக்கத்தையுடைய

னாய் இலங்கையிற்சென்று இராவணனையும் அவன் சேனையையுங் கொன்று கொன்ற பாவம் நீங்கச் சேதுவிலே வந்து பரமேசுவரனை அருச்சித்து வினையைக்கெடுத்துக் கொண்டான் கர்த்தாவல்லன். கரு

பரசுடன் பிறந்தான் தானும் பத்தனாய்ப் பரசி னாலே
அரசறுத் தரனை நோக்கி அருந்தவம் புரிந்தான் அன்று
பரசிய பரசு ராமன் பலதேவ னுலக மெல்லாம்
உரைசெயும் உமையாள் கோனை உள்நினைந் தியோகி னின்றான்.

(உரை) ஒருகாலத்திலே விஷ்ணு மழுவுடன் பிறந்து பரசுராம னெனப் பெயரையுடையனாய்ச் சிவபத்தனாய் மழுவைக்கொண்டு அரசர்களையறுத்து அவ்விரத்தத்திலே ஸ்நானஞ்செய்து அந்தத் தோஷந்தீரப் பரமேசுவரனை நோக்கி அருந்தவம் புரிந்தான். அந் நாளில், பிரபஞ்சம் போற்றத்தக்க பலபத்திராமன் உயர்ந்தோரெல் லாம் வழிபாடுசெய்யும் உமையவள் மணாளனை ஞானக்கண்ணாலே கண்டு யோகத்தில் இருந்தே இராச்சியஞ்செய்தான். கசு

ஓதிய வாசு தேவர் தமைஉப மனியு தேவர்
தீதிலா நோக்கஞ் செய்து சிவகரஞ் சிரத்திற் சேர்த்தி
ஆதிபா லடிமை யாக்க அரிஉடல் பிராணன் அத்தம்
ஈதெலாம் கொள்நீ என்றங் கிறைஞ்சினார் அறிந்தி டாயே.

(உரை) புருஷோத்தமன் வாசுதேவராய்த் துவாரகாபுரியிலே இருக்க, வியாக்கிரபாத முனிவர் புத்திராராகிய உபமன்னியு மகாமுநி வர் கயிலாயத்துக் கெழுந்தருள, அவரை வாசுதேவர் கண்டு, "எங்கே எழுந்தருளுகின்றீர்" என்று கேட்ப, அவர், "கயிலாயத்துக்குப் போகி றோம்" என்ன, வாசுதேவர் "கயிலாயத்திற்குச் செல்லாமல் இங்கே யாங்கள் தரிசித்துக்கொண்டிருப்ப அருள்செய்ய வேண்டும்" என்று வணங்க, உபமன்னியு மகாமுநிவர் குற்றமற்ற ஞானக்கண்ணாலே தீக்ஷிப்பித்து சிவஹஸ்தம் சிரத்தில் வைத்துத் தரிசிப்பித்து அவரைச் சிவபத்தராக்க, வாசுதேவர் ஞானபூரணராய் "என் சரீரம் அர்த்தம் பிராணன் இவையெல்லாங் கொண்டருள வேண்டும்" என்று தோத் திரஞ்செய்து வணங்கிக்கொடுத்துச் சிவபத்தராயிருந்தாரென் றறிவா யாக. கஎ

பின்வரும் பரிதா ளுகி அரியென்ருய் பின்பு வந்தால்
என்வரு மீச ஞலென் றறிகிலோம் இவுளி யார்க்கு
முன்வரும் அவதா ரங்கள் முடிந்தமை அறிந்தா யன்றே
பொன்வரும் சடையி ஞன்தன் புகழெங்கும் புக்க தன்றே.

(உரை) அந்த விஷ்ணு வருகிற யுகத்துக் குதிரையாக வருவ னென்ருய் அப்படி வந்தாற் பரமேசுவரனுலே அக்குதிரைக்கு யாது வருமோ என்றறிகிலோம். முன்பு வந்த அவதாரங்களில் உண்டா னமை நீ கேட்டறிந்தாய்; யாம் இங்ஙனஞ் சொன்ன முறைமையாற் பொன்போன்ற கொன்றைப்பூத் தரித்த திருச்சடாபாரத்தை யுடை யவன் கீர்த்தியே எங்கும் விளங்கிற்று. கஅ

கைவரை மூல மேயோ எனக்கரிக் குதவுங் காட்டின்
மொய்வரை எடுத்தான் மூலம் ஆயிட வேண்டு மோதான்
ஐயனே முறையோ என்ருல் அரசனே அங்குச் செல்வான்
வையகங்காப்பான்செய்கை வழக்கன்றேஊர்காப்பான்போல்.

(உரை) ஒரு யானை மடுவின்கண் முதலைவாயின் அகப்பட்டு மூலமேயென்று கூப்பிட ஓடிச்சென்று அவ்வியானையினது இடரைக் கெடுத்தது கொண்டே வனத்தில் வரையை எடுத்து ஆனிரையைக் காத்த விஷ்ணு கர்த்தாவாயிட வேண்டுமோ? அவன் கர்த்தா வல்லன், இராஜாவை நோக்கி ஒருவன் முறையோவென்று கூப்பிட்டால், அம்முறை கேட்கச் செல்வோன் இராஜாவோ அன்றே? பிரபஞ்சத்தைப் பரமேசுவரன் ஆக்கினையினுலே இரக்ஷிப்பாஞகிய விஷ்ணு ஓரான்மாவுக் கிடர்வந்தால் அதனைச் சென்ருழிக்கு முறைமை, அரசனதாக்கினையாலே ஊர்காப்போன் ஒருவர்க்குத் தீமைவந்த வழி அதனைச் சென்று தீர்ப்பதுபோலாம். கசு

அன்றியும் ஆனை மாலுக் கடிமையாய் மூல மேயோ
என்றிடு மதனுல் மால்தான் இறைவனென் றியம்ப வேண்டா
உன்றனக் கடிமை யானுர் உன்னையெம் பெருமா னென்ருல்
இன்றுநீ வணங்கு முன்றன் எம்பெரு மானே நீயே. உகூ0

(உரை) அன்றியும் விஷ்ணுவுக்கு யானை அடிமையானபடியாலே தன் கர்த்தாவை மூலமேயென்று கூப்பிட்டதாயின் அது கொண்டு விஷ்ணுவை மூலமாகிய கர்த்தாவென்று சொல்லவேண்டா.

உன்னடியான் உன்னை எம்பெருமா னென்றழைத்தால் இப்பொழுது நீ வணங்குகிற உன்னுடைய புருஷோத்தமனுவையோ நீ அன்றோ? ஆதலால் யாவர்க்கு மூலமென்பது பரமேசுவரனே யாம். உ௦

ஞாலம்உண் டவனுல் உண்டார் நல்லமு தமரா் என்றாய்
வேலைநஞ் செழமா லாதி விண்ணவர் வெந்து சென்ற
காலமின் றெமக்குக் காவாய் கடவுளே யென்ன நாதன்
ஆலமுண் டிலனேல் தேவர் அமுதமுண் டிடுவ தெங்கே. உசுக

(உரை) பூமியை விழுங்கிய சாமர்த்தியத்தை யுடையவனுலே தேவர்கள் நல்ல அமுதத்தைப் புசித்தார்களென்றாய்; சமுத்திர மர்த்தநத்திலே விஷம் பிறக்க, விஷ்ணு முதலாகிய தேவர்களெல்லாம் உஷ்ணம்பொறுக்கமாட்டாமல் ஓடிவந்து "அகால மரணம் எங்களுக்கு இன்று சம்பவித்திருக்கிறது; எங்களை இரட்சித்தருள வேண்டுங் கர்த்தாவே" என்ன, பரமேசுவரன் கிருபைபண்ணி அவ்விடத்தை அமுது செய்திலனுயின் விஷ்ணு முதலிய தேவர்களெல்லாம் பிழைத்துப் பின்பு அமுதத்தை யுண்டாக்கி அதனையுண்பது எங்ஙனஞ் சொல்வாய்? உக

அஞ்சியன் றரிதா னோட அசுரனைக் குமர னாலே
துஞ்சுவித் தொருபெண் ணாலே தாரகன் உடல்துணிப்பித்(து)
அஞ்சிடப் புரம்தீ யூட்டிச் சலந்தர னுடல்கீண் டோத
நஞ்சினை யுண்டு மன்றே நாயகன் உலகங் காத்தான். உசுஉ

(உரை) சூரபத்மாவுக்குப் பயப்பட்டு விஷ்ணு திருப்பாற்கடலை நீங்கியோடிப் பரமேசுவரன்பால் முறையிடச் சுப்பிரமணியக்கடவுளை யுண்டாக்கி அக்கடவுளாலே சூரபத்மாவைச் சங்கரிப்பித்தும், தாரகனென்னும் அசுரனுக்கு விஷ்ணுமுதலாகிய தேவர்களெல்லாம் பயப்பட்டுப்போய்ப் பரமேசுவரன்பால் முறையிட, அப்போது காளியென்னுஞ் சத்தியைக்கொண்டு தாரகனுடலைச் சேதிப்பித்தும், திரிபுரத்தசுரர்க்குப் பயப்பட்டு விஷ்ணு முதலாகிய தேவர்களெல்லாரும் பரமேசுவரன்பால் முறையிடத் திரிபுரத்தைச் சுட்டும், சலந்தரனென்னும் அசுரன் விஷ்ணுவைத் திருப்பாற்கடலிற் பள்ளிகொள்ளவொட்டாமல் ஓட்டித் திரிய, விஷ்ணு சலந்தரனுக்குப் பயப்பட்டுப்போய்ப் பரமேசுவரன்பால் முறையிடச் சக்கரத்தாலே சலந்திரன் உடலைப்

பிளக்கும், சமுத்திர மர்த்தநத்திலே பிறந்தவிடம் பதினாலுலகத்தையுஞ்சுட, அந்த விடத்தை அமுதுசெய்தும் அன்றோ பரமேசுவரன் பிரபஞ்சத்தை இரக்ஷித்தான். உஉ

பார்த்தனார் இரதமேறிப் படைதனைப் பார்த்துச் சார்
பைக், கூர்த்தஅம் பாலே எய்து கொன்றர சாளே னென்
னத், தேர்த்தனி லிருந்து மாயை செய்துமால் கொல்லச்
செப்பும், வார்த்தைநூ லாக்கிக் கொண்டாய் புரங்கொல் நூல்
மதித்தி டாயே. உகூரு

**(உரை)** அருச்சுனன் யுத்தஞ் செய்வதாகத் தேரிலேறி நின்று, சத்துருக்களைப் பார்த்துச் சத்துருக்களாகத் தோன்றினாரெல்லாம் என்னுடைய மித்துருக்களாக இருத்தலால் இவர்களைக் கூரிய அம்பாலே கொன்று இராச்சியஞ் செய்வதில்லையென்று சொல்ல, அவனுக்குத் தேர்ப்பாகனாகிய கிருஷ்ணன் அவன் மனந்தேறிடக் கொல்வது காரணமாகச் சர்வமும்நாமே கொல்லுவோம் நீ யன்றென்று மயங்கச் சொன்ன சொல்லையே நூலாக்கிக்கொண்டாயாயின், திரிபுரத்துள்ளார் சிவலிங்கத்தைக் கைவிடும்பொருட்டு, விஷ்ணு புத்த முனியாக இருந்து தெய்வமொன்றில்லையென்று மயக்குவித்துச் சிவலிங்கத்தைக் கைவிடுவித்த நூலையும் நீ நூலாகக் கொள்வாயாக. உங

மாயைதான் உயிர்க ளாகா துயிர்கள்தாம் மாயை யாகா
மாயவன் இவைதா னாகான் இவைதானு மாய னாகா
ஏயுமாம் அநாதி யாக இறைபசு பாச மென்றே
தூயவன் கலப்பி னாலே எல்லாமாய்த் தோன்று வன்காண்.

**(உரை)** மாயையானது ஜடமாகையால் ஆன்மாக்களாகாது. ஆன்மாக்கள் இச்சா ஞானக் கிரியைகளை யுடையனவாகையால் ஜடமாகிய மாயையாகா. புருடோத்தமன் ஞானசொரூபி என்று நீ கூறுகையால், ஜடமாகிய மாயையும் சுத்தா சுத்தமாகிய ஆன்மாவுமாகி நில்லான், மாயையும் ஆன்மாவுங் கூடிப் புருடோத்தமனாகமாட்டா. மாயையாகிய பாசமும் ஆன்மாவாகிய பசுவும் இவையிற்றை நடத்துவானாகிய பதியும் அநாதியிலே பொருந்தினவாகையால், நின்மலனாகிய கர்த்தா சம்பூரணனாகையாலே சர்வமுந் தானாகித் தோன்றுவனல்லது ஜடமும் ஆன்மாவுமாய்ப் பிரிந்துநில்லான்.

சித்து அசித்தாகாது; அசித்துச் சித்தாகாது; சித்திற் சேஷ்டித்தனே கர்த்தா, மாயவன் ஆன்மவர்க்கமெனக. உச

பாசத்தைப் பசுக்கள் விட்டுப் பதியினை அடைய முத்தி
ஆசற்ற ஆகமங்கள் அறைந்திட அறிவின் றிங்கே
மாசற்ற மால்மா சாகி மாயையு முறுவ னென்னில்
கூசிப்பின் கொள்ளார் நல்லோர் உனக்காமிக் குழப்பு நூலே.

(உரை) பாசமாகிய அஞ்ஞானத்தைப் பசுக்களாகிய ஆன்மாக்கள் கைவிட்டுப் பதியாகிய கர்த்தாவைக் கூடுதலே முத்தியென்று குற்றமில்லாத ஆகமங்கள் சொல்லா நிற்ப, இங்கே மாலாகிய புருஷோத்தமன் அஞ்ஞானமுமாய் அஞ்ஞானத்தோடு கூடிய ஆன்மாவுமாய் நிற்பனென்று நீ அறிவின்றியே சொல்லின், இப்படி வேதாகமங்களுக்கு விருத்தமான மயக்கநூல் உனக்கேயாம். உயர்ந்தோர் இதனை நூலென்றுசொல்ல நாணிப் பின்பு அதன் அர்த்தமுங் கொள்ளார். உரு

பிரமம்நா னென்ற போது பிரமனோ டரியுங் கூடிப்
பரமனார் இகலி டாமே பார்த்திடர் பண்ணி நின்ற
உரமனார் அழலு ருபம் தன்னையு முணர மாட்டான்
கரமனுள் திகிரி ஏற்றான் கடவுளென் றறைவ தென்னே.

(உரை) ஒருகாலத்துப் பிரமாவும் விஷ்ணுவுங் கூடித் தங்களில் மாறுபட்டுச் சிருஷ்டிக்கையாலே நானே கர்த்தாவென்றும், இரக்ஷிக்கையாலே நானே கர்த்தாவென்றுஞ் சொல்லிய காலத்து, அப்பிரம விஷ்ணுக்கள் தம்மில் மாறுபடாமல் இவர்கள் அகந்தையைக் கெடுப்பான் பரமேசுவரன் திருவுளம்பற்றி, உங்களில் நம்முடைய அடிமுடியறிந்தவன் கர்த்தாவென்றருளி ஒரு தழற்பிழம்பாய் நிற்கப் பிரமா திருமுடியைக் கண்டு வருவேனென்று அன்னமாகப் பறந்து தேடியும் விஷ்ணு ஸ்ரீபாதங் காண்பேனென்று பன்றியாய்ப் பாதாளத்தைக் கீண்டுங் காணமல் இருவருக்கும் வியாகுலத்தை யுண்டாக்கி நின்ற உரத்தையுடைய பரமேசுவரனது திருவுரு இன்னபடியென்றும் விஷ்ணுவும் அறியமாட்டானானன்; சக்கரத்தைக் கையிலே ஆட்சி நிலைபெற ஏந்தின விஷ்ணுவைக் கர்த்தாவென்று சொல்லுவது என்னையோ? உசு

தேரரி இறையன் றென்றே சிவமுனி ததீசி யோடே
போர்புரிந் திகல மாலைப் புக்கவன் பிடித்த டித்து
மார்பினி லுதைத்து மாறன் சக்கரம் வயிற்றில் வைத்திட்(டு)
ஏர்மலி படைப டைத்திட் டரிபட வெறிந்தா னன்றே. உகஎ

**உரை :**—புருஷோத்தமன் சைவமுனிவராகிய ததீசியாரோடு யுத்தஞ்செய்து மாறுபட அப்புருஷோத்தமனை, ததீசிமகாமுனிவர் உள்ளே புகுந்து பிடித்துப் பிரகரித்து மார்பிலேயுதைத்துச் சக்கரத்தைப்பறித்து முறித்து அப்புருஷோத்தமன் வயிற்றிலேவைத்து, அழகுபொருந்தினதோ ராயுதத்தைத் தாமே தருப்பையால் உண்டாக்கிப் புருஷோத்தமன் மயங்கிவிழ எறிந்தார். ஆதலால் புருஷோத்தமன் கர்த்தா அல்லன் என்று தெளிவாய். உஎ

சூலிகாண் இறைமால் அல்லன் சூலியைத் தொழுந் துர்வாசன்
மாலினுர் மார்மி திப்பத் திருமறு மார்ப னுகி
நூலினுர் மார்பன் நோன்றாள் பட்டிடஞ் சுத்தமென்று
பாலினுர் கடலான் ஆங்கே பரிவொடும் திருவை வைத்தான்.

**(உரை)** சூலபாணியே கர்த்தா விஷ்ணு அல்லன், சூலபாணியை வழிபாடு செய்யுந் துருவாசமகாமுனிவர் விஷ்ணுவைக் கோபித்து மார்பிலே மிதிப்ப அத்துர்வாசமகாமுனிவர் பாதம் பட்ட தழும்பு கொண்டே திருமறுமார்பனென்று பெயரையுடையனுகித் திருப்பாற் கடலிலே பள்ளிகொள்ளுமவன் பிரமரிஷியின் பாதம்பட்டவிடம் சுத்த மென்று பிரியத்துடன் இலக்குமியை அந்த மார்பிலே வைத்தானுகையால், புருஷோத்தமன் மலசம்பந்தியென் றறிவாயாக. உஅ

தவகுண னுய்மால் சென்று தீவியைச் சக்க ரத்தால்
அவகுணஞ் செய்தன் றேடப் பிருகுவந் தவனைப் பார்த்துச்
சிவனல தறியே னுகில் இதுசெய்தோன் செறிகப் பத்துப்
பவமென மொழிய மாலும் பயப்பட்டுப் பதறி வீழ்ந்தான்.

**(உரை)** சிவபத்தரான பிருகுமகாரிஷியினுடைய பத்தினி தீவியைப் புருஷோத்தமன் விரும்பிப் புணரும்படி இருடியில்லாத சமயத்திலே செல்ல, அத்தீவி உடன்படாதபடியால் அவளுடம்பிலே சக்கரங்கொண்டு துர்க்குறிகளையிட்டுப் போக, பிருகுமகாரிஷி அவ

னுடம்பைக் கண்டு "யான் சிவனல்லது வேறொரு கடவுளில்லை யென்னுஞ் சிவபத்தன் மெய்யேயாகில் இது செய்தவன் பத்துப்பிறப்புப் பிறக்கக்கடவன்" என்று சபிக்கப் புருஷோத்தமனும் பயப்பட்டுத் துக்கித்து வீழ்ந்தான். உக

பயப்பட்டுப் பரனை நோக்கித் தவம்பண்ணப் பரனும்தோன்றி
நயத்தஞ்ச லென்று வேண்டிற் றென்னென நார ணன்தான்
பெயர்த்தருள் பிருகு சாப மெனஅன்பன் பிருகு வென்ன
உயக்கொள்நீ பவந்தோ றென்ன ஓமென்றான் உலக நாதன்.

**(உரை)** அந்தப் பிருகுமுனிவர் சாபத்தினாலே பயப்பட்டுப் பரமேசுவரனை நோக்கித் தவசுபண்ணப் பரமேசுவரனும் அநுக்கிரகித்துப் "பயப்படாதே உனக்கு வேண்டியது எது" என்று கேட்ப, புருஷோத்தமன் பிருகுமுனிவர் சாபத்தைத் தீர்த்தருள வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்யப் பரமேசுவரனும் பிருகுமுனி நம்முடைய பத்தனென்றருள, ஆனால் அவன் சாபத்தாலே யெடுக்கும் பிறப்புத்தோறும் என்னை இரக்ஷித்தருள வேண்டுமென்ன, ஜகன்னாதனாகிய பரமேசுவரனும் அப்படியே இரக்ஷிக்கிறோ மென்றான். ௩௦

இப்படிப் பிருகு சாபத் தீரைந்து பிறப்பின் வீழ்ந்து
மெய்ப்படு துயர முற்று வருபவன் விமலன் அல்லன்
எப்படி யானுஞ் சொன்னேன் இறைஅரி அல்ல னென்றே
மைப்படி கண்டன் அண்டன் மலரடி வணங்கி டாயே. ௩௧

**(உரை)** இந்த முறைமையிலே பிருகுமுனிவர் சாபத்தாலே ஒன்பது பிறப்புப் பிறந்து சரீரவருத்தமுற்று மேலுங் குதிரையாகப் பிறந்தும் ஜநநமரணப்படுபவன் மலரகிதனான கர்த்தாவல்லன். வேதாகம சாத்திரங்களானுஞ் சொன்னேன் மோக்ஷகர்த்தா விஷ்ணு அல்லனென்றே. இனி மோக்ஷகர்த்தா யாவனென்ன விரும்புதியாயின்,நீலகண்டனாகிய மேலானவனே கர்த்தா. அவனது தாமரைமலர்போன்ற சீர்பாதத்தைச் சரியை கிரியா யோக ஞானத்தாலே வணங்கி நினது பவத்தை நீக்கிக்கொள்வாயாக. ௩௧

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

## சிவஞான சித்தியார் சுபக்க உரையாசிரியர் சிவஞான சுவாமிகள் செய்தருளிய

# குரு வணக்கம்

**ப**ண்ணிசைவெம் பரிதிமதி திலதயிலந்
தீயிரும்பு பாணி யுப்பு
விண்ணநில முடலுயிர்நீர் நிழலுச்சிப்
பளிங்குபகல் விளக்குப் பானீர்
கண்ணிரவி யுணர்வொளிபோற் பிரிவரிய
அத்துவிதக் கலவி காட்டித்
தண்ணளிவைத் தெனையாண்ட துறைசைநமச்
சிவாயகுரு சரணம் போற்றி.

---

உ

# சிவஞான சித்தியார் பாடற்றொகை

## பரபக்கம்

முகவுரையிற் றசமெழுமூன் றதன்முப்பா னென்று
மூதுலகன் முப்பானென் றெண்ணைந்தாம் புத்தன்
திகழ்மூவர்க் கோரெட்டா நிகண்டனுக்கெட் டீரேழ்
சீவகனுக் கிரைந்தோ டிருமூன்றும் பாட்டன்
பகர்பதின்மூன் றீரைந்தே பாகரனீ ரிரண்டாம்
பரிணமை நான்கிருநான் கேமாயா வாத
நிகழைம்மூன் றறுமூன்றும் பாற்கரியற் கேழா
நிரீசுரற்குச் சதுராத்திரி யெழுமுப்பா னென்றே.

## சுபக்கம்

ஐந்ததுதி யீரேழு மளவை யாகு
மாதிதனி லெழுபதுபின் றொண்ணூற் றாறு
நந்துசதுட் டயநாற்பா னவமும்பின் னவமு
நனிநான்கு நாற்பதினி லொன்றிழிந்தீ ராறுங்
கந்தன்முக மோராறுங் கரமங்கீ ராறுங்
கருதிடுவெங் கணபதியைங் காமுமிரு பதமுஞ்
சிந்தையிவை மூவொன்ப தொடுமுந் நூறுஞ்
சிவஞான சித்திசுவ பக்கமெனத் தெளியே.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சிவஞானசித்தியார் சுபக்கம் மூலமும் சிவஞான சுவாமிகள் உரையும்

சிவஞானபோத நூற்பொருள் பிற்காலத்தார்க்கு இனிது விளங்குமாறு விரித்தல் யாப்பான் நூல்செய்வான் புகுந்த ஆசிரியர், எடுத்துக்கொண்ட பொருள் இடையூறு தீர்ந்தினிது முடிதற்பொருட்டும், இந்நூல்நின்று நிலவுதற்பொருட்டும், முதற்கட் செய்துகொண்ட கடவுள் வாழ்த்து மாணுக்கர்க்கு அறிவுறுத்தற்பொருட்டுச் செய்யுளாற் றெரிக்கின்றார்.

### விநாயகர் வணக்கம்

ஒருகோட்டன் இருசெவியன் மும்மதத்தன்
நால்வாய்ஐங் கரத்தன் ஆறு
தருகோட்டம் பிறைஇதழித் தாழ்சடையான்
தருமொருவா ரணத்தின் தாள்கள்
உருகோட்டன் பொடும்வணங்கி ஓவாதே
இரவுபகல் உணர்வோர் சிந்தைத்
திருகோட்டும் அயன்திருமால் செல்வமுமொன்
றோவென்னச் செய்யும் தேவே. க

**(உரை)** கங்கையும் பிறையுங் கொன்றையுமணிந்த சடையானளித்தருளிய ஒரு கோடு முதலியவற்றை யுடையவனுகிய வாரண முகத்தானுடைய திருவடிகள், பேரன்பானிடையறாது தம்மை வழிபட்டுத் தியானிப்போ ரறிவின்கண்ணதாகிய மலக்கோணைத் துாக்கும்; அதுவேயுமன்றி அயனரி முதலியோர் வாழ்வு மொருபொருளன்றென வெறுப்பச் சிவமாந்தன்மைப் பெருவாழ்வையுந் தரும்.

சிந்தைத்திருகோட்டித் தெய்வத்தன்மை செய்யவல்ல தாள்களுக்கு, இடையூற்றையோட்டி இந்நூன் முடிவுபெறச் செய்தல்

# பயனியல்—பத்தாஞ் சூத்திரம்

இங்ஙனம் வேண்டுஞ் செய்திமுறைமைகள் மூன்று சூத்திரத்தால் வகுத்தோதிய ஆசிரியர், நிறுத்தமுறையானே அச்சாதனத்தாற் பெறப்படும் பெத்தநீக்கமும் முத்திப்பேறுமாகிய பயனியல்பு மூன்று சூத்திரத்தாற் கூறுவான் தொடங்கினர். அவ்விருவகைப் பயனுள் அப்பெத்தநீக்கமாமாறு கூறுதற்கெழுந்தது பத்தாஞ் சூத்திரம்.

இவனுலகில் இதமகிதம் செய்த வெல்லாம்
இதமகிதம் இவனுக்குச் செய்தார்பால் இசையும்
அவனிவனாய் நின்றமுறை ஏக னாகி
அரன்பணியின் நின்றிடவும் அகலுங் குற்றம்
சிவனும்இவன் செய்தியெலாம் என்செய்தி யென்றும்
செய்ததெனக் கிவனுக்குச் செய்த தென்றும்
பவமகல உடனாகி நின்றுகொள்வன் பரிவாற்
பாதகத்தைச் செய்திடினும் பணியாக்கி விடுமே. கூ௲

**(உரை)** பதிஞானத்தால் அங்ஙனங் காணப்பட்ட இறைவன் பெத்தநிலையிலுடனாய் நிற்பினும் வேறு காணப்படுமாறின்றி ஆன்மாவேயாய் ஒற்றுமைப்பட்டு ஆன்மாவின் வழிநின்ற முறைமைபோல, ஈண்டான்மா அம்முதல்வனோடுடனாய் நின்றறியினுந் தானெனவேறு காணப்படாதவாறு அவனோடொற்றுமைப்பட்டு அவ்விறைபணியின் வழுவாது நிற்கப்பெறின், அங்ஙனம் ஏகனாகிநிற்றலான், யானெனதென்னுஞ் செருக்கறுதலின் அவ்விறைவனும் இவன் செய்யும் இதமகிதங்களெல்லாம் யான் செய்யும் இதமகிதங்களென உடனாய்நின்று ஏன்றுகொள்வன். அரன்பணியின் நிற்றலான், இந்திரியங்களின் வசமாய் நிற்கும் பரதந்திரியமொழிதலின், அவ்விறைவனும் இவனுக்கின்பத்துன்ப நுகர்ச்சியாமாறு பிறர் செய்யும் இதமகிதங்களெல்லாம் எனக்கு நுகர்ச்சியாமாறு செய்தனவேயாமென உடனாய் நின்று ஏன்றுகொள்வன். இவ்விருதிறத்தானும் முறையே, இவன் செய்யும்இதமகிதங்கள் இவனுக்குப் பணியாய் முடியும். இவனுக்கு இதமகிதஞ் செய்தார்மாட்டு அவ்வித

மகிதங்கள் அவ்வளவினன்றி மிகுதிப்படுதற்கு முறையே துணைக் காரணமாயியையும். இங்ஙனம் ஆர்ச்சிப்பும் நுகர்ச்சியும் இவனைப் பந்தியாதொழியவே, எனைச் சஞ்சிதவினையும் மாயையும் ஆணவமு மாகிய குற்றங்கள் மூன்றும் இவனைப் பந்திக்கமாட்டாவாய் விண்டொழியும்.

நின்றிட என்பதனை ஈரிடத்துங் கூட்டி சிரனிறையாக வைத்து, என்றென்னும் எச்சங்களைக் கொள்வனெனன்பதனோடுந் தனித்தனி கூட்டி, இவனுலகிலென்னும் முதலடியைப் பாதகத்தைச் செய்திடினும் பணியாக்கிவிடுமே என்றதன் பின்னாக வைத்துரைத்துக்கொள்க. நின்றிடவுமென்றவும்மை சிறப்பு. பாதகத்தைச் செய்திடினுமென்ற உம்மையாற் புண்ணியத்தைச் செய்திடிற் பணியாக்கிவிடுதல் கூற வேண்டாவாயிற்று. அவை மிகுதிப்படுதற்குத் துணைக்காரண மாயியையுமென்பது ஆற்றலாற்பெற்றாம். அது அவர்தாஞ் செய்வினை தன்னால் நலமுடனே பிறர்செய்வினையூட்டி யொழிப்பானெனமுன் வருகின்றவாற்றான் அறிக. அச்செய்யுளின் கருத்தும் உணராது இவன்செய்த இதமகிதங்களே இவன்மாட்டுச் செய்தார்க்கியையு மென்றுரைப்பின், இவன்மாட்டுச் செய்தவவருடைய இதமகிதங்கள் வேறென்னாய் முடியுமெனக் கடாயினார்க்கு விடையின்மையும், நியதி தப்புதலும், சிவஞானச் செயலுடையோர் கையிற்றானந் திலமளவே செய்திடினுமத்தானமே நிலமலைபோற்றிகழுமென்றாற்போல்வன வற்றோடு முரணுதலுமாகிய குற்றங்களுளவாமாறுணர்க. உலகத்தார் பார்வைக்கு இவன் செய்தனவாகவும் அச்செயல் இதமகிதமாகவுந் தோன்றப்படுவனமாத்திரையேயன்றிப் பிறிதில்லையென்பார், உலகிலென்றார். அவனென்பதும் இவனென்பதும் மகாவாக்கிய வழக்கு. இவ்வாறன்றி, நின்றிடவென்னும் எச்சத்தை அகலுமென்பதனோடு முடிய வைத்துரைப்பார்க்கு, எனையன தம்முளவாய் நின்று ஒரு பொருண்மேல் வருவனவல்லவாய் முடிதலின், முதல் நூலோ டொத்து ஒரு பொருணுதலிய சூத்திரமாதற்கேலாமை யறிக. இச் செய்யுளிற் கூறப்படும் முக்கூற்றுள், ஒருவாற்றான் ஈண்டு வலியுறுக் கப்படும் இறுதிக்கூறு பதினொராஞ் சூத்திரத்தில் இயைபுபற்றி எடுத் துக்கொண்டு தடைவிடைகளாற் சாதிக்க நின்றமையின், முன்னே இரு கூறுமே வேறெடுத்துக்கொண்டோதப்படுவனவெனக் கொள்க.

யான்செய்தேன் பிறர்செய்தார் என்னதியான் என்னும்
இக்கோணை ஞானஎரி யால்வெதுப்பி நிமிர்த்துத்
தான்செவ்வே நின்றிடஅத் தத்துவன்தான் நேரே
தனையளித்து முன்நிற்கும் வினையொளித்திட் டோடும்
நான்செய்தேன் எனுமவர்க்குத் தானங்கின்றி
நண்ணுவிக்கும் போகத்தைப் பண்ணுவிக்குங் கன்மம்
ஊன்செய்யா ஞானந்தான் உதிப்பினல்லால்
ஒருவருக்கும் யானெனதிங் கொழியா தன்றே. ௩0௫

(உரை) யானெனதென்னுஞ் செருக்கற்றாலன்றி, இறைவனுடனாய் நின்று கோடலும் அதுபற்றி வினை நுகர்ச்சியும் ஆர்ச்சிப்பும் இவனுக்கில்லாதாதலும் அதுபற்றிக் குற்றமகலுதலுமாகிய இவை முறையே நிகழ்தல் செல்லாமையால், அச்செருக்கறுதியைப் பயப்பதூஉம் அவனிவனாய் நின்றமுறை ஏகனாகி நிற்கும் ஞானமொன்றேயன்றிப் பிறிதின்மையின், அச்செருக்கறுதியின்பொருட்டு அவ்வாறு நிற்கும் ஞானம் ஒருதலையான் வேண்டற்பாற்று.

வலியுறுத்தற்பொருட்டு உடம்பாட்டுமுகத்தானும் எதிர்மறைமுகத்தானுங் கூறினார். உருவகஞ் செய்ததும் அதனையின்றி அமையாமை விளக்குதற்பொருட்டு. ஞானமென்றது ஈண்டேற்புழிக்கோடலால் ஏகனாகி நிற்கு ஞானத்தின் மேற்றாயிற்று. இதனானே, மேலைச் சூத்திரத்தோதியவாறு ஞாதிருவு ஞானமு ஞேயமுமாக நின்று காணுங் காட்சியே அமையும், அதன்மேலும் ஏகனாகிநிற்றல் எற்றுக்கென்பாரை நோக்கி, அவ்வாறு நின்றாலன்றி யானெனதென்னுஞ் செருக்கறுதல் முதலியனமுறையே நிகழ்ந்து முத்தியைத் தலைக்கூடுதல் செல்லாதென முதற்கூறு வலியுறுத்தப்பட்டது. உ

இந்திரிய மெனைப்பற்றி நின்றேஎன் வசத்தின்
இசையாதே தன்வசத்தே எனையீர்ப்ப திவற்றைத்
தந்தவன்ற னுணைவழி நின்றிடலால் என்றும்
தானறிந்திட் டிவற்றினொடுந் தனையுடையான் தாள்கள்
வந்தணைசெய் திவற்றின்வலி அருளினால் வாட்டி
வாட்டமின்றி இருந்திடவும் வருஞ்செயல்க ளுண்டேல்
முந்தனுடைச் செயலென்று முடித்தொழுக வினைகள்
மூளாஅங் காளாகி மீளா னன்றே. ௩0௬

**(உரை)** உலகத்துப் பாடிகாவலராயினோர் பிழைசெய்துள்ளாரைத் தம்முளடக்கித் தாமீர்த்தவாறெல்லாம் பாதந்திரமாய்க் கிடப்பச் செய்வது தம்மை அவ்வாறு செய்விக்கும் அரசனதாணைவழி நிற்கும் அவ்வாற்றல் கொண்டதன்றிப் பிறிதின்மையின், அதனையறிந்து அப் பாடிகாவலர்க்குந் தமக்கும் இறைவனாகிய அவ்வரசனைத் தலைக்கூடப் பெற்று அவன் கருத்தின்வழி யொழுகவல்லராயவழி, அவர் அப்பார தந்திரநீங்கி அரசனருளாற் பாடிகாவலரையுந் தம்மாணைவழி நிற்பித் துக்கொள்ளவல்ல சுதந்திரராவர். அதுபோல, வினைசெய்தமைபற்றி இந்திரியங்களென்னைத் தம்முளடக்கி ஈர்த்தவழியெல்லாம் பாதந்தி ரப்பட்டுக் கிடப்பச் செய்வதும் அவற்றை அவ்வாறு செய்விக்கும் முதல்வனதாணைவழி அவைநிற்றலான், அவ்வாற்றல் கொண்டன் றிப் பிறிதில்லையென் றிவ்வாறுணர்ந்து அவ்விந்திரியங்களையுந் தன்னையுமுடையனாகிய அம்முதல்வன் தாள்களைத் தலைக்கூடப் பெற்று அவன் பணியினின்றொழுக ஒருவன் பெறுமாயின், அவன் அம்முதல்வன் திருவருளால் அவ்விந்திரியங்களைத் தன்னாணைவழி நிற்பித்துக்கொள்ளவல்ல சுதந்திரனாவன். அவ்வாறு முதல்வன் வழியினுறைத்து நிற்புழியும் பயிற்சிபற்றி ஒரோவழி அவ்விந்திரியங் களின் குறும்பு நிகழுமாயின், இந்திரியங்களுக்கும் எனக்கும் ஒரு சுதந்திரமின்மையின் அதுவும் முதல்வன் செயலேயென்று வரை செய்து பணியின் வழுவாதொழுகவே, அது வாயிலாகப் புகுந்து கூடித் துடக்கவல்ல வினைகள் அங்ஙனமாகமாட்டாவாய் மடங்கி யொழியுமாகலான், அவ்வாறடிமைத் திறத்தின் நின்றோன் மறித்துப் பொறிகளின் வழிப்பட்டுப் பாதந்திரனாவானல்லன்.

குறிப்புருவகம். ஏகனாகி நிற்றலேயமையும். அதன்மேலும் அரன் பணியினிற்றல் எற்றுக்கென்பாரை நோக்கி, ஏகனாகி நிற்பினுந் தன் பணி மடங்கினாலன்றி வினைத்துடக்குறுதற்கேதுவாய் இந்திரியங் களின் வழிப்பட்டுச் செல்லும் பாதந்திர நீங்காமையின், அது நீங்கு மாறு தான் பணியை நீத்தற்பொருட்டு அரன் பணியினிற்றலும் ஒரு தலையான் வேண்டப்படுமென் றுணர்த்தியவாறு. நின்றிடலால் ஈர்ப்ப தென்றறிந்திட்டென இயையும். தான் அசை. ஈர்ப்பதென்பது அத்தொழின்மேல் நின்றது. என்றுமென்னுமும்மை, அவ்வீர்த்தலை மாற்றுதற்கு உபாயமாவது யாமும் அவ்வாணைவழி நிற்றலென்றும்

அறிந்தென எதிரது தழீஇயிற்று. இவற்றினுடுந்தனையுடையா னென்றது குறிப்பேதுவாய் நின்றபெயர். வந்தனை செய்தல் ஈண்டு அரன்பணியினிற்றன் மேற்று- வருஞ் செயல்களுண்டேல் என்பது ஒருமைப் பன்மை மயக்கம். வாட்டமின்றி யிருந்திடவும் வருஞ் செயல்களுண்டேல் முந்தனுடைச் செயலெனை முடித்தொழுகுதல், *"யானுமதுவே வேண்டினல்லால் வேண்டும் பரிசொன் றுண் டென்னில் அதுவும் உன்தன் விருப்பன்றே" என்ற திருவாக்கினு மறிக. அவ்வாறு முடித்தொழுகவும் வருஞ் செயல்களுளவாம்போலு மென்பாரை நோக்கி அங்ஙனம் வரம்பின்றி அநவத்தை யாதலில்லை யென்பார், ஆளாகி மீளாமென்றுங் கூறினர். ௩

சலமிலனுய் ஞானத்தால் தனையடைந்தார் தம்மைத்
  தானுக்கித் தலைவன்அவர் தாஞ்செய்வினை தன்னுல்
நலமுடனே பிறர்செய்வினை யூட்டியொழிப் பானுய்
  நணுகாமல் வினையவரை நாடிக் காப்பன்
உலகினில்என் செயலெல்லாம் உன்விதியே நீயே
  உள்நின்றுஞ் செய்வித்துஞ் செய்கின்று யென்றும்
நிலவுவதோர் செயலெனக்கின் றுன்செயலே யென்றும்
  நினைவார்க்கு வினைகளெல்லாம் நீங்குந் தானே. ௩0எ

(உரை) நீயே எனக்குள் நின்று செய்கின்றுயாகலின் என்னுற் செய்யப்படும் இதமகிதமெல்லாம் நீசெய்யுஞ்செயலேயென்றும், நீயே பிறரைக் கொண்டு செய்வித்துஞ் செய்கின்றுயாகலிற் பிறரால் எனக்கு வரும் இதமகிதங்களும் நீ செய்யுஞ் செயலே பிறிதில்லை யென்றும், இங்ஙனம் அவனருளையல்லது ஒன்றனையுங் கருதாராய்த் தம்மை இழந்து நிற்கப்பெறுவார் மாட்டு, அஞ்ஞானகன்மம் பிரவேசிக்கமாட்டாதாய் ஒழிந்துவிடுமாகலான், அப்பெற்றித்தாகிய மெய்யுணர்வான் அடைக்கலம்புக்காரைத் தன்னைப்போலச் சுத்தராகச் செய்து பாதுகாத்தலும், மந்திரவலியானடங்கி இரை நுகரப் பெருது கிடக்கும் பாந்தள் யாதானுமோர் இலக்கு வந்து வாய்த்துழி வறிது கிடவாதவாறுபோல, அவர்மாட் டெழுந்தும் அவரைச் சாரமாட்டாதொழிந்து கிடந்த அவ்வாகாமிய வினை, அவர்க்கு இதமகிதங்களைச் செய்வார் பிறருளராயவழி அவ்வியையபுபற்றி ஆண்டவ்

*திருவாசகம் - குழைத்தபத்து - எ.

இதமகிதங்களுக்குத் துணையாய்த் தலைக்கூடற்பாலதாகலின், அதனை அவ்வாறு செலுத்திப் பிறர் செய்யும் அவ்விதமகிதங்களை மிகுவித்து நுகர்வித்தொழித்தலுஞ் செய்வனாகலான், அதுபற்றி இறைவன் சலமுடையனுவானல்லன்.

ஆக்கிக்காப்பனென இயையும். பிறரை யூட்டி யொழித்தலே அவரை வினை நணுகாமற் காப்பதெனக் கொள்க. பிறரை யங்ஙனம் ஊட்டுதலும் கருணையே யாமென்பார், ஊட்டியென்ருழியாது ஒழிப்பானு மென்றும் நலமுடனே என்றுங் கூறினர். உலகினில் என்செயல் எல்லாம் உன்விதியே நீயே உள்நின்றுஞ் செய்வித்துஞ் செய்கின்ருயென்று நிலவுவதோர் செயலெனக்கின் றுன் செயலேயென்று நினைவார்க்கென்றதனல், அரன்பணியினின்றிடலாவது இதுவெனத் தெரித்துக் கூறியதூஉமாயிற்று. இறைபணியில் நிற்கும் இவன் பாதகத்தைச் செய்திடினும் பணியாக்கிவிட்டு இவனுலகில்இதமகிதஞ் செய்தவெல்லாம் இதமகிதமிவனுக்குச் செய்தார் பாலிசையச் செய்தல் இறைவனுக்குச் சலமாய் முடியும்போலுமென் பாரை நோக்கி, அதனைத் தெரித்துணர்த்திச் சலமின்மை காட்டியவாறு. ச

நாடுகளிற் புக்குழன்றும் காடுகளிற் சரித்தும்
நாகமுழை புக்கிருந்தும் தாகமுதல் தவிர்ந்தும்
நீடுபல காலங்கள் நித்தரா யிருந்தும்
நின்மலஞா னத்தையில்லார் நிகழ்ந்திடுவர் பிறப்பின்
ஏடுதரு மலர்க்குழலார் முலைத்தலைக்கே இடைக்கே
எறிவிழியின் படுகடைக்கே கிடந்தும்இறை ஞானங்
கூடுமவர் கூடரிய வீடுங் கூடிக்
குஞ்சித்த சேவடியும் கும்பிட்டே இருப்பர். கூ0அ

(உரை) ஏனைப்பெரும் பேறெல்லாங் கொடுக்க வல்லனவாய எத்துணை நன்மைகளும், இங்ஙனம் அரன்பணியினிற்றலாகிய மெய்த்தொண்டுசெய்யும் ஞானத்தாற் றரப்படும் பேற்றைக் கொடுக்கவல்லுவனவல்ல; எல்லாப்பெரும்பேற்றையுங் கெடுக்கவல்லனவாய எத்துணைத் தீமைகளும், இதனுற்றரப்படும் பெரும்பேற்றைக் கெடுக்க வல்லனவுமல்ல; அத்துணைப்பெரியதோர் சிறப்பிற்று இவ்விறைபணிநிற்கு ஞானம்.

அரன்பணிநிற்றலது ஆற்றல்கூறியவாறு. சாக்கிரத்தேயதீதத்தை என்னுஞ் செய்யுளில், சாக்கிரத்தேயதீதத்தைப் புரிந்தவர்கள் சாக்கிரத்தின் நிற்றலொப்புமை மாத்திரையேபற்றி அவரை யெல்லாரோடும் ஒப்பவைத்திகழற்கவென அவரது பெருமையுணர்த்துவார், ஆக்குமுடிகவித்தரசாண்டு நுங்கிடாவேயென ஆண்டுக் கூறினர்; அதனையே அரன்பணியினிற்றலா னுகற்பாலதன்கண் மற்றொன்றுற் செய்யக்கடவதொன்றில்லையென அத்தொண்டின் பெருமையுணர்த்துவார், ஈண்டுமெடுத்தோதினர். இங்ஙனங் கருத்துவகையாற் பொருள்வேறுபாடுண்மையிற் கூறியது கூறலாகாமை கண்டுகொள்க.

*அங்கித்தம் பனைவல்லார்க் கனல்சுடா தாகும்*
*ஔடதமந் திரமுடையார்க் கருவிடங்க ளேறு*
*எங்கித்தைக் கன்மமெலாஞ் செய்தாலும் ஞானிக்(கு)*
*இருவினைகள் சென்றணையா முற்செய்வினை இங்குத்*
*தங்கிப்போம் பாத்திரமும் குலாலன்வினை தவிர்ந்த*
*சக்கரமும் கந்தித்துச் சுழலு மாபோல்*
*மங்கிப்போய் வாதனையால் உழல்விக்கும் எல்லா*
*மலங்களும்பின் காயமொடு மாயு மன்றே.* ௩௦௧

(உரை) சுடுதற்கேதுவாகிய அங்கியைத் தம்பனஞ்செய்யவல்லார் அவ்வங்கியுள் முழுகிக்கிடப்பினும் அதுபற்றி அவர்மாட்டுச் சூடு நிகழாதவாறும், கொலைத்தொழிற்கேதுவாகிய விடங்களைத் தடுக்க வல்ல மந்திரமருந்துகளைப் பெற்றுடையார் அவ்விடங்களையெல்லாம் நிறையப்பருகினும் அதுபற்றியவர்மாட்டுக் கொலைத்தொழில் நிகழாதவாறும்போல், விருப்புவெறுப்புக்கள் நிகழ்தற்கேதுவாகிய இந்திரியங்களை மேற்கூறிய முறையினின்று தம்வழிப்படுத்த வல்ல ஞானிகள் எவ்விந்திரியங்களினின்று எத்தொழிலைச் செய்தார்களாயினும் அதுபற்றி அவர்மாட்டு விருப்புவெறுப்பு நிகழ்ந்து மேலைக்கு வித்தாதல் செல்லாமையானும், எனைப் பிராரத்தவினையுந் தற்பணிநீத்தவவர் மாட்டுத் தலைக்கூடமாட்டாது வெந்தபடம்போலச் சத்திகெட்டே போய் வாசனைமாத்திரையாய் நின்று சிறிதே தாக்குமவ்வளவேயன்றி வாதனையாற் செய்யக்கடவது பிறிதில்லையாதல், காயமிருந்தொழிந்த பாத்திரத்தில் அவ்வாதனை கிடந்து கந்தித்தும் ஒருகறிக்குபயோகமாதலின்மையுங் குயவனுவான் குடத்தை வனையுமளவுஞ் சுழற்றி

விட்ட திகிரியில் அவ்வாதனை கிடந்து தன் வேகமுள்ளளவளவும் அதனை மெலிதாகச் சுழல்வித்து மற்றொன்றனை வனைதற்கு உபயோக மாதலின்மையும்போலுமாகலானும், வாதனைமாத்திரைக்குத் துணை யாய்நின்ற ஏனை மலவாதனைகளும் அவ்வுடம்பு மாயுங் காலத்து வேறொருபற்றின்மையான் அதனோடு மாய்ந்தொழியும்.

இங்குத்தங்கிப்போம் பாத்திரம் தீவிரவாதனைக்கும், வினைத விர்ந்த சக்கரம் மந்தவாதனைக்கும் உவமையாயின. எங்கென்பது எங்கித்தையென மரீஇயிற்று. நின்றென்பது சொல்லெச்சம். கந்தித் தென்னும் வினையெச்சம் எச்சப்பொருள்தாராது செவ்வெண்மாத் திரையே குறித்து நின்றது; *"பயந்துகாத் தழிக்குமற்றை மூவர்" என்றாற்போல. மங்கியென்றொழியாது போயென்றார், வலியுறுத்து தற்கு. உவமையெடுத்துக்காட்டியதும் அதனைத் தெளிவித்தற் பொருட்டு. இதனானே மேல் ஒருவாற்றான் வலியுறுத்தப்பட்ட மூன் றாங்கூற்றை வருஞ்சூத்திரத்தின் இயைபுபற்றி எடுத்துக்கொண்டு தடைவிடைகளாற் சாதித்தற்பொருட்டு ஈண்டுத் தோற்றுவாய் செய்துகொள்ளு முகத்தானே, மேலைச்செய்யுளின் எறிவிழியின்படு கடைக்கே கிடந்துங் கும்பிட்டேயிருப்பர் என்றதனை உவமைகளின் வைத்துணர்த்தி இனிதுவிளக்கியவாறு. இவை நான்குசெய்யுளா னும் இரண்டாங்கூற்றின்கட் படுமாறெல்லாம் வகுத்துக் கூறப் பட்டன. சூ

---

## பதினொராஞ் சூத்திரம்

இங்ஙனம் பத்தாஞ்சூத்திரத்தாற் பெத்தத்தினின்று நீங்கப் பெற்றார்க்கு முத்திப்பயன் பெறுமாறு வகுத்துக் கூறுதற்கெழுந்தது பதினொராஞ்சூத்திரம். முத்தியென்றது ஈண்டுத் தலைமைபற்றிச் சிவப்பேற்றின் மேல்நின்றது.

காயமொழிந் தாற்சுத்த னாகிஆன் மாக்
 காட்டக்கண் டிடுந்தன்மை யுடைய கண்ணுக்(கு)
ஏயும்உயிர் காட்டிக்கண் டிடுமா போல
 ஈசனுயிர்க் குக்காட்டிக் கண்டிடுவன் இத்தை

---

* திருவாசகம் - திருச்சதகம் - ௬௦.

ஆயுமறி வுடையனாய் அன்புசெய்ய
அந்நிலைமை இந்நிலையின் அடைந்தமுறை யாலே
மாயமெலாம் நீங்கிஅரன் மலரடிக்கீ ழிருப்பன்
மாறாத சிவானுபவம் மருவிக் கொண்டே. ருசO

(உரை) கண்ணிந்திரியம் ஒருருவத்தைக் காணும்படி உயிரத்துடனாய் நின்று காட்டுதன்மாத்திரையேயன்றி அக்கண்ணொளியோடு கூடச் சென்று அவ்வுருவத்தைக் காணுதலுஞ்செய்து உபகரிக்கும்; அதுபோல, உயிரொரு விடயத்தையறியும்படி முதல்வனுடன்நின்றறிவித்தன் மாத்திரையேயன்றி அவ்வுயிருணர்வோடுகூட அத்துவிதமாய்ச் சென்று அவ்விடயத்தை அறிதலுஞ்செய்துபகரித்துவரும்; ஆகலான், எல்லா மலங்களும் பின்காயமொடு மாயுமென மேலைச் சூத்திரத்திறுதியிற் கூறியவாற்றாற் காயமொழிந்தான் மும்மலங்களும் நீங்கப்பெற்றுச் சுத்தனேயோனாகிய ஆன்மா, முதல்வன் இங்ஙனம் அத்துவிதமாய்நின்று உபகரித்துவரும் உரிமையைக் கடைப்பிடித்தறிந்துகொண்டு நிற்கப்பெறின், அத்தொடர்புபற்றிய அம்முதல்வன் திருவடிகளைத் தலைப்படுதற்கண் இச்சை இடையறாது நிகழும்; அங்ஙனம் அறிவிச்சைகளிரண்டும் பிறிதொன்றிற் சேறலின்றி அவ்வத்துவிதநிலையொன்றேபற்றி முதல்வன் திருவடிக்கண்ணவாய் ஒருங்கு நிகழவே, காயமொழிந்தபின் மலநீங்கிச் சுத்தனாய்நிற்குமுறைமை காயத்தோடு நிற்புழித் தானே கைகூடப்பெறுதலால், ஏனைக்கிரியையுமே எல்லா மலங்களையும் இம்மையே நீத்தொழித்து அவ்வறிவிச்சைகளோடொப்ப ஒருவழிக்கொண்டு அம்முதல்வன் திருவடியைத் தலைக்கூடப்பெற்று, சிவானுபூதியே சுவானுபூதியாகக்கொண்டு வாழ்வன்.

அத்துவிதநிலை விளக்குவதாகிய காணுமுபகாரமாத்திரையே ஈண்டுக் கூறப்புகுந்தார், இனிது விளங்குதற்பொருட்டு ஐந்தாஞ் சூத்திரத்துட் கூறிப்போந்த காட்டுமுபகாரத்தையும் அனுவதித்துடன் கூறினார். ஈண்டுக் காணுமுபகாரமாத்திரையே கூறுதல் கருத்தென்பது முதனூலின் *"உள்ளத்தைக் கண்டுகாட்டல்" என்பதற்கு "அவனுமவற்றதுவிடயத்தையுணருமென்றது" எனக் காணுமுபகாரமாத்திரையே வேறெடுத்துக்கொண் டுரைத்த கண்

* சிவஞானபோதம் - சூத் - கக.

ணழிப்புரையானுமுணர்க. காட்டுமுபகாரமாத்திரையேயன்றி அதன் பின்னாக வுடனின்று காணுமுபகாரமும் வேண்டப்படுமென்பது எவ்விடத்துமென்னுஞ் செய்யுளின் விளங்கக் காட்டுதும்; ஆண்டுக் காண்க. காயமொழிந்தாற் சுத்தனாகியான்மா இத்தையாயுமறிவுடையனாமெனை இயையும். ஆகியென்றது பெயர். அந்நிலையென்பதற்கு வேறுவேறுரைப்பாருமுளர். அகரச்சுட்டு அடுக்கநின்றதனையொழித்து வேறொன்றனைச் சுட்டுதல் செல்லாமையும் பிறவும் அவர் நோக்கிலர். இருவகைப்பயனுமொருங்கே சேரவைத்து விளக்குவாராய், மேலைச்சூத்திரத்து வேறுகூறாக வையாது, ஒருவாறு வலியுறுக்கப்படுமூன்றாங்கூற்றைக் காயமொழிந்தாற் சுத்தனாகியெனவும், அந்நிலைமை இந்நிலையிலடைந்த முறையாலே மாயமெலா நீங்கியெனவும், அதனொழிபாக ஈண்டெடுத்துக்கொண்டாராகலின், அதனோடுளப்பட இச்செய்யுள் முக்கூற்றதாயவாறு கண்டுகொள்க. க

பரஞானத் தாற்பரத்தைத் தரிசித்தோர் பரமே
பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார் பார்க்க
வருஞானம் பலஞானம் அஞ்ஞான விகற்பம்
வாச்சியவா சகஞானம் வைந்தவத்தின் கலக்கம்
தருஞானம் போகஞா திருஞான ஞேயம்
தங்கியஞா னஞ்சங்கற் பனைஞான மாகும்
திருஞானம் இவையெலாங் கடந்தசிவ ஞானம்
ஆதலாற் சீவன்முத்தர் சிவமேகண் டிருப்பர். ருகக

(உரை) இத்தையாயுமறி வெனப்பட்ட பரஞானத்தால் அதனைத் தெளிய நோக்கி அன்பு செய்யப்பெற்றார், அவ்வொன்றனையேயுணர்ந்துகொண்டு நிற்பானன்றி மேற்கூறிய பிராரத்தவாதனை தாக்குதற்குரிய வினைப் பதார்த்தங்களைச் சிறிதுங் காண்பாரல்லர்; அவற்றைக் காணவரு ஞானங்களாவன: கருவிகளைப் பற்றிநின்றறியுங் காட்சி யனுமான முறையெனப் பலவகைப்பட்ட அளவை ஞானங்கள்; அவையெல்லாஞ் சுட்டுணர்வின் பேதமாகலானும், வினைக் கேட்டலின்கண்ணதாகிய சாத்திரஞானம் நால்வகை வாக்கைப் பற்றி நிகழும் விந்துஞானமேயாகலானும், சிந்தித்துத் தெளிதற்கண்ணதாகிய பேதஞானமும் பாவனைஞானமாதலேயன்றி அனுபூதி ஞானமாகாமையானும், இவையனைத்திற்கும் மேலாய் ஈண்டுக் கூறப்

பட்ட இச்சிவஞானமொன்றே பதார்த்தங்களைப் பார்க்கவாராத சிறப்புடைய ஞானமாகலான், இதனைப் பெற்ற சீவன்முத்தர் சிவமொன்றே கண்டிருப்பாரன்றி ஏனைப் பதார்த்தங்களை நோக்கிப் பிராரத்தவாதனையிற் படுவாரல்லர்.

சிவமே கண்டிருப்பரென்றது முடிந்தது முடித்தல். ஏகாரம் பிரிநிலை. ஈண்டு அஞ்ஞானமென்றது சுட்டுணர்வின் மேற்று. கலக்கம் ஐயம். கேட்டலறிவு மேற்சிந்தித்துத் தெளியும்படி ஐயத்தை விளைத்தல்பற்றி, அதனைக் கலக்கந்தருஞானமென்றார். போகந்தங்கிய ஞானமென்றது அக்கலக்கந்தருஞானம் போம்படி அவ்வாறு தங்கிய ஞானமென்றவாறு. சீவன்முத்தர் பிறிதொன்றனைப் பாரரென வற்புறுத்தோதிய இதனானே, பிராரத்தவினை மங்கிப்போயவழியும் மங்காது நின்றுழல்விப்பதாகிய அதன் வாதனை பற்றறக்கழியுமாறு சாதிக்கப்பட்டது. ௨

அநாதிஉடல் ஒன்றினைவிட் டொன்றுபற்றிக் கன்மால்
 ஆயழிந்து வருதலால் அந்த மில்லை
பிறைதியருள் பெற்றவர்கள் நித்தவுரு வத்தைப்
 பெற்றிருக்கை முத்தியெனிற் பெறும்பதமே இதுவும்
இறைநிலை இது தானுங் காயமுண்டேல்
 இருங்கன்ம மாயைமல மெல்லா முண்டாம்
மறைதிதரு முடலாதி காரியத்தால் அநாதி
 மலம்அறுக்கும் மருந்தற்றால் உடன்மாயுங் காணே. ௩௪௨

**(உரை)** உடம்பாவது அநாதியாயுயிரைப்பற்றி நீரோட்டம் போலத் தொடர்ச்சியாய் வருவதாகலான், அதற்கொரு முடிபு கூறுதல் பொருந்தாமையின், முத்தியினும் இவைபோலன்றி நித்திய சுத்தமங்களமயமான திப்பிய சரீரமுண்டென்னும் உருவசிவசமவாதிகள் மதமடாது. உடம்புளதாகவே அதற்குக் காரணமாகிய மாயையும் அதன்கண் நிகழும் உண்டிவினைகட் கேதுவாகிய கன்மமும் அதனை இயைவிப்பதாகிய ஆணவமலமும் விட்டு நீங்குதலின்மையின் அதுவும் இன்னுமையைப் பயக்குநிலையேயாகலானும், ஆகவே, அதனை முத்தியென்பதற்குத் தாற்பரியம் பதமுத்தியென்பதேயாமாகலானும், மனமுதலிய புரியட்டக உடம்பினின்றுந் தோன்றுவதாகிய இவ்வுடம்பு அக்காரியப்பாட்டால் ஆதியாய் அநாதியாகிய மலநோய் தீர்

தற்கு மருந்தாய்வரும் ; இஃது அக்காரண நீங்கியவழித் தானும்உடன் நீங்குவதன்றி நிற்றற்கோ ரியைபின்மையான், அந்தமாதற்கண் ஆசங்கையின்மையானும்.

இதனானே மாயாமலம் பற்றறக் கழியுமாறு தடைவிடைகளாற் சாதிக்கப்பட்டது. ந

தெரிவரிய மெய்ஞ்ஞானம் சேர்ந்த வாறே
சிவம்பிரகா சிக்குமிங்கே சீவன்முத்த ராகும்
உரியமல மௌடதத்தால் தடுப்புண்ட விடமும்
ஒள்ளெரியின் ஒளிமுன்னர் இருளுந் தேற்றின்
வருபரல்சேர் நீர்மருவு கலங்கலும்போ லாகி
மாயாதே தன்சத்தி மாய்ந்து காயம்
திரியுமள வும்உள தாய்ப் பின்பு காயஞ்
சேராத வகைதானுந் தேயு மன்றே. ந.கந

(உரை) மேற்கூறிய மெய்ஞ்ஞானத்தைப் பெற்றவழியும், அதனாற் சிவம் பிரகாசித்தவழியும், அதனாற் சீவன்முத்தராயவழியும், முறையே தேற்றின் வருபரல்சேர் நீர்மருவுகலங்கல் முதலிய மூன்றும்போல ஆணவமலந் தனது சத்திகெட்டு வாதனைமாத்திரையாய் அவ்வுடம்புள்ளவளவு நின்று, மற்றொரு பிறவிக்கு ஏதுவாதலின்றி அதனோடு கழிந்தொழியும்.

தேற்றின்வரு பரல்சேர் நீர்மருவு கலங்கல் பாஞானஞ் சேரப் பெற்றார்மாட்டு மாய்ந்துகிடக்கு மலசத்தி ஒருகாரணத்தான் மேற்படினும் ஒட்டின்றி அங்ஙனம் விண்டொழிதற்கும், சிவம் பிரகாசித்தார்மாட்டு ஒள்ளெரியினொளிமுன் இருள் அஃதாண்டைக்குச் சிறிதாயினும் இயைபின்றியுஞ் சேய்மைக்கண்ணுள்ளதுபோலத்தோன்றுதற்கும், ஔடதத்தாற் றடுப்புண்டவிடம் சீவன்முத்தராகப்பெற்றார் மாட்டு ஒருவாற்றானும் இயைபின்றியும் அங்ஙிலையின், மெலிவு பார்த்திருத்தற்கும் உவமையாயின. எதிர்நிரனிறையாக வைத்துக் கண்டுகொள்க. ஒள்ளெரியென விசேடித்ததனால் விளக்குமுதலிய அற்ப எரியினொளிகள் நீக்கப்பட்டன. இதனானே ஆணவமலம் பற்றறக் கழியுமாறு கூறப்பட்டது. சு

ஆணவந்தான் அநாதிஅந்த மடையா தாகும்
அடையின்அந்த ஆன்மாவும் அழியுமெனிற் செம்பிற்
காணலுறுங் களிம்பிரத குளிகை பரிசிக்கக்
கழியுஞ்செம் புருநிற்கக் கண்டோ மன்றே
தாணுவின்தன் கழலிணையத் தவிரும்மலந் தவிர்ந்தால்
தான்சுத்த னுயிருக்கை முத்திஅரன் தாளைப்
பூணவேண் டுவதொன்று மில்லையெனின் அருக்கன்
புகுதஇருள் போம்அடியிற் பொருந்தமலம் போமே. ருகச

**(உரை)** இரதகுளிகை பரிசித்த மாத்திரையே செம்போடு சகசமாய் நின்ற களிம்பு நீங்கச் செம்பு வேறுநிற்றல் கண்டாமாகலின், அதுபோல மெய்ஞ்ஞானஞ் சார்ந்தமாத்திரையே உயிர் வேறாய்நிற்ப, உயிரோடு சகசமாய் நின்ற ஆணவமலம் நசிக்குமென்றற்கோ ரிழுக்கின்மையான், முத்தியினுஞ் சகசமல நீங்குமாறில்லை யென்னும் பாடாண வாதசைவர் மதமும், அருக்கனொளி மேவினும் அருக்கனொடு கண்ணொளி கலந்தாலன்றி இருள் பற்றறக் கழியாதவாறு போல மெய்ஞ்ஞானஞ் சேரினுஞ் சிவம் பிரகாசித்துத் திருவடியை உயிர் பொருந்தினாலன்றி ஆணவமலம் பற்றறக் கழியுமாறின்மையின், மெய்ஞ்ஞானஞ் சேர்ந்தமாத்திரையே மலநீங்கப் பெறும் அதுவே முத்தியாதலமையும், அதன்மேலுந் திருவடியைக் கலத்தல்வேண்டா வென்னும் பேதவாத சைவர்மதமும் அடா.

இதனானே தடைவிடைகளான் மேலது சாதிக்கப்பட்டது. ரு

நெல்லினுக்குத் தவிடுமிகள் அநாதி யாயே
நெல்லைவிட்டு நீங்கும்வகை நின்றநிலை நிகழ்த்தீர்
சொல்லியிடில் துகளற்ற அரிசியின்பா லில்லை
தொக்கிருந்து மற்றொருநெல் தோன்றி டாவாம்
மெல்லஇவை விடுமறவே இவைபோல அணுவை
மேவுமல முடல்கன்மம் அநாதிவிட்டே நீங்கும்
நல்லசிவ முத்தியின்கட் பெத்தான் மாவை
நணுகிநிற்கு மாதலால் நாசமுமின் றாமே. ருகரு

**(உரை)** அரிசியொடுஞ் சகசமாய் நின்ற முளை தவிடுமிகள் கெட்டொழிய அரிசி கேடின்றி நிலைபெறுதல் கண்டாம்; அவ்வரிசி முன்போல வேறொரு நெல்லுந் தோன்றுதற்குக் காரணமாதல் செல்

லாமையான் அவை அவ்வரிசியின்கண்டங்கி நிற்குமென்றற்கு ஒரியை பின்மையின், அவை ஆண்டில்லையென்பதே தேற்றம். அவைபோல அநாதியே உயிர்களோடு சகசமாய் நின்ற மும்மலங்களும் முத்திநிலைக் கண் விண்டொழியுமென்றே கொள்க. ஆண்டு விண்டொழியினும் ஏனைப் பெத்தரிடத்துக் காணப்படுதலால் அவை நித்தப்பொருளா தற்கும் இழுக்கில்லை.

*இத்தை விளைவித்தன் மலமென்பதூஉமறிக. மெய்ஞ்ஞானஞ் சேர்ந்த மாத்திரையே மலம் பற்றறக்கழியும் என்பாரையும் ஈண்டு மறுப்பார், மெல்லவிவை விடுமறவே யென்றுங் கூறினர். ஏகாரந் தேற்றம். இனம்பற்றியும் உவமேயம்பற்றியும் முளையுமுடன் வைத் துரைக்கப்பட்டது. இதனானே இரதகுளிகை பரிசித்த செம்பிலுங் களிம்பு தொக்கிருக்குமெனக் கோடுமென்பாரை நோக்கித் தொக் கிருத்தல் செல்லாமை அநுபலத்தி யேதுவின் வைத்துணர்த்தற் பொருட்டு, வேறுமோருவமை கூறுமுகத்தான் அம்மூன்றுமொருங்கே வலியுறுத்தப்பட்டன. இவை ஐந்துசெய்யுளும் மேலைச்சூத்திரத் தின் அகலுங்குற்றமென்ற இறுதிக் கூற்றினொழிபாய் இயைபுபற்றி ஈண்டு வைக்கப்பட்டன. கூ

எவ்விடத்தும் இறையடியை இன்றியமைந் தொன்றை
அறிந்தியற்றி யிடாஉயிர்க ளிறைவன் றானும்
செவ்விதினின் உளம்புகுந்து செய்தியெலாம் உணர்ந்து
சேட்டிப்பித் தெங்குமாய்ச் செறிந்து நிற்பன்
இவ்வுயிர்கள் தோற்றும்போ தவனையின்றித் தோற்றா
இவற்றினுக்கம் முதலெழுத்துக் கெல்லாமாய் நிற்கும்
அவ்வுயிர்போல் நின்றிடுவன் ஆத லால்நாம்
அரனடியை அகன்றுநிற்ப தெங்கே யாமே. ௫கக

**(உரை)** ஆன்மாவுக்கு அறிவுசெயல்கள் விளங்குதலும் விளங்கிய பின் விடயத்திற்சென்று பற்றுதலும் இறைவன் திருவடியையின்றி அமையமாட்டா; அதுபற்றி இறைவனும், அக்கரங்களை இயக்குதற் பொருட்டு அவற்றுடனிற்கும் அகரம்போல, அறிவுசெயல்கள் விளங் குதற் பொருட்டு உயிர்களோடுங் கலந்து நிற்பன். அங்ஙனம் விளங் கிய அறிவு செயல்கள் பின் விடயத்திற் சென்று பற்றுதற்பொருட்டு

*உண்மை விளக்கம் - ௫க.

அவ்வுயிர்களை அதிட்டித்துக்கொண்டு அவை செல்லுமாறெல்லாம் அறிந்து செலுத்தி அவ்விடயங்களினு முடனாகக் கலந்து நிற்பனாகலால் ஆணவமலத்தினீங்கி வேறு நின்றவுயிர்கள் அதுபோல இறைவனைவிட்டுத் தனித்து நிற்றல் ஓரிடத்துமில்லை.

எவ்விடத்தும் பெத்தமுத்தி இரண்டினுமென்க. இதனுள் உயிர்களறிந்தியற்றியிடாவெனவும் இறைவன்றானுஞ் செறிந்துநிற்பனெனவுங் கூறியது ஆன்மாவி னறிவுசெயல்கள் விடயித்தற்கட்படு மியல்பிற்கும், தோற்றும்போதவனையின்றித்தோற்றாவெனவும் இறைவனவ்வுயிர்போல் நின்றிடுவனெனவுங் கூறியது அவை விளங்குதற் கட்படு மியல்பிற்குமெனக் கொள்க. இவ்விருதிறத்துள் உயிரிற் கலந்துநின்று அறிவுசெயல்களை விளக்குதலே காட்டுமுபகாரமெனவும், அவ்வுயிரை அதிட்டித்துக்கொண்டு சென்று விடயத்திற்கலந்து நிற்றலே காணுமுபகாரமெனவுங் கொள்க. உயிர் ஒன்றனை விடயித்தல் இறைவனவ் விடயத்து முடன்சென்று கலந்தாலன்றி உயிரிற் கலத்தன்மாத்திரையாலமையாதென்பது, கண்ணொளி, விளக்கின் சோதியோடு கலந்தும், விளக்கொளி கலந்தவற்றையன்றிக் காண்டல் செல்லாமையின் வைத்துணர்ந்துகொள்க. *"அறிவானுந்தானே அறிவிப்பான்தானே" என்றபின் "அறிவாயறிகின்றான்தானே" என்ற அம்மைதிருவந்தாதியுமிது. இதனானே, அநாதியுடனின்ற ஆணவமலத்தை விட்டுநீங்கி இறைவனொடு கூடுமாயின் அம்முறை பற்றி இறைவனையுமொரோவழி விட்டுநீங்கப்பெறும்போலுமென்னு மவ்வாதிகளை நோக்கி, அது கூடாமைக்கு ஏதுக் கூறுமுகத்தான் ஈசனுயிர்க்குக்காட்டிக் கண்டிடுவனென்ற முதற்கூறு தெரித்துணர்த்தி வலியுறுத்தப்பட்டது. எ

எங்குந்தான் நிறைந்துசிவன் நின்றா னாகில்
எல்லாருங் காணவே வேண்டுந்தா னென்னில்
இங்குந்தான் அந்தகருக் கிரவிஇரு ளாகும்
ஈசனருட் கண்ணில்லார்க் கொளியாயே யிருளாம்
பங்கந்தா னெழும்பதுமம் பக்குவத்தை யடையப்
பரிதிஅலர்த் திடுவதுபோல் பருவஞ்சே ருயிர்க்குத்
தங்கஅரன் ஞானக்கண் கொடுத்தருளி னாலே
சோதிக்குட் சோதியாய்த் தோன்றிடுவன் காணே. ௬௧எ

* அற்புதத் திருவந்தாதி - உ0.

**(உரை)** முதல்வன் அத்துணைக் கலப்புடையனா யெங்குஞ் செறிந்து நின்று உபகரித்துவரினும், அஃதருட்கண்ணுடையார்க் கன்றி அறியவாராது ; அவ்வருட்கண்ணும் பக்குவமுடையார்க்கன்றிக் கிடைக்கப்பெறாது ; அப்பேறும் முதல்வனையின்றி யமையாது ; ஆக லான், அப்பெற்றித்தாகிய அருட்கண்ணை முதல்வன் பருவம் பார்த் திருந்து கொடுக்கப்பெற்றுடையார்க்கே அவனறிவுக்கறிவாய்நின்று அவ்வாறுபகரித்துவரும் அத்துவிதநிலை இனிது விளங்கும்.

இத்தையாயுமறிவுடையனாதற்கு உரிமை கூறியவாறு. பருவ மெய்தாததூஉ மெய்தியதூஉம் ஓரிடத் தொருங்கு காட்டுவார், பங் கந்தாமெனழும்பதுமமென வேறுவமை கூறினர். அ

சேன்றணையும் நிழல்போலச் சிவன்நிற்ப னென்னில்
 சென்றணையும் அவன்முதலி சிவத்தைஅணைந் தொன்றாய்
நின்றதுயிர் கெட்டென்னில் கெட்டதணை வின்றாம்
 நின்றதேற் கேடில்லை அணைந்துகெட்ட தென்னில்
பொன்றினதேன் முத்தியினைப் பெற்றவரார் புகல்நீ
 பொன்றுகையே முத்தியெனில் புருடன்நித்த னன்றாம்
ஒன்றியிடு நீரொடுநீர் சேர்ந்தாற்போல் என்னின்
 ஒருபொருளாம் அதிபதியோ டுயிர்பொருளொன் றன்றே.

**(உரை)** அரன் கொடுத்துத் தோன்றுவானெனல் வேண்டா, பதிகாற் சென்றணையப்படும் மரநிழல்போல முதல்வன் விகார மின்றி நிற்ப, உயிர்தானே பருவஞ்சேர்ந்தவழி ஞானக்கண்ணைப் பெற்று அரனைத் தலைக்கூடுமென அமையுமென ஈசுவரவிகாரவாதி மதம்பற்றிக்கூறின், மரநிழலுக்குச் சுதந்திரமின்றிச் சென்றணை வாருக்கு அச்சுதந்திரமாமாறுபோல, முதல்வனுக்குச் சுதந்திரமில்லை அவனைத் தலைக்கூடுவதாகிய உயிர்க்கே சுதந்திரமெனப்பட்டு வழு வாம். இனிப் பரிணாமவாதிகள் உயிர் கெட்டுக் கூடி அரனடியில் ஒன்றாய்ப் போமென்பர். கெட்டாற் கூடுமாறின்மையானும், கெடாது நின்று கூடுமெனின் அவவாறு நின்று கூடியவழிக் கேடின்மையின் ஒன்றாதல் பெறப்படாமையானும், கூடியபின் கெட்டதெனிற் கெட்டவழி முத்தி பெறுவதொன்றின்மையானும், கேடே முத்தி யெனின் உயிர் நித்தமாதல் செல்லாமையானும், அதுவும் வழுவாம்.

இனி ஐக்கவாதிகள் *நீரிலே நீர்சேர்ந்தாற்போல உயிர் அரனடியைச் சேர்ந்து ஒன்றுமென்பர். நீருநீரும்போல முதல்வனுமுயிருந் தம்முட் சமமாதல் செல்லாமையின் அவர்மதமும் அடாது.

அரன்மலரடிக்கீ ழிருக்குமியல்பு வேறுவேறாகக் கூறுமவ்வமதங்களைப் பரிகரித்தவாறு. கூ

செம்பிரத குளிகையினுற் களிம்பற்றுப் பொன்னுய்ச்
செம்பொனுடன் சேரும்மலஞ் சிதைந்தாற் சீவன்
நம்பனுடன் கூடுமெனிற் பொன்போ லல்லன்
நற்குளிகை போலஅரன் நணுகுமலம் போக்கி
அம்பொனடிக் கீழ்வைப்பன் அருங்களங்க மறுக்கும்
அக்குளிகை தானும்பொன் ஞகா தாகும்
உம்பர்பிரா னுற்பத்தி யாதிகளுக் குரியன்
உயிர்தானுஞ் சிவானுபவ மொன்றினுக்கு முரித்தே. ௩கக

(உரை) களிம்புள்ளளவுஞ் செம்பு பொன்னுடனொத்து ஒன்றுமாறில்லையாயினுங் களிம்பு நீங்கியவழி ஒத்தொன்றுதல் செல்லுமென்பதும் அடாது; உயிர்க்கு மலத்தை நீக்குமாற்றலையுடைய முதல்வனைச் செம்பிற்குக் களிம்பு நீக்குமாற்றலுடைய இரதகுளிகைகளோடொப்புறுத்துதலன்றி அவ்வாற்றலில்லாத பொன்னோடொப்புறுத்துதல் ஈண்டைக் கேலாமையானும், மலநீங்கிய வழியுஞ் சிவானுபவமொன்றற்கே சுதந்திரமாயவுயிர் ஐந்தொழி லெல்லாவற்றிற்குஞ் சுதந்திரனுகிய முதல்வனோடொத் தொன்றுதல் செல்லாமையானும்.

ஒன்றினுக்கு மென்னுமும்மை முற்றும்மை. சிவானுபவமொன்றினுக்கு முரித்தேயென்ற இதனுனே, சிவானுபவத்திற்கு முரித்தன்றென்னுஞ் சுத்தசைவர்மதமும் மறுக்கப்பட்டது. க௦

சிவன்சீவ னென்றிரண்டுஞ் சித்தொன்று மென்னில்
சிவனருட்சித் திவன்அருளைச் சேருஞ்சித் தவன்றான்
பவங்கெடுத் திமுத்தி பண்ணுஞ்சித் திவற்றிற்
படியுஞ்சித் தறிவிக்கப் படுஞ்சித்து மிவன்றான்

* சங்கற்ப நிராகரணம் - ச.

அவன்றானே அறியுஞ்சித் தாதலினா லிரண்டும்
அணைந்தாலு மொன்றாகா தநந்நியமா யிருக்கும்
இவன்றானும் புத்தியுஞ்சித் திவனுமோ புத்தி
இதுஅசித்தென் றிடில்அவனுக் கிவனும்அசித் தாமே. ௩௨௦

**(உரை)** இருபொருளுஞ் சித்தேயாகலான் ஒத்தொன்றாமென்றலே யமைவுடைத்தன்றி, உயிர்தானுஞ் சிவானுபவ மொன்றினுக்குமுரித்தேயென வேற்றுமைப்படுத்துக் கூறுதல் ஆண்டைக்கமையாதாலெனின்,—அற்றன்று ; ஒளியென்னும் பொதுமையால் ஒத்தொன்றுமாயினும் வியஞ்சகத்தை இன்றியமையாதாய் அதுவதுவாய் மூந்திக் காணுங் கண்ணொளிக்கும் அதுபோலத் தனக்கொரு வியஞ்சகம் வேண்டாது தானே வியஞ்சகமாய் எல்லாவற்றையு மொருங்கே விளக்கிநிற்கும் ஞாயிற்றினொளிக்குந் தம்முள் வேற்றுமை பெரிதாயினாற்போல, சித்திரண்டற்குந் தம்முள் அந்தரங்க வேற்றுமை பெரிதுமுண்மையான், அவ்விருபொருளுந் தம்முட் கூடியவழியும் அத்துவிதமாய் நிற்றலேயன்றி ஒன்றாய்ப் போமாறில்லை.

நீருநீரும்போல ஒத்தொன்றாய் நிற்குமென்னும் ஐக்கவாதிகளை மறுத்தற்கெழுந்தவிவ் விரண்டுசெய்யுளும், ஒத்து வேறாய்நிற்குமென்னும் அருவசிவசமவாதிகளை மறுத்தற்குமுரியவாறு காண்க. கக

இரும்பைக்காந்தம் வலித்தாற்போல் இயைந்தங் குயிரை
எரியிரும்பைச் செய்வதுபோல் இவனைத்தா னாக்கி
அரும்பித்திந் தனத்தைஅன லழிப்பதுபோல் மலத்தை
அறுத்தமலன் அப்பணைந்த உப்பேபோ லணைந்து
விரும்பிப்பொன் னினைக்குளிகை யொளிப்பதுபோல் அடக்கி
மேளித்துத் தானெல்லாம் வேதிப்பா னாகிக்
கரும்பைத்தே னைப்பாலைக் கனியமுதைக் கண்டைக்
கட்டியைஒத் திருப்பன்அந்த முத்தியினிற் கலந்தே. ௩௨௧

**(உரை)** காந்தம் விகாரமின்றி நின்றே இரும்பை வலிப்பவுங் கண்டாம் ; அதுபோல இறைவனும் விகாரமின்றியே உயிரைத் தன் வழிப்படுத்து நிற்பனாகலாற் சென்றணையுநிழல்போலச் சிவனில்லாமைபற்றிச் சிவன் நிருவிகாரியாதற் கிழுக்கில்லை. எரி இரும்பைக் கெடுத்தலின்றித் தன்வண்ணமாக்கித் தன்வண்ணமாக்குதற்குரித்தாகாது இவ்விரும்பின்கணுடன் தோன்றி நிற்குங் கறைமாத்திரங்

கெடச் செய்யும்; அதுபோல இறைவனும் உயிரைத் தன்வண்ண மாகச் செய்து தன்வண்ணமாக்குதற் குரித்தாகாது அவ்வுயிரின்கண் ணுடன்றொன்றி நிற்கு மலமாத்திரங் கெடச் செய்யுமாகலால், பொன்றுகை முத்தியாகாமைபற்றி யொன்றாதற் கிழுக்கில்லை. நீரோடு சேர்ந்தவுப்புத் தன் சுவைமுழுவதுமங் நீர்க்காக்கித் தன்னோ டொப்பச் சமஞ்செய்து நிற்கும்; அதுபோல உயிரைச் சேர்ந்த இறை வனுந் தனக்குரிய எண்குணங்களேயும் அவ்வுயிரின்கட் பதிப்பித்துத் தன்னோடொப்பச் செய்துநிற்பானாகலான், நீரொடுநீர் சேர்ந்தாற் போலல்லாமைபற்றிச் சிவசமமாதற்கிழுக்கில்லை. இரதகுளிகை செம்பையுருக்கித் தன்னொடு கூட்டி வேதித்துப் பொன்னாகச்செய் தும் பொன்னியல்பைக் காட்டாது தன்னுளடக்கி நிற்குமாறுபோல, இறைவன் உயிரை அவ்வாறெல்லாஞ் செய்தும் அதனியல்பு சிறி துந் தோன்றா தறிவிறந்து நிற்குமாறு தனது வியாபகத்துளடக்கி நிற்குமாகலான், அப்பணைந்த உப்பேபோலணைந்து ஒப்பச் செய் தமைபற்றி உம்பர்பிரானொருவனே உற்பத்தியாதிகளுக் குரியனாதற் கிழுக்கில்லை. கருப்பஞ்சாறு முதலிய சுவைப் பொருளெல்லாம் ஒன் றாகக் கலந்தவழி யுளதாகிய சுவை இவ்வியல்பிற்றெனப் பிரித்தறிய வாராமைபோல, இறைவனும் உயிரின்கண் அங்ஙனங் கலந்தவழி இவ்வியல்பிற்றெனப் பிரித்தறிய வாராது ஆனந்த சொரூபமாய் நிற்ப னாகலான், அறிவிறந்து நிற்றல்பற்றி உயிர்தானுஞ் சிவானுபவம் ஒன்றினுக்கும் உரித்தாதற்கு இழுக்கில்லை.

சென்றணையும் நிழல்போலச் சிவன் நிற்பனென்பது முதலாகக் கூறும் அவ்வாதிகளை மேலே மறுத்தவழி அவர் கூறும் ஆசங்கைகளை முறையே பரிகரித்துச் சித்தாந்தம் வலியுறுத்தற்பொருட்டு, இங்ங னம் வெவவே றுவமைகளின் வைத்துக் காட்டி ஒருங்கு கூறியவாறு. மலரடிக்கீழ் வைப்பனெனவும், பாதநிழற்கீழ் இருவெனவும், ஏகனாகி நின்றிடவெனவும், அரன் மலரடிக்கீழ் இருப்பனெனவுங் கூறிய இந் நான்கு சூத்திரங்கட்குந் தம்முட் பொருள்வேற்றுமை இல்லைப்போலு மென மயங்காமைப்பொருட்டு இறுதிக்கண் அவற்றைத் தொகுத் தெடுத்துக்கொண்டு சிவரூபமுதலிய நான்காக வகுத்துணர்த்தியவாறு மாம். நின்மலசாக்கிர முதலிய ஐந்தவத்தையுந் தெரித்துக் கூறிய வாறென்றலும் ஒன்று. மதங்கத்துட் கூறப்படும் எழுவகை முத்தி

களை வகுத்துக் கூறியதென்றுரைப்பாருமுளர். இத்தரும் பிந்தன மெனவும் ஆகியடக்கியெனவும் கலந்தெதாத்தெனவும் இயையும். இத் தென்புழி அன்சாரியையும் இல்லுருபும் விகாரத்தாற் றொக்கன. அனலால் அழிக்கப்படுதல் ஒப்புமைப்பற்றி இரும்பின் கறையை இந் தனமாக உருவகஞ் செய்தார். அணைந்தெனக் காரியத்தைக் காரண மாக உபசரித்தார். மேளித்தல். கூட்டுதல். ஆகியுமெனச் சிறப்பும்மை விரித்துரைக்க. கலந்தவழியென்பது கலந்தெனத் திரிந்து நின்றது. அரும்பித்திந்தனத்தை அனலழிப்பதுபோ லென்பதற்கு இவ்வா றுரைக்க அறியாது விறகின்மேல் வைத்து உரைப்பாருமுளர். விறகை அழித்தற்கட்படும் விசேடமின்மையானும், ஏனையபோல உயிரோ டியைபுடைத்தாதற்குரிய உவமையின்மையானும், அரும்பித்தென ஒரு சொல்லின்மையானும், அவ்வுரை போலியென்றொழிக. அல் லதூஉம், தீ இரும்பைச் செய்வதுபோற் சீவன் தன்னைப் பந்தனையை யறுத்துத் தானாக்கியென அறுத்தல் ஆக்குதலிரண்டும் இரும்பின் மேல் வைத்தே மேற்கூறிய ஆசிரியர்க்கு, ஈண்டுமதுவே கருத்தாத லுணர்ந்துகொள்க. மேளித்துத் தானெல்லாம் வேதிப்பானாகி என் றதனை அடக்கி என்பதனோடியையாது வேறுவைத்துரைப்பின், ஏனையவற்றிற்கெல்லாம் உவமை தனித்தனி எடுத்துக்காட்டி இது மாத்திரைக்குவமை கூறாமை குன்றக்கூறலாய் முடியுமென் றொழிக. இவை ஐந்து செய்யுளானும் இரண்டாங் கூற்றிற்கு அவ்வமதம்பற்றி நிகழும் ஆசங்கைகளைப் பரிகரிக்கு முகத்தாற் சித் தாந்தங் கூறப்பட்டது. கஉ

---

## பன்னிரண்டாஞ் சூத்திரம்

இவ்வாறு பத்தாஞ்சூத்திரத்தானும் பதினொராஞ் சூத்திரத்தா னும் முறையே பாசநீக்கமுஞ் சிவப்பேறுமாகிய பயன் பெற்றார்க்குச் சீவன் முத்திநிலைக்கண் நிகழுமியல்பு வகுத்துக் கூறுதற்கெழுந்தது பன்னிரண்டாஞ் சூத்திரம்.

செங்கமலத் தாளிணைகள் சேர லொட்டாத்
திரிமலங்கள் அறுத்தீசன் நேசரொடுஞ் செறிந்திட்(டு)
அங்கவர்தந் திருவேடம் ஆலயங்க ளெல்லாம்
அரனெனவே தொழுதிறைஞ்சி ஆடிப் பாடி

எங்குமியா மொருவர்க்கு மெளியோ மல்லோம்
யாவர்க்கும் மேலானோம் என்றிறுமாப் பெய்தித்
திங்கள்முடி யார்அடியார் அடியோ மென்று
திரிந்திடுவர் சிவஞானச் செய்தியுடை யோரே. ௩௨௨

(உரை) பற்றறக் கழிந்த மும்மலங்கள், விளக்கற்றம்பார்க்கும் இருள்போல, அறிவற்றம் பார்த்து நிற்பனவாகலான், அவற்றை அஞ்சிப் பரிகரித்தலும், பரிகரித்தற்குத் துணையாகிய மெய்யன்பரொடு பயிறலும், பயிற்சி நிலைபெறும்படி அவரது திருவேடத்தையுஞ் சிவாலயத்தையும் அரனெனக் கண்டு வழிபடுதலுமுடையராய் இப்பேறு பெறமாட்டாரது சிறுமையும் பெற்றாரது பெருமையும் நோக்கிக் களித்து வாழ்தல், சீவன் முத்தர்க்குரிய இயல்பு.

ஒட்டாவென்னும் பெயரெச்சமறை ஏதுப்பெயர் கொண்டு முடிந்தது. இச்செய்யுள் முதனூற் பன்னிரண்டாஞ் சூத்திரம்போல முக்கூற்றதாமாறு கண்டுகொள்க. க

ஈசனுக் கன்பில்லார் அடியவர்க் கன்பில்லார்
எவ்வுயிர்க்கும் அன்பில்லார் தமக்கும்அன் பில்லார்
பேசுவதென் அறிவிலாப் பிணங்களைநாம் இணங்கிற்
பிறப்பினிலும் இறப்பினிலும் பிணங்கிடுவர் விடுநீ
ஆசையொடும் அரனடியார் அடியாரை அடைந்திட்(டு)
அவர்கருமம் உன்கரும மாகச் செய்து
கூசிமொழிந் தருள்ஞானக் குறியில் நின்று
கும்பிட்டுத் தட்டமிட்டுக் கூத்தாடித் திரியே. ௩௨௩

(உரை) கழிகாமத்தராயினார்க்கு, அத்தொடர்புடையாரதிணக்கம் அக்காமப் பைங்கூழை வளர்க்கு நீராதல்பற்றி அதன்கட் கழிபேருவகையும், அல்லாரதிணக்கம் அதனைப் பாறச்செய்யுங் களையாதல்பற்றி அதன்கண் வெறுப்புமிகுதியும் உளவாமாறுபோல, மாறாத சிவானுபவ மருவிக்கொண்டு அரன் மலரடிக்கீழ் இருக்கப்பெற்றார்க்கு, அதனை வளர்க்கும் நீர்மையராகிய அத்தொடர்புடையாரோ டிணங்குதற்கண் உவகை மிகுதியும், அதனைக் கெடுக்கு நீர்மையராகிய பிறரோடிணங்குதற்கண் வெறுப்பு மிகுதியும், இயல்பானுளவாம்.

விதிமுகத்தாற் கூறினர், சுவைப்பொருட்டுண்ணப்படும் பால் மருந்துமாமாறுபோலச் சாதனமுமாமா றுணர்த்துதற்கு. முன் வருவனவற்றிற்கும் இஃதொக்கும். காமுகனுவானொருவன், ஒரு வனிதையிடத்தன்புடையனென்பது, அவளொக்கலைக் கண்டுழி நிகழும் அன்பின் அளவுபற்றியே தெளியப்படும்; அதுபோல ஈசனுக்கன்புடைமை அவனடியவரைக் கண்டுழி நிகழும்அன்பினளவுபற்றியே தெளியப்படுமாகலான், அடியவர்க்கன்பில்வழி ஈசனுக்கன்புடையார்போலொழுகுதல் நாடகமாத்திரையே பிறிதில்லையென்பார், அடியவர்க்கன்பில்லார் ஈசனுக்கன்பில்லார் என்றும், எவவுயிர்க்கண்ணும் உளனுகிய ஈசனிடத்து அன்புடையார்க்கே அத்தொடர்புபற்றி எவ்வுயிர்க்கும் அன்புடையராதல் கூடுமென்பார், ஈசனுக்கன்பில்லார் எவ்வுயிர்க்கும் அன்பில்லாரென்றும், இவ்விடங்களில் அன்பில்லாதார் தம்முயிர்க்குறுதி செய்துகொள்ளுவா ரல்லரென்பார், தமக்கும் அன்பில்லாரென்றுங் கூறினர். *"அன்பில்லா ரெல்லாந் தமக்குரியர்" என்புழித் தம்மென்றது உடம்பை நோக்கியாகலின், அஃதீண்டைக்கு முரணுமை அறிக. இதன் எதிர்மறைமுகத்தால் அடியவர்க்கன்புடையாரது பெருமையுங் கண்டுகொள்க. அவர்கருமம் உன்கருமமாகச் செய்தலுந் தற்போத முனைத்துநின்று செய்யிற் குற்றமாமென்பார், அருண் ஞானக் குறியினென்ருர். கூசுதல் அவருயர்வும் தன்னிழிபும் நோக்கி நிகழ்வது. கும்பிடுதலுந் தட்டமிடுதலுங் கூத்தாடுதலும் உவகை மிகுதியில்நிகழும் மெய்ப்பாடு. இதனுனே இரண்டாங்கூறு தெரித்துணர்த்தப்பட்டது. முதற்கூறு செங்கமலத் தாளிணைகள் சேரலொட்டாத் திரிமலங்களென ஆண்டே உடம்பொடு புணர்த்தோதி வலியுறுத்தினமையின், வேறு கூறிற்றிலர். உ

அறிவரியான் தனையறிய யாக்கை யாக்கி
அங்கங்கே உயிர்க்குயிராய் அறிவுகொடுத் தருளால்
செறிதலினுல் திருவேடம் சிவனுருவே யாகும்
சிவோகம்பா விக்கும் அத்தாற் சிவனுமாவர்

---

*திருக்குறள் - அன்புடைமை - உ.

குறியதனால் இதயத்தே அரனைக் கூடும்
கொள்கையினால் அரனவர் குறியொடுதாம் அழியும்
நெறியதனாற் சிவமேயாய் நின்றிடுவ ரென்றால்
நேசத்தால் தொழுதிடுநீ பாசத்தார் விடவே. ௩௨௪

**(உரை)** வேடத்தானும் பாவனையானுஞ் செயலானுந் தன்மையானுந் திருவேடமுடைய மெய்யன்பர் சிவமேயாதல் தெளியக் கிடத்தலின், அதுபற்றி அவரை அரனெனவே தேறி வழிபடுக, ஏனைய பாசப்பற்றுடையாரது பற்று விட்டொழிதற்பொருட்டு.

சிவமாதல் தெளிந்துகோடற்கு வேடமுதலியவற்றுள் ஒன்றே அமையுமென்பார், சிவமாதலை அவற்றோடு தனித்தனி கூட்டிக் கூறினார். அவ்வேடமுடையாரென் றெடுத்துக்கொண் டுரைக்க. பாசத்தார் ஆகுபெயர். ௩

திருக்கோயி லுள்ளிருக்கும் திருமேனி தன்னைச்
சிவனெனவே கண்டவர்க்குச் சிவனுறைவன் அங்கே
உருக்கோலி மந்திரத்தால் எனநினையும் அவர்க்கும்
உளனெங்கும் இலன்இங்கும் உளனென் பார்க்கும்
விருப்பாய வடிவாகி இந்தனத்தின் எரிபோல்
மந்திரத்தின் வந்துதித்து மிகுஞ்சுரபிக் கெங்கும்
உருக்காண வொண்ணாத பால்முலைப்பால் விம்மி
ஒழுகுவது போல்வெளிப்பட் டருளுவன்அன் பர்க்கே.

**(உரை)** பகுத்துணர்தலின்றிச் சிவலிங்கமுதலிய திருமேனியே சிவமெனக் கண்டு வழிபடுஞ் சரியையாளர்க்குச் சிவன் ஆண்டுவெளிப் படாதுநின்று அருள்செய்வன். அருவப்பொருளாகிய சிவன் ஈசானாதி மந்திரங்களாற் சிவலிங்கமுதலிய திருவுருக் கோலினனெனக் கருதி மந்திரயாசத்தால் வழிபடுங் கிரியையாளர்க்கும், யோகிகளுள்ளம் எங்கணும் இல்லமாக வாழுஞ் சிவன் இத்திருமேனியிலும் இருந்து பூசைகொண்டருளுவனெனக் கருதிச் சாத்தியமந்திரங்களால் வழி படும் யோகிகட்கும், கடைந்தவழித் தோன்றும் எரியுங் கறந்தவழித் தோன்றும் பாலும்போல அவ்வமந்திரங்களால் அவரவர்விரும்பிய வடிவாய் அத்திருமேனிகளில் அவ்வப்போது தோன்றிநின்று அருள் செய்வன். அவர்போல் ஏகதேசமாய்க் குறித்தலின்றி அன்புமாத் திரையான் ஆண்டு வழிபடு ஞானிகட்கு, கன்றை நினைந்த புனிற்று

வின் முலைப்பால்போல, கருணை மிகுதியால் அவ்வன்பே தானாய் எப் போதும் ஆண்டு வெளிப்பட்டுநின்று அருள்செய்வன்; ஆகலான் அஃதறிந்து வழிபடுக.

ஆகலானஃதறிந்து வழிபடுக வென்பது குறிப்பெச்சம். அங்கே யென்பது யாண்டுஞ் சென்றியையும்.மந்திரத்தால் உருக்கோலியென மாறுக. கோலியென்பது பெயர். உளன் உள்ளம். இலனென்பது இல்லெனும் இடப்பெயரடியாகப் பிறந்த குறிப்புவினைமுற்று. இங்கு மென்னுமும்மை இறந்தது தழீஇயிற்று. அன்பர்கட்கு விம்மி யொழு குவது போலெனவே யோகிகட்குக் கறக்கவொழுகும் பால்போலென் பது பெறப்பட்டது. அன்பரென்றது ஈண்டு ஞானிகள்மேற்று, †"அன்ப ரோடு மரீஇ" என்புழிப்போல. திருவேடஞ் சிவனெனத் தெளியுமாறு தொழப்படுவாரது கருத்துவகைபற்றிக் கூறினர். சிவ லாயத்தைச் சிவனெனத் தெளியுமாறு தொழுவாரது கருத்துவகை பற்றிக் கூறினாரெனவுணர்க. ௬

ஞானயோ கக்கிரியா சரியை நாலும்
நாதன்தன் பணிஞானி நாலினுக்கும் உரியன்
ஊனமிலா யோகமுதல் மூன்றினுக்கும் உரியன்
யோகிகிரி யாவான்தான் ஒண்கிரியை யாதி
ஆனஇரண் டினுக்குரியன் சரியையினில் நின்றோன்
அச்சரியைக் கேஉரியன் ஆதலினால் யார்க்கும்
ஈனமிலா ஞானகுரு வேகுருவும் இவனே
ஈசனிவன் தான்என்றும் இறைஞ்சி ஏத்தே. ௯௨௬

(உரை) மேலைச்செய்யுளிற் கூறிய நால்வகைக்கருத்தும் அவ ரவர்மாத்திரைக்கே உரித்தாயிருக்கச் சரியையாளரைப்போல ஞானி வழிபடுத லெற்றுக்கெனின்,—நாலுபாதத்தில் நிகழுங் கிரியையெல் லாங் கர்த்தாவின தூண்மைப்பணியாகலால், உலகின் மருவாதஇன்பத் துள் வைத்த குருவினுபகாரத்தைக் கருதி நால்வகைத் தொழிலும் ஞானி செய்தலே கடப்பாடென்பது உட்டொழில் செய்வார் புறத் தொழிற்கும் உரியரென்னு முறைபற்றியும், ஏனையோர் தத்தந் தொழிற்கேயுரியரென்பது புறத்தொழில் செய்வார் உட்டொழிற்

* சிவஞானபோதம் - சூத் - கஉ.

குரியால்லவென்னுமுறைபற்றியும் உணர்ந்துகொள்ளப்படுவன. இனி, அந்நால்வகைப் பாதத்தில்நிற்கும் மாணாக்கர்க்கு ஆசிரியன்மார் உபதேசித்தற்கட்படும் உரிமையும் இவ்வாறே வைத்துணர்ந்து, எல்லார்க்கும் உபதேசித்தற்குரிய ஞானகுருவே தலையாய குருவென்றும், ஈண்டுக்கூறிய தாபரசங்கமங்களும் இக்குருவடிவின் வேறல்லவென்றுந் தேறி, அவ்விரண்டினும் வழிபடுக.

மேற்கூறிய நால்வகைக் கருத்துக்கும் உரியராவாரைக் கூறுவார், அவற்றையுள்ளடக்கிநிற்கும் ஞானமுதலியவற்றை யுடையாரது இயல்பின்மேல் வைத்துக் கூறினார். சொற்பல்காது மாட்டேற்றின்மேல் வைத்துணர்ந்துகோடற்பொருட்டு, ஆகலினால் இறைஞ்சிஎத்தேஎன்பதனையும் ஈண்டுடன் கூறினார். திருவேடம் ஆலயங்களெல்லாம் அரனெனவே தொழுதிறைஞ்சுதற்கட்படும் விசேடங் கூறியவாறு. ஈசனிவனென்புழி இவனென்பது பகுதிப்பொருள் விகுதி. ஈண்டு ஈசனென்றது திருக்கோயிலுள்ளிருக்குந் திருமேனியை. என்றுமென்னும் உம்மையை எதிரது தழீஇயிற்றுக்கித் திருவேடமும் இவனேயென்றிறைஞ்சியேத்தெனவு முரைத்துக்கொள்க. இவைமூன்று செய்யுளானும் மூன்றுங்கூறுதெரித்துணர்த்திவலியுறுத்தப்பட்டது

மந்திரத்தான் மருந்துகளால் வாய்த்தவியோ கத்தால்
 மணிஇரத குளிகையினால் மற்றும் மற்றும்
தந்திரத்தே சொன்னமுறை செய்ய வேத
 சகலகலை ஞானங்கள் திரிகால ஞானம்
அந்தமிலா அணிமாதி ஞானங்க ளெல்லாம்
 அடைந்திடும் ஆசான்அருளால் அடிசேர் ஞானம்
வந்திடுமற் றொன்றாலும் வாரா தாகும்
 மற்றவையும் அவனருளால் மருவு மன்றே. ௬உ௭

**(உரை)** ஏனைஞானங்களெல்லாம் ஆசிரியனையின்றியுமமையும்; திருவடிஞானம் ஒருவாற்றானு மாசிரியனையின்றி யமையாது; ஆகலால் இவனேயீச னிவன்றானென்று மிறைஞ்சியேத்து.

ஆகலாலிவனேயீச னிவன்றானென்று மிறைஞ்சியேத்தென்பது குறிப்பெச்சம். அவ்வாறேத்துதற்குரிய பெருமை கூறியவாறு. மற்றவையுமவனருளான் மருவுமென்றது இயைபின்மை நீக்குதற்பொருட்டு.

பரம்பிரமம் இவனென்றும் பரசிவன்தா னென்றும்
பரஞானம் இவனென்றும் பராபரன்தா னென்றும்
அரன்தருஞ்சீர் நிலையெல்லாம் இவனே யென்றும்
அருட்குருவை வழிபடவே அவனிவன்தா னாகிய
இரங்கியவா ரணம்யாமை மீன்அண்டம் சினையை
இயல்பினொடும் பரிசித்தும் நினைந்தும் பார்த்தும்
பரிந்திவைதா மாக்குமா போல்சிவமே யாக்கும்
பரிசித்தும் சிந்தித்தும் பார்த்தும் தானே. நஉஅ

**(உரை)** சிவபேதமனைத்துங் குருமூர்த்தமேயெனத் தேறி ஞானாசாரியனை வழிபடுக; அங்ஙனம் வழிபடப்பெறின், சிவன் இக்குருவை யாவேசித்து நின்று நாடோறுஞ்செய்யும் பரிசமுதலிய மூன்றானும் அவ்வுயிரைத் தன்வண்ணமாகச் செய்தருளுவன்.

அவ்வாறேத்தினார்க்கு வரும் பயன் கூறியவாறு. பரம்பிரமமென்றது சொரூபசிவத்தையெனவும், பரசிவனென்றது தடத்த சிவத்தை யெனவும், பரஞானமென்றது ஆகுபெயரான் அதனை யுடையாரையெனவும், பராபரனென்றது ஏனைத்தாபரமூர்த்தத்தை யெனவும், அரன்றருஞ் சீர்நிலையென்றது அறுபத்துமும்மை நாயன்மார் முதலிய சிவபத்தர் பொருட்டாக ஆண்டாண்டு வெளிப்பட்டருளி மறையும் மூர்த்தங்கள் எல்லாவற்றினையுமெனவுங் கொள்க. பரஞானமிவனென்றும் பராபரன்றானென்றும் வழிபடுதலதிகாரப் பட்டமையின் ஏனையவுமுடன் கூறினார். எ



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# அருணந்திசிவாசாரியர்

அருளிச்செய்த

# இருபாவிருபஃது மூலமும்

திருவாவடுதுறையாதீனம்

# நமச்சிவாயத்தம்பிரான் உரையும்

---

**இந்நூலுக்கு வரலாறவது :—**

பூரண கர்த்தாவா யிருக்கப்பட்ட சீகண்டபரமேசுர னருளிச் செய்யப்பட்ட சிவாகமத்தில் ஞானகாண்டமா யிருக்கப்பட்டதைச் சிறீநந்திதேவ தம்பிரானார்க்குக் கடாட்சித்தருள, சிறீநந்திதேவ தம்பிரானார் சனற்குமார பகவானுக்குக் கடாட்சித்தருள, சனற்குமார பகவான் சத்தியஞான தெரிசனிகளுக்குக் கடாட்சித்தருள, சத்தியஞான தம்பிரானார் பரஞ்சோதிமாமுனிக்குக் கடாட்சித்தருள, பரஞ்சோதிமாமுனிகள் திருவெண்ணெய்நல்லூரே திருப்படைவீடாகவுடைய மெய்கண்டதேவ தம்பிரானார்க்குக் கடாட்சித்தருள, அந்த மெய்கண்டதேவ தம்பிரானார் தமது திருவடியைப் பெற்ற அருணந்திதேவ தம்பிரானுக்குக் கடாட்சித்தருள, அவர் அந்த உபதேசத்தின் பயனைச் சிவஞானசித்தி யென்னுந் திருநாமத்தினையுஞ் சாத்தி, வழிநூலாகச் செய்தருளி, அதுவன்றியும் அந்தநூலி லத்தங்கள் விளங்குகை நிமித்தமாக அந்த உபதேச சம்பிரதாயங்களை யெல்லாம் ஆசாரியனை முன்னிலைக் கர்த்தாவாக நாட்டி வினாவாக வெடுத்துக்கொண்டு பத்து வெண்பாவும் பத்தகவலும் இரண்டு பாவாகக்கொண்டு இருபாவிருபது வென்னுந் திருநாமத்தினையுஞ் சாத்தி இந்நூலருளிச்செய்ததென வறிக.

இந்நூலுக்கு வியாக்கியைச் செய்யவேண்டினது கொண்டு மெய் கண்டதேவசந்ததியில் திருவாவடுதுறை நமச்சிவாயபண்டார மரபில் வேலப்ப பண்டாரக் கடாட்சத்தைப் பெற்ற நமச்சிவாயன் வேலப்ப பண்டாரங் கடாட்சித்த உபதேச சம்பிரதாயத்தைச் சகாத்தம் ௲௬௱௩௰௯க்கு செல்லாநின்ற காலத்திலே இந்தச் சாத்திர வியாக்கியும் இதிலாசாரியர் வாக்கியஞ் சத்தியமென்றும் சீஷன்கேட்ட வினு வழு வென்றும் ஆசாரியர் திருவுளம்பற்றினதுக்குச் சாத்திர சம்மதியு மெழுதினதென்றறிக.

இதனை இந்த வுபதேசத்துக்குரிய தம்பிரான்கள்,

"நெல்லுக் குமியுண்டு நீர்க்கு நுரையுண்டு
புல்லிதழ் பூவுக்கு முண்டு"

என்னும் விதியைப்பற்றி யுண்டான குற்றங்களைக் கடிந்து குணங் களைக் கூட்டிக்கொண்டருளவென் றிங்ஙனம் முகவுரை எழுதின துக்கு வரலாறு கூறி யெழுதினதுக்குப் பிரமாணமாவது சிவஞான சித்தியாரிலே,

"போதமிகுத் தோர்தொகுத்த பேதை மைக்கே
பொருந்தினோர் இவர்க்கன்றிக் கதிப்பாற் செல்ல
வேதுநெறி யெனுமிவர்கட் கறிய முன்னு
ளிறைவனரு ணந்திதனக் கியம்ப நந்தி
கோதிலருட் சனற்குமா ரற்குக் கூறக்
குவலயத்தி னவ்வழியெங் குருநாதன் கொண்டு
தீதகல வெமக்களித்த ஞான நூலைத்
தேர்ந்துரைப்பன் சிவஞான சித்தி என்றே"

என்பது கண்டுகொள்க. என்பதனுற் சிவஞானசித்தி யருளின தம்பிரானுர் இந்த இருபாவிருபது மருளிச்செய்தபடியினுலே சிவ ஞானசித்தி ஏதுக் காட்டினதென வறிக. அன்றியும் சிவப்பிர காசத்தினும்,

"தேவர்பிரான் வளர்கயிலை காவல் பூண்ட
திருநந்தி யவர்கணத்தோர் செல்வர் பாரிற்
பாவியசத் தியஞான தெரிசனிக ளடிசேர்
பரஞ்சோதி மாமுனிகள் பதியாம் வெண்ணெய்

மேவியசீர் மெய்கண்ட திறலான் மாறு
விரவுபுக ழருணந்தி''

என்பதை முற்கூறிய அந்த உபதேசக் கிரமத்திற்குச் சொல்லிய வொழுங்கு கண்டுகொள்க.

[இவ் வரலாறும் முகவுரையும் திருவாவடுதுறை நமச்சிவாயத் தம்பிரான் உரைப் பிரதியிற் காணப்படுவன. இவ்வுரைக்கு முற்பட்டதும், இதற்கு ஆதாரமாயுள்ளதும் மதுரைச் சிவப்பிரகாசருரை யென்பது அவ்வுரைப் பிரதியால் விளங்குகின்றது. அதில் இவ்வுரை யிற்போலச் சாத்திரப் பிரமாணங்கள் அதிகம் காணப்படுவனவல்ல ; மற்று உரையிற் சிறிதும் பேதமில்லை. வரலாறும் முகவுரையும் இங் குள்ளதுபோலவே உள்ளன. உரையைப்பற்றிக் கூறுமிடத்து 'இந் நூலுக்கு வியாக்கியைச் செய்யவேண்டினது கொண்டு மெய்கண்ட சந்ததியிற் காவை - அம்பலநாதத் தம்பிரான் திருவடிமரபிலாரில் மதுரை ஞானப்பிரகாசத் தம்பிரான் திருவடியைப்பெற்ற சிவப் பிரகாச ஞானப்பிரகாசத் தம்பிரானுர் கடாட்சித்த உபதேச சம்பிர தாயத்தைச் சகாத்த மாயிரத்து நானூற்றொருபதின்மேற் செல்லா நின்ற காலத்திலே வியாக்கியைச் செய்ததெனவறிக' என்று கூறப் பட்டுள்ளது. இரண்டு உரைகளுக்கும் இடைப்பட்ட காலம் 188 ஆண்டுகள். இச் சிவப்பிரகாசரே சிவப்பிரகாசத்திற்கும் உரைகண்ட னர்.]

வெண்பா

கண்ணுதலுங் கண்டக் கறையுங் கரந்தருளி
மண்ணிடையின் மாக்கண் மலமகற்றும்—வெண்ணெய்நல்லூர்
மெய்கண்டான் என்றொருகான் மேவுவரால் வேறின்மை
கைகண்டார் உள்ளத்திற் கண். க

என்று பாடமோதிக்கோள்க. மேலிதற்கு வியாக்கி.

கண்ணுதலுங் கண்டக் கறையுங் கரந்தருளி - பூரணகத்தாவாக இருக்கப்பட்ட ஸ்ரீகண்ட பரமேசுவரன் ஆசாரிய விக்கிரகமாகத் திருமேனிகொண் டெழுந்தருளும் அவதாரத்து நெற்றியிற் றிருநயன மூர் திருமிடற்றிற் றரித்தருளின நஞ்சமாகிய கறுப்பினையும் மறைவு செய்தருளி,

மண்ணிடையின் மாக்கள் மலமகற்றும் - பூமியின்கண்ணே வியாபரிக்கப்பட்ட ஆன்மாக்களுக்குண்டாகிய பாசத்தைத் தீக்ஷைக் கிரமங்களினலே போக்குகிற,

வெண்ணெய்நல்லூர் மெய்கண்டான் - திருவெண்ணெய் நல்லூரென்கிற திருப்படைவீட்டிலே திருவவதாரஞ் செய்து, மெய்கண்டதேவனென்கிற திருநாமத்தினையுந் தரித்தருளினவனுமிருக்கும்,

என்றொருகால் மேவுவரால்-என்று ஒருகாற்சென்று பொருந்தி நினைத்தவர்கள்,

வேறின்மை கைகண்டார் உள்ளத்திற்கண் - உயிர்க்குயிராய்நின்றறிவிக்கிற சிவனைத் தங்களிடத்திலே புலப்படக் கண்டவர்கள்.

எனவே, சிவனென்று மாசாரியரென்றும் வேறுயிரா திரண்டுமொருமுதலென்பது கண்டுகொள்க. அப்படியானல் அந்தச் சிவன் இப்படி மானிடவேஷமாக வரவேண்டுவானேனென்னில், அஃதாவது விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலரென்னப்பட்ட மூவகை யான்மாக்களையுஞ் சிவன் இரட்சிக்குமிடத்து யாதாமொரு பட்சிகளை மிருகங்களைப் பிடிக்கவேண்டினவர்க ளததற்கேற்ற பார்வைகளைக் காட்டிப் பிடித்தாற்போல, "எவ்வுலகத்து மூர்த்தி யேதுகொண் டிவணியங்கு, மவ்வுலகத்து மேனி யதுகொண்டிங் கமருமீசன்" என்னும் விதியைப் பற்றி யான்மாக்க ளெடுக்கப்பட்ட வுருவத்துக்குத் தக்க திருமேனி கொண்டருளி இரட்சிக்கை கடனுகையினல் சகலராயுள்ள மானிடரையிரட்சிக்குமிடத்து அவர்களைப்போலே மானிடச் சட்டை சாத்தி ஆசாரிய விக்கிரகமாக வெழுந்தருளினதெனவறிக. என்றிங்ஙனம் பொருள் கூறியதற்குப் பிரமாணமாவது போற்றிப் பஃறொடை வெண்பாவில்,

"நன்னெறிவிஞ் ஞானகலர் நாடுமல மொன்றினையு
மந்நிலையே யுண்ணின் றறுத்தருளிப்—பின்னன்பு
மேவா விளங்கும் பிரளயா கலருக்கு (மெய்காண)த்
தேவாய் மலகன்மந் தீர்த்தருளிப்—பூவலயந்
தன்னின்று நீங்காச் சகலர்க் கவர்போல
முன்னின்று மும்மலந்தீர்த் தாட்கொள்கை—யன்னவனுக்
காதிகுண மாதலினு லாடுந் திருத்தொழிலுஞ்
சோதி மணிமிடற்றுச் சுந்தரமும்—பாதியாம்

பச்சை யிடமும் பவளத் திருச்சடைமேல்
வைச்ச நதியு மதிக்கொழுந்து—மச்சமுற
வாடு மரவு மழகார் திருநுதன்மேல்
நீடுருவ வன்னி நெடுங்கண்ணுங்—கேடிலயங்
கூட்டுந் தமருகமுங் கோல வெரியகலும்
பூட்டரவக் கச்சும் புலியதளும்—வீட்டின்ப
வெள்ளத் தழுத்தி விடுந்தா ளினுமடியார்
உள்ளத்தி னும்பிரியா வொண்சிலம்புங்—கள்ளவினை
வென்று பிறப்பறுக்கச் சாத்தியவீ ரக்கழலு
மொன்றுமுருத் தோன்றாமல் உள்ளடக்கி—யென்று
மிறவாத வின்பத் தெமையிருத்த வேண்டிப்
பிறவா முதல்வன் பிறந்து—நறவாருந்
தாருலா வும்புயத்துச் சம்பந்த நாதனென்று
பேரிலா நாதனொரு பேர்புனைந்து—பாரோர்த
முண்டி யுறக்கம் பயமின்ப மொத்தொழுகிக்
கொண்டு மகிழ்ந்த குணம்போற்றி" [119 - 142]

**என்றும்,** திருவாசகத்தில்,

"அருபரத் தொருவ னவனியில் வந்து
குருபரனாகி யருளிய பெருமையைச்
சிறுமையென் றிகழாதே" [போற்றித்திருவகவல், 75-77]

**என்றும்,** சிவப்பிரகாசத்தில்,

"உணர்வாய் நின்ற ஞானக்
கூத்தனொரு மூர்த்திகொடு குறுகி" [ii, 31]

**என்றும்,**

"இறையரு ளுருவாய் வந்து கூட்டிடும்" [vi, 1]

**என்றும்** வரும் ஏதுக்களைக் கண்டுகொள்க. இந்த உதாரணங்கள் காட்டியது இந்நூலாசிரியனை முன்னிலைக் கர்த்தாவாக நாட்டிவருகையால் ஆசாரியனுக்குங் கர்த்தாவுக்கும் வேற்றுமை யில்லையென்னுங் **கருத்தைப்பற்றி** யெனவறிக.

இது கடவுள் வணக்கமாகிய குரு துதி. க

இங்ஙனம் ஆசாரிய மூர்த்தியாகி வந்திரட்சிக்கிற தேவரீர் உயிர்க்குயிராய்நின் றறிவிக்கு மிடத்தும் அடியேனுக் கறியாமை யுண்டாவானேனென்னும் வினாவும் அதற்கு விடையும் மேலருளிச் செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

## அகவல்

கண்ணகன் ஞாலத்துக் கதிரவன் றானென
வெண்ணெய்த் தோன்றிய மெய்கண்ட தேவ
காரா கிருகக் கலியாழ் வேலைநின்
பேரா வின்பத் திருத்திய பெரும
வினவ லானா துடையே னெனதுள
நீங்கா நிலைமை யூங்கு முழையால்
அறிவின் மைமலம் பிறிவின் மையெனி
ஞொராவினை யுணர்த்தும் விராய்நின் றனையேற்
றிப்பிய மந்தோ பொய்ப்பகை யாகாய்
சுத்த னமலன் சோதி நாயகன்
முத்தன் பரம்பர னெனும்பெயர் முடியா
வேறுநின் றுணர்த்தின் வியாபக மின்றாய்ப்
பேறு மின்றா மெமக்கெம் பெரும
இருநிலந் தீநீ ரியமானன் காலெனும்
பெருநிலைத் தாண்டவம் பெருமாற் கிலாதலின்
வேறா வுடனா விளம்பல் வேண்டுஞ்
சீறி யருளல் சிறுமை யுடைத்தால்
அறியாது கூறினை யபக்குவ பக்குவக்
குறிபார்த் தருளினங் குருமுத லாயெனின்
அபக்குவ மருளினு மறியேன் மிகத்தகும்
பக்குவம் வேண்டிற் பயனிலை நின்னாற்
பக்குவ மதனாற் பயனீ வரினே
நின்னைப் பருவ நிகழ்த்தா தன்றே
தன்னைப் பாரிலி யென்பதுந் தகுமே
மும்மலஞ் சடமணு மூப்பிள மையினீ
நின்மலன் பருவ நிகழ்த்திய தார்க்கோ
வுணர்வெழு நீக்கத்தை யோதிய தெனினே

இணையிலி யாயினை யென்பதை யறியேன்
யானே நீக்கினுந் தானே நீங்கினுங்
கோனே வேண்டா கூறல் வேண்டுங்
காண்பா ரார்கொல் காட்டாக் காலெனு
மாண்புரை யுணர்ந்திலே மன்ற பாண்டியன்
கேட்பக் கிளக்கு மெய்ஞ்ஞா னத்தி
னுட்பா லவர்க்கரு ளென்பதை யறியே. உ

**மேல் வியாக்கி.**

*கண்ணகன் ஞாலத்துக் கதிரவன் றனென வெண்ணெய்த்தோன்றிய மெய்கண்ட தேவ* - இடவிதாகக்கொண்டகன்ற பூமியினிடத்துண்டாகிய இருளைக் கடிவது பொருட்டாக ஆகாசமார்க்கத்திலே தோன்றின ஆதித்தனைப்போல ஆன்மாக்களுக்குண்டாகிய அஞ்ஞானமாகிய இருளைக் கடிவது பொருட்டாகத் திருவெண்ணெய்நல்லூராகிய திருப்படைவீட்டிலே திருவவதாரஞ் செய்தருளின மெய்கண்ட நாதனே,

*காராகிருகக் கலி யாழ்வேனை நின் பேராவின்பத் திருத்திய பெரும* - அஞ்ஞானமாகிய சிறைச்சாலையிலே மிடிப்பட்டுக் கிடந்தழுந்துகிற அடியேனை நின்னுடைய அசைவற்ற பேரின்ப பரிபூரணத்திலே யிருத்தின தம்பிரானே,

*வினவலானுதுடையேன்* - அடியேனுக்கு ஒரு வினுத் தேவரீர் சந்நிதியிலே விண்ணப்பஞ் செய்யவேணுமென்று அனவரதமுண்டாயிருந்தது; அது ஏதென்று கேட்டருளுகில்,

*எனதுளநீங்கா நிலைமை யூங்குமுளையால்* - அடியேனுள்ளத்தை விட்டுநீங்காமல் நிற்கிற முறைமை அநாதியே தொடங்கி மிகவு முண்டாயிருக்குமிடத்தும்,

*அறிவின்மை* - அடியேனுக்கறியாமை வருவானேனென்று கேட்கில்,

*மலம் பிறிவின்மையெனின்*-அஃது ஆன்மாவினேடும் அநாதியே கூடி வரப்பட்ட ஆணவமலம் உன்னைவிட்டு நீங்காதபடியினாலே காண் உனக்கு அறியாமை யுண்டானது என்று தேவரீரருளிச்செய்யில்.— அதற்குதாரணம் சித்தியாரில் "அறிவில னமூர்த்த னித்த னராகாதி குணங்க ளோடு" [iv, 38] மென்கிற பாடங் கண்டுகொள்க.

ஒராலினையுணர்த்தும் - அடியேனை விட்டுத் தேவரீர் நீக்கமாக நின்றருளுமென்கின்றதை யுண்டாக்கும்,

விராய் நின்றனையேல் - அப்படி நம்மை நீக்கமாகச்சொல்லாது நாமும் உன்னோடு கூடியே நிற்போமென் றருளிச்செய்யில்.—அதற்கு உதாரணம் சிவஞானபோதத்தில் "மெய்ஞ்ஞானந் தன்னில் விளையா தசத்" [vii, 1] தென்ற பாடத்தில், 'தண்கடனீ ருப்புப் போற் றானே யுளவுளவாய்த் தா' னென்பது கண்டுகொள்க.

திப்பியமந்தோ - அப்படித் தேவரீரருளிச்செய்தது தெய்வீக மானதோர் ஆச்சரியமாகவிருந்தது. அதுவென்னென்று கேட்டருளு கில்,

பொய்ப்பகை யாகாய் - அப்படி அஞ்ஞானத்தோடும் கூடியிருக் கப்பட்ட அடியேனோடுந் தேவரீருங் கூடியிருக்குமாகில் பொய் யென்று சொல்லப்பட்டு வருகிற அஞ்ஞானத்தைச் சோதிக்கிறவ னென்று தேவரீரைச் சொல்லவேண்டியதில்லையாம். அன்றியும்,

சுத்தனமலன் சோதிநாயகன் முத்தன் பரம்பரனெனும் பெயர் முடியா - சுத்தனுயிருக்கிறவனென்றும் நின்மலனென்றும் பேரொளி யாயிருக்கப்பட்ட கத்தாவென்றுஞ் சர்வ வுபாதிகளையுங் கழன்று அப்பாற்பட்டவனென்றும் வத்துவென்று சொல்லப்பட்டதற்கெல்லா மப்பாற்பட்ட வத்துவென்றும் இங்ஙனஞ் சொல்லப்பட்ட திருநாமங் களுந்தேவரீருக்குண்டாகாது.—அதுவெப்படி யென்னில்,மலரகிதன் மலசம்பந்தியா யிருக்கிறவனோடுகூடி நில்லானென்று சீஷன் வினவ அப்படியல்ல,

வேறுநின் றுணர்த்தின் - அப்படியுன்னோடேகூடி நிற்பதில்லை உன்னறிவுக்கறிவாக நாம் வேறே நின்றே யுன்னையறிவித்து நிற்போ மென்றருளிச்செய்யில்.—உதாரணம் சிவஞானபோதத்தில் " மன்னு சிவன் சன்னிதியின் மற்றுலகஞ் சேட்டித்த, தென்னு மறையி னியல்மறந்தாய் - சொன்னசிவன், கண்ணு யுளம்விளையாற் கண் டறிந்து நிற்குங்கா, ணெண்ணுன் சிவனசத்தை யின்று " [v, 2] என்பது கண்டுகொள்க.

வியாபகமின்றாய்ப் பேறுமின்று மெமக் கெம்பெரும - என்னு டைய பெருமானே அப்பொழுது தேவரீருக்குச் சர்வவியாபியென்கி

றது மில்லையாய் அடியேனுக்குச் சாயுச்சியமென்கிற பேறுமில்லையாம். அன்றியும்,

இருநிலந் தீநீரியமானன் காலெனும் பெருநிலைத் தாண்டவம் பெருமாற் கிலாதலின் - "இருநிலனாய்த் தீயாகி நீரு மாகி இயமானனாயெறியுங் காற்று மாகி, யருநிலைய திங்களாய் நாயி றாகி யாகாய மாயட்ட மூர்த்தி யாகி" [அப்பர், நின்ற திருத்தாண்டகம், 1] என்ற தேவாரத்தின்படி பூரணநிலையாகிய திருக்கூத்துந் தேவரீர்க் கில்லையாம். ஆகையால்,

வேறாவுடனே விளம்பல் வேண்டும் - தேவரீர் அடியேனை யறிவிக்குமிடத்து வேறாகநின் றறிவிக்குமோ உடனே திருவுளம்பற்ற வேணும்,

சீறியருளல் - அப்படி யடியேன் கேட்ட வினாவுக்கு ஆசாரியருற்று விடையமருளிச்செய்யாமற் றிருவுளக்கேடாக வேண்டுவதில்லை. அதுவேனென்று கேட்டருளுகில்,

சிறுமையுடைத்தால் - அடியேன் தற்போதனாகையினாலே தோன்றினதை விசாரியாமல் விண்ணப்பஞ்செய்தேன் அதற்குத்தரமருளிச்செய்து தெளிவிக்கையே வேண்டுவது.—சிறுமையுடைத்தாமென்பதற்கு ஆசாரியர்மேல் வைத்துப் பொருளுரைப்பாருமுளர். அது குருசிஷக் கிரமத்துக்குப் போதாதாகையால் அதுபொருளாகாதெனவறிக. இதல்லாமலுஞ் சிஷன் கேட்ட வினாவுக்கு ஆசாரிய ருத்தாஞ் சொல்லி வரையிலேயுஞ் சிஷனைக் கோபித்துக்கொண்டபடியினாலேயுஞ் சிஷன் வினாவறியாமற் கேட்கிறதும் ஆசாரியர் திருவுளம் பற்றினது சத்தியமென்றுங் கண்டுகொள்க. ஆசாரியர் திருவுளம் பற்றினதுக்குச் சாத்திரத்திலே யுதாரணமெழுதினதினாலு மாசாரியர் வாக்கியமே சத்தியமெனக் கண்டுகொள்க. மேற்பாடம்.

அறியாது கூறினை - அப்படி நீ கேட்ட வினாவுக்கு உத்தாஞ் சொல்லாமற் கோபித்துக்கொண்டோமென்று நீ அறியாமற்சொன்னாய் அப்படியானால் திருவுள்ளக்கேடாவானேனென்று நீ கேட்கில்,

அபக்குவ பக்குவக் குறிபார்த்தருளினங் குரு முதலாய் என்பதை குருமுதலாய் பக்குவாபக்குவக் குறிபார்த்தருளினமென்று பொருளுக்கேற்க மாறுக.பொருளாவது நாம் ஆசாரியமூர்த்த மாகையினாலே யபக்குவனைக் கண்டாற் கோபிக்கிறதும், பக்குவனைக் கண்டாற் பிரியப்படுகிறது மாசாரியனுக்கு முறைமையாகையாலே நாம்

சொன்ன அர்த்தங்களை மாறுபாடாகக் கொள்ளுகையினாலே நாங் கோபித்துக்கொண்டதா யிருக்கும்,

எனில் - அப்படி யருளிச்செய்யில்,

அபக்குவ மருளினுமறியேன் - அடியேன் அபக்குவனாற் றேவரீ ரருளிச்செய்கிற அர்த்தங்களை யறியப்போகிறதில்லை. அது வன்றியும்,

மிதத்தகும் பக்குவம் வேண்டில்-மிகுத்த சத்திநிபாதத்துக்குரிய பக்குவனாயிருக்க வேணுமென் றருளிச்செய்யில்,

பயனில்லை நின்னால் - பக்குவனுக்கொருவர் சாதாரணமாக அறி விக்க வேண்டா அதுகொண்டே தேவரீராலொரு பிரயோசனமும் இல்லையாம் அல்லது,

பக்குவ மதனாற் பயனீவரினே - ஆன்மாக்கள் பக்குவத்துக்குத் தக்க பயனாகத் தேவரீரெழுந்தருளுமாகில்.—உதாரணம் சிவப்பிர காசத்தில் "நாடிய சத்தினிபாதம் நாலு பாதம் நண்ணும்வகை யெண் ணரிய ஞான பாதங் கூடுமவர் தமக்குணர்வாய் நின்ற ஞானக் கூத்த னொரு மூர்த்திகொடு குறுகி மோக, நீடியகே வலசகல நிகழாவாறு நிறுத்திமல மறுக்குமிது நிலையார் சுத்தங், கேடில்புகழ் தருஞ்சரியை கிரியா யோகக் கேண்மையரே லிவையுணர்த்தக் கிளக்கு நூலே" [ii, 31] என்பது கண்டுகொள்க.

நின்னைப்பருவ நிகழ்த்தாது - அந்தப் பக்குவமென்று சொல்லப் பட்டது சடமானபடியாலே அது தேவரீரை அடியேனுக் குண்டாக் காது,

அன்றே - அதல்ல, அந்தப்பக்குவமே யுண்டாக்குமென்கிலோ,

தன்னொப்பாரிலி யென்பதுந்தகுமே - தேவரீர் ஒத்தாரும் மிக் காரு மில்லாதவரொன்று சிவாகமங்கள் சொல்லுகிறதும் வழக்கல்ல வாம். அதுவன்றியும்,

மும்மலஞ் சடமணு மூப்பிளமையின்றி நின்மலன் - ஆணவ மாயை காமியமெனப்பட்ட மூன்று மலங்களுஞ் சடமாயிருப்ப தொன்று ஆன்மாவோவென்றால் அச்சுமாறி யெடுக்கையினால் மூப் பிளமை யில்லாதவன் தேவரீரோ வென்றாற் றேகசம்பந்தமுமில்லா மல் அமலனாயிருக்கையினாலே வயதுசொல்ல வொண்ணாது,

பருவம் நிகழ்த்திய தார்க்கோ - ஆகையிஞற் பக்குவமென் றரு ளிச்செய்வது ஆர்க்காவது,

உணர்வெழு நீக்கத்தை யோதியது - உனக்கொரு அறிவுண்டா மிடத்து அந்தமலங்கள் நீங்குகிற அவதரத்தையாயிருக்கும் நாம் பக்குவ மென்று சொன்னது.—உதாரணம் சிவப்பிரகாசத்தில் "எண்ணரிதா" யென்ற பாடத்தில், "மலபாகம் பொருந்தியக்கா லருளா, லுண்ணிலவு மொளியதனு லிருளகற்றிப் பாத, முற்றிடு" [ii, 1] மென்றது கண்டு கொள்க.

எனினே - என்று தேவரீரருளிச்செய்யில்,

இணையிலி யாயினை யென்பதை யறியேன் - தேவரீர் ஒத்தாரு மிக்காரு மில்லாதவரென்கிறதை யடியேனின்றே விட்டேன். அதே னென்று கேட்டருளுகில்,

யானே நீக்கினுந் தானே நீங்கினுங் கோனே வேண்டா - அந்த மலங்களை யடியேன் தானே நீக்கிக்கொள்ளுவே னவை தானுகப் போவது தேவரீர் வேண்டுவதில்லையாம், ஆகையாலே

கூறல் வேண்டும் - திருவுளம்பற்றவேணும்,

காண்பார் ஆர்கொல் காட்டாக் காலெனு மாண்புரை யுணர்ந்திலை- "காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக்கா" [அப்பர், தனித்திருத்தாண் டகம்,3] லென்னும் அழகிய தேவாரத்தின் சொற்களை யறிந்தாயில்லை,.

மன்ற - அறுதிப்பட,

பாண்டியன் கேட்பக் கிளத்து மெய்ஞ்ஞானத்தின் - பாண்டிய ராசாவானவன் கேட்கத்தக்கதாகச் சம்பந்தப்பெருமா ளுயனூருளிச் செய்த உண்மை ஞானமாகிய திருவாக்கிலுள்ள தேவாரத்திலே,

ஆட்பாலவர்க் கருளென்பதை யறியே - "ஆட்பாலவர்க் கருளும் வண்ணமு மாதிமாண்புங், கேட்பான்புகி லளவில்லை கிளக்க வேண்டா" [திருப்பாசுரம், 4] வென்ற திருவாக்கின் முறைமைபோல அடியாராயுள்ளவர்கள் ஆசாரியர் திருவுளம்பற்றினதைச் சத்தியமாகக் கொள்ளுவதல்லாமல் விகற்பித்துக்கேட்க வழக்கில்லை. உ

இங்ஙனம் பதியிலக்கணங்கேட்ட மாணவகன், பசுவிலக்கணங் கேட்கும் வினு மேலருளிச் செய்கின்றது.

அறிவறி யாமை யிரண்டு மடியேன்
செறிதலான் மெய்கண்ட தேவே—யறிவோ

*வறியேனே யாதென்று கூறுகே னாய்ந்து*
*குறிமாறு கொள்ளாமற் கூறு.* ரு

**மேல் வியாக்கி.**

*அறிவறியாமை யிரண்டு மடியேன் செறிதலான் - அடியேன் ஒரு அவதாரத்திலே யறிந்தும் ஒரு அவதாரத்திலே அறியாமலுமாக இந்த இரண்டு பகுதியும் அடியேன் கூடிவருகையினாலே,*

*மெய்கண்டதேவே - மெய்கண்டதேவனே,*

*அறிவோ வறியேனோ யாதென்று கூறுகேன் - அடியேனை அறிவென்று சொல்லப்பட்டிருக்குமோ அறியாதவனென்று சொல்லப்பட்டிருக்குமோ இவையிரண்டினும் ஏதென்று விண்ணப்பஞ் செய்வேன்,*

*ஆய்ந்து - இவையிரண்டு பகுதியையுந் திருவுளத்திலே யாராய்ந்து பார்த்தருளி,*

*குறிமாறு கொள்ளாமற் கூறு - தேவரீரருளிச்செய்த அத்தத்தின் குறிப்புக்கு அடியேன் மறுத்து விண்ணப்பஞ் செய்யாம லருளிச்செய்தருள்.*

*அதற்கு விடையம் ஆன்மா அறிவித்தாலறிகிறவனென்றவாறு. உதாரணம் சித்தியாரில் "அறிவிக்கப் படுஞ்சித்து மிவ" [xi, 11] னென்றும், சிவஞானபோதத்தில் "அறிவிக்கவன்றி வறியா வுளங்க" [viii, 4] ளென்றும், திருவாசகத்தில் "அறிவி லாமை யன்றே கண்டதாண்டநா" [திருச்சதகம், 50] னென்றும். கத்தா அறிவுடையவன் பாசம் அறிவித்தாலுமறியாது ஆத்மா அறிவித்தாலறிகிறவ னென்பது கண்டுகொள்க.* ரு

*இங்ஙனம் பசுவிலக்கணங் கேட்ட மாணவகன் பாசவிலக்கணங் கேட்கும் வினா மேலருளிச் செய்கின்றது.*

*கூறிய மூன்று மலத்தின் குணக்குறி*
*வேறு கிளக்கின் விகற்பங் கற்பங்*
*குரோத மோகங் கொலையஞர் மதநகை*
*விராயெண் குணனுமா ணவமெனை விளம்பினை*
*யஞ்ஞா னம்பொய் யயர்வே மோகம்*
*பைசா சூநிய மாச்சரி யம்பய*
*மாயவேழ் குணனு மாயைக் கருளினை*

யிருத்தலுங் கிடத்தலு மிருவினை யியற்றலும்
விடுத்தலும் பரங்கைத மேவலென் றெடுத்த
அறுவகைக் குணமுங் கருமத் தருளினை
யாங்கவை தானு நீங்காது நின்று
தன்வழிச் செலுத்தித் தானே தானு
மென்வழி யென்பதொன் றின்று மன்ன
வூரும் பேரு முருவுங் கொண்டெ
னூரும் பேரு முருவுங் கெடுத்த
பெண்ணை சூழ்ந்த வெண்ணெயம் பதியிற்
சைவ சிகாமணி மெய்யர் மெய்ய
மும்மலஞ் சடமென மொழிந்தனை யம்ம
மாறுகோள் கூறல் போலுந் தேறுஞ்
சடஞ்செய லதனைச் சார்ந்திடு மெனினே
கடம்பட மதனுட் கண்டிலம் விடம்படு
மூன்றிரள் போன்ற தாயிற் றோன்றி
யணைந்தாங் ககறல் வேண்டுங் குணங்களும்
பன்மையின் றுகு மெம்மைவந் தணைதரத்
தானோ மாட்டா தியானோ செய்கில
னீயோ செய்யாய் நின்மல னுயிட்
டியல்பெனிற் போகா தென்று மயல்கெடப்
பந்தம் வந்த வாறிங்
கந்த மாதி யில்லா யருளே. ௬

## மேல் வியாக்கி.

கூறியமூன்று மலத்தின் குணக்குறி வேறுகிளக்கின் - அடியே னுக்கு முன்னே உபதேசக் கிரமமாகப் பதி பசு பாசமாகிய திரி பதார்த்தங்களையுந் தேவரீரருளிச்செய்கிற அவதாரத்து ஆணவ மாயை காமிய மென்னப்பட்ட மூன்று மலங்களினுடைய குணங்களையுங் குறிகளையும் வெவ்வேறாகச் சொல்லுமிடத்து,

விகற்பங் கற்பங் குரோதமோகங் கொலையஞர் மதநகை விரா யெண்குணனு மாணவமென விளம்பினை - ஆன்ம போதமானது

யாதாமொன்றுக்குத் தன்னை விகற்பித்துத் தானொழிய மற்றொரு வனு மொவ்வாதவனென்று நிற்கிறதும், யாதாமொன்றுகளைச் சங்கற் பித்துக்கொண்டு நிற்கிறதும், யாதொன்றுக்குக் கோபம்பண்ணிக் கொண்டு நிற்கிறதும், யாதாமொன்றிலே யாசைப்படுகிறதும், யாதா மோருயிர்களைச் சேதனம் பண்ணுகிறதும், யாதாமொரு துன்பங் கள் தன்னிடத்திலே வந்துற்றால் விதனப்படுகிறதும், யாதா மொன்றுகளைச் சொல்லுமிடத்துஞ் செய்யுமிடத்தும் அகங்காரமாய் நிற்கிறதும், யாதாமொன்றுக்குஞ் சிரித்துக்கொண்டு திரிகிறதும் ஆக இங்ஙனங் கூறப்பட்ட குணங்களெட்டும் ஆணவமலத்துடைய தென்று அருளிச்செய்தருளினாய். அன்றியும்,

அஞ்ஞானம் பொய்யயர்வே மோகம் பைசா சூனிய மாச்சரி யம் பயமாவேழ் குணனு மாயைக்கருளினை - பொல்லாங்குகளைச் செய்கிறதும், பொய் சொல்லுகிறதும், மயங்கிக்கொண்டு வருத்தப்படு கிறதும், மூர்ச்சித்துக் கிடக்கிறதும், பிறர்க் கழுக்காறுசெய்து கேடு நினைக்கிறதும், பிறரோடு வயிரிஷ்யம் பாராட்டுகிறதும், உயிர்க்கிறுதி வருமென்று அச்சப்பட்டுத் திரிகையும் ஆக விங்ஙனஞ் சொல்லப் பட்ட குணங்களேழும் மாயைக்குள்ள குணங்களென்று அருளிச் செய்தருளினாய். அன்றியும்,

இருத்தலுங் கிடத்தலு மிருவினை யியற்றலும் விடுத்தலும் பா மிந்தை மேவலென் றெடுத்த வறுவகைக் குணனுங் கருமத்தருளினை - ஒவ்வொரு தலங்களைப்பற்றி யிருக்கிறதும், சரீர வருத்தங்களாய்க் கிடக்கிறதும், புண்ணியங்களைச் செய்கிறதும், பாவங்களைச் செய்கிற தும், ஒவ்வொரு பற்றுக்களாய் நின்ற தொந்தனைகள் விட்டுப் போகிறதும், சர்வரையு நிந்தித்து நடக்கிறதே தொழிலாகப் பொருந்தியிருக்கிறதும் என்றிங்ஙனஞ் சேர்ந்திருக்கப்பட்ட அறு வகைக் குணங்களையுங் கன்மமலத்துக்குள்ளதென்று அருளிச்செய் தருளினாய்,

ஆங்கவைதானு நீங்காது நின்று தன்வழிச் செலுத்தி - அவ் விடத்து முன்னே சொல்லப்பட்ட காரண மலங்களினின்றும் விரியப் பட்ட காரியமாகிய இருபத்தொரு வகையும் அடியேனைவிட்டு நீங் காம லனவரதமும் தமக்குண்டான தொழில்களின் முறைமையிலே யடியேனையுந் தொழிற்படுத்தி,

தானே தாளுய் - அடியேனென்ருெரு முதலில்லை யெனும் படி மறைத்துத் தாமொழிய வேறொன்றுமில்லை யென்னும்படி மேலிட்டு நின்றுகொண்டு,

என்வழி யென்பதொன்றின்ரு மன்ன - தம்பிரானே அடியே னிச்சைவழி யென்கிறது ஒரு சற்றும் வருகிறதில்லையாம்,

ஊரும் பேரு முருவுங் கொண்டென் னூரும் பேரு முருவுங் கெடுத்த - அடியேனுக்குண்டா யிருக்கப்பட்ட கன்மங்களை நீக்குகை பொருட்டாக ஊரும்பேரு முருவுமில்லாத தேவரீர் ஊரும்பேரு முருவுங் கொண்டு அடியேனுக்குண்டா யிருக்கப்பட்ட வூரினையும் பேரினையு முருவினையுங் கெடுத்த.—என்னவே, மேலொரு செனன மெடாத வண்ணங் கெடுத்துப் போட்டவ னென்பது கருத்து.

பெண்ணை சூழ்ந்த வெண்ணெயம் பதியிற் சைவசிகாமணி- பெண்ணையாற்றுநீர் சூழப்பட்ட திருவெண்ணெய்நல்லூரி லெழுந் தருளி யிருப்பதாய்ச் சைவசமயத்துக்கோ ரபிஷேகரத்தினமாயுள்ள வனே,

மெய்யர்மெய்ய - பிரபஞ்சமாகிய பொய்யைக் கடியப்பட்ட சத் திய வான்களுக்கு உண்மையாக வுள்ளவனே,

மும்மலஞ் சடமென மொழிந்தனை - அடியேனுக்கு முன்னே உபதேசக்கிரமமாக அருளிச்செய்கிற அவதாரத்திலே ஆணவமாயை காமியமென்னப்பட்ட மூன்று மலங்களையுஞ் சடமாகிய அசேதன மென் றருளிச்செய்தனை,

அம்ம - அடியேன் விண்ணப்பஞ் செய்கிறதை யழகிதாகக் கேட்பாயாக,

மாறுகோள் கூறல்போலும் - அடியேனுக்கு முன்னே அருளிச் செய்த அவதாரத்திலே சித்தாகிய மலங்களைச் சடமென்று மாறு பாடாக அருளிச் செய்ததாயிருக்கும், அப்படியல்லக்காண்,

தேறுஞ்சடம் - அறுதியாக வந்த மலங்கள் சடமே தப்பாது.—உதாரணம் உண்மைநெறி விளக்கத்தில் "மலஞ்சட மென்றல் காட்சி" யென்றும், சிவப்பிரகாசத்தில் "மாயைதா னசித்துருவாய் மருவ மாட்டா" [ii, 5] தென்றும், சித்தியாரில் "உலகத்துச்கோர், வித்துமா யசித்தா" [ii, 53] யென்றுங் கண்டுகொள்க. என்று தேவரீ ரருளிச் செய்யில் அவை சேட்டைப் படுவானேனென்று நீ கேட்கில்,

*செயலதனைச் சார்ந்திடும் - நீ யறிவாயுள்ளவனுகையாலே உன்ஞேடுங் கூடுகையால் அந்த மலங்களுஞ் சேட்டைப்பட்டதாயிருக்கும்.—உதாரணம் சிவப்பிரகாசத்தில் "அன்னியமா னவையுணர்த்தி அநனியமாய் நிறைந்த வறிவறியா மையினுலு மருணிலவுங் காலந், தன்னிலவ னேயாவு மாய்நின்ற தொன்மை தாமுணர்த லானுமுயிர் தானெனவொன் றிலதாய், மன்னியிடு மலம்" [ii, 18] என்பதுங் கண்டுகொள்க.*

*எனினே - என்று தேவரீ ரருளிச்செய்யில்,*

*கடம்பட மதனுட் கண்டிலம் - கடபடாதியாயுள்ள சால் குடம் புடைவை சீலை அடியேஞேடுங் கூடின அவதாரத்து அப்படிச் சேட்டைப்படக் கண்டேனில்லை யென்று நீ கேட்கில்,*

*விடம்படு மூன்றிரள் போன்றது - அந்த மலங்கள் இந்தக் கடபடாதிகள்போல அல்ல விடத்தையுடைய வச்சநாபி முதலாயுள்ள நஞ்சுகள் சடமாயிருந்தாலும் அறிவாயுள்ள ஆன்மாக்கள் புசித்த அவதாரத்து அந்த அறிவை யழித்துத் தம்குண மேலிட்டு மயக்கிஞற்போல அந்த மலங்களுஞ் சடமாயிருந்தாலும் அறிவாயுள்ள உன்ஞேடே சம்பந்தமான அவதாரத்து அவையு மப்படியே மேலிட்டு மயக்கும்,*

*ஆயில் - அப்படியானல்,*

*தோன்றி யணைந்தாங் ககறல்வேண்டும் - அந்த நஞ்சானது புசித்தவர்களை மேலிட்டு மறைத்து நின்று மீளவும் விட்டுப் போஞற்போல இந்த மலங்களும் அப்படிச் செய்யவேணும் அப்படிக் கண்டோமில்லையே, அன்றியும்,*

*குணங்களும் பன்மையின்ருகும் - இந்த மலங்களுக் குவமையாகச் சொல்லப்பட்ட நஞ்சுகளுக்கு இந்த மலங்களைப்போலப் பல குணங்களுஞ் செய்யக் கண்டதுமில்லை. ஆகையாலது திருட்டாந்த விரோதமென்று கொள்க, அதுவன்றியும் அந்த மலங்கள்தான்,*

*எம்மை வந்தணைதரத்தாஞே மாட்டாது - அவை சடமேயாஞல் அடியேனை வந்து பொருந்துகைக்குத் தாஞகமாட்டாது,*

*யாஞே செய்கிலன் - அடியேனுக்குக் குற்றமாயுள்ளது வேணுமென்று அடியேன் ருனே யுண்டாக்கிக்கொள்ளுவதுமில்லை,*

நீயோ செய்யாய் நின்மலனாயிட்டு - தேவரீர் அமலனா யிருக் கையினாலே அஞ்ஞானமாகிய மலங்களை அடியேனுக் குண்டாக்கப் போகிறதுமில்லை, இவை மூன்றுவகையு மின்றி,

இயல்பெனில் - அந்த மலங்கள் ஆன்மாவுள்ளவன்றே சுபாவ மாக வுள்ளதென் றருளிச்செய்யில்,

போகாதென்றும் - பாலில் வெளுப்பும் கரியிற் கறுப்பும்போல இயல்பாயுள்ள சுபாவத்தினுக்கு ஒருகாலத்தினும் அழிவில்லையாம்,

மயல்கெட - அடியேனுக்கு அந்தச் சந்தேகந் தீரத்தக்கதாக,

பந்தம் வந்தவாறிங் கந்தமாதி யில்லா யருளே - முடிவும் முதலு மில்லாத தம்பிரானே இந்தப் பாசபந்தங்கள் அடியேனோடு வந்து பொருந்தின முறைமை எப்படியென் றருளிச்செய்யவேணும்.

அதற்கு விடையம் நெல்லுக்கு உமிபோலவுஞ் செம்பிற் காளிதம் போலவும் அநாதிசையோகம். அதற்கு உதாரணம் சிவஞானபோதத் தில் "நெல்லுக்குமியு நிகழ்செம்பி னிற்களிம்புஞ், சொல்லிற் புதி தன்று தொன்மையே" [ii, 7] யென்றும், சித்தியாரில் "மும்மல நெல்லினுக்கு மூளையொடு தவிடு மிப்போ" [ii, 86] லென்றும், சிவப் பிரகாசத்தில் "நெல்லின்மூளை தவிடுமிப்போ லநாதியாக, நிறுத்தி டுவ" [ii, 7] ரென்றுஞ் சொன்ன முறை கண்டுகொள்க ௪

இங்ஙனஞ் சொல்லப்பட்ட மலங்கள் அடியேனோடுந் தேவரீருங் கூடி நின்றறிவிக்குமிடத்தும் அடியேனை மயக்குகிற வழி எப்படி யென்னும் வினா மேலருளிச்செய்கின்றது* என்று சொல்லுவா ருளர். அது வினாவல்ல. பதியிலக்கணம் பசுவிலக்கணம் பாசவிலக் கணஞ் சொல்லிப் பாசதரிசனஞ் சொல்லி ஆன்மதரிசனஞ் சொல்லவேண்டுகையாலும் மல தரிசனம் வேறே சொல்லாதபடியி னாலுந் தேவரீரருள்முன்னே பாசம் நில்லாது அடியேனுக்குச் சுதந் தரமாய்க் காண அறிவுமில்லை இந்த மலத்தைக் கண்ட முறைமை எப் படி யென்னும் வினா மேலருளிச்செய்கின்றது.

அருள்முன்பு நில்லா தடியேற்குக் கண்ணின்
றிருள்கண்ட வாறென்கொ லெந்தாய்—மருள்கொண்ட

* இது வரையே சிவப்பிரகாசருரையில் அவதாரிகையாகக் காணப்படுகிறது.

மாலையா வெண்ணெய்வாழ் மன்னவா வென்னுடைய
மாலையா மாற்ற மதி. ௫

**மேல் வியாக்கி.**

அருள்முன்பு நில்லாது - அந்த மலங்கள் அஞ்ஞான மாகையாலே தேவரீர் சந்நிதியிலே நில்லாது,

அடியேற்குக் கண்ணின்று இருள்கண்டவா றென்கொ லெந்தாய் - அடியேனுக்குச் சுதந்தரமாகக் காணுமறிவில்லை தம்பிரானே இருளாகிய மலத்தைக் கண்ட முறைமை யெப்படி,

*மருள் கொண்ட மாலையா-மருளாகிய பண்ணை வண்டுகளிருந்து பாடப்பட்ட மாலையினையுடையானே,

வெண்ணெய்வாழ் மன்னவா - திருவெண்ணெய் நல்லூரிலே யெழுந்தருளியிருக்கப்பட்ட தம்பிரானே,

என்னுடைய மால் - அடியேனுக் குண்டாயிருக்கப்பட்ட இந்த மயக்கத்தை,

ஐயா - அடியேனுக்குச் சுவாமியாயுள்ளவனே,

மாற்ற மதி - போகத்தக்கதாகத் திருவுளத்தடைத்தருள்.

விடையம் மலதரிசனம். பரமசுகத்திலே யழுந்துமிடத்து இது வரையும் மல சம்பந்தத்தினாலேயல்லவோ சுகத்தைப் பெறாதிருந்தோ மென் றனுமானத்தினாலே யறிக. உதாரணம் சிவப்பிரகாசத்தில் "அன்னியமா னவையுணர்த்தி யகன்றியமாய் நிறைந்த வறிவறியா மையினானு மருணிலவுங் காலந், தன்னிலவ னேயாவு மாய்நின்ற தொன்மை தாமுணர்த லானுமுயிர் தானெனவொன் றிலதாய், மன்னியிடுமல" [ii, 18]மென்பது கண்டுகொள்க. ௫

இனி இங்ஙனஞ் சொல்லப்பட்ட ஆன்மாவினியல்பு எப்படி யென்னும் வினா மேலருளிச் செய்கின்றது.

மதிநுதல் பாக னாகிக் கதிதர
வெண்ணெய்த் தோன்றி நண்ணியுள் புகுந்தெ
னுளம்வெளி செய்துன் னளவில் காட்சி
காட்டியெற் காட்டினை யெனினு நாட்டியெ
னுண்மையும் பெருமையு நுவலி னண்ணல்

---

* மருளா - குறிஞ்சியாழ்த்திறம்.

பாதாள சத்தி பரியந்த மாக
வோதி யுணர்ந்த நானே யேக
முழுத்து நின்றனனே முதல்வ முழுத்தும்
புலன்கடைப் பூழை நுழைந்தனன் கலங்கி
யாங்கைந் தவத்தையு மடைந்தன னீங்கிப்
போக்கு வரவு புரிந்தனன் றாக்கி
யெவ்விடத் துண்மையு மிவ்விடத் தார்தலுஞ்
செல்விடத் தெய்தலுந் தெரித்த மூன்றினு
ளொன்றெனக் கருளல் வேண்டு மென்று
மில்ல திலதா யுள்ள துளதெனுஞ்
சொல்லே சொல்லாய்ச் சொல்லுங் காலைச்
சிறுத்தலும் பெருத்தலு மிலவே நிறுத்தி
யானே யெறும்பி னுனது போலெனின்
ஞான மன்றவை காய வாழ்க்கை
மற்றவை யடைந்தன வுளவெனி னற்றன்று
விட்ட குறையி னறிந்து தொன்று
தொட்டுவந் தனவென வேண்டு நட்ட
பெரியதிற் பெருமையுஞ் சிறியதிற் சிறுமையு
முரியது நினக்கே யுண்மை பெரியோய்
எனக்கின் றருகு மென்று
மனக்கினி யாயினி மற்றது மொழியே. சு

**மேல் வியாக்கி.**

மதிநுதல் பாகனுகி - சந்திரனைப்போலத் திருநெற்றியினை யுடைய பரமேசுவரியை ஒருபாகத்திலே தரித்தருளியிருக்கப்பட்ட தேவரீர்,

கதிதர வெண்ணைத் தோன்றி - அடியேனுக்கு மோக்ஷத்தைத் தருவது பொருட்டாகத் திருவெண்ணெய் நல்லூரிலே திருவவதாரஞ் செய்தருளி,

நண்ணியுள் புகுந்து - அடியேனிடத்திலே வந்து பொருந்தி,

என்னுளம் வெளிசெய்து - அடியேனிடத்திலுண்டாகிய அஞ்ஞானத்தையும் நீக்கிச் சிவஞானத்தையும் பிரகாசிப்பித்து,

உன்னளவில் காட்சி காட்டி - ஆன்ம போதத்தால் அளவுபடுத்த வொண்ணாத உன்னுடைய இயல்பினையும் அடியேனுக்குத் தரிசனப் படுத்தி,

எற்காட்டினை - அடியேனுடைய இயல்பினையுந் தரிசனப் படுத்தினாய்,

எனினும் - அப்படித் தரிசனப்படுத்தின யானாலும்,

நாட்டியென் னுண்மையும் பெருமையும் நுவலில் - தேவரீர் அறுதிப்படுத்தி யருளிச்செய்யப்பட்ட அடியேனுடைய மெய்மை யையும் வியாத்தத்தையும் விண்ணப்பஞ் செய்யுமிடத்து,

அண்ணல் பாதாள சத்தி பரியந்தமாக - தம்பிரானே பாதாள சத்தி முடிவாக,

ஓதியுணர்ந்த நானே யேக முழுத்து நின்றனனே - நூல்களைக் கற் றறிந்து அடியேனறிவுசென் றறியப்பட்டவிடமெல்லாம் அடியேன் தானே முழுதும் வியாத்தமாய் நின்றதுண்டே,

முதல்வ - சருவான்மாக்களுக்கும் ஒருமுதலாகி நின்றுணர்த்து கிற கத்தாவே,

முழுத்தும் - அப்படி யோதியுணர்ந்த விடமெங்கும் அடியேன் வியாத்தியா யிருக்குமிடத்தும்,

புலன்கடைப் பூழை நுழைந்தனன் - ஒன்றை யறியுமிடத்துச் சோத்திராதிகளாயுள்ள அற்பத் துவாரங்களாகிய புலன்களோடுங் கூடி யறிந்தேன்,

கலங்கி யாங்கைந் தவத்தையு மடைந்தனன் - அடியேனறிகிற அறிவையும் விட்டு மயங்கி அவ்விடத்திலே சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தி துரியம் அதீத மென்னப்பட்ட அஞ்சவத்தைகளும் பட்டு நின்றனன். அன்றியும்,

நீங்கிப் போக்குவரவு புரிந்தனன் - அப்படிக்கூடி வாதனைசெய்து நிற்கிற சரீரத்தையும் விட்டு நீங்கி மீளவுமொவ்வொரு சரீரங்களை வந்தெடுப்பதுஞ் செய்தேன்,

தூக்கி - இவையிற்றைத் திருவுள்ளத்திலே யாராய்ந்து பார்த் தருளி,

எவ்விடத்துண்மையும் - அடியேன் ஓதி யுணர்ந்த விடமெங் கும் அடியேன் வியாத்தமா யிருக்கிறதும்,

இவ்விடத்தார்தலும் - இப்பொழுதிந்தச் சரீரத்தோடுங் கூடி நின்று சீவிக்கிறதும் அவத்தைப்படுகிறதும்,

செல்லிடத்தெய்தலும் - இந்தச் சரீர மொந்தனைவிட்டுப் புண்ணிய பாவங்களுக் கீடான சுவர்க்க நரகங்களிலே சென்றனுபவிக்கிறதும்,

தெரித்த மூன்றினு ளொன்றெனக் கருளல்வேண்டும் - தேவரீர் இவை மூன்று பகுதியிலும் இதுவாயிருக்கும் ஆன்மாவி னுண்மையென்று ஒன்றை அடியேனுக்குத் தெரிய அருளிச் செய்தருளவேணும். அப்படி ஒன்றைச் சொல்லுகிறதென்ன மரபு அவை மூன்று பகுதியும் ஆன்மாவுக் குடையதல்லவோ என்று திருவுளஞ் செய்யுமானால்.—அதற்கு உதாரணம் சித்தியாரில் "சூக்கும தேகியாகித் தூலரு பத்தின் மன்னிச், சாக்கிர முதலா யுள்ள வவத்தையுட் டங்கி யெங்கும், போக்கொடு வரவு மெல்லாம் புரிந்துபுண் ணியங்கள் பாவ, மாக்கியும் பலங்க ளெல்லா மருந்தியு நிற்கு மான்மா" [iv,22] வென்பது கண்டுகொள்க.

என்று மில்ல திலதா யுள்ள துளதெனுஞ் சொல்லே சொல்லாய்ச் சொல்லுங்காலை - எக்காலத்து மொவ்வொன்றி னியல்புதனைச் சொல்லுமிடத்து இல்லாதது இல்லாததே உள்ளது உள்ளதேயென்று சொல்லுகிற சொல்லே அறுதிப்பட்ட சொல்லாகச் சொல்லுமிடத்து,

சிறுத்தலும் பெருத்தலு மிலவே - ஒரு முதலாயிருக்கப்பட்ட ஆன்மா ஓர் அவதரத்திலே சிறுத்தும் ஓர் அவதரத்திலே பெருத்தும் வர வழக்கில்லையே,

நிறுத்தி யானை யெறும்பி னுளது போல் - அது நிற்க அப்படிச் சிறுத்தும் பெருத்தும் வாராது எப்பொழுதும் ஒருதன்மையாய் வியாத்தமா யிருக்குமிடத்தும் யோனி சம்பந்தஞ்செய்து அது வதுவாய் நிற்கிறது ஆனையாய் நின்ற ஆன்மா எறும்பானாற்போ லிருககும்,

எனில் - என்று தேவரீ ரருளிச்செய்யில்.—உதாரணம் சிவஞான போதத்தில் "மாயா தனுவிளக்காய் மற்றுள்ளங் காணாதே, லாயாதா மொன்றை யதுவதுவாய்" [iv, 5] என்றது கண்டுகொள்க.

ஞானமன்றவை சாய வாழ்க்கை - தேவரீ ரருளிச்செய்தது அடியேன் கேட்ட அறிவையல்ல சரீரத்தின் வழக்கைச் சொல்லலாம் அத்தனே,

மற்றவை யடைந்தனவுள - நாம் அப்படிச் சொன்னதும் அறிவாயுள்ள ஆன்மாக் கன்மத்துக்கேற்ற ஒவ்வொரு சரீரங்களோடுங் கூடி அதற்கேற்ற அறிவு சீவித்து நிற்குமென்று சொன்னோம்.—அதற்கு உதாரணம் சிவப்பிரகாசத்தில் "செறிந்திடு முடலுள் மன்னிச் சேர் புலன் வாயில் பற்றி, யறிந்தறி லழுந்து" [iii, 2] மென்பது கண்டு கொள்க.

எனில் - என்றருளிச் செய்யில்,

அற்றன்று - அது அப்படியன்று, அதுவென்னென்று கேட்டருளுகில்,

விட்ட குறையி னறிந்து தொன்று தொட்டு வந்தன வென வேண்டும் - அப்படிக் கூடின கூடின யோனிக்குத் தக்க வறிவாயிருக்குமே யாகில் முன்னெ யெடுத்தெடுத்து விட்டுவந்த யோனிகளை இன்னதின்னதல்லவோ வென்றறிய வேணும். அப்படியல்ல கூடின யோனிக்குத் தக்கதாக ஆன்மா அறிந்து சீவித்து நிற்குமென்று நாம் சொன்னது அந்தந்த அவதாரந்தோறும் எடுக்கப்பட்ட சிறிய யோனிக்கும் பெரிய யோனிக்குந் தக்க வறிவாக அறிந்து சீவிக்கிறதையாயிருக்கு மென்று தேவரீர் அருளிச் செய்யில்,

நட்ட பெரியதிற் பெருமையுஞ் சிறியதிற் சிறுமையு முரியது நினக்கே யுண்மை - தேவரீர் கூடினதின் தன்மையென்று நாட்டப்பட்ட பெரிய யோனிக்குத் தக்கதாகப் பெருத்தறிந்துஞ் சிறிய யோனிக்குத் தக்கதாகச் சிறுத்தறிந்தும் வருகிற சுதந்தரம் அணுவுக்கணு வாயும் மகத்துக்கு மகத்துமா யிருக்கிற தேவரீருக்கே யுள்ளது.

பெரியோய் - மகத்தாயிருக்கப்பட்ட தம்பிரானே,

எனக்கின்றாகும் - அந்த வழக்கு அடியேனுக் கில்லையாம்,

என்று மனக்கினியாய் இனி மற்றது மொழியே - எக்காலத்தும் எம்மனத்துக் கினிமையா யிருக்கப்பட்ட தம்பிரானே இன்னந்தானாகிலு முன்னே கேட்கப்பட்ட வினவுக்கு விடையருளிச் செய்தருள வேணும்.—ஆத்மாவின் இயல்பு எப்படியென்னிற் படிகம்போல அடுத்ததின் றன்மையாக விருக்குமென்றும்

வசித்தலைப்பற்றின வியாபகனென்றும் அதுவதுவாய் நிற்ப னென்றுஞ் சொல்லப்படும். உதாரணம் சிவப்பிரகாசத்தில் " ஓர்விடத் துணரு முண்மை யொளிதரு முவலம் போலு" [iii, 9] மென்றும், சித்தியாரில் "வசித்திட வரும்வி யாபி யெனும்வழக் குடைய ளுகி" [iv, 20] யென்றும் வருவது கண்டுகொள்க. ௬

இங்ஙனஞ் சொல்லப்பட்ட ஆன்மா அவத்தைப் படுமிடத்து ஒரு அவத்தை கண்டதொழிய மற்றுள்ள அவத்தை நாலும் அடியேனு லறியப்பட்ட தில்லையேயென்னும் வினு மேலருளிச் செய்கின்றது.

மொழிந்த வவத்தை முதலடியே னின்றூங்
கொழிந்தன நான்கு முணர—விழிந்தறிந்
தேறிற்றிங் கில்லை யெழில்வெண்ணெய் மெய்த்தேவே
தேறிற்றென் கொண்டு தெரிந்து. ௭

மேல்வியாக்கி.

மொழிந்த வவத்தை - சொல்லப்பட்ட அவத்தைகளைந்திலும்,

முதலடியேனின்று - முதலவத்தையாகிய சாக்கிரத்திலே அடியேன் நின்றதுண்டு,

ஆங்கொழிந்தன நான்கும் - அந்த சாக்கிரத்தைத் தவிர மற்றுண்டான சொப்பனஞ் சுழுத்தி துரியம் அதீதம் என்னப்பட்ட நாலவத்தையும்,

உணரவிழிந் தறிந்தேறிற்றிங்கில்லை - அடியேனுக்கு நினைவுண்டாம்படி ஒவ்வொன்ருக இறங்கினது மில்லை அறிந்தேறினதும் இவ்விடத்திற் கண்டதில்லை,

எழில் வெண்ணெய் மெய்த்தேவே - அழகினையுடைய திருவெண்ணெய் நல்லூரிலே யெழுந்தருளி யிருக்கப்பட்ட மெய்கண்டநாதனே,

தேறிற்றென் கொண்டு தெரிந்து - அந்த அவத்தைநாலு முண்டென்று தேவரீர்க்கு அறுதி வந்தது ஏது பிரமாணங் கொண்டறிந்தது.—உதாரணம்: "பிறிந்திடா வஞ்சவத்தை பெருகிய மலத்தாற் பேணி" யுறுமாகையாலே சுத்ததத்துவங்கள் நீங்கின விடத்திலே அஞ்சவத்தையும் படுமென்று அனுமானப் பிரமாணத்தினுலே யறிகவென்றவாறு. ௭

இங்ஙனஞ் சொல்லப்பட்ட ஆன்மா ஒன்றுண்டென்கிறதைத் தெரிசித்தவழி யேதென்னும் வினு மேலருளிச் செய்கின்றது.

தெரித்ததென் கொண்டனை யுருத்திர பசுபதி
செடிய னேனையு மடிமை செய்யப்
படிவங் கொண்டு வடிவுகாட் டில்லாப்
பெண்ணை யாளும் வெண்ணெய் மெய்ய
வவத்தையிற் றெரித்தன ளுகி லவத்தை
தெரிந்தாங் கிரித்தலு மிலனே திருத்துங்
கால முதலிய கருவி யாயின்
மாலும் பிரமனும் வந்தெனை யடையா
ரோதுங் காலை யொன்றையொன் றுணரா
சேதந மன்றவை பேதைச் செயலிச்
சேதந மானுற் செயல்கொள வேண்டுநற்
போத மிவற்றைப் புணர்வதை யறியேன்
கருவித் திரளினுங் காண்பதோ ரொன்று
மொருவுவ தறியே னுணர்வில ளுதலி
னிற்கொடு கண்டன ளுயினெற்குக்
கருவி யாயினை பெருமையு மிலவே
யானே பிரமங் கோனே வேண்டா
வின்னுங் கேண்மோ மன்ன நின்னின்
முன்ன மென்ற னுணர்வில ளுதலி
னென்னைக் காண்பினுங் காண்பல காணு
துன்னைக் காண்பினுங் காண்பல வுன்னே
டொருங்கு காண்பினுங் காண்பல வருந்துணை
கண்ட வாறே தெனது கண்ணே
யண்ட வாண வருட்பெருங் கடலே. அ

**மேலிதற்கு வியாக்கி.**

தெரித்ததென் கொண்டனை யுருத்திர பசுபதி செடியனே னையு மடிமைசெய்யப் படிவங்கொண்டு வடிவு காட்டில்லாப் பெண்ணை யாளும் வெண்ணை மெய்ய என்பதனை உருத்திரபசுபதி செடியனே னையு மடிமை செய்யப் படிவங்கொண்டு வடிவுகாட்டில்லாப் பெண்ணை

யாளும் வெண்ணெய்மெய்ய தெரித்ததென் கொண்டனே யென்று பொருளுக்கேற்க மாறுக. பொருளாவது:

உருத்திர பசுபதி உருத்திர மூர்த்தியுமாய் ஆன்மாக்களுக் கெல்லா முயிர்க்குயிராய் நின்று இரட்சித்தருளுகிற கத்தாவா யிருக் கப்பட்டவனே,

செடியனேனையும் - முடலை யாக்கையோடுங்கூடிச் செனன மாணத்திலே கிடந்தழுந்துகிற அடியேனையும்,

அடிமைசெய்யப் படிவங் கொண்டு - அடியேனைத் தேவரீர் திரு வடிக் குரித்தாக்கிக் கொள்ளவேண்டி அடியேனைப்போல் வடிவை யெடுத்துக் கொண்டு,

வடிவு காட்டில்லாப் பெண்ணையாளும் - தேவரீர்க் குண்டா கிய தன்மை வடிவை யொருவற்குங் காட்டாத நீ பெண்ணைக்குக் கத்தாவாய்,

வெண்ணெமெய்ய - திருவெண்ணெய் நல்லூரிலே யெழுந்தருளி யிருக்கப்பட்ட மெய்கண்ட நாதனே,

தெரித்ததென் கொண்டனே - அடியேனென் றொருமுதலுண் டென்கிறதை யறியப்பட்டது ஏது பிரகாரமாக வென்றருளிச் செய்த ருள வேணும்,

அவத்தையிற் றெரித்தனனுகில் - அடியேன் சாக்கிரஞ் சொப் பனஞ் சுழுத்தி துரியம் துரியாதீதமென்று சொல்லப்பட்டு வருகிற பஞ்சவத்தையும்பட்டு வருகையினுலே அதுகொண்டே யவத்தைக்கு வேறா யடியேனென்றொரு முதலை அறியப்பட்டதென் றருளிச் செய் யுமாயின்.—அதற்கு உதாரணம் சித்தியாரில் "படைகொடு பவனி போதும் பார்மன்னன் புகும்போ தில்லிற்,கடைதொறும் விட்டு விட் டுக் காவலு மிட்டுப் பின்னை,யடைதருந் தனியே யந்தப் புரத்தினி லது போ லான்மா, வுடலினி லைந்த வத்தை யுறுமுயிர் காவ லாக" [iv, 32] வென்று நாலாஞ் சூத்திரத்திலே அவத்தைப்பட்டு வருகிற ஏதுவி னுலே ஆன்மாவுண்டென்று சாதித்ததுங் கண்டு கொள்க.

அவத்தை தெரிந்தாங் கிரித்தலு மிலனே - அடியேன் அப் படி யவத்தைப்பட்டுப்பட்டு வருகிறதேயுண்டாமாகில் அப்படி மறைக் கப்பட்டுவருகிற அந்த அவத்தையு மின்னதென்று கண்டு அவ்விடங்

களிலே அவையிற்றை அடியேன் அறிந்து நீக்கிக் கொண்டேனு மில்லையே,

திருத்துங் காலமுதலிய கருவியாயின் - அப்படி யவத்தையின் மறைப்பை நீக்குகிறது கால நியதி கலை முதலாகச் சொல்லப்பட்டு வருகிற கருவிகளென் றருளிச்செய்யுமாகில்.—உதாரணம் "இத்தகைமை யிறையருளா லுயிரறியு மறிவுக் கீடாக வாடாதே யீரிரண்டா லுரைத்த, வித்தைமுத லைவரால் விளங்கு ஞான மேவியிடு மெனவுரைப் பரசுத்த மாயை, வைத்தகலை தான்மூலஞ் சிறிதே நீக்கி மருவும்வகை தெரிவிக்கும் வாயில்களின் பயனைப், புத்திதர வித்தையிடை நின்றறிவை யுயிர்க்குப் பொருந்தியிடும் வகைபுணரும் புனிதசத்தி புணர்ந்தே" [சிவப்பிரகாசம், ii, 21] என்பது கண்டுகொள்க.

மாலும் பிரமனும் வந்தெனை யடையார்-அப்பொழுது சிருட்டிக்குந் திதிக்குங் கத்தாவாயிருக்கப்பட்ட பிரமா விட்டுணுக்கள் அடியேனைக் கூடி நின்றுணர்த்துகிற தில்லையாம். அன்றியும்,

ஓதுங்காலை யொன்றை யொன்றுணரா-அந்தக் கருவிகளி னியல்பைச் சொல்லுமிடத்து ஒரு கருவியை ஒரு கருவி யறியாது. அன்றியும்,

சேதனமன்றவை பேதைச்செயல்-அந்தக் கருவிகள் அறிவுள்ளது மல்ல அறியாமையா யிருப்பதொன்று.—அப்படியல்ல ஆன்மா அறிவாயிருப்பதொன்று அந்தக் கருவிகளோடுங் கூடில் அவை சேட்டைப் படுமென்றருளிச் செய்யில். உதாரணம் "தனக்கென வறிவிலாதான் றத்துவ வன்ன ரூபன், றனக்கென வறிவா னாலிச் சகலமு நுகருந் தானே" [சிவப்பிரகாசம், v, 2] என்பது கண்டுகொள்க.

இச்சேதன மாறுற் செயல் கொள வேண்டு நற்போத மிவற்றைப் புணர்வதை யறியேன்-அப்படி அடியேன் அறியும் பகுதிக்குரியவனுமாய் அந்தக் கருவிகளின பயனைக் கொள்ளத் தக்கவனுமாயிருக்கில் அடியேனுடைய அறிவு அந்தக் கருவிகளைக் கூடுகிறதை அறிகின்றேனில்லை. அன்றியும்,

கருவித்திரளினுங் காண்பதோ ரொன்றும் - அந்தக் கருவிகளெல்லாங் கூடின சாக்கிரத்தானத்திலுஞ் சத்தாதி விடையங்களை யறியுமிடத்து ஒவ்வொரு விடையங்களாக அறிகிற தொழிந்து ஐந்தையு மொக்க அறிந்ததில்லை. அன்றியும்,

ஒருவுவதறியே னுணர்வில னாதலின் - அப்படி நின்று சேவிக்கிற அவதரத்து அந்தக் கருவிகள் நீங்குகிறதையு மறிகின்றேனில்லை அறிவிலாதவனாகையாலே.—அப்படி யொன்றுகளை யறியுமிடத்து நீயாகத் தனித் தொன்றையும் அறிய மாட்டாய். நாமறிவித்தானீயறிவை யத்தனை யென்றருளிச்செய்யில்.—உதாரணம் "இருணனி யிரவி தான்வந் திரித்திலு மிரவி யெண்ணும், பொருணிலை கண்டு மாந்தர் பொருந்திடு மாறுபோல, மருணிலை யெங்கு நீங்க மகிழ்ந்துயிர் தன்னுள் மன்னு, மருளையு மொழிய னாலத் தறிந்தவா றறியுமன்றே" [சிவப்பிரகாசம், v, 4] என்பது கண்டு கொள்க.

நிற்கொடு கண்டனனாயி னெற்குக் கருவியாயினை பெருமையு மிலவே-அப்படி அடியேன் அறிகிற தெல்லாந் தேவரீரறிவித்தா லறிவேனாமாகில் அப்பொழுது தேவரீரை யடியேனுக்குக் கருவியென்று சொல்லவும் படும் கத்தாவென்கிற பெருமையுந் தேவரீருக் கில்லையாம். ஆகையால்,

யானே பிரமங் கோனே வேண்டா - அடியேன் தானே கர்த்தாவென்று சொல்லப்படும் தேவரீரை யடியேனுக்குக் கத்தாவென்ன வேண்டுவதுமில்லை. அதுவன்றியும்,

இன்னுங் கேண்மோ மன்ன - அடியேன் விண்ணப்பஞ் செய்யத்தக்கது இன்னமு மொன்றுண்டு அது வேதென்று கேட்டருளுகில்,

நின்னின் முன்னமென்ற னுணர்வில னாதலின் - அப்படித் தேவரீர் அறிவிக்க அடியேனறிந்தேனாமாகில் அங்ஙனம் நின்றறிவிக்கிற தேவரீரை எதிர்ப்பட்டு நின்று இது வல்லவோ நம்மை யறிவிக்கிற முதலென்று அறிய மாட்டுகிறேனில்லை அடியேனறி வில்லாதவ னாகையாலே,

என்னைக் காண்பினுங் காண்பல காணா துன்னைக் காண்பினுங் காண்பல வுன்னோ டொருங்கு காண்பினுங் காண்பல - அடியேனை யறிய வென்றாலு மறியப்படும் பகுதியுமில்லை அதுவன்றியுந் தேவரீரை யறிய வேண்டிலு மறியப்படும் பகுதியுமில்லை அதுவன்றியுந் தேவரீரோடு மடியேன் கூடியறிய வென்றாலு மறியப்படும் பகுதியுமில்லை,

அருந்துணை கண்டவாறே தெனது கண்ணே யண்ட வாண வருட் பெருங் கடலே என்பதனை அருந்துணை யெனது கண்ணே யண்டவாண வருட்பெருங் கடலே கண்டவாறேது என்று பொருளுக் கேற்க மாறுக. பொருளாவது: அடியேனுக்கு அரிய துணையாயிருக்கப்பட்டவனே அடியேனுக்குக் கண்ணாகிய அறிவாயிருக்கப்பட்டவனே தேவர்களுக்குங் கத்தாவாயிருக்கப்பட்டவனே அருள் வெள்ளத்தை நின்னடியவர்க்குக் கொடுத்தருளுகிற சமுத்திரமாயிருக்கப்பட்டவனே அடியேன் என்னைத் தரிசிக்கப்பட்டது எது பிரகாரங் கொண்டு.

அதற்கு விடையம் ஆன்மாத் தனக்குச் சுதந்தரமில்லையென்கிறதை யறிந்து தான் அந்த ஞானமாய் நிற்கவே தன்னைத் தரிசிக்கலா மென்றவாறு. உதாரணம் சிவப்பிரகாசத்தில் "தன்னறி வதனு லேதுந் தனக்கறி வில்லை யேனுந், தன்னறி வாக வெல்லாந் தனித்தனி பயன ருந்துந், தன்னறி வறியுந் தன்மை தன்னாலே தனையறிந்தாற், றன்னையுந் தானே காணுந் தானது வாகி நின்றே" [viii, 2] என்றும், [திருவிடைமருதூர்] மும்மணிக்கோவையில் "மாயப் படலங் கீறித் தூய, ஞான நாட்டம் பெற்றேன் பெற்றபின், றன்னையு மென்னையுங் கண்டேன்" [13] என்றும், சிவஞானசித்தியாரில் "அடி ஞான மான்மாவிற் றோன்றுந் தோன்றத், தூரியனுஞ் சிவந்தோன்றுந் தானுந் தோன்று" [viii, 28] மென்றும் கண்டு கொள்க. அ

இங்ஙனஞ் சொல்லப்பட்ட ஆன்மா மூலாதாரத்திலே யொடுங்கி யதீதப்பட்டுக் கிடக்கு மவதாரத்து உணரு முறைமை யெப்படியென்னும் வினு மேலருளிச் செய்கின்றது.

> கடலமுதே வெண்ணெய்க் கரும்பேயென் கண்ணே
> யுடலகத்து மூலத் தொடுங்கச்—சடலக்
> கருவியா தாங்குணர்த்தக் காண்பதுதா னென்னை
> மருவியா தென்றுரைக்க மன். ௬

**மேல்வியாக்கி.**

கடலமுதே - சமுத்திரத்திலே யுண்டாகப்பட்ட அமிர்தம்போல இனியவனே,

வெண்ணெய்க் கரும்பே-திருவெண்ணெய்நல்லூரிலே யுண்டாகியிருக்கப்பட்ட கரும்புபோல இனியவனே,

என்கண்ணே - அடியேனுக்குக் காட்டாயிருக்கப்பட்ட கண் போல உரியவனே,

உடலகத்து மூலத்தொடுங்க - அடியேன் அவத்தைப்படும் அவதரத்து தேகத்துக்குள்ளே மூலாதாரத்திலே ஒரு கருவிகளுங் கூடாதே யதீதப்பட்டுக் கிடக்கிற அவதரத்து அடியேன் உணருகைக்கு,

சடலக் கருவி யாதாங்குணர்த்த-சரீரக் கூட்டமாக நின்றுணர்த்தின கருவி எது,

காண்பது தானென்னை மருவி - அடியேன் அறிகிறதுதான் ஏதோடுங் கூடி,

யாதென்றுரைக்க மன் - தேவரீர் அடியேன் விண்ணப்பஞ் செய்ததற்கு இதுவென்று விளங்க அருளிச் செய்தருளவேணும்.

விடையம் ஆன்மதத்துவம் உச வித்தியாதத்துவம் எ சிவதத்துவம் ரு இதுக்குப் போககாண்டமென்றும் போக்கிய காண்டமென்றும் பிரேரகாண்ட மென்றும் பேர். ஆன்மதத்துவ மிருபத்து நாலு முட்கருவியும் புறக்கருவியுமாய்த் தேகமாய்ப் பொருந்திச் சிவதத்துவங்கள் கலாதிகளைப் பிரேரித்து அறிவிக்கும் என்றவாறு. உதாரணம் சித்தியாரில் "வாயாதி சோத்திராதி புறத்துவாழ் கருவி யாகு, மோயாத மனாதி காயத் துணருமுட் கருவி யாகு, மாய்வார்கட் கராகமாதி யவற்றினுட் கருவி யென்பர், மாயாடன் வயிற்றி வற்றூற் றுடக்குண்டு வாழு மான்மா" [ii, 63] வென்றும், போற்றிப் பஃறொடை வெண்பாவில் "மூலவருங் கட்டிலுயிர் மூடமா யுட்கிடப்பக், கால நியதி யது காட்டி-மேலோங்கு, முந்தியியன் கட்டிலுயிர் சேர்த்துக் கலைவித்தை, யந்த வராக மவைமுன்பு-தந்த,தொழிலறி விச்சை துணையாக மானி, னெழிலுடைய முக்குணமு மெய்தி-மருளோடு, மன்றூ மிதையத்துச் சித்தத்தாற் கண்டபொரு, ளின்னபொரு ளென்றறிய வொண்ணு-வக்நிலைபோய்க், கண்டவியன் கட்டிற் கருவிகளீ ரைந்தொழியக், கொண்டுவிய மித்தற்றை நாள்கொடுப்ப - பண்டை, இருவினையால் முன்புள்ள வின்பத்துன் பங்கள்,மருவும்வகை யங்கே மருவி" [53-64] யென்றுஞ் சொன்னமுறைமை கண்டு கொள்க. ௯

இங்ஙனஞ் சரீர தொந்தனைப்பட்டு நிற்கிற அடியேனுக்குத் தேவரீர் தீக்கைக் கிரமங்களினாலே பாசமோசனம் பண்ணியிருக்கவும் அடியேன் மீளவும் மலமாயாதி கன்மங்களோடும் தொந்தித்து நிற்கைக்கு வழியேதென்னும் வினா மேலருளிச் செய்கின்றது.

மன்னிய கன்மச் சமத்திடை மலங்களை
யந்நிய மாக்கி யருள்வழி யதனு
லென்னுள் புகுந்தனை யெனினே முன்னைத்
திரிமலந் தீர்த்த தேசிக நின்னே
டொருவுத லின்றி யுடந்தையே யாகும்
பெருநிலை யாகல் வேண்டு மருவிடு
மும்மல மதனு லெம்முணின் றிலையெனி
னம்மலத் திரிவுஞ் செம்மலர்த் தாணிழற்
சேர்தலு மிலவாய்ச் சார்பவை பற்றிப்
பெயர்வில னுகும் பெரும தீர்வின்
றமைந்த கருமத் தியைந்தவை யல்லது
சமைந்தன விலவெனச் சாற்றி னமைந்த
மாயையங் கன்ம மாமல மூன்று
மாயா தாகவே யார்ச்சந மாயையி
னுற்பவந் தீரா தொழுகுமொன் றுன்றி
னிற்சம மாயி னல்லது நிற்பெற
வில்லென மொழிந்த தொல்லறந் தனக்கு
மேயா தாகு நாயே னுளத்து
நின்றனை யென்பெனே நின்றிலை யென்பெனே
பொன்றிய பொன்றிற் றிலமல மென்பெனே
வொன்றினை யுரைத்தருள் மன்ற குன்றுப்
பெண்ணைப் புனல்வயல் வெண்ணெய்க் கதிபதி
கைகண் டலைவாய் கால்செவி மூக்குயர்
மெய்கொண் டென்வினை வேரறப் பறித்த
மெய்கண்ட தேவே வினையிலி
மைகொண்ட கண்ட வழுவிலென் மதியே. க0

**மேல்வியாக்கி.**

மன்னிய கன்மச் சமத்திடை மலங்களை யன்னியமாக்கி - அனுதியே அடியேனேடுங் கூடி நிலைபெற்று வருகிற கன்மமாகிய புண்ணிய பாவங்கள் தன்னிற் சமமாகத் துலையொத்த அவதாத்து அடியேனேடுங் கூடியிருக்கப்பட்ட மலங்களைத் தேவரீர் தீட்சாக்கிரமங் களினலே வேறுபடுத்தி,

அருள்வழியதனூ லென்னுள் புகுந்தனை யெனினே - தேவரீர் அனுக்கிரகத்தின் முறைமையாலே அடியேனுள்ளத்திலே யெழுந் தருளினதே யுண்டாமாகில்.—உதாரணம் முற்பதத்துக்கு கூட. "சக லர்க்குக் கன்மவொப்பில், தரையிலா சான்மூர்த்தி யாதார மாகித் தரித் தொழிப்பன் மலஞ்சதுர்த்தா சத்திநிபா தத்தால்" [சித்தியார், viii, 2] என்றும், "நிறுத்துவதோர் குணமில்லான் றன்னையொரு வர்க்கு நினைப்பரியா னொன்றுமிலா னேர்படவந் துள்ளே, பொறுப்பரிய பேரின்பை யருளியதன் வழியே புகுந்தளிப்ப னெங்குமிலாப் போகத் தைப் புரிந்தே" [சித்தியார், ix, 6] என்றுங் கண்டுகொள்க. பாடம்.

முன்னைத் திரிமலந் தீர்த்த தேசிக நின்னோ டொருவுத லின்றி யுடங்தையே யாகும் பெருநிலை யாகல் வேண்டும் - அடியே னுக்கு அனாதியாக இருக்கப்பட்ட மூன்று மலங்களையும் நீக்கிய ஆசாரிய மூர்த்தமே தேவரீரை அடியேன் விட்டு நீங்காமலிருக் கப்பட்ட பேரின்பமாகிய திருவருட் பிரகாச முண்டாக வேணும்.— அது நிற்கட்டும் முன்பு என்னிடத்திலே தேவரீரில்லையாம்,

மருவிடு மும்மல மதனூ லெம்முனின்றிலை யெனில்-அடியேனோ டுங் கூடிவரப்பட்ட ஆணவம் மாயை காமிய மென்கிற மூன்று மலங் களோடும் வாதனை செய்து நிற்கையினாலே அடியேனுளளத்திலே தேவரீரெழுந்தருளி நின்றதில்லையா மாகில்.—உதாரணம் சிவஞான போதத்தில் "அருக்கனேர் நிற்பினு மல்லிருளே காணார்க், கிருட் கண்ணே பாசத்தார்க் கீசன்" [xi, 3] என்றும், "தன்னுணரு, நேசத் தர் தம்பா னிகழுந் ததிநெய்போற், பாசத்தார்க் கின்றாம்பதி" [xii, 3] யென்றும், போற்றிப்பஃறொடை வெண்பாவில் " என்- . . . னுள்ள மென்று நீங்கா தொளித்திருந்து கள்ளமின்று காட்டுங்" [166-168] என்றுஞ் சொன்ன முறைமையுங் கண்டு கொள்க. மேற்பாடம்.

அம்மலத் திரிவுஞ் செம்மலர்த் தாணிழல் சேர்தலு மிலவாய்ச் சார்பவை பற்றிப் பெயர்வில னாகும் பெரும தீர்வு-அந்த மலங்களைத் தேவரீர் போக்கினது மில்லையாய் அடியேனுஞ் சிவந்த தாமரை மலர் போன்ற சீபாதத்திலே வந்து பொருந்தினது மில்லையாய்ப் பிரவஞ்ச வாதனையாலே வந்து பொருந்தின கன்மங்களைப் புசித்ததினாலே புண்ணிய பாவங்கள் கட்டுப்பட்டுச் செனனமரண துக்கத்தை விட்டு நீங்குகைக்கு வழியில்லாதவனாகும் தம்பிரானே இது நிச்சயமே தப் பாது. அப்படியல்ல,

இன்றமைந்த கருமத் தியைந்தவையல்லது சமைந்தன விலவெனச் சாற்றின் - இப்பொழுது அடியேனெடுத்த உடலுக்கமைத்த பிராரத்துவ மனுபவிக்கிற தொழிய மேலுட லெடுக்கைக்கு ஏதுவாயுள்ள ஆகாமிய கன்ம முண்டாகா தென்றருளிச் செய்யில்.—உதாரணம் திருவருட் பயனில் "என்ற வினையுடலோ டேகுமிடையே றும்வினை, தோன்றி லருளே சுடு" [x, 8] மென்றும், சிவப்பிரகாசத்தில் "தொல்லையில் வருதல் போலத் தோன்றிரு வினையதுண்டே, லல்லொளி புரையு ஞானத் தழலுற வழிந்து போமே" [x, 10] என்றும், சிவஞான சித்தியாரில் "என்றவுடற் கன்மமனுபவத்தினு லறுத்திங் கினிச்செய்கன்ம மூலமல ஞானத்தா விடிப்பன்" [viii, 10] என்றும், சிவஞானபோதத்தில் "பின்செய்வினை மாயையுட னில்லா" [x, 4] தென்றும் சொன்னது கண்டு கொள்க. பாடம்.

அமைந்த மாயேயங் கன்ம மாமல மூன்று மாயாது-அடியேனுக்கமைத்த பிராரத்துவத்துக் கீடாகத் தேகம் நிற்கவே அதற்குக் காரணமாகிய மாயை நீங்காது'மாயை நிற்கவே கன்மமும் போகாது மாயையுங் கன்மமு முண்டாகவே ஆணவமலமும் உண்டெனப்படும்.

ஆகவே, ஆர்ச்சன மாயையி னுற்பவந் தீரா தொழுகும் - ஆக இங்ஙனம் மூன்று மலங்களுமுண்டாகவே ஆகாமியங்களை யார்ச்சித்து மாயையின் தோற்றமாயுள்ள சரீர தொந்தனை விடாமல் மேன்மேலுந் தொன்று தொட்டுவரும். அன்றியும்,

ஒன்றொன் றினிற் சமமாயினல்லது நிற்பெறலில்லெனமொழிந்த தொல்லறந் தனக்கு மேயாதாகும் - இருவினையாகிய புண்ணிய பாவங்கள் ஒன்றுக்கொன்று தன்னிற் சமமாகத் துலையொத்தா லொழியத் தேவரீரை அடியார் பெறுகிறதில்லையென்று சொல்லப்பட்ட பழையதாகிய சிவதன்மமாகிய திருவாக்கும் பொருந்தாதாகும். ஆகையால்,

நாயேனுளத்து நின்றனை யென்பேனோ நின்றிலை யென்பேனோ வொன்றிய பொன்றிற்றிலமல மென்பனோ வொன்றினையுரைத்தருள் மன்ற - அடியேனுளத்திலே தேவரீர் கூடி நின்ற தென்று விண்ணப்பஞ் செய்வேனோ கூடி நின்றதில்லை யென்று விண்ணப்பஞ் செய்வேனோ அந்த மலங்கள் கெட்டுப்போன தென்று

விண்ணப்பஞ் செய்வேனே கெடாமல் நின்றதென்று விண்ணப்பஞ் செய்வேனே இவையிற்றி லொன்றை அருளிச்செய்தருள் அடியே னுக்கு அறுதிப்பட,

குன்றாப் பெண்ணைப் புனல்வயல் வெண்ணெய்க் கதிபதி - வளப் பங்கள் குறைவுபடாத பெண்ணையாற்று நீர் பாயப்பட்ட வயல்களை யுடைய திருவெண்ணெய் நல்லூருக்குக் கர்த்தாவாக இருக்கப்பட்ட வனே,

கைகண் டலைவாய் கால் செவி மூக்குயர் மெய்கொண் டென் வினை வேரறப் பறித்த மெய்கண்ட தேவே - கரசரணாதிகளாயுள்ள அவயவங்களோடுங் கூடியிருக்கப்பட்ட திருமேனி யெடுத்துக்கொண்டு அடியேனுக் குண்டான கன்மங்களைக் கிளைப்பறப் பறித்துப்போட்ட மெய்கண்ட நாதனே,

வினையிலி - அப்படி ரூபீகரித்திருக்கையிலேயுங் கன்ம தொந் தனை யில்லாதவனே,

மைகொண்ட கண்ட - நஞ்சமாகிய கறுப்பினைத் தரித்தருளின கறைமிடற்றனே,

வழுவிலென்மதியே - அடியேனுக்குக் குற்றமற்ற அறிவா யிருக்கப்பட்ட தம்பிரானே.

சீஷன் வினை பிராரத்த தேகம் நிற்கவே மூன்று மலங்களும் போகாதென்றதுக்குச் சம்மதி சித்தியாரில், "அங்கித்தம் பனைவல் லார்க் கனல்சுடா தாகு மவுடதமந் திரமுடையார்க் கருவிடங்க ளேறா, வெங்கித்தைக் கன்மமெலாஞ் செய்தாலும் ஞானிக் கிருவினைகள் சென்றணையா முற்செய்வினை யிங்குத், தங்கிப் போம் பாத்திரமுங் குலாலன்வினை தவிர்ந்த சக்கரமுங் கந்தித் துச் சுழலு மாபோல், மங்கிப்போய் வாதனையா லுழல்விக்கு மெல்லா மலங்களும்பின் காயமொடு மாயு மன்றே" [x, 6] என்றும், வாதனா தோஷத்தினாலே அக்கினியைச் சேர்ந்த வித்தைப்போலவும், ஆயன் வெட்டின மரம்போலவும், புடம் பண்ணின பணம்போலவும், தத்த படம்போலவும் உருவமாத்திரமல்லாமல் பந்தமில்லை, காரண மலங் களுஞ் சரீரத்தோடு தேய்ந்தறு மென்றது. புண்ணிய பாவ மொன் றுக்கொன்று சமத்துவமானாலல்லவோ தேவரீரைப் பெறுவதென்று சொன்ன பழைய திருவாக்குப் புண்ணிய பாவத்துக்கேற்ற தேகம்

நிற்கவே வினையொத்ததென்று சீஷன் வினு, இருவினையொப்புக்குச் சரீரம் முன்னிலையல்ல புண்ணியத்திலேயும் பாவத்திலேயும் இரண்டிலேயும் சமமாக வெறுப்பு வந்ததே இருவினையொப்பு அப்போது ஆசாரிய மூர்த்தமாக வந்து ரட்சிப்பன். உதாரணம் போற்றிப் பஃறொடையில், "எல்லை யிரண்டு மிடையொக்கப்-பல்பிறவி, யத்தமதி லன்றோ வளவென்று பார்த்திருந்து, சத்தி பதிக்குந் தாம்போற்றி" [116-118] என்றும், அடியேனுள்ளத்திலே தேவரீர் அநுக்கிரகம் பண்ணுகிறதுக்கு முன் நின்றதென்று சொல்வேனோ நிற்கவில்லை யென்பேனோ என்ற வினுவுக்கு உதாரணம் சித்தியாரில், "எங்குந்தா மென்னில்நா மெய்த வேண்டா எங்குமில னென்னில்வே றிறையு மல்ல, னங்கஞ்சே ருயிர்போல்வ னெங்கு மங்கத் தவயவங்கள் கண்போலக் காணு தான்மா, விங்குநா மியம்புந்தத் துவங்களில்வைத் தறிவ திறைஞானந் தந்து தா ளீதல்சுட ரிழந்த, துங்கவிழிச் சோதியுமுட் சோதியும்பெற் றூற் போற் சோதிக்குட் சோதியாய்த் தோன்றிடுவன் காணே" [viii, 38] என்பது கண்டுகொள்க. தேவரீ ரனுக்கிரகம் பெற்ற பிறகு மலந்தான் நின்றதென்று விண்ணப்பஞ் செய்வேனோ, நிற்கவில்லை யென்பேனோ யென்னும் வினுவுக்குச் சித்தியாரில், "நெல்லினுக்குத் தவிடுமிக ளுதியாயே நெல்லைவிட்டு நீங்கும்வகை நின்றநிலை நிகழ்த்தீர், சொல்லியிடிற் றுகளற்ற வரிசியின்பா லில்லை தொக்கிருந்து மற்றொருநெற் றோற்றிடாவா, மெல்லவிவை விடுமறவே யவைபோல வணுவை மேவு மல முடல்கன்ம மனுதிவிட்டே நீங்கும், நல்லசிவன் முத்தியின்கட் பெத்தான் மாவை நணுகிநிற்கு மாதலினுல் நாசமுமின் றூமே" [xi,6] என்றும், சிவப்பிரகாசத்தில், "அழிந்திடும் பாச மென்னி னித்தமென் றுரைத்தல் வேண்டா, மழிந்திடா தென்னின் ஞான மடைவது கருத வேண்டா, மழிந்திடுஞ் சத்தி நித்த மகிழ்ந்திடா தொளியின் முன்ன, ரழிந்திடு மிருளு நாச மடைந்திடா மிடைந்தி டாவே" [x,9] என்றும் சொன்னது கண்டுகொள்க. கo

அடியே னறிகிறதெல்லாந் தேவரீர் கூடி நின்றறிவிக்கிறதாயிருக்கவும் அடியேன் இந்த அஞ்ஞானத்தோடுங் கூடி மயங்கி நிற்கைக்கு வழியேதென்னும் வினு மேலருளிச் செய்கின்றது.

**மதிநின்பா லிந்த மலத்தின்பா னிற்க**
**விதியென்கொல் வெண்ணெய்வாழ் மெய்ய—பதிநின்பால்**

வந்தா விதில்வரத்தில் வந்திரண்டும் பற்றுகிலேன்
எந்தா யிரண்டாமா றென். கக

**மேலிதற்கு வியாக்கி.**

மதிநின்பால் - அடியேனுக்குண்டா யிருக்கப்பட்ட அறிவு தேவரீர் பகுதியிலே யுண்டானது. அப்படி யிருக்கவும்,

இந்த மலத்தின்பா னிற்க விதியென்கொல் - அடியேன் இந்த மலத்தின் பகுதியிலே கூடி மயங்கி நிற்கைக்கு முறைமை ஏது தான்.

வெண்ணெய்வாழ் மெய்ய - திருவெண்ணெய் நல்லூரிலே யெழுந்தருளி யிருக்கப்பட்ட மெய்கண்ட நாதனே,

பதிநின்பால் வந்தால் - கர்த்தாவாயிருக்கிற தேவரீரை அடியேன் வந்து கூடினால்,

இதில் வரத்தில் - இந்த மலத்திலே மீள வருகைக்கு வழக்கில்லை,

வந்திரண்டும் பற்றுகிலேன் - தேவரீரை வந்து கூடினால் அந்த அருளோடும் இந்த மலத்தோடும் ஒக்க நிற்கிறது அடியேனுக்குண்டாகாது,

எந்தா யிரண்டாமா றென் - அடியேனுக்கு சுவாமியா யிருக்கப்பட்டவனே அடியே னொருத்தன் தேவரீரோடுங் கூடி யறிந்தும் இந்த மலத்தோடுங் கூடி யறியாமலுமா யிரண்டோடுங் கூடி யதுவதுவாய் நிற்கைக்கு வழக்கேது.

விடயம்: அறிவு மிகுத்தவனு மாகாமல் அறிவில்லாத மூடனுமாகாமல் கதிபெற வேணுமென்கிற நடுவாந்தன்மையாகிய அனுட்டான பரனுக்கு இரண்டினு மாசைபற்றி யதுவதுவாய் நிற்பன். உதாரணம் சித்தியாரில், "பாசிபடு குட்டத்திற் கல்லினைவிட்டெறியப் படும்பொழுது நீங்கியது விடும்பொழுது பாக்கு, மாசுபடு மலமாயை யருங்கன்ம மனைத்து மரனடியை யுணரும்போ தகலும்பின் னணையும், நேசமுடன் திருவடிக்கீ ணீங்காதே தூங்கு நினைவுடையோர் நின்றிடுவர் நிலையதுவே யாக, வாசையொடு மங்குமிங்கு மாகியலம் வருவோ ரரும்பாச மறுக்கும்வகை யருளின்வழி யுரைப்பாம்" [viii,39]. இவனுக்குள்ள வறிவு கத்தாவிடமாக வுண்டாகையிலேயும் மலத்திலே மயங்குவானேனென்ற வினவுக்குக் கத்தா கன்மத்து வழியே நடத்துவ னென்பது கருத்து. சிவஞானபோதத்தில்,

"அவையேதானே யாயிருவினையிற், போக்கு வரவு புரிய வாணையி, னீக்க மின்றி நிற்கு மன்றே" [சூ. உ] என்பது கண்டுகொள்க. கக

தேவரீர் அனவரதமும் உயிர்க்குயிராய் நின்றறிவிக்கு மென் றிருக்கையிலே அடியேனோடும் ஒருகாற் கூடியும் ஒருகா னீங்கியும் வருகைக்கு வழியே தென்று மாணவகன் கேட்கும் வினு மேலரு ளிச் செய்கின்றது.

எண்டிசை விளங்க விருட்படாம் போக்கி
முண்டக மலர்த்தி மூதறி வருளு
மேதினி யுதய மெய்கண்ட தேவ
கோதி லமுத குணப்பெருங் குன்ற
வென்னி ளூர் தலு மகறலு மென்னைகொ
*லுன்னிற் றன்னி யுனுவிடிற் பெயர்குவை
யென்னு மதுவே நின்னியல் பெனினே
வியங்கோ ளாள னு மாகி யியங்கலு
முண்டெனப் படுவை யெண்டோண் முக்கண்
யாங்கணும் பிரியா தோங்குநின் னிலையின்
யான்வந் தணைந்து மீள்குவ னுயி
னூற்றுத்துய ருற்றோ ரணிநிழ னசைஇ
வீற்றுவீற் றெழுதர வேண்டலும் வெறுத்தலு
மின்றிச் சாயைக்கு நன்றுமன் னியல்பே
யனையை யாகுவை நினைவருங் காலை
யிந்நிலை யதனி னேழையேற் கிரங்கி
நின்னை வெளிப்படுத் தொளிப்பை நீயே
லருண்மா றுகும் பெருமவஃ தன்றியு
நிற்பெற் றவர்க்கு முற்பவ் முண்டெனுஞ்
சொற்பெறு மஃதித் தொல்லுல கில்லை
யவ்வவ் வமைவுஞ் †சார்பு மயர்வறச்
சொல்விற் சொல்லெதிர் சொல்லாச்
சொல்லே சொல்லுக சொல்லிறந் தோயே. கஉ

**மேல் வியாக்கி.**

எண்டிசை விளங்க விருட்படாம் போக்கி முண்டக மலர்த்தி மூதறிவருளும் - அடியேன் தேவரீரைப் பெறவேண்டுகைக்கு விசா

பா - ம்—*லுன்னி லுன்னி. †சோர்வு.

ரித்தறிய வேண்டும் பகுதிகளெல்லாம் விளக்கஞ் செய்யத்தக்கதாக அடியேனை மறைக்கப்பட்ட அஞ்ஞானமாகிய போர்வையை நீக்கி அடியே னிருதய கமலத்தினையு மலர்வித்து அநாதியாயிருக்கப்பட்ட திருவருளையும் அடியேனுக்குக் கடாட்சித்தருளிய,

மேதினி யுதய - பூமியிலே தோன்றியருளின ஞானவாதித் தனே,

மெய்கண்ட தேவ-மெய்கண்ட தேவனென்கிற திருநாமத்தினை யுடையவனே,

கோதி லமுத - குற்றமற்ற அமிர்தமா யிருக்கப்பட்டவனே,

குணப்பெருங்குன்ற - நற்குணங்க ளெல்லாமுடைய பெரிய மலையே. எனவே மலைபோலும் பெருமையை யுடையவனே யென்ற தென வறிக.

என்னி னூர்தலு மகறலு மென்னைகொல் - எங்கும் பூரணமாய் நிற்கிற தேவரீர் அடியேனோடு ஓரவதாரத்திலே கூடியும் ஓரவதாரத் திலே பிரிந்தும் நிற்கிறது ஏது பிரகாரமென் றருளிச் செய்தருள். கொல் ஐயம்.

அது நீ நினைக்கும் பொழுது கூடியும் நினையாதபொழுது நீங் கியும் நிற்போம்.

உன்னிற் றுன்னியுறுவிடிற் பெயர்குவை யென்னு மதுவே யின்னியல் பெனினே - அப்படித் தேவரீர் கூடியும் பிரிந்தும் நிற்கிற தும் அடியே னினைக்கும் பொழுது கூடியும் நினையாத பொழுது நீங்கியும் வருகிறதே தேவரீர்க்கு முறைமையா மென்றருளிச் செய் யில்.—உதாரணம் தேவாரம், "பன்னிலூறும் பழத்தினி லின்சுவை, யென்னி லூறி யெனக்கே களிதரு, முன்னி லுன்னு முறுவிடில் விட்டிடு, மென்னு ளீச னிருந்த வியற்கையே" என்பது கண்டு கொள்க. பாடம்.

வியங்கோ ளாளனு மாகி யியங்கலு முண்டெனப் படுவது - அப் பொழுது தேவரீர் அடியேனுக்கு ஏவற்றொழிற் செய்கிறவனுமாய்ப் பூரணமில்லாத போக்கு வரவு செய்யப்பட்ட ஏகதேசி யென்று சொல்லவும் படும். அப்படி யல்ல நாம் அசைவற நிற்க நீதானே கூடி யும் பிரிந்தும் வருவை,

எண்டோண் முக்க ணியாங்கணும் பிரியா தோங்குநின் னிலை யில் யான்வந் தணைந்து மீள்குவ னாயின்-எட்டுத் திருப்புயமும் மூன்று

திருநயனமு முடைத்தாய் எவ்விடமும் நீங்காம லுயர்ந்த நின்னுடைய பூரண நிலையிலே அடியேன் வந்து கூடி மீளவும் பிரிவேனுமாகில்.— உதாரணம் சிவஞானபோதத்தில், "ஐம்பொறியி னல்லேயெனு மந்த தரசிவனே, ஐம்பொறியை விட்டங் கணைசகல - னைம்பொறியி, னீங்கா னீர்ப் பாசிபோல் நீங்குமல கன்மம்வரி, னீங்கானே நீங்கு நினைந்து" [viii, 8] என்றும், "ஊசல் கயிறற்றாற் றாய்தரையே யா"மென்றுஞ் சொன்னது கண்டு கொள்க. என்றும் போத மடங்கின விடத்திலே சிவனைப் பொருந்துவ னென்றும், போத மேலிட்ட விடத்திலே சிவனையிழந் திருப்ப னென்றும், "போதம் பதைப்பறவே பூரணமாம் பூரணமும், போதம் பதைத்தளவே பொய்யாகு" [ஒழிவிலொடுக்கம், பொதுவி. 47] மென்றும் முன்னோர்கள் சொன்னதுங் கண்டுகொள்க. மேற்பாடம்.

ஆற்றுத்துய ருற்றோ ரணிநிழ லசைஇ வீற்றுவீற் றெழுதா வேண்டலும் வெறுத்தலு மின்றிச் சாயைக்கு நன்றுமன் னியல்பே- வழிநடக்கிறவர்கள் பொடிச் சூட்டினாலே வருத்தப்பட்ட அவதாத்து அழகிதாகக் குளிர்ந்த நிழலுக்கு ஆசைப்பட்டுச் சென்று வேண்டத் தக்க இடங்களிலே யிருந்திருந்து போமிடத்து இவர்கள் இங்கனே வந் திருக்கப் பெற்றதே யென்கிற பிரியமும் நம்மை விட்டுப் போனார்க ளென்கிற அப்பிரியமும் அந்த விருட்சத்துக் கில்லையானாற் போல ஒப்புச் சொல்லலாம் தேவரீர்க் குண்டான முறைமையையும்,

எனையை யாகுவை நினைவருங் காலே - தேவரீர் சர்வஞ்ஞ னென்றிருக்கு மவதாரத்தும் அங்ஙன மருளிச் செய்தது எதாம் விசாரிக்குமிடத்து. அப்படியல்ல நீயும் நாமும் போக்கு வரவின்றி நின்ற நிலைதன்னிலே நீ நினைக்கும் பொழுது நாம் பிரகாசித்தும் நீ நினை யாத பொழுது நாம் மறைந்தும் நிற்போம்,

இந்நிலை யதனி னேழையேற் கிரங்கி நின்னை வெளிப்படுத் தொளிப்பை நீயேல் - இப்பொழுது இங்ஙனம் நின்ற நிலைதன்னிற் கொச்சையா யிருக்கப்பட்ட அடியேனுக்காக் கிருபை செனித்து அடியேனிடத்திலே யெழுந்தருளி மீளவும் மறைந்து நிற்குமாயின்.— உதாரணம் சித்தியாரில், "இருஞ்சுரவிக் கெங்கு, முருக்காண வொண்ணாத பால்முலைப்பால் விம்மி யொழுகுவது போல்வெளிப்பட் டருளுவனன் பர்க்கே" [xii, 4] என்பது கண்டுகொள்க. மேற்பாடம்.

அருண்மா ரூகும் பெரும - தம்பிரானே தேவரீர் அனுக்கிரகவா னென்கிறதுக்கு மாறுபாடுண்டாம். அஃதன்றியும்,

நிற்பெற் றவர்க்கு மூற்பவ முண்டெனுஞ் சொற்பெறும் - அப்படி யனுக்கிரகவானல்லவென்கிற தன்றியுந் தேவரீர் திருவடியை அடைந்தவர்களுக்கு மீண்டுஞ் செனன முண்டென்கிற சொல்லையு முடைத்தாயிருக்கும்.

அஃதித் தொல்லுலகில்லை - அப்படியாகையால் அனாதியே தொடங்கித் தேவரீர் திருவடியைப் பெற்ற பெரியோரென்று சிலர் உண்டாகப் போகிறதுமில்லை. ஆகையால்,

அவ்வவ் வமைவுஞ் சார்பும் - அடியேன் விண்ணப்பஞ்செய்த அந்தந்த நிறைவும் சேர்ச்சியும்,

மயர்வற - அடியேனுக்கு மயக்கந் தீரத்தக்கதாக,

சொல்வில் - தேவரீ ரருளிச்செய்யில்,

சொல்லெதிர் சொல்லாச் சொல்லே சொல்லுக - அடியேன் மறுத்து எதிருத்தரம் விண்ணப்பஞ்செய்யாதபடி யருளிச்செய்தருள வேணும்,

சொல்லிறந்தோயே - வாக்கினா லுச்சரித்தற்கும் அப்பாற்பட்ட தம்பிரானே.

அவ்வவ்விடத்திலே சிவன் நிறைந்திருக்கிறதும் ஆன்மாப் பொருந்தியிருக்கிறதும் எப்படியென்னில் [முதலாவது] உடலு முயிரும்போலவுங் கண்ணு மாதித்தனும்போலவும் ஆன்மாவும் ஆன்ம ஞானமும்போலவும் விட்டு நீங்காமற் பொருந்தியிருக்கும், அப்படி யிருக்க விட்டும் பற்றியும் வருவானேனென்னில் அனாதியே மலசம் பந்தனாகையாலே நீ நினைத்தவிடத்திலே பிரகாசிப்போம் நினையாத விடத்திலே நீங்கி நிற்போமென்று திருவுளம்பற்றினது. இரண்டாவது விட்டு நீங்காத பரிபூரண நிலையிலே ஆன்மா வந்து பொருந்தி நீங் குவனென்று சொன்னது மலபோதம் நீங்கினவிடத்திலே சிவனைப் பொருந்துவனென்றும் போதமேலிட்ட காலத்திலே சிவனையிழந்து நிற்பனென்றுஞ் சொன்னது. மூன்றாவது ஏழையாயுள்ள அடிமைக் கிரங்கி யனுக்கிரகம்பண்ணி நிற்போமென்றது பத்தியினாலே வழிபடு கிற அடியார்களுக்கு மனதபீட்டந் தீர்த்து நீங்கி நிற்போமென்று திருவுளம்பற்றின[து. ஆகையாலே விட்டும் பற்றியும் வருகிறது மூன்று பிரகாரணமாகத் திருவுளம் பற்றின]துங் கண்டுகொள்க. கஉ

இங்ஙனந் தத்துவாதீதனாயிருக்கிற தேவரீர் அடியேனுக்கு இந்த மாயா கருவிக[ளாகிய வுடம்புக]ளை யுண்டாக்க அடியேன் அதனோடுங் கூடி யிருந்தும்[அதனோடே] கூடாமனின்றும் வருகைக்கு [வழியே தென்னும்] வினா மேலருளிச்செய்கின்றது.

இறந்தோய் கரணங்க ளெல்லா மெனக்குச்
சிறந்தோ யெனினுமெய்த் தேவே-பிறந்துடனாங்
காயங் கொளவுங் கொளாமலுங் கண்டதுநீ
யாயன்கொல் பாதவத் தற்று. கரு

மேலிதற்கு வியாக்கி.

இறந்தோய் கரணங்களெல்லாம் - கருவி கரணாதிகளைக்கொண்டு அறியும் அறிவுக்கெட்டாமல் அகன்று நிற்கிற நீ,

எனக்குச் சிறந்தோய் - அவையிற்றை யெனக்குண்டாக்கினாய்,

எனினும் - அப்படி யுண்டாக்கி யிருக்கவும்,

மெய்த்தேவே பிறந்துடனாங் காயங் கொளவுங் கொளாமலுங் கண்டது நீ - மெய்கண்ட தேவனே பிறந்துடனாய் மெய்போலப் பொருந்தியிருக்கிற சரீர மிது பொய்யென்று பொருந்தாமலும் பண்ணினது தேவரீர்,

ஆயன் கொல் பாதவத் தற்று - இடையன் வெட்டின மரம் பாதி பச்சையும் பாதி யுலர்தலும்போல, மெய்யாயிருந்த சரீரம் பொய்யென் றறிவித்து நீங்கியும் நீங்காமலிருந்தது.

அன்றியும், காயங் கொளவுங் கொளாமலும் என்பதற்கு இந்த உடல் மெய்போலிருந்தும் உற்றுப்பார்த்தளவில் பொய்போலிருக்கிறதும் என்று பொருளுரைப்பினும் அமையும். அப்படி இந்த உடல் மெய்போலிருந்தும் பொய்யா யழியுமென்றதற்குப் பிரமாணம் சித்தியார்,

"மண்டனில் வாழ்வும் வானத் தரசயன் மாலார் வாழ்வு
மெண்டரு பூத பேத யோனிகள் வாழ்வு மெல்லாங்
கண்டவிந் திரமா சாலங் கனாக்கழு திரதங் காட்டி
யுண்டுபோ லின்றாம் பண்பி னுலகினை யசத்து மென்பர்" [vi,3]

என்றும்,

"கணத்திடைத் தோற்றி மாயுங் காயமென் றறிந்தொ ருக்கால்
வணக்குறீ ரரனை யென்றும் வானவர் வணங்க வைப்பன்" [ii,96]

என்றும், தேவாரத்தில்,

"வாழ்வாவது மாயம்மிது மண்ணாவது திண்ணம்"

[சுந்தரர், கேதாரம், 1] என்றும்,

"இன்றுளே னாளை யில்லே னென்செய்வான் றோன்றி னேனே"
[அப்பர், குறைந்த நேரிசை, i, 1]

என்றும் வரும் ஏதுக்களைக் கண்டுகொள்க. சரீரத்திலே பொருந்தியிருக்கையிலே காய நீக்க மெப்படியென்னின் சரீரம் பொய்யென்றறிவித்துத் தீட்சைக் கிரமங்களினாலே மலங்களைப் போக்கினபடியினாலேயும் அருளில் பொருந்தினபடியினாலேயுஞ் சிவனிடத்திலே சம்பந்தமல்லாமற் காயத்திலே சம்பந்தமில்லை. உதாரணம் சித்தியாரில், "தெரிவரிய மெய்ஞ்ஞானஞ் சேர்ந்த வாறே சிவன்பிரகாசிக்குமிங்கே சீவன்முத்த னுக்கு, முரியமல மவுடதத்தாற் றடுப்புண்டவிடமு மொள்ளெரியி னெளிமுன்ன ரிருளுந் தேற்றின், வருபால்சேர் நீர்மருவு கலங்கலும்போ லாகி மாயாதே தான்சத்தி மாய்ந்து காயந், திரியுமள வும்முளதாய்ப் பின்பு காயஞ் சேராத வகைதானுந் தேயு மன்றே" [xi, 4] என்பது கண்டுகொள்க. கரு

அடியேனுக்குப் புண்ணிய பாவங்க ளெண்கைக்கு வழி ஏதென்னும் வினா மேலருளிச் செய்கின்றது.

அற்றதென் பாச முற்றதுன் கழலே
யருட்டுறை யுறையும் பொருட்சுவை நாத
வேறென் றிருந்த வென்னை யான்பெற
வேறின்மை கண்ட மெய்கண்ட தேவ
விருவினை யென்ப தென்னைகொ லருளிய
மனமே காயம் வாக்கெனு மூன்றி
னிதமே யகித மெனுமிவை யாயிற்
கணத்திடை யழியுந் தினைத்துணை யாகா
காரணஞ் சடமதன் காரிய மஃதா
லாரணங் காம்வழி யடியேற் கென்னைகொல்
செயலென தாயினுஞ் செயலே வாரா

தியமன் செய்தி யிதற்கெனின் னமைவும்
பின்னையின் ருகு மன்னது மிங்குச்
செய்திக் குள்ள செயலவை யருத்தின்
மையறீ ரியமற்கு வழக்கில்லை மன்ன
வொருவரே யமையு மொருவா வொருவற்
கிருவரும் வேண்டா விறைவனு நின்றனை
நின்னது கருணை சொல்லள வின்றே
யமைத்தது துய்ப்பி னெமக்கணை வின்று
முள்ளது போகா தில்லது வாரா
துள்ளதே யுள்ள தெனுமுறை யதனாற்
கொள்ளும் வகையாற் கொளுத்திடு மாயின்
வள்ளன் மையெலா முன்னிட வமையு
மீய வேண்டு மெனும்விதி யின்று
மாயினு மென்னை யருந்துயர்ப் படுத்த
நாயி னேற்கு நன்றுமன் மாயக்
கருமமுங் கரும பந்தமுந்
தெருள வருளுஞ் சிவபெரு மானே. கச

**மேலிதற்கு வியாக்கி.**

அற்றதென் பாச முற்றதுன் கழலே-தேவரீர் அனுக்கிரகத்தாலே அடியேனுக்கு உண்டாயிருக்கப்பட்ட பாசபந்தங்கள் நீங்கினதுந் தப்பாது உன்னுடைய திருவடியிலே கூடினதுந் தப்பாது,

அருட்டுறை யுறையும் பொருட்சுவை நாத - திருவருட்டுறையாகிய திருவெண்ணெய் நல்லூரிலே யெழுந்தருளி யிருக்கப்பட்ட அடியேனுக் கினிமைப்பயனு யிருந்துள்ள தம்பிரானே,

வேறென் றிருந்த வென்னை யான்பெற வேறின்மை கண்ட மெய்கண்ட தேவ-தேவரீரை விட்டு அடியேன் அன்னியமா யிருப்பனென்று கண்டிருந்த அடியேனை அடிமையென்கிற முதலுங்கெடாமற் றேவரீரைவிட் டன்னியமாகாத முறைமையைக் கடாட்சித்தருளின மெய்கண்ட நாதனே,

இருவினை யென்ப தென்னைகொல் - அடியேனுக்குப் புண்ணிய பாவங்கள் உண்டென்றது ஏதுகாரணங் கொண்டு. கொல் ஐயம்.

அருளிய மனமே காயம் வாக்கென மூன்றி னிதமே யகித மெனு மிவை யாயிற் - தேவரீரருளிச் செய்யப்பட்ட மனத்தி னினைவாலும் வாக்கின் சொல்லாலும் காயத்தின் தொழிலாலு முண்டாகப்பட்ட விருப்பு வெறுப்பினாலே இருவினையாகிய புண்ணிய பாவங்களுண்டா மாகில்.—உதாரணம் சிவப்பிரகாசத்தில், "உற்றதொழி னினைவுரையி லிருவினையு முளவா" [ii, 13] மென்பது கண்டுகொள்க. மேற்பாடம்.

கணத்திடை யழியுந் தினைத்துணை யாகா - அப்படி யுண்டா கப்பட்ட நினைவுஞ் சொல்லுந் தொழிலுந் தோன்றினவுடனே யழிந்துபோம் அவையிற்றுக்கு ஒரு தினையளவு கண்டிப்பு மில்லை யாம். அன்றியும்,

காரணஞ் சடமதன் காரிய மஃதால் - அந்த மன வாக்குக் காயங் களாகிய கன்மத்தின் காரணஞ் சடமா யிருப்பதொன்று அதன் காரி யங்களு மப்படிச் சடமேயானல்,

ஆரணங் காம்வழி யடியேற் கென்னைகொல் - அப்படிச் சடமா யிருக்கப்பட்ட கன்ம காரியங்கள் அடியேன் மேல் எடுக்கிற செனனங் களிலே வந்து பொருந்தி வருத்துகைக்குச் செயலுண்டாகைக்கு வழி யேதுதான். கொல் ஐயம். அப்படி அந்தக் கன்மங்கள் சடமா யிருந்தாலும் நீ யறிவுள்ளவனாகையாலே உன்னோடுங் கூடும் அவ தாரத்து அதற்குச் செயலுண்டா யிருக்கும்,

செயலென தாயினுஞ் செயலே வாராது - அப்படி அடியேனுக் குச் செயலுண்டென்று சொல்லுகைக்கு வழியில்லை அப்படி யறி வுண்டாமாகில் அடியே னிச்சைப் படியே முடியக் கண்டதுமில்லை. அன்றியும்,

இயமன் செய்தி இதற்கென்-அடியேனுக்கு அப்படி வேண்டின காரியங்கள் செய்துகொள்ளுகைக்குச் செயலுண்டாமாகில் அடியே னுக்கு இயமதண்டமுண்டாகத்தக்க பொல்லாங்குகள் செய்துகொள்வ தில்லை. அதுவுமன்றியும்,

நின் னமைவும் பின்னையின் றாகும் - அப்படி அடியேனுக்கு வேண்டத்தக்க காரியஞ் செய்துகொள்ளத்தக்க செயலுண்டாமாகில் தேவரீர் செய்விக்கிறது மில்லையாய் முடியும்,

அன்னது மிங்குச் செய்திக் குள்ள செயலவை யருத்தின் - அப் படித்தேவரீர் செய்விக்கிறதும் இப்பொழுது அடியேன் செய்த கன் மத்துக்குத் தக்கது மேலைக்குப் புசிப்பிக்குமாகில்,

மையறீ ரியமற்கு வழக்கில்லை மன்ன - தம்பிரானே மயக்க மற்ற இயமன் அடியேனைத் தண்டப்படுத்துகைக்கு வழக்கில்லையாம். அப்படியானாலும் நீ செய்ததுக்குத் தக்கது நாமுஞ் செய்விப்போம் இயமனுந் தண்டப்படுத்துவன். அப்படியானால்,

ஒருவரேயமையு மொருவா வொருவற் கிருவரும் வேண்டா என்பதனை ஒருவாவொருவற் கொருவரே யமையு மிருவரும் வேண்டா என்று பொருட்கேற்க மாறுக. பொருளாவது ஒப்பற்ற தனிமுதலாயுள்ளவனே அடியேனொருத்தனுக் கொருத்தரேயமையும் தேவரீரும் இயமனுங்கூடித் தண்டிக்க வேண்டுவதில்லை. ஆகையால்,

இறைவனு நின்றனை - சர்வமுந் தேவரீர் செயற்படுத்துமென் றிருக்குமிடத்தும் வேறேயுமொருவரைக் கூடித் தேவரீர் செயற் படுத்துகில் தேவரீர் சர்வகத்தாவென்கிறதும் இன்றே நின்றது. அது வேனென்று கேட்டருளுகில்,

நின்னது கருணை சொல்லள வின்றே - தேவரீர் காருண்ணியத் தின் பகுதியை யடியேனால் விண்ணப்பஞ்செய் தளவுபடுத்தத்தக்க தல்லவே.—அப்படியிருக்கச் சொன்ன இருவினையாகிய மனவாக்குக் காயங்களினாலே தோன்றப்பட்ட கன்மமுஞ் சடம் அதன் காரணமுஞ் சடமாகையால் அந்தக் கன்மங்கள் செனனமரணத்திலே வந்து பொருந்துகைக்கு வழியேதென்று கேட்க அதற்கறிவாயுள்ள ஆன்மா வோடு பொருந்தினவிடத்திலே செயலுண்டென்ன அப்படிச் செய லுண்டாகில் இயமதண்டம் வருவானேனென்ன அதுவும் நீ செய்த கன்மத்துக்கேற்றபடி செய்வோமென்ன அதுக்குத் தேவரீர் போதும் இயமனைக்கொண்டு தண்டிக்கவேணுமோவென்ன யமனுந் தண்டிப் பான் நாமுந்தண்டிப்போ மென்றதற்கு உதாரணம் சிவப்பிரகாசத் தில்,"படைத்ததொரு படியன்றிப் பறவைபசு நராய்ப்பண்ணியதென் முன்னைவினைப் பான்மை யென்ப, ரடுத்தவினை யுளதாகி லிறையே னென்னில் சேதனமற் றிவையாவிக் கமைத்த தாகு, மெடுத்தவினை யுருவுறவ துயிரேற் றூனே யிருவினைக்குத் தக்கவுட லெய்து மென் னிற், சடத்திரளு மகத்தாவா யறிவொன் றில்லாத் தன்மையனுங் கூடவொரு சங்கை யின்றே" [ii, 6] யென்றும், போற்றிப்பஃ றொடையில், "தான்மாள, வெற்றிக் கடுந்தூதர் வேகத் துடன்வந்து, பற்றித்தம் வெங்குருவின் பாற்காட்ட - இற்றைக்கு, மில்லையோ பாவி

பிறவாமை யென்றெடுத்து, நல்லதோ ரின்சொல் நடுவாகச்-சொல்லி யிவர், செய்திக்குத் தக்க செயலுறுத்து வீரென்று, வெய்துற் றுரைக்க விடைகொண்டு - மையறருஞ், செக்கி லிடைத்திரித்துந் தீவாயி லிட்டெரித்துந், தக்கநெருப் புத்தூண் டழுவுவித்து - மிக் கோங்கு, நாராசங் காய்ச்சிச் செவிமடுத்து நாவரிந்து, மீராவுன் னூ னைத்தின் னென்றடித்தும் - பேராம, லங்காழ் நரகத் தழுத்துவித்தும் பின்னுந்தம், வெங்கோப மாறாத வேட்கையரா - யங்கொருநா, ளெண்ணிமுதல் காணாத வின்னற் கடுநரகம், பன்னெடுநாட் செல்லும் பணிகொண்டு - முன்னடிக், கண்டு கடன் கழித்தல் காரியமா மென் றெண்ணிக், கொண்டு வருநோயின் குறிப்பறியார் - மண்டெரியிற், காய்ச்சிச் சுடவறுக்கக் கண்ணுரிக்க நன்னிதிய, மீத்துத்தாய் தந்தை தம ரின்புறுதல்" [82 - 100] போல அப்படிச் செய்கிறதுங் கரு ணையே. இப்படி வரும் எதுக்களைக் கண்டுகொள்க. மேற்பாடம்.

அமைத்தது துய்ப்பின் எமக்கணை வின்றூ முள்ளது போகா தில்லது வாரா துள்ளதே யுள்ள தெனுமுறை யதனால் என் பதனை உள்ளது போகா தில்லது வாரா துள்ளதே யுள்ள தெனு முறை யதனா லமைத்தது துய்ப்பின் எமக்கணை வின்றூம் என்று பொருளுக் கேற்க மாறுக. பொருளாவது அடியேனுக் குண்டாகிய கன்மம் யாதொன் றுண்டு அதுபோகாது இல்லாத கன்மங்கள் வாராது ஆகையால் யாதொன் றூழிலே யுண்டாகப்பட்டது அதுவே இப்பொழு துண்டா மத்தனை என்று தேவரீர் அருளிச் செய்த திருவாக்கினால் அடியேனுக்குண்டான பிராரத்துவம் புசிக்கிற தொழிய மேலைக்கு உற் பத்தியாக ஆகாமிய முண்டாகைக்கு வழக்கில்லையே,

கொள்ளும் வகையாற் கொளுத்திடு மாயின்-பிராரத்துவம் புசிக்கு மிடத்து ஆகாமிய முண்டாமென்று அருளிச் செய்யில்.—உதார ணம்: "மேலைக்கு வருவினையே தென்னி லங்கண் விருப்புவெறுப் பெனவறியவ் விளைவு மெல்லா, மூலத்து வினைப்பயனா மென்னி னூமேன் முற்றியதன் பயனுனக்கு முளைக்கு மென்பர்" [சிவப்பிரகா சம், ii, 12] என்று சொன்னது கண்டு கொள்க. மேற் பாடம்.

வள்ளன்மை யெல்லா முள்ளிட வமையும் - தேவரீருக்குண்டா கிய வளப்பாடுகளெல்லாம் நினைந்திருந்தாற் போதும். அன்றியும்,

ஈயவேண்டு மெனும் விதியின்றாம் - அப்படிப் பிராரத்தம் புசிக்கு மிடத்து ஆகாமிய மேறுமாகில் கொடுத்துப் புண்ணியம் பெற வேணு மென்று நூல்களை விதிக்க வேண்டுவ தில்லையாம்,

ஆயினும் - அடியேன் கேட்ட வினுவுக்குத் தேவரீர் அருளிச் செய்த தொன்றும் புலப்பட வருளிச்செய்த தில்லையாகிலும் இன்ன மும் தேவரீ ரருளிச்செய்யாமல் அடியேனறியும் பகுதியுமில்லை,

என்னை யருந்துயர்ப் படுத்த நாயினேற்கு நன்றுமன் மாயக் கரு மமுங் கரும பந்தமுந் தெருள வருளுஞ் சிவபெருமானே என்பதனை என்னை யருந்துயர்ப்படுத்தக் கருமமுங் கருமபந்தமு நாயினேற்கு நன்றுமன் மாயத் தெருளவருளுஞ் சிவபெருமானே யென்று பொரு ளுக் கேற்க மாறுக. பொருளாவது அடியேனுக்கு அரிய துக்கங் களை யுண்டாக்கப்பட்ட கருமமாகிய புண்ணிய பாவங்களுண்டாகிறதும் அந்தப் புண்ணிய பாவங்க ளனுபவிக்கு மிடத்து மேலைக்குச் சென னத்துக் கேதுவாகிய ஆகாமிய கன்மமான கருமபந்தங்களுண்டாகிற தும் நாயாயிருக்கப்பட்ட அடியேனுக்குத் தேவரீர் திருவுள்ளம் வாழ்ந்தருளி விளங்க அருளிச் செய்தருள வேணும் சிவமுதலாயிருக் கப்பட்ட தம்பிரானே. ௧௪

இங்ஙனஞ் சொல்லப்பட்ட கன்மங்களும் அடியேனுக்குக் கூடு கைக்கு வழி எதென்று கேட்கும் வினு மேலருளிச் செய்கின்றது.

மானமருஞ் செங்கை மதில்வெண்ணெய் வாழ்மன்ன
போன வினை தானே பொருந்துமோ-யான தனி
லாவனே வாக்கா யமலனு நின்னருடான்
றேவனே யாதுக்கோ தேர். ௧௫

## மேலிதற்கு வியாக்கி.

மானமருஞ் செங்கை மதில்வெண்ணெய் வாழ்மன்ன - செந்தா மரை மலர் போன்ற சீயத்தத்திலே மான்மறியைத் தரித்துக்கொண்டு திருமதினி னுயர்ச்சியாலே சிறப்பினை யுடைத்தாகிய திருவெண் ணெய்நல்லூரிலே யெழுந்தருளி யிருக்கப்பட்ட தம்பிரானே,

போன வினை தானே பொருந்துமோ - முற்செனனத்திலே அடி யேன் செய்த புண்ணிய பாவங்களான வினைகள் தானே வந்து அடி யேனைக் கூடுமோ,

யானதனி லாவனோ - அடியேன்றான் அந்த வினைகளைக் கூடுவேனோ. இவை யிரண்டுமன்றித் தேவரீர் கூட்டிச் செய்விக்குமென்னில்,

தேவரீர் நின்மல சொரூபியாய் மலாதீதனா யிருக்கையினாலே இரண்டையுங் கூட்டி முடிக்கிறதுமில்லை.

நின்னருடான் றேவனே யாதுக்கோ தேர் - தேவரீரே கூட்டி முடியாதபோது உன்னுடைய அருளானதுதான் எதுக்குண்டானதென்று திருவுளத்திலே விசாரித் தருளிச்செய்தருள்.— எனவே, கன்மமும் அநாதி ஆன்மாவுஞ் சிவமும் அநாதி ஆகையினாலே அவரவர் ஆர்ச்சித்த கன்மத்தைக் கர்த்தா கூட்டி முடிப்பன். உதாரணம் சிவஞானபோதத்தில், "அவ்வினையைச் செய்வதனி லவ்வினைஞர் தாஞ்சென்றங், கவ்வினையைக் காந்த பசாசம்போ - லவ்வினையைப், பேராம லூட்டும் பிராணி னுகாரே, லார்தா மறிந்தணைப்பா ராங்கு" [ii, 6] என்பது கண்டுகொள்க. ௧௫

இங்ஙனஞ் சொல்லப்பட்ட கன்மங்கள் தேவரீர் தீட்சைகளினாலே சுத்திபண்ணி யிருக்கவும் மீளவும் புசிக்கைக்கு வழி யேதென்னும் வினா மேலருளிச் செய்கின்றது.

தேரா துரைப்பன் றெருமா லுளத்தொடு
பேரா தருளுதல் பெரியோர் கடனே
நின்னைக் கலப்ப தென்னுண் மையெனின்
நின்னது நேர்மை சொன்மனத் தின்றே
யெழுவகைத் தாதுவி னெழுதுளை யிரண்டும்
பெருமுழைக் குரம்பையிற் பெய்தகத் தடக்கி
நீக்கி யென்றனைப் போக்கற நிறுத்தி
யிச்சை முதலிய வெழுப்பி நடத்திடும்
விச்சை சாலவும் வியப்பது நிற்க
வாக்கு மனமும் போக்குள தறுவுஞ்
சொல்லு நினைவுஞ் செய்யுஞ் செயலு
நல்லவுந் தீயவு மெல்லா மறிந்து
முறைபிற ழாமற் குறைவுநிறை வின்றாய்க்
காலமுந் தேசமு மாலற வகுத்து
நடுவுநின் றருத்தலி னடுவனா குதியே

சான்றோர் செய்தி மாண்டிருப் பின்றே
சாலார் செயலே மாலா குவதே
யத்துவா மெத்தி யடங்கா வினைகளுஞ்
சுத்திசெய் தனையே யொத்தகன் மத்திடை
நீங்கின வென்னை யூங்கூழ் வினைகளு
மாங்கவை யருத்துவ தாரைகொ லதனாற்
கரும மருத்துங் கடனது வின்றுந்
தருமம் புரத்தல் பெருமைய தன்றே
கண்ணினுண் மணிய கருத்தினுட் கருத்த
வெண்ணெய் வேந்த மெய்கண்ட தேவ
விடர்ப்படு குரம்பையு ளிருத்தித்
துடைப்பதில் லாவரு டோன்றிடச் சொல்லே. கசூ

மேலிதற்கு வியாக்கி

தேரா துரைப்பன் றெருமா லுளத்தொடு - தேவரீர் சன்னிதியிலே ஒரு வினை விசாரியாமல் விண்ணப்பஞ் செய்கிறேன் அடியேன் விதனத்தை யுற்றவனாகையாலே. அன்றியும்,

பேரா தருளுதல் பெரியோர் கடனே - பேதையாயிருக்கப் பட்டவர்கள் தாகத்தின் மிகுதியாலே தங்களுக்கு வேண்டினதொன்றை யெழுந்தது புத்தியாக விண்ணப்பஞ்செய்தாலும் அவர்கள் தாகங் கண்டு உடனே கடாட்சித் தருளுகிறது பெரியோர்களுக்கு முறைமையாகையாலு மது விசாரியாமல் விண்ணப்பஞ் செய்தேன். அதுவே தென்று கேட்டருளுகில்,

நின்னைக் கலப்ப தென்னுண்மை யெனின் - தேவரீரைக் கூடி யனுபவிக்கிறது அடியேனுடைய அற்பபோதமா மென்று தேவரீர் திருவுளம் பற்றுகில்,

நின்னது நேர்மை சொன்மனத் தின்றே - தேவரீருடைய நுட்பத்தை விசாரிக்கு மிடத்து வாக்குக்கும் மனத்துக்கும் எட்டப்பட்டதல்லவே. அப்படியிருக்கிற தேவரீருக்குள்ளே அடங்கி யிருக்கப்பட்ட அடியேனைத் தேவரீர்,

எழுவகைத் தாதுவி னெழுதுளை யிரண்டும் பெருமுழைக் குரம்பையிற் பெய்தகத் தடக்கி நீக்கி யென்றனைப் போக்கற நிறுத்தி யிச்சை முதலிய வெழுப்பி நடத்திடும் விச்சை சாலவும் வியப்பு -

நரம்பு எலும்பு மூளை தசை தோல் இரத்தஞ் சுக்கில மென்னப்பட்ட தாதுக்களேழுங் கண் மூக்குச் செவி உபத்தம் என்னப்பட்ட அற்பத் துவாரங்களேழும் வாய் அபான மென்னப்பட்ட பெரிய துவார மிரண்டும் ஆகத் துவார மொன்பதுமா யிருக்கப்பட்ட சரீரத்திலே யிட்டு உள்ளே யொடுக்கி வைத்து,

'நீக்கி யென்றனைப் போக்கற நிறுத்தி' யென்பதனை 'என்றனைப் போக்கற நிறுத்தி நீக்கி' யென்று பொருளுக்கேற்க மாற்றுக. பொருளாவது அடியேன் அந்தச் சரீரத்தை விட்டுப் போகாமல் நிறுத்தி வைத்து அதனை விட்டுப் போமவதரத்து விடுவிப்பதுஞ் செய்து,

இச்சை முதலிய வெழுப்பி நடத்திடும் விச்சை சாலவும் வியப்பு - அடியேனுக்கு உண்டாயிருக்கப்பட்ட இச்சாஞானக் கிரியைகளையும் பிரேரிப்பித்துக் காரியப்படுத்துகின்ற வித்தை மிகவுங் கொண்டாட்டமா யிருந்தது,

அது நிற்க - இங்ஙனந் தேவரீர் செய்தருளின காரியம் அடியேனாலேயோ புகழப்பட்டிருப்பது அது நிற்கட்டும்,

வாக்கு மனமும் போக்குள தனுவுஞ் சொல்லு நினைவுஞ் செய்யுஞ் செயலும் நல்லவுந் தீயவு மெல்லா மறிந்து - அடியேன் வாக்கினாற் சொல்லுகிறதினாலும் மனத்தினால் நினைக்கிறதினாலும் காயத்தினாற் செய்கிற தொழில்களினாலு முண்டாகப்பட்ட நன்மை தீமைகளா யுள்ள புண்ணிய பாவங்க ளெல்லாந் தேவரீர் திருவுளத் தடைத்தருளி,

முறைபிற ழாமற் குறைவுநிறை வின்றாய்க் காலமுந் தேசமு மாலற வகுத்து நடுவுணின் றருத்தலி னடுவனா குதியே - அடியேன் செய்து வந்த அடைவுக்குத் தவறு வாராமல் அதற்கதற்கு ஏற்றக் குறைச்சலற அந்தப் புண்ணிய பாவங்களை யனுபவிக்கத் தக்க காலங்களையும் அவையிற்றைப் புசிக்கைக் கிருப்பிடமான தேசங்களையும் மயக்கமற வகுத்து அடியேனையும் அந்தக் கன்மங்களையுங் கூட்டித் தேவரீர் நடுவனாக நின்று புசிப்பிக்கையினாலே தேவரீரை நடுவனென்கிறது முண்டே. ஆகையினாலே,

சான்றோர் செய்தி மான்றிருப்பின்றே - நடுவாயிருக்கப்பட்ட பெரியோர்க ளியல்புக்கு மயக்க முண்டாகாதே,

சாலார் செயலே மாலாகுவதே - சான்றோ ரல்லாத அறிவிலா யுள்ளவர்கள் செயல்களல்லவோ மயக்க முண்டாவது,

அத்துவா மெத்தி யடங்கா வினைகளுஞ் சுத்திசெய் தனையே - மந்திரங்கள் பதங்கள் வன்னங்கள் புவனங்கள் தத்துவங்கள் கலைகள் என்று சொல்லப்பட்ட அறு வகையாலும் நிரம்பி எஞ்சிக் கிடக்கிற கன்மங்களை யெல்லாந் தீட்சைகளினாலே தேவரீர் சோதனை செய்து அடியேனைச் சுத்தி வருத்தினதுண்டே.—அதுவுண்டென் றருளிச் செய்யில் அப்படி யிருக்கவும்,

ஒத்தகன் மத்திடை நீங்கின என்னை - அடியேனுக்கு இருவினை யொப்பிலே போனதென்ன.—அதுவன்றியும்,

ஊங்கூழ் வினைகளு மாங்கவை யருத்துவ தாரை - உவ்விடத்துண்டான ஊழ்வினைகள் தேவரீர் செய்யப்பட்ட தீட்சைகளினாலே சுத்தி செய்த விடத்து அந்தக் கன்மங்கள் புசிப்பிக்கிற தாரையாம்,

கொல் ஐயம்.

அதனாற் கருமம் மருத்துங் கடனது வின்றாம் - தேவரீர் சுத்தி செய்தவர்கள்தன்னை என்று அருளிச்செய்யில், தேவரீர் சுத்திசெய்த வழக்கினால் மீளவுங் கன்மங்கள் நின்று புசிப்பிக்கைக்குக் கடனில்லையாம்.—அப்படிப் புசிப்பிக்குமென்று அருளிச்செய்யில்,

தருமம் புரத்தல் பெருமைய தன்றே - தேவரீர் தருமகர்த்தாவென் றெழுந்தருளியிருக்கிறது பெருமைக்கத்தனை யென்று விண்ணப்பஞ் செய்யப்படும்,

கண்ணினுண் மணிய - கண்ணுக்கு மணிபோலக் காட்டாக உள்ளவனே,

கருத்தினுட் கருத்த - அறிவுக்கு அறிவாக உள்ளவனே,

வெண்ணெய் வேந்த - திருவெண்ணெய் நல்லூருக்குக் கர்த்தாவாக உள்ளவனே,

மெய்கண்ட தேவ - மெய்கண்ட நாதனே,

இடர்ப்படு குரம்பையு ளிருத்தித் துடைப்பதில் லாவருள் தோன்றிடச் சொல்லே-துக்கத்துக் கேதுவாயுள்ள சரீரத்துக்குள்ளே அடியேனை இருத்திவைத்து அடியேனுக்குண்டான கன்மங்களைத் தூய்தாகப் போக்காத அந்த அனுக்கிரகத்தை அடியேனுக்கு விளங்க அருளிச் செய்தருள்.

ஏது : தேவரீரைக் கலந்திருக்கிறது என்னுண்மையானுல் தேவரீருடைய நுட்பம் மனம்வாக்குக் கெட்டாதென்று சொல்ல வேண்டுவதில்லையாம் என்றதற்குச் சிவனும் ஆன்மாவும் எக்காலமும் இடைவிடாம லிருக்கையிலேயும் ஆன்மா மலத்திலே பற்ருனபடியி ஞலே சிவனிடத்திலே கூடி நின்றும் பற்றில்லையாகையால் சிவன் பெத்தத்திலே யொளித்திருப்பா னென்பதற்கு உதாரணம் போற்றிப் பஃறெருடையில், 'உள்ளமென்று நீங்கா தொளித்திருந்து தோன்றி நின்ற,கள்ளமின்று காட்டுங் கழல்போற்றி' [167,168] யென்பது கண்டு கொள்க. எழுவகைத் தாதுக்களினுலும் நவத்துவாரங்களினுலும் இந்த சரீரத்திலே பொருந்த வைத்துச் செனன மரணமும் படுத்தி அடி யேனுக்குண்டான இச்சாஞானக் கிரியைகளையும் பிரேரிப்பித்து நடப் பித்ததுங் கொண்டாட்டமாயிருந்ததென்று சொல்லுவானேனென் னில் சிவனைப் பொருந்தியுஞ் சரீரபந்தத்திலே வைப்பானேனென் பது கருத்து. அது மல சம்பந்தமாகையாலே மலக்குருடனுக்கு மலம் நீங்கவேண்டி மாயையாகிய கோல் கொடுத்ததென வறிக. உதாரணம் போற்றிப்பஃறெருடையில், 'கட்புலனுற் காணுர்தங் கைக்கொடுத்த கோலேபோற், பொற்புடை மாயைப் புணர்ப்பின்கண்' [21, 22] என் பது கண்டுகொள்க. மனம்வாக்குக் காயங்களினுலே யார்ச்சிக்கப்பட்ட புண்ணிய பாவங்களைத் தேவரீர் திருவுள்ளத் தடைத்தருளிக் கன்மங் களை நடுவாக நின்று புசிப்பிக்கையினுலே நடுவனென்று சொல்லப்பட் டிருக்கவும் பெரியோர்கள் செய்திக்கு மயக்கம் வாராதே ஆறத்துவா வுஞ் சுத்திபண்ணினதுண்டே கன்ம சமத்துவத்திலே போனதென்ன வெனில் கன்ம சமத்துவமாவது புண்ணிய பாவங்களிரண்டிலேயு முவர்ப்பு வந்தது கன்ம சமத்துவம். அப்படிக் கன்ம சமத்துவம் வந்த விடத்துச் சத்திநிபாதமுண்டாயதினுலே கர்த்தா ஆசாரிய மூர்த்த மாகத் திருமேனி கொண்டுவந்து தீட்சாக்கிரமங்களினுலே அத் துவா சுத்திபண்ணி மலத்தைப் போக்கி ரட்சிப்பன். உதாரணம் சித்தி யாரில், "அனுதிமுத்த னுய்ப்பானு யசலனு யெல்லா வறிவுதொழி லனுக்கிரக முடையவரன் கன்ம, நுனுதிகமற் றெத்தவிடத் தேசத்தி நிபாதம்' நுழைவித்து மலங்களெலா நுங்க நோக்கி, மனுதிகா ணங்க ளெலா மடக்கித் தன்னை வழிபடுகல் லறிவருளி மாக்கருணைக் கையா, வினைபிறப் பினினின்று மெடுத்து மாரு வின்பமுத்திக் கேவைப்ப

னெங்கள்முத்தி யிதுவே" [பரபட்சம், சௌத்திராந்திகன் மத மறுதலே, 40] என்பதும், போற்றிப் பஃறொடையில், "நாடும்வினை, எல்லே இரண்டு மிடையொப்பிப் - பல்பிறவி, யத்தமதி லென்றோ வளவென்று பார்த்திருந்து, சத்தி பதிக்குந் தாம்போற்றி - முத்தி தரு, நன்னெறியின் ஞானகலர் நாடுமல மொன்றினையு, மந்நிலையே யுண்ணின் றறுத்தருளிப் - பின்னன்பு, மேவா விளங்கும் பிரளயா கலருக்கு (மெய்காணத்),தேவாய் மலகன்மந் தீர்த்தருளிப் - பூவலையந், தன்னின்று நீங்காச் சகலர்க் கவர்போல, முன்னின்று மும்மலந்தீர்த் தாட்கொள்கை" [105 - 124] என்பது கண்டுகொள்க. இப்படிச் சுத்தி பண்ணியிருக்கச்சேயும் பிராரத்தமாகிய வினை புசிக்க வந்ததாரை, சுத்திபண்ணின ஆன்மாக்களை யென்று ஆசாரியர் திருவுளம்பற்றி னது. அதுவெப்படியென்னில், சஞ்சிதம் ஆசாரியருடைய ஞானதிட் டியினாலும் ஆகாமியம் ஆசாரியர் வைத்த ஞானத்தினாலும்நீங்கும் பிரா ரத்தஞ் சரீரத்துடனே நீங்கும். உதாரணம் சிவப்பிரகாசத்தில், 'தீங் குறு மாயை சேரா வகைவினை திரிவி தத்தா, னீங்கிட' [ix, 1] வென்றும், திருவாதவூரருக்கு அனுக்கிரகம் பண்ணினதில் "விரிந்த சஞ்சித வினைகளன் புடனும் விழிக்க வெந்தது விரும்புமுற் செனனம், புரிந்த வல்வினை யுடலுட னகலும் புந்தி சேருள் வருவினை போக்கும்" [திருவாதவூரர் புராணம், திருப்பெருந்துறைச் சருக்கம், 74] என்றும், 'ஏன்ற வினையுடலோ டேகும்இடை யேறும்வினை, தோன்றி லருளே சுடும்' [திருவருட்பயன், x, 8] என்றும், சித்தி யாரில், 'ஏன்றவுடற் கன்மமனு பவத்தி னலறுத்திங் கினிச்செய் கன்ம மூலமல ஞானத்தா லிடிப்பன்' [viii, 10] என்றும் சொன் னது கண்டுகொள்க. ஆகையால் ஆசாரியர் கடாட்சத்தினாலே மோட்சத்தை யடைந்தாலும் பிராரத்துவம் புசிக்குமளவும் சரீரம் நிற்குமென்றது. ஆனால் ஞானவான்கள் புசிக்கிறது பிராரத்துவமு மாய் அவர்கள் தேகமும் பிராரத்துவதேகமானால் அவர்களை அர்ச்சனை பண்ணினதினாலேயும் நிவேதித்ததினாலேயும் ஆன்மாக்கள் கதியடை வார்களென்று சொல்லவேண்டுவதில்லை யென்னில் அவர்கள் போகஞ் சிவனே யேற்றுக்கொள்ளுகையினாலே சிவபோகமாச்சுது மாயா பதார்த்தஞ் சிவபோகமாமோவென்னில் மாயா பதார்த்தஞ் சுத்திப் பட்டு மந்திரமயமாய் மந்திரமும் ஞானதிருட்டியினாலே பார்க்கப்பட்டு

ஆன்மாவைச் சிவனுடலாகக் கொண்டு புசிக்கையினாலே சிவ போகமாச்சுது. உதாரணம் உண்மை நெறி விளக்கத்தில், "பாதகங்கள் செய்திடினுங் கொலைகளவு கள்ளுப் பயின்றிடினும் நெறியல்லா நெறி பயிற்றி வரினுஞ், சாதிநெறி தப்பிடினுந் தவறுகள்வந் திடினுந் தனக்கெனவோர் செயலற்றுத் தானதுவாய் நிற்கி, னாதனிவ னுடலுயிரா யுண்டுறங்கி நடந்து நானாபோ கங்களையுந் தானாகச் செய்து பேதமற நின்றிவனைத் தானாக்கி விடுவன் பெருகுசிவ போகமெனப் பேசுநெறி யிதுவே" [6] என்பது கண்டுகொள்க. அவர்கள் திருமேனி பிராரத்துவ தேகமல்ல வென்றதுக்குத் திட்டாந்தம் சம்பந்தமூர்த்தி கடாட்சம் பெற்ற கலியாணத்து வந்த நாதாக்கள் திருமேனி யடங்கலும் ஞானத்திலே பொருந்துகையினாலும் அப்ப பண்டாரத்தின் திருமேனி சர்வான்மாக்களுங் காண ஞானப் பிழம்பாகிய மகாலிங்கத்திலே யடைதலினாலும், பட்டணத்துப்பிள்ளை ஞானமாகிய லிங்கமாய் முளைக்கையினாலேயும், திருவாதவூரர் சர்வான்மாக்களுங் காணத் திருவாசகத்து உண்மைப் பொருளைக் கேட்கப் பொருளிதுவென்று ஞானாகாசத்திலே பொருந்தினபடியினாலேயும் பிராரத்துவ தேகமாகிய மாயாதேகத்துக்கும் ஞானத்துக்குஞ் சம்பந்தமில்லாதபடியினாலே அவர்கள் திருமேனியும் ஞானமென்றே கண்டுகொள்க. கசு

சர்வான்மாக்களும் தேவரீர்க் கடிமையாக இருக்கையிலேயுஞ் சிலர்க்குத் திருவருள் கடாட்சித்துஞ் சிலர்க்குக் கடாட்சியாமலுமிருப்பானேனென்று கேட்கும் வினா மேலருளிச் செய்கின்றது.

சோற்றொழும்பு கொள்ள நீ சூழ்ந்ததுவு நிற்செயல்கண்
மற்றவர்க ணின்னோக்கின் மாய்ந்தவுயிர்க்—குற்றங்
கொளித்தியாங் கைய வுயர்வெண்ணெய் நல்லூர்க்
குளித்தமதுக் கொன்றையெங் கோ. கஎ

**மேலிதற்கு வியாக்கி.**

என்பதனை தொழும்பு கொள்ள நீ சூழ்ந்ததுவு நிற்செயல்கள் மற்றவர்கணின் னோக்கின் மாய்ந்தவுயிர்க் குற்றங் கொளித்தி யாங்கைய வுயர்வெண்ணெய் நல்லூர்க் குளித்தமதுக் கொன்றையங்கோ சொல் என்று பொருளுக்கேற்க மாறுக. பொருளாவது:

தொழும்பு கொள்ள நீ சூழ்ந்தது-சர்வான்மாக்களுந் தேவரீர்க்கு அடிமையாக இருக்கவுஞ் சிலர் தேவரீர் திருவருளைப் பெறத்தக்க தான அடிமைத்திறங்கள் செய்துவரும் உபாயங் கொடுத்தருளினும்,

நிற்செயல்கள் மற்றவர்கள் - மற்றுள்ள பெத்தான்மாக்களையுந் தேவரீர் சேட்டைப் படுத்துகையினாலே செயற்பட்டு வருகிறவர்கள் இங்ஙன மிரண்டு வகையினுள்ள ஆன்மாக்களுந் தேவரீராலே செயற் பட்டு வரவும்,

நின்னோக்கின் மாய்ந்தவுயிர்க் குற்றங்கு - தேவரீர் திருக்கண் சாத்தினாலே செயலறுகை வந்த ஆன்மாக்களிடத்திலே அனுக்கிரகஞ் செய்து பிரகாசித்து நின்றும்,

ஒளித்தியாங்கு - மற்றுள்ள பெத்தரிடத்திலே கூடி நிற்கு மிடத்து மறைந்து நின்றும் இங்ஙனம் வருகிற முறைமையை,

ஐய - அடியேனுக்கு சுவாமியா யுள்ளவனே,

உயர்வெண்ணெய் நல்லூர்க் குளித்தமதுக் கொன்றையங் கோ - சிறப்பினால் உயர்ந்திருக்கப்பட்ட திருவெண்ணெய்நல்லூரிலே மதுக்களினால் முழுகப்பட்ட கொன்றை மாலையைச் சாத்தி யெழுந் தருளி யிருக்கப்பட்ட கர்த்தாவாயுள்ளவனே,

சொல் - அடியேன் விண்ணப்பஞ் செய்த காரிய மிரண்டை யும் அருளிச் செய்தருள்.

எனவே, சிவன் கர்த்தா வென்கிறதும் ஆன்மாக்கள் அடிமை யென்கிறதும் பொது. இனிச் சிறப்பாவது கர்த்தாவை ஆண்டவ னென்றறிந்து இரண்டற்ற அன்பினாலே வழிபடுகின்ற ஞானவான் களுக்குத் தயிரில் நெய்போலத் தோன்றி யிருப்பன்; ஆண்டவன் அடிமை யென்றறியாத பெத்தான்மாக்களிடத்திலே பாலினெய் போலத் தோன்றாது நிற்பன். உதாரணம் சிவஞானபோதத்தில், 'தன் னுணரு, நேசத்தர் தம்பா னிகழுந் ததிநெய்போற், பாசத்தார்க் கின் றாம் பதி' [xii, 3] யென்று[ம், திருவாசகத்தில், "அரைசே பொன் னம் பலத்தாடும்" என்னும் செய்யுளில் "பிரைசேர் பாலி னெய் போலப் பேசா திருந்தா லேசாரோ"-கோயின்மூத்த திருப்பதிகம், 5- என்றும், தேவாரம், "விறகிற் றீயினன் பாலிற் படுநெய்போல், மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்"- அப்பர், தனித்திருக் குறுந்தொகை 10 - என்றும்] வரும் ஏதுக்களைக் கண்டுகொள்க. கள

இங்ஙனம் உயிர்க்குயிராய் நின்று காரியப்படுத்துகிற சிவன் பெத்தத்திலே மறைந்து நின்று காரியப்படுத்துகிற முறைமையும் முத்தியிற் பிரகாசித்துத் தான் மேலிட்டுநின்று உபகரிக்கிற முறைமையும் மேலருளிச் செய்கின்றது.

**கோ**லங் கொண்ட வாறுண ராதே
ஞாலங் காவல னியானெனக் கொளீஇப்
பொய்யை மெய்யெனப் புகன்று வையத்
தோடாப் பூட்கை நாடி நாட
வென்னுட் கரந்தென் பின்வந் தருளி
யென்னையுந் தன்னையு மறிவின் றியற்று
மென்ன தியானெனு மகந்தை யுங்கண்
டியாவ ரியாவையு மியாங்கணுஞ் சென்று
புக்குழிப் புக்குப் பெயர்த்துழிப் பெயர்த்து
மிக்க போகம் விதியால் விளைத்திட்
டெற்பணி யாளா யெனைப்பிரி யாதே
யோடி மீள்கென வாடல் பார்த்திட்
டென்வழி நின்றன னெந்தை யன்னோ
வருண்மிக வுடைமையி னருட்டுறை வந்து
பொருண்மிக வருடலும் பொய்ப்பகை யாதலுங்
கைகண்டு கொள்ளெனக் கடலுல கறிய
மெய்கண்ட தேவ னெனப்பெயர் விரீஇத்
தன்னுட் கரந்து தான்முன் னாகித்
தன்னதுந் தானுமா யென்னையின் றாக்கித்
தன்னையு மென்னையுந் தந்து தனது
செய்யா மையு மென்செய லின்மையு
மெம்மான் காட்டி யெய்த
லம்மா வெனக்கே யதிசயந் தருமே. கஅ

இதற்கு மேல் வியாக்கி.

கோலங் கொண்ட வாறுண ராதே ஞாலங் காவலன் யானெனக் கொளீஇ - துக்கத்துக் கேதுவா யிருக்கப்பட்ட சரீரத்தை யெடுத்தோமே யென்கிறதை விசாரியாமல் பூமிக்கு ராசாவாயிருக்கிறவன் நாமல்லவோவென்று கருதிக்கொண்டு,

பொய்யை மெய்யெனப் புகன்று - அசத்தியமா யிருக்கப்பட்ட தேகாதிப் பிரபஞ்சத்தைச் சத்தியமென்று சொல்லிக்கொண்டு,

வையத் தோடா பூட்கை நாடி நாடா வென்னுட் கரந்து - பிர பஞ்ச வியாத்தி பண்ணுகிறதே மேற்கோளாக விருப்பத்தைச் செய்து நமக்கொரு கர்த்தா உண்டென்று விசாரியாதபடி எனக்குள்ளே மறைந்து நின்று,

என் பின்வரு் தருளி - யான் செய்யுஞ் செயலுக்கெல்லாம் ஒத் தொழுகி நின்று,

என்னையுந் தன்னையு மறிவின் றியற்றும் என்ன தியானெனு மகந்தையுங் கண்டு - நாம் ஒரு அடிமையென்றுந் தான் ஒரு நாய னென்றும் அறியாமற் செய்கிற யானெனதென்னும் அகந்தையுங் கண்டு,

யாவ ரியாவையு மியாங்கணுஞ் சென்று - உயர்திணை யஃறிணை யாகிய யோனி பேதங்களினும் பூமி யந்தா சுவர்க்கமென்கிற உலகங் களிலும் என்னோடொக்கச் சென்று,

புக்குழிப் புக்கு - நான் சென்று செனிக்கிற இடங்களிலே தானும் ஒக்கப் புகுந்து,

பெயர்த்துழிப் பெயர்த்து - நான் விட்டுப்போமிடத்துத் தானும் ஒக்கப் பெயர்ந்து,

மிக்க போகம் விதியால் விளைத்து - வெகு வித போகங்களையும் எனக்குள்ள முறைமையின்படியே யுண்டாக்கி,

இங்கெற்பணி யாளாய்-இவ்விடத்து என்னை ஊட்டி யுறக்கி நிற் கிற பண்ணையாளுமாய்,

எனைப் பிரியாதே - என்னைவிட்டு நீங்குவதுஞ் செய்யாமல்,

ஓடி மீள்கென வாடல் பார்த்திட் டென்வழி நின்றன னெந்தை யன்னோ - நான் செனன மாணப்பட்டுப் போக்கு வரவு செய்கிற நாடகத்தையும் பார்த்துத் தன் முதன்மையும் விட்டு என் வசத்திலே நின்றான் எம்முடைய சுவாமியா யுள்ளவன் இது ஆச்சரியம்!—இந்த நிலை பெத்தம். மேல் முத்தி. அன்னோ - ஐயோ என்பதாச்சரியம்.

அருள் மிக வுடைமையின் - தனக்குக் கிருபை மிகுத்திருக்கையி னாலே,

அருட்டுறை வந்து - திருவெண்ணெய் நல்லூராகிய திருப்படை வீட்டிலே திருவவதாரஞ் செய்தருளி,

பொருள்மிக வருள்தலும் - சிவானுபவமாகிய பொருளானது மிகுதியாக நின்று அனுக்கிரகிக்கிறதையும்,

பொய்ப்பகை யாதலும்-அந்தப் பொருள் பிரபஞ்சமாகிய பொய்யைக் கடிந்து தீர்க்கிற வழக்கையும்,

கைகண்டு கொள்ளென-பிரத்தியட்சமாகக் கண்டுகொள்ளெனக் காட்டியருளி,

கடலுல கறிய மெய்கண்ட தேவ னெனப்பெயர் விரீஇ - சமுத்திரஞ் சூழ்ந்த வையகத்தா ரறியத்தக்கதாக மெய்கண்ட நாதனென்கிற திருநாமத்தினையும் பரப்பியருளி,

தன்னுட் கரந்து தான்முன் னாகி - தன்னுடைய பேரறிவினுள்ளே என்னுடைய சிற்றறிவை யடக்கிக்கொண்டு தன் செயலே மேலீடாக,

தன்னதுந் தானுமா யென்னையின் றாக்கி - தன்னுடைய அருளுந் தானுமாய் என்னையும் என்னுடைய ஞானத் தோற்றத்தையும் அடக்கிப் போட்டு,

தன்னையு மென்னையுந் தந்து - தான் ஒரு முதலுண்டென்கிறதுங் கெடாமல் நானொரு முதலுண்டென்கிறதுங் கெடாமல் எனக்குப் புலப்பட அறிவித்து,

தனது செய்யா மையு மென்செய லின்மையும் - தான் சர்வமுங் காரியப்படுத்தி நிற்கச்செய்தே தானொன்றிலுஞ் சுட்டியறிவியாமல் தோய்வற நிற்கிற முறைமையினையும் நான் சர்வமுஞ் செய்து நிற்கச் செய்தே என்னால் ஒன்று முடியாதென்கிற செயலறுதியையும்,

எம்மான் காட்டி யெய்தல் - எம்முடைய சுவாமியா யிருக்கிறவன் எனக்குத் தரிசனப்படுத்திநின்ற முறைமையைப் பார்த்தவிடத்து,

அம்மா வெனக்கே அதிசயந் தருமே - மிகவுங் கொண்டாடப்பட்டு எனக்குத் தானே ஆச்சரியத்தையுந் தாராநிற்கும். கஅ

இங்ஙனம் பாசக்ஷயம் பண்ணின ஆச்சரியத்தை மேலும் அருளிச்செய்கிறது.

தருமா தருமத் தலைநின்றாழ் வேனைக்
கருமா கடல்விடமுண் கண்டப்—பெருமான்
திருவெண்ணெய் நல்லூர்ச் சுவேத வனத்தா
னுருவென்ன வந்தெடுத்தா னுற்று. ௧௯

**மேலிதற்கு வியாக்கி.**

தருமா தருமத் தலைநின்றாழ் வேனை - தன்மமாகிய பசு புண்ணியத்தையும் அதன்மமாகிய பாவத்தையுஞ் செய்து துக்க சாகரத்திலே கிடந்து அழுந்துகிற என்னை,

கருமா கடல்விடமுண் கண்டப் பெருமான் - கருமை பொருந்தின மகத்தான சமுத்திரத்திலே யுண்டாகப்பட்ட நஞ்சினை அமுது செய் தடக்கப்பட்ட கண்டத்தினையுடைய கர்த்தாவா யுள்ளவனே,

திருவெண்ணெய்நல்லூர்ச் சுவேதவனத்தான் - திருவெண்ணெய்நல்லூராகிய திருப்படை வீட்டிலே எழுந்தருளியிருக்கப்பட்ட சுவேதவனப் பெருமாளென்னும் பிள்ளைத் திருநாமத்தினை யுடையவன்,

உருவென்ன வந்தெடுத்தா னுற்று - சரீரதொந்தனைப்பட்டு நிற்கிற என்னைப்போல உருப்பட்டு வந்து நான் செனனக் குழியிலழுந்தாமல் எடுத்துத் தனது திருவடியிலே கூட்டிக்கொண்டருளினான். ௧௯

கர்த்தா இங்ஙனம் ஆசாரிய மூர்த்தியாகத் திருமேனி கொண்டு எழுந்தருளிப் பாசச்சேதனம் பண்ணித் தனது காருண்ணியமாகிய உண்மை ஞானத்தைக் கடாட்சித்த முறைமையை வியந்துரையாகப் புகழ்ந்த முறைமையை மேல் அருளிச் செய்கின்றது.

உற்றவர் பெற்றவ ரற்றவர் முற்று
மற்றவர்க் கற்றவ னல்லவர்க் கல்லவ
னந்த மாதி யில்லவன் வந்து
குரக்கு மனத்துக் கொடியேன் பரக்கும்
பம்பைக் குவித்து நிறுத்திப் பிடித்திட்
டிருள்வெளி யாகு மருளினை யறுத்து
வந்து புகுதலுஞ் சென்று நீங்கலு
மின்றி யொன்றாய் நின்றஅந் நிலையி

லொன்று காம லிரண்டா காம
லொன்று மிரண்டு மின்றூ காமற்
றன்னது பெருமை தாக்கா னாயினு
மென்னது பெருமை யெல்லா மெய்தித்
தன்னை யெனக்குத் தருவதை யன்றியு
மென்னையு மெனக்கே தந்து தன்னது
பேரா னந்தப் பெருங்கட லதனு
ளாரா வின்ப மளித்துத் தீரா
வுள்ளும் புறம்பு மொழிவின்றி நின்ற
வள்ளன்மை காட்டி மலரடி யருளிய
மன்ன னெங்கோன் வார்புனற் பெண்ணை
வெண்ணெய்க் காவலன் மெய்கண்ட தேவ
னண்ண லருளா லயத்த னண்ணி
மலமுத லாயின மாய்க்கு
முலக வுயிர்க்கெல் லாமொரு கண்ணே. ௨௦

**மேலிதற்கு வியாக்கி.**

உற்றவர் பெற்றவ ரற்றவர் முற்று மற்றவர்க் கற்றவன் - தனது உறவின்முறையாரா யுள்ளவர்கள் மாதாபிதாக்கள் தனக்கு வேற்றுமை யற்றிருக்கப்பட்ட ஸ்திரீகள் மற்றுமுண்டான தனதானிய க்ஷேத்திரங்கள் முதலாயுள்ள சர்வவுபாதியா யிருக்கப்பட்ட தேகாதிப் பிரபஞ்சத்தை நீங்கினவர்களுக்கு இரண்டற்றுப் பிரிவற நிற்கிறவன்,

அல்லவர்க் கல்லவன் - அப்படிச் சர்வவுபாதிகளையும் நீங்காதவர்களுக்கு வேறாய் நிற்கப்பட்டவன்,

அந்த மாதி யில்லவன் - தனக்கு முடிவும் முதலுமில்லாதவன்,

வந்து - ஆசாரியமூர்த்தமாகத் திருமேனிகொண்டு எழுந்தருளி வந்து,

குரக்கு மனத்துக் கொடியேன் பாக்கும் பரப்பைக் குவித்து - குரக்குப் போதம் போல ஒன்றிலுந் தரிப்பில்லாம லெழுந்தது புத்தியாகத் திரிகிற பாவியா யிருக்கிற என்னைப் பிரபஞ்சப் பரப்பில் திரிகிற வியாத்தியை ஒடுக்குவித்து,

நிறுத்திப் பிடித்திட் டிருள்வெளி யாகு மருளினை யறுத்து - தனது திருவடி ஞானத்திலே நிறுத்திப் பழைய பிரபஞ்ச வாதனை

யிலே போகாமற் பிடித்துக்கொண்டு கேவல சகல மென்கிற மயக்கத்தை நீக்கி,

வந்து புகுதலுஞ் சென்று நீங்கலு மின்றி - தான் வந்து எனது உள்ளத்திலே புகுதுகிறதும் நான் சென்று தன்னோடே கூடி எனக் குண்டான பாசங்கள் நீங்குகிறது மில்லாமல்,

ஒன்றாய் நின்றவன் நிலையில் - அறுதியே தானும் நானும் நீங்காமல் நின்ற நிலையிலே,

ஒன்று காம லிரண்டா காமல் - ஒன்றுபடுவதுஞ் செய்யாமல் இரண்டு படுவதுஞ் செய்யாமல்,

ஒன்று மிரண்டு மின்றாகாமல் - தானும் நானும் ஒன்றுபட்டு நிற்கிறதும் பெறுவானும் பேறுமா யிரண்டுபட்டு நிற்கிறது மில்லையாகாமல்.—அன்றியும் ஒன்றாகாம லிரண்டாகாம லொன்று மிரண்டு மின்றாகாமல் என்பதற்கு பேதமும் அபேதமும் பேதாபேதமு மாகாமலென்று பொருளுரைப்பினுமாம்.

தன்னது பெருமை தாக்கா தாயினு மென்னது பெருமை யெல்லா மெய்தி - தனக்குண்டான சர்வஞ்ஞத்துவமும் பஞ்ச கிருத்தியமும் எனக் குண்டாக்கினானில்லை யாயினும் எனக் குண்டாயிருக்கப் பட்ட இச்சா ஞானக்கிரியைகளும் வியாத்தி வியாபகங்களாகிய பெருமையு மிவைகளை யெல்லாந் தன்னுடைய பூரணத்திலே யடக்கிக் கொண்டு,

தன்னை யெனக்குத் தருவதை யன்றியு மென்னையு மெனக்குத் தந்து - தன்னுடைய ஆனந்த சொரூபத்தை எனக்குக் கடாட்சித் ததுமன்றியே அந்தப் பேரின்பத்தோடுங் கூடி யனுபவித்திருக்கிற ஆன்மபோதமாகிய சிற்றறிவு கெடாமல் கெட்டு நிற்கிற முறைமையையும் எனக்குக் கடாட்சித்தருளி,

தன்னது பேரா னந்தப் பெருங்கட லதனு ளாரா வின்ப மளித்து- தன்னுடைய பரிபூரணமான ஆனந்த வெள்ளமான பெரிய அருட் சமுத்திரத்திலே விளையப்பட்டிருப்பதாய் ஒரு காலத்தினும் உவட்டாத இன்பத்தை யெனக்குக் கடாட்சித்தருளி,

தீரா வுள்ளும் புறம்பு மொழிவின்றி நின்ற வள்ளன்மை காட்டி- ஒரு காலத்திலும் விடப்படாமல் அகம்புற மெங்கும் பூரணமாய் நின்று அனவரதமும் அறிவித்து நிற்கிற வளப்பாட்டையுந் தரிசிப்பித்து,

மலரடி யருளிய மன்னன் - தாமரை மலர் போன்ற சீபாதத்தைக் கடாட்சித்தருளின தம்பிரான்,

எங்கோன் - எமக்குக் கர்த்தாவா யுள்ளவன்,

வார்புனற் பெண்ணை வெண்ணெய் காவலன்-மேன்மேலும் வருகிற புனலினாலே பெருகப்பட்ட பெண்ணையாறறை யுடைய திருவெண்ணெய்நல்லூருக்குக் கர்த்தாவா யிருக்கப்பட்டவன்,

மெய்கண்ட தேவன் - மெய்கண்டதேவ னென்கிற திருநாமத்தினை யுடையவன்,

அண்ணல் - எனக்குச் சுவாமியா யிருக்கிறவன்,

அருளா லயத்தன் - தனது அருளே கோயிலாக எழுந்தருளி யிருக்கப்பட்டவன்,

நண்ணி - என்னை வந்து பொருந்தி,

மலமுதலாயின மாய்க்கும் - ஆணவ மூதலாயுள்ள மலங்களை யெல்லாஞ் சேதனம் பண்ணினவன்,

உலக உயிர்க்கெல் லாமொரு கண்ணே - சர்வ லோகங்களிலுமுள்ள ஆன்மாக்களுக் கெல்லாம் ஓர் அறிவாக அறிவித்துநின் றனுக்கிரகஞ் செய்தருளுகிறவன். ௨௦

**மேல் நுட்பம்.**

முற்றும் அற்றவற் கற்றவன் என்ற பதத்துக்கு தேகாதிப் பிரபஞ்சங்களை நீங்கப்பட்ட தபோதனர்க்குக் கர்த்தா இரண்டற்று நிற்பனென்பதற்குப் பிரமாணம் தேவாரம்,

"உலகினி லியற்கையை யொழிந்திட்
டற்றவற் கற்ற சிவனுறை கின்ற வாலவா யாவது மிதுவே"
[சம்பந்தர், "வெற்றவே"]

என்பது. தேகாதி யென்றது உடம்பு முதலாயுள்ளவையிற்றை நீங்கவே தவமாமென்பது கருத்தாகையால் என அறிக. இதற்குப் பிரமாணம் திருவாசகம்,

"பாவி யேற்கு முண்டாமே பரமா னந்தப் பழங்கடல்சேர்ந்
தாவி யாக்கை யானெனதென் றியாது மின்றி யறுதலே"
[பிரார்த்தனைப்பத்து, 5]

என்றும், திருவள்ளுவப் பயனில்,

" மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்றார்க் குடம்பு மிகை " [345]

என்றும் வருவது கண்டுகொள்க.

இனி, அந்த மாதி யில்லவன் என்றதற்கு முதலும் முடிவு மில்லாதவனென்று பொருள் கூறிய தேதென்னில் சிவன் தோற்றமும் ஈறு மில்லாதவனாகையாலே அப்படிச் சொன்னதென அறிக. இதற்குப் பிரமாணம் [திருவாசகம்] திருவெம்பாவையில்,

" ஆதியு மந்தமு மில்லா அரும்பெருஞ் சோதியை " [1]

என்பது கண்டுகொள்க.

இனி, வந்து என்றதற்கு ஆசாரிய விக்கிரகமாக எழுந்தருளி என்று பொருள் கூறியதற்குப் பிரமாணம் [திருவாசகம்] திருவெம்பாவையில்,

" இங்குநம் மில்லங்கள் தோறும் எழுந்தருளிச்
செங்கமலப் பொற்பாதந் தந்தருளுஞ் சேவகனை " [17]

என்பது கண்டுகொள்க.

இனி,குரக்குமனத்துக் கொடியேன் பரக்கும் பரப்பைக் குவித்து என்றதற்கு பிரபஞ்ச வியாத்தியை யொடுக்குவித்து என்றதற்குப் பிரமாணம், ....

இனி, நிறுத்திப் பிடித்திட்டு என்றதற்குத் திருவடியிலே நிறுத்திப் பிரபஞ்சத்தில் மீளாமற் பிடித்து என்றதற்குப் பிரமாணம் சிவஞானபோதம்,

" சிறைவிட்
டலைகடலிற் சென்றடங்கு மாறுபோல் மீளா
துலைவிலரன் பாதத்தை யுற்று " [viii, 7]

என்பது கண்டு கொள்க.

இருள்வெளி யாகு மருளினை யறுத்து என்றதற்குக் கேவல சகல மிரண்டினையும் நீங்கி யென்று பொருள் கூறியதேதென்னில், கேவலத்தில் ஆணவத்தால் மறைப்புண்டு கிடக்கையால் இருளென்றதென அறிக; சகலத்திற் கலையாதி தத்துவங்களோடுங் கூடிச் சீவிக்

கையால் ஒளியென்றதெனை அறிக. இதற்குப் பிரமாணம் சிவப்பிர காசத்தில், "புகலு மலமொழித்தற்" [ii, 19] கென்னுஞ் செய்யுளில்,

"இகலிவரு மிவையுணரி விருள்வெளியாந் தன்மை யெய்தும்"

என்பது கண்டுகொள்க.

இனி, வந்து புகுதலுஞ் சென்று நீங்கலு மின்றி யொன் றாய் நின்றஅந் நிலையில் என்பதற்கு சிவன் ஆன்மாவை வந்து கூடவு மில்லை ஆன்மாச் சிவனைச் சென்று கூடவுமில்லை யென்று பொருள் கூறியதற்குப் பிரமாணம் ஏதென்னில் போற்றிப் பஃறொடையில்,

"உள்ளமென்று நீங்கா தொளித்திருந்து தோன்றிநின்ற
கள்ளமின்று காட்டுங் கழல்போற்றி" [167, 168]

யென்பது கண்டுகொள்க.

இனி, ஒன்றாகாம லிரண்டாகாம லொன்று மிரண்டு மின்றா காமல் என்பதற்கு ஆன்மாவுஞ் சிவனும் இரண்டு முதலாயிருக்கச் செய்தே ஒன்றுபட்டு நில்லாதென்றும் இரண்டுபட்டு நில்லாதென்றும் ஒன்று மிரண்டுமில்லாம லிராதென்றும் பொருள் கூறியதற்குப் பிர மாணம் திருக்காளத்தியந்தாதியில்,

"உரையும் பொருளு முடலு முயிரும்
விரையு மலரும்போல் விம்மிப்—புரையின்றிச்
சென்றவா றேங்குந் திருக்கயிலை யெம்பெருமா
னின்றவா றெங்கு நிறைந்து"

[கைலைபாதி காளத்திபாதி யந்தாதி, 47]

என்றும், சிவப்பிரகாசத்தில், "உடலுயிர்கண் ணருக்கனறி வொளி போற், பிறிவருமத் துவிதமாகுஞ், சிறப்பினதாய்" [பாயிரம், 7] என்றும் இப்படி வரும் ஏதுக்களைக் கண்டுகொள்க.

இனி, தன்னது பெருமை தாக்கா தெயினும் என்றதற்கு தனக் குண்டாயின சர்வஞ்ஞத்துவமும் பஞ்ச கிருத்தியமும் எனக்குண் டாக்கினு னில்லையாயினும் என்று பொருள் கூறிய தேதென்னில் ஆன்மா முத்தியைப் பெற்றவிடத்தும் சிவனுக்குண்டான தன்மை யுண்டாகாதென்பது கருத்து. என்பதற்குப் பிரமாணம் சிவப்பிர காசத்தில், "இன்றுநோக் குரைந டக்கு மியல்பிலோர்க் கினைய

வாய்ந்து, நின்றதோ ரலகை நேர்ந்தா னிகழ்வதெனதுபோ லுள்ளத், தொன்றிய வுணர்வு தம்பா லுள்ளது நிகழ்த்து மீசன், தன்ஞெழில் நடத்து மேனி தனக்கெனக் கொண்டு தானே " [ix, 2] என்றும், "உயிர்தானுஞ் சிவானுபவ மொன்றினுக்கு முரித்தே" [சித்தியார், xi, 10] என்றும், "நாழிகொள்ளா தாழியி னலைபுன, லதனுற் கருத்து முதலுள தாக, வேண்டும்" [சங்கற்பநிராகரணம், சிவசமவாதி நிராகரணம், 65, 66] என்றும் வரும் ஏதுக்களைக் கண்டுகொள்க.

இனி, என்னது பெருமை யெல்லா மெய்தி யென்றதற்கு ஆன்மாவுக்குள்ள இச்சாஞானக் கிரியைகளையும் வியாத்தி வியாபகங் களையுஞ் சிவன் உள்ளே யடக்கிக்கொள்ளுவன் என்பதற்குப் பிரமாணம் ஏதென்னில் சித்தியாரில், "இரும்பைக் காந்தம் வலித்தாற் போ" லென்னுஞ் செய்யுளிலே,

"விரும்பிப்பொன் னினைக்குளிகை யொளிப்பதுபோ லடங்கி"

[xi, 12]

என்பது கண்டுகொள்க.

இனி, தன்னை யெனக்குத் தருவதை யன்றியும் என்றதற்குத் தன்னுடைய ஆனந்த சொரூபத்தை யெனக்குத் தருவதுமன்றியே என்று பொருள்கூறியதற்குப் பிரமாணம் சித்தியாரில், "இந்தனத்தி னெரிபாலினெய்" என்னுஞ் செய்யுளிலே, "தானுக்கித் தன்னுருவப் பரப்பெல்லாங் கொடுபுகுந்து பதிப்பணிவன் பாலே" [ix, 12] என்றும், திருவாசகத்தில்,

"தந்ததுன் றன்னைக் கொண்டதென் றன்னைச்
சங்கரா வார்கொலோ சதுர்த்த
ரந்தமொன் றில்லா வானந்தம் பெற்றேன்
யாதுநீ பெற்றதின் றென்பால்"

[கோயிற்றிருப்பதிகம், 10]

என்பதுங் கண்டுகொள்க.

இனி, என்னையு மெனக்குத் தந்து என்றதற்கு அந்தச் சிவானுபவத்தை யனுபவிக்கிறது சிற்றறிவுங் கெடாமல் என்று பொருள் கூறிய தேதென்னில் சிற்றறிவு கெடாம லனுபவிப்பா ரில்லாதாகையால் அப்படிச் சொன்னதென வறிக.

முத்தியில் ஆன்மா நின்றனுபவிக்கு மென்பதற்குப் பிரமாணம் உண்மை விளக்கத்தில்,

"முத்திதனின் மூன்று முதலு மொழியக்கேள்
சுத்தவனு போகத்தைத் துய்த்தலணு—மெத்தவே
இன்பங் கொடுத்தலிறை யித்தைவிளை வித்தன்மல
மன்புடன் கண்டுகொளப் பா" [51]

என்றும், சித்தியாரில், "உயிர்தானுஞ் சிவானுபவ மொன்றினுக்கு முரித்தே" [xi, 10] என்றுஞ் சொன்னது இப்பொருளைப் பற்றி யெனவறிக.

தன்னது போா னந்தப் பெருங்கட லதனு ளாரா வின்ப மளித்து என்றதற்கு அருட் சமுத்திரத்திலே விளையப்பட்ட இன்பத்தை எனக்குக் கடாட்சித்து அருளி என்று பொருள் கூறியதற்குப் பிரமாணம் ஏதென்னில் சித்தியாரில்,

"சித்தாந்தத் தேசிவன்றன் திருக்கடைக்கண் சேர்த்திச்
செனனமொன்றி லேசீவன் முத்த ராக
வைத்தாண்டு மலங்கழுவி ஞான வாரி
மடுத்தானந் தம்பொழிந்து" [viii, 16]

என்பது கண்டுகொள்க.

உள்ளும் புறம்பு மொழிவின்றி நின்ற வள்ளன்மை காட்டி என்றதற்குச் சிவன் உள்ளும் புறம்பும் நிறைந்து நிற்பனென்று பொருள் கூறியதற்குப் பிரமாணம் திருவாசகத்திலே,

"உம்பர்கட் கரசே யொழிவற நிறைந்த யோகமே"
[பிடித்தபத்து, 1]

என்பது கண்டுகொள்க.

இனி, மலரடி யருளிய மன்ன னெங்கோன் என்றதற்குத் தாமரை மலர் போன்ற ஸ்ரீபாதத்தைக் கடாட்சித்தருளினவ னென்று பொருள் கூறியதற்குப் பிரமாணம் [திருவாசகம்] திருவெம்பாவையில்,

"செங்கமலப் பொற்பாதந் தந்தருளுஞ் சேவகனை" [17]

**என்பது கண்டுகொள்க.**

இனி, அருளா லயத்தன் என்பதற்கு அருளே கோயிலாக எழுந் **தருளி** யிருக்கப்பட்டவனென்று பொருள் கூறியதேதென்னில், சிவன்

தனதருளாகிய சத்தி யுடம்பாக எழுந்தருளி யிருக்கையாலென வறிக, இதற்குப் பிரமாணம் திருவாசகத்தில்,

"உடையா ணடுவு ணீயிருத்தி" [கோயின்மூத்த திருப்பதிகம், 1]

என்றும்,

"முன்னருட் சத்தி தன்பால் முகிழ்க்குந்தான் முளையா னன்றே" [சித்தியார், i. 68]

என்றும், சிவப்பிரகாசத்தில்

"நீடுபரா சத்திநிக ழிச்சா ஞான
நிறைகிரியை தரவதனை நிமலன் மேவி
நாடரிய கருணைதிரு வுருவ மாகி" [i, 2]

என்றும்,சித்தியாரில் "காயமோ மாயை யன்று காண்பது சத்தி தன்னால்" [i 41] என்றும் வரும் ஏதுக்களைக் கண்டுகொள்க.

இனி, மல முதலாயின மாய்க்கு மென்றதற்கு ஆணவமல முதலாயின வெல்லாத்தையும் சேதனம் பண்ணினவனென்று பொருள் கூறிய தேதென்னில், அந்த ஆணவ மலமானது மற்றுள்ள மலங்களெல்லாத்தினும் பிரதானமா யிருக்கையினாலென அறிக. இதற்குப் பிரமாணம் போற்றிப்பஃறொடையில்,

"முன்னின்று மும்மலந்தீர்த் தாட்கொள்கை" [124]

என்பதும், தத்துவ விளக்கத்தில்,

"கதிதரு காழிமன் காட்டுமெய்ப் பாசங்கள் மூன்றவைதாம்
பொதிதரு மாணவம் போகஞ்செய் கன்மமு மாயையுமா
முதியது தானொன்று முன்பினில் லாதது சேதனன்க
ணதிக மறைப்பன வாயிர கோடி விருத்திகளே" [19]

என்பதுங் கண்டுகொள்க.

இனி, உலகவுயிர்களுக் கெல்லா மொருகண்ணே என்றதற்கு சர்வான்மாக்களுக்கும் ஓர் அறிவாக நின்று அறிவிக்கிறவ னென்றதேதென்னில் ஆதித்த னொன்று யிருந்தும் பல கண்களுக்குங் காட்டாக நின்றதுபோல வென்றறிக. இதற்குப் பிரமாணம் சித்தியாரில், "கண்கட், கிருளினை யொளியா லோட்டு மிரவியைப் போல வீசன்" [v, 9] என்பது கண்டுகொள்க.

இங்ஙனம் வியாக்கியை செய்யப்பட்ட இந்த இருபாவிருபதென்னும் நூலுக்குச் செய்யுட்கள்தோறும் ஆசாரியரைச் சீஷன் கேட்க வினவுக்கு விடையமாக ஆசாரியர் அருளிச்செய்யப்பட்ட சொற்களை யெல்லாம் மீளவுஞ் சீஷன் மறுத்த மொழியாக வருகையால் ஆசாரியர் அருளிச்செய்த பொருள்களெல்லாங் கீழ்ப்பட்டுச் சீஷன் சொல்லே மேற்பட்டு வருமதைப் பொருளெனக் கொள்வாருமுளர். அது சித்தாந்தப் பொருளுக்கு விரோதமாமென வறிக. அப்படியானுல் வேறு பொருள் கொள்ளும் வழி எங்ஙனே யென்னில் ஆசாரியர் அருளிச் செய்ததெல்லாஞ் சத்தியப் பொருளாகவும் சீஷன் மறுத்ததெல்லாம் அசத்தியமாகவுங் கொள்ளுகையே வழக்கென அறிக. அப்படிப் பொருள்கொள்ளுமிடத்து மற்றுமுண்டான நூல்களை ஓதியறிந்து குருமுகாந்தரமாகக் கேட்டறிந்து சம்பிரதாயம் வந்த சித்தாந்திகளுக் கொழியத் தற்போதங் கொண்டறிவார்க்கு அறியப்படாததென வறிக. அப்படி ஆசாரியர் சொற் சத்தியமுஞ் சீஷன் சொல் அசத்தியமுமாமென்னுங் கருத்தைப்பற்றி இந்நூலுக்கு வியாக்கியை யெழுதினது ஏதென்னில் 'கண்ணகன்' ஞாலத்து என்னும் முதலகவலிலே 'சீறியருளல் சிறுமையுடைத்தா'லென்று சீஷன் கூறியதற்கு உத்தரமாக ஆசாரியர் அறியாது கூறினை அபக்குவபக்குவக் குறிபார்த்தருளினங் குருமுதலா யென்ற பதத்துக்குப் பொருள் நாம் சொன்ன அர்த்தங்களை நீ மாறுபாடாகக் கொள்ளுகையாலே நாம் கோபித்துக்கொண்டோமென்று ஆசாரியர் திருவுளம் பற்றுகை [கூறியதாகப் பொருட்படுத்தினதும் இப்பொருள் பற்றியென்றறிக. ஆகை]யாலே ஆசாரியர் திருவுளம்பற்றினதே சத்தியம் அந்த ஆசாரியர் வாக்கியத்திற்குச் சாத்திர சம்மதி யெழுதினதினுலும் ஆசாரியர் திருவுளம் பற்றினது சத்திய மென்கிறதைக் குருமுகாந்தரமாகக் கேட்டு அனுபவத்தாற் கண்டுகொள்க.

இனி, இந்த வியாக்கியையும் இந்தச் சாத்திரத்திலுள்ள வினுவிடையத்துக்குச் சாத்திர சம்மதியும் திருவாவடுதுறை நமசிவாய பண்டார மரபிலே வேலப்ப பண்டாரத்தின் சீஷன் நமச்சிவாயத் தம்பிரான் [எழுதியது]. அம்பலவாணன் திருவடி வாழ்க.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருவதிகை-மனவாசகங்கடந்தார்

அருளிச்செய்த

# உண்மை விளக்கம்

# மூலமும் உரையும்*

காப்பு

வண்மைதரும் ஆகமநூல் வைத்த பொருள்வழுவா
உண்மை விளக்கம் உரைசெய்யத்—திண்மதம்சேர்
அந்திநிறத் தந்திமுகத் தொந்திவயிற் றைங்கரனைப்
பந்தமறப் புந்தியுள்வைப் பாம்.

**(உரை)** வண்மை...உரைசெய்ய—வளப்பத்தைத்தருகின்ற ஆகம நூலிலே பரமேசுவரன் அருளிச்செய்துவைத்த பதிபசுபாசங்களாகிய முப்பொருளின் உண்மைவழுவாமல் இவ்வுண்மைவிளக்கநூலிலே விளக்குதற்பொருட்டும்,—பந்தம்அற - பாசங்கள் நீங்குதற்பொருட்டும்,—திண்மதம்...ஐங்கரனை - செக்கர்வானம்போன்ற திருமேனியினையும், யானைமுகத்தினையும், தொந்திவயிற்றினையும், ஐந்து கரங்களையுமுடைய விநாயகக்கடவுளை,—புந்தியுள் வைப்பாம் - சித்தத்தில் வைத்துத் தியானஞ் செய்வாம்.

நூல்

போய்காட்டிப் பொய்யகற்றிப் போதாநந் தப்பொருளாம்
மெய்காட்டும் மெய்கண்டாய் விண்ணப்பம்—பொய்காட்டா

---

*குறிப்பு :—இந்நூலாசிரியர் மெய்கண்டதேவருடைய மாணாக்கருள் ஒருவர். இவரைப்பற்றிய வரலாற்றுக் குறிப்புக்கள் கிடைத்தில. இந்நூலுக்கு இப்பதவுரையும் வேறொரு பொழிப்புரையும் உண்டு. உரையாசிரியர்கள் பெயர் பிரதிகளில் துலங்கவில்லை.

மெய்யா திருவெண்ணெய் வித்தகா சுத்தவினு
ஐயாநீ தான்கேட் டருள். க

(உரை) பொய் காட்டி...மெய்கண்டாய் - பக்குவர்க்குத் தேகாதிப் பிரபஞ்சத்தைப் பொய்யென விளக்கி, அப்பொய்யை நீக்கி, அறிவிலே ஆநந்தசொரூபமாயிருக்கிற உண்மையை விளக்கும் மெய்கண்டநாதனே,—பொய்காட்டா...வித்தகா - அபக்குவர்க்குப் பொய்யைவிளக்காத சத்தியத்தை யுடையவனே, திருவெண்ணெய்நல்லூரிலே எழுந்தருளியிருக்கின்ற ஞானசாரியனே,—ஐயா-ஐயனே,—சுத்தவினு விண்ணப்பம் நீதான் கேட்டருள் - அடியேனது சுத்தவினுவாகிய விண்ணப்பத்தினை நீ திருச்செவி சாத்தியருளவேண்டும்.

ஆருறு தத்துவமே தாணவமே தன்றேதான்
மாரு வினையேது மற்றிவற்றின்—வேருகா
நானேது நீயேது நாதன்நடம் அஞ்செழுத்துத்
தானேது தேசிகனே சாற்று. உ

(உரை) ஆருறு தத்துவம்ஏது - முப்பத்தாறு தத்துவம்யாது,—அன்றேதான் மாரு ஆணவம் ஏது - அநாதியேவிட்டுநீங்காத ஆணவமலம்யாது,—வினை ஏது - வினையாது,—மற்று இவற்றின் வேருகா நான் ஏது - இம்மலங்களுக்கு வேருகாமல் ஒன்றுபட்டிருக்கும் என்னுடைய சொரூபம்யாது,—நீ ஏது - உன்னுடைய சொரூபம் யாது,—நாதன் நடம் (ஏது) - பரமேசுவரனுடைய திருநடம்யாது,—அஞ்செழுத்துத் தான் ஏது - பஞ்சாக்கரத்தின் உண்மையாது,—தேசிகனே சாற்று - குருமூர்த்தியே நீ அருளவேண்டும். உ

உள்ளபடி இத்தை உரைக்கக்கேள் உன்றனக்கு
வள்ளல்அரு ளால்அன்று வாய்மலர்ந்து—தெள்ளியசீர்
ஆகமங்கள் சொன்ன அடைவிலே ஆநந்த
யோக நிகழ்புதல்வா உற்று. ௩

(உரை) ஆநந்தயோகம் நிகழ்புதல்வா - விளங்குகின்ற ஆநந்தயோகத்திலே (அடங்கிநிற்கும்) மாணவகனே,—வள்ளல் அருளால் அன்று வாய்மலர்ந்து சொன்ன சீர் ஆகமங்கள் உள்ளபடி தெள்ளிய அடைவிலே - பரமசிவன் கருணையினுலே அநாதியே திருவாய்மலர்ந்தருளிய சிறந்த ஆகமங்களிலே யுள்ளபடி செவ்வியமுறையாக,—உன்

றனக்கு - உனக்கு,—இத்தை உரைக்க உற்றுக்கேள் - இதனையாஞ் சொல்ல நீ நன்குகேட்பாய். க

நாற்கோணம் பூமிபுனல் நண்ணுமதி யின்பாதி
ஏற்கும்அனல் முக்கோணம் எப்போதும்—ஆர்க்கும்
அறுகோணம் கால்வட்டம் ஆகாயம் ஆன்மா
உறுகாய மாம்இவற்றால் உற்று. ச

(உரை) பூமி நாற்கோணம் - பிருதிவியானது நாலுகோணமாயிருக்கும்,—புனல் மதியின்பாதி நண்ணும் - அப்புவானது அர்த்த சந்திரனைப் போன்றதாயிருக்கும்,—அனல் முக்கோணம் ஏற்கும் - தேயுவானது மூன்றுகோணமாயிருக்கும்,—கால் எப்போதும் அறு கோணம் ஆர்க்கும் - வாயுவானது எக்காலமும் அறுகோணமாயிருக்கும்,—ஆகாயம் வட்டம் - ஆகாயமானது வட்டமாயிருக்கும்,—ஆன்மா உற்றுஉறு காயம் இவற்றால்ஆம் - ஆன்மாவுக்குப் பரிணமமாய்ப் பொருந்துவதால் சரீரம் இத்தூல பஞ்சபூதங்களினின்றும் உண்டாம்.

பொன்பார் புனல்வெண்மை பொங்கும்அனல் சிவப்பு
வன்கால் கருமைவளர் வான்தூமம்—என்பார்
எழுத்து லவரயஅப் பாராதிக் கென்றும்
அழுத்தமதாய் நிற்கும் அது. ரு

(உரை) பார்பொன்-பிருதிவியானது பொன்னிறமாயிருக்கும்,—புனல்வெண்மை-அப்புவானது வெள்ளைநிறமாயிருக்கும்,—பொங்கும் அனல் சிவப்பு - மிகுகின்ற தேயுவானது சிவந்தநிறமாய் நிற்கும்,—வன்கால் கருமை - வலிய வாயுவானது கருமைநிறமா யிருக்கும்,—வளர் வான்தூமம் - மிகுந்த ஆகாயமானது புகைநிறமா யிருக்கும்,—என்பார் - என்று பெரியோர் சொல்லுவார்,—பாராதிக்கு ல வ ர ய அ எழுத்து - பிருதிவி முதலியவற்றிற்கு (முறையே) லகாரமும் வகாரமும் ரகாரமும் யகாரமும் அகாரமும் ஆகிய எழுத்து,—என்றும் அழுத்தமதாய் நிற்குமது - எப்போதும் பலமாய்ப்பொருந்தி நிற்கும். ரு

குறிகுலிசம் கோகநதம் கொள்சுவத்தி குன்று
அறுபுள்ளி ஆரமுத விந்துப்—பிறிவின்றி
மண்புனல்தீக் கால்வானம் மன்னும்அடை வேயென்(று)
ஒண்புதல்வா ஆகமம் ஓதும். சு

**(உரை)** ஒண் புதல்வா - நல்ல மாணவகனே,—மண் புனல் தீ கால்வானம்-பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயம் ஆகிய இவற்றிற்கு,—அடைவே - முறையே,—குறி குலிசம் கோகநதம் கொள் சுவத்தி குன்று அறுபுள்ளி ஆர் அமுத விந்து - அடையாளம் வச்சிரமும் தாமரைப்பூவும் பொருந்திய சுவத்திகமும் குறையாத அறுபுள்ளியும் பொருந்திய அமுத விந்துவும்,—பிறிவின்றி மன்னும் என்று ஆகமம் ஓதும் - நீங்காது நிலைபெறுமென்று சிவாகமஞ் செப்பும். சா

பாராதி ஐந்துக்கும் பன்னும்அதி தெய்வங்கள்
ஆரார் அயனாதி ஐவராம்—ஓரோர்
தொழிலவர்க்குச் சொல்லுங்கால் தோற்றமுதல் ஐந்தும்
பழுதறவே பண்ணுவர்காண் பார். எ

**(உரை)** பாராதி ஐந்துக்கும் பன்னும் அதிதெய்வங்கள் ஆர் ஆர் - பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாசம் ஐந்துக்குஞ் சொல்லப்பட்ட அதி தேவதைகள் பொருந்திய யாவர் எனின்,—அயனாதி ஐவராம் - (முறையே) பிரமாவும் விஷ்ணுவும் உருத்திரரும் மகேசுவரரும் சதா சிவரும் என ஐந்து பேராம்,—சொல்லுங்கால் அவர்க்கு ஓரோர் தொழில் - சொல்லுமிடத்து அவருக்கு ஒவ்வொரு தொழிலேயாம்,—தோற்ற முதல் ஐந்தும் பழுது அறவே பண்ணுவர் காண் பார்-(அவர்) சிருஷ்டி திதி சங்காரந் திரோபவம் அநுக்கிரகமாகிய ஐந்தும் குற்ற மறச் செய்வார்களென்று அறிவாயாக. எ

படைப்பன் அயன்அளிப்பன் பங்கயக்கண் மாயன்
துடைப்பன் உருத்திரனும் சொல்லில்—திடப்பெறவே
என்றுந் திரோபவிப்பர் ஈசர் சதாசிவரும்
அன்றே அநுக்கிரக ராம். அ

**(உரை)** அயன் படைப்பன் - பிரமா சிருஷ்டிப்பன்,—பங்கயக் கண்மாயன் அளிப்பன் - செந்தாமரை மலர்போலுங் கண்ணையுடைய விஷ்ணு இரக்ஷிப்பன்,—சொல்லில் உருத்திரனுந் துடைப்பன் - சொல்லுமிடத்து உருத்திரமூர்த்தி சங்கரிப்பர்,—திடப்பெறவே ஈசர் என்றுந் திரோபவிப்பர் - நிச்சயமாக மகேசுவரமூர்த்தி எக்காலமுந் திரோபவம் பண்ணுவர்,—அன்றே சதாசிவரும் அநுக்கிரகராம் - அநாதிதொடங்கிச் சதாசிவமூர்த்தி அநுக்கிரகம் பண்ணுபவராம். அ

மண்கடின மாய்த்தரிக்கும் வாரிகுளிர்ந் தேபதமாம்
ஒண்கனல்சுட் டொன்றுவிக்கும் ஓவாமல்—வண்கால்
பரந்துசலித் துத்திரட்டும் பார்க்கில் ஆகாயம்
நிரந்தரமாய் நிற்கும் நிறைந்து. கூ

**(உரை)** மண் கடினமாய்த் தரிக்கும் - பிருதிவியானது விடயங்களிலே கடினகுணத்தைக் கொடுத்துக்கொண்டு நிற்கும்,—வாரி குளிர்ந்தே பதமாம் - அப்புவானது விடயங்களிலே நெகிழ்ந்த குணத்தைக் கொடுத்துக்கொண்டு நிற்கும்,—ஒண்கனல் சுட்டொன்றுவிக்கும் - ஒள்ளிய தேயுவானது விடயங்களிலே சுட்டொன்றுதலைப் பண்ணிக்கொண்டு நிற்கும்,—வண் கால் ஓவாமற் பரந்து சலித்துத் திரட்டும் - வளப்பத்தையுடைய வாயுவானது நீங்காது பரந்து சலித்து விடயங்களைத் திரட்டும்,—பார்க்கில் ஆகாயம் நிரந்தரமாய் நிறைந்து நிற்கும் - விசாரிக்குமிடத்து ஆகாயம் நிரந்தரமாய் நிறைந்து விடயங்களுக்கெல்லாம் இடங்கொடுத்துக்கொண்டு நிற்கும். கூ

உள்ளபடி மாபூதம் ஓதினோம் உன்றனக்குக்
கள்ளமிகும் ஐம்புலனும் கட்டுரைக்கில்—மெள்ளவே
ஓசை பரிசம் உருவம் சுவைநாற்றம்
ஆசைதரும் ஐம்புலனே யாம். கO

**(உரை)** உன்றனக்கு உள்ளபடி மா பூதம் ஓதினோம் - உனக்கு உண்மையாகப் பஞ்சமகா பூதங்களுஞ் சொன்னோம்,—கள்ளமிகும் ஐம்புலனும் மெள்ளவே கட்டுரைக்கில் - கள்ளமிகுந்த பஞ்சவிடயங்களை மெல்லச் சொல்லுமிடத்து, ஓசை பரிசம் உருவஞ் சுவை நாற்றம் ஆசை தரும் ஐம்புலனேயாம் - சத்தம் பரிசம் உருவம் இரதம் கந்தம் ஆகிய இவை ஆசையைத் தருகின்ற அவ்வைம்புலன்களாம். கO

ஞானேந் திரியங்கள் நன்று உரைக்கக்கேள்
ஊன மிகுபூதம் உற்றிடமா—ஈனமாம்
சத்தாதி யைஅறியும் தானம் செவிதோல்கண்
அத்தாலும் மூக்கென் றறி. கக

**(உரை)** ஞானேந்திரியங்கள் நன்று உரைக்கக்கேள் - ஞானேந்திரியங்களை நன்றாகச் சொல்லுகிறோங்கேள்,—ஊனம் உற்று மிகு பூதம் இடமா - குறைவு பொருந்தி மிகுகின்ற பஞ்சபூதங்களிடமாக

நின்று,—ஈனமாஞ் சத்தாதியை அறியும் - (அவை) தாழ்வாகிய சத்தாதி விடயங்களை அறியும்,—தானம் செவிதோல் கண் அத்தாலு மூக்கென்று அறி - (அவற்றிற்குத்) தானம் சுரோத்திரம் துவக்கு சட்சு அந்தச்சிகுவை ஆக்கிராணமென்று அறிவாய். கக

வானிடமா நின்றுசெவி மன்னும் ஒலியதனை
ஈனமிகுந் தோல்கால் இடமாக—ஊனப்
பரிசம் தனைஅறியும் பார்வையிற்கண் அங்கி
விரவிஉரு வங்காணு மே. கஉ

(உரை) வானிடமா நின்று செவி மன்னும் ஒலியதனை (அறியும்)—ஆகாயத்தினிடமாக நின்று சுரோத்திரம் பொருந்திய சத்தத்தை யறியும்,—காலிடமாக (நின்று) ஈனமிகுந் தோல் ஊனப் பரிசந்தனை அறியும்—வாயுவினிடமாக நின்று ஈனத்துவமிக்க தொக்கு குறைவுடைய பரிசத்தையறியும்,—அங்கி விரவிப் பார்வையிற்கண் உருவங்காணுமே - தேயுவினிடமாக நின்று பார்வையினையுடைய சட்சு உருவத்தை யறியும். கஉ

நன்றாக நீரிடமா நாஇரதந் தான்அறியும்
பொன்றா மணம்மூக்குப் பூவிடமா—நின்றறியும்
என்றோது மன்றே இறைஆ கமம்இதனை
வென்றார்சென் றாரின்ப வீடு. கங

(உரை) நன்றாக நீரிடமா (நின்று) நா இரதந்தான் அறியும் - நன்மையாக அப்புவினிடமாக நின்று சிகுவை இரசத்தையறியும்,—பொன்றாப் பூவிடமா நின்று மூக்கு மணம் அறியும் - கெடாத பிருதிவியினிடமாகநின்று ஆக்கிராணங் கந்தத்தையறியும்,—என்று இறை ஆகமம் அன்றே ஓதும் - என்று சிவாகமங்களிலே அநாதியே சொல்லும்,—இதனை வென்றார் இன்பவீடு சென்றார் - இந்தப் பஞ்சேந்திரியங்களை நிக்கிரகம் பண்ணினவர்களே ஆனந்த வீட்டினை அடைந்தார். கங

கண்ணுதல்நா லோதியிடும் கன்மேந் திரியங்கள்
எண்ணும்வச னாதிக் கிடமாக—நண்ணியிடும்
வாக்குப்பா தம்பாணி மன்னு குதம்உபத்த
மாக்கருது நாளு மதா. கச

(உரை) வாக்குப் பாதம் பாணி மன்னு குதம் உபத்தமாக்கருதும் கன்மேந்திரியங்கள். வாக்குப் பாதம் பாணி பொருந்திய பாயு உபத்தமாகக் கருதுகின்ற கன்மேந்திரியங்கள் ஐந்தும்,—எண்ணும் வசனுதிக்கு இடமாக நாளுமது நண்ணியிடும் - மதிக்கின்ற வசனமும் கமனமும் தானமும் விசர்க்கமும் ஆனந்தமுமாகி யவற்றிற்கு இட மாக நாடோறும் பொருந்தும் என்று,—கண்ணுதல்நூல் ஓதியிடும் - சிவாகமம் செப்பும். கச

வாக்காகா யம்இடமா வந்துவச னிக்குங்கால்
போக்காரும் காற்றிடமாப் புல்கிஅனல்—ஏற்கும்
இடுங்கை குதநீ ரிடமா மலாதி
விடும்பா ரிடம்உபத்தம் விந்து. கரு

(உரை) ஆகாயம் இடமா வாக்கு வந்து வசனிக்கும் - ஆகாய மிடமாக நின்று வாக்குப்பொருந்தி வார்த்தை சொல்லும்.—காற்று இடமாக் கால் போக்கு ஆரும் - வாயுவினிடமாக நின்று பாதம் கமனஞ் செய்யும்,—அனல் புல்கி கை இடும் ஏற்கும் - தேயுவினிட மாக நின்று பாணி இடுதல் ஏற்றல் செய்யும்,—நீரிடமாக் குதம் மலாதி விடும் - அப்புவினிடமாக நின்று பாயுமலசலங்களைப் பிரித் தல் செய்யும்,—பாரிடம் உபத்தம் விந்து (விடும்) - பிருதிவியினிட மாக நின்று உபத்தம் விந்துவை விடுத்து ஆனந்தஞ் செய்விக்கும். கரு

அந்தக் கரணம் அடைவே உரைக்கக்கேள்
அந்தமனம் புத்தியுடன் ஆங்காரம்—சிந்தையிவை
பற்றியது நிச்சயித்துப் பல்கால் எழுந்திருந்தங்
குற்றது சிந்திக்கும் உணர். கசு

(உரை) அந்தக்கரணம் அடைவே உரைக்கக்கேள் - அந்தக்கர ணங்களை முறையே சொல்லக்கேள்,—அந்தமனம் புத்தியுடன் ஆங் காரம் சிந்தை இவை - அம்மனமும் புத்தியும் அகங்காரமும் சித்தமு மாகிய இவையாம்,—பற்றியது நிச்சயித்துப் பல்கால் எழுந்திருந்து அங்கு உற்றது சிந்திக்கும் உணர் - (அவற்றுள் மனம்) பற்றியதனை (ப்புத்தி) நிச்சயித்து (அகங்காரமும்) பலமுறை (அபிமானித்து) எழுந்து (சித்தம்) அங்கே யுற்றதனைச் சிந்திக்குமென்று அறிவாய். கசு

ஓதியிடும் நாலாறும் உற்றான்ம தத்துவமென்(று)
ஆதி அருள்நூல் அறையுங்காண்—தீதறவே
வித்தியா தத்துவங்கள் தம்மை விளம்பக்கேள்
உத்தமனே நன்றா உனக்கு. கஎ

(உரை) ஓதியிடும்...அறையுங்காண் - சொல்லப்பெற்ற இருபத்து நாலும் பொருந்தி ஆன்ம தத்துவமாமென்று சிவாகமநூல் சொல்லும்,—உத்தமனே வித்தியாதத்துவங்கள் தம்மை உனக்கு தீது அறவே நன்றா விளம்பக்கேள் - உத்தம மாணாக்கனே! வித்தியாதத்துவங்களை உனக்குக் குற்றமற நன்றாகச் சொல்லக்கேளாய். கஎ

காலம் நியதி கருதும் கலைவித்தை
ஏலஇரா கம்புருட னேமாயை—மால்அறவே
சொன்னோம் அடைவாகச் சொன்னஇவை தன்னுண்மை
உன்னி உரைக்கும்நாம் உற்று. கஅ

(உரை) காலம்...மாயை-காலமும் நியதியும் கருதுகின்ற கலையும் வித்தையும் பொருந்த இராகமும் புருடனும் மாயையுமாம்,—மால் அறவே அடைவாகச் சொன்னோம் - (இவற்றை) மயக்கமற முறையாக (உனக்கு)ச் சொன்னோம்,—சொன்ன இவைதன் உண்மை உற்று உன்னி நாம் உரைக்கும் - கூறிய இவற்றின் உண்மையை உற்றுநோக்கி (இனி) நாம் சொல்லுவோம். கஅ

எல்லை பலம்புதுமை எப்போதும் நிச்சயித்தல்
அல்லல் தருங்கிரியை ஆன்மாவுக்(கு)—ஒல்லை
அறிவாசை ஐம்புலனும் ஆரவருங் காலம்
குறியாய் மயக்கென்று கொள். கசு

(உரை) எல்லை பலம் புதுமை - காலதத்துவமானது கழிகாலத் தெல்லையையும் நிகழ்காலத்துப் பலத்தையும் எதிர்காலத்துப் புதுமையையும் பொருத்துவிக்கும்,—எப்போதும் நிச்சயித்தல் - நியதி தத்துவமானது எந்தக்காலமும் கன்மத்தை இவ்வளவென்று நிச்சயம் பண்ணி நிறுத்தும்,—அல்லல் தருங் கிரியை - கலையானது ஆணவத்தைச் சிறிது நீக்கி ஆன்மாவுக்குக் கிரியையை யெழுப்பும்,—ஆன்மாவுக்கு ஒல்லை அறிவு - வித்தியா தத்துவமானது ஆன்மாவுக்குச் சீக்கிரத்திலே அறிவை யெழுப்பும்,—ஆசை - இராகதத்துவமானது

பெற்ற பதார்த்தங்களைச் சிறிதாக்கிப் பெருததிலே இச்சையை யுண்டாக்கும்,—ஐம்புலனும் ஆரவருங் காலம் - ஆன்மா பஞ்சேந்திரி யங்களிடமாகச் சத்தாதிவிடயங்களை புசிக்க வருகின்ற அவதரத்தில் புருடதத்துவமானது விடயத்திலே யழுத்துவிக்கும்,—குறியாய் மயக் கென்று கொள் - மாயையானது ஒன்றை நினைக்கவொட்டாமல் மயக்கத்தைச் செய்யுமென்றறிவாயாக. கக

வித்தியா தத்துவங்கள் ஏழும் விளம்பினோம்
சுத்தமாம் தத்துவங்கள் சொல்லக்கேள்—நித்தமாம்
சுத்தவித்தை ஈசுரம்பின் சொல்லும் சதாசிவம்நற்
சத்திசிவங் காண்அவைகள் தாம். உ௦

(உரை) வித்தியா.........கேள் - வித்தியாதத்துவங்கள் ஏழுஞ் சொன்னோம் சுத்தமாயிருக்கிற சிவதத்துவங்கள் ஐந்தையுஞ் சொல்லு கிறோங்கேள்,—நித்தமாம்...தாம் - அவை நித்தியமாயிருக்கிற சுத்த வித்தை ஈசுரம் பின்கூறும் சாதாக்கியம் நன்மையாகிய சத்தி சிவம் என்றறிவாயாக. உ௦

சுத்தவித்தை ஞானமிகும் தொன்மையாம் ஈசுரந்தான்
அத்தன் தொழில்அதிகம் ஆக்கியிடும்—ஒத்தல்இவை
சாதாக் கியம்என்றும் சத்தி சிவம்கிரியை
ஆதார ஞானஉரு வாம். உக

(உரை) சுத்தவித்தை........ஆக்கியிடும் - சுத்தவித்தை ஞான மேறிக்கிரியை குறைந்திருக்கும், பழைமையாகிய ஈசுவரதத்துவ மானது சிவன் ஞானங் குறைந்து கிரியையேறியிருக்கும்,—சாதாக்கி யம் இவை ஒத்தல் - சாதாக்கிய தத்துவம் ஞானமுங்கிரியையும் ஒத் திருக்கும்,—என்றும் சத்தி கிரியை சிவம் ஆதார ஞானவுருவாம் - எப்போதும் சத்தி தத்துவம் கிரியையாயிருக்கும் சிவதத்துவம் ஆதாரஞானமாயிருக்கும். உக

ஆறாறு தத்துவமும் சொன்னோம் அடைவாக
மாறா மலமிரண்டும் வாசொல்லக்—கூறில்
அறியாமை ஆணவம்நீ யானசுக துக்கம்
குறியா வினையென்று கொள். உஉ

(உரை) ஆறாறு தத்துவமும் அடைவாகச் சொன்னோம் - முப்பத்தாறு தத்துவங்களையும் முறையாகச்சொன்னோம்,—மாறா மலம் இரண்டும் சொல்லவா - விட்டுநீங்காமலிருக்கின்ற ஆணவமலத்தையும் கன்மமலத்தையும் சொல்லுகிறோங்கேள்,—கூறில் அறியாமை ஆணவம் - சொல்லுமிடத்து அறியாமையைப் பண்ணிக்கொண்டு நிற்பது ஆணவமலம்,—சுகதுக்கங் குறியா நீயான வினையென்று கொள் - சுக துக்கமொன்றையும் நினையாமல் நீ தானாயிருப்பது தானே கன்ம மலமென்றறிவாயாக. உஉ

ஆறாறு தத்துவமும் ஆணவமும் வல்வினையும்
மாறா அருளால் வகுத்துரைத்தீர்—வேறாகா
என்னை எனக்கறியக் காட்டீர் இவைகண்டேன்
உன்னரிய தேசிகரே உற்று. உ௩

(உரை) உன்னரிய தேசிகரே - நினைத்தற்கரிய ஆசாரியரே,—ஆறாறுதத்துவமும் - முப்பத்தாறு தத்துவத்தையும்,—ஆணவமும் - ஆணவமலத்தையும்,—வல்வினையும்-வலிய கன்மமலத்தையும்,—மாறா அருளால் வகுத்து உரைத்தீர் - விட்டு நீங்காத கிருபையினாலே வகுத்தருளிச்செய்தீர்,—இவை கண்டேன்-இம்மலங்களைத் தரிசித்தேன்,--வேறாகா என்னை எனக்கு அறியக்காட்டீர் - (இனி) இந்தமலங்களுக்கு வேறாகாமல் ஒன்றுபட்டிருக்கின்ற என்னுடைய சொரூபத்தையும் அருளிச் செய்யவேண்டும். உ௩

நன்றா உரைக்கக்கேள் நல்லசித்தின் முன் அசித்திங்(கு)
ஒன்றாது சித்தசித்தை ஓராது—நின்றிவற்றை
அன்றே பகுத்தறிவ தான்மாவே என்றுமறை
குன்றாமல் ஓதுங் குறித்து. உச

(உரை) நன்றா உரைக்கக்கேள் - நீகேட்ட ஆன்மதரிசனத்தை நன்றாகச் சொல்லுகிறோங்கேள்,--நல்ல சித்தின் முன் அசித்து இங்கு ஒன்றாது நல்லசித்தாகிய சிவத்தின்முன்னே அசித்தாகிய பாசம் நில்லாது,—சித்து அசித்தை ஓராது - சித்தாகிய சிவத்துக்கு அசித்தாகிய பாசத்தை அறியவேண்டுவதில்லை,—இவற்றை அன்றே நின்று பகுத்தறிவது ஆன்மாவே-சித்தாகிய சிவத்தையும் அசித்தாகிய பாசத்தையும் அநாதியிலே பொருந்தி விசாரித்தறிவது ஆன்மாவே,-

என்று மறை குன்றாமல் குறித்து ஓதும் - என்று சிவாகமங்களிலே குன்றாது சுட்டிச் சொல்லும். உச

தத்துவங்கள் ஆறாறும் தம்மைத்தாம் என்றறியா
எத்தன்மை என்னில் இயம்பக்கேள்—சுத்தமாம்
ஆறு சுவையும் அறியாது தன்னைத்தான்
கூறில் அவைஇவைபோற் கொள். உரு

**(உரை)** தத்துவங்கள்......கேள்—முப்பத்தாறு தத்துவங்களும் ஜடமாகையினாலே தம்முடைய சொரூபத்தைத் தாமறியா, எந்த முறைமையென்று கேட்கிறாயானால் சொல்லுகிறோங்கேள்,—சுத்தமாம்...கொள் - சுத்தமாயிருக்கிற அறுவகைச்சுவையுந் தன்னுடைய சொரூபத்தைத் தானறியாது, சொல்லுமிடத்து, முப்பத்தாறு தத்துவங்களுஞ் சுவைகளைப்போலத் தம்முடைய சொரூபத்தைத் தாமறியா. உரு

ஆறு சுவையும் அருந்தி அவைதம்மை
வேறொருவன் கூறியிடும் மேன்மைபோல்—ஆறாறும்
ஒன்றொன்றா நாடிஉணர்ந் தோதில்அதில் உற்றறிவாய்
நின்றபொருள் தானேகாண் நீ. உசு

**(உரை)** ஆறு சுவையும்...மேன்மைபோல் - அறுவகைச் சுவையும் புசித்துக் கைக்கிறது கார்க்கிறது கூர்க்கிறது துவர்க்கிறது புளிக்கிறது இனிக்கிறதெனக் கண்டுணர்ந்து ஒருவன் சொல்லுகிற முறைமைபோல,—ஆறாறும் ஒன்றொன்றா நாடி உணர்ந்து - முப்பத்தாறு தத்துவங்களையும் ஒன்றொன்றாக விசாரித்தறிந்து,— ஓதில் - சொல்லுமிடத்து,—அதில் உற்று அறிவாய் நின்ற பொருள்தானே காண் நீ - அம்முப்பத்தாறு தத்துவங்களிலும் பொருந்தி அறிந்து வருகிற அறிவுகாண் நீயாகிய ஆன்மா. உசு

குன்றா அருளாலே கூறினீர் என்வடிவு
பொன்றாத நும்முருவம் போதியீர்—நின்றருக்கன்
கண்ணுக்குக் காட்டுமா போலே உனதறிவின்
நண்ணிஅறி வித்திடுவோம் நாம். உஎ

**(உரை)** குன்றா அருளாலே......போதியீர் - கெடாதகிருபையினாலே அடியேனுடைய சொரூபத்தை அருளிச் செய்தீர், கெடாத

தேவரீருடைய சொரூபத்தையும் அடியேனுக்கு அருளிச்செய்ய வேண்டும்,—நின்று...போலே - ஆதித்தப் பிரகாசமானது கண்ணுக்குப் பதார்த்தங்களைக் காட்டிக்கொண்டு நிற்பதுபோல,—நாம் உனது அறிவின் நண்ணி அறிவித்திடுவோம் - நாம் உனதறிவிலே பொருந்திநின்று அறிவித்து வருவோம். உஎ

அன்றியுங்கேள் ஆன்மாவால் ஆய்ந்தறியும் ஐம்பொறிகள்
இன்றி அறியா இவையென்ன—நின்றதுபோல்
ஓவாமல் உன்னை உணர்த்துவோம் உன்னறிவில்
மேவாமல் மேவிநா மே. உஅ

(உரை) அன்றியுங் கேள் - அல்லாமலுஞ் சொல்லுகிறோங் கேள்,—ஆன்மாவால் ஆய்ந்தறியும் ஐம்பொறிகள் இன்றி அறியா இவையென்ன - ஆன்மாவினாலே நன்றாக அறிந்து காரியப்பட்டு வருகிற பஞ்சேந்திரியங்களும் ஆன்மாவினாலேயறிந்து காரியப்பட்டு வருகிறோமென்றறியா,—நின்றது போல் - அங்ஙனம் நின்ற பஞ்சேந்திரியங்கள்போல்,—நாமே உன்னறிவில் மேவாமல் மேவி - நாம் உன்னறிவிலே பொருந்தாமற் பொருந்தி நின்று,—ஓவாமல் உன்னை உணர்த்துவோம் - விட்டு நீங்காமல் உனக்கறிவிப்போம் (அதனை நீ அறியாய்) உஅ

அக்கரங்கட் கெல்லாம் அகரஉயிர் நின்றாற்போல்
மிக்க உயிர்க்குயிராய் மேவினோம்—எக்கண்ணும்
நில்லா இடத்துயிர்க்கு நில்லா தறிவென்று
நல்லா கமம்ஓதும் நாடு. உகூ

(உரை) அக்கரங்கட்கெல்லாம் அகரவுயிர் நின்றாற்போல் - ஏனைய எல்லா அக்கரங்கட்கும் அகரமாகிய அக்கரம் உயிராய் நின்றது போல்,—மிக்க உயிர்க்கு உயிராய் மேவினோம் - சர்வான்மாக்களிடத்திலேயும் அறிவுக் கறிவாய்ப் பொருந்தி நின்றோம்,—எக்கண்ணும் நில்லாவிடத்து உயிர்க்கு அறிவு நில்லாதென்று - சடசித்துக்களெல்லாவற்றினும் கர்த்தா நிறைந்து நின்றறிவித்தா லல்லது உயிர் அறியாதென்று,—நல்லாகமம் ஓதும் நாடு - சிவாகமங்களிலேசொல்லுமென்று விசாரித்தறிவாயாக. உகூ

நற்றவத்தோர் தாம்காண நாதாந்தத் தஞ்செழுத்தால்
உற்றுருவாய் நின்றாடல் உள்ளபடி—பெற்றிடநான்
விண்ணார் பொழில்வெண்ணெய் மெய்கண்ட நாதனே
தண்ணார் அருளாலே சாற்று. ௩௰

**(உரை)** நற்றவத்தோர் தாம் காண - நல்ல தவத்தையுடைய ஆன்மாக்கள் தரிசிக்கத் தக்கதாக,—நாதாந்தத்து அஞ்செழுத்தால் உருவாய் உற்று நின்றாடல் - நாதமுடிவிலே சிவபிரான் பஞ்சாக்கரமே திருமேனியாகக் கொண்டு நிருத்தஞ்செய்கிற முறைமையை,—உள்ளபடி நான் பெற்றிட - உண்மையாக அடியேன் தரிசிக்கத் தக்கதாக,—விண்ணார் பொழில்வெண்ணெய் மெய்கண்டநாதனே - ஆகாயத்தை அளாவியிருக்கின்ற சோலைகள் சூழ்ந்த திருவெண்ணெய் நல்லூரே திருப்பதியாகக் கொண்டெழுந்தருளியிருக்கிற மெய் கண்ட தேவனே,—தண்ணார் அருளாலே சாற்று - குளிர்ந்த கிருபை யினாலே அருளல் வேண்டும். ௩௰

எட்டும் இரண்டும் உருவான லிங்கத்தே
நட்டம் புதல்வா நவிலக்கேள்—சிட்டன்
சிவாயநம வென்னுந் திருவெழுத் தஞ்சாலே
அவாயமற நின்றாடு வான். ௩௧

**(உரை)** எட்டும் இரண்டும் உருவான லிங்கத்தே நட்டம்-எட்டு மிரண்டு முருவாயிருக்கிற யகாரமாகிய ஆன்மாவினிடத்திலே செய்யும் நடனத்தை,—புதல்வா நவிலக்கேள் - மாணவகனே சொல்லக் கேள்,—சிட்டன் - பரமசிவன்,—சிவாயநம வென்னுந் திருவெழுத் தஞ்சாலே அவாயம் அற நின்று ஆடுவான் - சிகாரமாதிபஞ்சாக்கரமே திருமேனியாகக் கொண்டு ஆன்மாக்கள் பிறவியறத்தக்கதாக நிருத் தஞ் செய்வன். ௩௧

ஆடும் படிகேள்நல் லம்பலத்தான் ஐயனே
நாடுந் திருவடியி லேநகரம்—கூடும்
மகரம் உதரம் வளர்தோள் சிகரம்
பகருமுகம் வாமுடியப் பார். ௩௨

**(உரை)** ஐயனே நல் அம்பலத்தான் ஆடும் படிகேள் - மாணாக் கனே பொன்னம்பலமுடையான் நிருத்தஞ்செய்கிற முறைமையைச்

சொல்லுகிறேனுங் கேள்,—நாடுந் திருவடியிலே நகரம் - நாடாநின்ற ஸ்ரீபாதத்திலே நகாரமாகவும்,—கூடும் உதரம் மகரம் - பொருந்தப் பட்ட திருவுந்தியிலே மகாரமாகவும்,—வளர் தோள் சிகரம் - வளரா நின்ற திருத்தோளிலே சிகாரமாகவும்,—பகரு முகம் வா - சொல்லப் பட்ட திருமுகத்திலே வகாரமாகவும்,—முடியப்பார் - திருமுடியிலே யகாரமாகவும் கொண்டருளித் திருநிருத்தஞ் செய்வானென்று விசா ரித்தறிவாயாக- நஉ

சேர்க்கும் துடிசிரகஞ் சிக்கனவா வீசுகரம்
ஆர்க்கும் யகரம் அபயகரம்—பார்க்கிலிறைக்(கு)
அங்கி நகரம் அடிக்கீழ் முயலகனார்
தங்கும் மகரமது தான். நந

(உரை) ஆர்க்குந் துடி சேர்க்குங் (கரம்) சிகரம் - ஒலிக்கின்ற டமரகமேந்திய ஸ்ரீ அத்தத்திலே சிகாரமாகவும்,—சிக்கனவீசுகரம் வா - நன்றாக வீசிய ஸ்ரீ அத்தத்திலே வகாரமாகவும்,—அபயகரம் யகரம் - அமைத்த ஸ்ரீ அத்தத்திலே யகாரமாகவும்,—பார்க்கில் அங்கி இறைக்கு நகரம் - பார்க்குமிடத்து அக்கினியேந்திய ஸ்ரீ அத்தத் திலே நகாரமாகவும்,—முயலகனார் தங்கும் அடிக்கீழ் மகரமதுதான் - முயலகனைமிதித்த ஸ்ரீபாதத்திலே மகாரமாகவும் கொண்டருளித் திருநிருத்தஞ் செய்வானென்றறிவாயாக. நந

ஓங்கார மேநல் திருவாசி உற்றதனில்
நீங்கா எழுத்தே நிறைசுடராம்—ஆங்காரம்
அற்றார் அறிவர்அணி அம்பலத்தான் ஆடலிது
பெற்றார் பிறப்பற்றார் பின். நச

(உரை) ஓங்காரமே நற்றிருவாசி - பிரணவந்தானே நல்ல திருவாசியாகவும்,—உற்று அதனில் நீங்கா எழுத்தே நிறை சுடராம் - பொருந்தி அப்பிரணவத்தைவிட்டு நீங்காத பஞ்சாக்கரமே நிறைந்த உள்ளொளியாகவும்,—ஆங்காரம் அற்றார் அறிவர் - யானென தென்னுஞ் செருக்கற்றவர்கள் அறிவார்கள்,—அணி அம்பலத்தான் ஆடல் இது பெற்றார் பின் பிறப்பு அற்றார் - அழகிய திருவம்பலத்தான் செய்யும் நிருத்தமாகிய இதனைத் தரிசித்தவர்களே பின்பு சநநமரண மற்றவர்கள். நச

தோற்றம் துடியதனில் தோயும் திதிஅமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம்—ஊற்றமா
ஊன்று மலர்ப்பதத்தில் உற்ற திரோதம்முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு. ௩௫

(உரை) துடியதனில் தோற்றம் - டமரகமேந்திய ஸ்ரீ அத்தத்திலே சிருஷ்டியாகவும்,—அமைப்பில் தோயும் திதி - அமைத்த ஸ்ரீ அத்தத்திலே ஆன்மாப் பொருந்தும் இரக்ஷையாகவும்,—சாற்றியிடும் அங்கியிலே சங்காரம் - சொல்லப்பட்ட அக்கினியேந்திய ஸ்ரீ அத்தத்திலே மலசங்காரமாகவும்,—ஊற்றமா ஊன்று மலர்ப்பதத்தில் உற்ற திரோதம் - உறுதியாக ஊன்றிய மலர்போலும் பொருந்திய ஸ்ரீபாதத்திலே பிரபஞ்சத்தை மறைக்குந் திரோதமாகவும்,—நான்ற மலர்ப் பதத்தே முத்திநாடு-தூக்கியமலர்போலும் ஸ்ரீபாதத்திலே அநுக்கிரக முத்தியாகவும் திருக்கூத்துச் செய்வனென்று விசாரித்தறிவாயாக.

மாயை தனைஉதறி வல்வினையைச் சுட்டுமலம்
சாய அமுக்கிஅருள் தானெடுத்து—நேயத்தால்
ஆனந்த வாரிதியில் ஆன்மாவைத் தானழுத்தல்
தானெந்தை யார்பாதம் தான். ௩௬

(உரை) மாயைதனை உதறி-டமரகமேந்திய ஸ்ரீ அத்தத்தினாலே மாயையை நீக்கி,—வல்வினையைச் சுட்டு - அக்கினியேந்திய ஸ்ரீ அத்தத்தினாலே கன்மமலத்தைச் சுட்டு,—மலஞ் சாய அமுக்கி-ஊன்றிய ஸ்ரீபாதத்தினாலே மலமேலிடாமல் அழுத்தி,—அருள்தான் எடுத்து தூக்கிய பாதத்தினாலே அருளே தனுவாகநிறுத்தி,—நேயத்தால் ஆநந்த வாரிதியில் ஆன்மாவைத்தான் அழுத்தல்தான் - கிருபையினாலே அமைத்த ஸ்ரீ அத்தத்தினாலே ஆநந்தவெள்ளத்திலே ஆன்மாவை அழுத்துவது தான்,—எந்தையார் பாதந்தான் - எம்முடைய பிதாவாகிய பரமேசுவரனுடைய திருக்கூத்து முறைமை- ௩௬

மோனந்த மாமுனிவர் மும்மலத்தை மோசித்துத்
தானந்த மானிடத்தே தங்கியிடும்—ஆநந்தம்
மொண்டருந்தி நின்றாடல் காணும்அருள் மூர்த்தியாக்
கொண்டதிரு அம்பலத்தான் கூத்து. ௩௭

(உரை) அந்த மோன மாமுனிவர் மும்மலத்தை மோசித்து - முடிவான மௌனமுடைய ஞானிகள் கர்த்தாவினுடைய கிருபையினாலே மூன்று மலங்களையு நீக்கி,—தான் அந்தமானஇடத்தே தங்கியிடும் - ஆன்மபோத முடிந்தவிடத்திலே உதயமாகும்,—ஆநந்தம் மொண்டு அருந்தி நின்று ஆடல்காணும் - ஆநந்தவெள்ளத்தை முகந்துகொண்டநுபவிப்பதுதான்,—அருள் மூர்த்தியாக்கொண்ட திருவம்பலத்தான்கூத்து - ஆன்மாக்களை இரக்ஷிக்கவேண்டுமென்னும் காருண்ணியமே திருமேனியாகக்கொண்ட திருவம்பலத்தான் திருநிருத்தஞ் செய்யும் முறைமையாம். ௩எ

உரைஉணர்வுக் கெட்டா ஒருவன்மிகு பஞ்சாக்
கரத்தால் வரைமகள்தான் பாதி—பரையிடமாக்
காணும் படியே கருணைஉருக் கொண்டாடல்
பேணுமவர்க் குண்டோ பிறப்பு. ௩அ

(உரை) உரை உணர்வுக் கெட்டா ஒருவன் - மனவாக்குக் காயங்களுக்கெட்டாத ஒப்பற்ற பரமேசுவரன்,—மிகு பஞ்சாக்கரத்தால் கருணை உருக்கொண்டு - மேலான பஞ்சாக்கரத்தினாலும் கருணையினாலும் திருமேனிகொண்டு,—பரை இடமா - பராசத்தியாகிய திருவம்பலமிடமாகநின்று,—பாதி வரைமகடான் காணும்படியே - பாதியாகிய மலையரையன்மகள் காணும்படிக்கு,—ஆடல் பேணுமவர்க்குப் பிறப்பு உண்டோ-திருக்கூத்தை விரும்பினவர்களுக்குப் பின்பு பிறவியில்லையாம். ௩அ

நாதாந்த நாடகத்தை நன்றாய் அருள்செய்தீர்
ஓதீர் எழுத்தஞ்சும் உள்ளபடி—தீதறவே
அஞ்செழுத்தீ தாகில் அழியுமெழுத் தாய்விடுமோ
தஞ்ச அருட்குருவே சாற்று. ௩௯

(உரை) நாதாந்தநாடகத்தை நன்றாய் அருள்செய்தீர்-தத்துவாதீதமாயிருக்கிற திருக்கூத்து முறைமையை நன்றாய் அருள்செய்தீர்; அஞ்செழுத்தீதாகில் அழியுமெழுத்தாய்விடுமோ ஓதீர் - பஞ்சாக்கரமெழுத்துகளிலே யொன்றாயிருக்குமாகில் அழிகிற எழுத்துக்களாமோ, தஞ்ச அருட்குருவே-புகலிடமாயிருக்கிற கிருபையுடைய தேசிகனே, தீதறவே எழுத்தஞ்சும் உள்ளபடிசாற்று - குற்றமற்றபஞ்சாக்கரத்தினுண்மையை யுண்டானபடியே அடியேனுக் கருள்செய்யவேண்டும்.

*உற்ற குறிஅழியும் ஓதுங்கால் பாடைகளில்*
*சற்றும் பொருள்தான் சலியாது—மற்றதுகேள்*
*ஈசனருள் ஆவி எழிலார் திரோதமலம்*
*ஆசில் எழுத் தஞ்சின் அடை வாம்.* ச0

**(உரை)** ஓதுங்கால் - சொல்லுமிடத்து,—உற்றகுறி அழியும் - பொருந்தப்பட்ட எழுத்துகளுடைய குறிகளழியும்,—பாடைகளிற் பொருள்தான் சற்றுஞ் சலியாது - பதினெண்பாஷைகளிலே உண்டானபொருள்கள் சற்றுங்கெடாது,—மற்றது கேள் - ஆதலால் அப் பஞ்சாக்கரத்தினுண்மையைச் சொல்லுவோங் கேள்,—ஈசன் அருள் ஆவி எழில் ஆர்திரோதம் மலம் ஆசில் அஞ்சு எழுத்தின் அடைவாம் சிவன் அருள் ஆன்மா அழகுபொருந்திய திரோதம் மலம் ஐந்துங் குற்றமில்லாத பஞ்சாக்கரத்தின் பொருண்முறைமையாம். ச0

*சிவனருள் ஆவி திரோதமலம் ஐந்தும்*
*அவனெழுத் தஞ்சின் அடைவாம்—இவனின்று*
*நம்முதலா வோதிலருள் நாடாது நாடுமருள்*
*சிம்முதலா வோதுநீ சென்று.* சக

**(உரை)** சிவன் அருள் ஆவி திரோதம் மலம் ஐந்தும் அவன் அஞ்சு எழுத்தின் அடைவாம் - சிவன் அருள் ஆன்மா திரோதம்-மலம் ஐந்தும் பரமேசுவரனுடைய பஞ்சாக்கரத்தின் பொருள் முறைமையாயினும்,—இவன் நின்று - பக்குவப்பட்ட ஆன்மாநின்று,—நம்முதலா ஓதில் அருள் நாடாது - நகாரமுதலாக உச்சரிக்கில் அருள் பொருந்தாது,—சிம்முதலா நீ சென்று ஓது அருள் நாடும் - சிகாரமுதலாக நீ பொருந்தி உச்சரிப்பாயானல் அருள் பொருந்தும்.

*அண்ணல் முதலா அழகார் எழுத்தைந்தும்*
*எண்ணில் இராப்பகலற் றின்பத்தே—நண்ணி*
*அருளான் அதுசிவத்தே யாக்கும் அணுவை*
*இருளா னதுதீர இன்று.* சஉ

**(உரை)** அண்ணல் முதலா அழகார் எழுத்து ஐந்தும் எண்ணில் - சிவமுதலாகச் சொல்லும் பொருளுடைய அழகு பொருந்திய அக்கரம் அஞ்சையும் (இடை விடாது) தியானித்தால்,—அருளானது நண்ணி - அருளானது பொருந்தி,—அணுவை இன்று இருளானது

தீர இராப்பகல் அற்ற இன்பத்தே சிவத்தே ஆக்கும் - ஆன்மாவை இப்போது மலவிருள் நீங்கும்படி கேவல சகலங்கள் நீங்கிய விடத்தே ஆனந்த வுருவத்தையுடைய சிவத்தின் கண்ணே சேர்க்கும். ச௨

ஆதி மலம்இரண்டும் ஆதியாய் ஓதினல்
சேதியா மும்மலமுந் தீர்வாகா—போதம்
மதிப்பரிதாம் இன்பத்தே வாழலாம் மாறி
விதிப்படியோ தஞ்செழுத்து மே. சங

(உரை) ஆதிமலமிரண்டு மாதியா யோதிஞற் சேதியாமும்மல முந்தீர்வாகா - ஆதியாகிய நகாரமும் மலமாகிய மகாரமும் இரண்டு மடியாகவுச்சரித்தால் உறுதியாக மும்மலமுநீங்கி ஆன்மாவருளைப் பொருந்திப் பேரின்பவாழ்வை யுறமாட்டாது. உறுமுறைமை கூறு மிடத்து, மாறிவிதிப்படி யோதஞ்செழுத்தும் (ஓதிஞல்) போதமதிப் பரிதா மின்பத்தே வாழலாம் - நகாரமுதலாக வுச்சரிக்கு முறை மையைமாறிச் சிவமுன்ஞக அத் திருவெழுத் தஞ்சையும் விதிப்படி யுச்சரிக்க ஆன்மபோதத்தால் மதித்தற்கரிதாகிய பேரின்பவாழ்வி லெய்தி வாழலாம் நீயும்சிவமுன்ஞக வுச்சரிப்பாயாக. சங

அஞ்செழுத்தே ஆகமமும் அண்ணல் அருமறையும்
அஞ்செழுத்தே ஆதிபுரா ணம்அனைத்தும்—அஞ்செழுத்தே
ஆனந்த தாண்டவமும் யாவைக்கு மப்பாலாம்
மோனந்த மாமுத்தி யும். சச

(உரை) அண்ணல் அருமறையும் ஆகமமும் அஞ்செழுத்தே - பரமேசுவரன் அருளிய அரிய வேதாகமங்களும் பஞ்சாக்கரமே,— ஆதிபுராணம் அனைத்தும் அஞ்செழுத்தே - முதன்மைபெற்ற புரா ணங்களனைத்தும் பஞ்சாக்கரமே,—ஆநந்த தாண்டவமும் யாவைக் கும் அப்பாலாம் மோனந்த மாமுத்தியும் அஞ்செழுத்தே - ஆனந்த நடனமும் தத்துவாதீதமாகிய மௌனமா யிருக்கும் பாமுத்தியும் பஞ்சாக்கரமே சச

முத்தி தனைஅடைந்தோர் முந்துபழம் போதங்கி
வித்தகமாம் வீணை இவையிற்றின்—ஒத்த
இரதமணம் வெம்மை எழில்நாதம் போல
விரவுவரென் றோதும் விதி. சரு

**(உரை)** மூந்து பழம் போது அங்கி வித்தகமாம் வீணை இவை யிற்றின் ஒத்த இரதம் மணம் வெம்மை எழில் நாதம்போல - முதிய பழமும் மலரும் அக்கினியும் விசித்திரமாகிய வீணையும் ஆகிய இவற்றின் (முறையே) இணங்கிய இரதமும் மணமும் வெம்மையும் அழகிய ஓசையும் போல.—முத்திதனை அடைந்தோர் விரவுவர் என்று விதி ஓதும் - பாமுத்தியைப் பெற்றவர் இரண்டறச் சிவத்திற் கலந்திருப்பரென்று வேதாகமங்கள் விதியாகச் சொல்லும். ௪௫

தத்துவங்க ளெல்லாம் சகசமா ஆன்மாவிற்
பெத்தத்தில் நிற்கின்ற பெற்றிபோல்—முத்திதனிற்
சித்தமல மற்றார் செறிந்திடுவர் என்றுமறை
சத்தியமா ஓதியிடுந் தான். ௪௬

**(உரை)** பெத்தத்தில் தத்துவங்க ளெல்லாம் ஆன்மாவிற் சகசமா நிற்கின்ற பெற்றிபோல் - பெத்ததசையிலே தத்துவங்களெல்லாம் ஆன்மாவினிடத்திலே இரண்டறநிற்கு முறைமைபோல,—முத்திதனிற் சித்த மலம் அற்றார் செறிந்திடுவரென்று சத்தியமா மறை ஓதியிடுந் தான் - முத்திதசையிலே சகசமல மற்றவர்கள் சிவனிடத்திலே இரண்டறப் பொருந்தி நிற்பார்களென்று சத்தியமாக வேதாகமங்கள் சொல்லும் ௪௬

ஆதவன் தன் சந்நிதியில் அம்புலியின் ஆர்சோதி
பேதமற நிற்கின்ற பெற்றிபோல்—நாதாந்த(த்து)
அண்ணல் திருவடியில் ஆன்மா அணைந்தின்பக்
கண்ணில் அழுந்தியிடும் காண். ௪௭

**(உரை)** ஆதவன் றன் சந்நிதியில் அம்புலியின் ஆர்சோதி பேதம் அறநிற்கின்ற பெற்றிபோல் - ஆதித்தப்பிரகாசத்தின் முன்னே சந்திரப்பிரகாசமானது இரண்டறநிற்கு முறைமைபோல,—நாதாந்தத்து அண்ணல் திருவடியில் ஆன்மா அணைந்து - தத்துவாதீதமாயிருக்கின்ற சிவபிரான் திருவடியிலே ஆன்மாப்பொருந்தி,—இன்பக் கண்ணில் அழுந்தியிடுங்காண் - பேரின்பத்திலே இரண்டறப் பொருந்துமென்றறிவாயாக. ௪௭

சேன்றிவன்றான் ஒன்றில் சிவபூ ரணம்சிதையும்
அன்றவன்றான் ஒன்றும் எனில் அந்நியமாம்—இன்றிரண்டும்

அற்றநிலை யேதென்னில் ஆதித்தன் அந்தன்விழிக்
குற்றமற நின்றதுபோற் கொள். ௪அ

**(உரை)** இவன்றான் சென்று ஒன்றில் சிவபூரணஞ் சிதையும் - ஆன்மா சிவனைச்சென்று பொருந்துவனாகில் சிவனுக்குப் பூரணத்துவ மில்லையாக வேண்டும்,—அவன்றான் ஒன்றுமெனில் அன்று அந்நிய மாம் - சிவன் ஆன்மாவைச்சென்று பொருந்துவனாகில் அப்போது ஆன்மா வேறாயிருக்கவேண்டும்,—இரண்டும் அற்ற நிலை ஏதென்னில், இரண்டு முறைமையுமல்லாமல் நின்ற நிலை எங்ஙனமெனில்,— இன்று ஆதித்தன் அந்தன் விழிக்குற்றம்அற நின்றதுபோற் கொள் - இப்போது அந்தகனுக்குப் படலநீங்கின காலத்து ஆதித்தவொளியுங் கண்ணொளியும் இரண்டறக் கலந்து நின்றாற்போலுமெனக் கொள் வாய். ௪அ

வாக்கு மனமிறந்த வான்கருணை யாளன்உருத்
தாக்கறவே நிற்கும் தனிமுதல்வா—நீக்காப்
பதியினைப்போல் நித்தம் பசுபாச மென்றாய்
கதியிடத்து மூன்றினையுங் காட்டு. ௪௯

**(உரை)** வாக்கு மனம் இறந்த வான் கருணையாளன் உருத்தாக் கறவே நிற்கும் தனிமுதல்வா - மனவாக்குக்களுக் கெட்டாத அருளே வடிவாய் உலகத்திலே தாக்கற்று - நிற்கும் ஒப்பற்ற கர்த்தாவே,— நீங்காப்பதியினைப்போற் பசுபாசம் நித்தமென்றாய் - விட்டு நீங்காம லிருக்கும் பதியினைப்போற் பசுவும்பாசமு நித்தியமென் றருளிச்செய் தாய்,—கதியிடத்தும் மூன்றினையுங் காட்டு - முத்தியிலும் அம்மூன்று முதலும் அழியாமல் நிற்கிற முறைமையை அடியேனுக்கு அருளிச் செய்யவேண்டும். ௪௯

முத்திதனின் மூன்று முதலும் மொழியக்கேள்
சுத்தஅநு போகத்தைத் துய்த்தல்அணு—மெத்தவே
இன்பங்கொ டுத்தல்இறை இத்தைவிளை வித்தல்மலம்
அன்புடனே கண்டுகொள்அப் பா. ௫0

**(உரை)** முத்திதனில் மூன்றுமுதலும் மொழியக்கேளப்பா - அப் பனே முத்தியிலும் பதிபசுபாசமூன்று முதலுமழியாமல் நிற்கிற

முறைமையைச் சொல்லுகிறேன் கேள்,—சுத்தவநுபோகத்தைத் துய்த்த லணு - பேரின்பத்தைப் புசிக்கிற தான்மா,—மெத்தவேயின்பங் கொடுத்த லிறை - பேரின்பத்தை மிகுதியுங் கொடுக்கிறது கத்தா, இத்தைவிளைவித்தல்மலம் - பேரின்பத்தை மேன்மேலும் விளைக் கிறது மலம்,—அன்புடனே கண்டுகொள் . அன்பினாலே யறிவாயாக.

அப்பாஇம் முத்திக் கழியாத காரணந்தான்
செப்பாய் அருளாலே செப்பக்கேள்—ஒப்பில்
குருலிங்க வேடமெனக் கூறில்இவை கொண்டார்
கருவொன்றி நில்லார்கள் காண். ருக

(உரை) இம்முத்திக்கு அழியாத காரணந்தான் அருளாலே செப் பாய் அப்பா செப்பக்கேள் - இப்பாமுத்திக்கு அழியாத ஏதுவைக் கருணையினாலே அருளென்ற மாணவகனே சொல்லக்கேளாய்,—ஒப் பில் குருலிங்கவேடமெனக் கூறில் - (அக்காரணம்) ஒப்பில்லாத குரு லிங்கசங்கம வழிபாடென்று (சிவாகமம்) செப்புமானால்,—இவை கொண்டார் - இம்முப்பொருளின் வழிபாட்டை உண்மையாகக் கொண்டவர்,—கரு ஒன்றி நில்லார்கள் காண் - கருப்பத்திலே பொருந் திப் பிறந்திறவார்களென்று அறிவாய். ருக

கற்ரு மனம்போல் கசிந்து கசிந் தேஉருகி
உற்ருசான் லிங்கம் உயர்வேடம்—பற்ருக
முத்தித் தலைவர் முழுமலத்தை மோசிக்கும்
பத்திதனில் நின்றிடுவர் பார். ருஉ

(உரை) கற்ரு மனம்போற் கசிந்து கசிந்தே உருகி உற்று - ஈன் றண்ணியகன்றையுடைய பசுவைப்போலப் பெரிதுங் கசிந்துருகி அமைந்து,—ஆசான் லிங்கம் உயர் வேடம் பற்ருக - சிவதேசிகனை யும் சிவலிங்கப்பெருமானையும் உயர்ந்த சிவவேடத்தாரையும் பொரு ளாகக்கொண்டு,—முத்தித்தலைவர் முழுமலத்தை மோசிக்கும் பத்தி தனில் நின்றிடுவர் பார்-சீவன்முத்தியில்நிற்குந் தலைவரும் மலவாசனை முற்றும் ஒழித்தற் கேதுவாகிய அன்புசெய்யும்வழியே ஒழுகுவர் (ஆத லால் நீயும் அவ்வன்பின் வழியை) நோக்குவாய். ருஉ

வாழ்ந்தேன் அருட் கடலே வற்றாப் பவக்கடலில்
வீழ்ந்தே அலையாமல் மேதினியில்—சூழ்ந்து விடா
வெண்ணெய்ச் சுவேதவன மெய்கண்ட நாதனே
உண்மைத் தவப்பயனே உற்று. ருரு

**(உரை)** சூழ்ந்துவிடா வெண்ணெய்ச் சுவேதவன மெய்கண்ட நாதனே - (மெய்யன்பர்) சூழ்ந்துநீங்காத திருவெண்ணெய்நல்லூரில் எழுந்தருளியிருக்கின்ற சுவேதவனப்பெருமாளென்னும் பிள்ளைத் திருநாமத்தையுடைய மெய்கண்டதேவனே,—அருட்கடலே - கிருபாசமுத்திரமே,—உண்மைத் தவப்பயனே - உண்மையாகிய சரியை முதலிய தவத்தினர்க்குப் பயனாயுள்ளவனே,—வற்றாப் பவக்கடலில் வீழ்ந்தேமேதினியில் அலையாமல் உற்று வாழ்ந்தேன் - வற்றாதபிறவிப் பெருங்கடலில் வீழ்ந்து உலகவியலிற் சுழலாது (முத்திக்கரையாகிய உனது திருவடியை) அடைந்துவாழ்ந்தேன். ருரு



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

உமாபதி சிவாசாரியர்

அருளிச் செய்த

# சிவப்பிரகாசம் மூலமும் சிந்தனையுரையும்*

## பாயிரம்

### காப்பு

*ஒளியான திருமேனி உமிழ்தானம் மிகமேவு*
*களியார வரும்ஆனை கழல்நாளும் மறவாமல்*
*அளியாளும் மலர்தூவும் அடியார்கள் உளமான*
*வெளியாகும் வலிதாய வினைகூட நினையாவே.*

**(உரை)** ஒளியான திருமேனி - ஞானப் பிரகாசமாய்ச் சிவனுக்குத் திருமேனி தானேயாய்த் தாதான்மியமாகிய பராசத்தியினின்றும்; உமிழ்தானம் மிகமேவு - ஆன்மாக்க ளனைவரையும் மோட்சத்து ளடைத்தருள வேண்டுங் காருண்ணியத்தா லுண்டாகிய இச்சை ஞானங் கிரியை யென்னு மூன்று சத்தியும் மிகுதியும் பொருந்துகையினாலே ; களியார வரும் ஆனை - இம்மூன்று சத்தியோடுங் கூடிய கெர்ச்சிதம் பொருந்திய ஆதிசத்தி யென்னும் யானையினது ; கழல் - யானெனதென்பதற்ற விடமாய்ப் பத்தர்க்கு எய்ப்பினில் வைப்பென உதவும் முத்தித்தாளை ; நாளும் மறவாமல் - முதல்வன் காட்டியுங் கண்டும் உபகரித்துவரும் பெரிய உதவியைக் குறித்து ஒருபொழுதும்

---

* உமாபதி சிவாசாரியர் வரலாறு, சிவப்பிரகாசம் முதலிய எட்டு சாத்திரங்களின் வரலாறு, அவற்றின் உரைகளின் வரலாறு, உரையாசிரியர் வரலாறு முதலியவற்றை முகவுரையிற் காண்க.

மறவாமற் கருதிக்கொண்டு ; அளியாளும் மலர்தூவும் அடியார்கள் - அன்பு, கொல்லாமை, இந்திரிய நிக்கிரகம், வாய்மை, பொறை, அருள், அறிவு, தவம் என்னும் இவ்வட்டபுட்பங்களாற் சதாகால பூசை செய்யுந் தொண்டர்களுக்கு ; உளமான வெளியாகும் - அறிவுந் தொழிலும் மற்றும் முதல்வனதேயாகும்; ஆகவே—வலிதாய வினைகூட நினையாவே - மூன்று குற்றம், மூன்று குணம், மூன்று மலம், மூன்றவத்தையென்று நின்று செய்யும் இருவினையாய் உயிர்ச்சார்பு பொருட்சார்பென்றும் அகப்பற்று புறப்பற்றென்றும் பெயரையுடைத்தாய், எல்லா அனத்தங்கட்குங் காரணமாயுள்ள மூலமலத்தின் காரிய வேறுபாட்டாற் புகழவாப் பொருளவாவென்னும் பெயர் படைத்த இருவினைகளும் முன்புபோல வந்து பொருந்தா, அவர்களும் அவ்வாறு சதாகாலபூசை செய்வதால் முதல்வனை மறந்து நினையார்கள்.

"எட்டுக்கொண் டார்தமைத் தொட்டுக்கொண் டேநின்றார், விட்டா ருலக" [திருவுந்தியார், 24] மென்பதுமிது. திருவருளுக்கு ஆதிசத்தியென்பது ஓர் இடுகுறிப்பெயர். "திருவருள்வா ரணத்தின் றிருவடி" யென்றார் எமது ஆசிரியரும். இது இந்நூற் கருத்து முழுவதும் உடலோடுள்ளடக்கி ஒரு பொருள் மேற்கொண்ட சிறப்புப்பாயிரம்.

கழல்நாளும் மறவாம லென்னவே தெரிசனமும், உளமான வெளியாகுமென்னவே சுத்தியும், வலிதாய வினைகூட நினையாவே என்னவே ஆன்மலாபமுங் கூறியவாறும் ; தசகாரியம் பத்தும் ஞானம்பற்றல் பணிநீத்தல் நேயத்தழுந்தலென்னுந் தரிசனஞ் சுத்தி லாபம் மூன்று ளடங்கியவாறும் ; ஒளியான திருமேனியெனவே சிவரூபமும், உமிழ்தான மிகமேவுகளியார வருமியானை யெனவே சிவதரிசனமும்,கழல்நாளு மறவாம லளியாளு மலர்தூவு மடியார்களுளமான வெளியாகு மெனவே சிவயோகமும், வலிதாய வினைகூட நினையாவே யெனவே சிவபோகமுங் கூறியவாறும் ; இவை நாலோடேனையவெல்லாம் உடனிகழ்ச்சியாமாறும் நுண்ணுணர்வினு லறிக. யாமும் அவ்வாறு செய்வோமென்பது கருத்து. இச்சைஞானங் கிரியை மூன்றையும் மூன்று மதமாகவும் இவையுடைய சத்தியை யானையாகவும் உருபகஞ் செய்தார் விக்கினங் காத்தற்குரிய விநாயகத் துதியு மாம்பொருட்டு.

## நடராசர்

1. ஓங்கொளியாய் அருள்ஞான மூர்த்தி யாகி
உலகமெலாம் அளித்தருளும் உமையம்மை காணத்
தேங்கமழும் மலரிதழி திங்கள் கங்கை
திகழரவம் வளர்சடைமேற் சேர வைத்து
நீங்கலரும் பவத்தொடர்ச்சி நீங்க மன்றுள்
நின்றிமையோர் துதிசெய்ய நிருத்தம் செய்யும்
பூங்கமல மலர்த்தாள்கள் சிரத்தின் மேலும்
புந்தியினும் உறவணங்கிப் போற்றல் செய்வாம். க

(உரை) ஓங்கொளியாய் - சுயம்பிரகாசமான பேரொளியாகிய பரமசிவன், அருள் - உயிர்களிடத்துள்ள காருண்ணியத்தினலே, ஞானமூர்த்தி யாகி - பஞ்சசத்தி மூர்த்திமா ஞகி; உலகமெலாம் . . . காண - அசேதனப் பிரபஞ்சங்களைச் சத்தரூபம் அத்தரூப மென்றிரு விதமாகப் படைத்துச் சேதனப் பிரபஞ்சங்களை யிரட்சித் தருளா நின்ற சிவகாமசவுந்தரி திருக்கண் சாத்தியருள; தேங்கமழும் . . . வைத்து-தேனும் வாசனையும் விளங்கிய கொன்றை மாலிகையை யும் அர்த்தசந்திரனையுங் கங்காபரமேசுவரியையுஞ் சர்ப்பத்தையும் பகைதீர்த்து நீண்ட திருச்சடாபாரத்திற் றரித்து; நீங்கலரும் பவத் தொடர்ச்சி நீங்க - ஆன்மாக்களால் விட்டு நீங்குதற்கரிய மூலமலபந் தம் நீங்கும்படிக்கு; மன்றுள் நின்று-திருச்சிற்றம்பலத்தின்க ணெழுந் தருளி நின்று; இமையோர் துதிசெய்ய - தேவர்கள் தோத்திரஞ் செய்து வழிபட; நிருத்தஞ் செய்யும் பூங்கமல மலர்த்தாள்கள் - தூல சூக்கும பரமென்னு மூவகைப் பஞ்சகிருத்தியங்களும் நடக்கும் படி ஆனந்த நிருத்தஞ் செய்யுந் தாமரை மலர்போலுந் திருவடிகளை; சிரத்தின் . . . செய்வாம் - எமது சென்னியினுஞ் சிந்தையினும் பொருந்த வைத்து வந்தித்து வணங்குவாம்.

“உச்சியாய் மென்றசையா யோடாகி மூளையாய், நச்சியா வெண்டலையா யீர்மயிர்பேன் - மொச்சிரா, வாள்வைத்த கண்ணி மண வாளன் மன்றினடத், தாள்வைத்த வென்றன் றலை”யென்றும், “அஞ்சு விரலாய்க் குதியா யகம்புறமாய், விஞ்சுநக மாய்ச்சிவந்து

மெல்கியிரா-துஞ்சா, தலைமீது வெண்ணெயென வுள்ளுருக்கு மென்றன், றலைமீது வைத்தசிவன் ருள்" என்று மிருப்பதால் உயிருக்குத் தலையுஞ் சிந்தையு மிவை யென்றுஞ் சிவனுக்குத் தாள் முதலியன இவையென்றுங் குருமுகமா யறிக. ஓங்கொளியா யென்பதனாற் சொரூப லட்சணமும், அருண்ஞான மூர்த்தியாகி யென்பதனால் தடத்த வுண்மைத் திருமேனி லட்சணமும், உமையம்மை காணத் தேங்கமழு மலரிதழி திங்கள் கங்கை திகழரவம் வளர்சடைமேற் சேர வைத் தென்பதனால் அத்துவாமூர்த்தியென்னும் உபசாரத் திருமேனி லட்சணமும், மன்றுணின் றென்பதனால் உலகெலாமாய லட்சணமும், இமையோர் துதிசெய்ய வென்பதனால் வேறாகிய லட்சணமும், நிருத்தஞ் செய்யுமென்பதனால் உடனாகிய லட்சணமும், நீங்கலரும் பவத்தொடர்ச்சி நீங்கவென்பதனால் இவ்வகைத் திருமேனிகட்குக் காரணமும் பயனும் உடலோடுள்ளடக்கி யொரு பொருள்மேற் கொண்டவாறு காண்க.

## சிவகாமியம்மை

2. பரந்தபரா பரையாதி பரன திச்சை
 பரஞானம் கிரியைபர போக ரூபம்
தருங்கருணை உருவாகி விசுத்தா சுத்தத்
 தனுகரண புவனபோ கங்கள் தாங்க
விரிந்தஉபா தானங்கள் மேவி ஒன்றாய்
 விமலமாய் ஐந்தொழிற்கும் வித்தாய் ஞாலத்(து)
அரந்தைகெட மணிமன்றுள் ஆடல் காணும்
 அன்னையருட் பாதமலர் சென்னி வைப்பாம். உ

(**உரை**) பரந்த - சர்வவியாபியாகிய சிவனுடனே அக்கினிக்கு வெம்மையும் நீர்க்குத் தட்பமும்போல் விரவி வியாபித்திருக்கிற; பராபரை - பராசத்தி ; பரபோக ரூபந் தருங்கருணை - ஆன்மாக்களுக்கு மேலாகிய சிவாநந்த போகத்தைச் சுதந்தரமா யனுபவிக்கும்படி கொடுக்குங் காருணியத்தினாலே ; ஆதி - ஆதிசத்தி யென்றும் ஆக்கினைசத்தி யென்றும் திரோதானசத்தி யென்றும் இடுகுறிப் பெயர் புனைந்து சிவசங்கற்ப சொரூபமாய் ; பரனதிச்சை - பரமசிவனது இச்சாசத்தியென்றும் ; பரஞானம் - பரமசிவனது ஞானசத்தியென்றும்; கிரியை - பரமசிவனது கிரியாசத்தியென்றும்; உருவாகி - பரம

சிவனுக்குத் திருமேனியாகி; விரிந்த உபாதானங்கள் மேவி-விரிவினை யுடைய உபாதானத் திரயங்களிற் சங்கற்ப ரூபமாய்ப் பொருந்தி; விசுத்தாசுத்தத் தனுகரண புவனபோகங்கள் தாங்க - சுத்தம் மிசிரம் அசுத்தமென்னு மூவகைத் தனுகரண புவனபோகங்களை அது அது தாளுகச் சுமக்கச் சங்கற்பித்து நின்றும் ; ஒன்ருய்-சிவசங்கற்ப வேறு பாட்டாற் சத்தி பல்பேதப்படினுந் தான் ஒரு முதலேயாய் ; விமல மாய் - மலரகிதசொரூபமாய் ; ஐந்தொழிற்கும் வித்தாய் - பஞ்ச கிருத்தியங்களுந் தனது சன்னிதானத்தை யின்றியமையாத மூல காரணமாய் ; ஞாலத்து அரந்தை கெட - சேதனப் பிரபஞ்சங்களெல் லாந் துயர்தீரும் பொருட்டு; மணிமன்றுள் - இரத்தின சபை யென் னும் இடுகுறிப் பெயருடைத்தாய்ச் சிற்சத்தி சொரூபமாகிய திரு வம்பலத்தின் கண்ணே ; ஆடல் காணும் அன்னை - ஆனந்த நிருத்தந் தரிசித்தருளுஞ் சிவகாமியம்மை ; அருட் பாதமலர் சென்னி வைப் பாம் - கிருபை பொருந்திய தாமரை போலுந் திருவடிகளை எமது முடிக்கு அணிகலமாகத் தரித்துக் கொள்வாம்.

"தேசுமலி பொதுஞானச் செவ்வொளியும் ஈசனது நடத் தொழிலும்" என்பதனல், மணிமன்றும் அதனுள் ஆடல்காணும் அன்னையும் நுண்ணுணர்வா லறிக. மணிமன்றுள் நிருத்தஞ் செய்யும் பூங்கமல மலர்த்தாளும், மணிமன்று ளாடல்காணு மன்னையருட் பாத மலரும் மணிமன்றும் இவைஇவை யென்பது குருமுகமா யறிக. ஈண்டு விரிப்பிற் பெருகும்.

### விநாயகர்

3. *நலந்தரநூல் இருந்தமிழின் செய்யுட் குற்றம்
நண்ணுமை இடையூறு நலியாமை கருதி
இலங்குமிரு குழையருகு பொருதுவரி சிதறி
இணைவேல்கள் இகழ்ந்தகயற் கண்ணியொடும் இறைவன்

---

*இச்செய்யுள் முதலிய நான்கு செய்யுள்களுக்கும், மேல்வரும் 11, 12 செய்யுள்களுக்கும் சிந்தனையுரையில் உரையில்லை. பொருள் வெளிப்படை யென்று குறிக்கப்பட்டுளது. திருநெல்வேலியிலிருந்து கிடைத்த வேறுரைப்பிரதியிற் காணும் உரை இங்குத் தரப்படுகின் றது. விவரம் முகவுரையிற் காண்க.

கலந்தருள வரும்ஆனை முகத்தான் மும்மைக்
கடமருவி யெனநிலவு கணபதியின் அருளால்
அலர்ந்துமது கரமுனிவர் பரவவளர் கமலம்
அனையதிரு வடியிணைகள் நினைதல் செய்வாம். ௩

இது விநாயகத் தோத்திரம். இதன் பொருள் வெளிப்படை.

(உரை) நலந்தா...கருதி - இந்நூலுக்கு எல்லா நன்மையு முண்டாம்படியும் பெரிய தமிழின் பாட்டுக்குப் பஞ்சவதிகாரக் குற்றம் பொருந்தாமலும் இந்நூல் செய்து முடியுமளவும் ராசிக தெய்விகங் களால் ஒரு விக்கினம் வாராமையும் விசாரித்து; இலங்குமிரு...ஆனை முகத்தான் - விளங்கப்பட்ட பெரிய மகரக் குழையளவுஞ் சென்று மோதிச் செவ்வரி பரந்து தனக்குவமையாகச் சொல்லப்பட்ட வேல் களைப் பழித்த கயல்போன்ற கண்ணினை யுடையாளோடும் பரனே தான் கூடியருள எழுந்தருளின ஆனைமுகத்தினையுடைய; மும் மை . . . னருளால் - மூன்று மதங்களும் மலையிலே நின்றும் அருவி பாய்ந்தாற்போல விளங்குகிற மூத்தநயினார் அனுக் கிரகத்தினாலே; அலர்ந்து . . . செய்வாம் - முனிவராகிய வண்டுகள் சூழ்ந்து தோத்திரம் பண்ணி நிறம் வளராநின்ற தாமரை மலர் போன்ற சீபாதங்களை நினையா நின்றேன்.

கயற்கண்ணியொடு மிறைவன் கலந்தருள வருமானை முகத்தா னென்றது ஞானக்கிரியைகளே திருமேனி யெனக் கொள்க. மூன்று மத மென்றது சாத்துவித ராசத தாமதமெனக் கொள்க. இதனாற் சொல்லியது இந்நூல் செய்து முடியுமளவும் இராசிக தெய்விகங்களி னாலே இடையூறு வாராமல் விக்கினேசுரனை வழிபட்ட முறைமை அறிவித்தது.

## முருகக் கடவுள்

4. வளநிலவு குலஅமரர் பதியாய் நீல
மயிலேறி வரும்ஈச னருள்ஞான மதலை
அளவில்பல கலைஅங்கம் ஆரணங்கள் உணர்ந்த
அகத்தியனுக் கோத்துரைக்கும் அண்ணல்விற லெண்ணு

உளமருவு சூரனுரம் எனதிடும்பை ஓங்கல்
ஒன்றிரண்டு கூறுபட ஒளிதிகழ்வே லுகந்த
களபமலி குறமகள்தன் மணிமுலைகள் கலந்த
கந்தன்மல ரடியிணைகள் சிந்தை செய்வாம். ௬

இது சுப்பிரமணிய தோத்திரம். இதன் பொருள் வெளிப்படை.

**(உரை)** வளநிலவு குலவமரர் பதியாய் - புதுமை விளங்காநின்ற தேவர்கள் கூட்டத்துக்குக் கத்தாவுமாய்; நீலமயி . . . மதலை - நீலநிறத்தையுடைய மயில்வாகனத்திலே யெழுந்தருளி வாராநின்ற தம்பிரானுர் தந்தருளும் ஞான வடிவான பிள்ளை; அளவில்பல . . . மண்ணல் - எண்ணிறந்த பல கலை ஞானங்களையும் நாலு வேதங்களையும் ஓதியுணர்ந்த அகத்தியமாவிருஷிக்கு வேத வியாக்கியானத்தை அருளிச்செய்த சுவாமி; விறலெண்ணு . . . கந்தன் - தன்னுடைய வெற்றியை விசாரியாத மனத்தையுடைய சூரனது மார்பையும் என்னுடைய பிறவிக் கிலேசத்தையும் அசுரனொதுங்கின கிரவுஞ்சபர்வதத்தையும் இவை யொன்றிரண்டு கூறும்படி விளங்காநின்ற வேலைத் திருவுள்ளத்தடைத்துக் குறமகள்தனது களபம் பொருந்திய அழகிய முலைத்தளங்களிலே முயங்கியருளிய சுப்பிரமணியனுடைய; அடியிணைகள் சிந்தை செய்வாம்-செந்தாமரைமலர்போன்ற இரண்டு சீபாதங்களையும் நினையாநின்றேன்.

கந்தன் மலரடியிணைகள் சிந்தை செய்தநும் நலந்தரநூ லிருந்தமிழின் செய்யுட்குற்ற நண்ணுமை யிடையூறு நயவாமை கருதியெனப் பொருள் கூட்டுக. இடும்பை யிரண்டுபட என்றது தம்மை விட்டு அன்னியமாக என்றதெனக் கொள்க. சுப்பிரமணியனென்றது வாலப்பிரமசாரியெனக் கொள்க. இதனுற் சொல்லியது இந்நூல் செய்து முடியுமளவும் இடையூறு வாராமலெனக் கொள்க. இவை இரண்டும் வழிபடு தெய்வ வணக்கம்.

### சந்தான பரம்பரை

5. தேவர்பிரான் வளர்கயிலை காவல் பூண்ட
திருநந்தி அவர்கணத்தோர் செல்வர் பாரிற்
பாவியசத் தியஞான தரிசனிகள் அடிசேர்
பரஞ்சோதி மாமுனிகள் பதியா வெண்ணெய்

மேவியசீர் மெய்கண்ட திறலார் மாறு
விரவுபுகழ் அருணந்தி விறலார் செல்வத்
தாவிலருள் மறைஞான சம்பந்தர் இவரிச்
சந்தானத் தெமையாளுந் தன்மை யோரே. ரு

இது குருபாரம்பரிய தோத்திரம். இதன் பொருள் வெளிப்படை.

**(உரை)** தேவர்பிரான் திருநந்தி - தேவர்களுக்குக் கத்தாவாகிய சிறீகண்ட பரமேசுரன் எழுந்தருளியிருந்துள்ள மிக்க கயிலாயத் திருமலையைக் காக்கிறது விரதமாகப் பூண்ட சிறீநந்திகேசுரதேவ நாயனர்; *அவர்கணத்தோர் . . . தரிசனிகள் - அவர் திருவடியைப் பெற்ற இருஷிகளில் ஒப்பில்லாத ஞானச்செல்வத்தை யுடையராய்ப் பூமியிலே எழுந்தருளின சத்தியஞான தரிசனிகள்; அடிசேர் பரஞ்சோதி மாமுனிகள் - இவரது சீபாதத்தைப் பெற்ற இருஷிகள் பரஞ்சோதி மாமுனிகள்; பதியா . . . திறலார் - சிறப்புமிக்க திருவெண்ணெய் நல்லூரைத் திருப்பதியாக வுடைய மெய்கண்டதேவ நாயனர்; மாறு விரவுபுக ழருணந்தி - அவருடைய திருவடியைப் பெற்று ஒழியாத புகழைக் கலந்த அருணந்திதேவ நாயனர்; விறலார் . . . சம்பந்தர் - அவருடைய திருவடியைப் பெற்று முறைமையின்வரு நாயன்மாரில் இந்திரியங்களைச் செயித்த வெற்றியையும் ஞானச் செல்வத்தையுமுடையராய் நீங்காத அருளையும் பெற்ற மறைஞான சம்பந்த நாயனர்; இவரிச் . . . தன்மை யோரே - இவர்கள் இச் சந்தானத்து எம்மை யடிமையாக ஆளுந் தகுதியை யுடையோர்கள்.

மெய்கண்ட திறலாரென்பது சத்தியத்தைத் தரிசித்த சாமர்த்தியத்தை யுடையவரெனக் கொள்க. இதனுற் சொல்லியது இந்த அத்தம் பாரம்பரியமாக வந்ததென்னும் முறைமை அறிவித்தது.

---

*அவர் கணத்தோர் செல்வர் சனற்குமார முனிவர் என்று சில உரைகளில் காணப்படுவது சம்பிரதாயத்தை ஒட்டியுளது. குருமரபு கூறுவோர் நந்திகேசுரர்க்கும் சத்தியஞானதரிசனிகட்கும் இடையே சனற்குமார முனிவர் பெயரைக் கூறுதலை முறையாகக் கொள்வர்.

## குருவணக்கம்

6. பார்திகழ வளர்சாம வேதம் மல்கப்
பராசரமா முனிமரபு பயில ஞானச்
சார்புதர வந்தருளி எம்மை யாண்ட
சைவசிகா மணிமருதத் தலைவன் அந்தண்
கார்மருவு பொழில்புடைசூழ் மதின்மீதே மதியம்
கடவாமை நெடுங்கொடியின் கரந்தகையும் கடந்தைச்
சீர்நிலவு மறைஞான சம்பந்தன் எந்தை
திருவளரு மலரடிகள் சென்னி வைப்பாம். சு

இது குரு தோத்திரம். இதன் பொருள் வெளிப்படை.

(உரை) பார்திகழ-பூமிவிளங்க; வளர் சாமவேதம் மல்க-ஆயிரஞ் சாகைகளாக விரிந்த சாமவேத அத்தியாயம் நிற்க; பராசர மாமுனி மரபு பயில - பராசரப் பிரமரிஷி கோத்திரந் தழைக்க; ஞான . . . . . சைவசிகாமணி - ஞானவுறவைத் தர எழுந்தருளி ஒன்றுக்கும் பற்றாத என்னை அடிமையாகக் கொண்டருளின சைவசமயத்துக்கு ஓர் அபிஷேக மாணிக்கம்; மருதத்தலைவன் - மருதூருக்குக் கத்தா; அந்தண் . . . மறைஞான சம்பந்தன் - அழகினையும் குளிர்ச்சியினையும் மேகத்தினையும் பொருந்திய சோலைப்பக்கங்களிலே சூழ்போந்த பெரிய மதிண்மீதே சந்திரனோடாமல் நெடிய கொடியினது கைகள் தகையுஞ் சிறப்பினையுடைய திருப்பெண்ணை கடத்துச் சிறப்பு விளங்காநின்ற மறைஞானசம்பந்த நாயனார்; எந்தை-என்னுடைய சுவாமியுடைய; திருவளரு மலரடிகள் சென்னி வைப்பாம் - அழகு வளராநின்ற தாமரை மலர் போன்ற சீபாதங்களை என் தலைமேல் வைத்துக்கொள்ளாநின்றேன்.

பார்திகழ என்றது பிரபஞ்சத்தி லுண்டான ஆன்மாக்களுக்கு ஞானம் பிரகாசிக்க எனக்கொள்க. மருதூர் பிறந்த ஊர். திருப்பெண்ணுகடம் ஆசாரிய அபிஷேகஞ்செய்த ஊர். இதனுலை சொல்லியது இந்நூல் மலைவறச் சென்று முடியவேண்டி ஆசாரியரைத் தோத்திரம் பண்ணின முறைமை அறிவித்தது. இந்த இரண்டுங் குருமரபுங் குருதுதியும்.

நுதலிய பொருள்

7. புறச்சமயத் தவர்க்கிருளாய் அகச்சமயத் தொளியாய்ப்
புகல்அளவைக் களவாகிப் பொற்பணிபோல் அபேதப்
பிறப்பிலதாய் இருள்வெளிபோற் பேதமும்சொற் பொருள்போல்
பேதாபே தமும்இன்றிப் பெருநூல் சொன்ன
அறத்திறனால் விளைவதாய் உடலுயிர்கண் அருக்கன்
அறிவொளிபோல் பிறிவரும்அத் துவித மாகும்
சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாம் சைவ
சித்தாந்தத் திறன்இங்குத் தெரிக்க லுற்றாம். எ

(உரை) புறச்சமயத் தவர்க்கிருளாய் - பதிப்பொருள், புறப்புறச் சமயம் புறச்சமயம் அகப்புறச் சமயமென்னும் மூவகைப் புறச்சமயப் பதினெண்மரும் பாசக்கட்டுடையராகலிற் றிரிபதார்த்த நிச்சய மறியாமையின் அவர்களறிவுக்குத் தோன்றாமல் அந்தகாரத் திரவியமாயும்; அகச்சமயத் தொளியாய் - அகச்சமய மென்னும் பேதவாதி, பாடாணவாதி, சிவசமவாதி, சங்கிராந்தவாதி, ஈசுர அவிகார வாதி, பரிணாமவாதி, சைவரென்போர்கள் திரிபதார்த்தமுங் கொள்வோராகலிற் பாசநீக்கத்துக் குரியராகலின் அவர்களறிவுக்கு அளவுக்களவாய்த் தோன்றும் பிரகாசத் திரவியமாயும்; புகலளவைக் களவாகி - ஆக நாற் கூற்றுச் சமயத்தோர்க்கும் அவரவர் கொண்ட அளவைப் பிரமாணங்கட்குத் தக்கதாய் அளவுபட்டு அந்தந்த இடமே அவர்களுக்கு மோட்சத் தானமாய்க் கொடுப்பதாயும்; பொற்பணி போ லபேதப் பிறப்பிலதாய் - சித்தாந்திகள் முத்தியென்னும் பர முத்தியில் ஒரு பொன் பலபணியானது போல அபேதப்பொருளு மல்லவாய்; இருள் வெளிபோற் பேதமும் - இருளுமொளியும் போலப் பேதப் பொருளுமல்லவாய்; சொற்பொருள் போற் பேதாபேதமுமின்றி - சொல்லும் பொருளும் போலப் பேதா பேதப் பொருளுமல்லவாய்; பெருநூல் சொன்ன அறத் திறனால் விளைவதாய் - இங்ஙனங் கூறிய விசிட்டாத்துவிதம் துவிதாத்துவிதம் கேவலாத்துவிதங்க ளின்றிப் பெரிய சிவாகமத் துணிவாகிய சுத்தாத்துவிதப் பொருளாய்; உடலுயிர் - உடலு முயிரும் ஒற்றுமை நயத்தா லொன்றுபட்டும் உடல் உயிரா யொழி யாது உயிர் உடலா யொழியாது உடல் உடலே உயிர் உயிரேயாயி

னும் உடலுக்கு ஓர் உண்டியை யூட்டுமிடத்து அஃது உடலுண்டதென்றும் உயிருண்டதென்றும் பிரிக்கப்படாமையின் உயிர் உடலேயாயும் அஃதல்லவாயு மிருப்பது போலவும்; கண் அருக்கன் - கண்ணும் ஆதித்தனும் பேதப்பொருளாயினுங் கண் ஒரு விடயத்தையறியுமிடத்துக் கண்ணொளி ஆதித்தனொளியோடு விரவியல்லது காட்சிப்படாமையிற் கண்ணொளி கண்டதென்றும் ஆதித்தனொளி கண்டதென்றும் பிரிக்கப்படாதிருந்துங் கண்ணொளி ஆதித்தனொளியாகாது, ஆதித்தனொளி கண்ணொளியாகாது, ஆதித்தனொளி கண்ணொளியோடு விரவிக் காட்டியும் அதனோடு விரவாது இருளை நீக்கியும் நிற்பது போலவும்; அறிவொளிபோல் - ஒரு விடயத்தைக் காணுமிடத்து ஆன்மசிற்சத்தி இந்திரிய ஞானத்தோடு விரவியல்லது காட்சிப்படாதிருந்தும் மானதம் தன்வேதனை யோகம் அனுமானம் உரை முதலிய காட்சியிற் செல்லுங் காலத்து அதைப் பிரிந்து வேறுயும் அதுவாயு மிருக்கும் ஆன்மசிற்சத்தியை அவ்விந்திரிய ஞானத்தோடு விரவிக் காட்சிப்படுங் காலத்து அது அறிந்ததென்றும் இது அறிந்ததென்றும் பிரிக்கப்படாததுபோலவும்; பிறிவரும் அத்துவிதமாகுஞ் சிறப்பினதாய் - இவ்வாறு மூவிதமாய் அபேதம் பேதம் பேதாபேதங்களின் பொதுமையாயும் உலகெலாமாகி வேறுயுடனுமாய் நிற்பது கலப்பினுல் ஒன்றுயும் பொருட்டன்மையால் வேறுயுஞ் செயற்றன்மையால் உடனுயும் நிற்குஞ் சுத்தாத்துவித நயத்தை; வேதாந்தத் தெளிவாஞ் சைவசித்தாந்தத் திறன் - தத்துவமசியெனும் வேதாந்த மகாவாக்கியத்தின் தெளிவுபோதமாகிய சைவசித்தாந்த வெற்றிப்பாட்டை; இங்குத் தெரிக்கலுற்றும்-இந்த நூலின்கட் கேவல சகல சுத்தமென்னும் மூன்றவத்தையு ளடக்கித் தொகை வகை விரிவென்னு முத்திறப்படுத்திச் சொல்லத் தொடங்குவாம்.

'பொதுவதனி, லத்துவித மாத லகண்டமுந் தைவம்' [சிவஞானபோதம், xii, 5] என்றூர் முதனூலாசிரியரும்.

இந்நூல் கோடற்குரிய அதிகாரிகள் யாரென்னில்,

### தீட்சாக்கிரமம்

8. மூவகைஆ ருயிர்வர்க்கம் மலத்தார் கன்ம
மூலமலத் தார்மூன்று முடையா ரன்றே
தீவகமாம் எனவுருவாய் வந்து நாதன்
திருநோக்கால் பரிசத்தால் திகழும் வாக்கால்

பாவனையால் மிகுநூலால் யோகப் பண்பால்
பரவிவரும் அவுத்திரியாற் பாச நாசம்
மேவஅரு ளுதவும்அவுத் திரியிரண்டு திறனும்
வியன்கிரியை ஞானமென விளம்பு மாறே. அ

(உரை) மூவகை ஆருயிர்வர்க்கம் - ஆன்மவர்க்கங்கள் அனைவரும் மூவகையு ளடங்குவர்; மலத்தார் - ஆணவமலபந்த மொன்றும் உடைய விஞ்ஞானகலரென்றும்; கன்மமூல மலத்தார் - மூலமலம் கன்ம மலமென்னும் இருவித பந்தமுமே யுடைய பிரளயாகல ரென்றும்; மூன்று முடையார் - ஆணவம் காமியம் மாயை யென்னும் மும்மல பந்தமு முடைய சகலரென்றும்; அன்றே - இம்மூவகையும் அனாதியே அவர்கள் பந்தப்பட்ட முறைமை; இவர்களிற் சகலராயுள்ளவர்களுக்கு —தீவகமாமென வுருவாய் வந்து நாதன்-பாசமோசனமாகிற* பக்குவம் வந்த விடத்துப் பரமேசுரனே ஆசாரிய மூர்த்தமாக எழுந்தருளி வந்து; திருநோக்கால் - சட்சுதீக்கையினலும்; பரிசத்தால் - பரிசதீக் கையினலும்; திகழும் வாக்கால் - உபதேச வாசக தீக்கையாலும்; பாவனையால் - தன்னைப்போல் பாவிக்கும் பாவன தீக்கையினலும்; மிகுநூலால் - ஆகமதீக்கையாலும்; யோகப் பண்பால் - அறிவிலே கலப்பிக்குஞ் சையோக தீக்கையாலும்; பரவிவரும் அவுத்திரியால் - விரிந்து விளங்கும் ஔத்திரிதீக்கையாலும்; பாசநாசமேவ அருளுத வும் - இவ்வேழு விதமாகிய தீக்கைகளினலேயும் மூவகைப் பாசமும் நிவிர்த்தி செய்து திருவடியிலே கூட்டும்; அவுத்திரி இரண்டு திற னும் - அவுத்திரி தீக்கை யொன்றும் இரண்டு விதியுடைத்தாயிருக் கும்; அது எதென்னில் - வியன்கிரியை - புறம்பே குண்டமண்டலாதி யிட்டுச் செய்யுங் *கிரியா விதியொன்றும்; ஞானம்-அறிவிலே தேடிக் கொண்டு செய்யும் ஞானவிதி யொன்றும்; என விளம்புமாறே - இவ் விரண்டு விதியையுடையது அவுத்திரிதீக்கை.

'அழிவிலாக் கிரியையின லாதல்சத்தி மத்தா லாத' [சிவஞான சித்தியார், viii, 6] லென்றார் வழிநூலாசிரியரும்.

இத்தீக்கையின் முறையும் பயனும் எதென்னில்,

---

*கிரியாவதி ஞானவதி யென்பன சாத்திர வழக்கு.

9. விரும்பியமந் திராதிகாரம் அர்ச்சனாதி காரம்
மேவும்யோ காதிகாரம் எனச்சமய விசேடம்
வரும்பொருவில் நிருவாண மந்திரங்கள் பதங்கள்
வன்னங்கள் புவனங்கள் தத்துவங்கள் கலைகள்
இரங்கடைவில் தொகைபதினொன் றெண்பத்தொன் றைம்பத்
திருநூற்றிரு டிருபத்து நாலாறு றைந்திற் [தொன்
பரந்தநெறி அறுவகையும் ஒருவினை வரிதாம்
பரபதத்துள் உயிர்விரவப் பயிற்று மன்றே. கூ

(உரை) விரும்பிய என்பதனை ஈரிடமுங் கூட்டுக. விரும்பிய மந்திராதிகாரம் - பரமேசுரனது உபசாரத் திருமேனியாக விரும்பிக் கொள்ளப்பட்ட மந்திரத்திற்கு அதிகாரமாகியும், அர்ச்சனாதிகாரம் - பரமேசுரன் கிருபையாக விரும்பப்பட்ட அர்ச்சனைக்கு அதிகாரமாகியும்; மேவும் யோகாதிகாரம் - வழிநூலாசிரியர் 'அந்தரியாகந் தன்னை முத்தி சாதன' [சிவஞானசித்தியார் ix, 10] மென்றாராகலின் மோட்சஞ் சேருதற்கு ஏதுவான யோகத்திற் கதிகாரமாகியும்; எனச்சமய விசேடம் வரும் - இங்ஙனங் கூறிய மூவகையுஞ் சமயம் விசேடமென்னும் இரண்டு தீக்கையு ளடங்கும்; பொருவில்நிருவாணம் - ஒப்பற்ற நிருவாண தீக்கையாவது; மந்திர . . . மன்றே - ஆறத்துவாவையுஞ் சுத்திசெய்து மனாதீத கோசரமாகிய சிவானந்த போகத்தில் உயிர் விரவும்படி கூட்டுவிக்கும்.

பதினொரு மந்திரமும், எண்பத்தொரு பதமும், ஐம்பத்தோரக்கரமுமாகிய மூன்றத்துவாவும் ஒலிவடிவாயிருக்கும்; உஉச புவனமும், ௩௬ தத்துவமும், ரு கலையுமாகிய மூன்றத்துவாவுந் திரவிய வடிவாயிருக்கும்; ஆன்மாக்களனைவருடைய கன்மமுழுவதும் இவ்வத்துவாக்கள் தாரகமாயிருக்கும், சுத்தியடையுங்காலும் அவ்வாறே யாமென்றறிக.

இவ்விருவகை விதித் தீக்கையின் பயன் வேறுபாடுளவோ வென்னில்,

10. கிரியையென மருவுமவை யாவும் ஞானம்
கிடைத்தற்கு நிமித்தமெனக் கிளக்கும் உண்மைச்
சரியைகிரி யாயோகத் தன்மை யோர்க்குச்
சாலோக சாமீப சாரூ பங்கள்

மருவியிடும் உயர்ஞான மிரண்டாம் மாறு
மலமகல அகலாது மன்னு போதத்
திருவருளொன் றொன்றதனைத் தெளிய வோதும்
சிவாகமமென் றுலகறியச் செப்பு நூலே. ௧0

(உரை) கிரியையென . . . கிளக்கும் - கிரியா விதிப்படி தீக்கைசெய்து உபாயச் சரியை கிரியை யோக மனுட்டித்து முடிந்தால் அதின் பிரயோசனம் பின்பு ஞான விதிப்படி யனுட்டிக்கும்படி கூட்டுவிக்கும் ; உண்மைச் சரியைகிரி யாயோகத் தன்மையோர்க்கு - ஞானவிதிப்படி உண்மைச் சரியை கிரியை யோக மனுட்டித்தவர்க்குக் காய்ந்த பொன் சூடாறினல் கம்பிக்கு வருவதுபோல் ; சாலோக சாமீப சாரூபங்கள் மருவியிடும் - அச்சிவபுண்ணிய முதிர்ச்சி பாகம் வருமளவும் சாலோகாதி பதவி பொருந்தும்; பின்பு ஞானத்தை யடைவர். அற்றாகலினன்றே ‘ இறப் பிறவத்தான், மருவுவனு ஞானத்தை’ [சிவஞானபோதம், viii, 2] என்றார் முதனூலாசிரியரும். அந்த ஞானத்தின் முறை யேதென் னில்—உயர்ஞான மிரண்டாம் - மேலாகிய ஞானம் இரண்டு விதமாயிருக்கும் ; மாறு . . . திருவருளொன்று - அனாதியே உயிர்க்குணம்போற் பந்தித்திருக்கிற பாசம் நீங்கும்படி அறிவுக்கறிவாய் விட்டு நீங்காது உடன் நிற்குந் திருவருளொன்று ; அற்றாகலினன்றே, ‘ போதத் திருந்திடுமலமு ’மென்றார் எமதாசிரிய ரும்—ஒன்றதனைத் தெளிய வோதுஞ் சிவாகமம் - அந்தத் திருவருளைத் தெளியும்படி போதிக்குஞ் சிவாகமம் ஒன்று ; என்றுலகறியச் செப்பு நூலே - அவ்வாறு சரியை கிரியா யோகம் முற்றுதலினலே பாகம் வந்தவர்களுக்கு இந்நூல் முகமாகத் திருவருள் ஞான விளக்க முண்டாமென் றாகமங்களிற் கூறும்.

## நூல்வழியும் நூற்பெயரும்

11. தெரித்தகுரு முதல்வர்உயர் சிவஞான போதம்
செப்பினர்பின் பவர்புதல்வர் சிவஞான சித்தி
விரித்தனர்மற் றவர்கள்திரு வடிகள் போற்றி
விளம்பியநூல் அவையிரண்டும் விரும்பி நோக்கிக்

*கருத்திலுறை திருவருளும் இறைவன் நூலும்*
*கலந்துபொது உண்மையெனக் கருதி யானும்*
*அருத்திமிக உரைப்பன்வளர் விருத்தம் நூறும்*
*ஆசில்சிவப் பிரகாசம் ஆகு மன்றே.* ௧௧

இது நூல் வரலாறு ; பொருள் வெளிப்படை.

**(உரை)** சிவாகமமே யமையாதோ தமிழ்நூலேன் என்பாரைப் பற்ற அருளிச் செய்கிறார் : தெரித்தகுரு முதல்வருயிர் சிவஞான போதஞ் செப்பினர் - தம்பிரான் அருளிச்செய்த சிவாகமத் திற் சிவஞான போதத்திலுள்ள சம்பிரதாயத்தை முன்கூறப்பட்ட ஆசாரியன்மாரில் விசேஷத்துவத்தை யுடைய மெய்கண்ட தேவநாய ஞர் அருளிச் செய்தார் ; பின்பவர் புதல்வர் சிவஞானசித்தி விரித்த னர் - அவர் திருக்கண்சாத்தின நாயன்மாரில் சண்பையர் தலைவநாய ஞர் பின்பு சிவஞானசித்தி யென்கிற நூலை விரித்தருளிச் செய்தார் ; மற்றவர்கள் திருவடி போற்றி - அந்த இரண்டு நாயன்மார் திருவடி களைத் துதித்து ; விளம்பிய நூலிவை யிரண்டும் விரும்பி நோக்கி - அந்த நாயன்மாரால் அருளிச்செய்யப்பட்ட அந்த நூல்கள் இரண் டையும் ஆசையோடும் பார்த்து அதிலுண்டான அத்தமும் ; கருத்தி லுறை திருவருளும்-ஆன்மாக்களிடத்திலே பொருந்தி நின்று நிகழ்த் துகிற திருவருளும் ; இறைவனூலுங் கலந்து - தம்பிரானூர் அருளிச் செய்த சிவாகமத்திலுண்டாகிய பொருளுங் கூட்டி ; பொதுவுண்மை யெனக் கருதி - பொது வென்றும் உண்மையென்றும் விசாரித்து ; யானும் - ஒன்றுக்கும் பற்றாத நானும் ; அருத்திமிக வுரைப்பன் - ஆசை மிகுதியாலே ஒரு சாத்திரமாகச் சொல்லுவன்; வளர் விருத்தம் நூறும் - சிறப்பு வளரப்பட்ட விருத்தம் நூற்றையும்; ஆசில் சிவப்பிர காச மாகுமன்றே - இதற்கு நாமம் குற்றமில்லாத சிவப்பிரகாசம்.

உயர் சிவஞானபோதம் என்றது சிவாகமத்தில் அருளிச்செய்யப் பட்ட திரிபதார்த்த நிர்ணயத்தைப் பன்னிரண்டு சூத்திரத்தி லடக்கிச் சொல்லுகையிலை லெனக் கொள்க. சிவஞானசித்தி விரித்த னர் என்றது அந்த நூல் சொற்சுருங்கி அத்தம் ஆழ்ந்திருக்கையி னாலே விரித்துக் கூறினரெனக் கொள்க. வளர் விருத்தமென்றது பார்க்குந்தோறும் பார்க்குந்தோறும் அத்தம் மேலே மேலே வளரு மென்றதெனக் கொள்க. இதனாற் சொல்லியது ஆகமத்திலுள்ள அத்

தமே இந்த மூன்று நூலினுஞ் சொல்லியதென்றும் முன்னூல் வழி நூல் சார்புநூல் என்றும் முறை அறிவித்தது.

## அவையடக்கம்

12. தோன்மையவாம் எனும்எவையும் நன்றாகா இன்று
தோன்றியநூல் எனும்எவையும் தீதாகா துணிந்த
நன்மையினர் நலங்கொள்மணி பொதியும்அதன் களங்
நவையாகா தெனஉண்மை நயந்திடுவர் நடுவாந் [கம்
தன்மையினர் பழமைஅழ காராய்ந்து தரிப்பர்
தவறுநலம் பொருளின்கட் சார்வாராய்ந் தறிதல்
இன்மையினர் பலர்புகழில் ஏத்துவர்ஏ திலருற் [லரே.
றிகழ்ந்தனரேல் இகழ்ந்திடுவர் தமக்கெனவொன் றி

இது அவையடக்கம் ; பொருள் வெளிப்படை.

(உரை) நூல்மரபு கூறி மேல் அவையடக்கம் அருளிச்செய்கி றார் : தொன்மையவாம் எனும் எவையும் நன்றாகா-பதிபசுபாசத்தின் உண்மையைத்தெரிய வறிவியாத நூல் யாது அது பழைய நூலாமெனி னும் நன்மை பயவாது ; இன்று தோன்றிய நூல்எனும் எவையுந் தீதாகா - பதிபசுபாசத்தின் உண்மையைத் தெரிய அறிவிக்குமாயின் புதிதாகத் தோன்றிய நூலாயினும் அது தீமை பயவாது ; துணிந்த . . . நயந்திடுவர் - தெளிந்த அத்தம் ஆராய்ந்துள்ளவர்கள் நூலின் பழமையும் புதுமையுஞ் சொற்குற்றமுங் கொள்ளார்கள், அதென்போல வென்னில் நல்ல இரத்தினமானது ஒரு நாய்த் தோலிலே கட்டியிருந்தாலும் இரத்தினமறிந்தவர்கள் தோலின் குற்றங் கொள்ளாது மாணிக்கத்தின் நன்மையைக் கைக்கொள்ளுவர், அதுபோல உண்மையே கைக்கொண்டுவிடுவர் நடுவாந்தன்மையினர் ; பழமை யழகாராய்ந்து தரிப்பர் - மத்திமரா யுள்ளவர்கள் உத்தமரைப் போலச் சாத்திரத்தைக் கண்டபொழுதே உண்மையைக் கொள்ள மாட்டார்கள், ஆதலாலே வேதாகமத்தைப் பின்செல்லுகிற நூலென் றும் இந்த நூல் நன்மையை யுடைத்தென்றும் தீர்க்கத்திலே

ஆராய்ந்து கொள்ளுவார்கள்; தவறுநலம் . . . இன்மையினர் - குணமும் குற்றமும் பொருளிடத்திலே பொருந்தின முறைமையை ஆராய்ந்தறியமாட்டாத அதமராயுள்ளவர்கள்; பலர்புகழி லேத்துவர் - நூலின் பயனறிந்த உத்தமர்கள் கொண்டாடில் கூடியிருந்து கொண்டாடியும்; ஏதிலருற் றிகழ்ந்தனரே லிகழ்ந்திடுவர் - இந்நூல்தன்னைப் பொருத சிலர் இகழ்ந்துரைக்குமிடத்தும் அதற்குப் பொருந்தி ஒக்க இகழாநிற்பர்கள்; தமக்கென வொன்றிலரே - நன்று தீதென்றதற்குத் தமக்கென ஓரறிவிலாமையால்.

எவையு நன்றாகா என்றதுகொண்டே பழைய நூல்களிற் குற்றங் குறையுமெனக் கொள்க; எவையுந் தீதாகா என்றது கொண்டே புதிதாயுள்ள நூல்களில் குற்றம் மிகுமெனக் கொள்க. தமக்கென வொன்றிலரென்றது முற்செனனத்திலே தங்களுக்கென்று ஒரு தவமில்லாதவரெனக் கொள்க. இதனாற் சொல்லியது இந்நூல் கொள்ளுமிடத்து உத்தமர் கொள்ளும் முறைமையும் மத்திமர் கொள்ளும் முறைமையும் அதமர்கொள்ளு முறைமையுந் தோன்ற அவையடக்கமருளிச்செய்த முறைமையினை அறிவித்தது.

---

# பொது அதிகாரம்



## முதற் சூத்திரம்

### பதி இலக்கணம்

'பலகலையு மெண்ணரிது' என்றும்,'முதற்பதி யானே'யென்றும் 'முதற் கருத்துச் சங்கரனே முத'லென்றும், 'முன்னவன் வடநூ லுளக்கி' யென்றும் நமதாசிரியரனைவரும் 'தெரித்த குருமுதல்வ' ரென்னுஞ் செய்யுட் கருத்துடைய நூலாசிரியர் கருத்துப்படியே திருவுளம்பற்றியதாகலின் அவ்வாறு முதனூல் வழிநூலோடொத்துச் சூத்திர வொழுங்குப்படிக்கே யுரைசெய்ய வேண்டுவதாகலின் பலகலை நீடிங்குலகங் கந்தமேற்ற இவ்வாறும் இறைவனிலக்கணம் கூறும் முதற் சூத்திரம். அவையாவன :

13. பலகலைஆ கமவேதம் யாவையினுங் கருத்துப்
பதிபசுபா சந்தெரித்தல் பதிபரமே அதுதான்
நிலவும்அரு உருவின்றிக் குணம்குறிக ளின்றி
நின்மலமாய் ஏகமாய் நித்த மாகி
அலகிலுயிர்க் குணர்வாகி அசல மாகி
அகண்டிதமாய் ஆநந்த உருவா யன்றிச்
செலவரிதாய்ச் செல்கதியாய்ச் சிறிதாகிப் பெரிதாய்த்
திகழ்வதுதற் சிவமென்பர் தெளிந்து ளோரே.

(உரை) பலகலையா கமவேதம் யாவையினுங் கருத்துப் பதி பசு பாசந் தெரித்தல் - பல கலைஞானங்களும் இருபத்தெட்டாகமங்களும் நாலு வேதமும் முதலிய யாவையுஞ் சொல்லும் பொருளெல்லாம் பதிபசுபாசக் கிரமங்களைத் தெரித்துக் கூறுவதாம் ; திரிபதார்த்தங்க ளிருக்கவும் முந்தப் பதியைக் கூறுவ தேதென்னில்—பதிபரமே - முப்பொருளினும் பதியே மேலாகிய பொருளாகலிற் சொன்னது ; அது தான் - பதிப்பொருளே மேலாகியது யாங்ஙனமென்னில்; நிலவு மரு வுருவின்றிக் குணங்குறிக ளின்றி - அருவம் உருவம் அரூபாரூப மென்னும் மூவகையி லொரு குறியுமின்றி முக்குணங்களில் ஒரு குணமுமின்றி யிருத்தலால் பரமென்று சொன்னது ; இவ்விரண்டு

லட்சணமும் பசுவுக்கு முளவாகலின் இதனாற் பதியே பரமாவ தே தென்னில்—நின்மலமா யேகமாய் - பதி மலரகிதனாகவும் ஒரு முத லாயு மிருப்பதாலும் பசு மலசகிதனாய்ப் பலமுதலா யிருப்பதாலும் பதியே பரமென்று சொன்னது ; ஏகமாயென்பதை யீரிடமும் கூட்டுக—ஏகமாய் நித்தமாகி - பதியைப்போலப் பாசமும் ஒருமுத லாயும் நித்தியமாயுமிருக்கவும் பதியே பரமாவ தேதென்னில்; அலகிலுயிர்க் குணர்வாகி - பாசம் எண்ணிறந்த உயிர்களறிவினும் ஞான திரோதகத் திரவியமாயிருக்கவும் பதிப்பொருள் அந்தப் பாசத்தை நீக்கும்படி உயிர்தோறும் அறிவுக்கறிவா யிருத்தலாற் பதியே பரமென்று சொன்னது ; இவ்வாறு மேலாகிய பதிப்பொரு ளுக்குத் தற்சொரூப மேதென்னில்—அசலமாகி-பூரணமாகி; அகண் டிதமாய் - கண்டிக்கப்படாததாய் ; ஆனந்த வுருவாய் - இன்பமே சொரூபமாய் ; அன்றிச் செலவரிதாய் - சேதனப் பிரபஞ்சத்திற்கும் அசேதனப் பிரபஞ்சத்திற்குந் தன்னையின்றி அறிவுந் தொழிலும் இல்லையாய் ; செல்கதியாய் - பக்குவான்மாக்க ளனைவருஞ் சுதந்திர மாய்ப் புசித்தும் அற்பமுங் குறையாத வரம்பிலின்பமாய் ; சிறிதாகி- அணுவோரண்டமாம்படி நேர்மையும் ; பெரிதாய் - அண்டமோ ரணுவாம்படி பெருமையு முடைத்தாய் ; திகழ்வது தற்சிவமென்பர் தெளிந்து ளோரே - இவ்வாறு விளங்குவது சுத்த சிவமென்று தற்றெரிசனப்பட்டுள்ள மகத்துக்கள் திருவுளம்பற்றுவார்கள்.

தூல சூக்கும சூனியமில்லாததாய்க் குணங் குறி யில்லாததாய், நின்மலமாய் அசலமாய் ஒன்றாய் அகண்டாகார சச்சிதானந்தாத்துவய பரிபூரண பரஞ்சோதியாகிய சிவம் பஞ்சகிருத்தியஞ் செய்வதெப்படி யென்னில்,

14. நீடுபரா சத்திநிகழ் இச்சா ஞானம்
நிறைகிரியை தரஅதனை நிமலன் மேவி
நாடரிய கருணைதிரு உருவ மாகி
நவின்றுபல கலைநாத விந்து வாதி
கூடுமொளி வளர்குடிலை மாயை மேவிக்
கொடுவினைகொள் தனுகரண புவன போகம்
பீடுபெற நிறுவிஅவை ஒடுக்கு மேனி
பிறங்கியநிட் களசகளப் பெற்றியாமே. உ

**(உரை)** *நீடுபராசத்தி - சிவனிடத்தில் அக்கினிக்கு உட்டணம் போலப் பிரிவற்றிருக்குஞ் சத்தியாவது ஒன்ருய் நித்தியமாய் எல்லாத்தையும் வியாபிக்கிற ஞானரூபமாய்த் தன்மரூபமா யிருக்கும் ; நிகழிச் சாஞானம் . . . திருவுருவமாகி-இந்தச் சத்தி காரிய பேதத்தால் பராசத்தி முதல் அனேகவித பேதப்படும், சிவனுஞ் சத்திபேதத்தால் சத்தர் உத்தியுத்தர் பிரவிருத்தரெனப் பேதப்படுவர்,சத்தியை நோக்கின் சத்தராகிறவர் காரியந் தொடங்காமலிருக்கிறவர், சத்திகலை யற்றிருப்பவர், ஆகையால் இவர் நிட்களர், இவர்க்கு ஞானமே திருமேனி, இவர்க்கு லயரென்றுஞ் சாந்தரென்றும் பெயர் ; கூடுமொளி வளர்குடிலை மேவி - பரையாதி பஞ்ச சத்திகள் சங்கற்பரூபமாய்ச் சுத்தமாயையிற் பதியவே ; பலகலை நவின்று நாதவிந்துவாதி - சத்தரூபமாகிய நாத விந்துக்களும் அத்தரூபமாகிய நாதவிந்து வென்னுஞ் சத்திதத்துவஞ் சிவதத்துவங்களும் விந்துவிற் சாதாக்கிய தத்துவமும் படைப்பர், இது சத்தர் சன்னிதான சிருட்டி. அவ்விடத்துண்டாகிய பஞ்ச மந்திரங்களைத் திருமேனியாக வுடையவர் உத்தியுத்தர்,இவர் பாசகலைகளில்லாமற் சத்திகலைகளுடனே கூடி யிருக்கிறவராகையாற் சகள நிட்களர், இவர்க்குச் சதா சிவரென்றும் போகரென்றும் பெயர், சத்தரால் விந்து நாதரூபமாய் வந்த அபரஞானத்தை வேதாகமங்களாய்ப் பிரித்து அனுக்கிரகித்துச் சாதாக்கியத்தினின்றும் ஈசுரதத்துவமும் அதினின்றுஞ் சுத்த வித்தை தத்துவமும் படைத்து ஈசுரதத்துவத் திருக்கும் அனந்தர் முதலிய அட்டவித்தியேசுருக்குத் தனுகரணாதியும், சுத்தவித்தையிலிருக்குஞ் சத்தகோடி மகாமந்திரங்கட்குத் தனுகரணாதியும், இத்தத்துவங்களில் உறைவோர்க்குத் தனுகரணாதியும் படைப்பர், இது உத்தியுத்தர் சன்னிதானச் சிருட்டி. இனிப் பிரவிருத்தராகிறவர் காரியம் பண்ணத் தொடங்கிய சத்தியையுடையவராகையாற் கிரியாசத்தி யதிகமும் ஞானசத்தி குறையவுமுடையவர், இவர் பாசகலைகளுடன் கூடியிருக்கையாற் சகளர், இவர்க்கு ஈசரென்றும் அதிகாரரென்றும் பெயர்; மாயைமேவி . . . யொடுக்கும் - இவர் அசுத்தமாயையைத் தமது சத்தியாற் கலக்கி முப்பத்தொரு தத்துவமும், ஏனையோர்க் கெல்லாந் தனுகரணாதி முதலிய வெல்லாம் வினையளவு நிலைபெறும்படி படைத்து நிறுத்தி யொடுக்குவர், இது பிரவிருத்தர் சன்னிதானச் சிருட்டி ; மேனி . . . பெற்றியாமே -*

திருமேனி யிங்ஙனங் கூறிய முறையே நிட்களம், நிட்களசகளம், சகளமென மூவகைத்தா யுண்டு.

இவ்வாறு மூவகைத் திருமேனியுண்டாகில் அது படைப்பார் யாரோ வென்னில்,

15. ஈங்கிதுஎன் றதுகடந்த இயல்பி னானும்
 ஈறுமுதல் நடுவொன்று மிலாமை யானும்
ஓங்கிவளர் ஞானமயன் ஆத லானும்
 உண்மைபிறர்க் கறிவரிய ஒருமை யானும்
தாங்கரிய வெறுப்பினொடு விருப்பு மெல்லாம்
 சார்வரிய தனிமுதல்வன் ஆத லானும்
நீங்கலரும் உயிர்க்குயிராய் நிற்ற லானும்
 நிறுத்திடுவன் நினைந்தஉரு நிமலன் தானே. ரு

**(உரை)** ஈங்கிது என்பதற்கு அந்வயம். 'நிறுத்திடுவன்நினைந்தவுரு நிமலன்றானே' என்பதனை யாண்டும் கூட்டுக. நிறுத்திடுவன் நினைந்த வுரு நிமலன் றானே - கர்த்தா நின்மலனாகையால் தனக்கு வேண்டுந் திருமேனியைச் சுவேச்சையால் எடுத்துக் கொள்வன் இதற்கு வேறே ஒரு கர்த்தா வேண்டுவதில்லை; அதற்கு ஏது என்னையெனில்—ஈங்கிது . . . மிலாமையானும் - இவ்விடத்து இதுவென்று சுட்டி யறிதற்கு அப்பாற்பட்டவனாகையாலும் முதல் நடுவிறுதியில்லாதவனாகையாலும்; தனக்கு வேண்டியவாறே திருமேனியெடுத்துக் கொள்வனென்னில் இவ்விரண்டு தன்மையும் உயிர்களுக்கும் உளவாகலின் அவர்களுக்கும் அவ்வாறன்றி இவர் தனுவாதி கூட்டுவானேனெனில்—ஓங்கி வளர் ஞானமய னாதலானும் - பதி பேரறிவுடையவ னாகையாலும் பசு சிற்றறி வுடையனாகையாலும் ; உண்மை பிறர்க்கறிவரிய ஒருமையானும் - பதி தனது உண்மையைப் பிறாலறிதற்கரிய பெருமையுடைய னாகையாலும் பசுவுக்கு அஃதின்மையானும்; தாங்கரிய...ஆத லானும் - பதி விருப்பு வெறுப்புக்கள் சாராத ஒப்பற்றவ னாகையாலும், பசு விருப்பு வெறுப்புக்கள் பொருந்துகிற சிறுமையுடையவ னாகையாலும்; நீங்கலரும்...நிற்றலானும்-பதி உயிர்கள் தன்னை விட்டு நீங்குமாறின்றி ஏகனிலையாய்ச் சர்வான்மாக்களுக்கும் உயிர்க் குயிராய் நின்று அறிவிக்கிற சுயம்பிரகாச ஞானக் கிரியைகளுடைய ஞ்கையாலும், பசுக்கள் பதியை விட்டுப் பாசத்திற் பந்தித்துத் தமக்கொரு வியஞ்சகத்தை

யின்றி அறிவுந் தொழிலுமில்லாத சிறுமையுடையாரகையாலும் பசுக்களுக்கு அவ்வாறு தேக மெடுப்பது கூடாது ; நிறுத்திடுவ னிமலனந்த வுரு நிமலன்றானே - கர்த்தாவுக்கே அவ்வாறு திருமேனி கொள்ளுஞ் சுதந்தரம் உண்டு.

முதற்கண் சொரூப லட்சணமும் நடுவில் தடத்த லட்சணமுங் கூறி இறுதியில் இவ்விருவகைக்கும் பிறர் கூறுந் தடை விடைகளாற் பதியுண்மைக்கு ஆகமப்பிரமாணம் அனுபவப் பிரமாணங்களை மூன்று செய்யுளால் வலியுறுத்தி இனி யுலகின்மேல் வைத்து அனுமானப் பிரமாணத்தால் மேல் அது வலியுறுத்துவான் தொடங்கினர்.

பிரபஞ்சத்திற்கு வேறே ஒரு கர்த்தா வேண்டுமோ இயற்கை நித்தியமென்றாற் படும் இழுக்கென்னை யெனின்,

16. உலகமெலாம் ஒருவனே டொருத்தி ஒன்றென்(று)
உள தாகி நின்றளவில் ஒடுங்கும் பின்னும்
மலமதனுல் உள தாகும் உருவ மாறி
வருவதுபோ வதுசெல்வ தாத லானும்
அலைவில்அசே தனமாயை ஆத லானும்
அணுக்களுரு அடையும்அறி விலாமை யானும்
நிலவுதொழில் மருவிஉரு நிற்ற லானும்
நின்றவையும் அளித்திடுவன் நிமலன் தானே. ௪

**(உரை)** நின்றவையு மளித்திடுவ னிமலன்றானே - கர்த்தாவே பிரிவற நின்று உண்டாக்குவதன்றி இயற்கை யன்று ; அஃது எற்றாலெனின்—உலகமெலாம் - அசேதனப் பிரபஞ்சங்களெல்லாம் ; ஒருவனேடொருத்தி யொன்றென்று - ஒருவனென்றும் ஒருத்தியென்றும் ஒன்றென்றுஞ் சுட்டவைப்பட்டு ; உளதாகி நின்றளவிலொடுங்கும் - சிருட்டிப்பட்டுத் திதிப்பட்டுங் கால வரையறையிற் சங்காரப்படும் ; நின்ற பிரபஞ்ச நின்றொழியாது சங்காரப்படுவது ஏதென்னில், கன்மமலம் பரிபாக மாதற்பொருட்டுச் சங்காரப்படும், சங்காரப்பட்ட பிரபஞ்சம் மீள உண்டாவதேதென்னில்—பின்னுமலமதனு லுளதாகும் - முன் பிரபஞ்ச முண்டானது மலபரிபாகங் காரணமா யாகலின் பின்னும் அக்காரணத்தால் உண்டாகும், அசேதனப் பிரபஞ்சங் காரியப்படுவதிற் சேதனப் பிரபஞ்சத்திற்கு மலபரிபாகங் கன்மபரிபாக முண்டாதல் யாங்ஙனமென்னில் ; உருவமாறி

ஆதலாலும் என்பதை வருவது செல்வது போவதென்னு மூன்றிடமுங்கூட்டுக—உருவமாறிப் போவதாதலானும்-பாவ கன்மந்தீர இந்தச் சரீரம் மாறிப்பூதசரீரத்தைப் பொருந்தி நரகத்துக்குப் போய்த் துக்கத்தைப் புசித்தலானும் ; உருவமாறிச் செல்வதாதலானும் - புண்ணிய கன்மந்தீர இந்தச் சரீரம் மாறிப் பூதசார சரீரத்தைப் பொருந்திச் சுவர்க்கத்திற் சென்று சுகத்தைப் புசித்தலானும் ; உருவமாறி வருவதாதலானும் - பாவபுண்ணியங்களை யீட்டவுஞ் சுகதுக்கங்களை நுகரவும் நரகசுவர்க்க சேடத்தாற் பூதபரிணாம சரீரத்தைப் பொருந்திப் பூமியின்கண் வந்து சுகதுக்கத்தைப் புசித்தலானும் ; இவ்வேதுக்களினாலே மலமுங் கன்மமும் பரிபாகம்வரும், அற்றாகலினன்றே, 'எல்லா மாய்த் தத்துவங்க ளிசைந்தது..., தொல்லாய கன்ம மெல்லாந் துய்ப்பித்துத் துலைத்தற்கும்...,...பொல்லாத வாண வத்தைப் போக்கவு' [சிவஞான சித்தியார், ii, 79] மென்றார் வழி நூலாசிரியரும். இதனாற் பிரபஞ்ச மியற்கையன்று 'நின்றெவையு மளித்திடுவ னிமலன்றானே' என மேற்கொண்டவாறும். இனிப் பிரபஞ்சத்திற்கு முதற் காரணமாக மாயையுண்டாகலின் அதுவே போதும் இறைவன் எற்றுக்கெனின்—அலைவிலசே தனமாயை யாதலானும் - மாயை சடமாகையினாலே பலவித விசித்திரமான பிரபஞ்சத்தை அஃது உண்டாக்கு மென்பதில்லை யாகலின் 'நின்றெவையுமளித்திடுவ னிமலன்றானே' யென மேற்கொண்ட வாறும். இனி ஆன்மாக்கள் அறிவுடையவர்களாமே அவர்களே போதும் இறைவன் எற்றுக்கெனின்—அணுக்க ளுருவுடையு மறிவிலாமை யானும்-ஆன்மாக்கள் மல மறைப்புடைய ராகையால் தனுவாதி வந்த பின்பு அறிவதன்றி இன்ன கன்மஞ் செய்தோம் இன்ன தனுவும் இன்ன போகமும் வருமென்று அறியும் அறிவில்லாதவர்களாகையாலும் 'நின்றெவையு மளித்திடுவ னிமலன்றானே' யென மேற்கொண்ட வாறும். இனிப் பிரபஞ்சத்திற்குத் துணைக்காரணமாய்க் கன்மமொன் றுண்டாகலின் அதுவே போதும் இறைவன் எற்றுக்கெனின்—நிலவு தொழின் மருவியுரு நிற்றலானும் - கன்மமாவது மனவாக்குக் காய சன்னியமாய்ச் சேதன மாகிய புத்திதாரகமாய் நிற்குமாகலின் அது தனுவாதியைப் படைக்கு மாறில்லை 'நின்றெவையு மளித்திடுவ னிமலன் றானே' யென மேற்கொண்ட வாறும். இங்ஙன் கூறிய நாலேதுவாலும் இரு

வகைப் பிரபஞ்சத்திற்கும் இறைவனே முதன்மையென மேற்கொண்டவாறு காண்க. க௬

இதனாற் பிரபஞ்சஞ் சங்கார கர்த்தாவால் முத்தொழிற் படுமென்பது பெற்றாமாயினும் முத்தொழிற்கு மூன்று கர்த்தா உளராகலிற் சங்கார கர்த்தா ஒருவனுமே கர்த்தா வென்பது மிகையாம் போலுமெனின் ஆகாது. அஃது எற்றாலெனின்,

**17.** கந்தமலர் அயன்படைக்கும் உலக மெல்லாம்
கண்ணன் அளித் திடும்அவைஎம் கடவுள் தானே
அந்தமுற அழித்திடுவன் ஆத லாலே
அயன்அரியும் அவனதுயர் அதிகா ரத்து
வந்தமுறை தன்தொழிலே மன்னுவிப்பன் எல்லாம்
வருவிப்பன் விகாரங்கள் மருவான் வானின்
முந்திரவி எதிர்முளரி அலர்வுறுமொன் றலர்வான்
முகையாமொன் றொன்றலரு முறையி னாமே. ௫

**(உரை)** அந்வயம். அவனதுய ரதிகாரத்து - முத்தொழிலினுஞ் சங்காரத்தொழில் உயர்ந்த அதிகாரமாகையாற் சங்கார கர்த்தா ஒருவனுமே கர்த்தா வென்று சொல்லப்படும். அதுவே உயர்ந்த அதிகாரமாதல் யாங்ஙனமெனின் ; உலகமெல்லாங் கந்தமல ரயன்படைக்கும்- பிரபஞ்சமெல்லாம் வாசனையுடைய பதுமாசனத்திருக்கும் பிரமதேவன் படைப்பன்; கண்ணனளித்திடும் - தாமரைக்கண்ணையுடைய விட்டுணு அவையெல்லாங் காவற்றொழில் புரியும் ; அவைஎம் கடவுடானே யழித்திடுவன் - எமது சங்கார கர்த்தாவே அவ்விருவராற் சிருட்டி திதிப்படுவதை அதிக்கிரமித்துச் சங்கரிப்பன் ; ஆதலாலே - ஆகையினாலே; இது உயர்ந்த அதிகாரமாம், அவ்விருவராற் சிருட்டி திதி நடந்துகொண்டிருக்கவும் இவர் சங்கரிப்புத் தொழில் நடப்பது எப்படியெனில்—அயனரியும்அந்தமுற - அவ்விருவரையும் அவராற் றொழிற்படும் பிரபஞ்சத்தையும் ஒன்றாக முடிவுபெறும்படி சங்கரிப்பன் ; வந்தமுறை - அவ்விருவருஞ் சங்காரப்பட்டு முடிந்தால் அந்தப் பிரபஞ்சந் திரும்ப உண்டாவது எப்படியெனில் ; தன்தொழிலே மன்னுவிப்பன் - திரும்ப அவர்களைப் படைத்து அவர்களாலே பிரபஞ்சம் படைக்கச் சங்கற்பிப்பன் ; அவர்களும் முத்தொழிற்பட்டால் ஆன்மவர்க்கமாச்சே அவர்களாற் சர்வஞ்ஞன் செய்யுஞ் சிருட்டி திதி

நடப்பது எப்படியெனில்—எல்லாம் வருவிப்பன் - தனதாக்கிஞ சத்தியை அவர்களிடத்திற் பதித்துச் சர்வஞ்ஞ சத்தி அவர்களுக்கு உண்டாக்குவன்; இவ்வாறு கிருத்தியங்களுந் திருமேனிகளுமுடையனாகில் விகாரமடையானோவெனில்—விகாரங்கள் மருவான் - விகாரங்களைக் கர்த்தாப் பொருந்துவதில்லை; அதென்போலவென்னின்—வானின் . . . முறையினுமே - பிரகாசமுடைய ஆதித்தன் சன்னிதானத்திலே தாமரையானது ஒன்று அலரவும் ஒன்று மலருதற்குப் பருவமடையவும் ஒன்று உலர்ந்துபோகவுமாகிய முத்தொழிலும் நடக்கவும் அவ்வாதித்தன் விகாரமடையாத முறைமைபோல.௧௭

இவ்விரண்டு திருவிருத்தங்களானும் அனுமானப் பிரமாணத்தால் இயல்பு காரியம் அனுபலத்தியென்னும் மூன்று ஏதுவினானும் பதியுண்மைக்கு இலக்கணங்கூறுமுகத்தாற் பஞ்சகிருத்தியத்துக்குக் காரணங்கூறிய ஆசிரியர் இனி இத்தொழில் தனக்கோ வீணே பிறர்க்கோ என்னும் ஐயத்தின்கண் நிகழும் ஆசங்கையை நீக்குமுகத்தால் அத்தொழிலாற் போந்த பயன் கூறுவான் தொடங்கினார்.

18. ஏற்றஇவை அரனருளின் திருவிளையாட் டாக [த்தே
இயம்புவர்கள் அணுக்கள்இடர்க் கடல்நின்றும் எடு
ஊற்றமிக அருள்புரிதல் ஏது வாக
உரைசெய்வர் ஒடுக்கம்இளைப் பொழித்தல் மற்றைத்
தோற்றமல பாகம்வரக் காத்தல் போகம்
துய்ப்பித்தல் திரோதைதக நிறுத்த லாகும்
போற்றலரும் அருள்அருளே யன்றி மற்றுப்
புகன்றவையும் அருளொழியப் புகலொ ணாதே. ௲

(உரை) ஏற்றஇவை அரனருளின் திருவிளையாட் டாக இயம்புவர்கள்-உண்மை யுணராதார் சிவனது காருண்யத்தின் திருவிளையாட்டே பஞ்சகிருத்தியமென்று சொல்வார்கள்; 'காத்தும் படைத்துங் கரந்தும் விளையாடு' [திருவாசகம், திருவெம்பாவை, 12]மென்று மகத்துக்கள் வாக்கியமு முளவேயெனில், 'ஐயாநீ யாட்கொண் டருளும் விளையாட்டி, லுய்வார்க ளுய்யும் வகையெல்லா முய்ந்தொழிந்தோ' [ஷை, ஷை,11]மென்றமையால் அங்ஙனங்கூறியது பதின்கலப்பாரஞ்சுமத்தல் சாத்தனுக்கு விளையாட் டென்றதுபோல் எளிது நோக்கிச் செய்யாச் செயலைக் கூறியதென் றறிக. இனி உண்மை யுணர்ந்தோர் கூறுவ

தேதென்னில்—அணுக்கள் இடர்க் . . . உரைசெய்வர் - ஆன்மாக்கள் பாச பந்தியாய் ஏகதேசப்படுந் துன்பக் கடலினின்றுங் கரையேற்றிப் பாசத்தை நீக்கி அணுத்தன்மையைக் கெடுத்து வியாபகவறிவை விளக்கிச் சிவமாக்கிச் சிவானந்தமென்னும் பெரிய சுகோதய வாரியிற் சேர்க்குங் காருணியமே பஞ்சகிருத்திய மென்பார்கள்; 'பாத்தையடை பராவுசிவ ரன்றே' [சிவஞானசித்தியார், viii, 35] வென்றார் வழிநூலாசிரியரும். 'சித்தஞ் சிவமாக்கி' [திருவாசகம், திருத்தோணோக்கம், 6] யென்றார் வாதவூரடிகளும். மறமாய் முடியுஞ் சங்காரதொழிலையுங் கருணையென்பது மிகையாம் போலுமெனின்—ஒடுக்கம் இளைப் பொழித்தல் - ஈண்டுக் கேவலந் தன்னுண்மையாகலின் கருவியைப் பொருந்திப் பாகப்பட்ட கன்மங்கள் புசித்து முடிந்தமையின் மேலொரு கன்மம் பாகப்பட் டெதிருமளவும் அவ்விளைப்பாறும் பொருட்டே கருவிகளைப்பிரித்துத் தன்னுண்மையி னிறுத்துவதே சங்காரமாகலின் இது கருணையேயாம்; ஒடுக்கம் இளைப்பொழித்தலாயின் மீளப்படைத்தல் மறமாய் முடியுமே யெனின்—மற்றைத் தோற்ற மலபாகம் வர - பாசத்திற் றடக்குண்ட உயிருக்கு அப்பாச நீக்கமே சுத்தியாகலின் படைப்புத்தொழில் மலபாகங் காரணமாகலின் அது கருணையேயாம்; அற்றாகலினன்றே 'மாயைகொடு மலமொழிப்பன்' [சிவஞானசித்தியார், ii, 52] என்றார் வழிநூலாசிரியரும். ஞானாமிர்தத்தார் 'பந்தம் போகம் போக நிறுத்தலும், வந்தது மாயை வினை மலத்' [44, 7] தென்றாராகலின் பந்தஞ் செய்யும் மாயை நிலைபெறும்படி காத்தல் மறமே யன்றிக் கருணையென்பது மிகையாம் போலுமெனின்—காத்தல் போகந் துய்ப்பித்தல் - போகம் புசிக்கவே மலபாகம் வருமாகலின் காத்தல் போகந் துய்ப்பித்தல் காரணமாகலிற் கருணையேயாம், 'அருத்தி யறுத்து மலமுதிர்வித்' [சிவஞானசித்தியார், viii, 10] தென்றார் வழிநூலாசிரியரும். மறைப்பு நீக்கப் புகுந்த இறைவன் தனது சத்தியால் மறைத்தல் மறமே யன்றிக் கருணையென்பது மிகையாம்போலு மெனின்—திரோதைதக நிறுத்தலாகும் - சிவசத்தி மும்மலங்களையுஞ் சத்திகெடும்படி பிரேரித்தலே திரோதமாகலிற் கருணையேயாம்; 'ஏயுமும் மலங்க டத்தந் தொழிலினை யியற்ற வேவுந், தூயவன் றனதோர் சத்தி திரோதான கரி' [சிவஞானசித்தியார், ii, 87] யென்றார் வழிநூலாசிரியரும். இவ்

வாறு நாலு தொழிலுங் கருணையேயாகவும் அவற்றோடு முரணி அனுக் கிரகமெனத் தனியே ஒரு தொழில் எதுக்கெனில்—போற்றலரும் அருள் அருளே - நால்வகைத் தொழிலும் பாசநீக்கமே யாயினும் பாகம் வந்த மலமும் மலபாகமாம் பொருட்டுத் தோன்றிய முறையா னன்றிப் பக்குவமுறையாற் புசித்தெஞ்சிக் கிடந்த கன்மமலமும் இவற்றிற்கு வாயிலாகிய மாயேய மலமும் ஆசிரியர் ஞானசத்தி கிரியாசத்தியாலன்றி இந்த நால்வகைத் தொழிலினுங் கெடாதாக லின் இம்முறையே பருவமடைந்த விடத்து இவையெல்லாம் நீங் கும்படி சர்வானுக்கிரகம் பண்ணுவதே அனுக்கிரகமாகலின் அவற் றோடு முரணுதலின்றிக் கருணையேயாம்; 'அரும்பருவ மடைதலுமே யாசானாகித், தோன்றிநுக ராதவகை முற்செய் கன்மத் துகளறுத் திங் கத்துவாத் திடக்கறவே சோதித், தேன்றவுடற் கன்மமனு பவத்தினாலறுத்திங் கினிச்செய்கன்ம மூலமலம் ஞானத்தா லிடிப்ப' [சிவஞானசித்தியார், viii, 10] னென்றார் வழிநூலாசிரியரும். அனுக் கிரகமும் பொது சிறப் பென்றிரு விதப்படுமோ வெனில்—அன்றி மற்றுப் புகன்றவையும் அருளொழியப் புகலொணாதே - முன் சொன்ன நாலு கிருத்தியமும் இதுபோல அனுக்கிரகமேயன்றிப் பொதுவென்று ஒரு தொழிலையுஞ் சொல்லக் கூடாது.

இப்பஞ்ச கிருத்தியங்கள் கேவல சகல சுத்தமென்னும் அவத்தா பேதத்தாற் பர சூக்கும தூலமென்னும் மூவிதப்படுமாறும் அவற்ற துண்மையும் அவத்தை பதினெட்டாமாறும் அவை தோறும் இறை செய்யும் ஐவகைத் தொழிலும் ஈண்டு விரிப்பிற் பெருகுமாகலிற் குரு முகமாய் அறிக. ஆக ஆறு திருவிருத்தங்களாற் பதியுண்மைக்கு இலக்கணங் கூறு முகத்தால் ஐந்தொழிலாற் போந்த பயன் கூறிப் பசுபாசங்களது உண்மையும் ஒருவாறு தெரித்துணர்த்திய தறிக. ௧௬

---

இச்சூத்திரத் தொடக்கத்திலுள்ள மேற்கோள்கள்.

'பலகலையு மெண்ணரிதும்'—சுவாமிநாத தேசிகர் தசகாரியம், 20.
'முதற் பதியரனே'— ௸ ௸, 18.
'முதற் கருத்துச் சங்கரனே முதல்'—
தக்ஷிணாமூர்த்தி தேசிகர் ௸, 3.
'முன்னவன் வடநூனோக்கி'—அம்பலவாணதேசிகர் ௸, 55.

# இரண்டாஞ் சூத்திரம்

இனி இரண்டாஞ் சூத்திரத்திற் கூறப்படுவன வெல்லாம் மூப்பத்திரண்டு செய்யுளாற் றெரித்துணர்த்தப் புகுந்த ஆசிரியர் முதற்கட் பசு லட்சணங் கூறு முகத்தாற் கேவல சகல சுத்தங்கட்குத் தொகை கூறுவான் தொடங்கினுர்.

'முற்றுமற்றி னத்துவித முப்பொருளு' [தக்ஷிணாமூர்த்தி தேசிகர் தசகாரியம், 3] மென்றும், 'ஐந்து முன்னத்துவிதமிரண்டே' [சுவாமிநாத தேசிகர் தசகாரியம், 18] யென்றும் வருவனவே ஈண்டுத் தொகை வகை விரிவாய்த் தொகுத்தும் விரித்தும் ஒரு பொருண்மேற் கொள்ளுமாறு நுண்ணுணர்வினு லறிக. 'இருள்மலத்தி னழுந்தி' என்பதீருகவும், 'போக்குவர வுடைத்தா' யென்பதீருகவும், 'பாதமுற்றிடு'மென்ப தீருகவும் முக்கூருய் இச்செய்யுள் கேவல சகல சுத்தங்கட்குத் தொகையாகவே பொருள்படுமாறு காண்க. இவ்வாறே 'அறிவில' னென்றெடுத்து 'மலத்தி னேடும் வியாபி' [சிவஞானசித்தியார், iv, 38] யென்று முடித்தும், 'உருவினை' யென்றெடுத்துத் 'திரிதரு' [சிவஞானசித்தியார், iv, 39] மென்று முடித்தும், 'இருவினைச் செயல்களொப்' பென்றெடுத்துப் 'பாதம் பெறுவ' [சிவஞானசித்தியார், iv, 40] தென்று முடித்துங் கேவல சகல சுத்தங்கட்குத் தனித்தனி பத்து லட்சணந் தொகை கூறினுர் வழிநூலாசிரியரும். இச்செய்யு ளொன்றே ஏனை எண்பத்தொரு செய்யுட்கும் ஊடுருவி நின்று ஒருபொருள்மேற் கொள்ளுமாறு குருமுகமா யறிக.

## பசுவியல்பு

19. எண்ணரிதாய் நித்தமாய் இருள்மலத்தின் அழுந்தி
இருவினையின் தன்மைகளுக் கீடான யாக்கை
அண்ணலரு ளால்நண்ணி அவைஅவரா யதனுல்
அலகில்நிகழ் போகங்கள் அருந்தும் ஆற்றல்
புண்ணியபா வம்புரிந்து போக்குவர வுடைத்தாய்ப்
புணரும்இருள் மலபாகம் பொருந்தியக்கால் அருளால்
உள்நிலவும் ஒளியதனுல் இருளகற்றிப் பாதம்
உற்றிடும்நற் பசுவருக்கம் எனஉரைப்பர் உணர்ந்தோர்.

**(உரை)** எண்ணரிதாய் - ஆன்மாக்கள் அனேகமாய்; நித்தமாய் - என்றுங் கெடாத பொருளாய்; இருண்மலத்தின் அழுந்தி - ஆணவ மல சையோகராய் அறியாமையே தாமாயிருக்கும்; அது கேவலம்—

இருவினையின் தன்மைகளுக் கீடான யாக்கை அண்ணலருளால் நண்ணி - அவ்விடத்து ஆர்ச்சிக்கும் இருவினைப் புசிப்புக் கேது வான சரீரங்களைக் கர்த்தாவினுடைய கிருபையினாலே பொருந்தி ; அவை அவரா யதனால் - அந்தச் சரீரமே தாமாகிய ஏதுவினாலே ; அலகில்நிகழ் போகங்க ளருந்தும் - எண்ணிறந்த போகங்களை ஆர்ச்சித் துக்கொண்டு புசிக்கும் ; ஆற்றாற் புண்ணிய பாவம் புரிந்து - புசிக்கச் செய்தே கேட்டிலுற்பத்தியாய்த் தோன்றும் இதாகிதங்களே புண் ணிய பாவங்களாய்ச் சஞ்சிதமெனக் கட்டுப்படும் ; போக்குவரவு டைத்தாய் - அப்புண்ணிய பாவங்கட்குப் பயனாகிய சுகதுக்கம் புசித்தல் ஏதுவாகச் சுவர்க்க நரகங்கட்கும் அவத்தைகளி னும் போக்குவரவுடைத்தாய் ஏகதேசப்படும் ; இது சகலம்—புணரு மிருள் மலபாகம் பொருந்தியக்கால் - இதனால் அனாதிசையோக மாகிய மலம் பரிபாகம் வந்தகாலத்து ; அருளால் - ஆசாரியர் அனுக் கிரகத்தினாலே ; உண்ணிலவும் ஒளியதனால் இருளகற்றி - அறிவுக்கு ளறிவாய் விளங்குந் திருவருள் ஞானவிளக்கத்தால் அறியாமை நீங்கி ; பாதமுற்றிடும் - கர்த்தாவினுடைய திருவடியிற் பொருந்து வார்கள் ; நற்பசுவருக்கமென உரைப்பர் உணர்ந்தோர் - பசு பாசங்களிரண்டிற் சித்தாகிய ஆன்மவர்க்கங்களென்று உண்மையறி வுடையோராற் கூறப்படும்.

இதனால் ஆன்ம லட்சணங் கூறுமுகத்தாற் கேவல சகல சுத்தங் களிற் படும் பாகுபாடும் பயனும் உடன்கூறியவாறும். கக

'பலகலையாகமவேதம்' யாவையும் 'பதிபசுபாசந் தெரித்த'லென்று மூன்றுள் அடக்கிச் சத்துச்சித்தானந்தமாகலின் முதற்கட் பதிக்கும், சத்துச்சித்தாகலின் இரண்டாவது பசுவுக்கும் இலக்கணங்கூறி எஞ்சிநின்ற பாசத்திற்கு இலக்கணங் கூறப் புகுந்த ஆசிரியர் பஞ்ச பாசங்களையுந் தெரித்துணர்த்துமுகத்தாற் கேவல சகல சுத்தங்கட்கு வகையும் விரிவுந் தொகுத்துரைப்பான் தொடங்கினார்.

## பாசவியல்பு

**20.** ஏகமாய்த் தம்கால எல்லைகளின் மீளும்
எண்ணரிய சத்தியதாய் இருளொளிர இருண்ட
மோகமாய்ச் செம்பினூறு களிம்பேய்ந்து நித்த
மூலமல மாய்அறிவு முழுதினையும் மறைக்கும்

*பாகமாம் வகைநின்று திரோதாயி சத்தி*
*பண்ணுதலான் மலமெனவும் பகர்வர்அது பரிந்து*
*நாகம்மா நதிமதியம் பொதிசடையான் அடிகள்*
*நணுகும்வகை கருணைமிக நயக்கும் தானே.* உ

**(உரை)** ஏகமாய் - ஒரு முதலாய்; தங்கால எல்லைகளின் மீளும் எண்ணரிய சத்தியதாய் - தனது காலவரையறையிற் பாகப்படும் எண்ணிறந்த சத்திகளையுடையதாய்; இருளொளிர இருண்ட மோகமாய் - பேரந்தகாரவிருளையும் ஊழிக்காலத்துக் கதிரொளி யென்னும்படி மிகவும் இருண்ட அவாவே சொரூபமாய்; 'மருளவா மனத்தனாகி மயங்கினேன்' [தேவாரம், தனித்திருநேரிசை, ii, 1] னென்றார் அப்பர் நாயனாரும், 'அவாவெள்ளக் கள்வனேனை' [திருவாசகம், திருச்சதகம், 24] யென்றார் வாதவூரடிகளும். 'அவாவென்ப தெல்லா வுயிர்க்கு மெஞ்ஞான் றுந்,தவா அப்பிறப்பீனும்வித்' [திருக்குறள்,361] தென்றார் நாயனாரும்—செம்பிலுறு களிம்பேய்ந்து - செம்பினிடத்துக் களிம்புபோல் ஆன்மாக்களிடதது அநாதிசையோகமாய்; நித்த - என்றுங் கெடாத பொருளாய்; மூலமலமாய் - மூலமலமென்று பெயரையுடைத்தாய் மும்மலங்கட்குங் காரணமாய்; அறிவு முழுதினையும் மறைக்கும் - ஆன்மஞானத்தில் வியாப்பியமாய் ஞானதிரோதகத் திரவியமாய் நிற்பது மூலமலம்; அற்றாகலினன்றே 'போதத்திருந் திடுமலமு' மென்றும், 'மூலமலத்தா லாணவமெந்த' மென்றுங் கூறியது எமதாசிரியன்மாரும்—பாகமாம் . . . பகர்வர் - இம் மூலமலத்தின் காரியமாகிய மூன்றுமலம் மூன்றவத்தையென்று நின்று செய்யும் இருவினைகளிற் பதிந்து மும்மலங்களையும் பாகம் வருவிக்குஞ் சிவசத்தியையும் மலமென்றுபசரித்துக் கூறப்படும்; அற்றாகலினன்றே 'ஆணையி னிருவினையி' னென்றும், 'இருவினை முதல்வனாணையி' [சிவஞானபோதம், ii] னென்றுங் கூறினார் முதனூலாசிரியரும், 'மும்மலங்க டத்தந் தொழிலினை யியற்ற வேவுந், தூயவன் றனதோர் சத்தி' [சிவஞானசித்தியார், ii, 87] யென்றார் வழிநூலாசிரியரும். திரோதானசத்தியை மலமென்பது உபசாரமாகில் அதனுண்மை யாதோவெனில்—அது பரிந்து . . . தானே - அத திரோதானசத்தி ஆன்மாக்களுக்கிரங்கி அவர்களைப் பரமேசுவரன் திருவடியிற் சேர்ப்பிக்குங் காருணியமே தனதுள்ளுறையாய் இரட்சிக்கும்.

மலமெனவும் பகர்வரென்ற உம்மையால் அது உபசாரமேயன்றி யுண்மையன்றென்பது தானே போதரும். ௨0

இனி, அச்சிவசத்தி மும்மலங்களையுந் தத்தந்தொழிலினை யியற்ற ஏவுமாறு கூறுமுகத்தாற் சுத்தமாயையினது இலக்கணங் கூறுவான் தொடங்கினுர். சுத்தமாயையாவது ஏனை மாயைகள்போலப் பரிணமித் தொடுங்குவதன்றிப் படங்குடிலானுற்போல விரிந்தொடுங்குவதாய்ச் சிவசத்தி பதிந்து தொழிற்படற்கிடமாயிருப்பதை ஈண்டுப் பாசங்களுட் சேர்த்துக் கூறவேண்டாவாயினும் மாயை மாயேயமலங்களைப் பிரேரிக்குஞ் சிவசத்தி பதிதற்கிடமாகலின் அத்துணைக் காரியமாத்திரமே ஈண்டுக் கூறுவதன்றி அதன் காரணத்துக் கிலக்கணங் கூறுதொழிந்ததெனை நுண்ணுணர்வினு லறிக. சத்திபேதஞ் சிவபேதங்கள் மேலே 'நீடுபராசத்தி'யென்னுஞ் செய்யுளிற் கூறிப் போந்தமையின் ஈண்டு அத்திருமேனித் தன்மை கூறுவதன்று, சுத்தமாயையிற் பதியுஞ் சத்திபேததாற் படுங் கருமமொன்றுமே கூறுவதாம்.

21. உன்னலரும் பரசிவன்தன் அருளாலே நாதம்
உதிக்கும்இருங் குடிலைதனில் விந்துவரும் நாதந்
தன்னில்அதி யொளிவளரும் சதாசிவராம் அவரில்
தயங்கவரும் ஈசர்வித்தை தனைஅளிப்பர் அதனுல்
மன்னுவர்இவ் வகைஐவர் வாய்மையினுல் முன்னே
வந்திடுமென் றுரைசெய்த விந்துவழா வகையே
முன்னுதவும் சூக்குமாதி ஒருநான்கும் என்று
மொழிந்திடுவர் அருங்கலைகள் முதிர்ந்துளோரே. ௩

**(உரை)** உன்னலரும் . . . குடிலைதனில் - மனுதீதகோசரமாகிய பரமசிவனுடைய பராசத்தியாதி பஞ்சசத்திகள் சங்கற்பரூபமாய்ப் பெரிய சுத்தமாயையிற் பதியவே நாததத்துவமுளதாகும்; விந்துவரும் நாதந்தன்னில் - நாததத்துவத்தினின்றும் விந்துதத்துவமுளதாகும்; அதிலொளிவளருஞ் சதாசிவராம் - விந்து தத்துவத்தினின்றுஞ் சுயம்பிரகாச ஞானமுடைய உத்தியுத்தர்க் கிருப்பிடமாகிய சாதாக்கிய தத்துவந் தோன்றும்; அவரில் தயங்கவரும் ஈசர்வித்தை தனையளிப்பர் - சாதாக்கியத்தினின்றும் ஈசுரதத்துவமும் அதினின்றுஞ் சுத்தவித்தை தத்துவமும் உளவாம்; விளக்கிருந்த தகளியை

விளக்கென்பதுபோல ஒற்றுமை நயம்பற்றித் தத்துவங்களையே அதி விருக்குந் தேவர்களாக உபசரித்தார்—அதனால் - ஆகையினாலே ; மன்னுவர் இவ்வகை ஐவர் - இவ்வாறு சிவதத்துவங்களைந்தும் நிலை பெறும் ; வாய்மையால் - சிவசத்தி கிருபையால் ; முன்னே வந்திடு மென் றுரைசெய்த விந்து - நாத தத்துவத்தினின்றும் உண்டாகு மென்ற விந்துவானது ; வழாவகையே முன்னுதவுஞ் சூக்குமாதி யொருநான்குமென்று - சூக்குமை முதலாகிய நாலு வாக்குக்களையும் முறை பிறழாமற் றோற்றுவிக்குமென்று ; மொழிந்திடுவர் அருங்கலை கள் முதிர்ந்துளோரே - வேதாகமங்களை ஓதி அறுதியிட்டுணர்ந்து அறிவு முதிர்ந்த மகத்துக்களாற் கூறப்படும்.

மாயை கன்மம் மலம் என்னும் மூன்றின் தொழிலாகிய பந்தம், போகம், போத்திருத்துவமென்னும் மூன்றும் மாயேயத்துவாரமாய் விளக்குவிப்பது இச்சிவதத்துவமைந்தும் வாக்குநாலுங் கொண்டு சிவ சத்தி செய்யுந் தொழிலாகலின் மேலைச் செய்யுளிற் கூறிய திரோ தான சத்தி தொழிலை விளக்குவதே இச்செய்யுளின் கருத்தென் றறிக. அற்றாகலினன்றே 'சுத்தக் கருவிகளைந்துங்கொண் டேசொல் லவத்தையைந்துஞ், சித்திக்கு' [கட்டளைக்கலித்துறை, 37] மென் றார் சிற்றம்பல நாடியாரும். பந்தம் போகம் போத்திருத்துவம் மூன்றும் அவத்தைத் துவாரமாயன்றி நிகழாமை யறிக. உக

இனி மாயாமலத்தினது காரணகாரிய இலக்கணங் கூறுமுகத் தாற் சிவசத்தியின் பெருமை கூறுவான் தொடங்கினர். இது செய் யுட்கடோறும் உள்ளுறை பொருள் மேற்கொள்ளு மாற்றா லறிக.

22. உருவாதி சதுவிதமாய் ஒன்றோன் றொவ்வா
உண்மையதாய் நித்தமாய் ஒன்றா யென்றும்
அருவாகிக் கன்மமார் அணுக்கள் யார்க்கும்
ஆவார மாய்அசித்தாய் அசல மாகி
விரிவாய தன்செயலின் வியாபியாய் எல்லாம்
விரிந்தவகை புரிந்தடைவின் மேவியவை ஒடுங்க
வருகாலம் உயிர்களெல்லாம் மருவிடமாய் மலமாய்
மன்னியிடும் அரனருளால் மாயை தானே. ச

**(உரை)** உருவாதி சது என்பதற் கன்வயம். மாயைதானே - மாயா மலமானது ; நித்தமாய் - என்றுங் கெடாததாய் ; ஒன்றாய் - ஒருமுத

லாய்; என்றும் அருவாகி - எக்காலமும் அப்பிரமேயப் பொருளே யாகி; கன்மமார் . . . ஆவாரமாய் - கன்மத்தை ஆர்ச்சித்துக் கொண்ட உயிர்களுக் கெல்லாம் அது புசித்தற்கு ஆதாரமாய்; அசித் தாய் - சடமாய்; அசலமாகி - போக்குவரவில்லாததாய்; விரிவாய தன்செயலின் வியாபியாய் - தன் செயலாகிய முப்பத்தொரு தத்து வத்தும் வியாபகத்தை யுடைத்தாய்; எல்லாம் - இவ்வெழுவகை யிலக்கணங்களையுடைய அசுத்தமாயையானது; உருவாதி . . . உண்மையதாய் - நித்தமாவதற்கு மாறுபட்டு உருவாதியாய்த் தோன்றி யழிவதாயும், ஒன்றாவதற்கு மாறுபட்டுத் தனுகரண புவன போகமென்று சதுவிதமாயும், என்றும் அருவாவதற்கு மாறுபட்டு உருவாதியாயும், கன்மத்துக்கும் அதை யார்ச்சித்தவர்களுக்கும் ஆதார மாவதற்கு மாறுபட்டு, 'எல்லாமாய்த் தத்துவங்க ளிசைந்தது . . ., தொல்லாய கன்மமெல்லாந் துய்ப்பித்துத் தொலைத்தற் கும்பின், நில் லாமை முற்றுவித்து நீக்கவு' [சிவஞானசித்தியார், ii, 79] மென்றார் வழிநூலாசிரியராகலின், கன்மநாசத்திரவியமாகவும், அசித்தாவதற்கு மாறுபட்டுச் சித்துப்போலச் செயற்படுவதாயும், அசலமாகி விரிவாய தன்செயலில் வியாபியாவதற்கு மாறுபட்டு உருவாதி சதுவிதமாய் ஏகதேசப்பட்டும் இவ்விலக்கணங்கள் காரண காரியங்களில் ஒன்றோ டொன்றொவ்வாத சுபாவமாவ தேதென்னில்; அரனருளால் - சிவ சத்தி சங்கற்பவல்லபத்தா லிவ்வாறாம்; விரிந்தவகை - இவ்வாறு சிவசத்தி சங்கற்பித்து மாயை விரிந்து விளங்கிய தென்னகாரணத்தா லெனின்; புரிந்தடைவின் மேவி - ஆன்மாக்களாற் சித்தகன்மத்துக் கீடாக இவ்வாறு பேதப்பட்டுப் பொருந்தும்; அவை ஒடுங்க வருகாலம் - பாகப்பட்ட கன்மம் புசித்துத் தொலைந்த காலம் அந்த மாயை நிற்கும் முறை யேதென்னில்; உயிர்களெல்லாம் மருவிடமாய் - அநாதிகேவல நீக்கம் வந்து தன்னிடத்திற் பந்தமான உயிர்கள் மாறி அந்தக் கேவலத்திற் புகாமல் தரிப்பதற்கு ஓர் ஆதாரமாம்; மலகன்மங் கட்குப் பகைப்பொருளாகிய மாயையையும் மலமென்ப தேதென் னில்—மலமாய் மன்னியிடும் - குணத்தன்மையில் மலகன்மங்கட்குப் பகைப்பொருளாய் அவற்றைச் சேதிப்பதாயும் குணித்தன்மையில் அவைகட்கு உறவாய்ப் போகம் போத்திருத்துவங்களிற் பந்தம் விளைத்து மலமாயும் நிற்கும்.

கலையாதி தத்துவங்கள் ஆணவத்தைச் சிறிது நீக்குதல், கன்மத்தை நிச்சயம் பண்ணுதல், அறிவை விளக்குதல் முதலிய தொழில் செய்வதுளதாகலின் அது சித்தாகிய பதி செய்யுந் தொழில் இது செய்வதால் மாயை சடமாயிருந்துஞ் சித்துப்போலச் செயற்படுதல் யாங்ஙனமெனை மலையற்க. மேலைச் செய்யுளிற் பந்தம் போகம் போத் திருத்துவம் மூன்றும் அவத்தைத் துவாரமாய் நிகழுமெனக் கூறியதாற் பந்தநிகழ்தல் மாயையின் குணதன்மமெனை மயங்கற்க ; மாயையின் குணிதர்மமே ஆண்டு நிகழுமெனக் கூறியது. எல்லாப் பொருட்கும் குணகுணி சுபாவங் குருமுகமாயறிக. மலகன்மங்கட்கு உறவுத் திரவியமான மாயை குணத்தன்மையில் அவற்றிற்குப் பகைப்பொருளாய் அவ்விரு மலங்களையுஞ் சேதித்து நிற்பது 'மலங்க டத்தந் தொழிலினை யியற்ற வேவுந், தூயவன் றனதோர் சத்தி' சங்கற்பத்தின் பெருமையாகலின் அது தெற்றெனை வுணர்க. உஉ

ஈண்டு ஒரு திருவிருத்தத்தால் ஆகமப்பிரமாணம் அனுபவப் பிரமாணங்களால் மாயையிலக்கணமுஞ் சிவசத்தியின் பெருமையுங் கூறிய ஆசிரியர் இனி இவ்வாறு ஓர் இறைவனும் மாயையும் உளவோ இலவோ வென்னும் ஐயம் நீக்குமுகத்தால் அனுமானப் பிரமாணத்தால் மேல் அது வலியுறுத்துவான் தொடங்கினர்.

23. என்னையிது எனில்உலகுக் குபாதான மில்லை
இறைவனல தெனின்அசித்துச் சித்திடைத் துதியா
மன்னியுள தேல்முதல்வன் என்கொல் என்னின்
மாயைதான் அசித்துருவாய் மருவ மாட்டா(து)
அன்னவனும் இதுவொழிய ஆக்க மாட்டான்
அசத்தனும் எனின்அதுவும் அவன்போல் நித்தம்
முன்னவன்அவ் வசித்தைவிரித் தெவையும் ஆக்கும்
முதன்மைஅது கொடுத்ததென மொழிந்தி டாரே. ரு

**(உரை)** என்னையிதுவெனில் - இந்த மாயை எதுக்காக உள்ளதெனில் ; உலகுக் குபாதானம் - அசேதனப் பிரபஞ்சங்கள் உண்டாகைக்கு முதற்காரணமாயிருக்கும் ; இல்லை யிறைவனல தெனில் - மேலே 'உலகமெலா'மென்னுஞ் செய்யுளில் இருவகைப் பிரபஞ்சத்திற்கும் முதல்வனே மூலகாரணமெனப் பெறப்படுதலின் அவனுக்கு வேறாய் ஒரு மாயை வேண்டுவதில்லையெனில் ; அசித்துச் சித்தி

னிடத்துதியா - சடமாயிருக்கிற அசேதனப் பிரபஞ்சஞ் சித்தாயிருக்கிற சிவனிடத்திலே யுண்டாகாது, சடமாய் ஒரு மாயை முதற்காரணமாகவேண்டும் ; மன்னியுளதேல் முதல்வ னென்கொல் என்னில் - இவ்வாறு ஒரு மாயை முதற்காரணமா யுளதாகில் அதுவே போதும் அதைவிட வேறே கர்த்தா எற்றுக்கெனின் ; மாயைதான் அசித்துருவாய் மருவமாட்டாது - மாயையோ சடமாகையினாலே அது தானே தனுவாதியாய்ப் பொருந்தமாட்டாது ; அன்னவனும் . . . அசத்தனும் எனில் - கர்த்தாவும் இந்த மாயையில்லாவிடிற் பிரபஞ்சத்தை யுண்டாக்கமாட்டானாகலின் அப்போது பலவீனனேயா மென்னில்; அதுவும் அவன்போல் நித்தம் - அந்த மாயையும் அந்தக் கர்த்தாவைப்போல் அழியாத பொருளாகையால் ; முன்னவன் அவ் வசித்தைவிரித் தெவையும் ஆக்கும் - கர்த்தா தனக்கு வேண்டும்போதெல்லாம் அந்தச் சடத்தைச் செயற்படுத்தி ஆன்மாக்களுக்குத் தனுவாதிகளைப் படைக்கும் ; முதன்மை - ஆனால் அந்த மாயை இருப்பதினாலே கர்த்தாவுக்குக் கிருத்தியம் நடப்பதால் அது கொடுத்த முதன்மையே யாகவேண்டுமெனின் ; அது கொடுத்ததென மொழிந்திடாரே - காரணகாரிய வேறுபாடு உணர்ந்தோர்கள் அந்த மாயைக்குக் கர்த்தா முதன்மை கொடுத்தானென்று சொல்லுவதன்றிக் கர்த்தாவுக்கு மாயை முதன்மை கொடுத்ததென்று சொல்லார்களாதலாற் பலவீனனல்லன்.

'முதன்மையது கொடுத்ததென மொழிந்திடா'ரென்றமையால் அவன் கொடுத்த முதன்மை யென்பது தானே போதரும். மாயைக்கு அவன் கொடுத்த 'முதன்மை யாதோ வெனில் அது உண்மையதிகாரத்திற் கூறப்படும். சிவசத்தியின் பெருமை கூறியது ஈண்டுங் காண்க. ஈண்டு இரண்டு திருவிருத்தத்தால் மாயையுண்மைக்கு இலக்கணங் கூறிய ஆசிரியர் இனி அது காரியப்படுத்தற்குக் காரணங் கூறுமுகத்தால் மேல் அது வலியுறுத்துவான் தொடங்கினர். உரு

பிரபஞ்ச முண்டாதற்கு மலபரிபாகங் காரணமென்று மேலே 'ஏற்றவினை' யென்னுஞ் செய்யுளிற் பெறப்படுதலின் அக்காரணத்தால் முதல்வன் தனதிச்சைவழியே பிரபஞ்சந் தோற்றுவிப்பனோ அன்றோ வென்னும் ஐயம் நீக்குதற்கு எழுந்தது இச்செய்யுளென்பதாம்.

24. படைத்ததொரு படியின்றிப் பறவைபசு நரராய்ப்
பண்ணியதென் முன்னைவினைப் பான்மை யென்பர்
அடுத்தவினை உளதாயின் இறையேன் என்னில்
அசேதனம்மற் றவைஆவிக் கமைத்த தாகும்
எடுத்தவினை உருவுறுவ துயிரேல் தானே
இருவினைக்குத் தக்கஉடல் எய்து மென்னில்
சடத்திரளும் அகர்த்தாவாய் அறிவொன் றில்லாத்
தன்மையனுங் கூடவொரு சங்கை யின்றே. சு

(உரை) படைத்ததொரு . . . பண்ணியதென் - மல பரிபாகங் காரணமாக முதல்வன் செய்யும் அனுதி சிருட்டியில் ஒரு வடிவாகப் படையாமல் நரர் பட்சி மிருக தாபரங்களாய்ப் பலவிதமாகப் படைத்தற்கு ஏது காரணமெனில்; முன்னை வினைப் பான்மை யென்பர் - கேவலத்தின்கண் அவர்கள் ஆர்ச்சித்த இரு வினைப் பேதங் காரணமா மென்று சொல்வார்கள்; அனுதி சிருட்டி யிற் பேதப்படும் முறைமை விவகரிப்பதாகலின் ஈண்டுக் கூறப் படும் முன்னைவினையைக் காமியமலத்தின் காரியமாய் மனவாக்குக் காய சென்னியமாய்த் தோன்றும் இதாகிதங்களாலுள்ள புண்ணிய பாவங்களென்று மலையற்க. மூலமலத்தின் காரியமாய் மூன்று மலத் திற்கும் முன்னையதாய் மூன்றுமலம் மூன்றவத்தை யென்று நின்று செய்யு மிருவினையையே ஈண்டு முன்னை வினையெனக் கூறியதென் றறிக. இது தொண்டர்சீர் பரவுவாராகிய அருண்மொழித்தேவர் 'யாக்கைதன் பரிசும் வினையிரண்டுஞ் சாருமல மூன்றுமற' [பெரிய புராணம், கண்ணப்ப. 154] வென்பதனுனும், 'இருவினை தானிவை மும்மல மீங்கிவை' யென்பதனுனுங் காண்க. 'இருவினை மும்மலப் பழவல்லிரு' ளென்று ஞானமிர்தத்தாரும், 'தன்னை யறிந்திடுந் தத் துவ ஞானிகள், முன்னை வினையின் முடிச்சவிழ்ப் பார்கள், பின்னை வினையைப் பிடித்துப் பிசைவர்கள், சென்னியில் வைத்த சிவனரு ளாலே' [திருமந்திரம், 2611] என்று திருமூலதேவரும் உரைத்தா ராகலின் இதனுண்மை குருமுகமாயறிக—அடுத்தவினை யுளதாகி லிறையே னென்னில் - பிரபஞ்சத் தோற்றத்திற்குக் காரணமாக மூலமலமும் அது பலதிறப்படுதற்குக் காரணமாக இருவினையும் உண் டாயிருக்க அவற்றிற்கு வேருக முதல்வன் எற்றுக்கெனின்; அசே

தனம் - அவையெல்லாஞ் சடமாகையினாலே கர்த்தாவேணும்; அவை சடமாயினுஞ் சுகதுக்க ரூபமாய்க் காரியப்படக் கண்டோமே என்னில்—மற்றவையாவிக் கமைத்ததாகும் - அவை ஆன்மாக்களுக்காய் அவ்வாறு முதல்வன் கூட்டித் தொழிற்படுத்தினதாயிருக்கும்; எடுத்த வினை . . . மென்னில் - இங்ஙனங் கூறப்பட்டு அவர்கள் ஆர்ச்சித்த வினைப்பிரகாரமுள்ள சரீரத்தைப் பொருந்துகிறது ஆன்மாக்களாமே அவ்வினை சடமாயினும் அவர்கள் சித்தாகலின் அவர்கள் தானே சுகதுக்கம் புசித்தற்கேற்ற தனுவை யெடுத்துக் கொள்ளுவ ரென்றாற் படும் இழுக் கென்னையெனின்—சடத்திரளும் - சடமாகிய மாயை கன்மங்களும்; அகர்த்தாவாய் - கர்த்தாவல்லனாய் ; அறிவொன்றில்லாத் தன்மையனும் - வியஞ்சகத்தையின்றித் தனக்கென அறியுஞ் சுதந்தரவறிவில்லாத ஆன்மாவும்; கூட ஒரு சங்கையின்றே-சிவசத்தியையின்றி இவைகள்தானே கூடித் தொழிற்படுவதற்கோர் செயலுமில்லை.

ஈண்டுஞ் சிவசத்தியின் பெருமை கூறியவாறு காண்க. உச

'உருவாதி'யென்னுஞ் செய்யுளில் மாயையினதிலக்கணங் கூறியதி லெஞ்சுதல்பற்றி இம்மாயைதான் ஆதியோ அனாதியோ, ஆதியாகில் நித்தியமென்பது பொருந்தாது அனாதியாகில் கர்த்தாவாற் கன்மத்தளவு கூட்டப்பட்டதென்பது பொருந்தாது, இது யாதோ வென்னும் ஐயத்தின்கண் நிகழும் ஆசங்கை நீக்குமுகத்தால் இனம் பற்றி மும்மலங்கட்குங் காரண பந்தமுண்மை கூறுதற்கு எழுந்தது வருஞ் செய்யுளென்பது.

25. அல்லல்மிக உயிர்க்கிவைதான் அணைத்த தீசன்
அருவினைகள் அருந்துதற்கோ வினையோ அன்றிச்
சொல்லிவரு மாயையோ அணுவை முந்தச்
சூழ்ந்ததெனும் உரைமுதலோர் தொடக்கி லார்பால்
ஒல்லைவரு மெனின்உள தாம் உயிருண் டாவே
உளதுமலம் மலமுள தா ஒழிந்த வெல்லாம்
நெல்லின்முளை தவிடுமிபோல் அநாதியாக
நிறுத்திடுவர் இதுசைவம் நிகழ்த்து மாறே. எ

**(உரை)** அந்வயம். ஈசன் - கர்த்தா ; காருண்ணியத்தாற் பாசநீக்கப்புகுந்தவிடத்து—உயிர்க்கிவைதான் அணைத்தது ·மாயையை ஆன்

மாக்களுக்குக் கூட்டியது; அல்லல்மிக அருவினைகள் அருந்துதற்கோ- கொடிய வினைகளை ஆர்ச்சித்துக்கொண்டு புசித்து மிகவுந் துக்கப்படு தற்கோ முன்ஆர்ச்சிதத வினை புசித்துத்தொலைந்து சுகப்படுதற்கோ; வினையோ - முன்னை வினையென்றிங்ஙனம் கூறிய இருவினையோ; அன்றிச் சொல்லிவரு மாயையோ - வினையினளவு காரியப்படுமென் றிங்ஙனஞ் சொல்லிய மாயையோ; அணுவை முந்தச் சூழ்ந்ததெனும் உரை - ஆன்மாவின் முன்னே பந்தப்பட்டது யாதென்று நீ கேட்கில்; முதலோர் தொடக்கிலார்பால் ஒல்லை வருமெனின் உளதாம் - அனாதியே மூலமல பந்தமில்லாதிருந்து அவர்களிடத்தில் இது வந்து பொருந்திற்றென்றும் எல்லா அனத்தங்கட்கும் முதல்வனே மூல காரணமென்றுஞ் சைவரிலொரு சாரார் கூறுங் கூற்றாகில் அதற்கு முற்பிற்பாடு கூறவரும்;ஆனால் சித்தாந்தமேதென்னில்—உயிருண்டா வே உளதுமலம் - உயிருள்ளபோதே இருவினை மும்மலங்கட்கெல் லாங் காரணமாகிய மூலமலம் அனாதி பந்தமாயுள்ளது; மலமுளதா ஒழிந்த வெல்லாம் - ஏனை இருவினை மும்மலமென்று கூறப்படு வன வெல்லாம் மூலமலத்தின் காரியமாகையாலே; நெல்லின் முளை தவிடுமிபோல் அனாதியாக - நெல்லினிடத்து முளை தவிடுமிகளெல் லாம் வித்துத் தன்மையுள் ஒன்றா யடங்கி யிருந்து பின்பு முற்பிற் பாடின்றிக் காரியப்படுவது போல; நிறுத்திடுவர் இதுசைவர் நிகழ்த்து மாறே - மும்மலமும் அனாதி பந்தமென்று சைவாகமங்க ளுணர்ந்தோ ரால் கூறப்படும்.

அற்றாகலினன்றே 'மூலமல மொன்று தானங்கள் இரண்டு மூலமலத்தா லாணவ பெந்த' மென்றார் எமதாசிரியரும். 'மூல மலத்தாற் சாலு மாயை, கருமத் தளவிற் றருமுரு விறைவ' [சங்கற்ப நிராகரணம், v, 32] னென்றார் நூலாசிரியரும். மூலமலமென ஆண் டாண்டுக் கூறப்படுவன வெல்லாம் இருவினை மும்மலங்கட்குக் காரண மாகிய மூலமலத்தையேயாம். ஓரோரிடங்களில் இயைபு பற்றி ஆணவ மலத்தையும் மூலமலமென் றுபசரித்துக் கூறப்படும். இது நுண்ணு ணர்வா லறிக. 'விந்துவின் மாயை யாகி மாயையி னவ்வி யத்தம், வந்திடு' [சிவஞானசித்தியார், i, 19] மென வழிநூலாசிரியர் கூறிய தின் பொருள் உள்ளவா றுணராது சுத்தமாயையின் காரியமே அசுத்தமாயை யென்பாருமுளர். இனி மாயையென்ப தொன்றே

ஊர்த்துவபாகம் அதோபாகமா யிருதிறப்பட்டுச் சுத்தமாயை அசுத்த மாயை யெனப் பேதப்படு மென்பாரும், சுத்தமாயைபோல அசுத்த மாயையும் அனாதியே ஒருபொருளென்பாரு மிருதிறத்தாசிரியர். இது 'உயிர்மலங் கன்மங் கர்த்தா வுபாதான மைந்' [சுவாமிநாத தேசிகர் தசகாரியம், 8] தென்றும், 'ஏகனனேக னிருள்கரும மாயை யிரண், டாகவிவை யா' [திருவருட்பயன், vi, 2] றென்றும் வரு மாற்று லறிக. இனி முதல்வனது கிரியாசத்தியே மாயை யென்பாரு முளர். அது போலியென் றொழிக. உ௫

ஆக நாலு திருவிருத்தங்களால் மாயாமலத்தினது இலக்கணங் கூறிய ஆசிரியர் இனி இரண்டு செய்யுளான் மாயேயமலத்தினது தோற்ற மொடுக்கங் கூறுவான் றொடங்கினார்.

26. அருத்திமிகும் கலைகால நியதியுடன் வித்தை
அராகம்இவை அனந்தரால் மாயைதனி லாகும்
உருத்திராற் கலையதனில் பிரகிருதி குணங்கள்
உளவாகும் ஆங்காரம் புந்தியினில் உதிக்கும்
தெரித்தவிது திரிவிதமாந் தைசதவை காரி
திகழ்தருபூ தாதியெனத் திருந்தியசாத் துவிதம்
விரித்தகுண மனம்புத்தி இந்திரிய மென்று
விளம்பியசோத் திராதிமுதல் விளங்கியிடும் விரிந்தே.

**(உரை)** அருத்திமிகுங் கலைகால நியதியுடன் வித்தை யராக மிவை அனந்தரான் மாயைதனி லாகும் - அசுத்தமாயையை அனந்த தேவ நாயனார் தமது சத்தியாற் கலக்கியவிடத்து அதினின்றும் ஆன்மாக்கள் இச்சாஞானக் கிரியைகளை விளக்குவது காரணமாய்க் கலை காலம் நியதி வித்தை அராகமென்னும் பஞ்சதத்துவங்கள் உளவாகும்; உருத்திராற் கலையதனிற் பிரகிருதி குணங்க ளுளவா கும் - உருத்திரதேவ நாயனார் சத்திகலையிற் பதியவே அதினின்றும் முக்குண ரூபமாகிய பிரகிருதிமாயை யுளதாகும், அந்தப் பிரகிருதி யின் அவ்வியத்தத்திற் புத்திதத்துவம் உண்டாம்; ஆங்காரம் புந்தி யினி லுதிக்கும் - புத்திதத்துவத்தினின்றும் ஆங்கார தத்துவம் உள தாகும்; தெரித்தவிது திரிவிதமாம் - இந்த ஆங்காரம் மூன்றுபாக மாம்; அவையாவையென்னில்—தைசதவை காரி திகழ்தருபூ தாதி யென - தைசதவாங்காரமென்றும் வைகரியாங்காரமென்றும் பூதாதி

யாங்காரமென்றும் பெயராம்;இவ்வாங்காரம் மூன்றும் முன்சொன்ன பிரகிருதியின் அவ்வியத்தமாகிய முக்குணங்களையும் புணரும்—திருந்தியசாத் துவிதம் விரித்தகுணம்-தைசதவாங்காரஞ் சாத்துவித குணத்தைப் புணரவே ; மனம்புத்தி . . . விரிந்தே - அவ்விடத்தில் மனமும் ஞானேந்திரியமாகிய சோத்திராதிகளைந்தும் தோன்றும்.

ஈண்டுக் கூறப்படும் அனந்ததேவ நாயனாாவது உருத்திரதேவ நாயனாாவது பிரவிருத்தரால் அதிட்டிக்கப்படும் அணுபட்ச கர்த்தாக்களன்றிச் சம்புபட்சமன்றென வுணர்க. ஈண்டுத் தோற்றுவது அசுத்தமாயையில் அஞ்சு தத்துவமுங் கலையிலொன்றும் ஆக ஆறும் புருடதத்துவத்துடன் கூட்டி ஏழும் வித்தியாதத்துவமெனப் பெயராம். பிரகிருதியி னவ்வியத்தத்திற் றோன்றும் புத்தியும் அவ்வியத்தத்திற் றோன்றுங் குணமும் புத்தியிற்றோன்றும் ஆங்காரமுஞ் சாத்துவித தைசதபுணர்ச்சியிற் றோன்றும் மனமும் ஆக நாலும் அந்தக்கரணமென்பார் இவர்; மனத்தின் றொழில்விகற்பமே சித்தமென்பார். இனிப் புத்தி தத்துவத்தோடு அவ்வியத்தத்திற் றோன்றியது சித்தமென்றும் அது கூட அந்தக்கரணம் நாலென்றும் குணதத்துவத்தை அறுபது வகையில் மூன்றாகச் சேருமென்றுஞ் சொல்வாரு முளர். இவர் அறுபது வகையில் ஏடணைமூன்றுங் கொள்ளாதாராம். இனி ஆங்காரத்தை அந்தக்கரணத்தி லொன்றாகவும் அறுபது வகையில் மூன்றாகவுங் கூட்டிய முறையே குணத்தையும் அந்தக்கரணத்தி லொன்றாகவும் அறுபதுவகையில் மூன்றாகவுங் கூட்டிச் சித்தத்தை மனத்துள் அடக்கி ஏடணை மூன்றுந் தள்ளிச் சரிக்கட்டிக் கொள்வாருமுளர். ஆன்மதத்துவம் உச-ல் இங்ஙனங் கூறிய அந்தக்கரணம் நாலும் மனத்தோடு தோன்றிய ஞானேந்திரியமைந்தும் போக நின்ற பதினைந்து தத்துவமுந் தோன்றும் முறையும் இவையெல்லாம் ஒடுங்கும் முறையுங் கூறுதற்கெழுந்தது வருஞ் செய்யுளென்பதாம். உசுகூ

**27.** மன்னியகன் மேந்திரிய மானஇரா சதஞ்சேர்
வாக்காதி வைகாரி மருவிவரும் சத்தம்
தன்னைமுத லாகியதா மதமிகுமாத் திரைபின்
தருமிதனில் வான்அநிலம் அனல்புனல்மண் சத்தம்

முன்ன தனில் வெளியாதி ஒன்றொன் ருகும்
முறையிலுறும் இருமைஅயன் முடிவா முன்னே
உன்னுசதா சிவராதி அதிபதிகள் ஒடுக்கம்
உதித்தஅடை வெனஉரைப்பர் உணர்ந்து ளோரே.

**(உரை)** அந்வயம். மன்னியகன் மேந்திரிய மான வாக்காதி - ஆன்மாவுக்கு அந்தக்கரணத்திடமாய்ச் சீவித்த இச்சையும் ஞானேந்திரியத் திடமாய்ச் சீவித்த ஞானமும் உன்முகமாய்க் கிரியை மேலிட்டு நிலைபெறுதற் கிடமாகி அக் கிரியை சீவிக்கும் இந்திரியமான வாக்காதி ஐந்தும் ; இராசதம் வைகாரி சேர் மருவி வரும் - இராசத குணத்தில் வைகரியாங்காரஞ் சென்று மருவவே அவ்விடத்துண்டாகும் ; சத்தந் தன்னைமுத லாகிய மிகு மாத்திரை தாமதம் பின் தரும் - கிரியை சீவித்தற்குக் காரணமாகிய தன்மாத்திரை யென்னுஞ் சத்தாதிகளைந்தும் தாமதகுணத்திற் பூதாதியாங்காரம் புணரவே அவ்விடத்துண்டாகும் ; இதனில் - இந்தச் சத்தாதி ஐந்தினும் ; வான்அநிலம் அனல்புனல்மண் - ஆகாசமுதற் பிருதிவி ஈருகப் பூதமைந்தும் ; சத்த முன்னதனில் . . . முறையிலுறும் - சத்தத்தில் ஆகாயமும் பரிசத்தில் வாயுவும் ரூபத்தில் தேயுவும் ரசத்தில் அப்புவும் கந்தத்திற் பிருதிவியுந் தோன்றும் ; இருமை அயன் . . . அதிபதிகள் - பிருதிவிமுதல் ஆகாயமீருகப் பூதமைந்திற்கும் பிரமாமுதற் சதாசிவர் ஈருக ஐந்து அதிதேவதைகள் உளராம் ; ஆக ஆன்ம தத்துவம் உச கண்டுகொள்க. ஈண்டுக் கூறப்படும் அதிதேவதைகள் அணுபட்சமன்றிச் சம்புபட்சமன்றென் றுணர்க. ‘ நீடு தேவர் நிலைகளும் வேண்டிடி, னுடு மைம்பெரும் பூதமு நாட்டுவ, கோடி கோடி குறட்சிறு பூதங்க’ [பெரியபுராணம், திருமலைச்சிறப்பு, 6] ளென்றும், ‘ அருள்மேவி லொருதுரும்பும் படைத்தளிக்கு மகிலாண்டத் தொகுதிகளே’ யென்றும் இருப்பதால் அதிதேவதைகளை அணுபட்சமென்றல் யாதோவென மலையற்க. பிரம விட்டுணு இரண்டும் அணுபட்சமென்றும் எனைய மூன்றுஞ் சம்பு பட்சமேயன்றி அணுபட்சமன்றென்றுங் கூறுவாருமுளர். அசுத்த மாயையில் அனந்ததேவராற் கலக்குண்ட பாகத்திற் ருேன்றிய கலையில் உருத்திரதேவராற் கலக்குண்ட பாகத்திற் ருேன்றிய பிரகிருதியிற் குணங்கார சையோகத்தாற் ருேன்றிய சத்தாதியிற் கிரியையின்

விகாரத்தாற் றோன்றிய பூதத்துக்கு உத்தியுத்தராகிற சதாசிவாதி தெய்வமாவது யாண்டையதென் றொழிக. மண்முதற் சிவமீறாகிய முப்பத்தாறு தத்துவங்களுக்கும் அதிதேவதைகள் அணுபட்சமென்றும், அதிஷ்டான அதிஷ்டேயக் குறியாற் சாதாக்கிய தத்துவமளவும் சம்புபட்சமென்று உபசரித்துக் கூறப்படுமென்பதுஞ் சிவாகமத் துணிவாகலின் இது குருமுகமா யறிக. அணுபட்சங்களிற் சங்கற்ப ரூபமாய்ச் சிவசத்தி பதிந்து அதிட்டிக்கு முகத்திற் பஞ்ச கிருத்தியமும் நடப்பதால் அது சிவசத்தி செய்யுங் கிருத்தியமேயாம். 'மடற்கமல நறும்பொகுட்டி லரசிருக்குஞ் செந்துவர்வாய் மயிலே யுன்றன், கடைக்கணருள் பெற்றன்றோ மணிவண்ண னுலகமெலாங் காவல் பூண்டான், படைத்தனன்நான் முகக்கிழவன் பசுங்குழவி மதிமிலைச்சும் பரமன் றானுந், துடைத்தன' னென்றும், 'கரியுரி யாடைக் கடவுளுங் கார்நிற வண்ணங் கொண்ட, அரிபிர மாவு நின்னுசனக்கா' லென்றும் வருமாற்றானு மறிக—ஒடுக்கம் உதித்த அடைவெனஉரைப்பர் உணர்ந்து ளோரே - ஆக மூவகை மாயேயம் முப்பத்தாறும் ஒடுங்குங்காலந் தோன்றின முறையி லொடுங்குமென்று அறிவுடையோராற் கூறப்படும்.

'தத்துவ மெண்மூன் றுஞ்சென் றூன்மதத் துவத்தொ டுங்கு' [சிவஞான சித்தியார், ii, 72] மென்று ஒரு செய்யுளால் ஒட்டிக் கூறினார் வழிநூலாசிரியரும். ஈண்டு மாயேயமலத்திற் கிலக்கணங் கூறப்புகுந்த ஆசிரியர் அதன்குணங் குறிகளெல்லாந் தொகுத்தும் விரித்தும் முன்னர் அவத்தை முகத்தாற் கூறுவது குறித்து ஈண்டுத் தோற்றமொடுக்க மொன்றே கூறி யொழிந்தார். உஎ

இனிக் கன்ம மலத்தினது இலக்கணம் நான்கு செய்யுளாற் றெரித்துணர்த்துவான் றொடங்கினர்.

28. நண்ணியிடும் உருவதனுக் கேதுவாகி
நானாபோ கங்களாய் நாசோற் பத்தி
பண்ணிவரும் ஆதலால் அனாதி யாகிப்
பலவாகி அணுக்கள்தொறும் படர்வ தாகி
எண்ணிவரு மனவாச கன்மத்தா லியற்றும்
இயல்பினதாய் மதிகதமாய் இருபயனும் பாவ
புண்ணியமாய்ப் புலர்காலை மாயை மேவிப்
பொருந்துமிது கன்மமலம் புகலு மாறே. ௪0

**(உரை)** *நண்ணியிடும் உருவதனுக் கேதுவாகி-ஆன்மாக்களுக்குச் சரீரம் வந்து பொருந்துதற்குக் காரணமாய்ச் சுகதுக்க ரூபமாய்ப் பிராரத்தமெனப் பெயர் பெற்று அதிசூக்கும கன்மமாயும்; நாநு போ கங்களாய் - பலவிதமான புசிப்புக்களாகப் பாகப்படுத்தற்குக் காரணமாய்ப் புண்ணிய பாவரூபமாய்ச் சஞ்சிதமெனப் பெயர் பெற்றுச் சூக்குமகன்மமாயும்; நாசோற்பத்தி பண்ணி - பிராரத்தம் புசித்துத் துலையுமிடத்தே உடன் தோற்றமாய் இதாகித ரூபமாய் ஆகாமியமெனப் பெயர் பெற்றுத் தூலகன்மமாகியும்; வருமாதலால் - இவ்வாறு தூல சூக்கும பரமாய் ஆகாமியம் சஞ்சிதம் பிராரத்தமென மூவகையாய்ப் பிரவாகாநாதியாய் வருதலால்; அநாதியாகி - மூல மலத்தின் காரியமாய் ஆணவமலம்போல் அநாதிபந்தமாய்; அற்றாகலி னன்றே 'நெல்லிற் குமியு நிகழ்செம்பி னிற்களிம்பும்'போல 'மல கன்ம மன்றுளவா' [சிவஞானபோதம், ii, 7] மென்றார் முதனூலா சிரியரும். 'கன்மமு மூலங் காட்டிக் காமிய மலமாய் நிற்கு' [சிவஞான சித்தியார், ii, 39] மென்றார் வழிநூலாசிரியரும் - பலவாகி அணுக் கள் தொறும் படர்வ தாகி-இனம்பற்றி மும்மலத்தி லொன்றா யெண் ணப்பட்டும் அநேக ஆன்மாக்களிடத்தும் தனித்தனி அனேக பேத மாய்ப் பந்தப்படுங் குணத்திரவியமாகியும்; எண்ணிவரு மனவாச கன்மத்தா லியற்றும் இயல்பினதாய்-கன்மநாசத்தைக் குறித்து வந்த மனவாக்குக் காயங்களால் மேன்மேலும் ஈட்டப்படுஞ் சுபாவத்தை யுடையதாய்; அற்றாகலினன்றே 'நில்லாமை முற்றுவித்து நீக்கவும்' 'தொல்லாய கன்மமெல்லாந்' துலைக்கவும் 'எல்லாமாய்த் தத்துவங்க ளிசைந்த' [சிவஞானசித்தியார், ii, 79] தென்றார் வழிநூலாசிரிய ரும்—மதிகதமாய் - பிரளயகாலமட்டும் புத்திதாரகமாயிருந்து; இரு பயனும் பாவபுண்ணியமாய் - மூவித கன்மங்களும் ஒன்றாய்ச் சுகதுக்க விளைவு செய்யும் புண்ணிய பாவமாகிய சஞ்சிதமே சொரூபமாய்; புலர்காலை மாயை மேவிப் பொருந்தும் - குணாந்தமான மத்திமப் பிரளைய காலத்தில் மாயை தாரகமாகப் பொருந்தியுமிருக்கும்; இது கன்மமலம் புகலு மாறே - இவ்வாறு காரணத்தில் ஏழிலக்கணமுங் காரியமுகத்திற் றிரிவிதமாயு மிருப்பது கன்மமலம்.*

புலர்கால மென்பதற்குச் சிருட்டி காலமெனப் பொருள் கூறு வாரு முளர். சிருட்டிகாலமெல்லாம் புத்திதாரகமாவதும், புத்திதத் துவங் காரணத்தி லொடுங்குங்கால் அதனோடுங்கூடப் பிரளையகாலத்து

மாயையை மேவுதலுமே கன்மத்திற் கிலக்கணமன்றி வேறில்லை யென்பது சிவாகமத்துணிவாகலின் இது குருமுகமாயறிக. 'புலர்ந்து போன காலங்கள் புகுந்துநின்ற திட'' [திருவாசகம், பிரார்த்தனைப் பத்து, 1] றென்று புலர்தலைக் கழிதல்மே லேற்றிக் கூறினர் வாதவூரடிகளும். உ அ

இனிக் கன்மங்கள் பரிணமிப்பது இத்துணைவித மென்றும் அது யாகப்படுமாறும் அது சேறற்கு வாயிலும் அது புசிக்குமாறுங் கூறு முகத்தால் பிராரத்த கன்மத்தை வலியுறுத்தற் கெழுந்தது வருஞ் செய்யுளென்பது.

29\. கன்மநெறி திரிவிதம்நற் சாதிஆயுப் போகக்
  கடனெதென வருமூன்றும் உயிரொன்றிற் கலத்தல்
தொன்மையது மூல்லதுண வாகா தானும்
  தொடங்கடைவின் அடையாதே தோன்று மாறித்
தன்மைதரு தெய்விகமுற் பௌதிகம்ஆன் மிகமாம்
  தகையிலுறும் அசேதனசே தனத்தாலும் சாரும்
நன்மையொடு தீமைதரு சேதனனுக் கிவண்ஊண்
  நாடில்அதன் ஊழ்வினையாய் நணுகுந் தானே. கக

**(உரை)** கன்மநெறி திரிவிதம்-'நண்ணியிடும் உருவதனுக் கேதுவாகி'ய பிராரத்தஞ் சுகதுக்கரூபமாயிருக்கினும் அது பரிணமிக்கும் ஊகந் தனித்தனி மூன்று விதமாயிருக்கும்; அது எதென்னில் - நற்சாதியாயுப் போகக் கடனெதென வரும் - சுகமானது நல்லசாதி தீர்க்காயுள் வெகு போகமென மூவிதமாகவுந் துக்கமானது தீய சாதி அற்பாயுள் அற்ப போகமென மூவிதமாகவும் வரும்; மூன்றும் உயிரொன்றிற் கலத்தல் தொன்மை - இவ்வாறு இருவகை மூவிதமும் அனுதியே உயிரோ டொன்று யிருந்தும் நல்லதிருக்கத் தீயது முன் வரவுந் தீய திருக்க நல்லது முன் வரவுமாவது அவர்கள் ஆர்ச்சித்த முறைமையோ வெனில்; அது மூல்லதுண . . . மாறி - கன்மங்கள் வன்மை மென்மையால் அவை பாகப்பட்டமுறையாற் புசித்துத் தொலைவ தொழிந்து தோன்றிய முறையிற் புசிக்க வாரா அவை புசிக்க வருந் துவாரமேதென்னில்; தன்மைதரு . . . தகையிலுறும்-தெய்விகத்தினுலும் ஆன்மாக்களாலுஞ் சடத்தினுலுமாக மூவிதப்படும், அவர்கள் தன்மைக்குத் தக்கது நடத்துந் தெய்விகமும் ஏனையதுபோல்

முன்னிலைக்கு வருமோவெனில்; அசேதன சேதனத்தாலுஞ் சாரும்- சடசித்தென் றிரண்டுமே முன்னிலையாகத் தெய்விகஞ் சார்ந்தே கூட்டுவிக்கும் ; இவண் ஊண் நாடில் - கன்மம் புசித்தலாவது சுக துக்க மிரண்டு மறியதே யாகலின் இறைவனறிந்து சடசித்து முன் னிலையாய்க் கூட்டுவிக்கவும் அவனுக்கின்றி யதன்பின் பறியும் உயி ருக்கே புசிப்பென்று கூறுவதேதென்னில்; நன்மையொடு தீமைதரு சேதனனுக்கு - உயிர்செய்யும் இதாகிதங்களை இயல்பாக அறிந்து அவற்றிற்கேற்ற சுகதுக்கத்தைக் கூட்டுவிக்கிற முதல்வன் அறியும் போது விருப்பு வெறுப்பாக ஒன்றையும் அறியான், ஆகையால் அவ னுக்கு அது புசிப்பாவதில்லை ; அதன் ஊழ்வினையாய் நணுகுந்தானே- ஆன்மா அறியுமிடத்து யாவையும் விருப்பு வெறுப்பாகவே அறிவா னாகலின் அவ்விருப்பு வெறுப்பே கன்ம மலமென்று பெயராய்ச் சஞ் சித பிராரத்தாகாமிய மூன்றிற்குங் காரணமாம்.

பிராரத்த கன்மத்தை வலியுறுத்து முகத்தாற் றிரிவித கன்மங் கட்கும் மூலமாகிய கன்மமல மிதுவெனக் கூறியது நுண்ணுணர்வினுல் அறிக. நன்மை தீமைகளை இயல்பாகவும் அறிந்து அறிவிக்கும்பொருட் டாகவும் அறிந்து இவனறியும் பொருட்டாகவும் அறிகிற முதல்வ னது சுத்தாத்துவித நயத்தை விசாரிக்கில் 'நன்மையொடு தீமைதரு சேதன'னென்னுஞ் சொல்லே பதியை நோக்கின பொருளை மேற் கொண்டுநிற்பதன்றிப் பசுவை நோக்கலின்மையின் அச்சொற்குப் பசுவின் மேலேற்றிப் பொருள்கோடல் யாண்டையதென் றொழிக.

இனி ஆகாமிய கன்மத்தை வலியுறுத்து முகத்தாற் கன்மமல மிதுவென்பதும் அதன் காரியமாகிய திரிவித கன்மங்களது தோற்ற முற் பிற்பாடுகளுங் கூறுவான் றொடங்கினர்.

30. மேலைக்கு வருவினைய தென்னில் அங்கண்
விருப்புவெறுப் பெனஅறிஅவ் விளைவும் எல்லாம்
மூலத்த வினைப்பயில்வாம் என்னின் நாம்என்
முற்றிஅதன் பயன்உனக்கு முளைக்கு மென்பர்
ஞாலத்து வினைகள்இரு திறனுகும் புந்தி
நண்ணுத வினைநணுகும் வினையெனவொன் றிரண்டாம்
ஏலத்தான் இதம்அகித மாம்இதனுல் வழுவா(து)
எய்திடும் புண்ணியபா வங்க ளென்றே.          கஉ

**(உரை)** மேலைக்கு வருவினை எதென்னில் - பாகப்பட்ட கன்மம் புசித்துத் தொலைந்தால் அதன்மேலும் வினையுண்டாவ தேதென்னில்; அங்கண் விருப்புவெறுப் பெனஅறி - மூலகன்மமாகிய விருப்பு வெறுப்புத் தீராதிருப்பதால் அந்தப் பிராரத்தம் புசிக்கச்சே ஆகாமிய கன்மமுளவாம்; அவ் வினைவும் எல்லாம் மூலத்த வினைப்பயில்வாம் என்னில் நாம்என் - திரிவித கன்மங்கட்கும் மூலமாய் விருப்பு வெறுப்பென்ப தொரு கன்மமல முளதாகில் யாதெனதெனப்படும் ஆணவமலமே கன்மமலத்தைச் செலுத்துமென்ப தேதென்னில்; முற்றி அதன் பயன் உனக்கு மூளைக்கு மென்பர்-ஆணவமலமே விருப்பு வெறுப்பைச் செலுத்த அதுகாரணமாய்த் திரிவித கன்மமு முளவாகு மென் றறிவுடையோரா றகூறப்படும்; அற்றாகலினன்றே 'பிடித்தானது கன்மத்திலே விருப்பத்தைக் கொடுத்தது' என்றார் எமதாசிரியரும்—ஞாலத்து வினைகள்இரு திறனாகும்-ஆன்மாக்கள் ஆர்ச்சிக்கப் படும் ஆகாமியம் இதமும் அகிதமு மென் றிருவிதமாம்; புந்தி நண்ணாத வினைநணுகும் வினையெனவொன் றிரண்டாம் - அவ்விரண்டுந் தனித்தனி புத்திபூருவம், அபுத்திபூருவமென் றிரண்டாக விரிந்து நால் வகைப்படும்; திரிவித கன்மத்தினும் முந்தியது யாதென்னில்—ஏலத்தான் இதம்அகித மாம் - கன்மமலமாகிய விருப்பு வெறுப்பினின்றும் முதற்கண் இதாகிதங்களாகிய ஆகாமியமுளவாம்; இதனால் வழுவாதெய்தியிடும் புண்ணியபா வங்க ளென்றே - அவ்வாகாமியம் இவனை விட்டு நீங்காமற் புண்ணியபாவங்களாகிய சஞ்சிதமாய்ச் சேரும்.

திரிவித கன்மத்தி லிரண்டுந் தோன்று முறைை சொல்லவே சுக துக்கமாகிய பிராரத்தம் அவ்விரண்டுக்கும் பின்தோன்று மென்பது தானே போதருதலின் அது கூறாதொழிந்தார் நூலாசிரியர். ௩௦

இனி, சஞ்சிதகன்மத்தை வலியுறுத்து முகத்தால் அவ்வினையின் தோற்றமும் அஃதொடுங்குமாறும் அதற்குபாயமுங் கூறுதற் கெழுந்தது வருஞ் செய்யுளென்பது.

31. உற்றதொழில் நினைவுரையின் இருவினையும் உளவாம்
ஒன்றொன்றால் அழியாதாண் ஒழியா தான்னின்
மற்றவற்றின் ஒருவினைக்கோர் வினையால் வீடு
வைதிகசை வம்பகரும் மரபின் ஆற்றப்

பற்றியது கழியும்இது விலையால் ஏற்கும்
பான்மையுமாம் பண்ணுது பலிக்கும் முன்னம்
சொற்றருநூல் வழியின்வரின் மிகுதி சோரும்
சோராதங் கதுமேலைத் தொடர்ச்சி யாமே. கரு

(உரை) உற்றதொழில் . . . உளவாம் - கன்ம நாசத்தைக் குறித்து உயிர்களிடத்து முதல்வனுற் பொருத்தப் பட்ட மனவாக்குக் காயங்களினுற் பிராரத்தம் புசிக்கச்சே எழா நின்ற இதாகிதமே புண்ணிய பாவமாகத் திரண்டு சஞ்சித கன்ம மெனப் பெயராம்; ஒன்றொன்றால் அழியாது - ஒரு புண்ணியத்தி னுலே ஒரு பாவம் அழியாது; ஊண் ஒழியாது - புண்ணியத்துக்குச் சுகமும் பாவத்துக்குத் துக்கமும் பிராரத்தமாகப் பாகப்பட்டுப் புசித்தாலொழிந்து தீராது; உன்னின் - அவ்வாறு சுகதுக்கமாகப் பாகப்படுதற்கு முன்னமே அந்தப் புண்ணிய பாவத்தை நீக்குதற்கு உபாயம் விசாரிக்கில்; மற்றவற்றின் - புண்ணிய பாவமாகிய இரண் டில்; ஒரு வினைக்கோர் வினையால் விடும் - ஒரு சஞ்சித பாவத்துக்கு ஓர் ஆகாமிய இதத்தால் விடுதல் பிறக்குமாறு; வைதிக - வேதத் தும்; சைவம் - ஆகமத்தும்; பகரும் - இவ்விரண்டினும் அதற்குப் பரிகாரவிதிமுதல்வனுற் கூறப்படும்; மரபின் ஆற்றப் பற்றியது கழியும்- அந்த முறையை விசாரித்து இன்ன பாவத்துக்கு இன்ன பரிகாரஞ் செய்யக்கடவோ மென்று சங்கற்பித்துக் கொண்டு செய்தால் அந்தக் கன்மந் தீரும்; இது விலையால் ஏற்கும் பான்மையுமாம் - அது செய் தற்கு யோக்கிய னல்லாவிடிற் செய்வோரிடத்துத் திரவியங் கொடுத் துக்கொள்ளினுந் தான் செய்ததுபோலாம்; பண்ணுதும் பலிக்கும் - தன்னை யறியாமற் பிறாரேனுந் தன்னைக் குறித்தோரிடங்களிற் செய்தாலும் அதுவுந் தான் செய்ததுபோலாம்; இனி இது முழுவதும் நீங்குமுறை எப்படியென்னில்—முன்னஞ் சொற்றரு நூல்வழியின் - சங்கரனையடையும் நன்மார்க்கம் நூல் [சிவஞானசித்தியார், viii, 22] என்றார் வழிநூலாசிரியருமாகலின், இறைவன் கூறிய மூலாகமப்படி சரியை கிரியாயோக முற்றுதலான விடத்து; வரின் - முதல்வனே ஆசாரியராகத் திருமேனி கொண்டுவந்தால்; மிகுதி சோரும் - அனுதி மறைப்பாகிய மூலமலமும் அதுசார்பாய்த் தோன்றும் ஆகாமிய வினை யும் முதல்வனது ஞான சத்தியினுற் றீரும்; அது பாகம் வரும்படி சுக

துக்க விளைவுக் கேதுவாகிய சஞ்சித வினையும் அதற்காதாரமாகிய மாயை மாயேயமும் அத்துவா சுத்தியோடொன்றாய் முதல்வனது கிரியாசத்தியா னீங்கற்பாலதேயாம். அற்றாகலினன்றே 'தோன்றிநுக ராதவகை முற்செய் கன்மத் துகளறுத்திங் கத்துவாத் துடக்கறவே சோதித்' [சிவஞானசித்தியார், viii, 10] தென்றார் வழிநூலாசிரிய ரும்—அங்குச் சோராது - சத்திநிபாதம் பிறந்து குருவருள் பதியாத விடத்துச் சஞ்சித கன்மம் நீங்காது ; அது - அந்த வினைக்கீடாகிய செனனமரண துன்பம் ; மேலைத் தொடர்ச்சியாமே - மேன்மேலுந் தொடர்ந்து வரும்.

'முன்னஞ் சொற்றருநூல் வழியின்வரி' னென்றதற்கு இவ்வாறு பொருள் கொள்ளாது, 'வைதிக சைவம் பகரு மரபினுற்ற' வென்ற தற்குச் சொன்ன பொருளையே இதற்கும் பொருளெனக் கூறுவாரு முளர். அது கூறியது கூறுங் குற்றமுமாம். அது தோற்றமொடுக்கஞ் சொல்லி வந்த துறைமுற்றுங் கூறாது இடையே வழுவுதலாற் குன்றக் கூறலுமா மாதலால் நூலாசிரியர் கருத்து அவ்வாறன்றென வுணர்க. இதனாற் சஞ்சிதகன்மத்தை வலியுறுத்து முகத்தாற் றிரிவித கன் மத்திற்குந் தோன்று முறை ஒடுங்கு முறை கூறியவாறு நுண் ணுணர்வா லறிக. ௩க

ஈண்டு நான்கு செய்யுளாற் கன்மமலத்தினது காரண காரிய விலக்கணங் கூறிய ஆசிரியர் இனி ஒரு செய்யுளால் மேற்கூறிப் போந்தவை யெல்லாம் அனுவதித்துக் கொண்டு பாசமாவது இத் துணைப்பகுதி யென்பதூஉம், அதன் ஏற்றுமி லிதுவென்பதூஉந் தொகுத்துக் கூறுவான் தொடங்கினார்.

32. மோகமிக உயிர்கள்தொறும் உடனாய் நிற்கும்
மூலஆ ணவம்ஒன்று முயங்கி நின்று
பாகமிக உதவுதிரோ தாயி ஒன்று
பகர்மாயை ஒன்றுபடர் கன்ம மொன்று
தேகமுறு கரணமொடு புவன போகச்
செயலாரு மாமாயைத் திரட்சி ஒன்றென்(று)
ஆகமலம் ஐந்தென்பர் ஐந்தும் மாறு(து)
அருளென்ப தரிதென்பர் அறிந்து ளோரே. கச

(உரை) மோகமிக . . . ஆ ணவமொன்று - ஆன்மாக்க டோறும் அனுதிசையோகமாய் அவாவே சொரூபமாய் நிற்கும்

மூலமலத்தின் காரியமாகி மிகுதியும் மயக்கத்தைச் செய்யும் ஆணவ மல மொன்று ; முயங்கிநின்று பாகமிக உதவுதிரோ தாயி ஒன்று - மும்மலத்துக்கும் அனுகூல சத்துருவாய் நின்று சேட்டிப்பித்துப் பாகப்படுத்துஞ் சிவசத்தியை மலமென் றுபசரித்துக் கூறப் படுந் திரோதாயி யொன்று ; பகர்மாயை ஒன்று - உருவாதி சது விதமாய்ப் பந்தஞ் செய்யுமென்று மேலே கூறப்பட்ட மாயைமல மொன்று ; படர் கன்ம மொன்று - உயிர்தோறும் விருப்பு வெறுப்பு ரூபமாய்ப் பொருந்தப்பட்ட கன்மமல மொன்று ; தேகமுறு கரண மொடு - உயிர்தோறும் தனித்தனி வேறு வேறு முப்பத்தாறாய்த் தூலசூக்குமமென் றிருவகைத் தனுவாகியும் உட்கரணம் புறக்கரண மென் றிருவித கரணமாகியும் ; புவன போக - ஏகநிலையாக முப்பத்தாறு விதமாய் நிலைபெற்றுப் புவனமாகியும் போகமாகியும் ; செய லாரு மாமாயைத் திரட்சி யொன்று-இவ்வாறு அசாதாரணம் சாதா ரணமென் றிருவிதமாய் அனேகங் கூட்டரவாய் விரிந்து தொழிற் படும் பெரிய மாயேயமல மொன்று ; ஆகமலம் ஐந்தென்பர் - இவ் வாறு ஐந்துவித பாசமென்று சொல்லப்படும் ; அற்றாகலினன்றே 'இம்மல மூன்றி னோடு மிருமல மிசைப்ப னின்னு' [சிவஞானசித்தியார், ii, 86] மென் றெடுத்துக்கொண்டு மாயையின் காரியத்தை மாயேயமல மென்றார் வழிநூலாசிரியரும். ஆகமங்களிற் சாமானிய மாய் ஓரோரிடங்களில் ஓரியைபுபற்றிக் கூறும் வசனங்களைப்பற்றி மாயேய மலத்தை மாயையி னடக்கி வயிந்தவ மோர் மலமெனக் கூறுவாரு முளர். வயிந்தவமாவது அசுத்த மாயைபோலப் பரிணமிப்பதின்றிப் படங்குடிலாவதுபோல விரிந்தொடுங்குவதாகலானும் அது மாயேயமலம் முப்பத்தாறு விதமெனக் கூறுவதில் ஐந்து வகையாய் அதனோடு சேர்ந்துவருமாகலானுஞ் சுத்த மாயையில் மலரகிதனுக்கன்றி மலசகிதனுக்குத் தொழிலின்மையானும் வழிநூலாசிரியர்க்குத் திருநாமஞ் சகலாகம பண்டிதராகையானும் அந்நூலைப் பகைத்துப் பொருள்கோடல் மிகையாமென் றொழிக. அந்நூற்குச் சித்தாந்த சிரோமணியாகிய நமது சிவஞானச் செல்வராற் செய்யப்படும் பொழிப்புரையில் அது வரையறுத் துரைசெய்ததுங் காண்க. அற்றேற் காரண காரியங்கட்குத் தம்முட் பேத மின்மையின் மாயேய மலமு மாயையினடங்கவுமாகுமேயென்னில், மும்மலங்களினு மியைந்துநின் றேவுஞ் சிவசத்தி பராசத்தியி னடங்குமாயினுங்

தொழில் வேற்றுமைபற்றி வேறுவைத் தெண்ணப்படுவதுபோல அவைகட்குந் தொழில் வேற்றுமைபற்றி வேறுவைத் தெண்ணுவதாம். மாயைக்கும் மாயேயங்கட்குந் தம்முட் டொழில்வேற்றுமை யாதோவெனில் மாயாமலம் பந்தஞ் செய்தலும் மாயேயமலம் ஆன்மாவி னறிவை ஏகதேசப்படுத்தலுமாகலின் இது வேற்றுமையே யாம்—ஐந்து . . . அறிந்துளோரே - இவ்வைந்தின் தொழிலாகிய போத்திருத்துவம் போகம் பந்தம் சுட்டுணர்வு இந்நால்வகையுஞ் செலுத்துதல் ஆகவைந்து தொழிலும் மாறினாலன்றி ஆன்மா அருளைப் பொருந்துவது அரிதென்று அறிவுடையோராற் கூறப்படும். கூஉ

'பலகலை' முதல் 'மோக'மீறாய் இருபது செய்யுளாற் பதிபசுபாசங்கட்கு இலக்கணங்கூறிப் பசுலட்சணங் கூறு முகத்தாற் கேவல சகல சுத்தங்கட்குத் தொகை கூறிப் போந்த ஆசிரியர், இனிப் பதினேழு செய்யுளால் அந்தக் கேவல சகலங்கட்கு வகையும் விரிவுஞ் சுத்தத்திற்கு வகையுங் கூறுமுகத்தாற் பதிபசுபாசங்களதுண்மை வலியுறுத்துவான் தொடங்கி முதற்கண் நான்கு செய்யுளாற் கேவலத்தியல்பு கூறுமுகத்தால் ஆணவமலத்தின துண்மை தடைவிடைகளால் வலியுறுத்துவான் தொடங்கினர்.

## அவத்தை யியல்பு

33. ஓங்கிவரும் பலஉயிர்கள் மூன்றவத்தை பற்றி
உற்றிடுங்கே வலசகல சுத்தமென உணர்க
ஈங்குவரும் கலாதியொடு குறிஉருவம் ஒன்றும்
இன்றிமல மன்றியொன்று மில்லையெனும் இயல்பாய்
ஆங்கறிவை அறிவரியன் அறிகருவி அணையா
ஆதலினால் இருள்மருவும் அலர்விழிபோல் அதுவாய்
நீங்கும்வகை யின்றிநித்த வியாபகமாய் அங்கண்
நிற்பதுகே வலமென்று நிகழ்த்துநூலே. கூஈ

(உரை) அந்வயம். பலஉயிர்கள் மூன்றவத்தை பற்றி - சர்வான்மாக்களும் மூன்றவத்தையைப் பொருந்தி ; உற்றிடும்-அது சார்வாகப் பாச நீக்கத்தைப் பொருந்தும் ; அவத்தை சார்வாகப் பாசநீக்கமுறுவதெக்காரணத்தா லென்னில்—ஓங்கிவரும் ஆதலினால் - அவத்தைப்

படவே அறிவு விளக்க மேற்கொள்ளுமாகையினாலே ; மூன்றவத்தை யாதோவென்னில்—கேவல சகல சுத்தமென வுணர்க - கேவலமென்றுஞ் சகலமென்றுஞ் சுத்தமென்றுங் கூறப்படும் ; கேவலாவத்தையினும் பாச நீங்குமோவெனில்—ஈங்குவரும் - கேவலத்தில் அதீதத்தினின்றே அஞ்சவத்தைப்படினுஞ் சகலாவத்தையினுஞ் சுத்தாவத்தையினுமே பாச நீக்கமுறுமாயினும் ஆண்டு அதிசூக்கும பஞ்சகிருத்திய வுண்மையிற் பாசநீக்க முண்டென்றே கூறப்படும். அற்றாகலினன்றே 'கேவல மலத்தி னுண்மை' [அம்பலவாண தேசிகர் தசகாரியம், 7] யென்றார் எமது ஆசிரியரும். அதனியல் ஏதோவெனில்—இன்றி என்பதனை யாண்டுங் கூட்டுக.—கலாதியொடு இன்றி - கலாதியாகிய போக காண்டங்களோடு செயற்கை யில்லாதவனாய் ; குறியின்றி - இச்சையில்லாதவனாய் ; உருவமின்றி - தேகமில்லாதவனாய் ; ஒன்றுமின்றி - ஒன்றினுஞ் சுதந்தரமின்மையிற் கர்த்தா அல்லனாய் ; மல மன்றியொன்று மில்லையெனு மியல்பாய் - மலமேயா யிருத்தலாற் செயல்களில்லாதவனாய் ; ஆங்கறிவை அறிவரியன் - அவ்விடத்துந் தன்னைவிட்டு நீங்காது உடனாயிருக்கு மறிவை யறிதற்கு ஞானமில்லாதவனாய் ; அறிகருவி அணையா - குணாதி போக்கிய காண்டங்களோடுஞ் செயற்கை யில்லாதவனாய் ; அற்றாகலி னன்றே 'அராகாதி குணங்களோடுஞ், செறிவில' [சிவஞான சித்தியார், iv, 38] னென்றார் வழிநூ லாசிரியரும் ; இருண்மருவும் . . . வகையின்றி - மலத்தைவிட்டு நீங்குதற்கோர் ஏதுவுமின்றி மலமேயாய் நிற்றலால் இருளில் அலர விழித்திட்ட விழி பதார்த்தமொன்றையு மறியாத முறைமைபோலப் போகத்திற் கொள்கையில்லாதவனாய் ; நித்த - தோற்றக் கேடுக ளில்லாதவனாய் ; வியாபகமாய் - ஏகதேசத தன்மை யில்லாதவனாய் ; அங்கண் . . . நூலே - இங்ஙன மின்மைகூறிய பத்துக் காரியமு மில்லாதவனாய் இருண்மலத்தி லழுந்தி நிற்பது கேவலாவத்தையென்று சிவாகமங்களிற் கூறப்படும்.

ஈண்டுத் தோற்றக் கேடுகளென்றது அறிதற்றொழிலின்மேற்று. ஏகதேச மென்றது சுட்டுணர்வின்மேற்று. குறியின்றி யென்பதற்கிச்சை யில்லாதவனெனப் பொருள்கூறியது, இச்சையைத் தொழிற்படுத்துங் கலாதியோடு சார்வாய் வைத்தலானும், வழிநூலில் 'அறிவில னமூர்த்த' [சிவஞான சித்தியார், iv, 38] னென்னுஞ் செய்யுளிற் குறியிலனென்பதற்கு எமது சிவஞானச் செல்வர் பொருள்

கூறிய வாற்றானுமென் றறிக. இப்பத்துக் காரியமு மில்லாத இடங் கேவலம், அவையுண்டான இடஞ் சகலம், உண்டானவை நீங்கின இடஞ் சுத்த மென்றறிக. அற்றாகலினன்றே 'அறிவில னமூர்த்த' னென்றெடுத்துப் பத்துக் காரியமு மின்மை கூறினார் வழிநூ லாசிரியரும். கலாதி, குணாதி, இச்சை, ஞானம், கிரியை, உருவம், முதன்மை, போகப்பற்று, அறிதற் றொழிலுண்டாத லொடுங்குதல், சுட்டுணர்வு ஆகப் பத்துக் காரியமுமில்லாம லிருப்பதே கேவலம். ஈண்டுக் கூறப்படுங் கேவலம் அனாதி கேவலமாகலிற் 'கேவ லந்தன் னுண்மை' [சிவஞான சித்தியார், iv, 37] யெனக் கூறிய கேவலம் இதுவென மலையற்க. கேவலமாவது, அனாதிகேவலம், காரண கேவலம், காரியகேவலம், நித்தியகேவலம், பிரளயகேவல மென்றைவகைப் படும். இதில் முன்னையது மலத்தினுண்மை; பின்னையது அதிசூக்கும பஞ்ச கிருத்தியவுண்மை; மூன்றாவது சாக்கிரத்தினின் றைந் தவத்தைப் படுமா றிகலிவருங் கேவலத்துண்மை; நான்காவது அதீதத்தினின்றே ஐந்தவத்தைப்படுந் தன்னுண்மை; ஐந்தாவது பிரளயகாலத்தில் மாயையி லொடுங்குமுண்மை யென்றிவ்வாறு கேவல இலக்கணங்களைப் பிணங்காது மலைவறக் கொள்க. இனிச் சகலத்தினுஞ் சுத்தத்தினும் ஆண்டாண்டுப் படுங் கேவலங்களி னுண்மைகள் ஈண்டு விரிப்பிற் பெருகுமாகலின் அவற்றைக் குருமுகமா யறிக. ௩௩

பிரபஞ்சத்திற்கு வேறாக இறைவனில்லை யென்றும், உயிர்களில்லையென்றும், கன்மமில்லையென்றும், மாயையில்லை யென்றுஞ் சாதித்துத் தடைவிடைகளால் ஆண்டாண்டு வலியுறுத்திய ஆசிரியர் ஆணவமலத்தை அவ்வாறு தடைவிடைகளாற் சாதியாதொழிந்தமை யின் ஆணவமல மென்பதொரு பொருளுண்டோ இல்லையோ வென்னு மையத்தின்கண் அயிக்கவாதசைவர் மதம்பற்றி நிகழும் ஆசங்கை நீங்குமுகத்தால் ஆணவமலத்தினுண்மை மூன்று செய்யுளாற் சாதித்துக் கேவலாவத்தையை வலியுறுத்துவான் றொடங்கினார்.

34. இன்மைமலம் மாயைகன்மம் என்றிரண்டே இறைதான்
 இலங்குபல உயிர்களும்முன் புரிந்தஇரு வினையின்
தன்மைகளால் எவர்களுக்குந் தனுகரண புவனம்
 தந்திடும்இங் கிதனாலே இருபயனும் சார்ந்து

கன்மமெலாம் நேராக நேராதல் மருவக்
கடவுள்அரு ளால்எவையுங் கழித்திடுவன் அதனாற்
பின்மலமா னவைஅணுகா பெருகொளிமுன் புளதே
பெற்றிடுமென் றித்திறமென் பேசு மாறே. கசு

**(உரை)** இன்மைமலம் - ஆணவமலமென ஒரு பொருளுண் டென்பதில்லை ; மாயைகன்மம் என்றிரண்டே - மாயாமலம் கன்ம மலம் என்றிரண்டுமே யுள்ளன; இறைதான்-கர்த்தாத்தான் இயல்பாக அறிந்து ; இலங்குபல வுயிர்களும் - அறிவுள்ளனவாகிய சர்வான்மாக் களும் ; முன் புரிந்தஇரு வினையின் தன்மைகளா லெவர்களுக்குந் தனுகரண புவனம் தந்திடும் - முன்னே ஆர்ச்சித்த வினைக்குப் பின் னாலே தனுகரண புவனமூன்றுங் கொடுக்கும் ; இங்கிதனாலே யிரு பயனுஞ் சார்ந்து - அந்தத் தனுகரண புவனத்துவாரமாக வினைக் கீடாகிய சுகதுக்க மிரண்டும் பொருந்தும் ; கன்மமெலா நேராக-இவ் வாறு புசித்து வரவே கன்மபரிபாகம் பிறந்து ; நேராதல் மருவ - சத்தினிபாதம் பதிந்தவிடத்து ; கடவுளரு ளாலெவையுங் கழித்திடு வன் - முதல்வன் தனது திருவருளினாலே மாயை கன்மங்களையெல் லாம் நீக்குவிப்பன் ; அதனாற் பின்மலமா னவைஅணுகா - ஆதலால் முன்புபோலத் திரும்ப மாயை கன்மங்கள் வந்து பொருந்தா ; அவை பொருந்தா தொழியவே—பெருகொளிமுன் புளதே பெற்றிடு மென்று-அணுதியே தனக்குள்ளபேரறிவு பிரகாசித்து அந்த அறிவிலே கலந்துவிடுமென்று பெரிய அயிக்கவாத சைவாகமங் கூறியிருக்கவும்; இத்திறமென் பேசு மாறே - அவ்வாறின்றி யதற்கு வேறா யொரு மலமும் அதனால் ஓர் அவத்தையு முண்டெடன்பதற்கு ஏது காரணம்? எனவே, அயிக்கவாத சைவர் கூறியதி விழுக்கென்னை யென்பது கருத்து. ௩௪

இனி அயிக்கவாத சைவர் கூற்றிற் கிழுக்குண்மை கூறுமுகத் தால் ஆணவமலத்தின துண்மை சாதித்துக் கேவலாவத்தையை வலி யுறுத்தற் கெழுந்தது வருஞ் செய்யுளென்பது.

35. மாயைமுத லெனவினையின் பான்மைமுத லெனவே
மன்னுபனை விதைமரபின் மயங்கும்மலம் சுத்தற்(கு)
எயுநெறி யென்கொல்அதன் இயல்பாயின் முத்தி
என்பதென்மற் றிவைநிற்க இருங்கலாதி உணர்வாய்

மேயபின்நற் றன்னுருவம் விளங்காமை விளக்கும் [ள்
மிகும்உலகந் தனில்என்னில் இவைவிடுங்கால் உணர்வு
தோயுநெறி இலதாதல் அறியாமை யெனநீ
சொல்லியது மலமென்பர் துணிந்துளோரே. கஎ

(உரை) அந்வயம். மாயைமுத . . . முதலெனவே - இரண்டு மலமே யுள்ளனவென்போரிடத்தில் மாயை முந்தினதோ கன்மம் முந்தினதோவென்று ஒருவன் கேட்கப் புகுமாயின் ; பனைவிதை மாபின் மயங்கும் - பனை முந்தினதென்றும் அதன் விதை முந்தினதென்றுங் கூற அறியாது மயங்கும் முறைபோலாகு மாகையால் இவ்விரண்டுக்குங் காரணமாக மலமென ஒரு பொருளுண்டென்றே கூறவேண்டிவரும் ; அது நிற்க—மன்னுஞ் சுத்தற்கும் மலம் ஏயும்நெறி யென்கொல் - முன்பே பேறறிவுடையனு யிருக்குஞ் சுத்தனை இந்த மலங்கள் வந்து பொருந்தக் காரணம் ஏதென்னில்; அதனியல்பாயின்-அது சுத்தனிடத்திலே வந்து பொருந்துவதே இயல்பென்றால் ; முத்தி யென்பதென் - அப்போது ஒருவரும் மோட்சமடைவார்களென்பதில்லை; அது மீண்டும்மீண்டும் வந்து பொருந்துமாகையால் இவ்விரண்டு மலத்திற்கும் வேறாய் அனாதி பந்தமாய் ஒருமல முண்டென்றே கூறவேண்டிவரும்—மற்றிவை நிற்க - இந்த ஏதுவும் நிற்க ; இருங்கலாதியுணர்வாய் மேயபின் - கலையாதி தத்துவங்கள் இச்சா ஞானக்கிரியைகளை விளக்கி அறிவைக் கொடுக்குமிடத்து ; நற்றன்னுருவம் விளங்காமை - அப்போது தனக்குள்ள பேரறிவு பிரகாசியாதிருப்பானேன் ; விளக்கும் மிகும்உலகந் தனில்என்னில்-கலையாதிகள் பேரறிவைத் தடைபடுத்திச் சுட்டுணர்வை விளக்குமென்னில் ; இவைவிடுங்கால் உணர்வுள் தோயுநெறி இலதாதல் - கலையாதி தத்துவங்கள் நீங்கினவிடத்து ஒன்றையு மறியாதிருப்பானேன் ; அறியாமை - அது அறியாமையென்று சொல்லப்படும் ; என நீ சொல்லியது மலமென்பர் துணிந்துளோரே-நீ அறியாமையென்று சொன்னதுண்டே அதுவே ஆணவ மலமென்றும் அதனுண்மையே கேவலாவத்தையென்றுஞ் சிவாகமத்துணி வுணர்ந்தோராற் கூறப்படும்.

இங்ஙனம் அனுமானப் பிரமாணத்தால் இரண்டு விதமாகவும், அனுபவப் பிரமாணத்தால் ஒருவிதமாகவுங் கூறி, ஆக மூன்று விதத்தாலும் அயிக்கவாதசைவர் கூற்றிற் கிழுக்குண்மை கூறுமுகத்தால்

ஆணவ மலத்தினதுண்மை சாதித்து மேல் அது வலியுறுத்தியவாறு நுண்ணுணர்விஞெ லறிக. ௩௫

இனி, ஆணவமலத்திற்குங் கேவலத்திற்குந் தம்முள் வேற்றுமை பெரிது முளதாதல் கூறுமுகத்தால் அம்மலத்தின் ஞெழில் வலிமை கூறி மேல் அது வலியுறுத்துதற் கெழுந்தது வருஞ் செய்யுளென் பது. அங்ஙனம் அறியாமையென்று சொன்னதை மலமென்பதே நியமமாய்க் கொள்ளாது கேவலமே யென்ருலும் அல்லது உயிரின் குணமே யென்ருலும் படும் இழுக்கென்னையெனின்,

36. அந்நியமா னவைஉணர்த்தி அநந்நியமாய் நிறைந்த
அறிவறியா மையினுனும் அருள்நிலவும் காலம்
தன்னில்அவ னேயாவு மாய்நின்ற தொன்மை
தாமுணர்த லானும்உயிர் தானெனவொன் றிலதாய்
மன்னியிடும் மலமாயை கன்மங்கள் மாறி
வந்திடும்இங் கிதுவழுவா தாதலினுல் மனத்தால்
உன்னரிய திருவருளை ஒழியமலம் உளதென்(று)
உணர்வரிதாம் அதனுண்மை தெரிவரிதாம் உனக்கே.

(உரை) அன்னியமா னவைஉணர்த்தி - கேவலத்தில் அறியாமையே சொருபமாயிருந்த ஆன்மாவிற்குச் சகலத்தில் தனக்கன்னியமாயிருக்கிற அறிபதார்த்தத்தைச் சுட்டுணர்வால் விபரீத வுணர்வை விளக்குதலாற் கேவலம் நீங்குதலானும் ; அநந்நியமாய் நிறைந்த அறிவறியா மையினுனும் - அறிவுக்கறிவாய் வியஞ்சகமாய் நின்றறிவித்து இரண்டற நிற்குந் திருவருளை அப்போது அறியவொட்டாமல் மறைத்திருக்கையால் அறியாமை நீங்காமையானுங் கேவலத்திற்கு வேருக மலமுண்டென்றே கொள்ளப்படும்;ஆகில் உயிர்க்குணமென்ன லாமோ வெனில் - அருணிலவும் . . . முணர்தலானும் - உயிர்க்குணமாகில் ஒரு நாளும் நீங்காதிருக்கவேணும் அவ்வாறின்றி 'இருவினைச் செயல்க ளொப்பிலீசன்றன் சத்திதோயக் குருவருள் பெற்' [சிவ ஞான சித்தியார், iv, 40]ற காலத்து அந்த அறியாமை நீங்கித் தன்னி லிரண்டற்ற முதல்வ ' னுலகெலாமாகி வேருய் உடனுமாய் ' [ஷை ii, 1] நின்ற முறைமையை அறிதலானும் உயிர்க்குணத்துக்கு வேருக மலமுண்டென்றே கொள்ளப்படும் ; அவ்வாருய் ஒரு மலம் நின்று செய்யுங் கிரம மேதென்னில்—உயிர் தானெனவொன் றிலதாய்

மன்னியிடும் மலம் - அறிவே சொரூபமான உயிரை மறைத்து உயிரென் றொரு முதலை வேறு காணப்படுமாறின்றி உயிர்க்குணமே போலப் போதத்திலே நிலைபெற்று நிற்குமது மலமெனப்படும்; கேவலத்திற்கும் இந்த மலத்திற்கும் வேற்றுமை யெதெனில்; மாயை கன்மங்கள் மாறி வந்திடும் - கேவலமானது மாயை கன்மங்களாலே நீக்கப்பட்டு மாறிமாறி வரும்; இங்கிது வழுவாது - இந்த மலமானது மாயை கன்மங்களாற் கேவலம் நீங்கின காலத்தும் அந்த மாயை கன்மங்களையுந் தன்னோ டியைத்துக்கொண்டு விபரீத வுணர்வை விளக்கி நிற்பதன்றி நீங்காது; வழிநூலாசிரியரும் 'மாயை கொடு மலமொழிப் பன் முன்னே' [சிவஞானசித்தியார், ii, 52] னென்று வரையறை செய்திருக்கவும் ஈண்டு இவ்வாறு கூறியது எதென்னில் உவர்சாணிகள் புடைவையிலுள்ள அழுக்கொடு சேர்ந்து அதை நீங்குந் தன்மை செய்விப்பதன்றி நீங்கி யொழியாதவாறுபோல மாயை கன்மங்களும் மலத்தொடு கூடி மலமாகவே நின்று அது நீங்குந் தன்மைக்குப் பாகம் வருவித்து அது நீங்குங்கால் அதனோடு தானுங் கூடவே நீங்குமென்றறிக. அற்றாகலினன்றே 'குருவருள் பெற்று ஞான யோகத்தைக் குறுகி முன்னைத், திரிமலமறுத்' [சிவஞானசித்தியார், iv, 40] தென்றார் வழிநூலாசிரியரும்— ஆதலினால் - கேவலம் சகலத்தாலே நீங்கும், இந்த மலம் கேவல சகல மிரண்டினும் பாகப்பட்டுச் சுத்த மொன்றினுமே நீங்கும். இதுவே அவற்றுட் பேதமென்றறிக—மனத்தா லுன்னரிய திருவருளை யொழிய - வாக்கு மனோதீத கோசரமாகிய முதல்வனது திருவருளை உயிர் அறியாதபடி மறைத்ததுமன்றி; மலமுளதென்று உணர்வரிதாம் - மலமென்று ஒரு பொருளுண்டென்று தன்னையுங் காட்டாது; அற்றாகலினன்றே 'இருபொருளுங் காட்டா திது' [திருவருட்பயன், iii, 3] வென்றார் நூலாசிரியரும்—அதனுண்மை தெரிவரிதாமுனக்கே - பசுஞான நீங்கினா லன்றி அந்த மலத்தினுண்மையை அறியக் கூடாது.

இதனாற் கேவலத்துக்கும் மலத்துக்கும் பேதங் கூறுமுகத்தால் உயிர்க் குணத்துக்கு வேறாக மலமுண்டென்னச் சாதித்து அதன் றொழில் வலிமை கூறுவதோடு உடனிகழ்ச்சியாய்க் கேவலத்தியல்பு வலியுறுத்தியவாறு காண்க. ௩௬

இந்நான்கு செய்யுளில் முதற்கண்ணொன்றாற் கேவலத்தின் வகையும் அதன்பின் மூன்றாலும் அதன் விரிவுங் கூறிய ஆசிரியன் இம்

பதினொன்றேகாற் செய்யுளாற் சகலாவத்தையினது வகையும் விரிவுங் கூறுவான் தொடங்கினார். மேலே பசுலட்சணங் கூறும் ' எண்ணரிதாய் நித்தமா ' யென்னுஞ் செய்யுளில் 'இருவினையின் றன்மைகளுக் கீடான வாக்கை, யண்ணலரு ளானண்ணி யவையவரா யதனா லலகி னிகழ் போகங்க ளருந்து மாற்றாற்,புண்ணியபா வம்புரிந்து போக்குவர வுடைத்தாய்ப் புணரு' மெனச் சகலாவத்தையின் தொகை பத்து லட்சணமாய்க் கூறிப் போந்தமையின் ஈண்டு அதற்கு வகையும் விரிவும் இரண்டு விதமாய்க் கூறுவதாம். முதற்கண் வருந் தொகை பத்து லட்சணமாதலிற் கேவலத்தில்லாத பதது லட்சணமு முளனாதல் யாங்ஙனமெனில், ஆக்கை யண்ணலருளால் நண்ணி - தேகமுளனாதல், அவையவராய் - கலையாதி செயற்கை யுளனாதல் குணாதி செயற்கை யுளனாதல், அதனால்-இருவகைத் தத்துவங்களாலும் விளங்கிய இச்சை ஞானங் கிரியை மூன்றுமுளனாதல், அலகினிகழ் போகங்களருந்தும் - போகப் பற்றுளனாதல், ஆற்றாற் புண்ணிய பாவம் புரிந்து - முதன்மை யுளனாதல், போக்குவரவுடைத்தாய் - ஏகதேசத் தன்மை யுளனாதல், புணரும்-அண்டசஞ் சுவேதச முற்பீசஞ் சராயுசமென்னு நான்கில் அஉ லட்சபேதமும் மாறிப்பிறந்து அறிவு வேறுபட்டு அறிதற்றொழில் தோற்றக்கே டுளனாதல் ஆகக் கேவலத்தில் இல்லாத பத்துஞ் சகலத்துண்டாயவாறு ஆண்டுத் தொகை கூறியவற்றுள் அடங்கி விளங்கிய வாறு காண்க. அற்றாகலினன்றே 'உருவினைக்கொண்' டென்று எடுத்துச் 'சென்று திரிதரு' [சிவஞானசித்தியார், iv, 39] மென்று முடித்துப் பத்துக்காரியமும் உண்டாதலே சகலமெனக் கூறினார் வழிநூலாசிரியரும். இந்தப் பத்துவகையும் நீங்குவதே சுத்தமெனக் கொள்க. இனி அதன்வகை வருமாறு :

37. புகலுமலம் ஒழித்தற்குக் கலாதிமுதல் மாயை
பொருந்தியிடும் அரனருளாற் போதம் தீபம்
சகலமெலாம் உடனுய வாறு போலும்
தரும்அருளே மலம்உயிர்கள் சாராமல் மறைக்கும்
இகலிவரும் இவையுணரின் இருள்வெளியாந் தன்மை
எய்தும்இவை தன்செய்தி இலங்கும் விந்துப்
பகர்வரிய உணர்வாகி ஒளியாய் உள்ளப்
பான்மையினல் ஒருநாதம் படருந் தானே. ௧௯

**(உரை)** புகலுமலம் ஒழித்தற்கு - இங்ஙனங் கூறிப் போந்த ஆணவமலத்தை நீக்குதற்கு ; கலாதிமுதல் மாயை பொருந்தியிடும் - கலை முதலிய மாயா தத்துவங்கள் வந்து பொருந்தும் ; சடமாகிய மாயா தத்துவம் பொருந்துவதில் மலம் நீங்கி அறிவு விளங்குமோ வெனில்—அரனருளாற் போதந் தீபம் - சிவசத்தி திரோத ரூபமாய் நின்று செலுத்துவதாற் றீபம் இருளை நீக்குவதுபோல் மலத்தைச் சிறிது நீக்கி ஞானக்கிரியைகளை விளக்கும் ; சகலமெலாம் உடனுய வாறுபோலுந் தரும் - சர்வ விடயங்களையுந் தனது விடயம்போலப் பற்றுமாறு நிகழ்விக்கும்; இந்த ஞானத்தால் அதை விளக்குஞ் சிவசத்தியை யறியலாமோவெனில்—அருளை உயிர்கள் சாராமல் மலம்மறைக்கும் - அந்தச் சிவசத்தியை உயிர்கள் அறியாதபடி பாசமானது அறிவைத் தடைபடுத்தும்; கேவலாவத்தை அப்பொழுதெங்கேயெனில்—இகலிவரும் - சகலப்பட் டறியுமிடத்துங் கேவலமான துயிரறிவைக் கீழேயீர்த்துக்கருவிகளோடு பொருந்தாமற் றடைசெய்து அதனாற் சகலத்தினும் அவத்தைப்பேதம் நிகழ்விக்கும்;[இவையுணரின்-] அதுஎன் போலெனில்—இருள்வெளியாந் தன்மை எய்தும் - இருளானது ஆகாசத்தைப் பந்தித்து நின்றுகொண்டு விளக்கற்றம் பார்த்து மறைப்பது போலாகும் ; இவை தன் செய்தி - இது சகலாவத்தைக் கிரமத்தின் வகை; இனி விரிவேதென்னில்—இலங்கும் விந்துப் . . . தானே - கலையாதி விளக்குப்போல் ஞானக் கிரியைகளை விளக்குமுறையேதென்னிற் சுத்தமாயையி னுண்டான விந்து தத்துவத்தினின்றும் பேச்சிறந்த அறிவாய்ப் பிரகாசமாய் ஆன்மாக்கள் கன்மத்துக் கீடாகச் சூக்குமை வாக்கானது ஒரு நாதரூபமாய் உந்தித்தானத்திற் பொருந்தும். ௩எ

38. வந்தடைந்து பின்னமாய் வன்னங்கள் தோற்றம்
வரும்அடைவு படஒடுக்கி மயிலண்ட சலம்நேர்
சிந்தைதனில் உணர்வாகும் பைசந்தி உயிரிற்
சேர்ந்துவரும் அவைமருவும் உருஎவையும் தெரித்து
முந்தியிடும் செவியில்உறு துள்ளுணர்வாய் ஓசை
முழங்கியிடும் மத்திமைதான் வைகரியில் உதானன்
பந்தமுறும் உயிரணைந்து வந்தமொழி செவியின்
பால்அணைய நினைந்தபொருள் பகரும் தானே. ௨0

(உரை) அந்வயம். பைசந்தி உயிரிற் சேர்ந்து வந்தடைந்து - இனிப் பைசந்தி வாக்கானது உந்தித் தானத்திற் பிராணவாயுவோடுங் கூடவந்து பொருந்தி; பின்னமாய் - சூக்குமை வாக்காற் பிறந்த நாதத்தைப் பிராணவாயுவால் உந்தச் சன்னுபின்னமாகச் சிதறி ; வன்னங்கள் தோற்றம் வரும் அடைவு படஒடுக்கி - அது அக்கரங்களாகப் பிரிந்து தோன்றுமுறை பாகப்படுமளவில் அதைத் திரட்டி;மயிலண்டசல்மநேர் - மயில்முட்டை பஞ்ச வன்னங்களையும் உருத்தெரியா தடக்கிய முறைபோல் அக்கரங்களை யுருத்தெரியாத நாதரூபமாய் அடக்கிக் கொண்டு ; சிந்தைதனி லுணர்வாகும் - இருதயத்தானத்தில் அறிவு பரிணமிக்கும்படி வந்து சேரும் ; மத்திமைதான் - இனி மத்திமை வாக்கானது ; வருமவை மருவும் உரு எவையுந் தெரிந்து - பைசந்தி வாக்காற் பின்னப்பட்டுத் திரண்டுவந்த நாதத்தை அட்சர ரூபங்களாக ஒழுங்குபெற நிறுத்தி ; முந்தியிடும் . . . முழங்கியிடும் - அவைகளைப் பிராணவாயுவோடுங்கூடச் செலுத்திக்கொண்டு அறிவுரூபமாய்ப் பரிணமித்துச் செவியிற் கேளாமல் ஓசை முழக்கமாய்க் கண்டத் தானத்தைப் பொருந்தும்; வைகரியில் உதானன் பந்தமுறும் - இனி வைகரிவாக்கானது உதானவாயுவோடுங் கூடப் பொருந்தி ; உயிரணைந்து . . . தானே - மத்திமை வாக்காற் றோன்றிய பிராணவாயுவோடுங்கூடக் கண்டத்தானத்தில் வந்த மொழிகளைச் செவிக்குக் கேட்பதாய்க் கன்மத்துக் கீடாக நினைந்த பொருளடங்கிய மொழியாகச் சேர்த்துத் தோற்றுவிக்கும்.

இச்சை ஞானங்களை அகத்தே நின்று விளக்குந் தத்துவங்களை முற்கூறாது புறத்தே சீவிக்கும் வாக்கை முற்கூறியது எதெனமலையற்க. சிவசத்தி அதிதேவதைகளைச் செலுத்த அதிதேவதைகள் சிவதத்துவங்களைச் செலுத்தச் சிவதத்துவங்கள் நாலுவாக்கையுஞ் செலுத்த வாக்குமூலமாக ஞானக்கிரியைகள் விளங்குவதாகலின் இது அனுபவத்தால் அறியற்பாலதேயாம். அற்றாகலினன்றே 'மூவகையணுக்க ளுக்கு முறைமையாய் விந்து ஞான, மேவின தில்லை யாகில் விளங்கிய ஞான மின்றா' [சிவஞானசித்தியார், i, 26]மென்றார் வழி நூலாசிரியரும். ௩அ

இனிச் சிவசத்தி சித்துக்குணர்வுஞ் சடத்துக்குச் செயலுங் கொடுக்குமிடத்து அதற்கு வேறாய் நின்றோ உடனாய் நின்றோ செய்

விக்குமென்னும் ஐயத்தின்கண் நிகழும் ஆசங்கை நீக்குமுகத்தால் மாயேய மலங்களை யேவுந் தன்மைகூறிச் சிவசத்தியின் பெருமை யறிவிக்குமிடத்து உயிர்களோடுடனாய் நின்றறிவிக்கு மென்பதில்லை வேறாக நின்றே இவைகளைச் செயற்படுத்துதல் மாத்திரையே, உயி ரறியுந் தன்மை யுண்டுபோலுமெனின்,

39. இத்தகைமை இறைஅருளால் உயிர்அறியும் அறிவுக்(கு)
ஈடாக வாடாதே ஈரிரண்டில் உரைத்த
வித்தைமுதல் ஐவரான் விளங்கு ஞானம்
மேவியிடும் எனஉரைப்பர் அசுத்த மாயை
வைத்தகலை தான்மூல மலம்சிறிதே நீக்கி
மருவும்வகை தெரிவிக்கும் வாயில்களின் பயனைப்
புத்திதர வித்தையிடை நின்றறிவை உயிர்க்குப்
பொருந்தியிடும் வகைபுணரும் புனிதசத்தி புணர்ந் [தே.

(உரை) இறைஅருளால் உயிரறியும்-உடனாக நின்றன்றி வேறாக நின்றறிவித்தல் கொண்டு உயிரறியாது ; அதென்போல வென்னில், விளக்கொளி கண்ணொளிக்கு வேறாக நின்று இருளை நீக்கியும் உடனாக நின்று கண்ணொளியோடு விளக்கொளியும் விரவிப் பதார்த்தங்களி னுஞ் சென்று பற்றினாலல்லது விளக்கிலிருக்குங் கண்ணொளி தானே தனித்து இருளிலிருக்கும் பதார்த்தத்தை யறியாத முறைமை போலாம். அற்றாகலினன்றே 'அன்னிய மிலாமை யானு மறிவினு ணிற்ற லானு, முன்னிய வெல்லா முண்ணின் றுணர்த்துவ னாத லானு' [சிவஞானசித்தியார், vi, 8] மென்றார் வழிநூலாசிரியரும் ; 'காண வன்றே, பூண்கின்ற வண்ணல்தன் போதமல் லாதில்லை' [கட்டளைக் கலித்துறை, 4] யென்றார் சிற்றம்பல நாடியாரும். ஆனால் உடனாக நின் றறிவித்தலே போதும் வேறாக நின்றறிவித்தல் வேண்டா வெனின்—அறிவுக்கீடாக-உடனாக நின் றறிவை விளக்கிச் செலுத்தி அந்த அறிவு புறத்தே சென்றறிதற்றாக; ஈரிரண்டில் . . . உரைப்பர் - இங்ஙனங் கூறிய முறையே நாலு வாக்குக்களையும் ஐந்து சிவதத்துவங்களையுஞ் செயற்படுத்தியதனால் அறிவு பிறக்குமென்று சொல்லப்படும்; ஆகவே, உடனாயும் வேறாயு மிருவிதமாகச் சிவசத்தி நின்றறிந் தறிவித் துபகரித்தாலன்றி உயிரறியாதெனன மேற்கொண்ட வாறாம். அற்றாகலினன்றே 'உள்ளும் புறம்பு மொழிவின்றி நின்றவள்

என்மை காட்டி '[இருபாவிருபது, 20] யென்றும், 'அறிதரு சிவனே யெல்லா மறிந்தறி விப்ப'[சிவஞானசித்தியார், v, 1]னென்றுங் கூறி ஞர் வழிநூலாசிரியரும். 'காண வுள்ளத்தைக் கண்டு காட்டலி' னென் றும்,'அவனுமவற்றது விடையத்தை யுணருமென்றது'[சிவஞானபோ தம், xi]என்றுங் கூறினர் முதனூலாசிரியரும். நாலுவாக்குந் தொழிற் படுமிடத்து ஞானக் கிரியைகள் விளங்குமுறை ஏதென்னில்—அசுத்த மாயை வைத்தகலை தான்மூல மலம்சிறிதே நீக்கி - மேற் கூறிப் போந்த அசுத்த மாயா காரியமாய் அனந்ததேவராற் றோன்றிய கலை யானது ஆணவமலத்தைச் சிறிது நீக்குவிக்கும்; வாயில்களின் பயனை - பஞ்சேந்திரியத் துவாரமாய்ச் சத்தாதி விடய ரூபமாய் வருஞ் சுகதுக்கத்தை; புத்திதர - பிரகிருதி மாயாகாரியமாய் உருத்திரதேவ ராற் றோன்றப்பட்டுப் பிரணவ பஞ்சாக்கரத்தாற் பஞ்ச கர்த்தாக்களா லேவப்பட்டுவரும் அந்தக்கரணங்களுட் புத்திதத்துவமானது சுகதுக் கத்தை நிச்சயம் பண்ணினவிடத்து; வித்தையிடை . . . வகைபுணரும் - கலையோடு தோன்றிய வித்தையானது ஆன்மாவுக் கும் புத்திக்கும் நடுவே நின்று சுகமிது துக்கமிது வென்றறியும்படி ஆன்மஞானத்தை விளக்குவிக்கும்; இதுவே ஞானஞ் சீவிக்குமுறை மையாம்—புனித சத்தி புணர்ந்தே - ஆணவத்தை நீக்கவும் ஆன்ம ஞானத்தை விளக்கவும் சுகதுக்கத்தை நிச்சயிக்கவுமாகிய தொழில் சிவசத்தியின் தொழிலேயாம் அதைச் சடமாகிய தத்துவங்களைச் செயற்படுத்தி அந்தத் தத்துவத்துவாரமாய்ப் புறம்பே நின்று அறி வித்தும் ஆன்மாவினுள்ளே நின்று இவைகளில் ஆன்மாவைச் செலுத்தி உடனாய்நின் றறிவித்தும் நிற்பது சிவசத்தியேயாம். ௩௯

இச்சா ஞானக் கிரியா சொரூபனுவ தெப்படி யென்னில் உயிர் அறுதி மறைப்புடைய தாகையால் ஞான முதித்ததின்பின் அந்த ஞானத்து ளடங்கிய இச்சையன்றி இச்சைவழி ஞானமில்லை யென் பது 'எத்திற ஞான முள்ள தத்திற மிச்சை செய்தி' யென வரு. மாற்று லறிக. அவையாவன:

40. பேசரிய அராகம்தம் கன்மத்துக் கீடாப்
பெற்றதனில் ஆசைதனைப் பெருகுவிக்கும் நியதி
தேசமிகும் அரசர்தரும் ஆணை செய்தி
செய்தவரைத் துய்ப்பிக்கும் செய்கை போல

நேசமுறு தம்கன்மம் நிச்சயித்து நிறுத்தும்
நிகழ்காலம் கழிகாலம் எதிர்கால மென்றே
ஓசைதர வருங்காலம் எல்லைபலம் புதுமை
உறுவிக்கும் இறைசத்தி உடனாய் நின்றே. உஉ

**(உரை)** அராகம்தம் . . . பெருகுவிக்கும் - அராக தத்துவமானது ஈசுர தத்துவத்தா லியக்கப்பட்டுக் கன்மத்தளவி லறிந்த ஞானத்தின் வழியே இச்சையைத் தொழிற்படுத்தும்; நியதி . . . நிறுத்தும் - இனி நியதி தத்துவமானது ராசாக்கினைபோல நின்று இச்சையைப் பாகப்படுத்தி ஆர்ச்சித்த கன்மத்தளவில் கிரியையை நிச்சயம்பண்ணி நிறுத்தும்; பேசரிய இறைசத்தி யுடனாய் நின்றே. இவ்வாறு இச்சாஞானக் கிரியா சொரூபனாதற்கு வாக்கு மனாதீத கோசரமாகிய சிவசத்தி மூன்றுபேத சத்தியாகி வேறாயும் உடனாயும் நின்று செலுத்தும்; நிகழ்காலம் . . . உறுவிக்கும் - ஓசையென்பது ஞானத்திற் கேதுவாகிய வாக்கின் மேலாய் ஞானத்தை யுணர்த்தி நின்றது—காலமானது ஞானத்தை விகற்பித்துக் கழிகாலத் தெல்லையையும் எதிர்காலப் பலத்தையும் நிகழ்காலப் புதுமையையும் விளக்குவிக்கும்; ஆக அஞ்சு தத்துவங்களுந் தொழிற்படவே ஆன்மாப் போகத்திற் கொள்கையுடைய னாவன்.

அத் தத்துவங்களுக்குப் போக காண்டமெனப் பெயர்புனைந்ததும் இத் தொழிலை நோக்கியெனக் கொள்க. சo

41. ஐவகையால் உறுபயன்கள் நுகரவருங் காலம்
அதுபுருட தத்துவமென் றறைந்திடுவர் அறிந்தோர்
மெய்வகைய கலாசுத்தி தனின்இதற்கும் சுத்தி
மேவிபிடும் வகைதானும் விரும்பியநூல் விளம்பும்
செய்வகையின் தொடர்ச்சியினுத் தோன்றுவிக்கும் குணத்தின்
சேர்வுபுரி பிரகிருதி திரிகுணமாம் அவைதாம்
இவ்வகையிற் சாத்துவித ராசததா மதமாய்
இயம்புவர்கள் ஒன்றிரண்டு குணம்இயற்கை உடைத்தே.

**(உரை)** ஐவகையால் உறுபயன்கள் நுகரவருங் காலம்-கலை வித்தை அராகம் நியதி காலமென் றைந்து தத்துவங்களாலும் இச்சை ஞானங் கிரியை விளங்கிப் போகத்திற் கொள்கையுடையனை அவதரத்துப் புருட தத்துவமென் றொருமல மூண்டாம்; அதுபுருட தத்துவமென்

றறைந்திடுவ ரறிந்தோர்-ஆண்டு விளங்கிய போதநிலைக்குப் புருட தத்துவமெனப் பெயர் அறிவுடையோராற் கூறப்படும்; அற்றாகலினன்றே 'போதநிலை முடிந்தவழி புக்கொன்றி யுடனுறு' [பெரியபுராணம், திருஞானசம்பந்தர், 1253] ரென்றார் அருண்மொழித் தேவரும்;மெய் வகைய . . . விளம்பும்-சுத்தாவத்தை யனுட்டானங் கைகூடுங்காலத்து ஞானசாரியரால் அக்கலை முதலிய அத்துவாசுத்தி யடையுமிடத்துப் புருட தத்துவமுஞ் சுத்தியடையு முறைமை சிவாகம விரிவிற் கூறப் படும்; ஆறத்துவாவுஞ் சுத்தியடையுமிடத்துப் போகத்திற் கொள்கை யுடையனுதல் செய்யும் புருட தத்துவமலந் தீருமதுவே புருடன் சுத்தியடைதலாம்—செய்வகையின் தொடர்ச்சி-போகத்திற் கொள் கையுடையனுனபோது இச்சைஞானங்கிரியைகள் புறத்துச் சிவிக்கு முறைமை எங்ஙனமென்னில்; இங்குத் தோன்றுவிக்குங் குணத்தின் சேர்வுபுரி பிரகிருதி - இத்தக் குணதத்துவமானது அனந்ததேவரால் சுத்தமாயையிற் றோன்றுங் கலையினின்றும் உருத்திரதேவராற் றோன் றிய பிரகிருதி மாயையானது ஆன்ம தத்துவத்திற்குக் காரணமாய்க் குணத் திரட்சியாய்ப் பரிணமிக்கும்; திரிகுணமாம் . . . ராசததா மதமாம் - அந்தக் குணதத்துவமானது பதார்த்தச் சார்வால் சாத்து விதம் இராசதந் தாமதமென்று மூன்று குணமாகும்; இயம்புவர்கள் . . . உடைத்தே - அவைமூன்றுந் தனித்தனி யிரண்டு குணங் களை இயல்பாக வுடைத்தா யிருக்குமென் றறிவுடையோராற் கூறப் படும்.

முறையே திரிகுணமுந் திரிபதார்த்தச் சார்வாக இருக்கு மென் பது அவ்வக்குணக் கிரியைகளினு லறியப்படும். அற்றாகலினன்றே 'குணமொரு மூன்றுந் திருந்துசாத் துவிதமே யாக, விந்துவார் சடையா னுடமா னந்த வெல்லையில் தனிப்பெருங் கூத்தின், வந்தபே ரின்ப வெள்ளத்திற் றிளைத்து மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தா' [பெரியபுராணம், தடுத்தாட்கொண்ட புராணம், 106] ரென்றார் அருண்மொழித் தேவரும். அவ்வக் குணக் கிரியைகள் முன்னர்ச் செய்யுளிற் கூறப்படும். சுக

இனி முக்குணங்களும் ஆன்மாவின் ஞானக்கிரியை இரண்டி னுந் தனித்தனி மேலிட்டுத் தத்தங் குணங்களை விளக்கு முகத்தாற் றனித்தனி இருவிதப்படுவது கூறுமுகத்தால் அதன் ஞெழில்களைப் பிரித்துக் கூறுதற்கு எழுந்தது வருஞ் செய்யுளென்பதாம்.

42. அலகில்குணம் பிரகாசம் லகுதைவியா பிருதி
அடர்ச்சிமிகுங் கவுரவம்அ நியமம்இவை அடைவே
நிலவிபிடும் மும்மூன்றும் உயிரொன்றில் கலந்தே
நிற்கும்இவை நிறைபுலனின் பயன்எவையும் கவரும்
குலவிவரு போகங்க ளிடமாய் மாறுக்
குறைவில்ஒளி யாய்அலகில் புலனிடத்தில் ஒருமை
பலவகையும் உடையதாய்ப் பரனருளாற் புந்தி
பஞ்சாசற் பாவகமும் பரிணமிக்குந் தானே. உச

(உரை) அலகில் குணம் - குற்றமில்லாத பதிச்சார்வான சாத்துவித குணமானது; பிரகாசம் - ஆன்மஞானத்தில் மேலிட்டபோது யாதொன்றை யறியுமிடத்துக் கூர்மையாக அறியும்படி ஞானத்தைத் தடையில்லாது விளக்கும்; லகுதை - கிரியையின் மேலிட்ட போது யாதொன்றைச் செய்யுமிடத்து மடிமை தோன்றா துன்முகமாய் மகிழ்ச்சியை விளக்கும்; வியாபிருதி - இனிப் பசுச்சார்வான இராசத குணமானது ஞானத்தின் மேலிட்டபோது விடயங்களில் விரைந்து பற்றும்படி ஞானத்தைச் செலுத்தும்; அடர்ச்சி - கிரியையின் மேலிட்டபோது விடய பதார்த்தங்களை முழுவதுந் தனதாக முயலும்படி செலுத்தும்; கவுரவம் - இனிப் பாசத்தின் சார்வாகிய தாமதகுணமானது ஞானத்தின் மேலிட்டபோது யாதொன்றையறியப் புகுமளவில் மமதை மேலிட்ட மடிமையைச் செலுத்தி அறிவைக் கீழ்ப்படுத்தும்; அநியமம் - இனிக் கிரியையின் மேலிட்டவிடத்து யாதொன்றை முயற்சிக்கினும் மடிமையுள்ளீடாய விபரீதத்தை நியமித்துத் துக்கத்தை அறிவிற் செலுத்தி நிற்கும்; இவை யடைவே நிலவிவரும் - இந்த ஆறு குணமுந் தனித்தனி திரிவித குணத்தின் காரியமாய் ஞானக்கிரியைகளின் மேலிட்டு நிற்கும்; மும்மூன்று முயிரொன்றிற் கலந்தே நிற்கும் - சாத்துவிதஞ் சுகவிளைவுக் கேதுவுந் தாமதந் துக்கவிளைவுக் கேதுவும் இராசதம் இருதலைக்கும் உடனியைந் தும் இவ்வாறு ஒன்பது குணமாக இச்சை ஞானங் கிரியைகளிற் கலந்து மேலாடிநிற்கும்; இவை நிறைபுலனின் பயனெவையுங் கவரும் - ஆன்மா இந்தக் குணத்தில் மிகுத்த குணமே சொரூபமாய்ச் சத்தாதி விடயங்களை யறியும்; புந்தி குலவிவரு போகங்க ளிடமாய் - புத்திதத்துவமானது சஞ்சிதத்தினின்றும் பாகப்பட்டு எதிர்ந்த சுக துக்கங்கள் வந்து சார்வதற்கு ஓரிடமாய்; அலகில் புலனிடத்தில்

மாறுக் குறைவிலொளி யாய் - சத்தாதி விடயங்களை அறியப் புகுதற்குத் தடையில்லாத ஞானரூபமாய்; பலவகையும் ஒருமை உடையதாய் - பலவிதமாய் நிகழும் ஐயங்களை நீக்கிப் பதார்த்தத்தை நிச்சயித்தற்கு ஒருமைப்பாடுடையதாய்; பஞ்சாசற் பாவகமும் - ௫௰ விதப் பாவகஞானமாய்; பரிணமிக்குந்தானே - அது சடமாவதற்கு இவ்வாறு ஞானமுளதோவெனில்; பரனருளால் - சிவசத்தி சங்கற்பத்தால் இவ்வாறு செயற்படும். ௪௨

43. ஆனதனு வதனிலுறும் அநிலனையும் இயக்கி
ஆங்காரம் நீங்காத அகந்தைக்கு வித்தாய்
யானலது பிறரொருவர் எனையொப்பார் புவியின்
இல்லையெனும் இயல்பினதாய் இந்திரியம் புலன்கள்
தாம்நுகரும் அளவில்அதில் முந்தியுறும் இச்சை
தானுருவாய்ச் சங்கற்ப சதாகதியும் தந்து
மானதமா னதுநிற்கும் சிந்தைநினை வையம்
வந்துதரு மனமொழிய வகுப்பொணுதே. ௨௫

(உரை) ஆங்காரம் - ஆங்கார தத்துவமானது; ஆனதனு வதனிலுறும் அநிலனையும் இயக்கி - கன்மம் புசித்தற்காக உண்டாகிய தனு நிலைபெறும்படி தசவாயுக்களையுஞ் செலுத்திக்கொண்டு; நீங்காத அகந்தைக்கு வித்தாய் - விட்டு நீங்குதற்கரிய ஆணவமலக் கிரியைக்கு மூலமாய்; யானலது . . . இயல்பினதாய் - தன் குற்றத்தை அறியாது அபிமானஞ்செய்து தன்னை மிகவும் மதித்தற் கிடமாய்; இந்திரியம் . . . முந்தியுறும் - இந்திரியங்களில் விடயம்வந்து பொருந்துமளவில் ஆன்ம சிற்சத்தி அவ்விடயத்தை மோதும்படி முந்திச் செலுத்திக்கொண்டு நிற்கும்; மானதமானது - இனி மனதத்துவமானது; இச்சை தானுருவாய் - ஈசுர தத்துவத்தா லியக்கப்படும் அராக தத்துவத்தாற் செயற்பட்டு இச்சை சீவித்தற் கிடமாய்; சங்கற்ப சதாகதியுந் தந்து நிற்கும் - யாதொரு விடயத்திலும் வெகு விரைவாய்ப் பற்றிச் சங்கற்பங்களை விளைத்து நிருவிகற்பக் காட்சியை விளக்கி நிற்கும்; சிந்தைநினை . . . வகுப்பொணுதே - மனத்தோ டிரண்டற்று மனத்தின் தொழில் வேறுபாட்டாற் சித்தமெனப் பெயர்பெறுஞ் சித்தமானது மனத்தாற் சங்கற்பித்த நிருவிகற்பக் காட்சியைக் கலக்கி ஐயம் விளைத்து நிருவிகற்ப மிரண்டிற்

கும் இடைநிலத்தே விகற்பக் காட்சியை விளைத்து நிற்கும் அதுவும் மனத்தின் தொழிலென்றே கூறப்படும். ௪௩

அந்தக்காரணங்கள் நான்கில் மனம் இச்சை நிகழ்தற்கும், புத்தி ஞானம் நிகழ்தற்கும், குணங் கிரியை நிகழ்தற்கு மிடமாம். ஆங்காரம் யானெனதென்று விகற்பித்துப் போதத்தை எழுப்பி நிற்றற் கிடமாம். சித்த மனத்துளடங்கும். ஆக நாலினுந் தோற்ற முறையாற் குணம் முதன்மையாயினுந் தொழில்முறையால் மனமே முதலாய்க் கொண்டு மனதியென்று அந்தக்காரணத்திற்குப் பெயர் வழங்கப்படும். இவைகள் இவ்வாறென் றுணர்த்திய ஆசிரியர், இனி இந்தக் கிரியைகள் புறத்துச் சேறற்குத் துவாரமிவையென்பதுஞ் சென்றுற் பெறும்பய னிவை யென்பதும் உணர்த்து முகத்தால் ஏனை இருபது தத்துவங்களுஞ் செயற்படுமாறு கூறுவான் தொடங்கினர்.

44. சொன்னமுறை செவிதுவக்கு நோக்கு நாக்குத்
துண்டம்இவை ஐந்திற்கும் தொகுவிடய மாக
மன்னியசத் தப்பரிச ரூபரச கந்தம்
மருவியிடும் இவைஅடைவே வாக்குப் பாதம்
பின்னர்வரு பாணிமிகு பாயுவிேனா டுபத்தம்
பேசலுறும் ஐந்திற்கும் பிறங்கொலிகொள் வசனம்
உன்னரிய கமனதா னவிசர்க்கா னந்தம்
உற்றதொழில் பெற்றிடுவ துண்மை யாமே. ௨௬

(உரை) சொன்னமுறை . . . ஐந்திற்கும் - சோத்திராதி ஞானேந்திரிய மைந்திற்கும் முறையே; தொகுவிடய . . . மருவியிடும் - ஆன்மா இந்த இந்திரியங்களில் நிலைபெற்று லறியும் விடயமாகச் சத்தாதி ஐந்தும் பொருந்தும்; இவை அடைவே - இந்த முறைமை பொருந்தித் தொழிற்பட்டால்; வாக்குப் பாதம் . . . ஐந்திற்கும் - வாக்காதியென்று சொல்லிய கன்மேந்திரிய மைந்திற்கும்; பிறங்கொலிகொள் . . . யாமே - வசனாதி ஐந்தும் பொருந்துந் தன்மையுண்டாம். ௪௪

45. முந்தியஐம் பூதங்கள் வானாதி யாக
முயங்கியநற் செவிநாசி கண்ணுமெய்ம் முறையால்
இந்தவழி னின்றுவரும் ஐம்புலனும் உயிர்தாம்
எய்தும்வகை தம்முருவின் இலங்கிபிடும் புறத்து.

வந்தடைய இடங்கொடுக்கும் நிரந்தரமாய் வானம்
வாயுமிகச் சலித்தெவையுந் திரட்டும்தீ வெம்மை
தந்தவைசுட் டொன்றுவிக்கும் நீர்குளிர்ந்து பதமே
தரும்உரத்துத் தரிக்கும்இது தரணி தானே. உஎ

**(உரை)** முந்தியஐம் பூதங்கள் வானாதி யாக - முன்னே சொல்லப்பட்ட பூதங்கள் ஆகாசமுதலெலாந்தும்; முயங்கியகற் . . . னின்று - சோத்திரமுத லிந்திரியங்களினும் பொருந்திநின்று; வரும் ஐம்புலனும் . . . இலங்கியிடும் - அவ்விந்திரியங்களில் வந்து சேரும் விடயத்தை ஆன்மா அறியும்படி தத்தமுருவாகிய இந்திரியங்களினின்று பகுத்தறிவித்து நிற்கும்; புறத்தும் - இவ்வாறு அகத்தே தொழிற்படுவதுமன்றிப் புறத்தே சாதாரண ரூபமாகவும் நின்று; வந்தடைய இடங் கொடுக்கும் நிரந்தரமாய் வானம் - ஆகாசமானது நிரந்தரமாக நின்று எவைக்கும் இடங் கொடுத்துத் தானும் அவ்விடத்து இருப்பு விடாது தன்னிலக்கணம் மற்றவையோடுங் கலவாது நிற்கும்; வாயுமிகச் சலித்தெவையுந் திரட்டும் - வாயுவானது சலிக்குங் குணமுந் திரட்டுந் தொழிலு முடைத்தா யிருக்கும்; தீ வெம்மை தந்தவைசுட் டொன்றுவிக்கும் - தேயுவானது சுடுங்குணமும் ஒன்றுபடுத்துந் தொழிலு முடைத்தாயிருக்கும்; நீர் குளிர்ந்து பதமே தரும் - அப்புவானது குளிருங் குணமும் பதந்தருந் தொழிலு முடைத்தாயிருக்கும்; உரத்துத் தரிக்குமிது தரணி தானே - பிருதிவியானது உரக்குங் குணமுந் தரிக்குந் தொழிலு முடைத்தாயிருக்கும்; நிரந்தரமாயென்னுஞ் செய்யுட்சொல் யாண்டு மியைந்து பொருள் விளங்குவதாற் பஞ்ச பூதங்களும் வியாபகமாம்.

பூதங்களுக்கு வியாபகங் கூறவே ஏனைய தத்துவங்களனைத்தும் வியாபகமென்பது தானே போதரும். சரு

46. இந்நிரையில் ஐந்துசுத்தம் ஏழ்சுத்தா சுத்தம்
எண்மூன்றும் அசுத்தமெனும் இவைமுப்பத் தாறும்
மன்னியதத் துவங்களிடை மயங்கிநெடுந் துயர்தாம்
மருவும்உரு நிலையழிய வரும்பொழுது வரியார்

*பன்னகம்அண் டசம்கனவு படர்வகையே முன்னம்*
*பகரவரும் கலாதிநிலை பாவியசூக் குமமாம்*
*தன்உருவில் அணைந்துபயன் அருந்திஅரன் அருளால்*
*தரையினிடை வருமென்று சாற்று நூலே.* உஅ

**(உரை)** இந்நிரையில் - சுத்த மிசிரம் அசுத்தமாக மூவிதமுடைய வாய் அசாதாரண தத்துவஞ் சாதாரண தத்துவமென் றிரு வேறாய் அனேகங் கூட்டரவாய்த் தனுகரணமாகவும் புவனபோகமாகவும் விளங் கிய தத்துவங்களனைத்தும்; ஐந்துசுத்த . . . முப்பத்தாறும் - சுத்தம் ஐந்தும் சுத்தாசுத்தம் ஏழும் அசுத்தம் இருபத்து நாலுமாக முப்பத் தாறு வகையில் அடங்கும்; மன்னிய தத்துவங்களிடை - மலம் போத் திருத்துவஞ் செய்யவுங் கன்மம் போகஞ் செய்யவும் மாயை பந்தஞ் செய்யவும் ஆகிய மூன்று மலத்தின் சத்திகளும் மாயேய மலமாகிய தத்துவங்களிடமாக நிலைபெற்று அம்மல சத்திகளையுந் தன்னையு மேவும்பொருட்டுத் திரோதான சத்தி சங்கற்ப ரூபமாக நிலை பெறுதற் கிடமாகிய தத்துவக் கூட்டங்களிலே; மயங்கி - ஆன்மா வின் அறிவு ஏகதேசப்படுகையால்; நெடுந் துயர்தாம் மருவும் - நெடுங் காலம் பெரிய துயரமாகிய செனனமரண துக்கத்தைப் பொருந்தும்; உருநிலை - சரீரத்தை நிறுத்திக்கொண்டிருக்கும் பிராரத்த கன்ம மானது; அழிய - புசித்துத் தொலைந்தவழி; வரும்பொழுது - வேறே சுவர்க்கநரகங்களிற் புசிக்குஞ் சுகதுக்கம் பாகப்பட்டு எதிர்ந்தவுடனே; வரியார் பன்னகம் - சர்ப்பந் தோலுரித் தேகுவது போலும்; அண்ட சம் - பறவை முட்டையை நீங்கிச் செல்வதுபோலும்; கனவு - புரு டன் தூல தேகத்தை விட்டுச் சூக்கும தேகத்தைப் பொருந்திக் கன வின் பயனறிவதுபோலும்; படர்வகையே - இந்த மூன்று முறையே போல; முன்னம் பகர்வருங் கலாதிநிலை - மேற் கூறிப்போந்தவாறே கலையாதி பஞ்ச கஞ்சுகத்தாற் புருடனாகியவன்; பாவிய சூக்குமமாந் தன்உருவில் அணைந்து - தூலவுடம்பு போலக் கெட்டொழியாது சிருட்டிகாலமுதற் சர்வசங்கார காலமட்டும் நிலைபெற்றுத் தனக்கா தாரமாயுள்ள சூக்கும தேகத்திலே நின்றும் பூதசாரசரீரம் பூதசரீரங் கள் தனக்குள்ள புசிப்பளவு வரவே அவற்றைப் பொருந்திக்கொண்டு; பயனருந்தி - சுவர்க்க நரகங்களிற் சுகதுக்கங்கள் புசித்து; அரன் அரு ளால் . . . நூலே - மீண்டுஞ் சிவசத்தி சங்கற்பத்தாற் பூமியின்கண்

அந்தச் சூக்கும வுடம்போடே வந்து கருப்பாசயத்திற் பொருந்துவ னென்று சிவாகமங்களுட் கூறப்படும்.

பன்னக மண்டசங் கனவு மூன்றுஞ் சரீரத்திரிவும் இடத்திரிவும் அறிவுத் திரிவுமென்று மூன்ருய்க் கூறுவாருமுளர். 'அரவுதன்றே லுரிவு மக்கனவும் வேறு, பரகாயம் போய்வருமப் பண்பு' [சிவஞான போதம், ii, 9] மென்ற மூன்றுந் தூலவுடம்பு நீங்குதற்கும், 'குடா காய வாகாயக் கூத்தாட்' [ஷை, ஷை, ஷை]டுச் சூக்குமவுடம்பு நீங்கு தற்கும் உவமையென முதனூலாசிரியர் கருத்தறிந்தியற்றுஞ் சிவ ஞான பாடியத்துக்கும், 'பன்னக மண்ட சங்கள் பரகாயந் தன்னிற் பாய்வோர், துன்னுதோல் முட்டை யாக்கை துறந்துசெல் வதுபோ' [சிவஞானசித்தியார், ii, 38]லென்ற வழிநூலாசிரியர் கருத்தறிந்தியற் றும் பொழிப்புரைக்கும் பகையாது மூன்றுஞ் சரீரத்திரிவென்றே பொருள்கொள்வது சிறப்பாம். அன்றியும் ஈண்டுச் சரீரத்திரிவு கூறத் துணிந்த நூலாசிரியர் இச்செய்யுள் முகத்து மூன்றையும் ஒன்றுக்கே யுவமை காட்டியதன்றி இடத்திரிவு அறிவுத்திரிவு ஈண்டுக் கூறப் புகுந்திலரென்பது இச்செய்யுள் நோக்கத்தாலு மறிக. சூக்கும வுடம்பினின்றே தூலவுடம்பு வருமென்பது 'தூலமா முருவி னுக்குச் சூக்கும முத'லென்றும், 'விதிப்படி சூக்கு மத்தே யுருவரு'மென்றும், 'மாறியிவ் வுருவ மெல்லாம் வருவதெங் கேனின் றென்னிற், கூறிய சூக்கு மத்தா' [சிவஞானசித்தியார், ii, 50, 49, 47] மென்றும் வழி நூலாசிரியர் விரித்தோதியவாற்ருல் ஈண்டு விரித்திலர். அஃது ஆண்டுக் காண்க.

இனி மாறிப் பிறத்தல் சுவர்க்க நரகங்கட்கேகுதல் மாத்திரைக்கே யன்றித் தரையினிடை வருதல் அவ்வச்சார்பிலே தோன்றுதல் மா புடைத்தென்று நிகழும் ஐயம் நீக்குமுகத்தாற் செனன மரணத் துன் பம் இத்துணைப் பெரிதாகிய கொடிய துயரமென்பது விளக்குதற் கெழுந்தது வருஞ் செய்யுளென்பதாம். சகூ

47\. தோற்றியிடும் அண்டசங்கள் சுவேதசங்கள் பாரில்
துதைந்துவரும் உற்பீசம் சராயுசங்கள் நான்கின்
ஊற்றமிகு தாபரங்கள் பத்தொன்ப தென்றும்
ஊர்வபதி னைந்தமரர் பதினொன்றே டுலவா

*மாற்றருநீர் உறைவனநற் பறவைகள்நாற் காலி*
*மன்னியிடும் பப்பத்து மானிடர்ஒன் பதுமா*
*ஏற்றியொரு தொகைஅதனில் இயம்புவர்கள் யோனி*
*எண்பத்து நான்குநூ றாயிரமென் றெடுத்தே.* உகூ

**(உரை)** தோற்றியிடும் - அரனருளாற் றரையினிடை வருங்கால் அவ்வச் சார்பிலே வருவதேயன்றி ஈண்டு மாறுதல் பொருத்த முடைத்தன்று போலுமெனின்; அண்டசங்கள் - முட்டையினும்; சுவேதசங்கள் - வேர்வைகளினும்; உற்பீசம் - வித்துக்களினும்; சராயுசங்கள் - பைகளினும்; நான்கிற் பாரில் துதைந்துவரும் - இந்த நான்கு தோற்றங்களினும் பூமியினிடத்தும் மாறிமாறிப் பிறந்துவருமன்றி அவ்வச் சார்பிற்றோன்று மென்பதில்லை; இவற்றின் பேதங்களாவன—ஊற்றமிகு தாபரங்கள் பத்தொன்ப தென்றும்-தாபராதிகள் வித்தினிடத்துப் பத்தொன்பது நூறுயிர பேதமென்றும்; ஊர்வ பதினைந்து - ஊர்வனசாதிகள் பதினைந்து நூறுயிரமென்றும்; அமரர் பதினொன்றே டலவா - தேவர்கள் வர்க்கம் பதினொரு நூறுயிர மென்றும்; மாற்றருநீர் உறைவன-நீர்வாழுஞ் சாதிகளும்; நற் பறவைகள் - பறவைச்சாதிகளும்; நாற் காலி - மிருகசாதிகளும்; மன்னியிடும் பப்பத்து-இந்த மூன்று வகை யோனியும் தனித்தனி பத்து நூறுயிரமென்றும்; மானிடர்ஒன்பதுமா - மானுடவர்க்கம் ஒன்பது நூறுயிரமென்றும்; ஏற்றியொரு . . . றெடுத்தே - ஆக எழுவகையிலும் எண்பத்துநான்கு நூறுயிரம் யோனிபேதமும் மாறிமாறிக் கொள்ளி வட்டங் கறங்கோலைபோலத் திரிப்பின்றிப் பிறந்துழல்வதாம். சஎ

48. *இனையபல பிறவிகளின் இறந்துபிறந் தருளால்*
*இருவினைகள் புரிந்தருந்தும் இதுசகலம் அகலா*
*முனம்மருவும் இருபயனும் ஒருகாலத் தருந்த*
*முந்துறுக ருந்துபயன் அந்தமுற வந்த*
*வினையும்எதிர் வினையும்முடி வினைஉதவு பயனால்*
*நேராக நேரதல் மேவும் கால்முற்*
*சினமருவு திரோதாயி கருணை யாகித்*
*திருந்தியசத் திநிபாதந் திகழு மன்றே.* ரூ௦

**(உரை)** இனையபல . . . இதுசகலம் - மேற் கூறிப்போந்த எண்பத்துநான்கு நூறுயிரம் யோனியினுஞ் சிறைபட்டு மாறிமாறிப் பிறந்து நல்வினை தீவினைகளை ஆர்ச்சிப்பதும் பாகப்பட்ட வினைகளைப் புசிப்பதுமா யுழல்வதே சகலாவத்தையாம்; ஆகப் பதினொன்றேகால் விருத்தங்களாற் சகலாவத்தையின் வகைப்பத்திலக்கணமும் அதன் விரிவுகளுங் கூறிய ஆசிரியர் இனி ஒன்றேமுக்காற் செய்யுளாற் சுத்தாவத்தையின் வகை தொகுத்துக் கூறுவான் தொடங்கினார்—அருளால் - சிவசத்தி சங்கற்பத்தினாலே; ஒருகாலத்து அகலா முனம்மருவும் இருபயனும்-முன் காலங் கடந்து அனாதிபந்தமாயுள்ள இருவினையின் காரியமாய் விட்டு நீங்குதற்கரிய சஞ்சித கன்மமும்; அருந்த . . . வினையும்-புசிக்கிற முறைமைக்குப் பாகப்பட்டுச் சஞ்சிதமாகிய புண்ணியபாவத்தின் பயனாய்ப் புசித்தழிவதாக வந்த பிராரத்த கன்மமும்; எதிர்வினையும் - அந்தப் பிராரத்த நாசத்தில் உற்பத்தியாகும் ஆகாமிய கன்மமு மாகிய மூவகையும்; முடி வினைஉதவு பயனால் - சன்மார்க்கத்திற் கேதுவாகிய சிவபுண்ணிய முதிர்ச்சியினாலே முடிந்து; நேராக - இருவினை யொப்பு வந்தவிடத்து; நேராதல் மேவுங்கால் - மலபரிபாகம் பிறந்த காலத்து; முற் சினமருவு . . . மன்றே - முன் மலசத்திகளை ஏவி நின்ற திரோதான சத்தி காருணியத்தினாலே திருவருளாய்ப் பிரகாசிக்கும்.

திரிவிதகன்ம முடிதலாவது அதன் சத்தி கெட்டு ஆசாரியர் ஞானசத்தி கிரியாசத்திகளால் நீங்குந் தன்மை யுண்டாதல். இருவினையொப்புக்கு வகை குருமுகமா யறிக. புண்ணிய பாவமிரண்டு மேற்றக் குறைச்சலின்றித் துலையொத்த விருவினையொப் பென்பாரும், அசுவமேதயாகப் புண்ணியப் பலனும் பிரமகத்திப் பாவப்பலனும் ஒருகாலத்துப் பாகப்படவே இரண்டும் புசியாது நசிக்குமென்றும் இவ்வாறு கன்மமெல்லாஞ் சமனாக ஏககாலத்திலே பாகப்பட்டுப் புசியாது நசித்தொழிதலே இருவினை யொப்பென்பாரும் இவ்வாறு தத்தமக்கு வேண்டியவாறெல்லாங் கூறுவாருமுளர். அதுவெல்லாம் போலியென்பது சிவஞானபாடியத்து இனிது விளங்கும். ஈண்டுக் கூறியது சிவபுண்ணிய முதிர்ச்சியால் இருவினையொப்பு வருமென்றும் மலபரிபாகத்தால் சத்தினிபாதம் வருமென்று மாதலால் ஒன்றுக்கொன்று காரணமாதல் நுண்ணுணர்வா லறிக.

49. நாடியசத் திநிபாதம் நாலு பாதம்
நண்ணும்வகை எண்ணரிய ஞான பாதம்
கூடுமவர் தமக்குணர்வாய் நின்ற ஞானக்
கூத்தன்ஒரு மூர்த்திகொடு குறுகி மோகம்
நீடியகே வலசகலம் நிகழா வாறு
நிறுத்திமலம் அறுக்கும்இது நிலையார் சுத்தம்
கேடில்புகழ் தரும்சரியை கிரியா யோகக்
கேண்மையரேல் இவைஉணர்த்தக் கிளக்கும் நூலே.

(உரை) நாடியசத் திநிபாதம் நாலு பாதம்-மலபரிபாகத்தா லுள தான சத்திநிபாதமானது பரிபாக முற்பிற் பாட்டால் நாலுவிதப் படும்; நண்ணும்வகை - இதிற் புறப்பொருளறிவாய் நிற்கும் ஆன்ம சிற்சத்தி தற்பொருளறிவா யொடுங்கு முறைமையாகிய; [எண் ணரிய - நினைத்தற்கரிதாகிய]; ஞானபாதங் கூடுமவர் தமக்கு - அதி தீவிர சத்திநிபாதம் பதிந்தவர்களுக்கு; உணர்வாய் நின்ற ஞானக் கூத்தன் - அறிவுக்கறிவாய் நின்று உணர்த்திய பரம்பொருள்; ஒரு மூர்த்திகொடு குறுகி - ஆசாரியராகத் திருமேனி கொண் டெழுந் தருளி வந்து; மோகம் . . . நிறுத்தி - அறிதற்றொழில் தோற்றக் கேடுகளிரண்டும் பொருந்தாமல் நிறுத்தி; மலம் அறுக்கும் - ஞானப் பெருக்கத்தாற் பாசத்தையும் நிக்கிரகிக்கும்; இது நிலையார் சுத்தம் - இவ்வாறு பெற்ற ஞானப்பெருக்கமானது சுத்தாவத்தையாம்; [இந்தச் சுத்தாவத்தையை யாருக் கனுக்கிரகம் பண்ணலாமென்றால்—கேடில் ...நூலே-கேடில்லாத ஞானக்கீர்த்தியைக் கொடுக்கப்பட்ட சரியை கிரியையோகங்களை அனுட்டித்து முடிந்தவர்களுக்கே இந்தச் சுத்தா வத்தையை அனுக்கிரகம் பண்ணலாமென்று ஆகமங்கள் சொல்லும்.]

கேவல மலத்தினுண்மையென்று வருங் கேவலஞ் சகலத்தா னீங்குதலிற் 'கேவ லந்தன் னுண்மை' யென்று வருங் கேவலமே ஈண்டுக் கூறியதென் றுணர்க. இங்ஙனங் கூறிய முறையில் அந்தச் சகலாவத்தையிற் கூறும் பத்திலக்கணமுங் கழிவது யாங்ஙனமெனில், முதன்மையும் போகப்பற்றுங் கழிதற் கேது வாகிய இருவினை யொப்பும், போககாண்டத்திற் செறிதலும் போக் கிய காண்டத்திற் செறிதலுங் கழிதற்கேதுவாகிய சத்திநிபாதமும், உருக்கழிதற் கேதுவாகிய குருவருளும், அறிதற் றொழில் தோற்றக் கேடு கழிதற் கேதுவாகிய கேவல சகல நீக்கமும்,ஏகதேசப்படுஞ் சுட்

டுணர்வு கழிதற்கேதுவாகிய மும்மல நீக்கமும், இச்சை ஞானங் கிரியை மூன்றுங் கழிதற் கேதுவாகிய ஞானப் பெருக்கமும் முறையே கிடைக்கப்பெறுதல் சுத்தாவத்தை யிலக்கணமாகலின் இதனுல் அவை கழிதல் யாங்ஙனமெனமலையாது நுண்ணுணர்விஞ லறிக. மேலே ஆன்மலட்சணங் கூறுமுகத்தாற் சுத்தாவத்தையின் தொகை கூறியதில் ' உண்ணிலவு மொளியதனு லிருளகற்றிப் பாத முற்றிடும் ' [ 19] என்று ஞானப் பெருக்கத்தின துண்மை கூறிப் போந்தமையின் ஈண்டுக் கூருதொழிந்தாராயினும் வழிநூலாசிரியரும் 'மூலமலம் ஞானத்தா லிடிப்ப' [சிவஞான சித்தியார், viii, 10] னென்ருராகலின் ஈண்டு மலமறுக்கு மெனுஞ் செய்யுட் சொல்லே ஞானப்பெருக்கமென்னும் பொருளை யுடலோ டுள்ளடக்கி நிற்றலா லீண்டு ஞானப்பெருக்கம் இச்சை ஞானங் கிரியை கழிதற் கேது வெனக் கூறியதாம். அற்ருகலினன்றே 'இருவினைச் செயல்களொப்' பென்றெடுத்து 'ஞானம், பெருகிரா யகன்றன் பாதம் பெறுவது சுத்த' [சிவஞானசித்தியார், iv, 40] மென்ருர் வழிநூலாசிரியரும். இனிச் சிற்றம்பலநாடியார் 'வினைக்கேவல சகலங்க ளெல்லா மிருவினை யொப்புச் சத்திநிபாதத்தோ டொழிவ ' தென்றும், ' குருவருளா னீங்கப்படுங் கேவல சகலமாவது அகளறுபோதத்துட் கூறியவாறு தத்துவாதீதத்திற்கு மேற்படுங் கேவல சகலமேயா'மென்றுங் கூறுவர். அதுபற்றி ஈண்டு 'ஞானக்கூத்தன் ஒரு மூர்த்தி கொடுகுறுகி மோக நீடிய கேவல சகல நிகழாவாறு நிறுத்தி' யென்பதற்கும் அவ்வாறு பொருட்கோடலு மொன்று. 'சங்கார காலந் தனிலோர் மலத்தொடு சார்தலுமாந், தொங்கா துடல்விடுங் காலமு மாந்தொல் கருவியெல் லாம், பொங்காமல் மாற்றிநற் போதம் புகல்கின்ற காலமுமா' [கட்ட ளைக் கலித்துறை, 34] மென்ருர் சிற்றம்பலநாடியாரும். சங்காரகால மென்பது கேவலத்தின் மேற்று. ஈண்டுச் சுத்தாவத்தையி னுண்மை வலியுறுத்தப்பட்டது. சிவபுண்ணியத்தால் வருவது இருவினையொப் பென்றும், அது வரவே மூதன்மையும் போகபற்றுங் கழியுமென் றும், மலபரிபாகத்தால் வருவது சத்திநிபாதமென்றும், அது வரவே போக போக்கியக் கருவிகளிற் செறிதல் கழியுமென்றும், இவை நாலும் வந்து அவை நாலுங் கழிந்தால் உணர்வாய் நின்ற ஞானக் கூத்தன் ஒரு மூர்த்திகொடு குறுகுறுமென்றும், அந்தக் குருவருளால் உருக்கழியுமென்றும், அது கழிந்தால் கேவல சகலம் நீங்குமென்றும்,

அது நீங்கினல் அறிதற்ருெழிலுண்டாதல் ஒடுங்குதல் கழியுமென்றும், அது கழிந்தால் ஞானப் பெருக்கமுளதாமென்றும், அது பெருகினல் இச்சை ஞானங்கிரியை மூன்றுங் கழியுமென்றும், அது கழிந்தால் மலநீக்கம் வாதனைமலநீக்கம் வருமென்றும், அது வந்தால் வியாபக அறிவு விளங்கி ஏகதேசப்படுஞ் சுட்டுணர்வு கழியுமென்றும், அது கழிந்தால் பதினெட்டவத்தையுங் கழியுமென்றுங் கூறியது குருமுகமாய் நுண்ணுணர்வினல் அறிக. 'உண்ணிலவு மொளியதனை விருளகற்றி' யென்றும், 'மூலமல ஞானத்தா லிடிப்ப' மெனன்றும் வருமாற்ருல் ஞானப்பெருக்கம் முன்னும் மலநீக்கம் பின்னுங் கொள்ளப்படும். 'முன்னைத் திரிமல மறுத்துப் பண்டைச் சிற்றறி வொழிந்து ஞானம், பெருகிநா யகன்றன் பாதம் பெறுவது சுத்த மாமே' [சிவஞானசித்தியார், iv, 40] என வருமாற்ருல் மலநீக்க முன்னும் ஞானப் பெருக்கம் பின்னுங் கொள்ளப்படுமாதலால் எதுவோ முந்தியதென மலையற்க. இருணீக்கமுங் கதிர்த்தோற்றமும் முற்பிற்பாடு கூருத முறைமைபோல மலநீக்கமும் ஞானப்பெருக்கமும் உடனிகழ்ச்சியேயா மாதலின் இரண்டினுள் எதை முற் கூறலுமாம். அற்ருகலின்றே அழுக்கொழிதலே புடைவைக்குச் சுத்தியாவதுபோலப் பாசக்ஷயமே ஆன்மாவுக்குச் சுத்தியாயிருந்தும், ஒன்பதில் ஆன்ம சுத்தியும் பத்திற் பாசக்ஷயமுங் [சிவஞானபோதம் ix, x] கூறினர் முதனூலாசிரியரும். இனிச் சுத்தாவத்தையின் உண்மை விரிவுகளெல்லாந் தொகுத்தும் விரித்தும் முன்னர் உண்மை யதிகாரத்துட் கூறப்படும். ௪௯

இதுகாறுங் கூறியவாற்ருற் பெறப்படுஞ் சித்தாந்த முத்தியாவதிதுவென்பது கூறுமுகத்தால் ஏனைச் சமய முத்திகளினது இழிவுஞ் சித்தாந்த முத்தியினது பெருமையுங் கூறுவான் தொடங்கினர்.

## முத்தி பேதங்களதியல்பு

50. அரிவையரின் புறமுத்தி கந்த மைந்தும்
அறுமுத்தி திரிகுணமும் அடங்கு முத்தி
விரிவுவினை கெடுமுத்தி மலம்போம் முத்தி
விக்கிரக நித்தமுத்தி விவேக முத்தி

பரவுமுயிர் கெடுமுத்தி சித்தி முத்தி
பாடாண முத்திஇவை பழிசேர் முத்தி
திரிமலமும் அகலஉயிர் அருள்சேர் முத்தி
திகழ்முத்தி யிதுமுத்திக் திறத்த தாமே. ௩௨

(உரை) அரிவையரின் புறுமுத்தி - மாதர்கள் தோள் புணர்தலே முத்தியென்று உலகாயதர் கூறுவதும்; கந்த மைந்தும் அறுமுத்தி - உருவம் வேதனை குறிப்பு பாவனை விஞ்ஞானமென்னும் ஐந்து கந்த முங் கெடுதலே முத்தியெனப் புத்தரிற் சவுத்திராந்திகன் கூறுவதும்; திரிகுணமும் அடங்கு முத்தி - அஎ, உச என்னும் போதங்களுடைய[?] மூன்று பேதகுணங்களுங் கெடுகையே முத்தியெனச் சமணரில் நிகண்டவாதி கூறுவதும்; விரிவுவினை கெடுமுத்தி - பஞ்சபூதங் காலந் திக்கு ஆன்மா மனமென்னு மொன்பது திரவியங்களின் பொது வியல்பு வேற்றியல்புகளை யறியும் ஞானத்தாற் கன்மம் நசிப்பதுவே முத்தியென வைசேடிகர் கூறுவதும்; மலம்போம் முத்தி - பாசம் நீங்கவே சிவத்துவாபிவியத்தி விளங்கும் அதன்மேல் முதல்வன் பிரேரகனல்லன் பாசநீக்கமே முத்தியென அருவசமவாத சைவர் கூறுவதும்; விக்கிரக நித்தமுத்தி - சாரூபம்பெற்று அத்திரட்சியி னிருப்பதே முத்தியென உருவ சிவசமவாத சைவர் கூறுவதும்; விவேக முத்தி - தானே பிரமமென விவேகித் தறிவதே முத்தியென மாயா வாதிகள் கூறுவதும்; பரவுமுயிர் கெடுமுத்தி-உயிர்கெட்டுச் சிவத்தோடொன்றுவதுவே முத்தியெனப் பரிணமவாத சைவர் கூறுவதும்; சித்தி முத்தி-அட்டமா சித்தியை யடைவதே முத்தியென மானிடச் சித்தர்களாற் கூறப்படுவதும்; பாடாண முத்தி - நித்திரை செய்வோர் ஒன்றும் அறியாத முறைமைபோற் கேவலத்தை யடைவதே முத்தியெனப் பாடாணவாத சைவர் கூறுவதும்; இவை பழிசேர் முத்தி - இங்ஙனங் கூறிய சமயவாதிகள் முத்திகளெல்லாஞ் செனன மரணத் துன்பத்துக்கேதுவாகிய முத்தியேயாம்; திரிமலமும் அகலவுயிர் அருள் சேர் முத்தி - யாம் கூறப்புகுந்த சித்தாந்த முத்தியாவது மும்மலங் களும் நீங்கி ஆன்மாச் சிவவியாபகத்துள் ஞாயிற்றி னொளியி னடங்கிய நட்சத்திரம்போல் அடங்குவதே சுத்தாத்துவித முத்தியாம்; திகழ் முத்தி யிதுமுத்திக் திறத்த தாமே-இந்தச் சுத்தாத்துவித முத்தியே யாவைக்கும் மேலான முத்தியாய்ச் செனனமரணத் துன்பந் தீர்ந்து சிவானந்தத்தை யடையும் வெற்றிப்பா டுடைய முத்தியாம். ௫௦

# உண்மை யதிகாரம்



சிவஞானபோதம் சிவஞான சித்தியார் என்னும் இரண்டு நூலும் இரண்டு சூத்திரம் பொதுவும், எட்டாஞ் சூத்திரம்வரை ஆறு சூத்திரம் உண்மையும், பன்னிரண்டாஞ் சூத்திரம்வரை நாலு சூத்திரம் உபாயமுமாக முக்கூறும் இது தொகைவகை விரியென்று முக்கூறு மாம். அற்றாகலினன்றே 'முற்றுமற்றி னத்துவித முப்பொருளு' மென்று கூறி 'இதற்கடைவே மூன்றிலுயிர்' [தக்ஷிணாமூர்த்தி தேசிகர் தசகாரியம், 3] என்றெடுத்துக்கொண்டு, 'சொற்றவிது கூடாதே லுபாயவழி தனையருளாற் சொல்லியொக்கத் தான்கூட்டிச் சுத்தி செய்த வொன்பதி [ஷை, ஷை, 5]' லென்றா ரெமதாசிரியரும். அவ்வாறே 'பலகலையு மெண்ணரிது' [சுவாமிநாத தேசிகர் தசகாரியம், 20] மென்று குறிகாட்டி இந்நூலிற் பொதுவைம்பதும் இரண்டு சூத்திரமென வரையறுத்தோதியதுமாம். அவ்வாறே நூலாசிரியர் கருத்தாய்ப் பொதுவைம்பதும் இரண்டு சூத்திரப்படியே தொகையாக வெடுத்து ஒரு நூலாக ஆதியந்த முடித்து முத்தியிலக்கணமுங் கூறிய தாம். வழிநூலாசிரியர் உண்மை எட்டாஞ் சூத்திரம்வரை முடித்து இறுதியில் 'ஆசையொடு மங்குமிங்கு மாகியலம் வருவோ ரரும்பாச மறுக்கும்வகை யருளின்வழி யுரைப்பா' [சிவஞான சித்தியார், vii, 39] மென்றதுமிது. முதனூல் இரண்டு சூத்திரத்து இவ்வாறு பொருள் முடிவது அப்பன்னிரண்டு சூத்திரத்தையும் வினவிய வினு வெண்பாப் பன்னிரண்டையும் அந்நூலோடு சமரசம்பண்ணிச் சங்கிரகமாகச் சிந்தித்து அறியத்தக்கது. இனி, உண்மையாவது மேற் கூறிப்போந்த பொருளை அனுவதித்து எடுத்துக்கொண்டு அதன் உண்மை கூறுவதாம்.

51. இங்கிவை பொதுஇ யம்பும் என்பர்கள் இதன்மே லான்மாத்
தங்கிய அஞ்ச வத்தை தன்னுண்மை உணர்த்துந் தன்மை
பொங்கொளி ஞான வாய்மை அதன்பயன் புனிதன் நாமம்
அங்கதில் அணைந்தோர் தன்மை அறைகுவன் அருளி னாலே.

**(உரை)** இங்கிவை பொது இயம்பும் என்பர்கள்-இங்ஙனங்கூறிப் போந்தவையுட் பதி பசு பாச விலக்கணம் பொதுவாய்க் கூறியதாம்; இதன்மேல் - இனிக் கூறுவது அதனுண்மையாம்; அது கூறுங் கிரம மேதென்னில்—ஆன்மா-ஆன்மாவின் இலக்கணமும்; தங்கிய அஞ்சவத்தை - ஆன்மா அவத்தைப்படும் முறைமையும்; தன்னுண்மை உணர்த்துந் தன்மை - ஆன்மாவின் உண்மையும் அதற்கு அறிவிக்கிற முறைமையும்; பொங்கொளி ஞான வாய்மை - பொறிவாய்ச்

சுயம்பிரகாச ஞானமாயுள்ள திருவருளி னுண்மையும்; அதன்பயன் - அந்த ஞானத்தால் உயிர்கள் பெறும் பயனும் ; புனிதன் நாமம் - நின் மலனாகிய கர்த்தாவினது திருநாமமாகிய பஞ்சாக்கரத்தின் உண்மை யும் ; அங்கதில் - அந்த நின்மலானந்த நிறைவில் ; அருளினாலே அணைந்தோர் தன்மை - அவன் திருவருளே கண்ணாகச் சேர்ந்த மகத்துக்கள் தன்மையும் ; அறைகுவன் - ஆக எழுவிதமாகச் சொல் லத் தொடங்காநின்றேன்.

மேற் கூறிப்போந்ததனுள் முதனூல் [சிவஞானபோதம்] மூன் றாஞ் சூத்திரத்தில் ஆன்மாவுக்கும், நாலிற் பாசத்துக்கும், அஞ்சிற் பதிக்குங் குணத்தன்மை கூறுவதாம். அற்றாகலினன்றே ' ஆன்மப் பிரகாச முணர்த்துத' [iii]வென்றும், ' தமது முதலுபகார முணர்த் துத ' [v] வென்றுங் கருத்துரை கூறினார் முதனூலாசிரியரும். ருக

---

# மூன்றாஞ் சூத்திரம்

## ஆன்ம வியல்பு

இனி, எட்டுச் செய்யுளால் மூன்றாஞ் சூத்திரத்துட் கூறப்படும் ஆன்மப்பிரகாசத்தின் பொருளனைத்துங் கூறுவான் தொடங்கினார்.

52. செறிந்திடும் உடலுள் மன்னிச் சேர்புலன் வாயில் பற்றி
அறிந்ததில் அழுந்தும் ஒன்றும் அறிந்திடா தறியுந் தன்மை
பிறிந்தடை அஞ்ச வத்தை பெருகிய மலத்தாற் பேணி
உறுந்தனி அதீதம் உண்மை உயிர்க்கென உணர்த்து மன்றே.

**(உரை)** செறிந்திடும் உடலுள் மன்னி - சிருட்டிகாலமுதற் சங் காரகாலமளவும் அழியாது ஆதாரமாய்ப் புரியட்டகத் திரட்சியாற் பொருந்தப்பட்ட சூக்கும தேகத்திலே நிலைபெற்று நின்று ; சேர் புலன் வாயில் பற்றி - கன்மத்தளவில் அந்தச் சூக்கும தேகத்தினின் றும் உண்டாகப்பட்ட தூலதேகத்திற் சத்தாதி விடயஞ் சேர்தற்கு வாயிலாகிய இந்திரியங்களைப் பற்றுக்கோடாக நின்று; அறிந்து-அந்தக் கரணங்களிடமாகச் சுகதுக்கங்களை யறிந்து; அதில் அழுந்தும் - கலாதி களால் மோகத்தை யடையும்; ஒன்றும் அறிந்திடாது - அந்தத் தத்து வங்கள் உயிர் அறிதற்குக் கருவியாதல் மாத்திரையேயன்றி அவற்று ளொன்றும் அறிவுடையதன்று; உயிர்தா னறிவுளதோவெனில்—அறியுந் தன்மை-ஆன்மாத் தத்துவங்களையின்றித் தனித்து ஒன்றை

அறியவுமாட்டாது அத் தத்துவங்களை இடையீடின்றிப் பொருந்தி யறியவுமாட்டாது; பிறிந்து அஞ்சு அவத்தை பேணி-கொள்ளிவட்டஞ் சுறங்குபோற் றரிப்பின்றித் தத்துவங்களைப் பிறிந்துங் கூடியும் அஞ் சவத்தையினுஞ் சுற்றிவரும்; அது என்ன காரணத்தாலெனில்— பெருகிய மலத்தா லடைவுறும் - பெருகிய சகசமல மறைப்பினாற் கருவிகளிற் றரித்து நின்றறியமாட்டாது அவத்தையைப் பொருந்தும்; இனி அதன் உண்மை யாதோவெனில்—தனி அதீதம் உண்மை உயிர்க்கு - பசுத்துவ உபாதியாற் பசுவெனப் பெயர்படைத்த உயிர்க் குக் கருவிகள் பிரிந்தவழி யுள்ள அறிவின் உண்மை ஒரு கருவியும் பொருந்தாத அதீதத்தினிலையேயாம்; என - இவ்வாறுடையோ னெனப் பதிப்பொரு ளறிந்து; உணர்த்து மன்றே - கருவிகளைக் கூட்டிச் சுகதுக்க விளைவுகளை அறிவிக்கும் அனாதிகேவல நீக்கமுதல்.

இனி, உடம்பாதல் உடம்பகத்துளவாகிய ஐம்பொறிகளாதல் பொறிகள் விடயத்திற் சேறற்குரிய அந்தக்கரணங்களாதல் இவைகளை யூக்கி இயங்கும் பிராணவாயுவாதல் அறியுமென்னாது இவைகட் கெல்லாம் வேறாய் உயிருண்டென்பது எற்றாலெனின்,

53. உருஉணர் விலாமை யானும் ஒரொரு புலன்க ளாக
மருவிநின் றறித லானும் மறுதிகள் தம்மின் மன்னித்
தருபயன் நுகர்த லானும் உயிர்சட மாத லானும்
அருவினை உடலுள் ஆவி அறிவினால் அறியு மன்றே. ௩

(உரை) உருவுணர் விலாமை யானும் - உயிர் பிரிந்துழி உடல் காட்டமுந் தானும் வேறறக் கிடந்து வேம்பொழுது சூடறியாதபடி யால் உடலறியாது, அவற்றிற்கு வேறாக உயிருண்டென்றே கொள்ளப் படும்; இனி யைம்பொறிகளோவெனில்—ஒரொரு புலன்க ளாக மருவி நின் றறித லானும்-பொறிகள் தம்முள் ஒன்றறிந்தது ஒன்றறியாதா யும் அதன்கண் ஓர் அறிவிருந்து ஒவ்வொரு விடயங்களாக ஐந்தையு மறிந்து வருவதாலும் அதற்கு வேறாய் உயிர் உண்டு; ஒன்றொன்றா யறிதல் புலனுணர்வாகில் உயிருணர்வு ஏககாலத்தில் ஐந்து விடயத் தையு மறியுமோவெனில், 'ஒன்றொன்றா யுணர்தலினாற் பசுவா' [சிவ ஞானசித்தியார், ix, 2]மெனவரும் வழிநூற் சுருதிபற்றி உயிரும் ஒன் றொன்றாய் அறியினும் பொறிகள் உயிருணர்வு கலந்துழி ஞானமொன் றே யுள்ளனவாம், உயிர் அவ்வாறன்றி இச்சை ஞானங் கிரியை மூன்

றுடைமையாற் பொறிகட்கு வேருய் உயிருண்டென்றே கொள்ளப் படும். இனி அப்பொறிகளை விடயத்திற் சேறற்குச் செலுத்துவ தாய அந்தக்கரணங்களோவெனின்—மனுதிகள் தம்மில் மன்னித் தரு பயன் நுகர்த லானும் - அந்தக்கரணங்களிடமாக நின்று அவைகளிட மாகப் பற்றி நிச்சயித்து அகங்கரித்து ஐயுற்றுச் சுகதுக்கங்களையெல் லாம் அறிவதோர் அறிவு உளதாகலின் அவைகட்கு வேருய் உயிருண் டென்றே கொள்ளப்படும். இனி அவைகளை யூக்கி யியங்கும் பிராண வாயுவோவெனில்—உயிர்சட மாத லானும் - பிராணவாயு இயங் குங் கேவலத்து அறிவு நிகழாமையாற் பிராணவாயுவும் இவை களை யெல்லாம்போலச் சடமேயாம் அதற்கு வேருய் உயிருண் டென்றே கொள்ளப்படும்; அப்படியாகில் அறிவாயுள்ள உயிருக்கு இந்தச் சரீரத்தைப்பற்றி யறியவேண்டுவது ஏதென்னில்—உட லுள் ஆவி யறிவிஞல் அருவினை யறியு மன்றே-இங்ஙனம் கூறப்பட்ட சடமான சரீரத்தினிடமாகச் சித்தாகிய உயிர் தனதறிவிஞல் வினைக் கீடாகிய சுகதுக்கங்களை அறியும்பொருட்டுத் தேகத்தைப்பற்றி யனுதி சிருட்டி முதலுளதாம்.

ஈண்டுக் கூறியவாற்ருல் இருவித உடலுஞ் சடமென்றும் உயிர் சித்தென்றுஞ் சாதிக்கப்பட்டமையிற் சித்தாயிருந்துஞ் சடமாகிய கருவிகளின்றி அறிவு விளங்காமையிற் சித்தோ அன்ருேவெனும் ஐயத்தின்கண் நிகழும் ஆசங்கை நீக்கு முகத்தால் உயிர் சித்தாமாறு வலியுறுத்துதற் கெழுந்தது வருஞ் செய்யுளென்பதாம். ருரு

54. அறிவெனில் வாயில் வேண்டா
அன்றெனில் அவைதாம் என்னை
அறிவதை உதவு மென்னில்
அசேதனம் அவைதா மெல்லாம்
அறிபவன் அறியுந் தன்மை
அருளுவன் என்னி லான்மா
அறிவில தாகும் ஈசன்
அசேதனத் தளித்தி டானே. சு

**(உரை)** அறிவெனில் - ஆன்மா அறிவுள்ள பொருளாமாகில்; வாயில் வேண்டா - வினைகளை யீட்டுதற்கும் நுகர்தற்கும் வாயிலாகிய கருவிகளைப் பொருந்தி யறியவேண்டுவதில்லை; அன்றெனில்-ஆன்மா

அறிவுள்ள பொருளல்லவென்று நீ சொல்லில் ; அவைதாம் என்னே - அந்தக் கருவி கரணங்கள்தாம் ஏதுக்காக வந்து பொருந்தின ; அறிவதை யுதவு மென்னில் - அறிவிலாத உயிர்க்கு அறிவிக்கும்படி கர்த்தாவாற் கூட்டப்பட்டு வந்து பொருந்தினவாக வேணுமெனில் ; அசேதனம் அவைதாம்-நீ அறிவிக்க வந்ததென்று சொல்லிய கருவி கரணங்களெல்லாம் ஆன்ம சிற்சத்தியையின்றித் தொழிற்படாத சட மாகையினாலே அவை எப்படி அறிவிக்கும் ; எல்லா மறியவன் - சர் வஞ்ஞனாகிய கர்த்தாவாற் கூட்டப்படுகையால் ; அறியுந் தன்மை அருளுவன் என்னில் - கல்லானை கரும்பு தின்றதுபோலச் சடமாகிய தத்துவங்கட்கு அறிவைக் கொடுத்து அறிவில்லாத உயிருக்கு அறிவிக்கும்படி செய்வனென்னில் ; ஆன்மா அறிவிலதாகும் - ஆன்மாவும் அறிவில்லாத சடமேயாகும் ; ஈசன் அசேதனத் தளித்தி டானே - இரண்டு பொருளுஞ் சடமேயா யிருக்கில் ஒரு சடத்துக் கறிவைக் கொடுத்து அவற்றைக் கொண்டு மற்றொரு சடத்துக் கறிவிக்கவேண்டுவதில்லையாகலின் உயிர் சித்தென்றே கொள்ளப்படும். ருச

இங்ஙனங் கூறியவாற்றாற் கருவி கரணங்கள் சடமென்றும் உயிர் சித்தென்றும் பெறப்பட்டமையின் முப்பொருளிற் பாசமொன்றுமே சடம் ஏனையிரண்டுஞ் சித்தாகலிற் சித்திரண்டுக்குந் தம்முள் அந்தரங்க வேற்றுமை யுளதோ இலதோ வென்னும் ஐயம் நீக்கு முகத்தாற் பாசங்களை நோக்கி உயிர் சித்தாயினும் பதிப்பொருளை நோக்கித் தூலசித்தாமாறும் இனம்பற்றி இரண்டுஞ் சித்தாயினும் உயிரை நோக்கிப் பதிப்பொருள் அதிசூக்கும சித்தாமாறுந் தெரித் துணர்த்து முகத்தாற் பசுவினது அறிவு இத்துணைப் பகுதி யென்பதூஉம் அதனால் அறியப்படும் பொருளின் றன்மைகள் இவையிவை யென்பதூஉம் மூன்று செய்யுளாற் றெரித்துக் கூறப்புகுந்த ஆசிரியர் முதற்கண் ஒரு செய்யுளால் உயிரறிவினா லறியப்படும் பொருளிது வென வரையறை கூறுவான் தொடங்கினர். மேற்கூறியவாற்றால் உயிர் அறிவுடைய பொருளாகலின் அவ்வறிவான் ஏனை இரண்டு பொருளையும் அறியுமியல்புடைத்துப் போலுமெனின்,

55. அறிவினால் அறிந்த யாவும் அசத்தா தல் அறிதி யென்றும்
அறிவினால் அறியொ ணாதேல் ஆவதொன் றின்மை தொன்மை

*அறிவுகாண் ஒன்றை முந்தி அதுவது வாகக் காணும்*
*அறிவுகாண் அசத்து மற்ற தறிவினுக் கறியொண் ணாதே.* ரு

**(உரை)** *அறிவினால் அறிந்த யாவும் அசத்து*-உயிரறிவினால் அறிபப்படுவதெல்லாம் அழிபொருளேயாம்; *ஆதலறிதி யென்றும்* - சத்தாயுள்ள ஏனை யிரண்டு பொருளும் இவ்வறிவால் ஒரு காலத்தினும் அறியப்படாததேயாம் ; *அறிவினா லறியொ ணாதே லாவதொன் றின்மை* - உயிரறிவினால் அறியப்படாத பொருள் சத்தேயாகில் அதனாலாகிற கருமம் ஒன்றுமில்லையாமென்னில் ; *தொன்மை அறிவுகாண்* - அனாதிபோதனாகிய பதிப்பொருள்அறிவாகிய சிவஞானத்தால் அறியப்பெறுவதுண்டுகாண் ; *ஒன்றை முந்தி அதுவது வாகக் காணும் அறிவுகாண் அசத்து* - காலத்தாலும் இடத்தாலும் ஏகதேசப்படுதலும் அதுவதுவாய்ப் பல்வேறுபடுதலும் மலத்தொடு விரவுதல் வேறுபடுதலுமாகிய இவ்வியல்புகளுடைமையின் அச்சுட்டுணர்வு அசத்தேயாய் அதனாலறிவதெல்லாம் அழிபொருளேயாம் ; *மற்றது* - இவ்வாறு காலத்தானும் இடத்தானும் ஏகதேசப்படாததுமாய் அழிபொருளல்லாததுமாகிய சத்தாயுள்ள பொருளை ; *அறிவினுக் கறியொண்ணாதே* - சுட்டறிவினால் அறியக்கூடாது.

'உயிரறி' வென்றெடுத்துச் 'சுட்டறி' வென்று முடித்தமையாற் பாசஞானத்திற்கும் பசுஞானத்திற்கும் வேற்றுமை யில்லைப் போலுமென மலையற்க. அவ்விரண்டிற்கும் அந்தரங்க வேற்றுமை பெரிதுமுள்ளன. அவையெல்லாம் முன்னர்க் கூறப்படும். ஆயினும் ஒன்றொன்றா யறியும் இனம்பற்றி ஈண்டுக் கூறியதாம். ஒன்றொன்றா யறிதல் இரண்டு ஞானத்திற்கும் பொதுவென்பது குருமுகமாயறிக. அற்றாகலினன்றே 'நெறியி னறிவித்தா லன்றி யறியா வளங்கள்' [சிவஞானபோதம் viii, 4] என்றார் முதனூலாசிரியரும். ருரு

இனிச் சத்தாதற்றன்மை முப்பொருட்கு முண்மையின் ஈண்டுச் சத்தையறியாதென்றது சத்துச் சித்து ஆனந்தமென்னும் முத்தன்மையுமுடைய பதிப்பொருளளவோ அன்றிச் சத்துச்சித்தென்னுமிருதன்மையுமுடைய பசுப்பொருளளவோ அன்றிச் சத்தென்னுந் தன்மையொன்றுமுடைய பாசமுள்பட முப்பொருளளவோ என்னும் ஐயம் நீக்குமுகத்தால் அப்பிரமேயம் ஐந்திற்குஞ் சமானமாதலைக்

காட்டி இரண்டு செய்யுளாற் பசுஞானத்தின் உண்மை வலியுறுத்து வான் தொடங்கினர்.

**56.** எவ்வறி வசத்த றிந்த தெனில்உயிர் அறியா தீசன்
அவ்வறி வறியான் அல்ல தசேதனம் அறியா தாவி
செவ்விய கருவி கூடித் தெரிவுறா தருளிற் சேரா
துவ்விரு வகைய தென்னில் ஒளியிரு ளொருங்கு றுவே.

(உரை) எவ்வறி வசத்தறிந்த தெனில் - ஈண்டு அழிபொருளை யறிந்துவரும் அறிவு இங்ஙனங் கூறிப்போந்த மூன்று அறிவினுள் எந்த அறிவென்னில்; உயிர் அறியாது-பசுஞானம் வியஞ்சக அறிவை யின்றிச் சுதந்தரமாய் அறியாதாகையால் உயிர் தானேயறியாது; இனிச் சிவஞானம் அறியுமோவெனில்—ஈசன் அவ்வறி வறியான் - பதிப்பொருள் சர்வமும் ஏககாலத்தில் அறிவதன்றி இவ்வாறு ஒன் றொன்றாய் அறியாதாகையாற் சிவஞானமுமன்று, இனிப் பாசஞானம் அறியுமோவெனில்; அல்ல தசேதன மறியாது - பாசம் அறிவற்ற சட மாகையாற் பாசஞானமும் அறியாது; இனிப் பாசஞானம், பசுஞான மென்னுமிரண்டும் விரவியறியுமோவெனில்—ஆவி செவ்விய கருவி கூடித் தெரிவுறாது - தனக்கென அறிவற்ற உயிரறிவும் அவ்வறிவை யின்றிச் செயலற்ற பாசவறிவுந் தாமே கூடியறிந்ததுமன்று; இனிப் பசுஞானம் சிவஞானத்தோடு விரவியறியுமோவெனில்—அருளிற் சேராது - பாசத்தோடு விரவிய அறிவு அப்பாசம் நீங்கியன்றிச் சிவ ஞானத்துள் அடங்காது; உவ்விரு வகைய தென்னில் - பசுஞானம் ஏனை இரண்டு ஞானத்தோடு கூடிய சமுதாயத்தில் அறியுமென் னில்; ஒளியிரு ளொருங்கு றுவே - ஒளிக்கும் இருளுக்கும் ஆகாச மொன்றே யிடமாயிருக்கினும் அவ்வாகாசம் இவ்விரண்டினுள் ஒன் றோடு கூடி நிற்பதன்றி இருள் ஒளி யென்னும் இரண்டோடுங் கூடி நில்லாத முறைமைபோல ஏனை இரண்டறிவும் உதித்தற் கிடமாயிருப் பது பசுவறிவாயினும் அவ்விரண்டுள் ஒன்றோடன்றி இரண்டறி வோடும் ஒருகாலத்திற் பொருந்தி யறியாது.

இதனாற் கூறப்பட்டது சுட்டுணர்வாவது பாசத்தின் றன்மை யாயினும் அது சடமாகையானும் பசுவின் தன்மை சுதந்தர ஞான மின்மையானும் பதியின் தன்மை மலரகிதனாதலானுஞ் சுட்டுணர்வு எப்பொருளி னுணர்வோ எனும் ஐயத்தான் நிகழ்வதொரு வினாவாய்

முடிந்தமையறிக- இதற்கு விடை முன்னர்ப் 'பன்னிறங் கவரு' [69] மென ஞான வாய்மை கூறவருஞ் செய்யுளிற் பெறப்படும். இதனாற் பாசஞ் சடமென்றும், பசு தூல சித்தென்றும், பதி அதிசூக்கும சித்தென்றுஞ் சாதித்தமை நுண்ணுணர்வினா லறிக. ஈண்டுக் கூறியவாற்றாற் பெத்தகாலத்து நிகழுஞ் சுட்டுணர்வின் தன்மை இவை யென்பதூஉம் ஆண்டைக்கு இறைவன் உபகாரம் இன்றியமையாது வேண்டப் படுமென்பதூஉம் பெற்றாம். இனிச் சுத்தகாலத்து நிகழும் அறிவின் தன்மை இவையென்பதூஉம் ஆண்டைக்கு இறைவன் உபகாரம் இவை யென்பதூஉங் கூறப்படும். ருசு

பதி பசு பாசமென மூன்றும் பாசூக்கும தூலமாகத் தம்முள் அந்தரங்க வேற்றுமை பெரிதும் உடையனவாயினும் அப்பிரமேயத் தன்மையாற் சமனாதலிற் சுத்தகாலம் பதியை யறிந்து செறிவதும் பாசத்தை யறிந்து பிரிவதுமாகிய அறிவு நிகழ்வ துண்மையானும் பசுவுக்குச் சுதந்தர வறிவின்மையானும் ஆண்டு நிகழும் அறிவு யாதோ வென்னும் ஐயம் நீக்குமுகத்தால் அறிபொருளை நோக்கிச் சத்தாயினும் பதிப்பொருளை நோக்கி அசத்தேயாகிய பாசத்தையும் அதனை நோக்கிச் சத்தேயாகிய பதியையும் அறிந்து பிறிதல் செறிதலாவது உயிரென அதன் உண்மை கூறுவான் தொடங்கினார்.

57. சத்திது வென்ற சத்துத் தானறி யாத சத்தைச்
சத்தறிந் தகல வேண்டா அசத்திது சத்தி தென்றோர்
சத்திருள் ஒளிய லாக்கண் தன்மைய தாம்அ சத்தைச்
சத்துடன் நின்று நீங்குந் தன்மையாற் சதசத் தாமே. எ

**(உரை)** சத்திது வென்ற சத்துத் தானறி யாது - பாசஞ் சடமாகையால் அது பதிப்பொருளை இஃது இவ்வியல்பிற்றெண அறிதல் செறிதல் செய்யுமென்பது கூடாது; அசத்தைச் சத்தறிந் தகல வேண்டா - பதிப்பொருள் அனாதிபோத முடையதாகலிற் பாசம் ஞான திரோதகத் திரவியமாயினும் ஒளிமுன் இருள்போலப் பதிப்பொருள் முன் எதிர்நில்லாதாகலின் அது பாசம் இவ்வியல்பிற்றெண வறிதல் பிறிதல் செய்யவேண்டுவதில்லை ; இனி இவ்விரண்டினையும் அறிவது ஆரென்னில்—அசத்திது - ஞானதிரோதகத் திரவியமாகிய பாசம் இதுவென் றறிதல் பிறிதல் செய்யவும் ; சத்திது - பாசநாசத் திரவியம் இதுவெனப் பதிப்பொருளை அறிதல்செறிதல் செய்யவும் ; ஓர்

சத்தென்று - இவ்விரண்டிற்கும் வேறாகிய ஓர் ஆன்மாவாகிய பொருளுண்டே அதுவே உரித்தாம்; அஃது என்போல வென்னில்—இருளொளி யலாக்கண் தன்மைய தாம் - இருளில் அழுந்தி மறைபட்டு இருளல்லாமலும் ஒளியிற் பொருந்தி யறிந்தும் ஒளியல்லாமலுமிருக்குங் கண்ணின் தன்மைபோல்; அசத்தைச் சத்துடன் நின்று நீங்குந் தன்மையாற் சதசத் தாமே-பாசத்திற் பொருந்தி ஒன்றுமறியா திருந்தும் பதியைப் பொருந்தி யறிந்தும் பாசத்தைப் பிரிந்து பதியிற் செறிவதாலுஞ் சத்து அசத்தென்னும் இரண்டிற்கும் இடை நிலத்தின் பெயராய்ச் சதசத்தென்று சொல்லப்படும்.

ஈண்டுப் பாரிசேட அளவையான் உயிரே அவ்விரண்டினையும் அறியுமென உபாயத்தாற் சாதிக்கப்பட்டதாம். இதன் உண்மை தற்றெரிசனங் கூறத் 'தன்னறிவதனு' [72] வென முன்னர் வருஞ் செய்யுளிற் பெறப்படும். இவ்வாறு பாரிசேடத்தாற் பெறினும் உயிர்க்குச் சுதந்தர அறிவின்மை மேலே சாதித்துப் போந்தமையின் அறிவில்லாத உயிருக்குப் பதிப்பொருளே அறிவைக் கொடுத்தறிவிக்குமெனக் கோடுமெனும் ஐயம் நீக்குமுகத்தால் 'ஈச னசேதனத் தளித்திடானே' [54] என மேலே கூறிப் போந்தவற்றை ஈண்டு அனுவதித்துக் கொண்டு திட்டாந்த பூர்வமாக உயிரறிவின் தன்மை இதுவென வலியுறுத்தற் கெழுந்தது வருஞ் செய்யுளாம். ருஎ

58. கண்ணொளி விளக்களித்துக் காட்டிடு மென்னின் முன்னம்
கண்ணொளி ஒன்று மின்றும் விளக்கொளி கலந்த வற்
கண்ணொளி அகல நின்றே கண்டிடும் வேறு காணு[ றைக்
கண்ணொளி விளக்கின் சோதி கலந்திடுங் கருத்தொன் றன்றே.

(உரை) கண்ணொளி - கண்ணுக்கு வியஞ்சக வொளியற்ற விடத்துக் காட்சி யின்மையால் அதற்குச் சுதந்தர வொளியும் இல்லை; விளக்களித்து - வியஞ்சகமா யறிவிக்கும் விளக்கொளி வந்த விடத்துக் காட்சி யுண்மையால் விளக்கே கண்ணுக் கொளியைக் கொடுத்து; காட்டிடுமென்னில்-பதார்த்தங்களையும் அறிவிக்கும் இதுபோல உயிர்க்குச் சிவசிற்சத்தியையின்றி அறிவு நிகழாமையிற் சுதந்தரவறிவில்லை சிவசிற் சத்தியே உயிர்க்கு அறிவைக் கொடுத்து அறிவிக்குமென்று நீ சொல்லில் ; முன்னங் கண்ணொளி யொன்றுமின்றும் - அப்போது விளக்கு வருதற்குமுன் கண்ணுக்கு ஒளியொன்று மில்லை யாக

வேணும்; விளக்கு வந்துழியுங் கண்ணிந்திரிய மொன்றே காண்ப தன்றி ஏனை நான்கு இந்திரியங்கட்குங் காட்சி செல்லாமையானுங் கண்ணிந்திரியத்தினுந் தனக்கொளியில்லாமல் ஒளியிழந்த அந்தகன் கண் காணாததினாலும், பாரிசேடத்தாற் கண்ணுக் கியல்பாக ஒளியுண் டென்றே கொள்ளப்படும். பாரிசேடத்தாற் பெறுவதன்றிக் கண் ணிடத்துக் காண்பதில்லையே யெனில்—விளக்கொளி கலந்தவற்றைக் கண்ணொளி யகல நின்றே கண்டிடும்-விளக்கொளியி லிருக்கும் பதார்த் தத்தைத் தூர இருட்டிலிருந்த கண்ணுங் காணப்பெறுதலின் அவ் வொளி அக் கண்ணினிடத் துள்ளதெனப் பிரத்தியட்சத்தும் அறியப் படும்; வேறு காண - ஒளி யுண்டாகில் விளக்கொளியற்றவிடத்து அறி வில்லையேயென்னில் அது வியஞ்சகவொளியிற் கலந்தன்றி அறியாது; ஆகில் அதனியல்பு எதென்னில்—கண்ணொளி விளக்கின் சோதி கலந் திடும்-கண்ணொளி விளக்கொளியோடு விரவியே காட்சிப்படும்; கருத் தொன் றன்றே-ஆயினுங் கண்ணொளிக்கு விளக்கொளியோடு விரவிப் பதார்த்தத்திற் பற்றுங் குண மொன்றுமே யுள்ளது.

விளக்கொளிக்கு இருணீக்கு முகத்தாற் பதார்த்தங்களிற் சென்று பற்றுதலும் கண்ணொளி காட்சிப்படுதற்குக் காட்டு முகத் தாற் கண்ணொளியோடு விரவிச் சென்று காட்டுதலுமென இரண்டு தன்மையுமுண்டு. இதுபோலச் சிவசிற்சத்தி பதிந்த விடத்தும் பாசங் கட்கறிவின்றிப் பசுவே யறிவதானும் பசுக்களினும் ஒரு தன்மையின் றிப் பலவழித்தா யறிவதானும் உயிர்க்கியல்பாக அறிவுண்டென்றே கொள்ளப்படும். ஆயினும் வியஞ்சகவறிவை யின்றி யறியாது வியஞ் சகவறிவோடு விரவி யறியினும் பசுவுக்கு ஒன்றொன்றாக அறிவித் தால் அறியுந் தன்மை யொன்றுமே யுள்ளது. பதிப்பொருட்கு அறிந் தும் அறிவித்தும் நிற்கும் இரண்டு உபகாரத் தன்மையும் உள்ளதென உவமைக் கோதி அனைத்தும் பொருட்கும் ஓதிக்கொள்க. இதனாற் பசுவறிவு இதுவென்பதூஉம் பதியறிவு இத்துணைப் பெரிய வுதவி யென்பதூஉம் இரண்டுஞ் சித்தாயினும் இரண்டறிவிற்கும் அந்தரங்க வேற்றுமை இதுவென்பதூஉங் கூறப்பட்டன. ஈண்டு விளக்கென் றது மாயாகருவிகட்கு உவமைபோலுமென மலையற்க. அறிவித்தன் மேற்றாய்ச் சிவ சிற்சத்திக்கே உவமையாம். ருஅ

ஈண்டு ஏழு செய்யுளானும் இருவகை யுடம்பிற்கும் வேறாய் அறிதற் குணமுடைத்தாய உயிர் அவ்வுடம்பின்க ணுள்ளதென்று சாதிக்கப்

பட்டது. ஆயின் இவ் வுருவின்கண் உயிர் எவ்வாறு நின்றறியுமோவென்னும் ஐயம் நீக்குமுகத்தால் உயிர் வியாபகப் பொருளாமாறு கூறுவான் தொடங்கினர். பரிணமவாதிகள் உயிராவது பிரமத்தின் பரிணமமாய்த் தோன்றி அறிவு இச்சை செயல்களை யடைந்து தீயுஞ் சூடும்போற் பேதாபேதமா மென்பர். சாங்கியர் குணிப் பொருளன்று குணத்திரவியமாய் அறிவுமாத்திரையே உயிரென்பர். பவுராணிகர் உயிர் உருவேயாமென்பர். கவுளர் அருவுருவே உயிரென்பர். பாதஞ்சலர் உயிர் ஆகாயம் போல் அரு அவிகாரியாமென்பர். வைசேடிகர் உயிராவது அசித்தேயென்பர். சைவரி லொருசாரார் அசித்து சித்தாமுயிரென்பர். பட்டாசாரியர் உயிராவது சித்தேயென்பர். பாஞ்சராத்திரிகள் உயிர் பரமாணுப்போலென்பர். மிருதிநூலார் புன்னுனிப் பனிபோல் உயிர் இதயத்தானத் துளதென்பர். சமணர் உடம்பளவி னிறைவது உயிரென்பர். அயிக்கவாத சைவர் உயிர் வியாபியாய்நின் றறியு மென்பர். இவ்வாறு பல சமயத்தாரும் உயிர் இவ் வகையுடைத்தென நிச்சயமின்றிப் பிணக்கமுறுவர். அஃதெல்லாம் போலியென மறுப்பார், அவற்றுட் சிலவற்றைச் செய்யுளின் அமைவு பற்றி யெடுத்துக் கூறுவாராயினர்.

59. ஓரிடத் திருத்தல் மாயா உருநிறைந் திடுதல் ஒன்றும்
பேரிடத் துறைதல் தானே பிறங்கறி வாகிநிற்றல்[லோர்
சோர்வுடைச் சடநி கழ்த்தல் எனுமிவை சொல்லார் நல்
ஓரிடத் துணரும் உண்மை ஒளிதரும் உபலம் போலும்.

(உரை) ஓரிடத் திருத்தல் - மிருதிநூலார் மதம்பற்றி உயிராவது சரீரத்திலே இருதயத்தானத்திற் புன்னுனிப் பனிபோலிருந் தறியுமெனில் அடிமுடியில் வருஞ் சுகதுக்கமனைத்தும் அறிதலால் அது கூடாது; மாயாவுரு நிறைந்திடுதல் - இனிச் சமணர் மதம்பற்றிச் சரீரத்தளவு நிறைந்து நின்றறியுமெனில், ஐம்பொறியினும் ஒருங்கே அறிவு நிகழாமையும் உடம்பளவிற்குத் தக்க அறிவின்றி யானை மனுடரறிவில் வைத்துப் பார்க்கச் சரிப்படாமையுஞ் சரீரத்தைக் குறைப்பக் குறைப்ப உயிருங் குறையுமெனவும் இவ்வாறு பல குற்றமுறுதலால் அது கூடாது; ஒன்றும் பேரிடத்துறைதல் - இனி அயிக்கவாதிமதம் பற்றி வியாபகமாய் நின்றறியுமெனில் அவத்தையிற் போக்குவாவுறுதலும் ஐம்புலனும் ஒருங்கே யறியாமையுமாகிய குற்றமுறுவதால் அது

கூடாது; தானே பிறங்கறி வாகி நிற்றல்-இனிச் சாங்கியர் மதம்பற்றிக் குணித்தன்மையின்றிக் கேவலம் அறிவுமாத்திரையாய் நிற்பது உயிரேயாம், அவ்வுயிரின் சந்நிதியின் உடம்பின் கண்ணே நின்று காரணங்கள் செயற்படும், அதனாற் றொழிலறிவிச்சைகள் நிகழுமெனிற் பிணத்தும் உறக்கத்தும் உயிரின் சந்நிதிக்குக் கேடில்லாதிருக்கவு முடம்பின்கண் அவை நிகழாமையின் அது கூடாது; சோர்வுடைச் சடநி கழ்த்தல் - இனி வைசேடிகர் மதம்பற்றி உயிர்சடமேயாம் அது பின்பு மனத்தோடு கூடிச் சித்தாயறியுமெனில் அறிவித்தாலறிவ துளதாகலிற் சடப்பொருள் சித்தாவது உலகத்தின்கண் இன்மையின் அது கூடாது; எனுமிவை - இவ்வாறு பல சமயத்தார் கூறுங் கூற்றுக்களை; சொல்லார் நல்லோர் - அறிவுடையோர் மெய்யென்று சொல்லார்கள்; ஓரிடத் துணரு முண்மை-விபுவாயினும் பதிப்பொருள் போல அவ்வச்சிலேடிக வியாபகமும் அதிசூக்குமசித்தாதலுமின்றி அதுவதுவாய் வசிப்புண்ணும் வியாபியாய்த் தூலசித்தாவதே உயிரின் இயல்பாம்; அஃதென்போல வென்னில்—ஒளிதரு முபலம் போலும்-தனக்கென ஒளியுடைத்தாயினும் வியஞ்சகவொளியால் வன்னத்தைக் கூட்டினவிடத்துப் பற்றும் படிகத் தன்மைபோல.

உவமைக் கோதியதைப் பொருளினும் இயைத்தோதிக் கொள்க. இச்செய்யுளில் 'தானே பிறங்கறி வாகி நிற்ற' லென்பதற்குப் பிரமப் பொருள்போல் சர்வஞ்ஞனாய் அறியுமென்று உரை கூறுவாரும் உளர். மேலைச்செய்யுட்களிற் பதிப்பொருளோடு உயிர்க்குள்ள பேதங் களும் உயிருணர்வின் றன்மையும் வரையறைசெய்து தடைவிடைக ளாற் சாதித்திருக்கவும் அது கேட்டறிந்த மாணவகன் இவ்வாறு வினவுதல் மேலைப் பொருள்களை யெல்லாம் பகைத்தலின் அப் பொருள் கொண்டிலனாய்க் கருதி மேலைச் செய்யுளெல்லாம் மாறிப் போதிக்கவேண்டுமென்று வருமாகலான் அது போலியென்றொழிக.

இங்ஙனம் எட்டுச் செய்யுளானும் ஆன்மப் பிரகாச முணர்த்திய மூன்றாஞ் சூத்திரத்தைத் தழுவிக்கொண்டு உயிர்க்குணங் கூறிப் போந்த ஆசிரியர் இனி மூன்று செய்யுளாற் பாசத்தின் குணங் கூறும் நாலாஞ் சூத்திரஞ் தழுவுதலாகப் பாசநீக்கத்திற் குரிய அவத்தை யிலக்கணங் கூறுவான் தொடங்கினர். அவத்தையாவது அறி தற்றொழி லுதிக்குந் தான பேதங்களேயா மாகலின் பாசத்தழுந்தலி னின்றும் பாசம் நீங்கவரும் அவத்தைகூறுதல் கருத்தாகலின் முதற்

கட் கேவலத் தைந்தவத்தை யுறு முறைமை கூற வேண்டுவதாம். முத னூல் நாலாஞ் சூத்திரத்திற் பாசகுணங் கூறுவது யாங்ஙனமெனில், 'மலங்கா ரணமா யவத்தையுண் டான' [கட்டளைக்கலித்துறை, 35] றென்றார் சிற்றம்பல நாடியாரும். 'எழினுன்கின் மூன்றவத்தை யிழித்திடலா லேற்றிடுத' [தக்ஷிணமூர்த்தி தேசிகர் தசகாரியம், 3] லென்றார் எமது ஆசிரியருமாகலின், மலத்திற்குக் கேவலந் தன்னியல் புஞ் சகலம் பொது வியல்புமாமென்பது சமரச சங்கிரகத்து இனிது விளங்கும், ஆண்டுக் காண்க. கேவல சகலங்கட்குத் தொகை வகை விரிவாக முக்கூற்றதாய் மேற் பொதுவுட் கூறிப் போந்தமையின் ஈண்டுச் சுத்தாவத்தை யொன்றின் விரிவே கூறுது கேவலசகலங்கள் கூறுதல் அமைவுடைத்தன்றென மலையற்க. அறிதற் றொழி லுண்டாம் முறை கூறுவதே ஈண்டுக் கூறும் அவத்தையின் கருத்தாக லானும் அறிதற்றொழிலெல்லாம் பாசநீக்கத்திற் கேதுவாதலானும், பாச பந்தத்தை நோக்கி அறிதற்றொழிலெல்லாஞ் சுத்தமேயாம். அறி விக்குந் தொழிலை வலியுறுத்துதற்காய் அறிதற் றொழிலை முற்கூறப் புகுந்தார். அற்றாகலினன்றே உணர்த்துந் தன்மைக்கருகாக உணருந் தன்மை கூறும் அவத்தையை முற்கூறினார். ஈண்டுக் கூறுங் கேவல மாவது மேற்கூறிப்போந்த ஐவகையுள் அநாதி கேவலம் காரண கேவலம் இகலிவரு கேவலமென்னும் மூன்றும் விட்டு நான்காவது தன்னுண்மை யெனவருங் கேவலமாம். மூன்றில் ஆன்மப் பிரகாசமும் நாவிற் றன்னுண்மை கூறும் அவத்தையு மாதலினன்றே 'இதுவுமது' [சிவஞானபோதம், iv] வெனக் கருத்துரை கூறினார் முதனூ லாசிரியரும்.

## நான்காஞ் சூத்திரம்

### அஞ்சவத்தை

60. எண்ணலொன் றிலாஅ தீதம் எய்திடுந் துரியத் தொன்று
நண்ணிடுஞ் சுழுத்தி தன்னின் நயர்துள தொன்று பின்னும்
அண்ணிடுங் கனவு தன்னில் ஆறேழாம் சாக்கி ரத்தின்
கண்ணுறும் அஞ்சாறுய கருவிகள் காணுந் தானே. க

(உரை) எண்ணலொன் றிலா அதீதம் - பசுத்துவ வாதனையாற் பசுவெனப்படும் உயிர்க்குத் தன்னுண்மையாவது இச்சை ஞானங்

கிரியை நிகழ்ச்சி சிறிதுமின்றித் தான்மட்டு முளனாகிய அதீதமே யாம்; ஆண்டுக் காரண சரீரமே யன்றிக் கஞ்சுக சரீரமே யில்லையென் றறிக. ஈண்டுக் காரண சரீரமென்றது ஆனந்தமயகோசத்தின் மேற்று. ஏனை நாற்கோசமுங் கஞ்சுக சரீரம் சூக்கும சரீரம் தூல சூக்குமசரீரம் தூலசரீரமெனப் பெயர்பெறும். அவை 'ஐவகையா யுறுபயன்க ளுகா வருங் கால' [41] மேயுள்ளனவாம். அதீதத்தில் ஐந்து காட்சியில்லையாம். இதுவே இருண்மலத்தி லழுந்துந் தன்னுண்மை—எய்திடும் - இனி அறிதற்றொழி லுண்டாமாறு சிவசத்தி சங்கற்பத்தாற் கருவி கரணங் கள் பொருந்தும் ; அது பொருந்தும் முறை ஏதென்னில்—துரியத் தொன்று - துரியமென்னும் உந்தித்தானத்திற் பிராணவாயு வொன் றும் பொருந்தும்; நண்ணிடுஞ் சுழுத்தி தன்னின் நயந்துள தொன்று- சுழுத்தியென்னும் இதயத்தானத்தில் சித்தமொன்றும் பொருந்தா நிற்கும் ; பின்னும் - பிராணவாயுவுக்குப் பின்னுள்ள ஒன்பது வாயு வும்; ஆறேழு-சித்த நீங்கிய அந்தக்கரண மூன்றுஞ் சத்தாதி வசனாதி பத்துமாகப் பதின்மூன்றும் ; கனவு தன்னில் ஆம் - ஆக அகம்புற மென்னும் இருவகையில் இருபத்திரண்டு கருவிகளும் கண்டத்தானத் திலே பொருந்தும் ; ஈண்டு அந்தக்கரணம் மூன்றெனபது மனத்தை மேலைச் சுழுத்தியிற் சித்தமெனக் கூறிப் போந்தமையின் ஏனைக் குணம் புத்தி ஆங்காரமெனு மூன்றுமேயாம்—சாக்கிரத்தின் . . . தானே - சாக்கிரமென்னும் இலாடத்தானத்திலே பஞ்சபூதத்தின் வழித்தாய்ச் செயற்படும் இருவகை இந்திரியம் பத்தும் பொருந்தும்.

ஈண்டு இடந்தோறும் பொருந்துமென்றது அவைகள் தொழி லைப் பொருந்துவதை யென்றறிக. இவையிற்றின் தொழில்களெல் லாம் மேற்கூறிப் போந்தமையின் ஈண்டுக் கூறுதொழிந்தார். இவை கேவலத்தி லதீதத்தினின்றே சாக்கிர மீறாக ஐந்தவத்தைப் படுந் தன்னுண்மைக் கேவலத்தையே யன்றி இருவகைச் சாக்கிராதி யவத்தையுள் ஒருவகை கீழே நோக்கும் ஒருவகை மேலே நோக்கு மென்பனவற்றுள் இவை ஒன்றெனை மலையற்க. அவை சாக்கிரத்தி னின்றே அதீத மீறாக இவ்வா றைந்தவத்தைப்படுவதும் அத்தானத் தில் அதிசூக்கும ஐந்தவத்தைப்படுவதுமென இருவகையாம். அற்றா கலினன்றே 'இலாடத்தே சாக்கிரத்தை யெய்திய வுள்ள, மிலா டத்தே யைந்தவத்தை யெய்து' [சிவஞானபோதம், iv, 7] மென்றார் முதனூலாசிரியரும். இந்த அவத்தைகளாற் போந்த பயன் சூக்கும

தேகத்தாற் போகம் புசித்தற் கேற்க எழுந்த அறிவே ஈண்டு விளங்குவதாம். கூ0

இனித் தூலதேகத்தாற் போகம் புசித்தற் கேற்க அறிவு விளங்குவது கூறுமுகத்தாற் சகலாவத்தையும் அதனாற் போந்த பயனும் அதுவே சுத்தாவத்தைக்கு வாயிலாமாறுங் கூறுவான் தொடங்கினார்.

61. இவ்வகை அவத்தை தன்னில் எய்திடும் கரண மெல்லாம்
மெய்வகை இடத்தி லுற்று மேவுமா கண்டு மிக்க
பொய்வகைப் பவம்அகற்றப் புரிந்திடில் அருளா லாங்கே
ஐவகை அவத்தை உய்க்கும் அறிவினால் அறிந்து கொள்ளே.

**(உரை)** இவ்வகை அவத்தை தன்னில் - இங்ஙனங் கூறிய சாக்கிராவத்தையில்; எய்திடுங் கரண மெல்லாம் - கூகூ தத்துவங்களுந் தொழிற்படுமாறு பொருந்துமதுவே சகலமாம்; மெய்வகை இடத்திலுற்று - அப்போது தூலதேக போகத்திற் குரியனாகி; மேவுமா கண்டு - பாகப்பட்ட முறையே வந்து பொருந்திய சுகதுக்கங்களை யறிந்து; மிக்க - அதனாற் பாசநீக்கத்திற் கேதுவாய் அறிவுடையனாய்ப் புத்தி பூர்வச் சிவபுண்ணிய மிகுத்து; பொய்வகை - அதனால் அழிபொருளாகிய தேகாதியை யுள்ளபடி யறிந்து; பவம் அகற்ற - செனனமரண துன்பத்தை நீக்குதற்கு; புரிந்திடில் - அதற்கேற்ற புத்தி பூர்வச் சிவ புண்ணியம் எட்டுவகையாகச் செய்து முடித்தால்; அருளால் - அதனால் இருவினை யொப்பு மலபரிபாகஞ் சத்தினிபாதங் குருவருளெனும் நான்கும் முறையே கிடைக்கப்பெறும்; ஆங்கே - இவ்வாறுடையனாகவே அந்தச் சகலகலாவத்தை நீங்கும் அது நீங்கின இடத்திலே; ஐவகை அவத்தை உய்க்கும் - சுத்தாவத்தை ஐந்து விதமாய் அறிவு விளங்கும்; அறிவினால் அறிந்து கொள்ளே - அவைகளை இவ்விருவகையுடம்புகளால் அறிவதுபோற் கருதாது மலமகல வகலாது மன்னு போதத் திருவருள் ஞானவிளக்கத்தால் அறியப்படும்.

சிவபுண்ணியம் பத்தினுள் அபுத்திபூர்வம் புத்திபூர்வ மென்றிருவகையாய் ஈண்டுக் கூறியொழிந்த ஒன்பதும் ஒழித்துநின்ற உண்மை ஞான மென்பதொன்றுமே சுத்தாவத்தையாய் முடியுமென்றறிக.

ஞானக் கூத்தனொரு மூர்த்திகொடு குறுகி மோக, நீடியகே வலசகல

நிகழா வாறு நிறுத்திமல மறுக்குமிது நிலையார் சுத்த' [49] மென மேற் கூறியதும் இப்பொருள்பற்றி யென்றறிக. சு௧

கேவல சகலங்களிற் படும் ஐந்தவத்தைகட்கு இரண்டு செய்யுளாற் றானங் கூறிப் போந்த ஆசிரியர் இனி ஒருசெய்யுளாற் சுத்தாவத்தைக்குத் தானங் கூறுமுகத்தால் மூவகை யவத்தையுந் தொகுத்துக் கூறுவான் தொடங்கினார்.

62. நீக்கமில் அதீத மாசு நிறைந்தகே வலமா நீர்மை
சாக்கிரங் கலாதி சேர்ந்த சகலமாந் தன்மை யாகும்
ஊக்கமில் இரண்டும் கூடா தொழியவோர் நிலையில் நீடும்
சாக்கிரா தீதம் சுத்தத் தகைமைய தாகுந் தானே. ௬௨

(உரை) நீக்கமில் . . . கேவலமாம் - பாசநீக்கமில்லாத கேவலாதீதம் பசுவின் உண்மையாயினும் அது பாசத்திற்குச் சொரூபலட்சணமாம்; நீர்மை - இனி அதன் குணமாகிய தடத்த லட்சணம் ஏதென்னில்; சாக்கிரங் கலாதி சேர்ந்த சகலமாம் - கலாதி சேராது முப்பத்தைந்து கருவி தொழிற்படுங் கேவலச் சாக்கிரம்போலன்றிக் கலாதி சேர்ந்து தொண்ணூற்றாறு தத்துவமுந் தொழிற்பட்டுப் பாசஞானம் விளங்குஞ் சகலமே பாசத்திற்குத் தடத்த லட்சணமாம்; தன்மை யாகும் ஊக்கமில் இரண்டும்-உயிர்க்குறுதி யில்லாத கேவலசகலமாய்ப் பாசத்தின் சொரூப தடத்தமாகிய இரண்டவத்தையும்; கூடா தொழிய-பொருந்தாது நீங்க; ஓர் நிலையில் நீடும் - பூரண நிலையாகிய சிவ வியாபகத்தைக் குறிக்குஞ் சோகம்பாவனையால் அறிவு விரிந்து விளங்கி ஏகதேசக் காட்சிப்படாது; சாக்கிரா தீதம் - ௯௬ தத்துவமுந் தொழிற்படுஞ் சாக்கிர நிலையிற்றானே இச்சை ஞானங் கிரியை நிகழ்ச்சி சிறிது மின்றிய தன்னுண்மை யதீதநிலை கூடும்படி ஒருவன் நிற்கப்பெறுமாயின்; சுத்தத் தகைமைய தாகுந் தானே - சுத்தாவத்தை முடியுந் தானமும் அதுவேயாம்.

'விரிந்திடு மறிவுங் காட்டி வீட்டையு மளிப்ப' [சிவஞான சித்தியார், v, 8] னென்றும், 'ஞானம், பெருநிகா யகன்றன் பாதம் பெறுவது சுத்த' [ஷை, iv, 40] மென்றும் வருமாற்றால் ஓர் நிலையில் நீடும் வியாபக அறிவே வீடுபேற்றிற் குரித்தெனவுணர்க. சு௨

# ஐந்தாஞ் சூத்திரம்

## உணர்த்து முறைமை

ஆக மூன்று செய்யுளாற் பாசகுணங் கூறும் நாலாஞ்சூத்திரந் தழுவும் அவத்தை லட்சணத்தோ டுணருந் தன்மை கூறிப்போந்த ஆசிரியர் தத்துவரூபம் பொதுவுள் இரண்டாஞ் சூத்திரத்திற் சகலாவத்தையின் இயல்புபற்றிக் கூறியொழிந்தமையின் இனித் தத்துவ தரிசனங் கூறுவது கருத்தாய்ப் பதிக்குணங் கூறுமுகத்தால் தமது முதலுபகாரமுணர்த்தும் ஐந்தாஞ்சூத்திரந் தழுவி ஐந்து செய்யுளால் உணர்த்துந்தன்மை கூறப்புகுந்தாரேனும் முதற்கண் இரண்டு செய்யுளால் தத்துவதரிசனப்படுமாறு தன்னுண்மை கூறுவான் தொடங்கினார்.

ஒரு பொருள் சவிகற்பக் காட்சியாதல் ஈண்டுக் கூறியொழிந்த சாக்கிரத்தில் கூகூ தத்துவத்தோடுங் கூடியோ அவற்றுட் சிலவற்றோடு கூடியோ அதனியல்பேதென்னில்,

63. மருவிய பொறியில் ஒன்றும் மாபூதம் ஐந்தி லொன்றும்
கருவிகள் நான்கும் நீங்காக் கலாதிகள் ஐந்தும் கூடி
ஒருபுலன் நுகரும் இந்த ஒழுங்கொழிந் துயிரும் ஒன்றைத்
தெரிவுறு தவெனு ழிந்தத் திரள்களும் செயலி லாவே.க

**(உரை)** மருவிய பொறியி லொன்றும் - வினைகளை யீட்டவும் நுகரவும் வாயிலாய்ப் பொருந்தப்பட்ட சோத்திராதி இந்திரியங்களி லொன்றும்; மாபூதம் ஐந்தி லொன்றும் - சூக்குமபூதமென்னுஞ் சத்தாதியிற் றோன்றித் தூலபூதமெனப்படும் வானாதிபூதங்களி லொன்றும்; கருவிகள் நான்கும் - புணருமுட்கரணமாக்கிப் புறக்கருவியினும் போக்குதற் கமைந்த அந்தக்கரணங்க ணான்கும்; நீங்காக் கலாதிகள் - தத்துவ வன்னரூபத்தன்மை நீங்குங்காறும் நீங்காத கலையாதியேழும்; ஐந்தும் - 'சுத்தக் கருவிக ளைந்தும்கொண் டேசொல் லவத்தையையைந்துஞ் சித்திக்கு' [கட்டளைக்கலித்துறை, 37] மென்றார் சிற்றம் பலநாடியாராகலின் அவைகளைச் செலுத்தி ஐந்தவத்தைக்குங் காரணமாகிய சிவதத்துவமைந்தும்; கூடி ஒருபுலன் நுகரும் - ஆகப் பதினெட்டுக் கருவியோடு உயிர் கூடினுல் ஒன்றை யறியும்; இந்த . . . தெரிவுறுது-இதில் ஒரு கருவி குறைந்தால் உயிர் ஒன்றை

யும் அறியாது ; அவனொழிந்தத் திரள்களுஞ் செயலி லாவே-ஆன்ம சிற்சத்தி பொருந்தாதவிடத்து அந்தத் தத்துவங்களனைத்துஞ் செய லற்ற சடமேயாம். சுங

சுத்தத்தில் அப்பிரமேயப்பொருளை யறிதற்கே இறைவனை இன்றியமையாது வேண்டப்படும், ஈண்டுத் தத்துவங்களும் உயிரும் அமைச்சரும் அரசும்போல நின்றறியும் பிரமேய அறிவுக்கும் இறை வனை இன்றியமையாதென்பது பொருத்தமுடைத் தன்றுபோலு மெனின்,

64. தனக்கென அறிவி லாதான் தானிவை அறிந்து சாரான்
தனக்கென அறிவி லாத வாயில்தான் அறியா சாரத்
தனக்கென அறிவி லாதான் தத்துவ வன்ன ரூபன்
தனக்கென அறிவா னல்இச் சகலமும் நுகருந் தானே.

**(உரை)** தனக்கென . . . சாரான் - தனக்கெனச் சுதந்தர அறிவில்லாத ஆன்மாத் தத்துவங்களை அறிந்து பொருந்தமாட்டான்; தனக்கென . . . சார - சுதந்தர அறிவு பாதந்திரவறிவென்னும் இரண்டறிவில் ஒன்றுமின்றி என்றுஞ் சடமேயாய் ஆன்மா சுகதுக் கத்தை யறிதற்குத் துவாரமாக முதல்வனுற் கூட்டப்பட்ட தத்துவங் கள் முதல்வனையின்றி அவை தாமே ஆன்மாவை யறிந்து பொருந்தவு மாட்டா ; இனித் தூலமாம் உருவினுக்குச் சூக்குமம் முதலாதலினு லுஞ் சூக்கும தேகஞ் சிருட்டிகாலமுதற் சங்காரகாலமளவும் பிரியா தாகலானுஞ் சிருட்டிகாலத்துத் தத்துவங்களையும் உயிரையுங் கூட்டு தற்கே இறைவனை இன்றியமையாதென்பது சரி, அதுவன்றி உட லின் றுயிரொன்றே அறியுந்தோறுந் தத்துவங்களைக் கூட்டுவ னென்பது எற்றுக்கு அவை யுயிரே கூடியறியுமெனில்—தனக்கென . . . ரூபன் - தனக்கெனச் சுதந்தர அறிவில்லாத உயிர் தத்துவங்க ளோடு கூடினுந் தானுமொரு தத்துவமாய் அதுவாய் நிற்பதேயன்றி அவற்றைக் கூடி யறியமாட்டான் ; தனக்கென . . . நுகரும் - சர்வஞும் அறியுஞ் சுதந்திர அறிவுடையனுயிருந்துந் தனக்கென அறியவேண்டுவதொன்று மில்லாத கர்த்தாவினுலே சுத்தத்தில் அறி வதுமன்றிச் சகலத்திற் பிரமேயப் பொருளையும் அவனுலே அறிவன்; அற்றாகலினன்றே ‘புரிந்திடு முணர்வி னேடு போகமுங் கொடுத்’

[சிவஞானசித்தியார், v, 8] தென்றூர் வழிநூலாசிரியரும்; தானே - அப்படிப் பெத்தமுத்தி யிரண்டினும் இறைவனல் அறிந்து வந்தும் அவ்வுபகாரத்தை யறியாது தானே யறிகிறேனென்றிருப்பது பசுத்துவ வாதனையாம்.

இவ்விரண்டு செய்யுளாற் றன்னுண்மை கூறுமுகத்தால் தத்துவ தரிசனங் கூறியவாறு காண்க. இது உணர்த்துந் தன்மை கூறிய வாறுமாம். கூ௪

இனி மூன்று செய்யுளா லுணர்த்துந் தன்மை கூறுமுகத்தால் தத்துவங்களை நோக்கி ஆன்ம சிற்சத்தி சித்தாயினுஞ் சிவசிற்சத்தியை நோக்கி ஒருவாற்ருல் தத்துவங்களோடொப்ப முடியுமெனச் சுதந்திரமின்மையை வலியுறுத்துவான் புகுந்த ஆசிரியர் முதற்கண் ஒரு செய்யுளால் இவ்வாறு உயிர் அறியுமிடத்தும் அறிதற்கண் முதன்மையின்மை வலியுறுத்துவான் தொடங்கினர்.

**65. கண்டுணர் புலன்கள் காணும் கருத்தினல் ஒருத்தன் ஞானம்**
**கொண்டுளம் அறியு மென்னில் கொள்பவன் முதலி யாகும்**
**மண்டிய உணர்வு யிர்க்கா மன்னிநின் றறியு மென்னில்**
**உண்டிட வேண்டு வானுக் கொருவன்வே றுண்ட லாமே.**

**(உரை)** கண்டுணர் - சர்வஞ்ஞனய் அறியும் இறைவன் கருவி பொருள் காட்டு காலம் கன்மம் உருவம் அளவை நூல் என்றிவ்வெட்டுங் கொண்டறிவித்தும்; புலன்கள் காணுங் கருத்தினல் - சத்தாதி விடயங்களில் ஒன்றை உயிர் அறியும் பொருட்டுத் தான் விரவி நின்றறிந்து வருகிற உண்மையினலே; ஒருத்தன் ஞானங் கொண்டுள மறியுமென்னில் - இவ்வெட்டுந் தனக்கறிவிக்குந் திரவியமா யிருந்துந் தனக்குக் கருவியாய்க் கொள்வதுபோல இவற்ருல் அறிவிக்குஞ் சிவ சிற்சத்தியுங் கொண்டு தான் முதலாய் நின்றறிவது உயிர்க்குச் சுபாவ மென்னில்; கொள்பவன் முதலி யாகும் - அப்போது அதைக் கொண்டறிபவன் அவற்றிற்கு முதன்மையாக வேணுமாகலானும் உயிர் தனக்கென அறிவிலாதானகையாலும் அது கூடாது; மண்டிய வுணர் வுயிர்க்கா மன்னி நின்றறியுமென்னில் - உயிரறிவுபோல் ஏகதேசப் படாது நிறைந்த சிவ சிற்சத்தியானது உயிர் அறியும்பொருட்டு அதனேடு விரவி அதுவே முதன்மையாக நின்றறியுமென்னில்; உண்

டிட . . . லாமே - ஒருவன் பசிக்கு மற்றொருவ னுண்ட முறைமை போலாம் ; அதுவும் பொருந்தாது.

ஈண்டுக் கூறிப்போந்த எட்டாவன: கருவியென்பது ஆன்ம தத்துவம்; பொருள் என்பது தாத்துவிகங்கள்; காட்டு என்பது உயிரின் அறிவிச்சை செயலை விளக்குங் கலை வித்தை ராக மூன்றுமாம் ; காலம் என்பது முந்தாது பிந்தாது வரையறை செய்யுங் கால தத்துவம்; கருமம் என்பது கன்மத்தை ஏறாது குறையாது நிறுத்தும் நியதி தத்துவம். உரு என்பது தூலதேகம். அளவை என்பது மூவகைப் பிரமாணம் ; நூல் என்பது நூல்கட்குக் காரணமாகிய நால் வகை வாக்குக்கள் ; இவை எட்டுஞ் சிவசிற்சத்தியுமின்றி ஆன்மா ஒரு விடயத்தை அறியுந் தன்மை யில்லையென்பது நுண்ணுணர் வினு லறிக. 'கருவியாற் பொருளாற் காட்டாற் காலத்தாற் கருமந் தன்னு, லுருவினு லளவா னூலா லொருவனு லுணர்வ' [சிவஞான சித்தியார், v, 4] றென்றார் வழிநூலாசிரியரும். 'அறியுமா வறியே' யென்றும், 'நினையுமா நினையே' [திருமாளிகைத்தேவர் திருவிசைப்பா, கோவில் i, 11] என்றும், 'விரும்புமா விரும்பே' [ஷை, ஷை, 10] யென்றும், 'நுகருமா நுகரே' [ஷை, ஷை, 7] யென்றும், 'அறிவானுந்தானே யறிவிப்பான்றானே யறிவா யறிகின்றான்றானே' யென்றுந் திருவாக்குக்களு முள்ளனவால் அறிவிச்சை செயல்கள் மூன்றும் இறைவன் அறிவிச்சை செயல்கள் விரவியன்றி விளங்கா வென்பது தானே போதரும். இது பெத்தமுத்தி யிரண்டிற்கும் பொதுவேயாம். கூ௫

இனி இறைவன் அறிந்தறிவித்து வருவதும் உயிரறிந்து வருவது மிவ்வாறென்னு முண்மை கூறுமுகத்தால் இவ்வாறு இறைவன் அறிந்தும் அறிவித்தும் வருதற்கண் விகார முறுவனெனவும் இறைவன் அவ்வாறு செய்து அறிவியாவிடத்து உயிர்க்குச் செய்தியின்மையால் உயிர்க்கு இயல்பாகச் செய்தி யில்லையெனவும் இறைவனிவ்வாறு அறிவிக்கு முகத்தாற் கன்மார்ச்சிப்பு உண்டாய் அதனால் உயிர்கள் துக்கப்படுதலால் இறைவன் மறத்தொழிலுடையனெனவும் ஆன்ம சிற்சத்தியால் இந்திரியங்கள் அறியும் இன்பத் துன்பங்கள் அவற்றிற் கன்றி உயிர் நுகருமாறுபோலச் சிவ சிற்சத்தியால் உயிர் அறியும் இன்பத் துன்பங்கள் அவற்றிற்கின்றிச் சிவனுக்கே யாமெனவும் வரும்

ஐயங்களனைத்தும் நீக்குமாறு திட்டாந்த பூர்வமா யுணர்த்துவான் தொடங்கினுர்.

66. இருள்நனி இரவி தான்வந் திரித்தலும் இரவில் எண்ணும்
பொருள்நிலை கண்டு மாந்தர் பொருந்திடு மாறு போல
மருள்நிலை யெங்கு நீங்க மகிழ்ந்துயிர் தன்னுள் மன்னும்
அருளையும் ஒழிய ஞாலத் தறிந்தவா றறியு மன்றே. ௪

(உரை) இருள்நனி - பதார்த்தங்களை யறியாவாறு கண்ணை மறைக்கும் பெரிய புறவிருளை ; இரவி தான்வந் திரித்தலும்-இருளில் அழுந்துவோ ரேவலிலன்றித் தானுகவே ஆதித்தன் வந்து தனது கிரணத்தால் இருளையகற்றுமாறு பதார்த்தங்களினும் பதித்துக்காட்சியுறுமாறு கண்ணொளியினும் விரவி நின்றவிடத்து; இரவில் . . . போல - இரவு காலத்தி லறிய வேண்டுமென் றெண்ணியிருந்த பொருளையே அவரவர் கண்டெடுத்துக் கொள்ளுமுறைமைபோல முதல்வன் ஒருவர் பாதந்திரங்களுட் படாது தானே யறிந்தும் அறிவித்தும் நிற்க அவரவர் இச்சைப்படி விளைந்த சுகதுக்கங்களை யறிவதாம்; அவரவரிச்சைப்படி வேண்டும் பொருளை யறியுமிடத்து அவ்வாறே யறிவித்து ஆதித்தன் விகாரமுருத முறைமைபோல முதல்வனும் விகாரமில்லாதவனே யாவன். அவரவர் இச்சைப்படி ஆதித்தன் சகாயத்தா லறிவதுபோல உயிர்கள் தமதிச்சைப்படி முதல்வ னுபகாரத்தா லறிவதால் உயிர்க்கியல்பாகச் செய்தியு முண்டு. இரவி லெண்ணும் பொருணிலையை ஆதித்தன் விளக்குவதுபோலக் கேவலத்தில் ஆர்ச்சித்த கன்மத்துக் கீடாய்ச் சகலப்படுத்துவதால் முதல்வன் மறத்தொழிலுடையனுமன்று—மருணிலை யெங்கு நீங்க - சர்வான்மாக்கட்கும் பாசநிவிர்த்தியாம் பொருட்டு ; மகிழ்ந்து - கிருபை செனித்து ; உயிர் தன்னுள் மன்னும் அருளையும் ஒழிய - உயிர்க்குயிராக நிலைபெற்று நின்றறிந்து அறிவித்து வருஞ் சிவ சிற்சத்தியினது பேருபகாரத்தை யறியாது ; ஞாலத் தறிந்தவா றறியு மன்றே - உலகத்துள்ளவர்கள் ஆதித்தன் சகாயத்தாற் றமது ஞானக்கிரியைகள் புறத்துச் செல்லுகின்றனவென் றறியாது தாமே யறிந்தோம் தாமே செய்தோ மென்றிருப்பதுபோல உயிர்களனைத்தும் முதல்வன் சகாயத்தால் தமது ஞானக்கிரியைகள் விளங்குகின்றனவென் றறியா ராகையால் உயிர்கள் அறியும் இன்பத்துன்பங்கள் உயிர்க்கேயன்றி முதல்வனுக்கு நுகர்ச்சியாதல்செல்லாது.

இதனால் முதல்வன் காட்டியுங் கண்டும் உபகரித்து வரும் பேருதவியை மறவாது கடைப்பிடிக்கவல்ல பேரறிவாளர்க்கு 'காதனவ னுடலுயிரா யுண்டுறங்கி நடந்து நானுபோ கங்களையுந் தானாகச் செய்' [உண்மைநெறிவிளக்கம், 6]வனுகலின் அவர்க்குச் சிறுபோகமாகிய இன்பத் துன்பநுகர்ச்சியாதல் செல்லாதென்பது தானே போதரும்.

இனி இயல்பாகச் செய்தியுடைமை இருவருக்கு மொப்ப முடியினும் பதிப்பொருளின் செய்தியோடும் உயிர்ச்செய்திக்கு உளவாகிய வேற்றுமை இதுவெனத் திட்டாந்த பூர்வமாகத் தெரித்துக் கூறுவான் தொடங்கினர்.

67\. அறிந்திடும் மனாதி வாயி லானவை அவன்ற னாலே
அறிந்திடும் என்றும் ஒன்றும் அறிந்திடா அவைபோல் யாவும்
அறிந்திடும் அறியுந் தன்மை அறிந்திடா கன்மத் தொன்மை
அறிந்தவை நுகரு மாறும் அருளுவன் அமலன் றானே.

**(உரை)** அறிந்திடு மனாதி வாயி லானவை - அந்தக்கரணங்கள் பஞ்சேந்திரியங்கள் முதலிய ஆன்ம தத்துவங்கள் விடயங்களை அறியுமிடத்து ; அவன்ற னாலே யறிந்திடும் - ஆன்ம சிற்சத்தி சேர்ந்தமையாலே அறியும் ; என்றும் ஒன்றும் அறிந்திடா - இவ்வாறு அறியுந் தம்மையுந் தமக்கு வியஞ்சகமாய் நின்று அறிவித்தறியும் ஆன்ம சிற்சத்தியையும் அவை ஒருநாளும் அறியா ; அவைபோல் - அந்தத் தத்துவங்களைப் போல ; யாவும் அறிந்திடும் - சர்வமும் அறிந்து தனக்கு வியஞ்சகமாய் நின்று அறிவிக்குஞ் சிவ சிற்சத்தியுபகாரத்தினாலே பெத்த முத்தியிரண்டினும் பிரமேயம் அப்பிரமேயமென் றிருவகைப் பொருளையும் அறிந்து வரும் ; அறியுந்தன்மை யறிந்திடா - தான் அறிந்து வருகிற முறைமையுந் தனது அறிவுக்கு வியஞ்சகவறிவை யின்றி அறிவில்லையென்பதும் அது அறியாது ; இவை உயிர்ச் செய்தியாம். இனி இறைவன் செய்தி ஏதென்னில்— கன்மத் தொன்மை யறிந்து-சர்வான்மாக்களு மார்ச்சிக்கும் அனாதி கன்மங்கள் அடங்கலும் தனக்கொரு வியஞ்சகத்தையின்றித் தானே யறியுஞ் சுயம்பிரகாச ஞானத்தால் அறிந்து ; அவை நுகருமாறும் அருளுவன் - மலபாகம் வரும்பொருட்டு அந்தக் கன்மங்கள் அவர்கள் புசிக்கும்

முறைமைக்கேற்க அறிவித்து நிற்பன் ; அமலன் ருனே - அவன் மல ரகிதனுகையால்.

ஆக மூன்று செய்யுளாலும் மேற்கூறிய முறையே பொருள் முடிந்தமை யறிக. கூஎ

---

## ஆருஞ் சூத்திரம்

ஈண்டு ஐந்து செய்யுளால் ஐந்தாஞ் சூத்திரத்தியல்புபற்றித் தமது முதலுபகார முணர்த்து முகத்தால் தத்துவதரிசனப்படுமா றுணர்த்துந் தன்மை கூறி இனி மூன்று செய்யுளால் ஞானவாய்மை கூறப் புகுந்த ஆசிரியர் முதற்கண் ஒரு செய்யுளால் ஆருஞ் சூத்திரத் தியைபுபற்றித் தத்துவசுத்தியாமாறு சத்தும் அசத்தும் வரைசெய் துணர்த்துவான் தொடங்கினர். பெத்தம் முத்தி யிரண்டினும் இறை வனே அறிவித்தும் அறிவு வேறுபடுவது எற்றுலெனின்,

68\. காட்டிடும் கரண மொன்றும் இல்லையேற் காணு ணுதாம்
நாட்டிய இவற்றுன் ஞானம் நணுகவும் ஒண்ணு முன்னம்
ஈட்டிய தவத்தி னுலே இறைஅரு ளுருவாய் வந்து
கூட்டிடும் இவற்றை நீக்கிக் குரைகழல் குறுகு மாறே.

(உரை) காட்டிடுங் கரணம் - அழிபதார்த்தத்தை அறிவதற்கே தத்துவங்களனைத்துங் கருவியாய் அறிவித்து நிற்கும் ; ஒன்றும் இல்லை யேற் காணு ணுதால் - இந்தக் கருவி கரணங்க ளொன்று மில்லாத கேவலத்தும் அழிபொருளை யறியும் அறிவாயினும் விளங்காது ; நாட் டிய இவற்றுல் ஞானம் நணுகவும் ஒண்ணு - இச்சை ஞானங் கிரியை விளங்கிப் புறத்துச் சேறற்குக் கருவியாகிய தத்துவங்களால் மெய்ப் பொருளை அறியவுங் கூடாது; இனி மெய்ப்பொருளை யறியும் முறை யேதென்னில்—முன்னம் ஈட்டிய தவத்தி னுலே - முன் செய்த சரியை கிரியாயோக முதிர்ச்சியினுலே ; இறை - உணர்வாய் நின்ற ஞானக்கூத்தன்; அருளுருவாய் வந்து - காருணியமே திருமேனியாய்த் தரித்துவந்து;கூட்டிடும் இவற்றை நீக்கி - மலபாகம் வரும் பொருட்டுக் கன்மந் துய்த்தொழிதற்காய் அவனுலே கூட்டப்பட்டுப் பொருந்தி யிருந்த தத்துவங்களை அத்துவாசோதனையோடு சுத்திசெய்து மீள அதின் ஏகதேச அறிவு விளங்காமல் அதை விட்டு நீக்கி ; குரைகழல்

குறுகு மாறே - தனது திருவடி வியாபகத்துட் சேரும் முறைமையைச் செய்விப்பன்.

இதனால் தத்துவசுத்தி யாமாறுஞ் சத்தும் அசத்தும் வரை செய்தவாறும் நுண்ணுணர்வின லறிக. சூஅ

---

# ஏழாஞ் சூத்திரம்

## ஞான வாய்மை

இனி இரண்டு செய்யுளால் ஆன்ம ரூபங் கூறும் ஏழாஞ் சூத்திரத் தியைபுபற்றி ஞானவாய்மை கூறுவான் புகுந்த ஆசிரியர் முதற் கண் ஒரு செய்யுளாற் பெத்த முத்திகளிற் பலவேறுபட அறிந்தறி வித்தற்கண் இறைவன் அவற்றோடு பந்தப்படானென்பது கூறு முகத்தால் ஆன்மரூபம் இனிது விளக்கி ஞான வாய்மை மிகுதி கூறு வான் தொடங்கினர்.

69. பன்னிறங் கவருந் தொன்மைப் படிகநீ டொளியும் பன்
மன்னிலங் கியல்பும் தந்த வளரொளி போல வையம்[மை
தன்னகம் பயிலும் நற்சிற் சடங்களின் தன்மை தாவா
நன்னலம் பெறநி றைந்த ஞானமே ஞான மென்பர். க

(உரை) பன்னிறங் கவரும் - பல வன்னங்களையுங் கவர்ந்து தன் வன்னத்தை யிழந்து நிற்கும்; தொன்மைப் படிகநீ டொளியும் - படிகத்துக்கு இயல்பாக அநாதியே உள்ள பெரிய ஒளியையும்; பன்மை மன்னிலங் கியல்பும் - படிகத்தாற் கவரப்பட்டும் அப்படிகத்தைத் தன் வன்னமேயாய்க் கவர்ந்து நிற்குந் தன்மை யியல்பாக உடைய பல வன்னங்களின் நிறத்தையும்; தந்த வளரொளி போல - இவ்விரண்டும் இருளினாலே மறைபட்டுத் தன் தொழிலடங்கிக் கிடப்பது தீர்த்துப் படிகத்துக்கொளியும் வன்னத்துக்கு நிறமுந் தனது சந்நிதி மாத்திரையே உண்டாம்படி கொடுத்துநின்ற ஆதித்தன் கிரணம் அவை களில் ஒன்றோடும் பந்தமுறாது அவைகளைத் தத்தந் தொழில்களை விளக்கி நிற்கு முறைமைபோல; வையம் தன்னகம் பயிலும் - சிவசிற் சத்தி சேதனப் பிரபஞ்சம் அசேதனப் பிரபஞ்ச மிரண்டுந் தனது சந்நிதி மாத்திரையே தத்த மெல்லை யளவு தொழிலுடைத்தாகச்

சங்கற்பித்துச் செயற்படுத்தி நின்றும்; நற்சிற் சடங்கள் தன் றன்மை தாவா - நல்ல சித்தாகிய உயிரின் தன்மையினுஞ் சடமாகிய தத்துவங் களின் தன்மையினுந் தான் பந்திக்கிறதும் பொருந்துகிறது மின் றியே நிற்கும்; இவ்வாறு தோய்வற நின்று செயற்படுத்துவது எக் காரணத்தா லென்னில்—நன்னலம்பெற - சர்வான்மாக்களும் நல்ல பேரானந்த சுகத்தைப் பெறும் பொருட்டேயாம்; ஏகதேச அறிவை விளக்குங்கால் ஏகதேசப் படுவ துண்டோ வெனில்;—நிறைந்த ஞானமே - அணுப் புதைக்க இடமின்றி யாங்கணும் நிறைந்த ஞான சொரூபமேயாமன்றித் தான் ஏகதேசப்படாது; ஞானமென்பர் - இதுவே சிவ சிற்சத்தியினது இலக்கணமாம். ௬௯

இனிப் பாசத்தை யேவுஞ் சிவசத்திக்குத் துணைக்காரணமாய் நின்ற மாயை கன்மங்கள் பாசமேயாயினும் அவையுஞ் 'சினமருவு திரோதாயி கருணை யாகித் திருந்திய' [48] காலத் தருளேயாந் தன்மை கூறுமுகத்தாற் சிவசத்தியின் பெருமை இத்துணைப் பெரிய தோர் வல்லமை யுடைத்தென்ப துணர்த்துவான் தொடங்கினர்.

70. மாயைமா மாயை மாயா வருமிரு வினையின் வாய்மை
ஆயஆ ருயிரின் மேவும் மருளினில் இருளாய் நிற்கும்
மாயைமா மாயை மாயா வருமிரு வினையின் வாய்மை
ஆயஆ ருயிரின் மேவும் அருளினில் ஒளியாய் நிற்கும்.

(உரை) மாயை - அசுத்த மாயாமலமும்; மா மாயை - விந்து மோகினிமானென்னும் மும்மாயையின் காரியமாகிய பெரிய மாயேய மலமும்; மாயா வருமிரு வினையின் வாய்மை-புசித்தாலொழிந் தொழி யாத கன்ம ¡மலமும்; ஆய - இதனுண்மைகளை விசாரிக்குமிடத்து; ஆருயிரின் . . . நிற்கும் - ஆன்ம சிற்சத்தியைப் பாச மறைக்கு மளவும் இவைகள் மலமாகவே யிருக்கும்; மாயை . . . நிற்கும்- இங்ஙனங் கூறிய பாசம் நீக்கம் வந்த விடத்து உயிரறிவில் திருவருள் விளங்குங்கால் இந்த மாயை கன்மங்களும் அருளேயாம்.

இது 'பாலைநெய்தல் பாடியதும் பாம்பொழியப் பாடியதுங், காலனையன் றேவிக் கராங்கொண்ட - பாலன், மரணந் தவிர்த்ததுவு மற்றவர்க்கு நந்தங், காணம்போ லல்லாமை கா' [திருக்களிற்றுப்படி யார், 12]ணென்றும், 'பெற்றசிற் றின்பமே பேரின்ப மாயங்கே, முற்ற வரும்பரி சுந்தீபற' [திருவுந்தியார், 33] வென்றும், 'உணர்வு

சேர்பெற வருஞ்சிவ போகத்தை யொழிவின்றி யுருவின்க, ணணையு மைம்பொறி யளவினு மெளிவா வருளினை யெனப்போற்றி' [பெரிய புராணம், திருஞானசம்பந்தர், 161] யென்றும், 'ஐந்து மடக்கா வறிவறிந் தேனே' [திருமந்திரம், 2033] யென்றும், 'அந்தரங் காற் றங்கி நீர்மண்கொண் டேநின்ற வையமெல்லா, மிந்திர சால மெனக் காட்டி மீட்டு மிறைநிறைவிற், றந்தருள் சிற்றம் பலநாடி' [சிற்றம்பல நாடியார் கட்டளைக்கலித்துறை, 41] யென்றும், இன்னும் பலவாற்றா னும் வருஞ் சுருதிகளானுங் குருவாக்குச் சுவானுபவத்தானும் அறிக. மேலைச்செய்யுளிற் படிகத்தினது பெரியவொளி யென்றும் இச் செய்யுளிற் பெரிய மாயேயமலமென்றும் விசேடித்துக் கூறிய தெற்றாலெனின், படிகந் தனக்கியல்பாயுள்ள ஒளி விளங்குதற்கு மேலுமோர் ஒளியை அவாவி நிற்பினும் விளங்கியவழிப் பல வன்னங் களையுங் கவர்ந்து தன் வன்னத்தை யிழந்து நிற்பினும் விளங்காவழி இருளேயாய் நிற்பினும் உச்சிக்காலத்து ஒரு வன்னத்தையும் பற்றாது முன் பற்றிய வன்னத்தையு மிழந்து ஒளியேயாய் நிற்பினும் எக் காலத்துந் தனது ஒளி கெடாது நிற்றல்பற்றிப் பேரொளியென விசேடித்தார். இதனை யுவமைப் பொருட்கண்ணுமோதி ஆன்மரூப மினிது விளங்கியமை யறிக. மாயேய மலமாவது சாதாரணம் அசா தாரணமென்று இருவேறு விதமாய் அனேகங் கூட்டரவாய் எண் ணிறந்ததாயினும் வியாபகத்துக்கு வழுவின்மையானும் உருவாதி யாய்ப் பரிணமித்தழிந்துஞ் சற்காரியத்திற்கு இழுக்கின்மையானும் மலமெனப் பெயர்பெற்றும் ஏனை மலங்களையெல்லாம் நீக்கி அவற்றிற் குப் பகைப்பொருளாய் நிற்றலானும் பெரியதெனை விசேடித்தார். இது நுண்ணுணர்வா லறிக. மாமாயை யென்பதனைச் சுத்தமாயை யென் றுரைப்பாரும் உளர். அது முதனூல் வழிநூலிரண்டிற்கும் நமது சிவஞானச் செல்வர் கூறுஞ் சிற்றுரை பொழிப்புரைக்கண் வரையறுத் தோதியதானும், வழிநூலாசிரியர் மாயையின் காரியத்தை மாயேயமலமென்று கூறியவாற்றானும், பாசபந்தி பந்தப்படில் அந்த மாயைக்குச் சுத்தமாயையென்று பெயர் செல்லாதாகையானும் அது கூடாதெனை அறிக. ௭௦

---

# எட்டாஞ் சூத்திரம்

## ஞானவாய்மையின் பயன்

ஈண்டு இரண்டு செய்யுளால் ஏழாஞ்சூத்திரத் தியைபுபற்றி ஆன்மரூபங் கூறியவாறு காண்க. 'இரண்டினி லைந்தி லாறி லேழினி' [சுவாமிநாத தேசிகர் தசகாரியம், 21] லென்னும் வாக்கியப்படி தத்துவரூபமும் தத்துவ தரிசனமுந் தத்துவ சுத்தியும் ஆன்ம ரூபமும் ஆக நாலுகாரியமுங் கூறியதாம். இவை நான்கும் நின்மலசாக்கிரமென உணர்க. சுத்தாவத்தை யைந்தினையுந் துகளறுபோத நூலார் முப்பதுகாரியமா யுணர்த்துவர். எமதாசிரியர் 'சொன்னவை மூன்று நோக்கித் தொகுத்தன வவத்தை பத்தா' [அம்பலவாண தேசிகர் தசகாரியம், 55] யெனப் பத்துக்காரியமா யுணர்த்துவர். திருமந்திர நூலார் 'தன்னை யறியத் தனக்கொரு கேடில்லை' [2355] யென்றுந், 'தன்னை யறியு மறிவே யறி' [2318] வென்றுந், 'தன்னை யறிவதன்மேற் பேறில்லை' யென்றுந் தரிசனம் ஒரு காரியத்துள் அடக்கிக் கூறுவர். இந்நூலின் ஈண்டுக் கூறியொழிந்த நான்கும் போக்கி ஏனை ஆறு காரியமுந் தொகுத்துத் தரிசனஞ் சுத்தி லாபமென்னும் மூன்று ளடக்கிக் கூறுவர். சிவரூப தரிசன யோக மூன்றுஞ் சொப்பனந் துரியமென்னு மிரண்டவத்தையிற் றெரிசனஞ் சுத்தியென்னு மிரண்டிற்குங் காரணமா யுடனிகழ்ச்சியாமாறு முன்னர்க் கூறப்படும். ஆகத் தசகாரியம் பத்துமே இந்நூலுள்ளுறையாம். முதனூலாசிரியர், 'ஐம்புல வேடரி னயர்ந்தனை வளர்ந் தென' வென்பதனாற் றரிசனமும், 'தம்முதல் குருவுமாய்த் தவத்தி லுணர்த்தவிட்டு' என்பதனாற் சுத்தியும், 'அன்னிய மின்மையி னரன் கழல் செலுமே' [சிவஞானபோதம், viii]யென்றதனால் ஆன்மலாபமுமாக எட்டாஞ் சூத்திர மொன்றினுள் அடக்கிக் கூறினார். அவ்வாறே வழிநூலாசிரியரும், 'துன்னியவைம் புலவேடர் சுழலிற் பட்டுத் துணைவனையு மறியாது துயருறுந்தொல் லுயிரை' என்றும், 'மன்னுமருட் குருவாகி வந்தவரி னீக்கி மலமாற்றி' யென்றும், 'தானாக்கி மலரடிக்கீழ் வைப்ப' [சிவஞானசித்தியார், viii, 1] னென்றுந் தரிசனம் சுத்தி லாபம் மூன்றுங் கூறினார். ஈண்டும் அவ்வாறே எட்டாஞ் சூத்திரத் தியைபுபற்றித் 'தன்னறி' [72] வென்பது முதல் நான்கு

செய்யுளால் தரிசனம் சுத்தி லாபந் தொகை வகை விரிவாய் மூன்ருகக் கூறுவான் தொடங்கி அம்மூன்றின் தொகையுந் தொகுத்து ஒரு செய்யுளாற் கூறுவான் தொடங்கினூர்.

71. தேசுற மருவும் ஆன்ம தெரிசனம் ஆன்ம சுத்தி
ஆசிலா ஆன்ம லாபம் ஆகமூன் ருகு மூன்றும்
பாசம தகல ஞானம் பற்றல்தான் பணியை நீத்தல்
ஏசில்நே யத்த ழுந்தல் எனுமிவற் றடங்கு மன்றே. க

**(உரை)** தேசுறமருவும் - ஆன்மா மோட்சத்தை யடையுஞ் சுத்தாவத்தையாவது; ஆன்ம தெரிசனம்...மூன்றும் - தரிசனஞ் சுத்தி லாபம் என்னும் மூன்றுளடங்கி வரும் அந்த மூன்றும்; பாசம தகல ஞானம் பற்றல் - தன்னைச் சார்ந்த மலமாயா கன்மமனைத்தும் நீங்கத் தனது ஞானக் கிரியைகள் சிவஞானத்தையின்றிச் சீவியாவென அறிந்து தனது முதன்மை நீங்குதல் ஆன்மதரிசனமாம்; தான் பணியை நீத்தல்- ஏகனுகி இறைபணி நிற்றல் ஆன்ம சுத்தியாம்; ஏசில்நே யத்த ழுந்தல்- தனது ஞானக்கிரியைகட்கு அகத்தும் புறத்துஞ் செயலின்றிச் சிவமே கண்டிருத்தல் ஆன்மலாபமாம்; எனுமிவற் றடங்கு மன்றே - இந்த மூன்று தன்மையு ளடங்குஞ் சுத்தாவத்தை யனைத்தும்.

முதன்மை நீங்குதல் பணிநீத்தல் இரண்டிற்கும் வேற்றுமை பெரிது முள்ளனவாகலிற் தரிசன சுத்தியிரண்டிற்கும் அந்தரங்கவேற்றுமை பெரிது முளவாகலிற் கூறியது கூறலென மலையற்க. முதன்மையாவது சகலத்திற் பத்திலக்கணத்து ளொன்ருகலின் அது சாக்கிராவத்தையி னீங்குவதே யாம். சுத்தாவத்தையிற் சாக்கிரத்திற் பதிமுதன்மையும் ஆண்டே நீங்குவதாம். சொற்பனத்திற் றெரிசனமாகலிற் சாக்கிரத்தின் முதன்மை நீங்குவது குறிப்பா லறிக. அற்ருகலினன்றே 'உன்பணி யெல்லா மரன்பணி யென்றுகொள்' ளெனவுந் ' தலைமையருளே யெனக்கருதல் சொற்பனவத்தை ' யென்றுங் கூறினூர் எமது ஆசிரியரும். இறைபணி நிற்றலையே தான் பணியை நீத்தலென மொழிபெயர்த்துக் கூறியதால் முதன்மை நீத்தல் பணி நீத்தல் இரண்டிற்கும் வேற்றுமை பெரிதும் உளவாம். எக

இனி ஞானத்தினை யுணரு முறைமை கூறும் எட்டாஞ் சூத்திரத் தியைபுபற்றிய நான்கு செய்யுளால் தரிசனம் சுத்தி லாபங்கட்கு

வகை கூறப்புகுந்த ஆசிரியர் முதற்கண் ஒரு செய்யுளால் ஆன்ம தரிசனங் கூறுவான் தொடங்கினர்.

72. தன்னறி வதனால் ஏதும் தனக்கறி வில்லை யேனும்
தன்னறி வாக எல்லாம் தனித்தனி பயன ருந்தும்
தன்னறி வறியுந் தன்மை தன்னாலே தனைய றிந்தால்
தன்னையும் தானே காணும் தானது வாகி நின்றே. ௨

(உரை) தன்னறிவதனா லேதுந் தனக்கறிவில்லை - ஆன்மாவுக்குள்ள அறிவால் அதற்கு அறியுந் தன்மைக்காவதேதுமில்லை; 'தன்னறிவதனா லேதுந் தனக்கறிவில்லை' யெனவே பாரிசேடவளவையால் வேறொரு வியஞ்சக வறிவாற் றனக்குச் சிறிதறியுந் தன்மை யுண்டென்பது தானே போதரும். இதனாற் சுதந்தர ஹீனனென்பது பெற்றாம்—ஏனும் - அவ்வாறு சுதந்தர ஹீனனேயாயினும்; தன்னறிவாக எல்லாந் தனித்தனி பயனருந்தும் - அறிவித்தா லறிதன் மாத்திரையே யன்றி அறிதற்கண் சுதந்திர ஞானமில்லை, அறிவிப்பான் சர்வஞ்ஞனாகையால் அவன் ஏககாலத்தில் அறிவிக்கவும் வல்லன், அவ்வாறு அறிவித்தால் அறியுந் தன்மையின்றி அவன் ஏககாலத்தில் அறிவித்தாலுந் தன்னறிவில் அளந்து தான் ஒன்றொன்றாகவே யறிதலாற் கிஞ்சிஞ்ஞ னெனவும்படும்; இனி அதனுண்மை யாதென்னிற் குருமுகமா யறிக—தன்னறிவு - இவ்வா றுளதாகிய ஆன்ம சிற்சத்தி; அறியுந் தன்மை - ஒன்றை யறியுமிடத்து வியஞ்சக வறிவையின்றி யறியாதாகையால் அவ்வாறு உடனின் றறிவிப்பது திருவருளேயாம்; தன்னாலே-அந்தத் திருவருள் ஞானத்தையே கண்ணாகக் கொண்டு; தனைய றிந்தால் - அத்திருவருளைக் குருவருளால் ஒருவன் அறியப்பெறின்; தன்னையுந் தானே காணும் - இவ்வாறு அறியுந் தன்னையும் அப்பொருளை யறியுங் காட்சியோடு உடனிகழ்ச்சியாய்க் காணப்பெறும்; தானது வாகி நின்றே - இவ்வாறு திருவருளைக் காண்டற்குந் தன்னைக் காண்டற்குந் தன்னை வேறு காணப்படுமாறின்றி அதுவாக நிற்றலே வேண்டும்.

ஈண்டுத் 'தன்னறி வறியுந் தன்மை தன்னாலே தனை யறி'யுமிடத்துப் பெறுவது பிண்டத்தின் வைத்தறிதலால் இவை ஞான தெரிசனமேயாம். வழிநூலாசிரியர் 'அந்தக் காணங்க ளடக்கி யறிவதொரு குறிகுருவி னருளினா லறிந்' [சிவஞானசித்தியார், viii, 34] தென்

றது மிது. இதனாற் சிவரூபமும் அதனுட னிகழ்ச்சியாய ஆன்ம தரிசனமுங் கூறியது நுண்ணுணர்வினா லறிக. எஉ

இனி ஒரு செய்யுளால் அவனருளே கண்ணாகக் காணுதற்குத் துவாரம் இதுவென்ப துணர்த்துமுகத்தாற் சிவதரிசனமும் அதனோடு உடனிகழ்ச்சியாய ஆன்ம சுத்தியுங் கூறுவான் தொடங்கினார்.

73. தத்துவ மான வற்றின் தன்மைகள் உணருங் காலை
உய்த்துணர்ந் திடஉ திப்ப தொளிவளர் ஞான மாகும்
அத்தன்மை அறியு மாறும் அகன்றிட அதுவாய் ஆன்மாச்
சுத்தமாம் சுத்த ஞானத் தொருமுதல் தோன்று மன்றே.

(உரை) தத்துவம் - சாதாரண தத்துவம் அசாதாரண தத்துவமென் றிருவேறாய் அண்டபிண்ட ரூபமாய் அனேகவித விசித்திரமாகச் செயற்படும் அனேக தத்துவங்களாகிய அசேதனப் பிரபஞ்சமும்; ஆனவற்றின்-அத்தத்துவங்களோடு கூடி அதுவேயாய் அனேகமாகிய சேதனப் பிரபஞ்சமும் ; தன்மைகள் . . . காலை-இவ்விரு வகைப் பிரபஞ்சத்திற்குஞ் செயலும் அறிவும் விளங்குகிற முறைமையை ; உய்த்துணர்ந்திட - குருவருளால் உள்ளவாறு உணரப் பெறின்; உதிப்ப . . . ஞானமாகும்-அவ்விடத்துப் பெறுவது அண்டத்தின் வைத்தறிதலிற் பரை தரிசனமாகும்; ஞானதரிசனம் பரை தரிசனம் இரண்டுஞ் சிவரூபத்துளடங்கினும் அவ்விரண்டிற்கும் அந்தரங்க வேற்றுமை பெரிதுமுள்ளன. அவை துகளறுபோதத்துட் காண்க. இதனை முதனூலாசிரியர் 'அசத்தாயுள்ள வன்னபேதங்களை அசத்தென்று காண வுளதாய் நிற்பது ஞானசொரூப' [சிவஞான போதம், ix] மென்றார். வழிநூ லாசிரியர் ' எல்லா மீச னிடத்தினிலு மீச னெல்லா விடத்தினிலு நின்ற, வந்நிலையை யறிந்' [சிவ ஞான சித்தியார், viii, 34] தென்றார்—அத்தன்மை-அவ்வாறு பெறப் படும் பரைநிறைவிலே தனது ஞானக்கிரியைக ளடங்கி; அறியுமாறும் அகன்றிட - அதுவாய் நின்று தன்னையும் அவ்வாறு ஒரு முதலாய் அறியும் அறிவு நிகழாதடங்குவது சிவதரிசனம் ; அதுவாய் - அந்தப் பரைநிறைவே தானாக நிற்குமது சிவயோகம் ; ஆன்மாச் சுத்தமாம் - இவ்விடமே ஆன்மசுத்தித் தானமுமாம் ; இவை சுழூத்தியாதீதமான துரியமெனப் பெயர்பெறும்—சுத்தஞானத் தொருமுதல் தோன்று மன்றே - அவ்வாறு சிவயோகத்தானத் துரியநிலைக்கட் பரைநிறைவி

லழுந்தாது அதுவாய் நிற்கவே அந்த ஞானத்தின் பயனாய் அகண்டா கார சச்சிதானந்தாத்துவய பரிபூரண பரஞ்சோதியாய் ஆன்மலாப மெனப் பெயர்பெறும் நேயத்தைப் பெறலாம்.

சிவபோக மென்பது மிது. இவை நின்மல துரியாதீதமாம். ஈண்டு இச்செய்யுளிற் கூறப்பட்டது ஆன்மசுத்தியும் ஆன்மலாபமுமாம். எங

ஆக இரண்டு செய்யுளால் தரிசனஞ் சுத்தி லாபம் மூன்றிற்கும் வகை கூறியவாற்றால் தச காரியத்துள் மேற்கூறிய சாக்கிர வவத்தைக் கண் ஒழிந்த நான்கும் போக்கி நின்ற ஆறு காரியமுஞ் சொற் பனஞ் சுழுத்தி துரியந் துரியாதீதமென்னும் அவத்தை முறை யானே உணர்த்திய ஆசிரியர் இனி அந்த ஆன்மலாபமென்னுஞ் சிவ போகமாவது பரையாதீதஞ் சுகாதீதங்கட்கும் அப்பாற்பட்ட பரமா னந்த அவசமாதலைத் தெரித்துணர்த்தும் பொருட்டுத் தடைவிடைக ளாற் சாதிப்பான் தொடங்கினார்.

74. உறைதரும் உணர்வு மன்றி அதன்முதல் உள்ள தென்றிங்(கு)
அறைவதென் என்னில் அண்ணல் அருளெனு மதுவே யன்றி
நிறையொளி முதல தின்றி நின்றிடா நிமல னாகும்
இறையவன் முதல வன்றன் இலங்கருள் சத்தி யாமே. ச

(உரை) உறைதரும் உணர்வு மன்றி-உயிரோடு ஒன்றாயும் வேறா யும் உடனாயும் நிற்குஞ் சுயம்பிரகாச ஞானமாகிய திருவருளையன்றி; அதன்முதல் உள்ளதென்றிங் கறைவதென் என்னில் - அதுவாய் நிற் கவே அதன் பயனாகிய நேயம் அதற்கு வேறாகத் தோன்றுமென்று சொன்னது எக்காரணத்தாலென்னில்; அண்ணல் அருளெனு மதுவே யன்றி - அவ்வறிவாகிய பராசத்தியும் அதுவாய் நிற்குங்காற் சுகப் பிரபையாய்த் தோன்றும் இன்பசத்தியும் நேயப்பொருளாகிய சிவ பிரானது சாட்குணிய சத்திகளேயன்றி அவையே நேயப்பொருளல்ல வாம்; நிறையொளி முதலதின்றி நின்றிடா - நிறைந்த பிரகாச மானது தனக்கொரு முதலாகிய ஆதித்தனையின்றித் தனித்துத் தானொரு முதலாக நில்லாத முறைமைபோல; நிமலனாகும் இறைய வன் முதல்-மலரகிதனாகிய சிவபிரானே முதலாகும்; அவன்றன் இலங்க ருள் சத்தி யாமே - அவனது சுயம்பிரகாச ஞானமே சத்தியாம். எச

**75.** சுத்தமாம் சத்தி ஞானச் சுடராகும் சிவமொ ழிந்தச்
சத்திதான் இன்றும் முன்னைத் தகவிலா மலங்கள் வாட்டி
அத்தனை அருளும் எங்கும் அடைந்திடும் இருள்அ கற்றி
வைத்திடும் இரவி காட்டும் வளரொளி போல்ம கிழ்ந்தே. ௫

**(உரை)** சுத்தமாஞ் சத்தி ஞானச் சுடராகும் - சடசித்துக்களனைத்தினு மொழிவற நிறைந்து அவற்றின் குணங்களை விளக்கியுந்தான் ஒன்றினுந் தோய்வற்றுச் சுத்த ஞானப்பிரகாசமா யிருப்பது அச் சிவசத்தியேயாகும்; சிவமொ ழிந்தச் சத்திதான் இன்றும் - அத்துணைப் பெரியவல்லமை யுடைத்தாயினும் அச்சத்தி அச்சிவபிரானையின்றி யில்லையாம்; அதனாற் போந்த பயன் ஏதென்னில்—முன்னைத் தகவிலா மலங்கள் வாட்டி - அனாதியே ஞானதிரோதகத்திரவியமாய் நிற்கும் இருவினை மும்மலங்களைச் சேதித்து; மகிழ்ந்தே அத்தனையருளும் - தனதறிவில் அனாதியே அயிக்கமாயதோர் ஆனந்த சொரூபியாகிய சிவபிரானைப் பெறுதற் கிடையீடின்றிய பேருதவியாய் நிற்கும்; அஃதென்போலெனில்—எங்கும் அடைந்திடும் இருள்அகற்றி வைத்திடும் - எவ்விடமும் நிறைவாகிய பெரிய புறப்பூதவிருளை யகற்றிக் கண்ணுக்கு ஒளியுண்டாமாறு வாழ்வித்து; இரவி காட்டும் வளரொளிபோல் - ஆதித்தனையுங் கண்காணுமாறு காட்டுகிற ஆதித்தப் பிரகாசத்தைப்போல்.

ஆதித்தனைக் காணுமளவும் இரண்டொளிக்குஞ் செய்தியேயன்றி அதன்மேற் செய்தியில்லை யுண்டென்பது குருமுகமா யறிக. இரண்டொளிக்குஞ் செய்தியில்லை யென்பாருஞ் செய்தி யுண்டென்பாரும் ஞாயிற்றி னொளிக்கே செய்தியில்லைக் கண்ணொளிக்குச் செய்தி யுண்டென்பாருங் கண்ணொளிக்கே செய்தியில்லை ஞாயிற்றொளிக்குச் செய்தியுண்டென்பாரும் இவ்வாறு குணகுணி சுபாவங் குருமுகமா யறியாது பலபடப் பிணங்குவாரு முளர். உவமைக்கோதிய அனைத்தும் பொருட்கண்ணு மோதிக்கொள்க.

'ஒன்றி நின்றுணரு' [87] மென்றும் 'உயிர்தானுஞ் சிவானுபவ மொன்றினுக்கு முரித்' [சிவஞானசித்தியார், xi, 10] தென்றும் வருவனவற்றோடு பிணங்காது குணகுணிசுபாவங்களனைத்துங் குருமுகமாய் அறிதற்பாலன. எ௫

---

# ஒன்பதாஞ் சூத்திரம்

ஆக நான்கு செய்யுளால் எட்டாஞ் சூத்திரத்தியைபுபற்றி ஆன்ம தரிசனங் கூறுமுகத்தால் தரிசனஞ் சுத்தி லாபம் மூன்றிற்கும் வகை கூறிப்போந்த ஆசிரியர் இனி அதன் விரிவு கூறுவார், மலரடிக்கீழ் வைப்ப ' [சிவஞானசித்தியார், viii, 1] னெனவும், ' பாத நிழற்கீழ்' [ஷை, ix, 1] நிற்க வெனவும், ' ஏகனுகி . . . நின்றிட' [ஷை x, 1] வெனவும், 'அரன் மலரடிக்கீ ழிருப்ப' [ஷை xi, 1] னென வும் வருஞ் சூத்திரங்கணான்கும் தம்முள் முரணுது ஒரு பொருளே மேற்கொண்டு நிற்றல்பற்றி. இனி மூன்று சூத்திரக்கருத்தும் விரவி வருமாயினும், ' திரண்டிரண் டொன்ற தான திகழொன்பான் பத்' [சுவாமிநாததேசிகர் தசகாரியம், 21] தென்றல்பற்றி ஒன்பதும் பத்து மாகிய இருசூத்திரக் கருத்தும் விரவி முற்கூறப்படுமாயினும், ஆன்ம சுத்தி கூறும் ஒன்பதாஞ் சூத்திரத்தியைபுபற்றி முதற்கண் நான்கு செய்யுளால் மேற்கூறிப்போந்த சிவசத்தியின் பெருமை இத்துணைப் பெரியதோர் சிறப்புடைத்தென்றும் அதுவாய் நிற்கினும் அவ்வான்ம சிற்சத்திக்குரிய தன்மை யிதுவென்றுந் தெரித்து, ஞானநிலையில் உறைத்து நிற்குமாறும் அதனுல் ஆன்மதரிசனஞ் சுத்தி ஆன்மலாபங் கைகூடுமாறும் விரித்துக் கூறுவான் தொடங்கினுர்.

76\. புகலரும் அசத்தர் தம்பால் பொருந்திய அலகை யேபோல்
அகிலமும் உணரு மீசன் அருளுயிர் மேவ லாலே
சகலமும் நிகழ வேண்டுந் தலைவன்ஐந் தொழிலுந் தானே
இகலற இயற்றல் வேண்டும் என்றது நன்றி யின்றே. அ

(உரை) புகலரும் . . . யேபோல் - சொல்லுதற்கரிய பல வீனனிடத்தில் ஒரு பசாசு ஆவேசித்தபோது அது செய்யுங் கிருத் தியமனைத்தும் அவன் செய்வதுபோல் ; அகிலமும் . . . மேவ லாலே - சர்வஞ்ஞனுகிய சிவபிரானது சத்தி உயிரிடத் தாவேசித்துப் பொருந்திய ஏதுவினுலே ; சகலமும் . . . யின்றே - சிவபிரா னது முற்றுணர்வும் ஐந்தொழிலும் உயிர் செய்தற்குரியனுவ னென் பது நன்றி மறத்தல் மாத்திரையேயாம்.

இனி அதன் இயல்பு எதென்னில்,

77. இன்றுநோக் குரைந டக்கும்
இயல்பிலோற் கினைய வாய்ந்து
நின்றதோர் அலகை நேர்ந்தால்
நிகழ்வதென் அதுபோ லுள்ளத்(து)
ஒன்றிய உணர்வு தம்பால்
உள்ளது நிகழ்த்தும் ஈசன்
தன்தொழில் நடத்தும் மேனி
தனக்கெனக் கொண்டு தானே. உ

**(உரை)** இன்றுநோக் குரைநடக்கு மியல்பிலோற்கு - கண்ணும் வாயுங் காலு மில்லாத ஒருவனிடத்திலே; இனைய வாய்ந்து . . . நிகழ்வதென்-கண்ணும் வாயுங் காலுமுள்ள பசாசு வந்து பொருந்தினுல் அப்போது கண் காணவும் வாய் பேசவுங் கால் நடக்கவுங் கண்டோ மில்லையே ; அதுபோல் - இத்தன்மைபோல; உள்ளத்து . . . நிகழ்த்தும் - ஆன்மாவினிடத்திலே திருவருள்ஞானவிளக்க முண்டாகி லும் ஆன்மாவுக்குள்ள தன்மை விளங்குவதேயன்றி அச் சிவசத்தி செய்யுங் கிருத்தியம் உயிர் செய்யாதாம் ; ஈசன் . . . தானே - சிவபிரான் அச்சத்தியே தனக்குத் திருமேனியாகக் கொண்டு தன் தொழிலாகிய பஞ்சகிருத்தியமுஞ் சர்வஞ்ஞுமுஞ் செய்யும். எஎ

78. இந்நிலை தன்னில் மன்னி எய்திடும் கலாதி போதம்
தன்னள வறிந்து நிற்கும் தகவிலா மலங்கள் நீத்த
அந்நிலை கரணம் ஆகா வகையதில் அறிவ டங்கி
மன்னிட வியாபி யாய வான்பயன் தோன்று மன்றே.

**(உரை)** இந்நிலை தன்னில் மன்னி - இவ்வாறு சிவபிரானுக்குத் திருமேனியாய்த் தன்ருெழில் செய்தும் உயிர்கட்கெல்லாம் அறி வாய் ஒன்ருய் வேருய் உடனுய்த் தத்தம் எல்லையளவு விளக்கியும் எவ்விடமும் ஏகநிலையாகப் பொருந்தி நின்று ; எய்திடுங் கலாதி போதந் தன்னள வறிந்து - உயிர்கட்குக் கலையாதியால் போதத்தை விளக்கி உயிர் அறியுமிடமெல்லாம் உடனின்று அஃதறியும்பொருட் டாய் அறிந்து ; நிற்குந் தகவிலா மலங்கள் நீத்த அந்நிலை - நீங்குஞ் சத்திகளையுடைய மலங்களைப் போக்கி அறிவை விளக்கிய அறி

வாகிய திருவருளை ; கரணமாகா வகை - தனக்குக் கரணமாய்க்கொண் டறியாமல்; அதில் அறி வடங்கி மன்னிட-தனது ஞானக்கிரியைகளை வேறு காணப்படுமாறின்றித் திருவருளேயாய் அவற்றுளடங்கி நிலை பெற்று நிற்கவே ; வியாபி யாய வான்பயன் தோன்று மன்றே - அந் நிலை உறைத்து நிற்க நிற்க வியாபக அறிவு விளங்கி அவ் விளக்கத்தின் கண் ஆனந்த சொரூபமாகிய பெரிய சிவம் பிரகாசிக்கும். எஅ

79. அடைபவர் சிவமே யாகும் அதுவன்றித் தோன்று மென்ற
கடனதே தென்னில் முன்னம் கண்டிடார் தம்மைப் பின்னும்
தொடர்வரும் அருளி னாலே தோன்றுமா காணு ராயின்
உடையவன் அடிசேர் ஞானம் உணர்தலின் றணைத லின்றே.சு

**(உரை)** அடைபவர் சிவமே யாகு மதுவன்றி - சிவத்தை யடைந்த உயிர் சிவமாவதேயன்றி; தோன்றுமென்ற கடனதே தென்னில் - வேறே சிவம் பிரகாசிக்குமென்றது ஏதென்னில் ; முன்னங் கண்டிடார் தம்மை - அப்போது சற்காரியவாதத்திற்கு இழுக்காய் முடிதலின் தற்றெரிசனப்பட்டவர்க ளல்லவாம் ; 'இவனவ னுகா னென் றுந்தீபற, என்றும் இவனேயென் றுந்தீபற' [திருவுந்தியார், 40] வென்றும், 'தைவமென்றுந் தைவமே' [சிவஞானபோதம், xii, 7] யென்றும் வருமாற்ருனு மறிக—பின்னும் - முன்னீங்கிய மலங்க ளெல்லாம் மீளவும் வந்து பொருந்துமாகையினாலே ; தொடர்வரு மருளினாலே - போதமேலிட்டால் தொடர்வதற் கரிதாகிய திருவருள் ஞான விளக்கத்தாலே மேற்கூறிய முறையே ஞானநிலையில் உறைத்து நின்று ; தோன்றுமா காணுராயின் - அந்த ஞானத்தின் பயனைப் பிரகாசிக்குஞ் சிவத்தை யடையாராயின் ; உடையவ னடிசேர் ஞான முணர்தலின் றணைதலின்றே - தம்மை யடிமையாக வுடைய சிவனடி சேர்தற்குரிய சிவஞானத்தை யறிந்தவர்களுமன்று திருவடியைப் பொருந்தினவர்களு மன்று. எகூ

---

# பத்தாஞ் சூத்திரம்

ஆக நான்கு செய்யுளால் தரிசனஞ் சுத்தி லாபத்தை விரித்துக் கூறி இந்நிலைகளில் ஆன்மாவிற்குரியது இதுவெனக் கூறிப்போந்த ஆசிரியர் இனி அதற்கு உபாயங் கூறுவான் தொடங்கினார். இங்ஙனங் கூறிய முறையானே அகம்புறமென்ற தெங்கணும் ஏகநிலையாய்க்

கண்டு இறைநிறைவி லழுந்தும் நிட்டையில் உறைத்து நிற்புழிச் சுட்டறிவுபற்றிப் பண்டைப்பயிற்சி வயத்தாற் பிரபஞ்சங் காட்சிப்பட வருமாயின் அஃதொழிந்து அந்நிட்டையில் உறைத்து நிற்றற்கு உபாயம் யாதென்னின்,

80. பொற்புறு கருவி யாவும் புணராமே அறிவி லாமைச்
சொற்பெறும் அதீதம் வந்து தோன்றாமே தோன்றி நின்ற
சிற்பா மதனுல் உள்ளச் செயலறுத் திடஉ திக்கும்
தற்பர மாகி நிற்றல் சாக்கிரா தீதந் தானே. க

**(உரை)** பொற்புறு கருவி யாவும் புணராமே-பாசநீக்கத்திற் கேதுவாய்க் கருவி கரணங்களெல்லாந் தொழிற்பட்டு விளங்குஞ் சாக்கிர சாக்கிரத்திற்றானே அக்கருவிகளொன்றேனும் ஆன்ம சிற்சத்தி பொருந்தியதனுற் பெறப்படுஞ் சுட்டுணர்வுகளைக் காட்சிப்படாமல்; அறிவிலாமைச் சொற்பெறு மதீதம் வந்து தோன்றாமே - தன்னுண்மையாகிய கேவலாதீதத்தி னிகழும் அறியாமையும் ஆண்டுப் பொருந்தாமல்; தோன்றி நின்ற சிற்பரமதனுல் - காணுங் காணங்களெல்லாம் பேரின்பமாகத் தோன்றும் ஏகநிலையாகிய திருவருளினுலே; உள்ளச் செயலறுத்திட - தான் பிரமமாதல் சமப்பிரமமாதல் அதுவாதலென்னும் மூவகைக் கெற்சிதத்திற்கு மப்பால் இப்பேறு பெற்றுமென்று ஞாதுரு ஞான ஞேய விகற்பம் விளைக்குங் கெற்சிதம் நீங்கும்படி நிற்கவே; உதிக்குந் தற்பரம் - அவ்விடத்துண்டாகப் பெறுவது சிவம்; ஆகி நிற்றல் - அந்தச் சிவமே தானுகக் கூச்சமற்று அதுவாகவே நிற்கப்பெறின்; சாக்கிராதீதந் தானே - அந்தச் சாக்கிரத்திற் புரியும் அதீதமே நின்மல துரியாதீத நிலையாம்.

'நின்னருளாறுமே' [திருவாசகம், எண்ணப்பதிகம், 3] யென்றும், 'கூச்சற் றருந்தியது வாகவு மென்று கூடு'மென்றும் வருமாற்றாற் கூச்சறுதலும் அதுவாதற்கு வேண்டப்படுங் கருமமென்றறிக. அ0

இனி இச்சாக்கிராதீத நிலையினது அருமை பெருமைகளை விளக்குமுகத்தால் முதற்கண் ஒரு செய்யுளாற் 'பொற்புறு கருவி யாவும் புணரா'மைக்கு உபாயங் கூறுவான் தொடங்கினர்.

81. ஒடுங்கிடா கரணம் தாமே ஒடுங்குமா றுணர்ந் தொடுக்க
ஒடுங்கிடும் என்னில் நின்ற தொடுங்கிடா கரண மெல்லாம்

ஒடுங்கிட ஒடுங்கும் உள்ள உணர்வுதா ணுழியும் வேருய்
ஒடுங்கிடின் அன்றி மற்ற உண்மையை உணரொ ணுதே.

(உரை) ஒடுங்கிடா கரணந் தானே - கன்மார்ச்சிப்பிற்கும் புசிப்பிற்கும் முன்னிலையாகிய கரணங்கள் ஆன்மாச் சாக்கிர சாக்கிரவத்தைக்கண் நிலைபெறுமிடத்துக் கரணங்கள் தாமே யொடுங்கா; ஒடுங்குமா . . . தொடுங்கிடா - கரணங்கள் ஒடுங்குகிற முறைமையை யறிந்து அவைகளை யொடுக்கிஞல் ஒடுங்குமென்னில் அப்போது அவைகளை அறிந்து ஒடுக்குதற்காய் அவைகளோடு பொருந்திச் சீவிக்கும் போதம் ஒடுங்காது, போதம் ஒடுங்காதொழியவே கரணங்களும் ஒடுங்கின தில்லையாம்; கரண மெல்லாம் ஒடுங்கிட ஒடுங்கும் - கரணம் ஒடுங்கவே போதம் ஒடுங்குமெனிற் கரணம் ஒடுங்கும்போது அதீதத்திலே உயிர் ஒடுங்குவதன்றிச் சாக்கிரத்தில் நிலைபெருது; உள்ள உணர்வுதாணுழியும் - ஆன்மா அதீதத்தொடுங்கும்போது ஏகதேசக் காட்சிப் படுவதுமின்றி ஞானக்கிரியைகள் முற்றும் ஒடுங்குவதால் அது கேவலமேயாம்; இனி அதனுண்மை ஏதென்னில்—வேருய் . . . உணரொ ணுதே - ஆன்மா சாக்கிர சாக்கிரத்தின்கண் நிற்கவே கரணங்களாற் படும் ஏகதேசக் காட்சிகளில் தான் தோயாது அக்கருவிகரணங்கட்கு வேருய் வியாபக அறிவுள் ஒடுங்கிஞலேயன்றிப் 'பொற்புறு கருவியாவும் புணரா'த வுண்மையைப் பெறுதற்கரிது. அக

இனி ஒரு செய்யுளால் அறிவிலாமைச் சொற்பெறும் அதீதம் வந்து தோன்ருமைக்கு உபாயங் கூறுவான் தொடங்கிஞர்.

82. பற்றிடும் கருவி யாவும் படர்ந்துணர் வளிக்குங் காலை
உற்றறிந் திடுவ தொன்றின் உணர்வினின் உண்மை யாகும்
மற்றது பகல்வி ளக்கின் மாய்ந்திட வருவ தாண்டேல்
பெற்றிடும் அதனை மாயப் பிறப்பினை அறுக்க லாமே. ந

(உரை) பற்றிடுங் கருவி யாவும் படர்ந்து - புறப்பொருள்களிற் பற்றுங் கருவி கரணங்களனைத்துந் தத்தமெல்லை யளவு பிரகாசித்து; உணர் வளிக்குங் காலை - ஆன்மாவினது ஞானக் கிரியைகள் புறத்துச் செல்லும்படி ஏகதேச அறிவை விளக்கி நிற்குங் காலத்து; உற்றறிந்திடுவது - அக்கருவி கரணங்களைப் பொருந்திச் சுட்டுணர்வுகளால் ஏகதேசப் பொருள்களை யறிவது; ஒன்றின் உணர்வினின் உண்மை

யாகும்-ஒன்றொன்று யறியும் ஆன்ம சிற்சத்தியின் உண்மை அதுவே யாகும்; மற்றது - சுட்டுணர்வாற் புறப்பொருளை யறியும் ஆன்ம சிற்சத்தியானது; பகல் விளக்கின் மாய்ந்திட - பகல் விளக்குப்போலச் சத்தி கெட்டுப் புறப்பொருளை யறியாது நிற்பதற்கு;வருவ துண்டேல்- வியாபக அறிவை விளக்கும் உண்மை ஞானப் பெருக்க முண்டாகில்; பெற்றிடும் அதனை - அறிவிலாமைச் சொற்பெறும் அதீதம் வந்து தோன்றுமையைப் பெறப்படும்; மாயப் பிறப்பினை யறுக்கலாமே - அது பெற்றால் அந்தச் சாக்கிராதீத நிலையாகிய வச்சிராயுதத்தைக் கொண்டு கெடாத செனன மரணக் கொடியை அறுக்கலாம். அஉ

இனி மேற்கூறிப் போந்த சன்மார்க்க நிட்டைக்குத் துவாரம் இதுவென்பது உணர்த்தி அதன்கண் மனவெழுச்சி சேறற்பொருட்டு ஒரு செய்யுளால் அதனைத் தொகுத்துக் கூறுவான் தொடங்கினர்.

83. முந்திய ஒருமை யாலே மொழிந்தவை கேட்டல்கேட்டல்
சிந்தனை செய்தல் உண்மை தெளிந்திடல் அது தா னாக
வந்தவா றெய்தல் நிட்டை மருவுதல் என்று நான்காம்
இந்தவா றடைந்தோர் முத்தி எய்திய இயல்பி னோரே.

**(உரை)** முந்திய ஒருமை யாலே - முன்செய்த சிவபுண்ணிய முதிர்ச்சியாற் குருவருளைத் தலைக்கூடப் பெற்று; மொழிந்தவை கேட்டல் - அக் குருவாக்கால் உணர்த்தும் ஆகமார்த்தங்களைக் கேட்டல்; கேட்டல் சிந்தனை செய்தல் - கேட்ட பொருளைப் பூர்வாபர விரோதமறச் சிந்தனைத் துணையோடு கூடிச் சிந்தனை பண்ணுதல்; உண்மை தெளிந்திடல் - சிந்தனை பண்ணின பொருளை உண்மை ஞானத்தால் தரிசித்தறிதல்; அது தா னாக வந்தவா றெய்தல் நிட்டை மருவுதல் - பெத்தக் காலமெல்லாஞ் சிவசத்தியுட னின்றறியினும் அதனை வேறு காணப்படுமாறின்றி ஆன்மாவாகவே ஒன்றுபட்டு நின்ற அத்துவித நிலையை யறிந்து முத்திக்காலத்து உயிர் கூட நின் றறியி னுந் தன்னை வேறு காணப்படுமாறின்றி அச்சிவமேயாய் அத்துவித மாக நிற்றலே நிட்டையைப் பொருந்துவதாம்; என்று நான்காம் - இவ்வாறு நான்குவிதமா யிருக்குஞ் சன்மார்க்க நிட்டை சேருந் துவாரமென்றறிந்து; இந்தவா றடைந்தோர் - இவ்வாறு சிவமாகவே நிற்கும் பிரமவித்தை கைவந்தவர்கள்; முத்தி யெய்திய இயல்பி னோரே - பரமுத்தியைத் தலைக்கூடினவர்களேயாம். அங

இனி இக் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டையென்னும் நான்கினுள்ளும் அதனுள்ளுறை யிதுவெனத் தெரித்துக் கூறுவான் தொடங்கினர்.

84. பாசமா ஞானத் தாலும் படர்பசு ஞானத் தாலும்
ஈசனை உணர வொண்ணு திறைஅருள் ஞான நண்ணித்
தேசுறும் அதனால் முன்னைச் சிற்றறி வொழிந்து சேர்ந்து
நேசமோ டுயர்ப ரத்து நிற்பது ஞான நிட்டை. ரு

(உரை) பாசமா . . . உணரவொண்ணது - மந்த மந்ததர பாகங்களால் ஒருவேளை வாசகவாச்சியஞான மாத்திரையாய் விளங்கி ஆகமார்த்தங்களைக் கேட்டல் சிந்தித்தல் நடக்கினுஞ் சிவஞானம் உதயமானலன்றிப் பாசஞானம் பசுஞானங்களினல் தெளிதல் நிட்டையிரண்டுந் தலைக்கூடா; கேட்டல் சிந்தித்த விரண்டுக்குமே நூல் வேண்டுமாகலின் அது ஆகமஞான மாத்திரையாய் இடையே வற்றுதலன்றிக் குறை தீராது—இறையருள் ஞானம் நண்ணி - பாசஞானம் பசுஞான மிரண்டும் நீங்கினல் தீவிரந் தீவிரதரபாகமுண்டாய்க் கேட்டல் சிந்தித்தல் கூடினல் அந்தத் துவாரமாய் உடனே உண்மை ஞானம் பிரகாசிக்கும் ; தேசுறும் - அது பிரகாசிக்கவே கேட்டல் சிந்தித்தல்களினின்றுந் தெளிதல் ஞானமொன்றே மேற்கொண்டு ஏனையிரண்டுங் கழலும் ; அதனல் முன்னைச் சிற்றறி வொழிந்து - தெளிதல் ஞானத்தினின்றும் ஏகதேச அறிவுகளெல்லாந் துறந்து புலனுணர்வுகளிற் செல்லாது மேல்நோக்கும் ; சேர்ந்து - நோக்கவே வியாபகவறிவே மேற்கொண்டு அதனுடனே சேர்ந்து அதுவாயே நிற்கும் நிலை கூடும்; நேசமோ டுயர்ப ரத்து நிற்பது ஞான நிட்டை - அது கூடவே சிவன் காட்டியுங் கண்டும் உபகரித்துவரும் அத்துவித நிலையை மறவாது கடைப்பிடித்துப் பேரன்பு மீதூரும், அவ்வன்பு சார்வாக அந்தச் சிவமே தானக நிற்பது ஞான நிட்டையாம். அ௪

இனி ஓர் உபாயங் கூறுமுகத்தால் அந்நிட்டைக்கண் மனவெழுச்சி சேறற்குத் துவாரம் உணர்த்துவான் தொடங்கினர்.

85. விளம்பிய வகையில் நிட்டை மேவிடல் அரிதேல் முன்னம்
அளந்தறி வளித்த வற்றின் அளவுமற் றவற்றி ஞலே

உளங்கொளுந் தனையு முள்ள படியுமுற் றுணர்ந்து செவ்வே
தளர்ந்திடா துவப்ப மற்றத் தன்மைய தாகுந் தானே.

(உரை) விளம்பிய வகையில் நிட்டை மேவிடல் அரிதேல்-மேற் கூறிய முறையே கேட்டல் சிந்தித்தல் தெளிதலைப் பொருந்தி நிட்டையைத் தலைக்கூடுவ தரிதாகில்; முன்னம் - தனது ஞானக்கிரியைகள் சீவியா தொடங்கிய விடத்து; அளந்து - சிவசத்தியால் ஏவப்பட்டு இச்சை ஞானங் கிரியைகளை விளக்கிக் கன்மத்தையுங் காலத்தையும் வரையறை செய்து; அறி வளித்த வற்றி னளவும் - தனது ஞானக் கிரியைகள் புறத்துச் சேறற்கு அறிவைக் கொடுத்த தத்துவங்கள் தோன்றுவதும் நிற்பதுந் தொழிற்படுவதும் இறைவன் வயத்தானன்றி நமது வயத்தா னல்லவென்பதும்; மற்றவற்றினுலே - சிவசத்தியால் ஏவப்பட்டு நிற்குந் தத்துவங்களினுலே; உளங்கொளுந் தனையும்-தான் புறப்பொருள்களில் ஒன்றை அறியுமிடத்து முதல்வன் உடனின் றறிந்து அறிவித்தாலன்றி அறிதற்குச் சுதந்தரமுடையே மல்ல வென்பதும்; உள்ளபடியும் - திருவருள் அநாதியே பின்னமற நின்று சடத்துக்குத் தொழிலுஞ் சித்துக் கறிவும் உடனின்று செய்துஞ் செய்வித்துந் தான் ஒன்றேடுந் தட்டாது பரிசுத்தமாய் நிற்குந் தன்மையும்; உற்று-அத்திருவருளைக் கண்ணுகப் பொருந்திக்கொண்டு; உணர்ந்து - இவ்வாறுள்ள தன்மங்களை இடைவிடாதறிந்து; செவ்வே தளர்ந்திடா துவப்பர் - இவ்வாறு அறிதற்கண் சலித்து ஞானக் கிரியைகள் புறப்பொருள்களில் முனைத்துச்செல்லா தவற்றுளடங்கி முதல்வ னுபகாரத்தை இடையீடின்றிக் கருதிப் பேரன்பு செய்ய வருமாகில்; மற்றத் தன்மை - இங்ஙன மிவ்வாறு நிற்குநிலை; அதாகுந் தானே - மேற்கூறிய நிட்டையேயாய்த் தலைக்கூடும்.

முதனூலாசிரியர் 'காமல்ல விந்திரிய' [சிவஞானபோதம், x, 2] மென்றதும், வழிநூலாசிரியர் 'இந்திரிய மெனப்பற்றி நின்றே' [சிவஞானசித்தியார், x, 3] மென்றதும்,இவ்விருசெய்யுளும் இது நோக்கி யென் றறிக. அ௫

இனிச் சோகம்பாவனை புணர்த்துவார் ஏனைப் பாவனைகளது இழிபுஞ் சோகம்பாவனையினது உயர்வுங் கூறுமுகத்தால் மேற்கூறிய நிட்டைக்குச் சோகம்பாவனை ஓர் துவாரமாமென்னும் உபாயங் கூறு

வான் றொடங்கினார். இனிக் கருடோகமென்பதுபோற் சோகமெனப் பாவிப்பேமென்றால்,

86. பாவிக்கின் மனாதி வேண்டும் பயனிலை கரணம் நீத்துப்
பாவிப்பன் என்னில் என்ன பழுதுள பாவ கத்தால்
பாவிக்க ஒண்ணா னென்று பாவிப்பன் என்னின் நீயென்
பாவிக்க வேண்டா ஆண்ட பரனருள் பற்றி னோர்க்கே.

(உரை) பாவிக்கின் மனாதி வேண்டும் பயனிலை - பாவனைக்கு மன முதலிய அந்தக்கரணங்கள் இன்றியமையாமையின் அது மேற் கூறிப்போந்த முறையே அசத்தாய் முடிவதன்றிச் சத்தாவதின்மையிற் பிரயோசனமில்லையாய் முடியும்; கரணம் . . . பழுது - கரணங்களை நீங்கி யிருந்து பாவிப்பனென்னில் அது நீங்கின இடத்துக் கேவலம் வருமன்றிப் பாவிக்க முடியாதாகலின் அதுவுங் குற்றமேயாம்; உள பாவ கத்தால் . . . நீயென் - எனக்குள்ள பாவனைகளுக் கெட்டாத பொருளென்று பாவிப்போமென்றால் அதுவுந் தற்போத பாவனையாகலிற் பிரயோசனமில்லையாய் முடியும்; பாவிக்க . . . பற்றினோர்க்கே - குருவருளைப் பெற்றுச் சோகம்பாவனையைத் தலைக் கூடியுள்ளவர்களுக்கு இவ்வாறு ஒருவிதத்தாலும் பாவிக்க வேண்டுவதில்லை.

ஆகவே சோகம்பாவனை இதுபோலல்ல வென்பதூஉம் அது மோட்ச சாதனமேயாமென்பதூஉங் கருத்து. அற்றாகலினன்றே 'சோகம்பா விக்குமத்தாற் சிவமு மாவ' [சிவஞானசித்தியார், xii, 3] றென்றுஞ், 'சோகமெனப் பாவிக்கத் தோன்றுவ' [ஷை, ix, 7] னென்றுங் கூறினார் வழிநூலாசிரியரும். 'தன்னருளாற் பாவிப்பது பர' [சிவஞானபோதம், vi, 4] மென்றார் முதனூலாசிரியரும். அ௬

இங்ஙனங் கூறியவாற்றான் ஞான நிட்டையி லுறைத்து நிற்றலிற் சிவமே யாதற்கண்ணும் உயிர்க்குரிய தன்மை யிதுவென வுணர்த்து முகத்தால் அவ்வச் சமயத்தார் கூறும் அத்துவித நிலைகளைப் பரிகரித்துச் சுத்தாத்துவித வுண்மை விளக்குவான் றொடங்கினார்.

87. ஒன்றிரண் டாகிஒன்றின்
ஒருமையாய் இருமை யாகி
ஒன்றிலொன் றழியும் ஒன்றா
தென்னின்ஒன் றாகா தீயின்

ஒன்றிரும் புறழின் இன்றும்
உயிரின்ஐந் தொழிலும் வேண்டும்
ஒன்றிநின் றுணரு முண்மைக்
குவமைஆ ணவத்தோ டொன்றே. அ

**(உரை)** ஒன்றிரண் டாகியொன்றி னொருமையாம் - ஒருபொருளே இரண்டாக நின்று மீள வொன்றாகுமென விசிட்டாத்துவிதங் கூறில் அப்போது பொன்னும் பணியும்போல் ஒரு பொருளேயாமன்றிப் பதிபசுவென் றிரண்டு பொருட்டன்மையாய் வழங்குதல் கூடாது; இருமையாகி யொன்றினொன் றழியும் - இரண்டு பொருள் இரண்டாகவே யிருந்து மீள வொன்றாகுமெனக் கேவலாத்துவிதங் கூறில் அப்போது ஒரு பொருள் கெட்டொழியுமாதலிற் சற்காரியவாதத்திற்கு இழுக்காய் முடியும்; ஒன்றுதென்னி னொன்றாகா - இரண்டுபொருளும் இரண்டாகவே யிருப்பதன்றி ஒன்றுவதில்லை உயிர்கள் முத்தியிற் சிவனால் வசியப்பட்டார்கள் முத்தான்மாக்களைக் குறித்துச் சிவனும் பிரேரகனல்லனெனச் சமவாதிகள் கூற்றுய்த் துவிதாத்துவிதங் கூறி லொன்றாகாதாகலின் அதுவுஞ் சித்தாந்தமன்று; தீயின் ஒன்றிரும் புறழின் - அக்கினியைச் சேர்ந்த இரும்பு அக்கினியாவதுபோலவே சிவத்தைச் சேர்ந்த உயிர் சிவமாமென்னில்; இன்று முயிரினைந் தொழிலும் வேண்டும் - உயிர்க்கில்லாத சாட்குணியமும் பஞ்சகிருத்தியமு முண்டாமென்று சொல்லவேண்டும்; ஒன்றிநின் றுணரு முண்மைக் குவமை - சிவனுடனொன்றாக நின்று சிவானுபோகப் பெருஞ் செல்வத்தை யறிதற்கு உவமை; ஆணவத்தோ டொன்றே - அறியாமையோடொன்றாய் அறியாமையே தானாயிருந்ததுபோலாம்.

எனவே அறிவினோ டொன்றாய் அறியுமுண்மையும், ஆண்டுத் தன்னை வேறு காணப்படுமாறின்றி அதுவேயாய் நிற்குமென்பதும், இன்னும் அதன்கட்படும் இயல்புகளனைத்துங் குருமுகமா யறிக. ஒன்றிரண்டாகி யொன்றாகாமைபற்றி உயிர் சித்தாதற்கு இழுக்கின்மையும், இரண்டும் ஒன்றாகாமைபற்றி உயிர் சிவமாதற்கு இழுக்கின்மையும், இரண்டும் இரண்டாய் நில்லாமைபற்றி உயிர் சத்தாதற்கு இழுக்கின்மையும், தீயைச் சேர்ந்த இரும்புபோ லாகாமைபற்றி உயிர் சிவசமமாதற்கு இழுக்கின்மையும், ஆணவத்தோ டொன்றுதல்போலச் சிவத்தோ டொன்றுதல்பற்றி 'உயிர்தானுஞ் சிவானுபவ மொன்றி

னுக்கும் உரித்'தாதற்கு இழுக்கின்மையும், ஒன்றினின் றுணருமுண்மைக்குவமை'ஆணவத்தோடொன்றே'யென்னுஞ் சுருதிச்சொற்குள் விளங்கியவாறுங் குருமுகமாய்ச் சாம்பிரதாயமாய்க் கேட்டறிக. அஎ

ஈண்டுக் கூறப்படும் நிட்டைக்கண் பாசக்ஷயமாதல்பற்றிச் சற்காரியவாதத்திற்கு இழுக்கின்மை கூறுமுகத்தால் முத்திநிலைக்கட் பாசத்தினியல்பு இதுவென்று ஒரு திட்டாந்தபூர்வமா யுணர்த்துவான் தொடங்கினர்.

88. அழிந்திடும் பாசம் என்னில்
நித்தமென் றுரைத்தல் வேண்டா
அழிந்திடா தென்னின் ஞான
மடைவது கருத வேண்டா
அழிந்திடும் சத்தி நித்தம்
அழிந்திடா ஒளியின் முன்னர்
அழிந்திடும் இருளும் நாசம்
அடைந்திடா மிடைந்தி டாவே. அஅ

**(உரை)** அழிந்திடும் பாசம் என்னி னித்தமென் றுரைத்தல் வேண்டா-ஞானம் பெருகி நாயகன் பாதம்பெறுஞ் சுத்தாவத்தையில் நின்மல துரியாதீதநிலைக்கட் பரமே பார்த்திருப்போர்க்கு ஞானக்கிரியைகளை மறைத்து அஞ்நிசையோகமா யிருந்த பாசம் நிற்புழிச் சிவத்துவாபிவியத்தியாய் வியாபகவறிவு விளங்காதாகையால் அந்தப் பாசமழிந்ததென்றே கூறப்படுமாயிற் சற்காரியவாதத்திற் கிழுக்காய் முடியும்; அழிந்திடா தென்னின் ஞான மடைவது கருதவேண்டா - அற்றேற் பாசமழியவில்லையென்றே கொள்ளில் அந்தப் பாசம் நிற்கு மட்டும் அறிவு விளங்காதாகையால் ஞானம் பெருகி நாயகன்றன் பாதம் பெறுவது சுத்தமென்னுஞ் சித்தாந்தத்தோடு முரணுறும்; இனி அதனியல்பு ஏதென்னில்—அழிந்திடும் சத்திநித்த மழிந்திடா-பாசத்தின் சத்திமட்டும் அழியும் பாசமழியாதென்றே கொள்ளப்படுமென்னில்; குணங்கெடவும் குணி கெடாதிருக்கவும் பதார்த்தவிலக்கணங் கூறுதல் வழுவாமாலென்னில்—ஒளியின் முன்ன ரழிந்திடு மிருளும் - ஆதித்தன் சன்னிதானத்தில் அழியப்பட்ட இருட்சத்தியானது; நாசமடைந்திடா - அது அழிந்ததென்று கெட்டொழிந்ததுமன்று; மிடைந்திடாவே - அழியவில்லையென்று கண்களை

மறைப்பதுஞ் செய்யாது ; இதுபோலவே பாசத்தின் சத்தி யழிந்த தென்று கெட்டொழிவதுமின்றி இருந்ததென்று ஆன்மாக்கள் ஞானக் கிரியைகள் சர்வதோ அபிவியத்தியாய் விளங்குவதைத் தடைசெய்வதுமன்று, இவ்வாறுக் கொள்ளப்படும். அஅ

ஈண்டு ஒரு செய்யுளால் ஆணவமலம் பற்றறக் கழியுமாறு தடை விடைகளாற் கூறிப்போந்த ஆசிரியர் இனிக் கன்ம மலம் பற்றறக் கழியுமாறு கூறுமுகத்தால் மூலமலமும் பற்றறக் கழியுமாறு கூறுவான் தொடங்கினர்.

89 எல்லையில் பிறவி நல்கும் இருவினை எரிசேர் வித்தின்
ஒல்லையின் அகலும் ஏன்ற உடற்பழ வினைய தூட்டும்
தொல்லையில் வருதல் போலத் தோன்றிரு வினைய துண்டேல்
அல்லொளி புரையும் ஞானத் தழலுற அழிந்து போமே. ௬௦

(உரை) எல்லையில் பிறவி நல்கும் இருவினை-சாதி ஆயுப் போக மெனப் பாகப்பட்ட முறையே அளவிலாத பிறவியை விளைத்தற்குக் காரணமாகிய புண்ணிய பாவமென்னுஞ் சஞ்சித கன்மமானது, எரி சேர் வித்தி னொல்லையி னகலும் - ஞானசாரியாது கிரியா சத்தியினால் அத்துவாசுத்தியோடு வறுத்த வித்துப் போலாய் மேற் சாதி ஆயுப் போகமெனப் பாகப்பட்டுப் பிறவிக்கு ஏதுவாகாமற் சீக்கிரத்திலே நீங்கும் ; ஏன்ற உடற் பழவினையதூட்டும் - சரீரமுகந்து கொண்ட சுக துக்கமென்னும் பிராரத்த கன்மம் அத்துவா சுத்தியானதன் பின்பு சரீர வசமாய் உயிர் நின்று ஏகதேசக் காட்சியிற் சுகதுக்கங்களை அறியாது பரமேபார்த்திருப்பாராகலின் அவர்களுக்குப் புசிப்பின்றி யுடற் புசிப்பாய் அதை ஆர்ச்சிப்பார் சன்னிதிக்கண் ஒழியும் ; தொல்லையில் வருதல் போலத் தோன்றிரு வினைய துண்டேல் - இவ்விரண்டு வினைகட்கும் மூலமாய் முன்புண்டாகிய முறையே நாசோற்பத்தியாய் விளையும் ஆகாமிய மென்னும் இதாகிதங்கள் உளவாயின் அது; அல்லொளி புரையும் ஞானத் தழலுற அழிந்து போமே - அந்தகாரத்தை நீக்கும் ஆதித்தன் ஒளிபோல ஆணவமலத்தை நீக்கும் ஆசாரியாது ஞான சத்தியினால் அம்மலத்தோடு கூடவே நாசத்தையடையும் ; ஆகத் திரிவித கன்மங்களும் இவ்வாறு பற்றறக் கழியும். அகூ

இனி மாயாமலம் பற்றறக் கழியுமாறு கூறப்புகுந்த ஆசிரியர் இனம்பற்றித் திரிவித பாசங்கட்கும் ஒழிவு கூறுவார் அஞ்ஞானம்

ஏகதேசக் காட்சியான் ஆயதெனவும் அக்காட்சி விருப்பு வெறுப்புக்களது தோற்றத்தான் ஆயதெனவும் அத்தோற்றம் பிராரத்த நுகர்ச்சிக்கட் செல்லுந் தற்போதத்தான் ஆயதெனவும் அறிந்து அங்ஙனந் தற்போதம் முளையாதவாறு பரிகரித்து ஞானநிலையில் உறைத்து நிற்றற்கு இன்றியமையாது வேண்டப்படும் உபாயம் இதுவே யென முத்தி பஞ்சாக்கரத்தினது இயல்பு கூறுவான் தொடங்கினர்.

## புனிதன் நாமம்

90. பந்தமா னவைஅ றுத்துப் பவுதிகம் உழலும் எல்லைச்
சந்தியா தொழியா திங்குத் தன்மைபோல் வினையுஞ் சாரும்
அந்தம்ஆ திகள்இ லாத அஞ்செழுத் தருளி னாலே
வந்தவா றுரைசெய் வாரை வாதியா பேதி யாவே. கக

(உரை) பந்தமா னவைஅ றுத்து-மேற்கூறிய முறையே திரிவித பாசங்களும் ஆசாரியரது கிரியா சத்தி ஞான சத்திகளினால் நீங்கப் பரமே பார்த்திருக்குஞ் சீவன் முத்தருக்கும்; பவுதிகம் உழலும் எல்லை - பிராரத்த கன்மத்தால் நிறுத்தப்படுந் தேகமுங் கரணங்களுஞ் சஞ்சரிக்குமளவும்; சந்தியா தொழியாது - தத்துவங்களாலாய ஏகதேசக்காட்சி ஓரோரிடங்களில் வந்து பொருந்தாமலிராது; மேலை அத்துவா சுத்தியோடு நீங்கிய தத்துவங்களின் ஏகதேசக் காட்சி மீளவும் வந்து பொருந்த ஏது என்னையெனின்—இங்குத் தன்மைபோல் - பெருங்காயம் வைத்து எடுத்தொழிந்த பாண்டம் வாசனையைப்பற்றிச் சிறிது கெந்தித்தும் ஒரு கறிக்கு உபயோகப் படாது கெந்தித் தொழிதல் மாத்திரையேபோல வாதனாமலத்தால் ஒரோவழிப் பிராரத்த நுகர்ச்சிக்கண் தற்போதம் முனைக்கும், அது முனைக்கவே; வினையுஞ் சாரும் - அந்தப் போதமே துவாரமாக மேலே நீங்கிய திரிவித கன்மங்கட்கும் மூலமாய்க் காமியமலமெனப் பெயர் படைத்த விருப்பு வெறுப்புக்கள் உளவாம்; அது சார்வாக மாயேயமலத்தின் தொழிலாகிய ஏகதேசக் காட்சியுண்டாய்ப் பரமே பார்த்திருக்கு மவர் வியாபக அறிவைத் தடைசெய்து சுட்டுணர்வை விளக்கும், அச்சுட்டுணர்வே துவாரமாக எல்லா அனத்தங்கட்கும் மூலமாகிய அஞ்ஞானத்தின் குணமாகிய விபரீத உணர்வு மேற்படும், அது மேற்படவே முன்பு ஒழிந்தவை யெல்லாம் ஒழிவல்லவாய்ச் சென்ன

மரணத்துக்கு ஏதுவாகும், இனி இவ்வாறு பிராரத்த வினை வாதியாம லும் ஞான நிலை பேதியாமலுஞ் செய்யும் உபாயம் ஏதென்னில்— அந்தமா திகளி லாத அஞ்செழுத்து - ஏனை விந்து ஞானங்கள்போலத் தோற்ற மொடுக்கமற்று அநாதியேயாகிய முத்தி பஞ்சாக்கரத்தி னுண்மையை; அருளி னாலே - ஆசாரியர் அனுக்கிரகத்தினாலே; வந்த வாறு - அவ்வக்கரப் பொருளைந்தும் பொருளெனப் பொருள்பட்ட பாகுகளறிந்து ; அந்த முறையே உரைசெய்வாரை - ஓது முறை உச் சரிக்கு முறை நிற்கு முறைகளில் தமக்குரிய முறையில் உறைத்து நின்று அனுட்டிப்போரை; வாதியா - பிராரத்த வினையும் வாதியாது; பேதியாவே - ஞானநிட்டை பேதிக்குமாறு ஏகதேசக் காட்சியும் உள தாகாது. ௯0

இதுகாறும் புடைவைக்கு அழுக்கொழிதலே சுத்திபோல உயிர்க் குப் பாச நீக்கமே சுத்தியாதலாற் பாசக்ஷயங் கூறும் பத்தாஞ் சூத்தி ரத்தியைபு பற்றித் தெரிசனஞ் சுத்தி லாபத்தின் விரிவு கூறு முகத் தாற் சுத்தியே மிகுத்துக் கூறிய ஆசிரியர் இனி ஈண்டுக் கூறிய திரு வஞ்செழுத்தின் இயைபு விரித்துக் கூறுமுகத்தாற் புனிதன்நாமத் தியல்பு கூறுவான் தொடங்கினார். அக்கரங்களெல்லாந் தோற்றமொ டுக்க முடையனவாகவும் ஈண்டுக் கூறப்படுந் திருவெழுத்தை அந்த மாதிக ளில்லாததெனக் கூறியது ஏதென்னில்,

91. திருவெழுத் தஞ்சில் ஆன்மாத் திரோதமா சருள்சி வஞ்சூழ்
தரநடு நின்ற தொன்றின் தன்மையின் தொன்மை யாகி
வருமநு மிகுதி யாலே வாசியி லாசை யின்றிக்
கருவழிச் சுழலு மாறுங் காதலார்க் கோத லாமே. ௯௧

(உரை) திருவெழுத் தஞ்சில்-ஏனை அக்கரங்கள்போலன்றி நித்திய பதார்த்தமாயுள்ள பொருளையே நம்மனோரால் வசியப்படும்பொருட் டுத் திருவஞ்செழுத்துக் குறிப்புடைத்தாய்ச் சிவசங்கற்பமாயிருத்த லால் இது அந்தமாதியில்லாத பொருளேயாம், இவ்வஞ்செழுத்தினும் பொருளியல்பு ஏதென்னில் ; ஆன்மா - யகாரம் ஆன்மாவாகும் ; திரோதம் - நகாரந் திரோதாயியாகும் ; மாசு - மகாரம் மலமாகும் ; அருள்-வகாரம் பராசத்தியாகும்; சிவம் - சிகாரம் பரமசிவமாகும்; இவ் வைந்து பொருளினும்—சூழ்தர நடுநின்றது-ஏனை நான்குபொருளும் இருபுறமும் இயைந்திருக்க நடுவே நின்ற ஆன்மாவானது ; ஒன்றின்

தன்மையின் தொன்மை யாகி-ஒன்றுடனே சேர்ந்து அதின் தன்மை யாகவே தான் நிற்பதன்றித் தனக்கெனச் சுதந்தரத்தன்மையி னிற்கும் இயல்பில்லையாயிருக்கும்; வரும் - அப்படி யிருக்கினுஞ் சிவத்தையே நாடி அவத்தைதோறும் அறிவு மேற்பட்டு வரும்; மன மிகுதியாலே - அப்படி அறிவு மேற்பட்டுவரினுங் கேவலசகல மிரண்டினும் மலதிரோதங்களின் தொழிற்பாடு மிகுதியுடைத்தாகலின்; வாசியிலாசையின்றி - அருளினுஞ் சிவத்தினுஞ் சையோகசம்பந்த வாஞ்சைகளொன்று மின்றி; கருவழி சுழலும் - அந்த ஏதுவினாலே செனனமரணப்பட்டு வருமாகலின் அவர்களுக்கு இந்த முத்தி பஞ்சாக்கரத்தின் முறைமை யுணர்த்துதல் இயல்பன்று; மாறுங் காதலார்க்கு-மலதிரோதங்களின் தொழில் மாறிக் கருவழிச் சுழலுதல் மாறவேண்டுமென்னும் ஆசையுடையராய்க்கேவலசகலங்கள் நீங்கப்பெற்றோர்க்கு; ஓதலாமே - இம் முத்திபஞ்சாக்கரத்துண்மையை அனுபவமுடைய ஆசிரியர் அனுக்கிரகம் பண்ணலாம்.

'காதலார்க்கோதலா'மெனவே சரியை கிரியா யோகிகட்கு ஓதுமுறைமையும் ஞானசாதகர்க்கு உச்சரிக்கு முறைமையும் சாத்தியர்க்கு நிற்கும் முறைமையும் விதியென்பது மொன்று. ௯௧

இனி அந்த நகாரமகார மிகுதி தீருதற்கு உபாயம் ஏதென்னில்,

92. ஆசுறு திரோத மேவா தகலுமா சிவமுன் னாக [ள
ஓசைகொள் அதனில் நம்மேல் ஒழித்தரு ளோங்கும் மீ
வாசியைஅருளும் மாய மற்றது பற்று உற்றங்(கு)
ஈசனில் ஏக மாகும் இதுதிரு எழுத்தி னீடே. ௯௨

(உரை) ஆசு - மலமும், உறு திரோதம் - அந்த மலசத்தியை ஏவிப் பாகப்படுத்தும் பொருட்டு அதனோ டியைந்த திரோதானமும்; மேவா தகலும் - இவ்விரண்டும் நீங்க வேண்டுமென்று ஆசையுடையோர்க்கு; மா சிவமுன் னாக ஓசைகொள் - சிவமுதலாக மாறிக் கொண்டு மானதம் மந்தஞ் சத்தமென்னும் மூன்றிற் சத்தமே விதியாய்க்கொண்டு உச்சரிக்கவே அது நீங்கும்; அதனில் நம்மேல் ஒழித்தரு ளோங்கும் - அவ்வாறு உச்சரித்து வரவே சினமருவு திரோதாயி கருணையாகித் திருந்தி யருளேயாம்; மீள - அப்பால் மந்தமென்னும் விதிப்படி உச்சரிக்கப்படும்; வாசியை யருளும் - அவ்வாறு உச்சரிக்கவே ஞானம் பெருகி நாயகன்றன் பாதம் பெறுதற்கு உரித்தாம்;

ளாயர் - ஒருவாற்றூற் சீவனென்னுந் தன்மை நீங்கிச் சிவமாந் தன்மைக்குரிய முத்தான்மாவானது; மற்றது பற்றுவுற்று - அந்தப் பரஞானமே பற்றாகப் புகுந்து; இங்கு - சிவயோகத்தானத் துரிய நிலைக்கண் அருளேயாய் நிற்கும்போது மானதமென்னும் விதிப்படி உச்சரிக்கப்படும், அவ்வாறு உச்சரிக்கவே; ஈசனில் ஏகமாகும்-சிவத்தோடு பிரிப்பின்றி அத்துவித நிலையாற் சிவமேயாம்; இதுதிரு எழுத்தினீடே - இதுவே புனிதன் நாமமாகிய பஞ்சாக்கரத்தின் உள்ளீடாம்.

ஓதுமுறைமை உச்சரிக்குமுறைமை நிற்குமுறைமையெல்லாம் இவற்றடங்கும், அது குருமுகமா யறிக. கூஉ

---

## பதினொராஞ் சூத்திரம்

### அணைந்தோர் தன்மை

இதுகாறுந் 'திரண்டிரண் டொன்ற தான திகழொன்பான் பத்' [சுவாமிநாததேசிகர் தசகாரியம், 21] தென்னும் இருசூத்திரத்தியைபுபற்றித் தரிசனஞ் சுத்தி லாபங்கட்கு வகையும் விரிவுங் கூறிய ஆசிரியர் இனி அணைந்தோர் தன்மை கூறுமுகத்தாற் பதினொராஞ் சூத்திரத் தியைபுபற்றி ஆன்ம லாபம் இனிது விளங்கக் கூறுவான் தொடங்கினர்.

93. தீங்குறு மாயை சேரா வகைவினை திரிவி தத்தால்
நீங்கிட நீங்கா மூல நிறைஇருள் இரிய நேயத்(து)
ஓங்குணர் வகத்த டக்கி உளத்திலின் பொடுங்க நேரே
தூங்குவர் தாங்கி ஏகத் தொன்மையில் துகளி லோரே.

(உரை) தீங்கு - யான் எனதென்னுஞ் செருக்காகிய விபரீத உணர்வு; உறு மாயை - அது வருவதற்குத் துவாரமாகிய மாயாதத்துவங்களின் ஏகதேசக் காட்சியானது; சேரா வகை - பொருந்தாதபடி; வினை - ஏகதேசக்காட்சி வருவதற்குத் துவாரமாகிய விருப்பு வெறுப்பாய்க் காமியமலமெனப் பெயர் படைத்தது; திரிவிதத்தா னீங்கிட - ஆசாரியரது ஞானசத்தியால் ஆகாமிய வினையுங் கிரியாசத்தியாற் சஞ்சித வினையுஞ் சுவானுபவத்தாற் பிராரத்த வினையும் நீங்கப்பெற்றுள்ளவர்களுக்கு; நீங்கா மூல நிறை இருள் இரிய - இம் மூன்றிற்கும் மூலமாய் அநாதிசையோகமாகிய மூலமலத்தின் காரியமான புகழ்வாய் பொருளவாவென்னும் இருவினையும் மூலமலமும் நீங்கப்பெற்று;

நேயத்து - முதல்வன் காட்டியுங் கண்டும் உபகரித்துவரும் பேருத வியை மறவாது கடைப்பிடித்து ; ஒன்குணர் வகத்தடக்கி - இவ்வாறு கடைப்பிடித்தற்கு நிலைக்களமாய் எவ்விடமும் நிறைந்த பராசத்தியி னிடத்துத் தமது ஞானக் கிரியைகளை யடக்கி ; உளத்திலின் பொ டுங்க - இப்பேறு பெற்றேமென்கிற கெற்சிதமும் இன்பசத்தியான் ஆயதென்றறிந்து அதுவும் அப்பரை நிறைவிலே யொடுங்க ; நேரே தூங்குவர்-சாக்கிரத்தே அதீதத்தைப் புரிந்து சுகபூரணத்திற் சிவமே யாய் நிற்கும் பூரணநிலையில் விகாரமற்றிருப்பர்; தாங்கி-எவ்வாறிருக்கி னும் முதல்வன் உபகாரத்தை மறவாத அன்பொன்றுமே கடைப் பிடிப்பர் ; ஏக - இவர்கள் சிவனோடு இரண்டறக் கலந்தவர்களாய் ; தொன்மையில் துகளி லோரே - பழமையாகிய குற்றங்களெல்லாந் தீர்ந்தவர்களாம். ௯௫

இனி அவர்கள் ஞானக்கிரியைகள் ஒரோவழிச் சீவிக்கும் இடம் உண்டாயினும் ஆண்டு நிகழ்வது இதுவென உணர்த்துவான் தொடங் கினர்.

94. குறிப்பிடம் காலம் திக்கா சனம்கொள்கை குலம்குணம்சீர்
சிறப்புறு விரதம் சீலம் தபம்செபம் தியானம் எல்லாம்
மறுத்தற வொழிதல் செய்தல் மருவிடா மன்னு செய்தி
உறக்குறு பவர்போல் வாய்மை ஒழிந்தவை யொழிந்து போமே.

(உரை) குறிப்பிடம் . . . சிறப்பு - இடமுதற் சிறப்பீறாக ஒன்பதையும் இதுவெனக் குறிப்புண்டாயவர்கள் ஞானஞ் சீவிப்பது மில்லை; உறு விரதம் . . . மருவிடா - இனி அவர்கள் கிரி யையோவெனில் விரத முதல் தியானம் ஈறாகிய ஐந்துஞ் செய்ய வேண்டுமென்று செய்வதும் விடவேண்டுமென்று விடுவதும் இல்லை யாம் ; இதுவே அவர்கள் கிரியை சீவிக்கும் முறைமை—மன்னு செய்தி - இனி அதன் இயல்பு எதென்னில்; உறக்குறு பவர்போல் - நித்திரை செய்வோன் கைப்பாக்குப் போல ; வாய்மை ஒழிந்தவை யொழிந்து போமே - நேயமொன்றே அவர்களுக்கு விடயமாகவே இவை யெல்லாந் தாமே கழன்றகலும். ௯௪

இனி ' ஞானி நாலினுக்கு முரிய ' [சிவஞான சித்தியார், xii, 5] னென்றுர் வழிநூலாசிரியரு மாகலின் ஈண்டதனோடு முரணி இவ் வாறு கூறுதல் மலைவாம் போலு மெனும் ஆசங்கை நீக்கு முகத்தால்

அவர் அனுட்டிக்கும் ஞான யோகக் கிரியா சரியைகளை முறையே நான்கு செய்யுளில் உணர்த்துவார் முதற்கண் ஒரு செய்யுளால் அவர்கள் ஞானம் இதுவென உணர்த்துவான் தொடங்கினர்.

95. அகம்புற மென்றி ரண்டால் அர்ச்சனை புரியும் இந்தச்
சகந்தனில் இரண்டு மின்றித் தமோமய மாகி எல்லாம்
நிகழ்ந்திட மகிழ்ந்து வாழும் நீர்மையார் போல ஞானம்
திகழ்ந்தகம் புறம்ஏ றாத செம்மையார் நன்மை யாரே. ரு

**(உரை)** அகம்புற மென்றி ரண்டால் அர்ச்சனை புரியும் இந்தச் சகந் தனில் இரண்டு மின்றி-மனோதீத கோசரமாகிய பொருளைத் தமது ஏக தேச அறிவால் அறிவார் போன்று யோகபாதர் அகத்தும் கிரியாபாதர் அகத்தும்புறத்தும் சரியாபாதர் புறத்தும் சுட்டறிவாற் பூரணத்தை யிழந்து செய்யும் அற்ப ஞானக் கிரியையுடைய உலகத்துள் ஞான வான்கள் கூடிக் குலாவியிருக்கினும் இவர் சுட்டறி வொழிந்து பூரண வறிவுடையராகலின் அவ்வாறு அகம் புறமென்று குறிக்குஞ் சங்கற்பங்கள் ஒழிந்து பூரண நிலையொன்றுமே காட்சியுடையராய்; தமோ மயமாகி - தாமத குணம் மேலிட்டவர்க்கு ஞானக்கிரியைகள் ஒரு காரணமுமின்றி யடங்குவது போலத் தமது ஞானக் கிரியைகள் ஒரு காரணங் குறியாது இயல்பாகவே யொடுங்கி; எல்லாம் நிகழ்ந்திட மகிழ்ந்து வாழும் நீர்மையார் போல-அஞ்ஞானிகள் ஒரு விதி விலக்கு மின்றி எந்த வேளை எது நடக்குமோ அதுவேயாய்ச் சித்த சஞ்சல மின்றி வாழ்வதுபோல; ஞானந் திகழ்ந்து-பரஞானப் பெருக்கமுடையராய்ச் சர்வமும் பூரணப் பொருளையின்றிச் சலியாத முறையை இடைவிடா தறிந்து; அகம் புறம் ஏறாத செம்மையார் நன்மை யாரே-மீண்டொருகாலும் ஏகதேசக் காட்சியிற் பொருந்தாத வியாபக அறிவுடையோரே யாவர்; இதுவே ஆனந்த போகம் புசிக்கும் பரமுத்தரது ஞானத்தின் முறைமை.

'ஆனந்தக் கூத்த னருள்பெறி னு மவ்வணமே, ஆனந்த மாகிநின் றூடாமோ தோணோக்கம்' [திருவாசகம், திருத்தோணோக்கம், 8] மென்றும், 'ஆனந்த மேசெவி யம்புயத் தாளிணை யங்கைகளு, மானந்த மேயவன் றில்லையுங் காழியு மானந்தமே' என்றும் வருமாற்றால் ஆனந்தபோக மென்பதற்குப் பொருளைக் குருமுகமா யறிக. கூரு

# பன்னிரண்டாஞ் சூத்திரம்

இதுகாறும் பதினோராஞ் சூத்திரத்தியைபு பற்றி ஆன்மலாபமாவது இத்துணைப்பெரிய சிறப்புடைத்தென்று வலியுறுத்து முகத்தால் அணைந்தோர் தன்மை கூறிய ஆசிரியர் இனிப் பன்னிரண்டாஞ் சூத்திரத்தியைபுபற்றி அச் சீவன்முத்தர் ஞானக்கிரியைகள் ஒரோவழிப் புறத்துச் செல்லுங்கால் அது செல்லுமிடம் இதுவென உணர்த்து முகத்தால் அவர் அனுட்டிக்கும் யோகங் கிரியை சரியை இதுவென மூன்று செய்யுளால் உணர்த்துவார் முதற்கண் ஒரு செய்யுளால் அவர்க்குரிய யோகம் இதுவென உணர்த்துவான் தொடங்கினர்:

96. அண்டம்மே விடஅ னைத்தும் அனைத்தையும் அண்டம் மேவிக்
கொண்டல்போல் எவையும் ஞானங் குறைவிலா நிறைத லாலே
கண்டதோர் பொருளை அந்தக் கருத்தினல் காணில் தானே
அண்டநா யகனார் மேனி யானதேல் ஐய மின்றே. க

(உரை) அண்டம்மே விடஅனைத்தும்-சர்வ பிரபஞ்ச பதார்த்தமும் ஆகாசத்திற்குள்ளே யிருக்க; அனைத்தையும் அண்டம் மேவிக் கொண்டல்போல் - சர்வ பதார்த்தத்தினுள்ளும் இருப்பு விடாமல் ஆகாசம் நிறைந்திருக்கிற முறைமை போல, எவையும் - சேதனப் பிரபஞ்சம் அசேதனப் பிரபஞ்சமென்னும் அனைத்தினும்; ஞானம்-எவற்றிற்கும் வியஞ்சகமாய்ப்பிரிவறநின்று செயற்படுத்தும் இறைவனது பரைஞானமானது; குறைவிலா நிறைதலாலே - பிருதிவி முதல் நாதாந்தம் அணுப்புதைக்கும் இடமற நிறைந்திருக்கிற தன்மை அண்டபிண்டமிரண்டினும் வைத்துணர்ந்து உள்ளவாறு அறிந்திருக்கும் சீவன் முத்தர்கள்; கண்டதோர் பொருளை - அவர்க்குச் சிவமே யன்றிப் பதார்த்தங்கள் விடயமாகா திருக்கினும் பழக்க வாடையால் ஒரோவழி ஞானக்கிரியைகள் புறத்துச் சென்று அத்துவாரமாய் ஏகதேச அறிவு உண்டாய் ஏதேனும் ஒருபொருள் காட்சிப்பட வருமாயின் அந்தப் பொருள் காட்சிப்படும்பொழுதே; அந்தக் கருத்தினற் காணில் - 'எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள், மெய்ப்பொருள் காண்ப தறி' [திருக்குறள், 355] வென்றார் நயினாராகலின் சிவ ஞானம் எவ்விடத்தும் இருப்பு விடாமல் எல்லாப் பொருட்கும் இடங் கொடுத்து உடனிற்கும் நிலைமையை மறவாத உணர்வால் அந்த

ஞானத்தை அப்பொருட் குள்ளாய்க் காண்பராகலின் அவர்க்குப் பரமே பார்க்கப்படுவதன்றிப் பதார்த்தங்கள் பார்க்க வாராவாம்; தானே அண்டநா யகனுர் மேனி யானதேல் - இது ஆசாரியர் அனுக் கிரகம் பெற்றுச் சிவபிரானைத் தனக்குயிராயுந் தன்னைச் சிவபிரானுக் கழியாத் திருமேனியாகவுமுள்ள சுத்தாத்துவித நிலை நிற்கப் பெற் றுடையவரேயாகில்; ஐயமின்றே - அவர்க்கு இவ்வாறு சிவமே கண் டிருக்கப் படுதற்கு ஐயமில்லை.

இதனுல் அவர் அறிவு செல்லுஞ் சிவயோகநிலை இதுவென வுணர்த்தியது குருமுகமா யறிக. ௯௬

இனி அவர் இயற்றுங் கிரியை கூறுவான் தொடங்கினுர்.

97. மண்முதற் கரண மெல்லாம் மறுஅசத் தாக்கி ஞானக்
கண்ணினில் ஊன்றி அந்தக் கருத்தினுல் எவையும் நோக்கி
எண்ணிஅஞ் செழுத்து மாறி இறைநிறை வுணர்ந்து போற்றல்
புண்ணியன் தனக்கு ஞான பூசையாய்ப் புகலு மன்றே.

**(உரை)** மண்முதல் கரணமெல்லாம் மறுஅசத் தாக்கி - பிருதிவி முதல் நாதம் ஈருன தத்துவங்களெல்லாம் மாயேயமேயன்றி ஆன்மா வல்ல அவை தொழிற்படுவதும் ஆன்மாவின் வழித்தல்ல அவை யெல்லாம் ஆக்கி நிறுத்தி அசைவிப்பது முதல்வனே யாகலின் அது முதல்வன் வழித்தேயாமென்று உள்ளவாறு உணர்ந்து தாம் அதிற் ருேயாது நிற்றல் பூத சுத்தியாம்; ஞானக் கண்ணினில் ஊன்றி - சிவஞானத்தை யின்றித் தமது ஞானஞ் சேவியாத முறை மையுஞ் சிவஞானம் உள்ளும் புறம்பும் ஒழிவின்றி நின்று காட்டியுங் கண்டும் உபகரித்து வருதலின் தமக்கு அந்த ஞானத்தை யின்றித் தனித்து ஞானமில்லை யென்றும் அறிவது தான சுத்தியாம்; அந்தக் கருத்தினுல் எவையும் நோக்கி-அவ்வாறு பிண்டத்திற் கண்ட முறை யே அண்டத்துமென்று அந்தச் சிவஞானத்தாற் சர்வமுஞ் செயற் படு முறைமை அறிவது திரவிய சுத்தியாம்; எண்ணிஅஞ் செழுத்தும் மாறி - பிறவி யறுப்பதற் கெண்ணி அவ்வெண்ணத்தை நீங்காது விதிப்படி பஞ்சாக்கரம் உச்சரிப்பது மந்திர சுத்தியாம்; இறை நிறை வுணர்ந்து போற்றல் - முதல்வன் அவ்வச்சிலேடிக வியாபகமாய் யாண்டும் நிறைந்துநின்று கொடுக்கும் பூரணநிலையை அறிந்து அவ னது உபகாரத்தை மறவாத பேரன்பால் தமதடிமைத்திறம் வழுவாது

சதாகாலவழிபாடு செய்தல் இலிங்க சுத்தியாம்; புண்ணியன் தனக்கு ஞான பூசையாய்ப் புகலு மன்றே - இவ்வாறு சதாகால பூசையாய் அவர் பணிமுற்றும் ஞானபூசையாகவே முடியுமென்று ஆகமங்களிற் கூறப்படும்.

'புண்ணியனைப் பூசித்த புண்ணிய' மென்பதும் இது. ஈண்டுப் புண்ணியனென்றது 'போகமாய்த் தான்விளைந்த பொற்பினு' [சிவ ஞானபோதம், xi, 2] னென்றார் முதனூலாசிரியருமாகலின். சிவ போகமாவது உண்மை ஞானம் பத்து வகையு ளொன்றாய் அவ் உண்மை ஞானம் சிவபுண்ணியம் பத்து வகையுளொன்றாயதாற் சிவ போகமே புண்ணியமெனப் பெயர்பெற்றதும், அதுவே சிவமாவதும் இனிது விளங்க உணர்ந்தார்க்கன்றிச் சிவனதுண்மை யுணர வாரா தாகலின் அது குருமுகமாயறிக. கூஎ

இனி அவர் அனுட்டிக்குஞ் சரியை யிதுவெனக் கூறுவான் தொடங்கினார்.

98\. தொண்டர்க ளிடத்தும் வானோர் தொழுந்திரு மேனி தானும்
அண்டரும் கண்டி லாத அண்ணலே எனவ ணங்கி
வெண்தர ளங்கள் சிந்த விழிமொழி குழற மெய்யே
கண்டுகொண் டிருப்பர் ஞானக் கடலமு தருந்தி னோரே.

(உரை) தொண்டர்க ளிடத்தும் - திருவேடக்குறியுடைய சிவ னடியாரிடத்தும்; வானோர் தொழுந்திரு மேனி தானும் - விஷ்ணு முதலிய தேவர்களெல்லாம் வந்தனம் பண்ணிப் பேறுபெறற்குரிய சிவலிங்கப்பெருமானுயனரிடத்தும்; அண்டருங் கண்டிலாத அண் ணலே யெனவ ணங்கி - தற்போதத்தால் தேவர்களுக்குங் காண்டற் கரிய முதல்வனது சுயந்திருமேனியே இதுவெனக் கண்டு வந்தனம் பண்ணி; வெண்டர ளங்கள் சிந்த விழி-கண்ணினாலே ஆனந்த பாட்ப முண்டாக; மொழிகுழற - நாத் தழுதழுப்ப; மெய்யே கண்டுகொண் டிருப்பர் - முதல்வன் எங்கணும் பாலின்கண் நெய்போல நிறைந் திருக்கினும் இவ்விரண்டிடத்துந் தயிரின்கண் நெய்போலப் பிரகா சித்திருக்கும் முறைமையை உணர்ந்துகொண்டே யிருப்பர்; ஞானக் கடலமு தருந்தி னோரே - ஞானமாகிய புணரியுள் நேயமாகிய அமு தம் புசித்திருக்குஞ் சீவன்முத்தர்கள்.

'மாலற நேய மலிந்தவர் வேடமு' [சிவஞானபோதம், xii] மென்றார் முதனூலாசிரியரும். 'அறிவரியான் றனையறிய வாக்கை யாக்கி' [சிவஞானசித்தியார், xii, 3] யென்றார் வழிநூலாசிரியரும். ஈண்டும் அவ்வாறே 'தொண்டர்களிடத்து' மென்றார். திருவேடமானது வசீகரித்துச் சிவபோக விளைவிற்கு ஏதுவாய்ச் சிவமே கண்டிருக்குங் காட்சியிற் செலுத்துந் தோறுஞ் சிவபோகம் புதிது புதிதாய் விளையும். 'புணருந் தொறும்பெரும் போகம்பின் னும்புதிதா' [திருக்கோவையார், 9] மாகலின் அவ்வாறு செலுத்துந்தோறுஞ் சிவபோகம் புதிதுபுதிதாய் விளையுமாகலின் திருவேடத்தையே சிறப்பித்ததாம். ௯௮

இனி இந்நூலிற் கூறிப் போந்த பொருள் இத்துணைப் பெரியவியல்புடையதென்று அதன் பெருமை கூறுவான் தொடங்கினர்.

99. நிலவுல காய தாதி நிகழ்சிவாத் துவிதாந் தத்துக்
குலவினர் அளவ ளாவாக் கொள்கைய தாகி வேதத் [ய்
தலைதரு பொருளாய் இன்பாய்த் தாவில்சற் காரி யத்தா
மலைவறும் உணர்வாற் பெத்த முத்திகள் மதித்தா மன்றே.

(உரை) நிலவுல காய தாதி - பிருதிவிமுதல் நாலுபூதமே உளவென்று கொண்ட உலகாயதன் முதல்; நிகழ்சிவாத் துவிதாந் தத்து - சிவத்திலே கேவலாத்துவிதந் தாபியாநிற்குஞ் சைவர் ஈறாகப் புறப்புறச் சமயம் புறச்சமயம் அகப்புறச்சமயம் அகச்சமயமென்னும் நாற்கூற்றிருபத்துநாலு சமயிகட்கும்; குலவின ரளவ ளாவாக் கொள்கைய தாகி - தனித்தனி அவரவர் கொண்ட அளவைப் பிரமாணங்களுக்கு அளவுபடாதாகி; வேதத் தலைதரு பொருளாய் - வேதச்சிரத்தி னுபநிடதத்தில் விளங்கிய பொருளாய்; இன்பாய் - முத்தான்மாக்க ளனைவருஞ் சுதந்தரமாய்ப் புசித்தும் அற்பமுங் குறையாத வாம்பிலின்பமாய்; தாவில்சற் காரி யத்தாய் - குற்றமில்லாத சற்காரியமாய்; மலைவறு முணர்வால் - மயக்க விகற்பங்களை யறுத்துச் சித்தவிகாரக் கலக்கந் தெளிவிக்குந் தெளிவு போதமாயுள்ள பொருளை; பெத்த முத்திகள் மதித்தாமன்றே - பெத்தக்காலத்தினு முத்திக்காலத்தினும் இவ்வியல்புடைத்தென்று சிவாகமத்துணிவை மதித்துக் கூறியதாம்.

மேலே நூன்முகப்பில் இந்நூலிற் கூறப்படுவது இதுவென்றவற்றுள் 'புறச்சமயத் தவர்க்கிருளா யகச்சமயத் தொளியாய்ப் புகலள

வைக் களவாகி' யென்றெடுத்துக்கொண்டு நூல் கூறி, ஈண்டு நூல் முடிவில் அகச்சமயம் புறச்சமய மனைத்திற்கும் அளவுபடாத பொருளையுடைத்தாமென்று முடித்தது பூர்வாபரவிரோதமென மலையாமற் குருமுகமா யதற்கு விடையறிக. ௯௯

இனி இந்நூல் கோடற்குரிய அதிகாரிகளாவார் இவரென்பதும் அவர்க்குணர்த்தும் முறைமையுங் கூறுவான் றொடங்கினர்.

100. திருவருள் கொடுத்து மற்றிச் சிவப்பிர காச நன்னூல்
விரிவது தெளியு மாற்றல் விளம்பிய ஏது நோக்கிப் [ன்
பெருகிய உவமை நான்கின் பெற்றியில் நிறுவிப் பின்மு
தருமலை வொழியக்கொள்வோன் தன்மையிற் சாற்ற லாமே.

(உரை) திருவருள் கொடுத்து - சைவாகமத்துட் கூறியவாறே சரியை கிரியா யோகம் அனுட்டித்து முடிந்து 'இருவினைச் செயல்களொப்பில் ஈசன்றன் சத்தி தோயக் குருவருள் பெற்று' [சிவஞான சித்தியார், iv, 40] ள்ளவர்களுக்கு ஞானதீக்கையைச் செய்து; மற்று - முதனூல் வழிநூலிரண்டும் ஆதியந்தம் பொருள் விகற்பமின்றிக் கொண்டதன் பின்பு; இச் சிவப்பிரகாச நன்னூல் - இந்தச் சிவப்பிரகாசமாகிய நல்ல நூலை; விரிவது தெளியு மாற்றல் - தொகை வகை விரிவாக முக்கூறாய்ப் பொருள் விரிந்து விளங்கும் முறைமை அறியும்படியாக; விளம்பிய ஏது நோக்கி - இயல்பு காரியம் அனுபலத்தி யென்னும் மூன்றேதுவினாலுங் குறித்து; பெருகிய உவமை நான்கின் பெற்றியில் நிறுவி - மெய்யுவமை வினையுவமை பயனுவமை உருவுவமை யென்னும் நால்வகை யுவமானங்களினும் நிறுத்திக் கொண்டு; பின்முன் றருமலை வொழியக்கொள்வோன் தன்மையிற் சாற்ற லாமே - பூர்வாபர விரோதமின்றி மலைவறக் கொள்ளும் அறிவுடையோர்களுக்கு இந்நூல் அனுபவமுடைய தேசிகரால் அனுக்கிரகம் பண்ணப்படுவது. ௧0

'பலகலை' [13] யென்னுஞ் சுருதிப்படி இந்நூல் பன்னிரண்டு சூத்திரமாயவாறும், முதனூல் வழிநூற் பொருளோடு சமரசமாய்த் திரிபதார்த்த லட்சணங்களைப் பெத்தமுத்தி யிரண்டாய்ப் பகுத்துக் கூறுமுகத்தாற் கேவல சகல சுத்தங்கட்குத் தொகை வகை விரிவாய் ஒரு பொருள்மேற் கொண்டவாறும் நுண்ணுணர்வாற் குருமுகமாய் அறியவல்லார்க்கே ஈண்டுக் கூறப்படும் பதார்த்தங்கள் கண்கூடாய்த்

தரிசனப்படுமாறு உண்மைஞான விளக்க மூண்டாய் ‘ இரண்டினி லேந்தி லாறி லேழினி லெட்டுத் தன்னிற், றிரண்டிரண் டொன்ற தான திகழொன்பான் பத்துத் தன்னில், . . . விருத்திய பத்தொ டொன்றிற் றிரண்டெழு முபதே சங்க ’ [சுவாமிநாத தேசிகர் தச காரியம், 21]ட் குரித்துடையராவரென்பது நுண்ணுணர்வினு லறிக.

முத்தியாவது சீவன்முத்தி அதிகாரமுத்தி போகமுத்தி இலய முத்தி யென்று ஐவகைப்படும். அவை யைந்தையுஞ் சீவன்முத்தி பரமுத்தியென இரண்டினு ளடக்கியுஞ் சீவன்முத்தி யொன்றி னுள்ளே யடக்கியுங் கூறுவர் இருதிறத்தாசிரியர். சீவன்முத்தி யாவது பரமே பார்த்திருந்து சாக்கிரத்தே அதீதத்தைப் புரியும் பராவுசிவ ராதல். அதிகார முத்தியாவது இவ்வாறிருக்குஞ் சீவன் முத்தருட் சிலர்க்கு அதிகார மலவாசனையாற் சிவசத்தி பதிந்து அணுசதாசிவர் அனந்தர் முதலிய அட்டவித்தியேசுரர், ஸ்ரீகண்டர் முதலிய குணபதிருத்திரர் அண்டபதிருத்திரர் புவனபதிருத்திரர்க ளதிகாரத்திற் செலுத்த அவ்வதிகாரம் பரிக்குமிடையே பாகமுதிர்ச்சி யாற் சிவனடியைச் சேர்வதாம். போகமுத்தியாவது மேற்கூறிய சீவன் முத்தருட் சிலர்க்கு ‘ஈசன் வடிவனைத் தினுக்கும் பூசை, யொருவிடிற் றுயரமாத லுற்றிடின் மகிழ்ச்சியாத ’ [அம்பலவாணதேசிகர் தசகாரி யம், 52] லிரண்டும் உடைமையின் அத்துவாரமாய்ப் பெறப்படும் விரு ப்பு வெறுப்பால் அபரமுத்தித்தானத்திற் சுத்தபோக விளைவுண்டாகி அப்போகம் புசித்தலின் நடுவே பாக முதிர்ச்சியாற் சிவனடியைச் சேர் வதாம். இலய முத்தியாவது மேற்கூறிய மூவகை முத்தர்க்கும் அந் தந்தத் தானத்திலிருப்பதிற்றானே பாகமுதிர்ச்சி யாகாவிடினுஞ் சர்வ சங்கார காலத்து இவரனைவருஞ் சிவனடியைச் சேருவதாம். பரமுத்தி யாவது மேற்கூறிய நால்வகை முத்தரும்போற் பெறும் பேற்றிற் கிடமின்றிச் சீவன்முத்தர்க் குண்டென் றோதிய இரண்டு மில்லி களாய் இப்பொழுதே சிவனடியைச் சேர்ந்திருப்பதாம். இவை யெல் லாங் குருமுகமா யுணர்ந்தாலன்றி எழுதினால் அறியப்படுவனவல்ல வாகலின் ஈண்டு இவ்வாறு கூறியொழிந்ததாம்.

இம்முத்திக்குரிய சுத்தமுஞ் சுத்தக்கேவலஞ் சுத்தச்சகலம் சுத்த மென மூன்றாம். சகலமுஞ் சகலக்கேவலஞ் சகலஞ் சகலச்சுத்தமென மூன்றாம். ஈண்டுக் கூறப்படுங் கேவலஞ் சகலமிரண்டுமே ‘இருவகை சாக்கிராதி’ [சிவஞானசித்தியார்,iv, 34]யென வழிநூலிற் கூறப்படுவ

தாம். ஈண்டுக் கூறுஞ் சுத்தமாவது 'யோகிற், றருவதோர் சமாதி' [௯௪, ௯௫, ௯௬] யென ஆண்டுக் கூறுவதேயாம். இனிக் கேவல மாவது ஈண்டுக் கூறிய ஐவகை யுண்மைகட்கிடமான கேவலங்க ளுந் தும், சகல சுத்தங்களிற் படுங் கேவலங்களும், அன்றியும் பிரளய கேவலம் விஞ்ஞான கேவலமென்றும் இவ்வாறு ஒன்பது பேதமாயவை விரிக்கில் வெகுபேதங்க ளுடையவாம். அவை யெல்லாம் ஈண்டு விரிப்பிற் பெருகு மாகலிற் சங்கிரகம் குருமுகமா யறிக.

## உரையிறுதியிற் காணப்படுஞ் செய்யுள்கள் :

'*ஏருறுகொற் றங்குடியு மாபதிசி வாசரிய ரியம்பு மிந்தச் [றுங்
சீருறுநற் சிவப்பிரகா சத்தினைமுற் றுணர்ந்தவர்தீ மலங்கண் மூன்
காருறுமா ணவக்கிழங்கு மிருவினையுங் கழன் றருளைக் கலந்தின்
சாருறுவ ரிப்புவியிற் றனையிழந்த சாக்கிரா தீத வாழ்வே' [போங்கச்

'ஆவடுதண் டுறைசைவரு நல்லசிவ
தேவனரு ளமைவின் றோங்க
மேவுசிவப் பிரகாச மெனும்பெயர்போல்
விளங்கவுரை விளம்பி னானல்
பூவுலகி லிதைக்கேட்டுச் சிந்தித்துத்
தெளிந்தோர்பொய்ப் பிறவி நீங்கித்
தேவர்புகழ் பரமானந் தக்கடல்வாய்ப்
படிவரிது திண்ணந் தானே.'

'திருச்சிற்றம் பலகுருவி னருட்பதமுள் ளமைப்பாம்.'

'நல்லசிவ தேவனடி யல்லலறத் தொழுவாம்.'

'சிவஞான தேவனடி பவமாறப் பணிவாம்.'

'கச்சியப்ப தேவனடி யுச்சியுளம் வைப்பாம்.'

**சிவப்பிரகாசச் சிந்தனை யுரை முற்றும்**

திருச்சிற்றம்பலம்.

---

* இறுதிப்பாகம் இரண்டாம் முறை எழுதிய இதழில் இச் செய்யுள் விடுபட்டது.

உரைத்தொடக்கத்திற் காணப்படும்

குருவணக்கம் நூல் வரலாறு முதலியன :

பொன்னுறையா வடுதுறைவாழ் குருநமச்சி வாயபரி
பூரணேசன்
றன்னடியாங் கதிர்பரப்பி யகவிருணீத் தறிவொளிபோற்
றழுவ லாலே
முன்னைமல மிரண்டுவினை மூன்றுமல மணுகாத
முறைமை பெற்றே
யன்னையுத ரத்திலினி யவதரியா தானந்தத்
தழுந்த லாமே.

அகவிருணீக் கிடுகதிரைப் பழவினைநோய்க் கொருமருந்தை
யடியார்க் கென்றும்
புகலிடமா மெய்ப்பில்லைப்பைப் பூரணசு கோதயமாம்
புணரி தன்னைப்
பகலிரவற் றவருளத்தி லமுதமழை பொழிமுகிலைப்
பரமா னந்தந்
திகழ்துறைசை நாயகனைத் திருச்சிற்றம் பலகுருவைச்
சிந்தை செய்வாம்.

இருண்மலநீத் தறிவளிக்குந் திருமுகமு முண்மையிது
வென்று காட்டுங்
கருணைபொழி இருவிழியு முளமுருக்குந் திருவாக்குங்
கமலக் கையும்
பெருகுமின்ப மேயுருவாய்ச் செறிதிருமே னியுமுடைத்தாய்ப்
பெரிய ஞானக்
குருவடிவாய் வந்தருளம் பலவாண தேசிகன்றாள்
குறித்து வாழ்வாம்.

**திருச்சிற்றம்பல தேசிகன் துணையாக வேணும்.**

சிவாகமங்களுள் ஞானபாதத்திற் கூறப்படும் பொருளை யாராயு மாராய்ச்சி இந்நூற்றுணிபாம். சிவாகமங்கள் சிவபேதம் உருத்திர பேதமென்று இருவிதப்படும். அவையாவன விந்துவினின்று நாதந் தோன்றி விந்துவும் பிரணவமும் வன்னங்களுமாக முறையே பரிண மித்தவைகளின் முப்பத்திரண்டு மாத்திரை கொண்டதோ ரளவை யாகச் செய்யப்பட்டனவாம். விஞ்ஞானகலரிற் பரமசிவன் அனுக்கிர கத்தைப் பெற்ற பிரணவர்முதலியபெயருடைய பதின்மருக்குஞ் சத்தி

யோசாதம் வாமதேவமென்னும் திருமுகங்களான் அருளிச்செய்த காமிகம் முதலிய பத்துஞ் சிவபேதம். இவ்வாறு பரமேசுரன்பால் உபதேசம் பெற்ற உருத்திரர் பதினெண்மருக்கும் அகோரந் தற்புருடமீசானமென்னுந் திருமுகங்களான் அருளிச்செய்த விசயம் முதலிய பதினெட்டும் உருத்திரபேதமாம். ஆக இருபதெட்டாகமமும் தனித் தனி ஞான பாதம் யோக பாதம் கிரியா பாதம் சரியா பாத மென நால்வகைப்படும். வேதங்களை நோக்கி ஆகமமுற்றுஞ் சித்தாந்தமெனப்படும். அவற்றுள் ஞானபாத மொன்றுமே சித்தாந்த வுண்மையாம். ஞானபாதத்துக் கூறப்படுவன யாவையோவெனின் பரமசிவனுடைய சொரூபமும், மூவகை யான்மாக்களின் சொரூபமும், பஞ்ச பாசங்களின் சொரூபமும், சிவ சத்தியின் சொரூபமும், நாதமுதற் பிருதிவியீருக முப்பத்தாறு தத்துவங்களின் உற்பத்திகளும், இவை ஆன்மாக்கள் போகம் புசிக்கைக்குக் கருவியாம் முறைமையும், புவனங்கள் புவனேசர் சொரூபங்களும், மூவகைப் பிரளய சொரூபங்களும், அவற்றின் பின்னர்ச் சிருட்டியா முறைமையுங் கூறப்படும். அவைகளின் உண்மைகளை யெல்லாம் மொழிபெயர்த்து மெய்கண்ட சிவாசாரியர் தமிழாக விரித்துந் தொகுத்துந் தொகை வகை விரிவுமாக முக்கூறாகவும் அவைகளை பொது உண்மை உபாய மென்னும் முக்கூறுமாறுஞ் சங்கிரகமாகச் **சிவஞானபோத** மென்னுந் திருநாமக் குறியுடைய நூலாகச் செய்தளித்தனர். அந்நூல் மோட்ச சாதனமேயாயினும் அவ்விடுகுறிப்பெயரை நோக்கிப் பாசஞானம் பசுஞானங்களை நீக்கிச் சிவஞான முதிப்பிப்ப தென்றே கொள்ளப்படும். பின்பு சகலாகம பண்டிதரென் றிடுகுறித் திருநாமமுடைய அருணந்தி சிவாசாரியர் அந்நூலின் சங்கிரக மெல்லாம் புடை பெயர்தது அந்நூலா லுதித்த சிவஞானஞ் சித்திக்கும்படி விரிந்து விளங்கச் **சிவஞானசித்தியா** ரென்னுந் திருநாமக் குறியுடைய நூலாகச் செய்தளித்தனர். பின்பு உமாபதி சிவாசாரியர் அந்த நூற்கருத்தாற் சிவஞானஞ் சித்தியானதின் பயனாகச் சிவம் பிரகாசிக்கும்படி அவ்விருநூற் கருத்தும் விளங்கச் **சிவப்பிரகாச** மென்னுந் திருநாமக் குறியுடைய நூலாகச் செய்தளித்தனர். இம்மூன்று நூற்கும் பயன் அந்த அந்த நூலின் றிருநாமமே விளக்குவதாற் சிவஞானபோதம் முளைக்கவும் அந்தச்சிவஞானஞ் சித்திக்கவும் அதன் பின் சிவம் பிரகாசிக்கவு மென்னுந் தொடர்ச்சியால் அவ்விருநூற் கருத்தும் முழுதுணர்ந்து சிவஞானஞ் சித்தித்தோர்க்கே இந்நூற் பயனாகிய சிவம் பிரகாசிக்குமாகலின் அவ்விருநூற் கருத்தும் உணர்ந்தோரே இந்நூல் கோடற் கதிகாரிகளாவரென்பது தானே போதரும். இந்நூற்கு வியாக்கிசெய்தற்கு யான் உரியேனல்லனா யிருந்தும் ஈண்டுள்ள பெரியோர்கள் இந்நூற் கருத்தை யொருவழியாகத் தோன்றப் பண்ணவேண்டு மென்றமையால் அப்பணி தலைமேற் கொள்நேமாசை யென்வழித்தன்றாகலிற் றெரிந்த

வாறு ஒரு பிரகாரம் வியாக்கி செய்தற்கு ஒருப்பட்டவாறும். 'நாயகன் கவிக்குங் குற்றங் கூறிய கழகமாந்தர்' போலன்றி எமரெல்லாங் குற்றங்கள் நீக்கிக் குணங்கொண்டு கோதாட்டுவா ராதலினுலும் இப்பிழை பொறுத்தற்கு 'நல்லோரை யிரந்தோமேல் நகையாமென்றுரையாமா'லென்னும் பழமொழி புகுக்க வேண்டாமையாலும் அது கூருதொழிந்தாம்.

போதபூ ரணசொருபப் புண்ணியமென் புண்ணியத்தின்
 பொருளா யிங்கே
நாதமுடி வானதொரு குறிசிறியேன் பொருட்டாக
 நயந்து கொண்டு
சூதகலப் பரஞான முதவியென தகவிருளைத்
 துரந்த ஞான
வாதவன்றென் றுறைசையிற்சங் காமூர்த்தி மாதவன்ரு
 ளகத்துள் வைப்பாம்.

[குறிப்பு : சிவப்பிரகாசச் சிந்தனையுரை யென்னுமிது இதுவரை அச்சுக்கு வாராதது. இராசாங்கத்துக் கையெழுத்து நூல் நிலயத்திலுள்ள பிரதியே இப்பதிப்பிற்கு ஆதாரமாயது. வேறு பிரதிகள் கிடைத்தில. சிவப்பிரகாசத்துக்குச் சுருங்கிய உரையொன்று ஷை நிலயத்திற் காணப்படுகிறது. அதுவே வெளியில் சாத்திர ஆராய்ச்சி புரியும் மடங்களிலும் சாத்திர அறிஞரிடங்களிலும் காணப்படும். அதனையும் சிந்தனையுரை யென்பதோடு அதன் ஆசிரியர் திருவாவடுதுறை ஆதி அம்பலவாண தேசிகர் என்பர். ஷை நிலயத்திலுள்ள பிரதியில் சிந்தனையுரையென்னும் பெயர் காணலாவதில்லை. இங்கு அச்சிட்ட சிந்தனையுரை செய்தாரும் திராவிட மாபாடியகாரராகிய சிவஞானமுனிவர் பெயரைப் பலமுறை யுரைப்பவர் அவர் காலத்துக்குமுன் அப்படி ஒரு சிந்தனையுரை யிருந்ததாயின் அதனைப் பற்றி ஒன்றுங் கூறுதிரார். உரை இறுதியில் வரும் செய்யுள் இவ்வுரை நல்லசிவதேவராற் செய்யப்பட்டதென் றுரைக்கும். உரைத் தொடக்கத்தில் வருஞ் செய்யுள்கள் நான்கும் முறையே நமச்சிவாய குரவரையும் திருச்சிற்றம்பல தேசிகரையும் அம்பலவாண தேசிகரையும் சங்காமூர்த்தி முனிவரையும் துதிக்கும். சிவஞான முனிவர்க்குப் பின் தோன்றியது இவ்வுரையென்பது உறுதியாகலின் திருவாவடுதுறை மடத்தில் கற்று வல்லராயிருந்த பெரியாரொருவர் சிவஞானபாடியம் முதலிய பல உரைகளைப் பயின்று இச் சிந்தனையுரையைக் கி. பி. 1800-க்குமேல் எழுதினராகல்வேண்டும்.

—S. அனவரதவிநாயகம் பிள்ளை.]

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

## உமாபதி சிவாசாரியர்

அருளிச்செய்த

# திருவருட்பயன் மூலமும் சிந்தனையுரையும்

---

### காப்பு

நற்குஞ் சரக்கன்று நண்ணிற் கலைஞானம்
கற்கும் சரக்கன்று காண்.

**(உரை)** நல் குஞ்சரக்கன்று நண்ணில்-நல்ல ஞானசொரூபனாகிய ஆனை முகத்தினையுடைய விக்கினேசுரனைப் பொருந்தில், அஞ்ஞானம் நீங்கி ஞானம் பிரகாசியாநிற்கும் ; கலைஞானம் கற்கும் சரக்கு அன்று காண் - வேதாகம புராண கலைகள் யாவும் கற்கிறதற்கு அரியனவல்ல, அறிவாயாக.

### க. பதி முதுநிலை

சிவனுக்குத் தன்னியல்பு எதென்னில்,

1. அகர உயிர்போல் அறிவாகி எங்கும்
நிகரில்இறை நிற்கும் நிறைந்து.

**(உரை)** அகர உயிர்போல் - ஐம்பத்தோ ரக்கரங்களுக்கும் அகரமாகிய அக்கரம் உயிராக நின்றதுபோல் ; அறிவாகி - சர்வான்மாக்களுக்கும் அறிவுக்கறிவாகி ; எங்கும் - சடசித்துக்களெல்லாம் இடைவிடாமல் ; நிகரில் இறை நிற்கும் நிறைந்து - ஒப்பில்லாத கர்த்தா இப்படி நிறைந்து நிற்பன். க

இப்படி அருவமுமல்லாமல் உருவமுமல்லாம லிருக்கிற கர்த்தா பஞ்சகிருத்தியம் நடத்துகிறது எப்படி யென்னில்,

2. தன்நிலைமை மன்உயிர்கள் சாரத் தரும்சத்தி
பின்னமிலான் எங்கள் பிரான்.

**(உரை)** தன் நிலைமை மன் உயிர்கள் சார - தனது நிலைமையாகிய கர்த்தாவினுடைய திருவடித் தாமரையிலே நிலைபெற்ற ஆன்மாக்கள் பொருந்த ; தரும் சத்தி - அவனுடைய சத்தியானது கொடுக்கும் ; சத்தியென்றும் அவனென்றும் பின்னமோ அபின்னமோ என்னில்— பின்னமிலான் - வேறாயிருக்கிறவனல்லன் ; எங்கள் பிரான் - எங்கள் கடவுள். உ

இப்படிக்கொத்த கர்த்தாவுக்கு ஒப்புண்டோ வென்னில்,

3. பெருமைக்கும் நுண்மைக்கும் பேர்அருட்கும் பேற்றி
னருமைக்கும் ஒப்பின்மை யான்.

**(உரை)** பெருமைக்கும் - தனது சத்தியைக் கொண்டு பஞ்ச கிருத்தியம் நடத்துகிற மகத்துவத்துக்கும் ; நுண்மைக்கும் - நுட்பத் துக்கும் ; பேர் அருட்கும் - சர்வான்மாக்களையும் இரட்சிக்கவேண்டு மென்கிற மிகுந்த கிருபைக்கும் ; பேற்றின் அருமைக்கும் - சரியை கிரியா யோகங்களைச் செய்து அவனைப் பெறுகிற அருமைக்கும் ; ஒப்பின்மையான் - ஒப்பில்லாத கர்த்தா. ந

சிருட்டி கர்த்தாவுந் திதி கர்த்தாவு மிருக்கச் சங்கார கர்த்தாவை முதன்மையாகச் சொல்லுவானேன் என்னில்,

4. ஆக்கி எவையும் அளித்தா சுடன்அடங்கப்
போக்கும்அவன் போகாப் புகல்.

**(உரை)** ஆக்கி எவையும் - எல்லாப் பிரபஞ்சத்தையும் பிரமாவைக் கொண்டு சிருட்டிப்பித்தும்; அளித்து-விட்டுணுவைக் கொண்டு இரட்சிப்பித்தும் ; ஆசுடன் அடங்கப் போக்கும் - அவர்களையும் அவர்களாலே யுண்டாக்கப்பட்டு இரட்சிக்கப்படும் பிரபஞ்சத்தையும் மலத் தோடுங்கூடச் சங்கரிப்பன் ; ஆகையினாலே—அவன் போகாப் புகல் - அந்தக் கர்த்தா விட்டு நீங்காமல் உயிர்க்குயிராய்த் தாரகமாய் நிற்பன்.

இப்படிக்கொத்த கர்த்தா அருவமோ உருவமோ என்னில்,

5. அருவும் உருவும் அறிஞர்க் கறிவாம்
உருவம் உடையான் உளன்.

(உரை) அறிஞர்க் கறிவாம் உருவம் உடையான் - அறிவான் மிக்க ஞாதாக்களுக்கு ஞானமே சொரூபமா யிருக்கும் கர்த்தா ; அருவும் - நிட்களமான நாலு திருமேனிக்கும்; உருவும் - சகளமான நாலு திருமேனிக்கும் ; அருவுருவமான ஒரு திருமேனிக்கும் ஆக ஒன்பது திருமேனிக்கும்—உளன் - பிராணனாய் நிற்பன். ரு

இப்படித் திருமேனி யுண்டானபோதே அவனுக்கு மேலாக ஒரு கர்த்தாக் கொடுக்கவேண்டு மென்னில்,

6. பல்லா ருயிர்உணரும் பான்மையென மேல்ஒருவன்
இல்லாதான் எங்கள் இறை.

(உரை) பல் ஆருயிர் உணரும் பான்மையென - சர்வான்மாக்களும் அவன் அறிவிக்க அறிந்து வருகிற முறைமைபோல ; மேல் ஒருவன் இல்லாதான் - தனக்கு மேலாக ஒரு பொருளும் இல்லாதவன் ; எங்கள் இறை - எம்முடைய கர்த்தா. சா

இப்படிக்கொத்த கர்த்தா எங்கே நிற்பன் என்னில்,

7. ஆனா அறிவாய் அகலான் அடியவர்க்கு
வானாடர் காணாத மன்.

(உரை) ஆனா அறிவாய் - நீங்காத பேரறிவாய் ; அகலான் அடியவர்க்கு - தன்னை அடைந்த அடியார்களிடத்திலே விட்டு நீங்காதவன்; வானாடர் காணாத மன் - தேவர்களாலுங் காணப்படாத நிலைபெற்ற கர்த்தா. எ

அடியாரிடத்திலே நின்று மற்றப் பெயரிடத்திலே யில்லையோ சிவன் ஏகதேசியோ என்னில்,

8. எங்கும் எவையும் எரியுறுநீர் போல்ஏகம்
தங்கும்அவன் தானே தனி.

(உரை) எங்கும் - எல்லா உலகங்களினும் ; எவையும் - சடசித்துக்களெல்லாம் ; எரியுறு நீர்போல் - அக்கினியைச் சேர்ந்த நீரைப்

போல் ; ஏகம் தங்கும் - வேறறக் கலந்து நிற்பன் ; அவன் தானே தனி - அந்தக் கர்த்தாவுக்கு அவன் தானே ஒப்பு. அ

கர்த்தா நீக்கமற நிற்கப் பிறப்பு உண்டாவானேன் ஆன்மாக்க ளுக்கு என்னில்,

9. நலமிலன் நண்ணார்க்கு நண்ணினர்க்கு நல்லன்
சலமிலன் பேர்சங் கரன்.

**(உரை)** நலமிலன் நண்ணார்க்கு - தன்னைப் பொருந்தாத பேர்க ளுக்கு நன்மையைக் கொடாதவன் ; நண்ணினர்க்கு நல்லன் - தன் னைப் பொருந்தின பேர்களுக்கு இன்பத்தைக் கொடுப்பன் ; ஆனால் பட்சப் பிரதிபட்சமோ என்னில்—சலமிலன் - விருப்பு வெறுப்பில் லாதவன் ; பேர் சங்கரன் - ஆன்மாக்களுக்கு உயிர்ச் சுகத்தையும் உடற்சுகத்தையுங் கொடுக்கும் சங்கரனென்னுந் திருநாமத்தை யுடையவன். கூ

இப்படி இருக்கிற கர்த்தா வணங்கி வழிபட்டால் விளங்காரோ என்னில்,

10. உன்னுமுள தையம் இலதுணர்வாய் ஓவாது
மன்னுபவம் தீர்க்கும் மருந்து.

**(உரை)** உன்னும் - நினையுங்கோள்; உளது - உண்டாக்கப்படாத பொருள் ; ஐயம் இலது - சந்தேகமில்லை ; உணர்வாய் ஓவாது - அறி வாய் விட்டு நீங்காது ; மன்னு பவம் தீர்க்கும் மருந்து - நிலைபெற்ற செனனமரணத்தைத் தீர்க்கிறதற்கு ஓர் அவுடதம். கO

## உ. உயிரவை நிலை

இந்தப் பரமமான அவுடதத்தைக் கொண்டு திருவடியைப் பொருந்தின ஆன்மாக்களுக்குத் தொகை உண்டோ என்னில்,

11. பிறந்தநாள் மேலும் பிறக்கும்நாள் போலும்
துறந்தோர் துறப்போர் தொகை.

**(உரை)** பிறந்த நாள் - ஆன்மாக்கள் முன்பு பிறந்த நாளுக்கும்; மேலும் பிறக்கும் நாள் போலும் - இனிமேல் பிறக்கப் போகிற நாளுக்கும் இத்தனையென்று தொகை இல்லாதது போல; துறந்தோர்

துறப்போர் தொகை - தேகாதிப் பிரபஞ்சத்தைத் துறந்தடைந்த பேர்களுக்கும் இனிமேல் துறந்தடையப் போகிற பேர்களுக்கும் ஓர் அளவில்லை. க

ஆன்மாக்கள் எத்தனை விதமாக இருக்கு மென்னில்,

12. திரிமலத்தார் ஒன்றதனிற் சென்றார்கள் அன்றி
ஒருமலத்தார் ஆயும் உளர்.

**(உரை)** திரிமலத்தார்-ஆணவம் காமியம் மாயை என்கிற மூன்று மலத்தினையுமுடைய சகலரென்றும்; ஒன்று அதனிற் சென்றார்கள்-மாயாமலம் நீங்கலாக ஆணவமலத்தினையுங் கன்ம மலத்தினையுமுடைய பிரளயாகல ரென்றும்; அன்றி ஒரு மலத்தார் ஆயும் - அல்லாமலும் ஆணவமலத்தினையுடைய விஞ்ஞானகல ரென்றும்; உளர் - ஆராயுமிடத்து ஆன்மாக்கள் மூன்று விதமாயிருக்கும். உ

ஆன்மாக்கள் ஒருத்தருக் கொருத்தர் அடிமையோ என்னில்,

13. மூன்றுதிறத் துள்ளாரும் மூலமலத் துள்ளார்கள்
தோன்றலர்தொத் துள்ளார் துணை.

**(உரை)** மூன்று திறத்து உள்ளாரும் மூலமலத்து உள்ளார்கள் - மூவகைப்பட்ட ஆன்மாக்களும் ஆணவ மலத்தினை யுடையவர்கள்; தோன்றலர் தொத்து உள்ளார் துணை-தோன்றாத் துணையாயிருக்கிற கர்த்தாவுக்குத் தொத்தடிமை; ஒருத்தருக் கொருத்தர் அடிமையல்ல. ந

ஆண்டவ னென்றும் அடிமை யென்றும் சொல்லுவானேன் ஆன்மாத்தானே பிரமமென்னில்,

14. கண்டவற்றை நாளும் கனவிற் கலங்கியிடுந்
திண்டிறலுக் கென்னோ செயல்.

**(உரை)** கண்டவற்றை நாளும் கனவிற் கலங்கியிடும் - நனவிலே கண்ட காட்சியை நாடோறுங் கனவிலே மயங்கியறிகிற; திண் திறலுக்கு என்னோ செயல் - திண்ணிய திறத்தினையுடைய ஆன்மாக்களுக்கு என்ன செயல் உண்டு! ச

ஆன்மாச் சர்வஞ்ஞனா யறியும் என்னில்,

15. பொறியின்றி ஒன்றும் புணராத புந்திக்
கறிவென்ற பேர்நன் றற.

**(உரை)** பொறி இன்றி ஒன்றும் புணராத புந்திக்கு - பஞ்ச இந்திரியங்களை யல்லாமல் ஒரு விடயத்தையு மறியாத ஆன்மாவுக்கு; அறிவு என்றபேர் நன்று அற - சர்வஞ்ஞ யறியு மென்று சொல்லு கிற பெயர் மிகவும் நன்றாச்சுது. இ

ஆன்மாவுக்கு அறிவில்லையோ என்னில்,

16. ஒளியும் இருளும் உலகும் அலர்கட்
டெளிவி லெனில்என் செய.

**(உரை)** ஒளியும் - சோமசூரியாக்கினிப் பிரகாசமும்; இருளும் - அந்தகாரமாகிய பூத இருளும்; உலகும் - பிரபஞ்சமும்; அலர்கண் தெளிவு இல் எனில் என் செய - இப்படி விரிந்த இடத்து இவற்றைப் பகுத்துக் காணப்பட்ட கண்ணுக்குப் பிரகாச மில்லையாகில் அவற்றாலுண்டாகிய பிரயோசன மென்ன! சு

முப்பொருளிலேயும் அறியும் பொருள் எதென்னில்,

17. சத்தசத்தைச் சாரா தசத்தறியா தங்கண் இவை
யுய்த்தல்சத சத்தாம் உயிர்.

**(உரை)** சத்து அசத்தைச் சாராது - சத்தாகிய சிவத்துக்கு அசத்தாகிய பாசத்தைப் பொருந்தி யறிந்து பொய்யென்று நீங்க வேண்டுவதில்லை; அசத்து அறியாது - அசத்தாகிய பாசம் சடமாகையினாலே ஒன்றையும் அறியச் செய்யாது; அங்கண் - அவ்விடத்திலே; இவை உய்த்தல் சதசத்தாம் உயிர் - சத்தாகிய சிவத்தையும் அசத்தாகிய பாசத்தையும் விசாரித்தறிகிறது சதசத்தாகிய ஆன்மா. எ

சத்து மல்லவாய் அசத்து மல்லவாய் நிற்பதற்கு ஓர் உவமை உண்டோ என்னில்,

18. இருளில் இருளாகி எல்லிடத்தி லெல்லாம்
பொருள்கள் இலதோ புவி.

**(உரை)** இருளில் இருளாகி - இருளோடே கூடி இருளாய் இருளல்லாமலும்; எல்லிடத்தி லெல்லாம் - ஒளியோடே கூடி ஒளியாய் ஒளியல்லாமலும்; பொருள்கள் இலதோ புவி - இப்படிப்பட்ட பொருள் பூமியினிடத்திலே இல்லையோ கண் படிக மாகாசம் போல. அ

ஆனால் சிவத்தை அறியா திருப்பானேன் என்னில்,

19. ஊமன் கண்போல ஒளியும் மிகஇருளே
யாம்மன்கண் காணாத வை.

**(உரை)** ஊமன் கண்போல ஒளியும் மிக இருளேயாம் - கூகை யின் கண்ணுக்கு ஆதித்தப் பிரகாசம் மிகுந்த அந்தகாரமானாற்போ லாம்; மன் கண் காணாதவை - நிலைபெற்ற ஞானக் கண்ணினாலே காணாத ஆன்மாக்களுக்கு ஞானமெல்லாம் அஞ்ஞானமா யிருக்கும். கூ

இந்த அஞ்ஞானம் என்று நீங்கும் என்னில்,

20. அன்றளவும் ஆற்றும்உயிர் அந்தோ அருள்தெரிவ
தென்றளவொன் றில்லா இடர்.

**(உரை)** அன்றளவும் - அநாதியே தொடங்கி இற்றைவரையும்; அளவொன்றில்லா இடர் - ஓரளவு மில்லாத பிறவியாகிய துன்ப சாகரத்தை; ஆற்றும் உயிர் அந்தோ - ஆன்மாக்கள் அனுபவியா நிற் கின்றன, ஐயோ; அருள் தெரிவது என்று - திருவருளைப் பொருந்து கிறது எந்தக் காலம். க0

## ௩. இருள்மல நிலை

இடராகிய மலம் என்ன செய்யும் என்னில்,

21. துன்றும் பவத்துயரும் இன்பும் துணைப்பொருளும்
இன்றென்ப தெவ்வாறும் இல்.

**(உரை)** துன்றும் பவத் துயரும் - நெருங்கி வாராநின்ற செனன மரணத் துக்கத்தையும்; இன்பும் - அது நீங்கின விடத்து உண்டாகிய சுகத்தையும்; துணைப்பொருளும் - உயிர்த்துணையாகிய கர்த்தாவை யும்; இன்று என்பது எவ்வாறும் இல் - இப்போது உண்டென்பதை யெல்லாம் எந்த முறைமையினாலும் ஆணவ மலமானது ஆன்மாக் களுக்கு இல்லையெனப் பண்ணிக்கொண்டு நிற்கும். க

மலமறைப்புத்தான் எப்படி என்னில்,

22. இருளான தன்றி இலதெவையும் ஏகப்
பொருளாகி நிற்கும் பொருள்.

**(உரை)** இருள் ஆனது அன்றி இலது எவையும் - பூத இருளானது சர்வ பதார்த்தங்களையும் தனக்குள்ளே கவளீகரித்துக் கொண்டு இருள்தானாய் நின்றது போல; ஏகப் பொருளாகி நிற்கும் பொருள் - ஆணவமலமானது சர்வான்மாக்களையுந் தன்னுள்ளே மறைத்துக் கொண்டு ஆணவமலந்தானாய் நிற்கும். உ

இந்தப் பூத இருளைப்போலத்தானோ மறைக்கும் என்னில்,

23. ஒரு பொருளுங் காட்டா திருள்உருவங் காட்டும்
இருபொருளுங் காட்டா திது.

**(உரை)** ஒரு பொருளும் காட்டாது இருள் - ஒரு பதார்த்தத்தையும் காட்டாது பூத இருளானது; உருவம் காட்டும் - தற்சொரூபத்தைக் காட்டா நிற்கும்; இருபொருளும் காட்டாது இது-இந்த ஆணவ மலமானது தன்னையுங் காட்டாது தான் மறைத்த ஆன்மாவையுங் காட்டாது. ௩

இந்த மலந்தான் ஆதியோ அநாதியோ என்னில்,

24. அன்றளவி உள்ளொளியோ டாவி யிடையடங்கி
இன்றளவும் நின்ற திருள்.

**(உரை)** அன்றளவி - அநாதியே சகசமாய்; உள் ஒளியோடு ஆவி - உள்ளொளியா யிருக்கிற சிவஞானத்தோடே ஆன்மாவைப் பொருந்த வொட்டாமல்; இடை அடங்கி - ஆன்மாவினிடத்திலே பொருந்தி; இன்றளவும் நின்றது இருள் - இருவினை யொப்பு வருமளவும் ஆன்மாவை மறைத்து நின்றது ஆணவமலம். ௪

அநாதியாகிய மலத்தை அறியா திருப்பானேன் என்னில்,

25. பலரைப் புணர்ந்தும்இருட் பாவைக்குண் டென்றும்
கணவற்கும் தோன்றாத கற்பு.

**(உரை)** பலரைப் புணர்ந்தும் - சர்வான்மாக்களிடத்திலேயும் பொருந்தி யிருந்தும்; இருட் பாவைக்கு - ஆணவமல சத்திக்கு; உண்டு என்றும் கணவற்கும் தோன்றாத கற்பு-எந்தக் காலமும் புருடனுக்குந் தோன்றாத கற்பு உண்டு. ௫

இந்த மலத்தை அறிகிறது எப்படி என்னில்,

26. பன்மொழிகள் என்உணரும் பான்மை தெரியாத
தன்மைஇரு ளார்தந் தது.

**(உரை)** பன்மொழிகள் என் - பலவாய்ச் சொல்லுவது எது; உணரும் பான்மை தெரியாத தன்மை - தன்னை வினையைத் தலைவனை அறியும் முறைமையை அறியாதபடி கேவல சகல மிரண்டிலும் மறைத்து நிற்பது; இருளார் தந்தது - ஆணவமலம் கொடுத்தது.

மலமில்லை யென்னில்,

27. இருள்இன்றேல் துன்பென் உயிரியல்பேல் போக்கும்
பொருள்உண்டேல் ஒன்றாகப் போம்.

**(உரை)** இருள் இன்றேல் - ஆணவமலமானது இல்லை யென்று சொல்லுவாயானால்; துன்பு என் - செனன மரண துக்கம் வருவானேன்; உயிரியல்பேல் - ஆன்மாவுக்குச் சுபாவமென்று சொல்லுவாயானால்; போக்கும் பொருள் உண்டேல் ஒன்றாகப் போம் - ஆணவமலத்தைப் போக்கத் தக்கதாகத் திருவருள் உண்டான காலத்தில் அப்போது ஆன்மாவுங் கூடக் கெட்டுப்போம். எ

மலம் ஒரு காலத்திலே வந்ததோ என்னில்,

28. ஆசாதி யேல்அணைவ காரணம்என் முத்திநிலை
பேசா தகவும் பிணி.

**(உரை)** ஆசாதியேல் - ஆணவமலமானது ஒரு காலத்திலே வந்து பொருந்திற்றென்று சொல்லுவாயானால்; அணைவ காரணம் என் - முன்னே சுத்தனா யிருக்கிற ஆன்மாவினிடத்திலே வந்து பொருந்துதற்குக் காரணம் ஏது; இயல்பாய் வந்து பொருந்துமென்று சொல்லுவாயாகில்—முத்திநிலை பேசாது அகவும் பிணி - மோட்ச நிலை உண்டென்று சொல்ல வேண்டுவதில்லை, மீளவும் வந்து பொருந்தும்; ஆதலால். அ

மலந்தான் நீங்காதோ என்னில்,

29. ஒன்று மிகினும் ஒளிகவரா தேல்உள்ளம்
என்றும் அகலா திருள்.

**(உரை)** ஒன்று மிகினும் - பூத இருளானது மேலிட்ட காலத்தில் ; ஒளி கவராதேல் - விளக்கு மின்மினிக்கு இடங்கொடாதிருந்ததேயானால் ; உள்ளம் என்றும் அகலாது இருள் - ஆன்மாவை ஆணவமலமானது ஒரு காலமும் விட்டு நீங்காது. கூ.

மாயை மறைக்கும் என்னில்,

30. விடிவா மளவும் விளக்கனைய மாயை
வடிவாதி கன்மத்து வந்து.

**(உரை)** விடிவா மளவும் விளக்கு அனைய - பூத இருள் நீங்குமளவும் விளக்கானது கண்ணுக்குப் பதார்த்தங்களைக் காட்டிக்கொண்டு நிற்கிறதுபோல ; மாயை வடிவாதி கன்மத்து வந்து - ஆணவமலம் நீங்குமளவும் ஆன்மாக்களின் கன்மத்துக் கீடாக மாயையானது தனு கரண புவன போகங்களாய் வந்து பொருந்தும். கo.

ச. அருளது நிலை

இந்த அருளுக்கு மேலாம் ஒரு பொருள் உண்டோ என்னில்,

31. அருளிற் பெரிய தகிலத்தில் வேண்டும்
பொருளிற் றலையிலது போல்.

**(உரை)** அருளிற் பெரியது - அருளுக்கு மேலாக ஒரு பொருள் இல்லை, அது எப்படிப்போல ; அகிலத்தில் வேண்டும் பொருளில் தலையிலதுபோல் - பூமியின்கண்ணே உண்டாகிய ஆன்மாக்கள் தேக சம்பந்தத்தினால் விரும்பும் பதார்த்தத்துக்கு மேல் ஒரு பொருள் இல்லாததுபோல. க.

அருள்தான் என்ன செய்யும் என்னில்,

32. பெருக்க நுகர்வினை பேரொளியாய் எங்கும்
அருக்கன்என நிற்கும் அருள்.

**(உரை)** பெருக்க - ஆன்மாக்கள் கன்மங்கள் ஆர்ச்சிக்கவும் ; நுகர்வினை - எடுத்த தேகத்திலே அடுத்த பிராரத்தம் புசிக்கத்தக்கதாகவும் ; பேரொளியாய் எங்கும் - எவ்விடத்திலும் மிகுந்த பிரகாசமாய் ; அருக்கன் என நிற்கும் அருள் - ஆதித்தனைப்போலத் திருவருளும் இப்படி உபகரித்து நிற்கும். உ.

அருள் காரியப்படுத்த வேண்டுமோ ஆன்மாக்கள் தாமே அறி வார்கள் என்னில்,

33. ஊன்அறியா தென்றும் உயிர்அறியா தொன்றும்இ
தான்அறியா தார்அறிவார் தான். [வை

**(உரை)** ஊன் அறியாது என்றும் - சரீரம் சடமாகையினாலே எந்தக் காலமும் ஒன்றையும் அறியச் செய்யாது ; உயிர் அறியாது ஒன்றும் - ஆன்மாக் கிஞ்சிஞ்ஞனாகையினாலே அறிவித்தாலல்லது தானாக ஒன்றையும் அறியச் செய்யான் ; தான் அறியாது - திருவரு ளுக்குப் புதிதாக ஒன்றையும் அறியவேண்டுவதில்லை ; இவை ஆர் அறிவார் தான் - இவையெல்லாம் அறிந்து கூட்டி முடிக்கிறது திரு வருளையல்லாமல் பின்னை யார்தாம் அறிந்து கூட்டி முடிக்கப்போகி றார்கள் ! ௩

இப்படி உபகரிக்கிற திருவருளை அறியாம விருப்பானேன் என் னில்,

34. பால்ஆழி மீன்ஆளும் பான்மைத் தருள்உயிர்கள்
மால்ஆழி ஆளும் மறித்து.

**(உரை)** பால் ஆழி மீன் ஆளும் பான்மைத்து - பாற்சமுத்திரத் திலே ஆட்சியாகவுடைய மச்சங்கள் பாலைக் குடித்துச் சுகத்தையடை யாமல் தனக்குச் சிறியவாயிருக்கும் செந்துக்களை விரும்பும் பகுதி போல ; அருள் உயிர்கள் மால் ஆழி ஆளும் மறித்து - அருளிடமாக வாழும் ஆன்மாக்கள் அருளையடைந்து இன்புறாமல் மயக்கமாகிய பிற விச் சாகரத்திலே விழுந்து புலன்வழி திரியாநிற்கும். ௪

திருவருளிடமாகக் காரியப்படுகிறதை அறியாதிருந்தது எப்படி என்னில்,

35. அணுகு துணையறியா ஆற்றேனில் ஐந்தும்
உணர்வை உணரா துயிர்.

**(உரை)** அணுகு துணை அறியா - பொருந்தும் துணையை அறியாது ; ஆற்றேனில் ஐந்தும் - ஆன்மாவின் வழித்தாய் அறிந்து காரியப்பட்டு வருகிற பஞ்சேந்திரியங்களும் ஆன்மாவினாலே அறிந்து காரியப்பட்டு வருகிறோமென்று அறியச் செய்யாததுபோல ;

உணர்வை உணராது உயிர் - திருவருளிடமாக அறிந்து காரியப்பட்டு வருகிற ஆன்மாக்களும் திருவருளினாலே அறிந்து காரியப்பட்டு வருகிறோமென்று அறியச் செய்யார்கள். ரு

பூமியிலே உவமை உண்டோ என்னில்,

36. தரையை அறியாது தாமே திரிவோர்
புரையை உணரார் புவி.

**(உரை)** தரையை அறியாது தாமே திரிவார் - பூமி தாரகமாய்ச் சஞ்சரிக்கிற ஆன்மாக்கள் பூமி தாரகமென் றறியாமல் தந்தஞ் சாமர்த்தியத்தினாலே சஞ்சரிக்கிறதாக விசாரித்தாற்போல; புரையை உணரார் புவி - அருள் தாரகமாய் அறிந்து புசியாநிற்கிற ஆன்மாக்கள் அருள் தாரகமென் றறியாமல் தமது செயலென்றிருக்கிற முறைமையும். சு

அருளைத் தேடி அறிகிறேன் என்னில்,

37. மலைகெடுத்தோர் மண்கெடுத்தோர் வான்கெடுத்தோர்
தலைகெடுத்தோர் தற்கேடர் தாம். [ஞானம்

**(உரை)** மலைகெடுத்தோர் - மலையிலே யிருந்து மலைகெட்டுத் தேடுவார்போலவும; மண்கெடுத்தோர் - பூமியிலே யிருந்து பூமிகெட்டுத் தேடுவார் போலவும்; வான்கெடுத்தோர் - ஆகாயத்திலே யிருந்து ஆகாயங்கெட்டுத் தேடுவார் போலவும்; ஞானம் தலைகெடுத்தோர் தற்கேடர்தாம் - ஞானத்துக்குள்ளே யிருந்து ஞானத்தை அறியாது தேடினதும் தன்னாலேதான் கெட்டதும். எ

ஞானத்துள்ளே இருந்தும் ஞானத்தை அறியாதிருப்பானேன் என்னில்,

38. வெள்ளத்துள் நாவற்றி எங்கும் விடிந்திருளாம்
கள்ளத் தலைவர் கடன்.

**(உரை)** வெள்ளத்துள் நாவற்றி - மாரளவு தண்ணீரிலே போகிறவன் தண்ணீர்த் தாகமாய் இருக்கச்சேயும், ஒரு விடயத்தை நாடிப் போகையினாலே அத் தண்ணீர் அள்ளிக்கொள்ள மாட்டாதது போலவும்; எங்கும் விடிந்து இருளாம் - எவ்விடத்திலும் ஆதித்தப் பிரகாசமாய் இருக்கச்சேயும் அந்தகனுக்கு இருளானது இருக்கிறதுபோல

வும்; கள்ளத்தலைவர் கடன் - எவ்விடத்திலும் திருவருள் பிரகாசித்திருக்கவும் அதனை அறியாமல் ஆன்மாக்கள் இந்திரியங்களுடனே கூடி நிற்கிற முறைமை. அ

அருளை அறியாதிருந்தது எப்படி என்னில்,

39. பரப்பமைந்து கேண்மின்இது பாற்கலன்மேல் பூசை
கரப்பருந்த நாடும் கடன்.

(உரை) பரப்பு அமைந்து கேள்மின் இது - தேகாதிப் பிரபஞ்சப் பரப்பைவிட்டு இதனை இன்பமாகக் கேளுங்கோள்; இல்லாதிருந்தாலோ—பாற்கலன்மேல் பூசை கரப்பு அருந்த நாடும் கடன் - பாலிருக்கிற பாண்டத்தின் மேலே யிருக்கிற பூனையானது பாலைக் குடித்துச் சுகத்தை அடையாமல் முன்பு வாதனைப்பட்ட கரப்பைப் [கரப்பானைப்] புசிக்க இறப்பைப் பார்த்திருக்கிற முறைமைபோல திருவருள் தனக்கு உயிராய் இருக்கவும் ஆன்மாக்கள் அதனை விரும்பாது விடயங்களிலே பொருந்தி நிற்கிற முறைமை. கூ

அமையாதிருந்தால் அறியப் போகாதோ என்னில்,

40. இற்றை வரையியைந்தும் ஏதும் பழக்கம்இலா
வெற்றுயிர்க்கு வீடு மிகை.

(உரை) இற்றைவரை இயைந்தும் - அநாதி தொடங்கி இற்றை வரையும் திருவருள் கூடிநின்று உபகரித்து நிற்கச்செயும்; ஏதும் பழக்கம் இலா வெற்றுயிர்க்கு - சற்றும் திருவருளிலே பொருந்துதலில்லாத விருதாவாகிய ஆன்மாக்களுக்கு; வீடு மிகை - மோட்ச வீடு பகை. சய

## ரு. அருளுரு நிலை

பகையில்லாத மோட்சத்தைக் கொடுக்கிறவர் ஆர் என்னில்,

41. அறியாமை உள்நின் றளித்ததே காணும்
குறியாக நீங்காத கோ.

(உரை) அறியாமை உள் நின்று அளித்ததே காணும் - தற்சொரூபத்தை அறியாத பெத்தகாலத்திலே உள்ளும் புறம்பும் விட்டு நீங்காமல் நின்று ஊட்டி உறக்கிக் கிடத்தி நடத்தி உபகரித்துவந்த கர்த்தாத் தானே காணும்; குறியாக நீங்காத கோ - இருவினை

யொப்பு வந்த காலத்திலே கட்புலனாலே காணும்படிக்கு ஆசாரிய மூர்த்தமாக எழுந்தருளிவந்து இரட்சிப்பன். க

உள்ளே நின்று அறிவிக்கிற கர்த்தாத் தானே திருமேனி கொண்டு வரவேண்டுமோ கற்றபேர் கேட்டபேர் ஆகாதோ என்னில்,

42. அகத்துறுநோய்க் குள்ளின ரன்றி அதனைச்
சகத்தவரும் காண்பரோ தான்.

**(உரை)** அகத்து உறு நோய்க்கு உள்ளினர் அன்றி - சரீரத்திலே ஒரு வியாதி வந்து பொருந்தினால் சரீரத்துக்கு உடனாயிருக்கிற ஆன்மா அறிகிறதே யல்லாமல்; அதனைச் சகத்தவரும் காண்பரோ தான் - பெண்டாட்டி பிள்ளை பிதா மாதா சுற்றத்தார் அறிவார்களோ; அப்படிப்போல ஆன்மாவினிடத்திலே யிருக்கிற அறியாமையை உயிர்க்குயிராய் இருக்கிற பரமசிவனே ஆசாரியமூர்த்தமாய் எழுந்தருளிவந்து நீக்குகிறதேயல்லாமல் கற்றபேர் கேட்டபேராலே ஆகாது. உ

இப்படிக்கொத்த ஆசாரியரை அறியாதிருப்பானேன் என்னில்,

43. அருளா வகையால் அருள்புரிய வந்த
பொருள்ஆர் அறிவார் புவி.

**(உரை)** அருளா வகையால் அருள்புரிய வந்த பொருள் - அருளல்லாத முறைமையாக அனுக்கிரகம் பண்ணவந்த ஆச்சாரிய மூர்த்தத்தை; ஆர் அறிவார் புவி - ஆர்தாம் அறியப்போகிறார் இந்தப் பூமியினிடத்திலே. ங

திருமேனிகொண்டு வந்த ஆசாரியரை அறியார்களென்பானேன் என்னில்,

44. பொய்இருண்ட சிந்தைப் பொறியிலார் போதமாம்
மெய்இரண்டும் காணார் மிக.

**(உரை)** பொய் இருண்ட சிந்தைப் பொறி இலார் - அஞ்ஞானமே மிகுந்திருக்கின்ற சித்தத்தையுடைய அறிவில்லாத பேர்கள்; போதமாம் மெய் இரண்டும் காணார் மிக - உயிர்க்குயிராய் இருக்

கிற கர்த்தா என்றும் அதுதானே ஆசாரிய மூர்த்தமாய் எழுந்தருளி வந்ததென்றும் சற்றும் அறியச்செய்யார்கள். ௪

அவரை எல்லார்க்கும் அறியலாமோ என்னில்,

45. பார்வையென மாக்களைமுன் பற்றிப் பிடித்தற்காம்
போர்வையெனக் காணார் புவி.

(உரை) பார்வையென - மானைக் காட்டி மானைப்பிடித்தாற் போல ; மாக்களை முன்பற்றிப் பிடித்தற்காம்-பக்குவப்பட்ட ஆன்மாக்களை முன் நிற்கப்படுத்தித் தன்வசமாக்கிக் கொள்வதற்காக; போர்வையென காணார் புவி - மானிடச்சட்டை சாத்திக்கொண்டு ஆசாரிய மூர்த்தமாக எழுந்தருளிவந்ததென்று ஆன்மாக்கள் அறியச் செய்யார்கள். ரு

எல்லார்க்கும் அறிய விளக்கவொண்ணுதோ என்னில்,

46. எமக்கென் எவனுக் கெவைதெரியும் அவ்வத்
தமக்கவனை வேண்டத் தவிர்.

(உரை) எமக்கு என் - திருவருளிலே சற்றும் பழக்கமில்லாதவனுடைய அறிவைத் திருப்ப நமக்கென்ன ; எவனுக்கு எவை தெரியும் - பரிபாகமில்லாதவனுக்கு அறிவித்தால் அவனுக்கு என்ன தெரியும்; அவ்வத்தமக்கு - அவரவர் பக்குவத்துக்கீடாக; அவனை வேண்டத் தவிர் - பரிபாகமில்லாதவனை விரும்பவேண்டுவதில்லை ; அறியாமையை நீக்கிக்கொள்ள வேண்டுமென்று தேடி வந்தவனுக்கே அறியாமையை நீக்கலாம். சு

அறிவுக்கறிவா யிருக்கிறது போதாதோ புறம்பேயும் திருமேனி கொண்டு வரவேண்டுமோ என்னில்,

47. விடநகிலம் மேவினும்மெய்ப் பாவகனின் மீளும்
கடனிவிருள் போவதிவன் கண்.

(உரை) விடம் நகிலம் மேவினும் - விஷம் தீண்டினவனுக்கு கீரியைக் கொண்டுவந்து கழுத்திலே கட்டினாலும் விஷம் தீராது ; மெய்ப் பாவகனின் மீளும் கடனில் - நல்ல கீரிப்பாவக வல்லனாலே விஷம் நீங்குகிற முறைமைபோல ; இருள் போவது இவன்கண் - ஞானசாரியர் திருநோக்கத்தினாலே ஆணவமலம் நீங்கும். எ

மூவகை ஆன்மாக்களுக்கும் ஒருபடித்தாய்த் திருமேனிகொண்டு வருவாரோவென்னில்,

48. அகலத் தருமருளை ஆக்கும் வினைநீக்கும்
சகலர்க்கு வந்தருளும் தான்.

**(உரை)** அகலத் தரும் அருளை ஆக்கும் - ஆணவ மலத்தினை யுடைய விஞ்ஞானகலர்க்கு ஆணவ மலத்தை நீக்கி அறிவுக்கறிவாய் அனுக்கிரகம் பண்ணி மோட்சத்தை அடைவிப்பன்; வினை நீக்கும் - ஆணவ மலத்தினையும் கன்ம மலத்தினையும் உடைய பிரளயாகலருக்கு அவர்களைப்போல மானும் மழுவும் சதுர்ப்புயமும் காளகண்டமும் திரிநேத்திரமுமாக எழுந்தருளி வந்து ஆணவ மலத்தினையும் கன்ம மலத்தினையும் நீக்கி அனுக்கிரகம் பண்ணி மோட்சத்தை அடைவிப்பன்; சகலர்க்கு வந்தருளும் தான் - ஆணவம் காமியம் மாயை என்கிற மூன்று மலத்தினையும் உடைய சகலர்க்கு அவர்களைப்போல மானிடச்சட்டை சாத்திக்கொண்டு ஆசாரியமூர்த்தமாக எழுந்தருளி வந்து ஆணவம் காமியம் மாயை என்கிற மூன்று மலங்களையும் நீக்கி அனுக்கிரகம் பண்ணி மோட்சத்தை அடைவிப்பன். அ

வருத்தப்படத் திருமேனி கொள்ளுவானேன் என்னில்,

49. ஆர்அறிவார் எல்லாம் அகன்ற நெறிஅருளும்
பேரறிவான் வாராத பின்.

**(உரை)** எல்லாம் அகன்ற நெறி அருளும் - மனம் வாக்குக் காயங்களுக்கு எட்டாத பொருளை அனுக்கிரகம் பண்ணும்; பேரறிவான் வாராத பின் - பேரறிவனாகிய கர்த்தா ஆசாரிய மூர்த்தமாகத் திருமேனி கொண்டு எழுந்தருளி வாராத இடத்து; ஆர் அறிவார் - அவனை ஆரால் அறியப்படும். கூ

ஞானசாரியன் வரவேண்டுமோ நானுனே அறிவேன் என்னில்,

50. ஞானம் இவன்ஒழிய நண்ணியிடும் நற்கல்அனற்
பானு ஒழியப் படின்.

**(உரை)** ஞானம் இவன் ஒழிய நண்ணியிடும் - ஞானசாரியனை அல்லாமல் ஒருவனுக்கு ஞானம் உண்டாம்; நல் கல் அனல் பானு ஒழியப்படின் - நல்ல சூரியகாந்தக் கல்லினிடத்திலே ஆதித்தனை யல்லாமல் அக்கினி சொலிக்குமேயானால். ௫௦

## ௬. அறியும் நெறி

ஞானசாரியர் எந்தப் பக்குவத்திலே திருமேனிகொண்டு வருவார் என்னில்,

**51.** நீடும் இருவினைகள் நேராக நேராதல்
கூடும்இறை சத்தி கொளல்.

**(உரை)** நீடும் இருவினைகள் நேராக கூடும்-மிகுந்து வாராநின்ற புண்ணிய பாவமிரண்டும் சமத்துவமாக; நேராதல் - நேராக்குகிற சிவ புண்ணியம் வந்து பொருந்தினவிடத்திலே; இறை சத்தி கொளல் - கர்த்தா ஆசாரிய மூர்த்தமாகத் திருமேனிகொண்டு எழுந்தருளிவருவர்.

அந்த ஆசாரியர் வந்து என்னத்தை அறிவிப்பார் என்னில்,

**52.** ஏகன் அநேகன் இருள்கருமம் மாயையிரண்
டாகஇவை ஆறு தி யில்.

**(உரை)** ஏகன் - கர்த்தாவும்; அநேகன் - ஆன்மாவும்; இருள் - ஆணவமலமும்; கருமம் - சுகதுக்கமாகச் சொல்லப்பட்ட வினையும்; மாயை இரண்டு - சுத்தமாயை அசுத்தமாயை இரண்டும்; ஆக இவை ஆறு ஆதியில் - ஆக இவை ஆறும் அநாதியே யுள்ளன. உ

இதில் அறியும் பொருள் ஏது என்னில்,

**53.** செய்வானும் செய்வினையும் சேர்பயனும் சேர்ப்பவனும்
உய்வானும் உளன்என் றுணர்.

. **(உரை)** செய்வானும் - வினையைச் செய்கின்ற ஆன்மாவும்; செய்வினையும் - செய்யப்பட்ட வினையும்; சேர் பயனும் - கன்மத்தினாலே உண்டான பிரயோசனமும்; சேர்ப்பவனும் - இதுவெல்லாம் கூட்டி முடிக்கிற கர்த்தாவும்; உய்வானும் - மோட்சத்தை அடைகிறவனும்; உளன் என்று உணர் - உண்டு என்று அறிவாயாக. ௩

திருவருளிடமாக ஆன்மா இருந்து வாழ்கிறது எப்படி என்னில்,

**54.** ஊன்உயிரால் வாழும் ஒருமைத்தே ஊனொடுயிர்
தான்உணர்வோ டொன்றும் தரம்.

**(உரை)** ஊன் உயிரால் வாழும் ஒருமைத்தே - சரீரம் ஆன்மாவி னுடனே ஒன்றுபட்டு ஆன்மாவினாலே வாழ்கிற முறைமை போல;

ஊனொடு உயிர் தான் உணர்வோடு ஒன்றும் தாம்-சரீரத்திலே ஒன்று பட்டிருக்கிற ஆன்மா சிவஞானத்துடனே கூடி வாழ்கிறதும். ச

திருவருள் அத்துவிதமாய் நின்றதொழிந்து ஆன்மாவிலே தோயுமோ என்னில்,

55. தன்நிறமும் பல்நிறமும் தானும்கற் றன்மைதரும்
பொன்நிறம்போல் மன்நிறம்இப் பூ.

**(உரை)** தன் நிறமும்-படிகத்தினுடைய பிரகாசத்தையும்; பல் நிற மும் - பல வன்னங்களையும்; தானும் கல் தன்மை தரும் பொன்நிறம் போல் - கூட்டி முடித்து அதிலே சற்றும் தோய்வற நிற்கிற ஆதித்தப் பிரகாசத்தைப் போல; மன் நிறம் இப் பூ-திருவருளும் ஆன்மாக்களை யும் தத்துவங்களையும் கூட்டி முடித்து அதிலே சற்றும் தோய்வற நிற்கும். ரு

திருவருள் நின்று காரியப்படுத்த வேண்டுமோ ஆன்மாக்கள் தாமே காரியப்படுவார்கள் என்னில்,

56. கண்தொல்லை காணும்நெறி கண்உயிர் நாப்பண்நிலை
உண்டில்லை அல்ல தொளி.

**(உரை)** கண் தொல்லை காணும் நெறி - கண்ணுக்கு அநாதியே காண்கிற முறைமை உண்டு; கண் உயிர் நாப்பண் நிலை-கண்ணுக்கும் ஆன்மாவுக்கும் நடுவே; உண்டு இல்லை அல்லது ஒளி - ஒளி உண்டோ கண்ணுக்குத் தெரிவுண்டு, ஒளி இல்லையோ கண்ணுக்குத் தெரி வில்லை. சு

அருளினாலே காரியப்படுகிறது எப்படி என்னில்,

57. புன்செயலி னோடு புலன்செயல்போல் நின்செயலை
மன்செயல தாக மதி.

**(உரை)** புன்செயலினோடு புலன்செயல்போல் - ஆன்மாவினாலே அறிந்து காரியப்பட்டு வருகிற பஞ்சேந்திரியங்களைப்போல; நின் செயலை மன்செயலதாக மதி - நீயும் நின்னுடைய செயலைத் திரு வருளினாலே அறிந்து காரியப்பட்டு வருகிறோம் என்றறிவாயாக. எ

அருளாகிய அறிவே துணையென்னில்,

58. ஓராதே ஒன்றையும்உற் றுன்னாதே நீமுந்திப்
பாராதே பார்த்ததனைப் பார்.

(உரை) ஓராதே - முன்சொன்ன முறைமையைச் சந்தேகமாய் விசாரியாதே; ஒன்றையும் உற்று உன்னாதே - ஒரு விடயத்தையும் பொருந்தி நினையாதே; நீ முந்திப் பாராதே - விடயங்கள் கூடின விடத்து உன்னுடைய போதம் முந்திச் சீவியாதே; பார்த்ததனைப் பார் - கேவலத்திலே கிடக்கிற உன்னைப் பரிபாகப்படத் தக்கதாகப் பார்க்கிற திருவருளைப் பார். அ

களிப்புண்டே என்னில்,

59. களியே மிகுபுல மாய்க்கருதி ஞான
ஒளியே ஒளியா ஒளி.

(உரை) களியே மிகுபுலமாய்க் கருதி - உன்னுடைய களிப்பை இந்திரியங்களைப்போல அறிந்து நீங்கி; ஞான ஒளியே ஒளியா ஒளி - ஞானப்பிரகாசந் தானேயாய் அழுந்திவிடு. கூ

போதம் அடங்கி அறிகிறது எப்படி என்னில்,

60. கண்டபடி யேகண்டு காணாமை காணாமல்
கொண்டபடி யேகொண் டிரு.

(உரை) கண்டபடியே கண்டு - கேவல சகலத்தை நீக்கி உன்னைக் காட்டின திருவருளையே கண்டு; காணாமை காணாமல் - காணாமையாகிய தேகாதி பிரபஞ்சத்தைக் காணாமல் நீங்கி; கொண்டபடியே கொண்டு இரு - திருவருள் உன்னை எந்தப்படி கொண்டிருந்தது அந்தப்படி இரு. கய

## எ. உயிர் விளக்கம்

ஞானத்திலே அழுந்துகிறது எப்படி என்னில்,

61. தூநிழலார் தற்காருஞ் சொல்லார் தொகுமிதுபோல்
தான்அதுவாய் நிற்குந் தரம்.

(உரை) தூநிழல் ஆர்தற்கு ஆரும் சொல்லார் - ஆதித்தன் உச்சியிலே வந்த காலத்துப் பவித்திரமாகிய ஆதித்தனுடைய நிழல் அதற்

குள்ளே அடங்குகிறதற்கு ஒருத்தரும் உபசாரம் சொல்ல வேண்டுவ தில்லை; தொகும் இதுபோல் - இந்த முறைமையைப்போல; தான் அதுவாய் நிற்கும் தாம் - இருவினையொப்பு வந்த காலத்துத் திரு வருள் வந்து அவனைக் கவளீகரித்துக் கொள்ளுதற்கு ஒருவர் சொல்ல வேண்டுவதில்லை. க

எல்லார்க்கும் இப்படி அறிவிக்க வொண்ணாதோ என்னில்,

62. தித்திக்கும் பால்தானும் கைக்கும் திருந்திடும்நாப்
பித்தத்தில் தான்தவிர்ந்த பின்.

(உரை) திருந்திடும் நா பித்தத்தில் - திருத்தத்தை யுடைய நாவிலே பித்தம் மேலிட்ட காலத்து; தித்திக்கும் பால்தானும் கைக்கும் - தித்திக்கும் பாலும் கசக்கும்; தான் தவிர்ந்த பின் - பித்தம் நீங்கின காலத்துப் பால் தித்திக்கும்; அப்படிப்போல ஆன்மாவி னிடத்திலே மலம் மேலிட்டால் சிவானுபவம் தோன்றாது, மலம் நீங்கினால் சிவானுபவம் தோன்றும். உ

அருள் எதுக்கு நான்தானே அறிவேன் என்னில்,

63. காண்பான் ஒளிஇருளிற் காட்டிடவும் தான்கண்ட
வீண்பாவம் எந்நாள் விடும்.

(உரை) காண்பான் ஒளி இருளில் காட்டிடவும் - காணும் தன் மையை உடைய கண்ணுக்கு ஆதித்தப் பிரகாசமானது பூத இருளை நீக்கிப் பதார்த்தங்களைக் காட்டக் கண்டும்; தான் கண்ட வீண்பாவம் எந்நாள் விடும் - நான்தானே கண்டேன் என்கிற விருதாவாகிய பாவம் எந்தக் காலம் தீரும்; அதுபோல அறியும் தன்மையை உடைய ஆன்மாக்களுக்குத் திருவருளானது பாசத்தை நீக்கித் தன்னைக் காட் டத்தக்கதாகக் கண்டும் தானே கண்டேன் என்கிறது எந்தச் சென னத்திலே நீங்கும். ௩

தெளிந்தார் செயலும் தெளியாதார் செயலும் எப்படி யென்னில்,

64. ஒளியும் இருளும் ஒருமைத்துப் பன்மை
தெளிவு தெளியார் செயல்.

(உரை) ஒளியும் இருளும் ஒருமைத்து - அந்தகர் கண்ணுக்கு ஆதித்தப் பிரகாசமும் அந்தகாரமும் ஒருபடித்தா யிருக்கும்; பன்மை

தெளிவு தெளியார் செயல் - பதி பசு பாசத்தினுடைய தன்மையை விளங்க அறியாதவர்களுடைய செய்தியும் அப்படிப்போல. ச

அந்தப் பொருள் கிடையாதோ என்னில்,

65. கிடைக்கத் தகுமோநற் கேண்மையார்க் கல்லால்
எடுத்துச் சுமப்பானை இன்று.

**(உரை)** நற்கேண்மையார்க் கல்லால் - சரியை கிரியாயோக பாதங்களை அனுட்டித்து முடித்து ஞானபாதக் கேள்வியையுடைய பேர்களுக் கல்லாது; எடுத்துச் சுமப்பானை - உடல்பொருளாவி மூன்றுங் கொடுக்கச் சுமக்கிறவனை; கிடைக்கத் தகுமே இன்று - இப்போது உனக்குக் கிடைக்கத் தகுமோ. ரு

ஆன்மாக்கள் தானே பிரம மென்னில்,

66. வஞ்ச முடன்ஒருவன் வைத்த நிதிகவரத்
துஞ்சினனோ போயினனோ சொல்.

**(உரை)** வஞ்சமுடன் ஒருவன் வைத்த நிதி கவர - வஞ்சகமாக ஒருவன் ஒரு பதார்த்தத்தைக் கொண்டுவந்து வைத்து அவனை அறியாமல் எடுத்துக்கொண்டு போய்த் திரும்ப வந்து கேட்டவிடத்து நீ எடுத்துப்போனாய் என்று சொல்லமாட்டாமல்; துஞ்சினனோ போயினனோ சொல் - அவத்தைப்பட்டானோ அவ்விடத்தைவிட்டு எங்கேயானாலும் போயினனோ சொல். சா

பாசத்தைப் பொருந்தாமல் நிற்கிறது எப்படி யென்னில்,

67. தனக்கு நிழல்இன்றாம் ஒளிகவரும் தம்ப
மெனக்கவர நில்லா திருள்.

**(உரை)** தனக்கு நிழல் இன்றாம் ஒளி கவரும் தம்பமென - மத்தியான காலத்துப் படிகமானது ஆதித்தப் பிரகாசத்தைக் கவர்ந்து பஞ்ச வன்னங்களையும் பற்றாமல் தன்னிடத்திலே களங்கமற நின்றாற்போல; கவர நில்லாது இருள் - ஆன்மா சிவஞானத்துடனே கூடி அதுவாய் நிற்கவே பாசம் நில்லாது. எ

அருளை முன்னிட்டுக்கொண்டு நிற்கிறது எப்படி யென்னில்,

68. உற்கைதரும் பொற்கை யுடையவர்போல் உண்மைப்பின்
நிற்க அருளார் நிலை.

**(உரை)** உற்கை தரும் பொற்கை யுடையவர்போல் - அழகிய உள்ளங்கையிலே விளக்கை முன்னிட்டுப் பதார்த்தங்களைக் காண்கிறவர்களைப்போல; உண்மைப் பின் நிற்க அருளார் நிலை-தற்போதஞ் சீவியாமல் சிவஞானத்தை முன்னிட்டு நிற்கிறதே அருளை யடைந்தவர்கள் முறைமை. அ

திருவருள் வேணுமோ நான்தானே அறிவேன் என்னில்,

**69.** ஐம்புலனாற் றாம்கண்ட தென்றால் அதுவொழிய
ஐம்புலன்ஆர் தாம்ஆர் அதற்கு.

**(உரை)** ஐம்புலனால் தான் கண்டது என்றால் - பஞ்சேந்திரியங்களினாலே ஆன்மா ஒரு விடயத்தை யறிந்ததல்லாமல்; அது ஒழிய - அந்தப் பஞ்சேந்திரியங்கள் நீங்கின விடத்து; ஐம்புலன் ஆர் தாம் ஆர் - பஞ்சேந்திரியங்கள்தான் ஆர் ஆன்மாத்தான் ஆர்; அதற்கு - அந்த ஞேயத்தைப் பொருந்துதற்கு. கூ

என்னுடைய அறிவினாலே அறிவேன் என்னில்,

**70.** தாமே தருபவரைத் தம்வலியி னாற்கருத
லாமே இவன்ஆர் அதற்கு.

**(உரை)** தாமே தருபவரை - ஒரு பதார்த்தத்தைத் தானே தருதற்குரியாரை; தம் வலியினாற் கருதலாமே - தன்னுடைய போதத்தை முந்தி எட்டி நினைக்கலாமோ; இவன் ஆர் அதற்கு - அந்தப் பேரின்பத்தைப் பொருந்துதற்கு இவன் ஆர். ௧0

## அ. இன்புறு நிலை

அந்த ஞேயத்து அழுந்துமவர் நிலைமை எப்படி யென்னில்,

**71.** இன்புறுவார் துன்பார் இருளின் எழுஞ்சுடரின்
பின்புகுவார் முன்புகுவார் பின்.

**(உரை)** எழுஞ் சுடரின் பின் புகுவார் - விளக்கை முன்னிட்டுக் கொண்டு பின்னே செல்லுகிறவர்களைப் போல்வார்; இன்புறுவார் - இன்பத்தைப் பொருந்தினவர்கள்; இருளின் முன் புகுவார் - விளக்

கைப் பின்னிட்டு இருட்டை முன்னிட்டுக் கொண்டு செல்லுகிறவர் களைப் போல்வார் ; துன்பார் பின் - துன்பத்தைப் பொருந்துவார்கள்.

இந்த ஞான மொழிய ஞேயமுண்டோ என்னில்,

**72.** இருவர் மடந்தையருக் கென்பயன் இன் புண்டாம்
ஒருவன் ஒருத்தி உறின்.

**(உரை)** இருவர் மடந்தையருக்கு என் பயன் - இரண்டு ஸ்திரீ கள் கூடினால் அவர்களுக்கு என்ன பிரயோசனம்; இன்புண்டாம் ஒரு வன் ஒருத்தி உறின் - ஒருவனும் ஒருத்தியுங் கூடின விடத்துச் சுக முண்டாம்; அப்படிப்போல அருளும் ஆன்மாவுங் கூடினவிடத்துச் சுக மில்லை, ஆன்மாவுஞ் சிவமுங் கூடின விடத்துச் சுகமுண்டாம். உ

கர்த்தாவுக்கும் ஆன்மாவினாலே சுகமுண்டோ என்னில்,

**73.** இன்பதனை எய்துவார்க் கீயும் அவர்க்குருவம்
இன்பகன மாதலினால் இல்.

**(உரை)** இன்பதனை எய்துவார்க்கு ஈயும் - பொருந்துகிற பெயர்களுக்கு இன்பத்தைக் கொடுப்பன் ; அவர்க்கு உருவம் இன்ப கனம் - கர்த்தாவுக்குத் திருமேனி இன்பக்கட்டி ; அதென்போல வென்னில், சர்க்கரையைப் புசிக்கிறவன் ரசம் பெறுவதொழிந்து அவன் சர்க்கரைக்குக் கொடுக்கும் ரசமில்லை—ஆதலினால் - ஆகையி னாலே ; இல்-ஆன்மாக் கர்த்தாவுக்கு இன்பத்தைக் கொடுக்கவேண்டுவ தில்லை. ஙு

சர்க்கரையுஞ் சர்க்கரையைப் புசிக்கிறவனும் போல இரண்டா யிருக்குமோ என்னில்,

**74.** தாடலைபோற் கூடிஅவை தான்நிகழா வேற்றின்பக்
கூடலை ஏகமெனக் கொள்.

**(உரை)** தாடலைபோற் கூடி - தாள் தலையென்று நின்றவிடத்து ளவ்வுந் தவ்வுங் கெடாமல் தாடலையென்றே சீவித்து ஒன்றாய் நின்ற முறைமைபோல ; அவை தான் நிகழா வேற்றின்பக்கூடலை நீ ஏகமெ னக் கொள்-ஆன்மாவுஞ் சிவமும் வேறறக் கலந்து இன்பமாய் நிற்கிற தை ஒன்றெனக் கொள். சு

ஆன்மாவும் சிவமும் ஒன்றாயிருக்குமோ இரண்டா யிருக்குமோ என்னில்,

75. ஒன்றாலும் ஒன்று திரண்டாலும் ஓசையெழா
தென்றாலொன் றன்றிரண்டும் இல்.

**(உரை)** ஒன்றாலும் ஒன்று - ஆன்மாவுஞ் சிவமும் ஒரு பொருளாகில் ஒருவருங் கூடவேண்டுவதில்லை; பெறுவானும் பேறுமில்லை— இரண்டாலும் ஓசை எழா - இரண்டாய் நிற்கு மென்று சொல்லுவாயானால் அங்கே சாயுச்சியமென்று சொல்ல வேண்டுவதில்லை ; என்றால் ஒன்றன்று இரண்டும் இல் - ஒன்றுமல்ல இரண்டுமல்லவென்று வேதாகமங்கள் சொல்லுகையினாலே அத்துவிதமாயிருக்கும். ரு

அந்தப் பொருளைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்தவர்களுக்கு மோட்சமாகாதோ என்னில்,

76. உற்றாரும் பெற்றாரும் ஓவா துரைஒழியப்
பற்றாரும் அற்றார் பவம்.

**(உரை)** உற்றாரும் - அந்தப் பொருளைப் பொருந்தின பேர்களும் ; பெற்றாரும் - தெளியப்பெற்ற பேர்களும்; ஓவாது - நிட்டையைப் பொருந்தாவிடில் செனன மொழியாது ; உரை ஒழிய - இங்ஙனஞ் சொன்னதெல்லாம் நீங்க ; பற்றாரும் அற்றார் பவம் - எல்லாப் பற்றையும் விட்டு நிட்டையைப் பொருந்தினவர்களே பின்பு செனன மற்றவர்கள். சு

அந்த நிட்டை கூடுவது எப்படி யென்னில்,

77. பேய்ஒன் றுந் தன்மை பிறக்கு மளவும்இனி
நீஒன் றுஞ் செய்யாது நில்.

**(உரை)** பேய் ஒன்றும் தன்மை - ஒருவனைப் பசாசு பிடித்த போது அவன் அதன் வசமானாற்போல ; பிறக்கும் அளவும் இனி நீ ஒன்றுஞ் செய்யாது நில் - சிவானுபூதியான நிட்டை கூடுமளவும் உன் போதஞ் சீவியாமல் நில். எ

அந்த நிட்டை கூடினவர்களுக்குச் சங்கற்பவிகற்பங் கூடாதோ என்னில்,

78. ஒண்பொருட்கண் உற்றூர்க் குறுபயனே யல்லாது
கண்படுப்போர் கைப்பொருள்போற் காண்.

(உரை) ஒண் பொருட்கண் உற்றூர்க்கு - அந்த நேயத்தைப் பொருந்தினவர்களுக்கு; உறுபயனே யல்லாது - பொருந்தப்பட்ட நேயமல்லாது; கண்படுப்போர் கைப்பொருள்போல் காண் - உறங்கினவன் கையிற் பதார்த்தம் போலச் சங்கற்ப விகற்பமெல்லாம் நீங்கிப்போம். அ

ஞான ஞேயங்களொழிய ஒரு பொருள் தோன்றுதோ என்னில்,

79. மூன்றுய தன்மைஅவர் தம்மின் மிகமுயங்கித்
தோன்றுத இன்பமதென் சொல்,

(உரை) மூன்றுய தன்மை - ஞாதுரு ஞான ஞேயங்கள் தோன்றுமல்; அவர் தம்மின் மிக முயங்கி-அந்த ஞேயத்தில் மிகவும் பொருந்தி; தோன்றுத இன்பமது என் சொல் - தோன்றுத இன்பத்தை என்னென்று சொல்லுவது. கூ

இந்த இன்பத்தை இம்மையிலே அறியலாமோ என்னில்,

80. இன்பில் இனிதென்றல் இன்றுண்டேல் இன்றுண்டாம்
அன்பு நிலையே அது.

(உரை) இன்பில் இனிது என்றல் இன்று உண்டேல்-இன்பத்துளெல்லாம் மேலாகிய பரம சுகத்தைப் பெறுதற்கு அதிகாரம் இன்று உண்டானல்; இன்றுண்டாம் - இப்போது உண்டாம்; அன்பு நிலையே அது - அதனைப் பெறவேணுமென்று ஆதரவு செய்யவே அந்த இன்பம் உண்டாம். க0

## கூ. அஞ்செழுத்தருள்நிலை

பஞ்சாக்கரத்தின் உண்மை எப்படி என்னில்,

81. அருள்நூலும் ஆரணமும் அல்லாதும் ஐந்தின்
பொருள்நூல் தெரியப் புகின்.

(உரை) அருள் நூலும் - பரமசிவன் திருவுளம்பற்றின இருபத்தெட்டுத் திவ்வியாகமங்களும்; ஆரணமும் - நாலு வேதமும்; அல்லாவும் - மற்றுமுண்டாகிய நூல்களும்; ஐந்தின் பொருள் நூல் தெரியப் புகின்-ஆராயப்புகுமிடத்துப் பஞ்சாக்கரத்தின் உண்மையை விளங்கச் சொல்லும். க

இந்தப் பஞ்சாக்கரத்திலே நிட்டைகூடும் உபாயம் எங்ஙனே என்னில்,

௮2. இறைசத்தி பாசம் எழில்மாயை ஆவி
உறநிற்கும ஓங்காரத் துள்.

(உரை) இறை - கர்த்தாவும்; சத்தி - அருளும்; பாசம் - ஆணவ மலமும்; எழில் மாயை-பெருமை [அழகு] பொருந்திய திரோதமும்; ஆவி - ஆன்மாவும்; உற நிற்கும் ஓங்காரத்துள் - பிரணவத்தைவிட்டு நீங்காத எழுத்தஞ்சிலேயும் பொருந்தி நிற்கும். உ

ஆன்மாப் பாசத்தை நீங்கிப் பதியைக் கூடும் முறைமை எங்ஙனே என்னில்,

83. ஊன நடனம் ஒருபால் ஒருபாலாம்
ஞானநடம் தான்நடுவே நாடு.

(உரை) ஊன நடனம் ஒருபால் - மலமுந் திரோதமும் ஒருபாலாகவும்; ஒரு பாலாம் ஞானநடம் - அருளுஞ் சிவமும் ஒருபாலாகவும்; தான் நடுவே நாடு - ஆன்மா நடுவேயாகவும் விசாரித்தறிவாயாக. ௩

இந்தப் பஞ்சாக்கரத்தை அறியா திருப்பானேன் என்னில்,

௮4. விரியமந மேவியவ்வை மீளவிடா சித்தம்
பெரியவினை தீரிற் பெறும்.

(உரை) விரிய ம ந மேவி யவ்வை மீளவிடா - விரிந்து வரா நின்ற மலமுந் திரோதமும் ஆன்மாவினிடத்திலே பொருந்திச் சிவத்தைப் பொருந்த வொட்டாது; சித்தம் பெரியவினை தீரிற் பெறும் - சித்தத்திலே யிருக்கிற மலமும் வினையும் நீங்கின விடத்துச் சிவத்திலே பொருந்தியிருக்கும். ௪

இப்படி உச்சரித்தாலல்லது மலம் நீங்காதோ என்னில்,

85. மாலார் திரோத மலமுதலாய் மாறுமோ
மேலாகி மீளா விடின்.

(உரை) மாலார் திரோதம் மலம் முதலாய் மாறுமோ - மயக்கத்தைச் செய்யாநின்ற மலமுந் திரோதமும் நீங்குமோ ; மேலாகி மீளா விடின்-மேலான சிவ முதலாக உச்சரியா திருந்தால்; சிவ முதலாகவே உச்சரிப்பாய். ரு

இப்படி உச்சரித்தால் சிவனைக் கூடலாமோ என்னில்,

86. ஆராதி ஆதாரம் அந்தோ அதுமீண்டு
பாராது மேல்ஓதும் பற்று.

(உரை) ஆராதி - ஆராதனை பண்ணுவாய் ; ஆதாரம் அந்தோ அது - சர்வான்மாக்களுக்கும் தாரகமாயிருக்கிற பொருள்,ஐயோ; ஆன்மாக்களைச் செனன மரணத்திலே விடாது—மீண்டு பாராது மேல் ஓதும் பற்று - அந்த மலமுந் திரோதமும் திரும்பிப் பாராது; மேலான சிவமுதலாக உச்சரிப்பாய். சு

இந்தப் பஞ்சாக்கரத்திலே நிட்டை கூடத்தக்கதாக ஓதும் முறைமை எப்படி என்னில்,

87. சிவமுதலே ஆமாறு சேருமேல் தீரும்
பவம்இதுநீ ஓதும் படி.

(உரை) சிவ முதலே ஆமாறு சேருமேல் - சிவமுதலாக உச்சரித்து நிட்டையைப் பொருந்தினால் ; தீரும் பவம் - செனன மரணத் துன்பம் நீங்கும் ; இது நீ ஓதும்படி - உச்சரிக்கிற முறைமை இது என்றறிவாயாக. எ

சிவனைக் கூடுமிடத்திலும் இந்த முறைமை குலையாமல் பஞ்சாக்கரம் நிற்குமோ என்னில்,

88. வாசி யருளியவை வாழ்விக்கும் மற்றதுவே
ஆசில் உருவமுமாம் அங்கு.

(உரை) வாசி யருளி யவை வாழ்விக்கும் - வகாரமாகிய அருள் சிகாரமாகிய சிவத்தை ஆன்மாவுக்குக் கொடுத்து மேலாகிய பரம

சுகத்தை விளையாநிற்கும் ; மற்றதுவே ஆசில் உருவமும் ஆம் - அந்த ஆன்மாக் குற்றமில்லாத திருமேனியாம் ; அங்கு - அந்தச் சிவத்துக்கு.

ஆன்மா நிற்கும் முறைமை எப்படி என்னில்,

89. ஆசினவா நாப்பண் அடையா தருளினால்
வாசியிடை நிற்கை வழக்கு.

**(உரை)** ஆசின்கவா நாப்பண் அடையாது-ஆன்மா மலத்துக்குந் திரோதானத்துக்கும் நடுவே பொருந்தாமல் ; அருளினால் - ஆசாரியருடைய அனுக்கிரகத்தினாலே; வாசியிடை நிற்கை வழக்கு-அருளுக்கும் சிவத்துக்கும் நடுவே நிற்கிறது முறைமை. கூ

இப்படிப் பலவிதமாய்ச் சொல்லுவானேன் என்னில்,

90. எல்லா வகையும் இயம்பும் இவன்அகன்று
நில்லா வகையை நினைந்து.

**(உரை)** இவன் அகன்று நில்லா வகையை நினைந்து - ஆன்மாக்கள் கர்த்தாவை நீங்கிநில்லாத முறைமையை நினைந்து; எல்லா வகையும் இயம்பும் - எல்லா நூல்களுஞ் சொல்லும். கO

## கO. அணைந்தோர் தன்மை

நிட்டை கூடினவர் நிலைமை எப்படி யென்னில்,

91. ஓங்குணர்வில் உள்ளடங்கி உள்ளத்தில் இன்பொடுங்
தூங்குவர்மற் றேதுண்டு சொல். [கத்

**(உரை)** ஓங்கு உணர்வில் உள்ளடங்கி - மிகுந்த ஞானத்துள்ளே தம் அறிவானது அடங்கி ; உள்ளத்தில் இன்பு ஒடுங்க-தம்மிடத்திலே யுண்டான கெற்சிதமுங் கெட; தூங்குவர் - நேயத்திலே இரண்டறப் பொருந்துவார்கள் ; மற்று ஏது உண்டு சொல் - இதற்கு மேலாக ஒரு பேறு உண்டாகிற் சொல். க

அடைந்தவர்கள் பஞ்சகிருத்தியங்களைச் செய்வாரோ என்னில்,

92. ஐந்தொழிலும் காரணர்க ளாம்தொழிலும் போகநுகர்
வெந்தொழிலும் மேவார் மிக.

**(உரை)** ஐந்தொழிலும் - பஞ்ச கிருத்தியமும் ; காரணர்களாந் தொழிலும் - காரண கர்த்தாக்களாகிய தொழிலும்; போகம் நுகர் வெம்

தொழிலும் - போகங்களைப் புசிக்கிற கொடிய சொர்க்காதி போகங்களும் ; மேவார் மிக - சற்றும் பொருந்தார்கள். உ

சர்வஞ்ஞனுடனே போய்ப் பொருந்தினால் அவன்செய்தி செய்யாரோ என்னில்,

93. எல்லாம் அறியும் அறிவுறினும் ஈங்கிவர்ஒன்
றல்லா தறியார் அற.

(உரை) எல்லாம் அறியும் அறிவுறினும்-எல்லாத்தையும் அறிந்துவாராநின்ற கர்த்தாவினுடைய திருவடித் தாமரையிலே பொருந்தினாலும்; ஈங்கு இவர் ஒன்று அல்லாது அறியார் அற - இவ்விடத்திலே அவர்கள் சிவமே யல்லாது வேறொன்றையும் அறியச் செய்யார்கள். ௩

விடயங்கள் மேலிட்டாற் போதம் அடங்குகிறது எப்படி என்னில்,

94. புலன்அடக்கித் தம்முதற்கட் புக்குறுவார் போதார்
தலம்நடக்கும் ஆமை தக.

(உரை) புலன்அடக்கி - பஞ்சேந்திரியங்களையும் தன்னுள்ளே அடக்கி ; தம் முதற்கண் புக்கு உறுவார் - தமக்கு முதன்மையாகிய கர்த்தாவினுடைய திருவடித் தாமரையைப் பொருந்தின பெயர்கள் ; போதார் - ஒரு விடயத்தையும் பொருந்த நினையார்கள் ; அஃது எப்படிப்போல வென்னில்—தலம் நடக்கும் ஆமை தக - பூமியிலே நடக்கிற ஆமையானது ஒருவரைக் கண்ட மாத்திரத்திலே அவயவங்களையெல்லாம் தனக்குள்ளே அடக்கிக்கொண்டாற் போல. ச

அந்த விடயம் மேலிட்டபோது சிவனுக்கு அன்னியமாவார்களோ என்னில்,

95. அவனைஅகன் றெங்கின்றும் ஆங்கவனும் எங்கும்
இவனையொழிந் துண்டாதல் இல்.

(உரை) ஆங்கு அவனும் எங்கும் - எவ்விடத்திலும் விட்டுநீங்காமல் கர்த்தாப் பரிபூரணமாய் நிற்கையினாலே ; அவனை அகன்று எங்கு இன்றும் - ஆன்மாக்கள் கர்த்தாவை விட்டு எங்கே நிற்பார்கள் ; இவனை ஒழிந்து உண்டாதல் இல் - கர்த்தா ஆன்மாக்களை விட்டு நீங்கி நில்லான். ரு

இந்திரியங்களை யறியும் அறிவாற் சிவனைத் தெரிசிக்கலாமோ என்னில்,

96. உள்ளும் புறம்பும் ஒருதன்மைக் காட்சியருக்
கெள்ளுந் திறமேதும் இல்.

(உரை) உள்ளும் புறம்பும் ஒருதன்மைக் காட்சியருக்கு - உயிர்க்குயிராயிருக்கிற கர்த்தா வென்றும் அது தானே ஆசாரிய மூர்த்தமா யெழுந்தருளி வந்ததென்றும் ஒரு தன்மையாய்க் காண்கிற பெயர்களுக்கு ; எள்ளும் திறம் ஏதும் இல் - இகழ்கிற முறைமை சற்றுமில்லை. சு

சிவனைக் கூடலாமோ என்னில்,

97. உறுந்தொழிற்குத் தக்க பயன்உலகந் தத்தம்
வறுந்தொழிற்கு வாய்மை பயன்.

(உரை) உறுந்தொழிற்குத் தக்க பயன் உலகம் - சரியை கிரியா யோகங்களுக்குப் பிரயோசனம் சாலோகாதி பதம்; தத்தம் வறுந் தொழிற்கு வாய்மை பயன்-செயலறுதி வந்த ஞாதாக்களுக்கு ஞேயம் ஒன்றுமே பிரயோசனம். எ

இந்த ஞானந் தெரிந்தவர்கள் மீளவுங் கன்மத்தை அனுபவிப்பாரோ என்னில்,

98. ஏன்ற வினைஉடலோ டேகும்இடை யேறும்வினை
தோன்றில் அருளே சுடும்.

(உரை) ஏன்ற வினை உடலோடு ஏகும் - எடுத்த தேகத்துக்கு அடுத்த பிராரத்தம் சரீரம் உள்ளளவும் புசித்துத் தொலையும்; இடையேறும் வினை தோன்றில் அருளே சுடும் - நடுவே ஆகாமியம் உண்டாமேயானால் சிவஞானஞ் சுட்டுப்போடும். அ

இந்தப் பிராரத்தம் புசிக்கவேணுமாகில் மனம் வாக்குக் காயங்களால் உண்டான கன்மம் ஏறுமே என்னில்,

99. மும்மை தரும்வினைகள் மூளாவாம் மூதறிவார்க்
கம்மையும் இம்மையே யாம்.

(உரை) மூதறிவார்க்கு - முதிர்ந்த அறிவான் மிக்க ஞாதாக்களுக்கு ; மும்மைதரும் வினைகள் மூளாவாம் - மனம் வாக்குக் காயங்களாற் செய் வினை யேறாது ; அம்மையும் இம்மையே யாம் - மறுமையிலே மோட்சமும் இப்போது உண்டாம். கூ

விடயங்கள் நீங்காவோ என்னில்,

100. கள்ளத் தலைவர் துயர்கருதித் தங்கருணை
வெள்ளத் தலைவர் மிக.

(உரை) கள்ளத் தலைவர் துயர் கருதி - இந்திரியங்களோடே கூடி நிற்கிற ஆன்மாக்கள் படுந் துன்பத்தைப் பார்த்து ; தம் கருணை வெள்ளத்து அலைவர் மிக - கிருபா சமுத்திரத்திலே யழுந்தின ஞாதாக்கள் மிகவும் இரங்குவார்கள். கO

## திருவருட்பயன் சிந்தனையுரை முற்றும்

அம்பலவாண குருசுவாமி துணை

---

[குறிப்பு : திருவருட்பயன் நிரம்பவழகிய தேசிகர் உரையோடும் வேறுருரையோடும் முன்னமே அச்சிடப்பட்டுளது. இங்குப் பதிப்பிக்கும் சிந்தனையுரை இதுவரை அச்சுக்கு வாராதது. திருநெல்வேலியிலிருந்து திரு. M. P. S. துரைசாமி முதலியாரவர்கள் அனுப்பிய பிரதியை மூலமாக வைத்து இராசாங்கத்தார் கையெழுத்து நூனிலையத்துள்ள வேறு இரண்டு பிரதிகளைத் துணைக்கொண்டு இது பதிப்பிக்கப்பட்டது. மூலப்பிரதி இதழ்களின் ஒரு புறம் பெரும்பான்மை செல்லரித்தது. வேறு பிரதிகளில் ஒன்று முதற் பதினாறு குறளில்லாதது. மற்றது பூர்த்தியானது. பிரதிகளில் சில சில பேதங்களுண்டு. இச் சிந்தனையுரை யியற்றியார் பெயர் அவர்கால முதலியன அறிதற்கு எது ஒன்றுமில்லை. உரை சுருங்கியதாயினும் தெளிவாயிருக்கின்றது.

—S. அனவரதவிநாயகம் பிள்ளை.]

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# உமாபதி சிவாசாரியார்

அருளிச்செய்த

# வினாவெண்பா மூலமும்

# திருவாவடுதுறையாதீனம்

# நமச்சிவாயத்தம்பிரான் உரையும்

## நேரிசை வெண்பா

1. *நீடும் ஒளியும் நிறையிருளும் ஓரிடத்துக்*
*கூடல்அரிது கொடுவினையேன்—பாடிதன்முன்*
*ஒன்றவார் சோலை உயர்மருதச் சம்பந்தா*
*நின்றவா றெவ்வாறு நீ.*

**(உரை)** *நீடும் ஒளியும் நிறையிருளும் ஓரிடத்துக் கூடல் அரிது-* விரிந்த பிரகாசமும் நிறைந்த இருளும் ஓரிடத்திலே கூட மாட்டாது; *கொடுவினையேன் பாடு இதன்முன்* - கொடு வினையேன் பக்கல் தரிசிப்பதற்குமுன்; *வார்சோலை உயர் மருதச் சம்பந்தா நீ ஒன்ற நின்றவாறு எவ்வாறு* - அழகிய சோலை யுயர்ந்த மருதநகர் வாழ் சம்பந்தமா முனிவனே தேவரீர் அடியேனிடத்துப் பொருந்த நின்ற தெப்படி.

அந்தகன் கண்ணுக்கு ஆதித்தப் பிரகாசம் வியாத்தமா யிருந்தும் தெரியாத தன்மைபோ லென்பது கருத்து.

உதாரணம்: சிவஞானபோதத்தில் [xi, 3] 'அருக்கனேர் நிற்பினு மல்லிருளே காணார்க்,கிருட்கண்ணே பாசத்தார்க் கீசன்' என்பது கண்டுகொள்க. மலம் ஆன்மாவைச் சகசமாய் மறைத்திருக்கையிலே சிவம் ஆன்மாவைப் பொருந்தி நின்றதெப்படியென்றும் வினா. உ-ம்: சிவஞானபோதத்தில் [vii, 5] 'மெய்ஞ்ஞானந்தன்னில்... தான்'; சிவதருமோத்தரத்தில், 'பரமசிவம் பராசத்தி பல்லுயிர்க்கும் பயின்றிருக்க, விரவுவதெ னிருளெனிற்கேள் வெய்யவழல் பசுமரத்தில், விரவியதே பசுமரமும் வெந்ததல வெந்துவிழும், பருவமுறக் காணமுறப் பதியுமுறப் பழுதறவே' என்பன கண்டுகொள்க. க

2. இருளில் ஒளிபுரையும் எய்தும் கலாதி
மருளின் நிலையருளும் மானுங்—கருவியிவை
நீங்கின் இருளாம் நிறைமருதச் சம்பந்தா
ஈங்குன் அரு ளால்என் பெற.

**(உரை)** இருளில் ஒளி புரையும் - ஆணவம் மேலிட்ட காலத்து ஞானம் ஒழிந்து நிற்கும்; எய்தும் கலாதி மருளின் நிலை யருளும் - கலாதிகளைப் பொருந்தின விடத்திலும் ஆணவத்தையே தந்தது; மானுங் கருவியிவை நீங்கின் இருளாம்-என்னுடனே கூடிநின்ற கருவி நீங்கின பொழுது இருளாயிருந்தது; நிறை மருதச் சம்பந்தா ஈங்கு உன் அருளால் என்பெற - நிறைந்த மருதநகர் வாழ் சம்பந்தமா முனியே இவ்விடத்து உன்னருளால் பிரயோசனம் என்ன.

கேவல சகலத்திலுமல்ல சுத்தத்திற் பிரயோசன மென்பது கருத்து.

உ-ம்: சிவப்பிரகாசத்தில் [68], 'காட்டிடுங் கரண மொன்று' மென்ற பாடத்திற் கண்டுகொள்க. உ

3. புல்லறிவு நல்லுணர்வ தாகா பொதுஞான
மல்லதில துள்ளதெனில் அந்நியமாந்—தொல்லையிருள்
ஊனமலை யாவா றுயர்மருதச் சம்பந்தா
ஞானமலை யாவாய் நவில்.

**(உரை)** புல்லறிவு நல்லுணர்வது ஆகா-சிற்றறிவு பேரறிவாகாது; பொதுஞானம் அல்லது-[விடய ஞானமும் அன்று அது. இங்ஙனம்] ஞானம் மூன்று விதமாயிருக்கும்; இலது உள்ளதெனில் அந்நிய

மாம் - முன்பு இல்லாத சிவஞானம் மலபரிபாகத்திலே யுண்டாமென்னில் சற்காரியவாதமாகாமல் அந்நியமாம் ; தொல்லை இருள் ஊனம் மலையாவாறு உயர் மருதச் சம்பந்தா ஞானமலையாவாய் நவில் - பழைமையாக வருகிற ஆணவமலக் குற்றத்தினாலே மயங்காத முறைமை உயர்ந்த மருதநகர் வாழ் சம்பந்தமாமுனியே மலைபோல ஞானத்தை யுடையவனே திருவுளம்பற்றவேணும்.

விடய ஆன்மஞானம் சிவஞானமாகாதென்பது கருத்து.

தத்துவங்களுடைய சுபாவத்தை இது பொய்யென் றறிவிக்கிறது சிவஞானம். இப்படி யறிகிற வேற்றுமையும் விட்டு அதுவாய் அந்த ஞானமாய் நிற்பது சுத்தம். உ - ம் : **சிவப்பிரகாசத்தில்** [73], ‘தத்துவ மான வற்றின் றன்மைகள்’ என்னும் பாடத்திற் கண்டுகொள்க. **சித்தியாரில்** [xi, 11] ‘சிவன்சீவ னென்றிரண்டுஞ் சித்தொன்று மென்னில் சிவனருட்சித் திவனருளைச் சேருஞ்சித்’ தென்பது கண்டுகொள்க. ங

4. கனவு கனவென்று காண்பரிதாம் காணில்
நனவில் அவைசிறிதும் நண்ணா—முனைவன் அருள்
தான்அவற்றில் ஒன்றா தடமருதச் சம்பந்தா
யான்அவத்தை காணுமா றென்.

**(உரை)** கனவு கனவென்று காண்பரிதாம் - கனவிலே நின்று கனவைத் தெரிசிக்கப்படாது ; காணில் நனவில் அவை சிறிதும் நண்ணா - நனவிலேகாணும் கண்டதென்னில் நனவில் அந்தக் கருவிகள் இல்லாதபடியாலே காணவில்லை ; முனைவன் அருள்தான் அவற்றில் ஒன்றா - அருளிலே நின்று கண்டதென்னில் அருள் அவத்தைகளிற் பொருந்தாது ; தட மருதச் சம்பந்தா யான் அவத்தை காணுமாறு என் - தடாகம் பொருந்திய மருதநகர் வாழ் சம்பந்தமாமுனியே நான் அவத்தைகளைத் தரிசிக்கும்படி எப்படி.

சுத்த தத்துவங்களைக் கொண்டு அறிய வேண்டுமென்பது கருத்து.

உ - ம் : **சிவப்பிரகாசத்தில்** [39], ‘இத்தகைமை யிறையருளா லுயிரறியு’ மென்ற பாடத்திற் கண்டு கொள்க. ச

5. அறிவறிந்த தெல்லாம் அசத்தாகு மாயின்
குறியிறந்த நின்உணர்விற் கூடா—பொறிபுலன்கள்

*தாமா அறியா தடமருதச் சம்பந்தா*
*யாம்ஆர் அறிவார் இனி.*

**(உரை)** அறிவு அறிந்த தெல்லாம் அசத்தாகுமாயின் - என்னுடைய அறிவினாலே அறியப்பட்டதெல்லாம் அசத்தாய் அழிந்து போமேயாயின்; குறி இறந்த நின் உணர்விற் கூடா - வாக்கு மனத்துக்கும் எட்டாமல் குறியிறந்து நிற்கிற தேவரீருடைய ஞானத்திலே பொருந்தப்போகிறதே யில்லை; பொறிபுலன்கள் தாமா அறியா - பொறிபுலனாகிய தத்துவங்கள் தாமாய் அறியமாட்டா; தட மருதச் சம்பந்தா யாம் ஆர் அறிவார் இனி - தடாகம் பொருந்திய மருதநகர் வாழ் சம்பந்தமா முனியே யான் ஆரை யறியப்போகிறதுதான் இனி.

கண்ணானது இருளோடே கூடி இருளாயும் ஒளியோடே கூடி ஒளியாயும் நின்றதுபோலப் பாசத்தோடே கூடிப் பாசமாய் நின்ற ஆன்மா அருளோடே கூடிப் பாசம் நீங்கி அருளாய் நிற்குமென்பது கருத்து.

உ - ம்: சிவப்பிரகாசத்தில் [57] 'சத்தியு வென்ற சத்துத் தானறியா' தென்ற பாடத்திற் கண்டுகொள்க. ரு

6. *சிற்றறிவு முற்சிதையிற் சேர்வார்இன் றும்சிறிது*
*மற்றதனில் நிற்கில்அருள் மன்னுவாம்—துற்றமுகில்*
*மின்கொண்ட சோலை வியன்மருதச் சம்பந்தா*
*என்கொண்டு காண்பேன் யான்.*

**(உரை)** சிற்றறிவு முன் சிதையிற் சேர்வார் இன்றும் - சிற்றறிவு முன்னே கெடுமாயின் பின் அருளைப் பொருந்தப்போகிற பேரில்லை; சிறிது மற்றதனில் நிற்கில் அருள் மன்னுவாம் - சிற்றறிவு கொஞ்சமாக நின்றாலும் அருள் பொருந்ாது; துற்ற முகில் மின்கொண்ட சோலை வியன்மருதச் சம்பந்தா என்கொண்டு காண்பேன் யான் - மேகங்கள் நெருங்கின ஆகாசத்தை யளாவிய சோலை சூழ்ந்த வியன் மருதநகர் வாழ் சம்பந்தமாமுனியே எதைக்கொண்டு காணவல்லேன் யான்.

சிற்றறிவு கெட்டதுமன்று முன்போல் இருந்தது மன்று, பாசபந்தம் நீங்கித் திருவடியிலே கலந்து கிடக்குமென்பது கருத்து.

உ - ம்: சிவஞானசித்தியில் [xi, 10], 'செம்பிரத குளிகையினாற் ...சிவானுபவ மொன்றினுக்கு முரித்தே' என்பது கண்டுகொள்க. சு

7. உன்னரிய நின்உணர்வ தோங்கியக்கால் ஒண்கருவி
தன்அளவும் நண்ணரிது தானாகும்—என்அறிவு
தான்அறிய வாரா தடமருதச் சம்பந்தா
யான்அறிவ தெவ்வா றினி.

(உரை) உன்னரிய நின் உணர்வது ஓங்கியக்கால் - நினைத்தற் கரிதாகிய தேவரீருள் தோன்றின காலத்து ; ஒண் கருவி தன் அளவும் நண்ணரிது தானாகும் - அழகு பொருந்திய முப்பத்தாறு தத்துவங்களாற் பொருந்தப்படாது; என்னறிவுதான் அறிய வாராது - என்னுடைய பசுஞானத்தாலும் அறியப்படாது ; தட மருதச் சம் பந்தா யான் அறிவது எவ்வாறு இனி - தடாகம் பொருந்திய மருத நகர் வாழ் சம்பந்தமாமுனியே அடியேங்கள் அறிகிறது எப்படித் தான் இனி.

பசுகரணங்களும் சிவகரணமாய் ஆன்மாவும் அருளாய்ப் பொரு ந்திநின் றறியுமென்பது கருத்து.

உ - ம் : சிவப்பிரகாசத்தில் [70], 'மாயைமா மாயை மாயா' என்ற பாடத்திற் கண்டுகொள்க. எ

8. அருவேல் உருவன் றுருவேல் அருவன்
றிருவேறும் ஒன்றிற் கிசையா—உருஓரிற்
காணில் உயர்கடந்தைச் சம்பந்தா கண்டஉடற்
பூணும்இறைக் கென்னும் புகல்.

(உரை) அருவேல் உருவன்று உருவேல் அருவன்று இருவேறும் ஒன்றிற் கிசையா - கர்த்தா திருமேனி அருவமானால் உருவமாகமாட் டாது, உருவமானால் அருவமாகமாட்டாது, அருவுமுருவும் ஒரு பொரு ளுக்கு இரண்டு தன்மை இசையாது ; உரு ஓரிற் காணில் உயர் கடந்தைச் சம்பந்தா கண்ட உடல் பூணும் இறைக்கு என்னும் புகல் - திருமேனியை விசாரித்துக் காணில் உயர்ந்த கடந்தைநகர் வாழ் சம் பந்தமாமுனியே கொண்ட திருமேனியைப் பூணப்பட்ட கர்த்தா வுக்குத் திருமேனி என்னத்திலே உண்டானது திருவுளம்பற்ற வேணும்.

ஞானத்திலே திருமேனி கொள்ளுவனென்பது கருத்து.

உ - ம் : சிவஞானசித்தியில் [i, 41], 'மாயைதான்...சத்தி தன் னால்' என்பது கண்டுகொள்க. ..அ

9. இருமலத்தார்க் கில்லை உடல்வினைஎன் செய்யும்
ஒருமலத்தார்க் காராய் உரைப்பேன்—திரிமலத்தார்
ஒன்ருக உள்ளார் உயர்மருதச் சம்பந்தா
அன்ருகில் ஆமா றருள்.

(உரை) இருமலத்தார்க்கு உடல் இல்லை வினை என் செய்யும் - இரண்டு மலமுடைய பிரளயாகலருக்கு மாயை யில்லாதபடியினுலே உடம்பு இல்லை வினைபுசிக்கும்படி எப்படி ; ஒருமலத்தார்க்கு ஆராய் உரைப்பேன் - ஒருமலமுடைய விஞ்ஞாஞகலர்க்கு உரை யாராகச் சொல்லுவாம் ; திரிமலத்தார் ஒன்ருக உள்ளார் - மும்மலமுடைய சகலருக்கன்றே ஒன்ருக உள்ளது ; உயர்மருதச் சம்பந்தா அன்ரு கில் ஆமா று அருள் - உயர்ந்த மருதநகர் வாழ் சம்பந்தமாமுனியே அப்படியல்லவாகில் ஆகும்படி அருளவேண்டும்.

விஞ்ஞாஞகலர் *பிரளயாகலருக்குச் சுத்தமாயையிலே தேக மென்பது கருத்து.

உ - ம் : சிவஞானசித்தியில் [i, 25], 'வித்தைகள் வித்தை யீசர்' என்ற பாட்டு முழுதுங் கண்டுகொள்க. க

10. ஒன்றிரண்டாய் நின்றென்றில் ஓர்மையதாம் ஒன்ருக
நின்றிரண்டா மென்னில்உயிர் நேராகும்—துன்றிருந்தார்
தாங்கியவாழ் தண்கடந்தைச் சம்பந்தா யாஞகி
ஓங்கியவா றெவ்வா றுரை.

(உரை) ஒன்று இரண்டாய் நின்று ஒன்றில் ஓர்மையதாம் - ஒரு பொருள் விவகாரத்திலே இரண்டாய் நின்று ஒன்ருமென்னில் ஒன்று பொருந்தமாட்டாது ; ஒன்ருக நின்று இரண்டா மென்னில் உயிர் நேராகும் - ஒன்ருய் நின்று இரண்டா மென்னில் ஒன்றிலே ஒன்று அழிந்துபோம் ; துன்றிருந்தார் தாங்கிய வாழ் தண் கடந்தைச் சம் பந்தா யாஞகி ஓங்கியவாறு எவ்வாறு உரை - ஞானத்தைப் பொருந் திய பெரியோரால் தாங்கிய வாழப்பட்ட குளிர்ந்த கடந்தைநகர் வாழ் சம்பந்தமாமுனியே யான் சிவமாகி ஓங்கிய முறைமையைத் திரு வுளம்பற்ற வேணும்.

ஆணவத்தைப் பொருந்தின ஆன்மாப்போல வென்பது கருத்து.

---

*'பிரளயாகலர் சரியைகிரியை யோகமுடைய சகலர்க்குச்' என்பது திருநெல்வேலிப் பிரதியில் அதிக பாடம்.

உ - ம்: **சிவப்பிரகாசத்தில்** [87], 'ஒன்றிரண் டாகி யொன்றி னொருமையா' மென்ற பாடத்திற் கண்டுகொள்க. **கo**

11. காண்பானுங் காட்டுவதும் காண்பதுவும் நீத்துண்மை
காண்பார்கள் நன்முத்தி காணார்கள்—காண்பானுங்
காட்டுவதுங் காண்பதுவுந் தண்கடந்தைச் சம்பந்தன்
வாட்டும்நெறி வாரா தவர்.

**(உரை)** காண்பானும் காட்டுவதும் காண்பதுவும் நீத்து உண்மை காண்பார்கள் - காண்கின்ற ஆன்மாவும் காட்டுகின்ற சிவனும் காணப்படுகின்ற பொருளும் விட்டு உண்மையைத் தரிசிப்பார்களென்னில்; நல் முத்தி காணார்கள் - நல்ல முத்தியைக் காணார்கள்; காண்பானும் காட்டுவதும் காண்பதுவும் தண்கடந்தைச் சம்பந்தன் வாட்டும் நெறி வாராதவர் - ஆனால் காண்கின்றவனும் காட்டுகின்றவனும் காணப்படுகின்ற பொருளுமாகவோ காண்பார்கள் என்னில் அப்படிக் காண்கின்றவர்களும் குளிர்ச்சி பொருந்தின கடந்தைநகர் வாழ் சம்பந்தமாமுனி வாட்டும்வழி வாராதவர்.

ஞாதுருஞானஞேயம் என்கிற சங்கற்பனைகளை விட்டு ஒன்றாகச் சிவனியல்பின் உணருகிற ஞானமே பெறவேண்டு மென்பது கருத்து.

உ - ம்: **சிவஞானசித்தியில்** [viii, 22], 'சன்மார்க்கஞ் சகலகலை புராண வேத' மென்ற திருவிருத்தத்திற் கண்டுகொள்க. **கக**

12. ஒன்றி நுகர்வதிவன் ஊணும் உறுதொழிலும்
என்றும் இடையில் இடமில்லை—ஒன்றித்
தெரியா அருள்மருதச் சம்பந்தா சேர்ந்து
பிரியாவா றெவ்வாறு பேசு.

**(உரை)** ஒன்றி நுகர்வது இவன் ஊணும் உறுதொழிலும் [ஆன்மா வினைப்போகத்தையும் செயலையும் கர்த்தாவைச் சேர்ந்தல்லது நுகர்வதில்லை]; என்றும் இடையில் இடமில்லை - [எக்காலத்தும் கர்த்தாவுக்கும் ஆன்மாவுக்கு மிடையில் நின்று பிறிதொன்று புசிப்பிக்குமென்பதற் கிடமில்லை]; ஒன்றித் தெரியா அருள் மருதச் சம்பந்தா - சர்வவியாபியா யிருக்கையிலேயும் தோன்றாத கிருபை பொருந்திய மருதநகர் வாழ் சம்பந்தமாமுனியே; சேர்ந்து பிரியாவாறு எவ்வாறு பேசு - தேவரீர் திருவடியைச் சேர்ந்து பிரியாமற் போகங்களைப் புசிக்கும் முறைமையைத் திருவுளம் பற்றவேண்டும்.

அவன் சர்வ வியாபியாகையினாலும் இவன் சுதந்தரஹீனனாகை யாலும் அவனே போகங்களைப் புசிப்பிக்கிறவனென்பது கருத்து.

உ - ம்: **திருவருட்பயனி**லே [95], 'அவனையகன் றெங் கின்றா மாங்கவனு மெங்கு, மிவனையொழிந் துண்டாத லில்' என்றும், **சிவஞானபோத**த்தில் [xi, 1], 'ஈண்டிவ்வான்மாக்கள் அவனே யின்றியமைந் தொன்றையும் விஷயியாவாகலால் `அவனும் அவற்றது விஷயத்தை யுணரு' மென்றும், **உண்மைநெறிவிளக்க**த்தில் [6], பாதகங்கள்...யிதுவே' என்றும் வருவன கண்டுகொள்க. கஉ

13. அருளால் உணர்வார்க் ககலாத செம்மைப்
பொருளாகி நிற்கும் பொருந்தித்—தெருளா
வினாவெண்பா உண்மை வினவாரேல் ஊமன்
கனாவின்பால் எய்துவிக்கும் காண்.

**(உரை)** அருளால் உணர்வார்க்கு அகலாத செம்மைப் பொரு ளாகி நிற்கும் பொருந்தி - ஆசாரியர் அநுக்கிரகம்பெற்ற ஞானவான் களுக்கு விட்டு நீங்கி மலைவு வாராமல் செம்மைப் பொருளாகவே பொருந்தி நிற்கும்; தெருளா வினாவெண்பா உண்மை வினவாரேல் ஊமன் கனாவின்பால் எய்துவிக்கும் காண் - அறியத்தக்கதாக வினா வெண்பாவின் உண்மையை வினவி யறியாதவர் ஊமன் கனவிலே பால் குடித்தது போல.

ஒன்றுந் தெரியாதென்பது கருத்து.* கங

**வினாவெண்பா உரை முற்றும்**

திருச்சிற்றம்பலம்

---

[**உரைத்தொடக்கத்தில் காணப்படும் வரலாறு**:—இந்நூலுக்கு வரலாறு பரிபூர்ணகர்த்தாவா யிருக்கிற ஸ்ரீகண்டபரமேசுவரன் அரு

---

*இராசாங்கத்துக் கையெழுத்துநூல் நிலயப் பிரதியில் 'வினா வெண்பாவுரை முற்றும்' என்று நூலை முடித்தபின் 'பால்குடித்ததுக் கொக்குமென்றது ஞான மிகுதியுடையார்க்குச் சத்தியமாகவே தோன்று மென்றும் அல்லாதபேர் எத்தனை சாத்திரம் படித்தாலும் வினாவெண்பா பாராதவனுக்கு ஊமன் கனாவிலே பால்குடித்தது" என்றொரு வாக்கியம் எழுதப்பட்டுளது.

ளிச்செய்த சிவாகமத்திலே ஞானகாண்டமாயிருக்கிறதை நந்திகேசுர சுவாமிக்குக் கடாட்சித்தருள, நந்திகேசுர சுவாமி சனற்குமாரபகவானுக்குக் கடாட்சித்தருள, சனற்குமாரபகவான் சத்தியஞான தரிசனிகளுக்குக் கடாட்சித்தருள, சத்தியஞான தரிசனிகள் பரஞ்சோதி மாமுனிகளுக்குக் கடாட்சித்தருள, பரஞ்சோதிமாமுனிகள் மெய்கண்டதேவநாயனுர்க்கு அனுக்கிரகம்பண்ண, மெய்கண்டதேவநாயனுர் அருணந்திதேவர்க்குக் கடாட்சித்தருள, அருணந்திதேவர் மறைஞானசம்பந்தமாமுனிக்கருள, மறைஞானசம்பந்தமாமுனி யனுக்கிரகம் பெற்ற கொற்றங்குடி முதலியார் அந்த உபதேசத்தைச் **சங்கற்பநிராகரண**மென்று எட்டு வாதிகளை வைத்து மறுத்து அந்த அர்த்தம் விளங்கச் **சிவப்பிரகாச**மென்று திருநாமமுஞ் சாத்தி வழிநூலாக அனுக்கிரகம் பண்ணி, அந்தச் சிவப்பிரகாசத்தின் சாரம் விளங்கப் பதின்மூன்று வெண்பாவாக விஞவினதென அறிக. இந்நூலுக்கு வியாக்கியை செய்யவேண்டி மெய்கண்ட சந்ததியில் திருவாவடுதுறை நமச்சிவாய அய்யர் ஆசாரியமரபில் வேலப்பபண்டாரம் அனுக்கிரகம் பெற்ற நமச்சிவாய வேலப்ப பண்டாரம் அனுக்கிரகித்த உபதேசத்தை முன்னுள்ள ஞாதாக்கள் இந்நூலுக்கு விருத்திபண்ணுமையாலே அசௗ௲ பிங்களஞு வைகாசிமீ பவுரணையில் பண்ணினதென்று அறிக.

இவ்வரலாறும் இப்பதிப்புக்கு மூலமாயுள்ள உரையும் திருநெல்வேலி திரு. M. P. S. துரைசாமி முதலியாரவர்கள் அனுப்பிவைத்த பிரதியிற் காணப்படுவன. சென்னைச் சிவஞானபோத யந்த்ரசாலையில் அச்சிட்ட பிரதியும் இராசாங்கக் கையெழுத்துநூல் நிலயத்துள்ள பிரதியும் ஒப்புநோக்கப் பயன்பட்டன. இறுதிப் பிரதியில் சகாத்தம் 1600 எனக் காலம் குறிக்கப்பட்டுளது. திருநெல்வேலிப் பிரதி குறித்தது கொல்லமாண்டு. சகாத்தம் 1600-க்கு நேரானது கி. பி. 1677. கொல்லமாண்டு 840-க்கு நேரானது கி. பி. 1665. எனினும் இரண்டு பிரதிகளிலும் பிங்கல வருஷமென்றே எழுதப்பட்டிருப்பதால், அதற்கு நேரான கி. பி. 1677-ஐயே உரையின் காலமாகக் கொள்ள வேண்டும். —S. **அனவரதவிநாயகம் பிள்ளை.**]

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

உமாபதி சிவாசாரியர்

அருளிச்செய்த

# போற்றிப்பஃறொடை மூலமும் பழைய உரையும்

## பஃறொடை வெண்பா

பூமன்னு நான்முகத்தோன் புத்தேளிர் ஆங்கவர்கோன்
மாமன்னு சோதி மணிமார்பன்—நாமன்னும்
வேதம்வே தாந்தம் விளக்குஞ்செய் விந்துவுடன்
நாதம்நா தாந்தம் நடுவேதம்—போதத்தால்
ஆமளவும் தேட அளவிறந்த அப்பாலைச்
சேம ஒளிஎவருந் தேறும்வகை—மாமணிசூழ்
மன்றுள் நிறைந்து பிறவி வழக்கறுக்க
நின்ற நிருத்த நிலைபோற்றி—குன்றாத

1—4. பூமன்னும் - நிருத்தநிலைபோற்றி.

(உரை) பொற்றாமரைப் பூவில் நிலைபெற்று நான்கு முகத்தோடெழுந்தருளி யிருக்கின்ற பிரமனும், தேவர்களும், அவர்களுக்கு மன்னனாகிய தேவேந்திரனும், திருமகள் பொருந்திய மார்பில் மிகுந்த பிரகாசமுடைய கௌத்துவ மணி தரித்திருக்கிற விஷ்ணுவும், சகல பொருண்மையும் நாவிலிருந்து சொல்லுகிற வேதங்களும், வேதமுடிவான உபநிடதங்களும், சகல அறிவும் விளக்கஞ் செய்கிற விந்துவும், அதற்குள்ளொளியாகிய நாதமும் குடிலையும் தத்தம் இதயத்திற் றோன்றிய போதச்செயல்களால் ஆமளவுந் தேடவு மளவுபடாமல்

ரு பல்லுயிர்வெவ் வேறு படைத்தும் அவைகாத்தும்
எல்லை இளைப்பொழிய விட்டுவைத்துந்—தொல்லையுறும்
அந்தம் அடிநடுவென் றெண்ண அளவிறந்து
வந்த பெரிய வழிபோற்றி—முந்துற்ற
நெல்லுக் குமிதவிடு நீடுசெம்பிற் காளிதமுந்
தொல்லைக் கடல்தோன்றத் தோன்றவரும்—எல்லாம்
ஒருபுடை யொப்பாய்த்தான் உள்ளவா றுண்டாய்
அருவமாய் எவ்வுயிரும் ஆர்த்தே—உருவுடைய

---

அப்பாற்பட்டிருக்கிற பேரின்பவொளியாகிய பதி ஆன்மாக்களை இரக்ஷிக்க வேண்டுமென்கிற கிருபை ஜனித்து எவர்களும் பத்தியுடனே தரிசித்து மலமயக்கம் நீங்கித் தெளிந்து தேறும்படிக்கு மிகுந்த இரத்தின மணிகள் சூழ்ந்து விளங்காநின்ற அழகிய திருச்சிற்றம்பலத்துள் ஞானப்பிரகாசம் நிறைந்து தோன்ற நின்று ஆன்மாக்களுடைய பிறவித்தொடர்பறுக்கச் செய்யும் ஆநந்தநிருத்தநிலை எம்மை இரக்ஷிக்க.

4—6. குன்றாத - பெரியவழிபோற்றி.

**(உரை)** அநாதியாய் எண்ணிறந்த ஆன்மாக்கள் மோக்ஷமடைந்திருக்கவும் குறைவில்லாமல் நித்தியமாய் அளவிறந்திருக்கிற பெத்தான்மாக்களைக் கன்மத்துக்கீடான தேகங்களில் சராயுஜம் அண்டஜம் சுவேதஜம் உத்பீஜம் ஆகிய நால்வகை யோனிகளினும் மாறி மாறி வேறு வேறாகப் படைத்தும் அவ்வான்மாக்களுக்குள்ள அரிய வினைப்போகங்களை ஏறாமற் குறையாமற் கூட்டிப் புசிப்பித்தும் சர்வசங்கார காலத்தில் ஆன்மாக்கள் சகலாவத்தைப்பட்டுப் பிறந்து இறந்து அலைந்து திரிந்த இளைப்பு நீங்கும்படிக்குக் காரண கேவலாவத்தையில் ஒடுக்குவித்தும் அநாதியே தொடுத்து ஆதியாய்ச் சிருஷ்டித்துந் திதித்துஞ் சங்கரித்தும் அளவிறந்து ஆதி நடுவந்தமற்று வருகிற பெரிய கிருத்திய வழி எம்மை இரக்ஷிக்க.

6—13. முந்துற்ற - வினைபோற்றி.

**(உரை)** ஆன்மாக்கள் நித்தியமாயிருக்கச் சிருஷ்டிப்பட்டுந் திதிப்பட்டுஞ் சங்காரப்பட்டும் வருவானேனென்னில், அநாதியிலே மலத்திலே பந்திக்கப்பட்டிருக்கையினாலே மலம் நீங்கும்படிக்குக் கர்த்தா கிருபையினாலே செய்வித்ததாயிருக்கும். ஆனால் மலம் ஆன்மாக்களைப் பந்தித்த தெப்படியென்னில், முன்னேயுண்டான நெல்லுக்கு உமி

மாமணியை உள்ளடக்கும் மாநாகம் வன்னிதனைத்
தான்அடக்குங் காட்டத் தகுதியும்போல்—ஞானத்தின்
கண்ணை மறைத்த கடியதொழி லாணவத்தால்
எண்ணுஞ் செயல்மாண்ட எவ்வுயிர்க்கும்—உள்நாடிக்
கட்புலனாற் காணார்தம் கைக்கொடுத்த கோலேபோற்
பொற்புடைய மாயைப் புணர்ப்பின்கண்—முற்பால்
தனுகரண மும்புவன முந்தந் தவற்றால்
மனமுதலால் வந்தவிகா ரத்தால்—வினையிரண்டுங்
காட்டி அதனாற் பிறப்பாக்கிக் கைக்கொண்டும்
மீட்டறிவு காட்டும் வினைபோற்றி—நாட்டுகின்ற

---

தவிடு முளை முற்பிற்பாடில்லாமல் அநாதியிலே கூடத்தோன்றினதா யிருக்கும். இதில் ஆணவமலம் ஆன்மாவின் அறிவை மறைத்த தெப்படியென்னில், செம்பினுடைய நிறத்தைக் காளிதங் கூட உதித்து மறைத்தது போன்றிருக்கும். கர்த்தாவினுடைய வியாபகத்திலே ஆன்மாக்கள் நிறைந்திருக்கவும் ஆணவமலம் உயிரை மறைத்தது எப்படியென்னில், பழமையாகிய கடல் வியாபகத்திலே நிறைந்திருக்கிற தண்ணீரை உப்புக் கலந்து பிடித்திருப்பது போன்றிருக்கும். இப்படியெல்லாம் வெவ்வேறாய் ஒருபுடை யொப்பாகக் கர்த்தா உள்ளவன்றே யுண்டாய் அருவமாய் மூவகையான்மாக்களையும் ஆணவமலம் பிடித்து உருவையுடைய மகத்தான மாணிக்கமணியை நஞ்சுவாய்க்குளடக்கின மகத்தாகிய சர்ப்பம் போலவும் பச்சையாய் முளைத்து விறகாகுமட்டும் அக்கினியைத் தெரியாமல் மறைத்து வைத்திருந்த காஷ்டம் போலவும் ஆன்மாவினுடைய ஞானக் கண்ணை மறைத்த கடுந்தொழிலையுடைய ஆணவமலத்தினாலே அறிவுஞ் செயலும் இறந்த சகல உயிர்களுக்குங் கர்த்தா கிருபையினாலே நன்றாய் அவர்களிச்சையை நாடிப்பார்த்துக் கட்புலனாற்காணாத பிறவியந்தகர்க்குஉரிமையுள்ளவர்கள் இச்சித்தபடிக் குக் கோலைக் கொடுத்து இச்சித்த இடங்களிலே கொண்டுபோய் விடுகிறதுபோலப் பொலிவினையுடைய மாயையின் காரியமான தனுகரண புவன போகங்களையும் முன்னே யுண்டாக்கிக்கொடுத்து இச்சித்த புவனங்களிலே இச்சித்த வினைப்போகங்களையுங் கூட்டிமுடித்துப் புசிப்பிக்கையினும் அந்த ஆணவமல மயக்கத்தாற் கர்த்தாவுபகாரத்தை மறந்து நாமென்கிற அந்தக்கரண விகார ஹிதாஹிதமுண்டாகை

எப்பிறப்பும் முற்செய் இருவினையால் நிச்சயித்துப்
பொற்புடைய தந்தைதாய் போகத்துட்—கர்ப்பமாய்ப்
கரு புல்விற் பனிபோற் புகுந்திவலைக் குட்படுங்கால்
எல்லைப் படாஉதரத் தீண்டியதீப்—பல்வகையால்
அங்கே கிடந்த அநாதியுயிர் தம்பசியால்
எங்கேனு மாக எடுக்குமென—வெங்கும்பிக்
காயக் கருக்குழியிற் காத்திருந்துங் காமியத்துக்
கேயக்கை கால்முதலாய் எவ்வுறுப்பும்—ஆசறவே
செய்து திருத்திப்பின் பியோகிருத்தி முன்புக்க
வையவழி யேகொண் டணைகின்ற—பொய்யாத
வல்லபமே போற்றியம் மாயக்கால் தான்மறைப்ப
நல்ல அறிவொழிந்து நன்குதீ—தொல்லையுறு

---

யாற் புண்ணிய பாவமிரண்டும் உண்டாம்படி காட்டி அந்தப் புண்ணிய பாவத்தினுற் பிறக்கும் பிறவியுண்டாக்கி அதனுற் செய்யு மிருவினைகளையும் ஏற்றுக்கொண்டு மீண்டும் அந்த வினைப்போகங்களைப் புசிப்பதற்குக் கலாதிஞானங்களையுங் காட்டுங் கிருபைத்தொழில் எம்மை இரக்ஷிக்க.

13—19. காட்டுகின்ற - வல்லபமேபோற்றி.

**(உரை)** கர்த்தா ஆன்மாக்களுக்கு வினைப்போகங்களைப் புசிப்பிக்கிறதற்குத் தேகங்களைக்கூட்டுகிற முறைமை சொல்லுமிடத்து முன்பு ஆகமங்களிலே சொல்லப்பட்ட எண்பத்துநான்கு நூறுயிரம் யோனிபேதப் பிறப்பின் வகையெல்லாம் முன்செய்த இருவினைக்கீடாக உண்டாம்படி திருவுள்ளத்திலே நிச்சயித்துப் பல பிரகாரம் வெவ்வேறு தேகபேதங்களை யுண்டாக்குவதுமல்லாமல் மானுடதேக முண்டாக்குவதெப்படியென்னின், அழகுபொருந்திய தந்தையுந் தாயுங் காமவிகாரம் தீரும்படிக்குச் சையோகபோகஞ் செய்யுங் காலத்து அவர்களுக்குப் பிள்ளைப்பேறு உண்டு இல்லையென்பதும் அறிந்து தாயினுடைய கருப்பத்தில் தந்தை புல்லினுனியிற் றங்கிய பனித்திவலைபோன்ற விந்துவை விடும்போது அதற்குள்உயிரையடக்கி உட்கருப்பாசயத்திற் சுரோணிதத்துடனே கலப்பித்து இருத்தி அந்த விந்து தாய் வயிற்றில் அளவற்றிருக்கின்ற உதராக்கினியினல் எரிசுவற்றுமலும் பலவகையாகிய அந்த வயிற்றுக்குட் கிடந்த அநாதி யுயிர்களாகிய புழுக்கள் தங்கள்

உ0 அக்காலந் தன்னிற் பசியையறி வித்தழுவித்
துக்காவி சோரத்தாய் உள்நடுங்கி—மிக்கோங்குஞ்
சிந்தை உருக முலையுருகுந் தீஞ்சுவைப்பால்
வந்துமடுப் பக்கண்டு வாழ்ந்திருப்பப்—பந்தித்த
பாசப் பெருங்கயிற்ரற் பல்லுயிரும் பாலிக்க
நேசத்தை வைத்த நெறிபோற்றி—ஆசற்ற

---

பசியினாலே அந்த விந்துவை விரைவிலே யெடுத்துப் புசியாமலும் வெய்ய கும்பிகரகம்போன்ற காயக்கருக்குழியிற் காத்திருந்து வினைக் கீடான கை கால் முதலாகிய சகல உறுப்புங் குற்றமறச் செய்து அழகு பொருந்தத் திருத்திப் பின்பு அத்தேகத்தை யெடுத்து நேரே யோகத்தி லிருத்தித் திரிகால வர்த்தமானங்களையும் அறியும்படிக்கு உணர்வையுங் கொடுத்துப் பத்துமாத வரைக்கும் புசிப்புங் கொடுத்துப் பின்பு பூமியிலே பிறக்கும்போது இரண்டுகையுஞ் சிரசிலே குவித்த பாவனையாய்த் தலைகீழாய் வரும்படி செய்து முன் புகுந்த சிறுவழியைப் பெருவழியாக்கி அவ்வுயிர் துன்புற்று இறவாமல் உயிருக்குயிராய் அணைத்திருந்து வெளியிலே யிழுத்துக்கொண்டு வருகிற மெய்ம்மையாகிய வல்லபம் எம்மை இரக்ஷிக்க.

19—22. அம்மாயக்கால் - நெறிபோற்றி.

**(உரை)** தாய்வயிற்றை விட்டுப் பூமியிலே பிள்ளை பிறந்தவுடனே சரீரத்துக்குக் காரணமான மாயை சண்டமாருதம்போல் அலைத்து மயக்க, முன் கருப்பத்தினிருக்கும்போது இப்பிறவித்துன்பத்தை நீக்கிக்கொள்ள வேண்டுமென்று அவ்விடத்திலே நினைத்திருந்த நல்ல நினைவையும் மறந்து உயிர் தேக மயமாய் நல்வினைதீவினைத் துன்பத் தொடர்ச்சியாற் பகுத்தறிவில்லாமல் அக்காலத்தில் உயிர் புசிப்பிச்சையுற் றிருப்பதை யறிந்து பசிதெரியும்படி அறிவித்துக் கதறியழும்படி செய்வித்துப் பிள்ளை யழுவதுகண்டு உடனே பெறும்போதுற்ற வருத்தத்தையுந் தாயானவள் மறந்து உட்கி ஆவிசோரும்படி யுள்ளே நடுங்கி மிகுந்தோங்கிய அன்பினாலே அவள் சிந்தையிரங்கி யுருகப் பச்சுடம்பி லிருந்த இரத்தஞ் சிவப்பு மாறி வெண்ணிற அமுதமாய்க் கொங்கையில் வந்து சுரக்கிற அந்தத் தீஞ்சுவைப் பாலைப் பிள்ளை வாய்வைத்துக் குடித்து முகஞ்செழித்திருப்பது கண்டு தாய் மகிழ்ந்திருக்கும்படி செய்வித்து இப்படிப் பிள்ளையாசை யென்கிற பெருந்

பாலைப் பசும்பதத்தும் பாலனும் அப்பதத்தும்
நாளுக்கு நாட்சகல ஞானத்து—மூள்வித்துக்
கொண்டாள ஆளக் கருவிகொடுத் தொக்கநின்று
பண்டாரி யான படிபோற்றி—தண்டாத
௨௫ புன்புலால் போர்த்த புழுக்குரம்பை மாமனையில்
அன்புசேர் இன்றனகட் டைந்தாக்கி—முன்புள்ள
உண்மை நிலைமை ஒருகால் அகலாது
திண்மை மலத்தாற் சிறையாக்கிக்—கண்மறைத்து
மூலஅருங் கட்டில்உயிர் மூடமாய் உட்கிடப்பக்
கால நியதி யதுகாட்டி—மேலோங்கு
முந்திவியன் கட்டில்உயிர் சேர்த்துக் கலைவித்தை
யந்த அராக மவைமுன்பு—தந்த
தொழிலறி விச்சை துணையாக மானின்
எழிலுடைய முக்குணமும் எய்தி—மருளோடு

---

கயிற்றாற் கட்டிச் சகலவுயிர்களுக்குங் குழந்தைகளை வளர்க்கும்படிக்கு ஆன்மாக்கள்தோறும் நேசத்தை வைத்தருளிய நெறி எம்மை இரக்ஷிக்க.

22—24. ஆசற்ற - படிபோற்றி.

(உரை) தாயன்பாயிருந்து இரக்ஷித்த கர்த்தா இப்படி ஜநித்து வரும் உயிர்களுக்குக் கருப்பத்தி லிருக்கிற பசும்பருவத்தும் பாலனு யிருக்கிற அந்தப்பருவத்தும் நாளுக்குநாள் பரிணமித்து வளரும் பால குமார விருத்தப்பருவத்துஞ் சகலாவத்தைப் படுத்திப் பருவத்துக் கேதுவான கலாதிஞானத்தைக் கொடுத்துச் செயலற்ற உயிர்கள் வாங் கிக்கொள்ள ஆள்வதற்கேற்ற முப்பத்தாறுவகைக் கருவிகளையுங் கொடுத்து உயிர்க்குயிராய் இமைப்பொழுதும் நீங்காமல் நின்று பண் டாரியாய் உயிர்க்கு ஏவல் செய்யும் கிருபை எம்மை இரக்ஷிக்க.

24—35. தண்டாத - அறம்போற்றி.

(உரை) கர்த்தா பண்டாரிபோல நின்று தத்துவங்களைக் கூட்டிக் இரக்ஷிக்கும்படி எப்படியென்னில், நீங்காமற் புன்புலால் நாறுந் தோல் போர்த்த புழுக்கூடான சரீரமாகிய பெரியமனைக்குள் கிருபையி னாலே துரியாதீதந் துரியஞ் சுழுத்தி சொப்பனம் சாக்கிரமென்னும் பெயரையுடைய ஐந்து கட்டாக்கி, ஆன்மாவுக்கு அநாதியிலே பொருந்

மன்னும் இதயத்திற் சித்தத்தாற் கண்டபொருள்
இன்ன பொருளென் றியம்பவொண்ணா-அந்நிலைபோய்க்
கண்டவியன் கட்டிற் கருவிகளீ ரைந்தொழியக்
கொண்டுநிய மித்தற்றை நாட்கொடுப்பப்—பண்டை
இருவினையால் முன்புள்ள இன்பத்துன் பங்கள்
மருவும்வகை அங்கே மருவி—உருவுடனின்
றோங்கு நுதலாய ஓலக்க மண்டபத்திற்
போங்கருவி யெல்லாம் புகுந்தீண்டி—நீங்காத
முன்னை மலத்திருளுள் மூடா வகையகத்துட்
டுன்னும்இருள் நீக்குஞ் சுடரேபோல்—அந்நிலையே
சூக்கஞ் சுடருருவிற் பெய்து தொழிற்குரிய
ராக்கிப் பணித்த அறம்போற்றி—வேட்கைமிகும்

---

தின உண்மை நிலைமையான ஆணவமல மறைப்புச் சற்றும் நீங்காமல் திண்மையாய் உயிரைச் சிறைப்படுத்தி நிற்கும் மூலாதாரமாகிய வீட்டில் அதீதப்பட்டு உயிர் மூடமாய் உட்கிடப்ப அவ்விடத்தில் இளைப்பாறுமட்டுங் காலத்தை நியதியினால் நிறுத்தி, அப்பால் மேலே ஓங்கியிருக்குந் துரியமான நாபித்தான வீட்டில் உயிரைப் பிராணவாயுவுடனே கூடச்சேர்த்து அவ்விடத்திலே கலை வித்தை இராகத்தினால் முன்னே ஆன்மாவினுடைய தொழில் அறிவு இச்சை மூன்றையும் எழுப்பி அதற்குத் துணையாகப் பிரகிருதிமாயையி லுண்டான அழகு பொருந்திய சாத்துவிக ராசத தாமத மென்னும் முக்குணங்களையுஞ் சேர்த்து, அப்பால் மேலே சுழுத்தி வீடாகிய இருதயத்தானத்திற் சித்தக்கருவியுடனே கூட்டி, அவ்விடத்திற் சித்தத்தாற் கண்ட பொருள் இன்னபொருளென் றறியாமல் மயங்கி நின்ற உயிரைச் சொப்பனவீடாகிய கண்டத்தானத்திற் சேர்த்து அவ்விடத்திலே சத்தாதியைந்தும் வசனாதியைந்தும் அந்தக்கரணங்கள் நான்கும் வாயுக்கள் பத்தும் புருடனுமான இருபத்தைந்து கருவியுங் கூட்டி முன்னே செய்த இருவினைக்கீடாக முன் சாக்கிரத்திலே இன்ப துன்பத்தைப் புசிப்பித்த முறைமைபோலச் சொப்பனத்திலு மிருவினைப் போக முண்டானதுமறிந்து சுத்ததத்துவங்களினாற் பிரேரித்துப் புசிப்பித்து, பின்பு அதற்கு மேலாய தூலதேகத்தின்கண் வளர்ந்து நிற்கிற சாக்கிர வீடென்னும் நுதற்றானமாகிய ஓலக்கமண்டபத்

உண்டிப் பொருட்டால் ஒருகால் அவியாது
மண்டிஎரி யும்பெருந்தீ மாற்றுதற்குத்—திண்டிறல்சேர்
வல்லார்கள் வல்ல வகையாற் றொழில்புரித
லெல்லாம் உடனே ஒருங்கிசைந்து—சொல்காலே
முட்டாமற் செய்வினைக்கு முற்செய்வினைக் குஞ்செலவு
பட்டோலை தீட்டும் படிபோற்றி—நட்டோங்கும்

தின்முன் கேவலாவத்தைக்குக் கூடாமல் நின்ற பூதங்களைந்தும் புருடதத்துவ நீங்கலாக நின்ற வித்தியாதத்துவ மாறுஞ் சிவதத்துவ மைந்தும் ஆகப் பதினாறும் முன் சாக்கிரத்தி லிருந்த ஞானேந்திரிய மைந்துங் கன்மேந்திரிய மைந்துஞ் சொப்பனத்திலிருந்து வந்த இருபத்தைந்து கருவியும் மற்றப் புறக்கருவிகள் நாற்பத்தைந்தும் ஆகத் தொண்ணூற்றாறு கருவிகளையும் பொருத்தி ஜீவிக்கும்படி செய்வித்து, முன்னே விட்டு நீங்காமல் ஐந்தவத்தையினும் மறைந்து நின்ற ஆணவ மல இருள் கூடாதபடி மனையிலே நெருங்கியிராநின்ற இருளை நீக்கும் விளக்கைப்போலச் சூக்குமாதி வாக்குடனே கூடிப் பிரகாசித்து நிற்குஞ் சகலாவத்தையில் உயிரை நிறுத்திக் கன்மத்துக் கேதுவான சத்தாதி விடயங்களைக் காட்டி ஆன்மாக்கள் யானெனதென்று கர்ஜித்து நின்றவர்கள் வெவ்வேறு தொழிற்குரியராம்படி செய்விக்குஞ் சிவ தருமம் எம்மை இரக்ஷிக்க.

35—38. வேட்கைமிகும் - படிபோற்றி.

**(உரை)** கர்த்தா சகலாவத்தையிற் கருவிகூட்டி முடிக்கும் உபகாரத்தை மறந்து ஆன்மாக்கள் பிரபஞ்ச ஆசை மிகுந்து புசிப்புநிமித்தம் ஒருகணநேரமாகிலுங் கெடாமல் வயிற்றிலே மண்டி யெரிந்துகொண்டிருக்கிற வடவாமுகாக்கினிபோன்ற பசியைத் தணிக்கும் பொருட்டுத் திண்ணி● ஆங்காரப் பலன்களால் அவரவர் வல்லமைக்கேற்ற தொழில்கள் செய்யுமிடத்து அவர்களுக்குத் தோன்றாமல் உடனிகழ்ச்சியான ஒருமைப்பாடாய்க் கூடி நின்று அவரவர் நினைவின்படி செய்வித்துக் கொடுத்து ஆன்மாக்கள் யானெனதென்று இடையறாது செய்யும் வினைமிகுதியான ஆகாமியத்துக்கும் முன்செய்த ஆறத்துவாவிலுங் கட்டுப்பட்டிருக்கிற சஞ்சிதத்துக்கும் அதிலே பாகப்பட்டுப் புசிப்புக்கு வந்த பிராரத்துவச் செலவுக்கும் அவரவர் கணக்கப்பிள்ளையாயிருந்து பட்டோலை யெழுதி யொப்பிக்குங் கருணை இரக்ஷிக்க.

இந்நிலைமை மானுடருக் கேயன்றி எண்ணிலா
மன்னுயிர்க்கும் இந்த வழக்கேயாய்—முன்னுடைய
நாள்நாள் வரையில் உடல்பிரித்து நல்வினைக்கண்
வாணாளின் மாலாய் அயனாகி—நீள்நாகர்
வானாடர் கோமுதலாய் வந்த பெரும்பதத்து
நானா விதத்தால் நலம்பெறுநாள்—தான்மாள
வெற்றிக் கடுந்தூதர் வேகத் துடன்வந்து
பற்றித்தம் வெங்கோவின் பாற்காட்ட—இற்றைக்கும்
இல்லையோ பாவி பிறவாமை என்றெடுத்து
நல்லதோர் இன்சொல் நடுவாகச்—சொல்லிஇவர்
செய்திக்குத் தக்க செயலுறுத்து வீரென்று
வெய்துற் றுரைக்க விடைகொண்டு—மையல்தருஞ்

---

38—53. நட்டோங்கும் - மறம்போற்றி.

**(உரை)** கர்த்தா ஆன்மாக்கள்செய்த இருவினைக்குங் கணக்கெழுதினபடிக்குப் புண்ணியபாவத்துக்குள்ள பலன்களைக் கூட்டுகிறது எப்படியென்னில், பொருந்தி மிகுந்த இருவினைமுறைமை பூமியிலுள்ள மானுடருக்கே யல்லாமலும் எண்ணில்லாத தனுக்களிலே பொருந்தியிருக்கிற பல உயிர்களுக்கும் இந்த முறைமையாக வினைகளை நிச்சயித்தறிந்து முன் அமைத்த ஆயுள் முடிவில் உடல்களைப் பிரித்து நல்வினை பாகப்பட்ட உயிர்களையெல்லாம் பூதசரீரமான திவ்ய சரீரத்துடனே காலநீட்டிப்பாய் வாழ்ந்திருக்கும்படிக்கு விஷ்ணுவுலகத்தில் விஷ்ணு ரூபமாயும் பிரமலோகத்திற் பிரமரூபமாயுந் தேவலோகத்தில் தேவேந்திரரூபமாயுந் தேவர்களாயும் வந்த பெரிய பதப்பிராப்திகளிலே நானாவிதமான போகங்கள் புசித்திருக்கும்படி செய்வித்தும், பூமியிலே இராஜ ஐசுவரியத்துடனே வாழும்படி செய்வித்து மிருக்கும் நாராயண(?)புண்ணிய கன்மபலன் புசித்து முடிந்து பாவகன்மபலன் புசிக்கும் நாள் அடுத்தவுடனே அங்கங்கு வாழ்ந்திருந்த உயிர்கள் அந்தந்தத் தேகத்தை விட்டு மாளும்படிக்குக் கர்த்தாவினுடைய ஆக்கினையினாலே வெற்றி பொருந்திய யமதூதர்கள் வேகத்துடனே வந்து பாசத்தினாற் கட்டிப் பிடித்துக்கொண்டுபோய்த் தங்கள் யஜமானாகிய தருமராஜாவின் முன்புவிடத் தருமராஜர் வந்து ஆன்மாக்களைப் பார்த்து இரங்கி, 'பாவிகாள்! உங்களுக்கு இற்றைவரைக் குள்ளாகப் பிறவாநெறி பெற

சரு செக்கி னிடைத்திரித்துந் தீவாயி லிட்டெரித்துந்
தக்கநெருப் புத்தூண் டழுவுவித்தும்—மிக்கோங்கு
நாராசங் காய்ச்சிச் செவிமடுத்தும் நாஅரிந்தும்
ஈரா உன் ஊனைத்தின் என்றடித்தும்—போமால்
அங்காழ் நரகத் தழுத்துவித்தும் பின்னுந்தம்
வெங்கோபம் மாறாத வேட்கையராய்—இங்கொருநாள்
எண்ணிமுதற் காணாத இன்னற் கடுநரகம்
பன்னெடுநாட் செல்லும் பணிகொண்டு—முன்நாடிக்
கண்டு கடன்கழித்தல் காரியமாம் என்றெண்ணிக்
கொண்டுவரு நோயின் குறிப்பறிவார்—மண்டெரியிற்
ருo காய்ச்சிச் சுடவறுக்கக் கண்ணூரிக்க நன்னிதியம்
ஈய்த்துத்தாய் தந்தைதமர் இன்புறுதல்—வாய்த்தநெறி

வேண்டுமென்று கர்த்தாவை விரும்பும் அறிவு பிறக்கவில்லையோ' என்று நல்ல இன்சொல்லாக நடுவுநிலைமையாய்ப் பேசிப் பின்பு அவர்கள் செய்த பாவத்துக்கேற்ற செயல்களைச் செய்யுமென்று கோபத்துடனே கிங்கரர்களைப் பார்த்துச் சொல்ல, விடைபெற்றுப் பூதசரீரமான யாதனா சரீரத்திலே உயிரை நிறுத்தித் துன்பமுறும்படிக்குச் செக்கிலேயிட் டாட்டியும், தீவாயிலிட் டெரித்தும், பெரிய நெருப்புத் தூணைத் தழுவிக் கிடக்கும்படிசெய்தும், மிகுந்து நீண்டிருக்கிற நாராசங்களைக் காய்ச்சிச் செவியிலே செலுத்தியும், நாக்கைக் கருவிகொண் டறுத்தும், அவரவர் ஊனை அவரவர் தின்னும்படிக்கு அரிந்துகொடுத்து அடித்தும், போராதபடி ஆழ்ந்த நரகங்களிலே அழுத்துவித்தும், பின்னுந் தங்களுடைய கடுங்கோப மாறாத இச்சையுடையராய் அவற்றிலே ஒருநாள்போல் துன்பத்தைக் கொடாநின்ற கொடிய நரகங்களிலே பலநெடுநாள் செல்லுமட்டும் இயமகிங்கரர்கள் பணிசெய்யக் காருண்ணிய வடிவாகிய கர்த்தா சிற்றுயிர்களை யமகிங்கரர்களிடத்திலே காட்டிக்கொடுத்து அவர்கள் துக்கப்படுகிறதைப் பார்த்திருப்பானேனென்னில், உலகத்திலே தந்தை தாயான பேர்கள் பிள்ளையினுடைய நோய் மிகுதியை உள்ளே நாடியறிந்து நோய்தீரும்படிக்கு அதற்கேற்ற முறைமை செய்வது கடனென்று நினைந்து பிள்ளையை நோயறிந்து மருந்துகொடுத்துத் தீர்க்கும் வைத்தியத்தொழில் செய்கிறவனிடத்திலே ஒப்புவித்து, அவன் இருப்பு நாராசங் காய்ச்சிச் சுடவும்,

ஓடியதே ரின்கீழ் உயிர்போன கன்றுமேல
நீடுபெரும் பாவம்இன் றே நீங்குமென — நாடித்தன்
மைந்தனையும் ஊர்ந்தோன் வழக்கே வழக்காக
நஞ்சனைய சிந்தை நமன்தூதர் — வெஞ்சினத்தால்
அல்ல லுறுத்தும் அருநரகங் கண்டுநிற்க
வல்ல கருணை மறம்போற்றி — பல்லுயிர்க்கும்
இன்ன வகையால் இருவினைக்கண் நின்றருத்தி
முன்னைமுத லென்ன முதலில்லோன் — நல்வினைக்கண்
ருரு எல்லா உலகும் எடுப்புண் டெடுப்புண்டு
செல்காலம் பின்நரகஞ் சேராமே — நல்லநெறி

---

சத்திரமிட்டு அறுக்கவும், கண்படலத்தை உரிக்கவும், இப்படிப் பலகிரியையுஞ் செய்யப் பிள்ளை வருத்தப்பட்டாலும் நோய்தீர்ப்பதையறிந்து அந்த வைத்தியனுக்கு நல்ல திரவியமுதலான வெகுமானம் பண்ணிச் சந்தோஷத்துடனே அவர்கள் கண்டு நிற்பதுபோலவும், மனுச்சக்கிரவர்த்தியான சோழராஜா தான் அரிய தவம் பண்ணிப் பெற்ற அருமையான ஒரு மகன் திருவாரூர்த் தெருவழியே தேரேறிப் போம்பொழுது மாயமாகத் தேர்க்காலில் வீழ்ந்து இறந்த பசுவின் கன்றினிமித்தம் அந்தப் பாவந் தீரும்படிக்கு எத்தனைபேர்கள் மாறுபாடாய்த் தடுக்கவுங் கேளாமற் பிள்ளையைக் கன்று தங்கினபடிக்குத் தேர்க்காலிலே போட்டு நசுக்கிப் போடவேண்டு மென்று துணிந்து தேரிலே தாய்ப்பசுவை வைத்து ஊர்ந்து கொன்றது மகனையமன்பிடித்து வருத்தாதபடிக்குச் செய்த கிருபையே யாகையால் அந்த வழக்குப்போலவும், விடம்போன்ற சிந்தையையுடைய நமன் தூதர் மிகுந்த கோபத்துடனே பாவஞ்செய்த உயிர்களைக் கொடிய நரக வாதனைப் படுத்துவதைச் சகல உயிர்களுக்குந் தந்தையுந் தாயுமாயிருக்கிற சிவமுஞ் சத்தியும் மலநோய் தீர்ந்தாற் போதுமென்று சந்தோஷத்துடனே கண்டு நிற்கிற வல்லபமான கருணைமறம் எம்மை இரக்ஷிக்க.

53—59. பல்லுயிர்க்கும் - தரம்போற்றி.

**(உரை)** கர்த்தா இங்ஙனஞ் சொன்ன ஒன்பது வகையினாலும் இரக்ஷிக்கப்பட்ட ஆன்மாக்களுக்குப் பெத்தகாலம் முடிவாகுமட்டும் இருவினைப் பலன்களை அவன் அவள் அது முன்னிலையாக நின்றருத்

எய்துவதோர் காலம்தன் அன்பரைக்கண் டின்புறுதல்
உய்யும் நெறிசிறிதே உண்டாக்கிப்—பையவே
மட்டாய் மலராய் வருநாளில் முன்னைநாள்
மொட்டாய் உருவாம் முறைபோலக்—கிட்டியதோர்
நல்ல பிறப்பிற் பிறப்பித்து நாடும்வினை
எல்லை யிரண்டும் இடையொப்பிற்—பல்பிறவி
அத்தமதி லன்றே அளவென்று பார்த்திருந்து
சத்தி பதிக்கும் தரம்போற்றி—முத்திதரு
கூ0 நன்னெறியின் ஞானகலர் நாடுமலம் ஒன்றினையும்
அந்நிலையே உள்நின் றறுத்தருளிப்—பின் அன்பு

---

தித் தனக்குமேல் ஒரு கர்த்தா இல்லாத சகல புவனகர்த்தாவாகிய சிவன் அந்த இருவினைகளுக்கு இருப்பிடமான மாயாவுலகங்களை எடுப்புண்டு எடுப்புண்டு மாறிமாறி வரும்படிக்கு ஆதியாய் அநாதிதொடுத்துச் சிருஷ்டித்துந் திதித்துஞ் சங்கரித்துந் திரோபவித்தும் அநுக்கிரகித்துந் தமது சத்தியினாலே பஞ்சகிருத்தியங்களைச் செய்வித்தும் மலபரிபாகப்பட்டதை அறிந்து பின் நரகத்திற் செல்லும் பெத்தத்தை நீக்கி ஆன்மாக்களுக்கு முத்திக் காலத்தை ஏற்படுத்தவேண்டித் தனக்கு அன்பராகிய மெய்யடியார்களைக் கண்டவுடனே தன்னைக் கண்டதுபோல அந்த ஆன்மாக்கள் இன்புற்று அவர் ஏவின பணி விடைகேட் டுய்யும்படிக்குச் சிறிது நல்லவழியை யுண்டாக்கிக் காட்டி, அதின் நல்வழியே சிவபுண்ணியமானது புத்திபூர்வத்தினும் அபுத்திபூர்வத்தினும் உபாயச் சரிதையாதியிலும் உண்மைச் சரிதையாதியிலுமாகக் கிரமத்திலே செய்யப்படுத்தி, அந்தமட்டாய் மலரவிருக்கிற அரும்புப் பருவம் நீங்கிய வரும்பருவத்துக்கடுத்த முதனாள் மொட்டாயிருக்கிற மலர்போல் மலம் பரிபாகம் பிறந்த தன்மை சமீபத்திற் கண்டு ஒப்பற்ற நல்ல சிவசமயத்திற் பத்திமிகுந்த இடத்திலே பிறப்பித்து காட்டப்பட்ட இருவினையும் ஏககாலத்திலே இரண்டுந் தராசு நுனிபோலச் சமனான பருவத்திலே பலபிறவியும் அந்தமாம்படிக்குத் தமது தீவிரதரம்பொருந்தின அருட்சத்தியை அவ்வுயிர்களின் மலம் நீங்கும்படிக்குப் பதிக்குந் தரம் எம்மை இரக்ஷிக்க.

59—71. **முத்திதரும் - குணம்போற்றி.**

**(உரை)** இருவினையொப்பு மலபரிபாகம் சத்திநிபாதம் பெற்ற பக்குவான்மாக்களுக்குக் கர்த்தா ஆசாரியமூர்த்தமாய் அநுக்கிரகம்

மேவா விளங்கும் பிரளயா கலருக்குத்
தேவாய் மலகன்மந் தீர்த்தருளிப்—பூவலயந்
தன்னின்று நீங்காச் சகலர்க் கவர்போல
முன்னின்று மும்மலந்தீர்த் தாட்கொள்கை—அன்னவனுக்
காதிகுண மாதலினால் ஆடுந் திருத்தொழிலுஞ்
சோதி மணிமிடற்றுச் சுந்தரமும்—பாதியாம்
பச்சை யிடமும் பவளத் திருச்சடைமேல்
வைச்ச நதியும் மதிக்கொழுந்தும்—அச்சமற
ஆடும் அரவும் அழகார் திருநுதல்மேல்
நீடுருவ வன்னி நெடுங்கண்ணும்—கேடிலயங்
கூட்டுந் தமருகமுங் கோல எரியகலும்
பூட்டரவக் கச்சும் புலியதளும்—வீட்டின்ப

---

பண்ணுகிற முறைமை எப்படியென்னில், முத்தியைக் கொடுக்கும் நல்வழியையுடைய விஞ்ஞானகலர்க்கு அவர்கள் பற்றியிருக்கிற ஆணவ மல மொன்றினையும் அவர்களறிவுக்குட் பேரறிவாய்ப் பிரகாசித்துத் தோன்றி நீக்கி அருள்வடிவாக்கி ஞேயத்திலழுந்தும்படி கடாக்ஷிப்பர். பின்பு பொருந்திவிளங்காநின்ற பிரளயாகலருக்குத் திருவுருக் காணும்படிக்கு மானும் மழுவுஞ் சதுர்ப்புஜமுங் காளகண்டமுந் திரிநேத்திரமுமுடைய திருமேனிகொண்டிருந்து அவர்களைப் பற்றியிருக்கிற ஆணவ மலங் கன்மமல மிரண்டையும் நீக்கி அருள்வடிவாக்கி ஞேயத்தி லழுந்தும்படி கடாக்ஷிப்பர். அசுத்தமாயையிற் றோன்றிய பூலோகத்தை விட்டுநீங்காமலிருக்கிற சகலருக்கு அவர்களைப்போல மானுடச்சட்டை சாத்தி, மானைக்காட்டி மானைப்பிடிப்பார்போல, முன்னின்று தரிசனை கொடுத்து, அவர்கள் பற்றியிருக்கிற ஆணவம் கன்மம் மாயையென்னும் மூன்று மலங்களையுந் தீக்ஷாக்கிரமங்களினாலே தீர்த்து அருள்வடிவாக்கி அடிமையாக்கிக்கொள்ளுதல் அந்தக் கர்த்தாவுக்கு ஆதிகாலத்திலே யுண்டான குணமாதலால், திருச்சிற்றம்பலத்தின்கண்ணே நின்றாடுகிற திருநடனத்தொழிலும், பிரகாசம் பொருந்திய நீலமணி போன்று இலங்குகிற காளகண்டமும், திருமேனியிற்பாதியாய்ப் பச்சை வடிவுகொண்டிலங்குஞ் சிவகாமிதங்கிய இடப்பாகமும், பவளக்கொடி படர்ந்து கிடப்பதுபோன்ற திருச்சடாபாரத்தின்மேல் தரித்திருக்கிற கங்கையும், பாலசந்திரப் பிரபையும், வெருவும்படிக்குப் படம் விரித்

வெள்ளத் தழுத்தி விடுந்தாளி னும்அடியா
ருள்ளத்தி னும்பிரியா ஒண்சிலம்பும்—கள்ளவினை
வென்று பிறப்பறுக்கச் சாத்தியவீ ரக்கழலும்
ஒன்றும்உருத் தோன்றாமல் உள்ளடக்கி—என்றும்
இறவாத இன்பத் தெமைஇருத்த வேண்டிப்
பிறவா முதல்வன் பிறந்து—நறவாருந்
தாருலா வும்புயத்துச் சம்பந்த நாதனென்று
பேரிலா நாதன்ஒரு பேர்புனைந்து—பாரோர்தம்
உண்டி உறக்கம் பயம்இன்பம் ஒத்தொழுகிக்
கொண்டு மகிழ்ந்த குணம்போற்றி—மிண்டாய

தாடுகிற சர்ப்பமும், அழகுமிகுந்த திருநுதல் நடுவில் மேல்நோக்கி நீண்டுகிடந்திலங்கும் அக்கினி நேத்திரமும், வலக்கையிற் பிடித்திருக்கிற கேடில்லாத லயத்துடனே முழங்குந் தமருகமும், அழகுபொருந்திய இடக்கையிற் பிடித்திருக்கிற அக்கினி குண்டமும், அரையிலே கட்டியிருக்கிற ஐந்தலையரவக் கச்சும், புள்ளிபொருந்திய புலித்தோலுடையும், பக்குவான்மாக்களை மோட்சமாகிய பேரின்பவெள்ளத் தழுத்துதற் கூன்றின பாதத்திலும் அடியாருள்ளத்திற் கலந்து இன்ப பூரணமாயிருக்கிற ஞானகுஞ்சித பாதத்தினும் பிரியாமற் றரித்திருக்கிற திருவருட்பிரகாசம்பொருந்திய சிலம்பும், உயிர்களைச் சோரத்தனமாய்க் களவுகொண்டு தன்வசப்படுத்துகிற முன்னை வினையை வென்று பிறவித்துன்பங்களை யறுப்பதற்கு மலவைரி நாமென்று முழந்தாளில் தரித்துக்கொண்டிருக்கிற வீரகண்டாமணியும் இவைகளொன்றும் உருத்தோன்றாதபடி உள்ளேயடக்கி ஒளித்துக்கொண்டு, என்றும் முடிவில்லாத பேரின்ப மோக்ஷத்தில் எம்போல்வாரையும் உறுத்த வேண்டிப் பிறவாமுதல்வன் பிறந்து வந்தானென்று அதிசயமாய்ச் சொல்லும்படிக்குத் திருமேனிகொண்டு, தேன்பொருந்திய செங்கழுநீர்மாலையுலாவும் புயத்தையுடைய மறைஞானசம்பந்த நாதனென்று ஒருபெயருஞ் சுபாவத்திலில்லாத நாதன் ஒரு திருப்பெயருஞ் சாத்திக்கொண்டு பூமியிலுள்ளவர்களைப்போல உண்பதும் உறங்குவதும் அஞ்சுவதும் விடயபோகம் இன்பமுறுவதும் ஒத்தொழுகிக்கொண்டெழுந்தருளி மகிழ்ந்திருந்த குணம் எம்மை இரக்ஷிக்க.

*ஆறு சமயப் பொருளும்அறி வித்தவற்றிற்*
*பேறின்மை எங்களுக்கே பேறாக்கித்—தேறாத*
*சித்தந் தெளியத் திருமேனி கொண்டுவரும்*
*அத்தகைமை தானே அமையாமல்—வித்தகமாஞ்*
*சைவ நெறியிற் சமய முதலாக*
*எய்தும் அபிடேகம் எய்துவித்துச்—செய்யதிருக்*
*கண்ணருளால் நோக்கிக் கடியபிறப் பாற்பட்ட*
*புண்ணும் இருவினையும் போய்அகல—வண்ணமலர்க்*
*கைத்தலத்தை வைத்தருளிக் கல்லாய நெஞ்சுருக்கி*
*மெய்த்தகைமை யெல்லாம் விரித்தோதி—ஒத்தொழுகு*
*சேண்ஆர் இருள்வடிவும் செங்கதிரோன் பால்நிற்பக்[ம்*
*காணா தொழியும் கணக்கேபோல்—ஆணவத்தின்*
*ஆதி குறையாமல் என்பால் அணுகாமல்*
*நீதி நிறுத்தும் நிலைபோற்றி—மேதக்கோர்*

---

71—78. *மிண்டாய - நிலைபோற்றி.*

**(உரை)** *இப்படி மானுடரைப்போலத் திருமேனி கொண்டு ஆசாரியமூர்த்தமாய்ப் பெண்ணாகடத்தின்கண் எழுந்தருளியிருந்து, எங்களுக்கு அகங்காரம்பொருந்திய புறச்சமயப் பொருள்களெல்லாம் அறிவித்து, அதிலே ஒரு பிரயோஜனமுமில்லையென்று அறிகிறதிடமே பேறாகும்படி செய்வித்து, தேறாமலிருந்த சித்தந் தெளியும்படிக்குத் திருமேனி தரிசனை கொடுத்தருளிய அந்தத் தகைமையும் போகாமல் மேம்பாடாகிய மெய்கண்ட சந்தானச் சுத்தசைவநெறியில் விட்ட குறை யறிந்து சமய விசேட நிருவாணம் பொருந்தப்பட்ட அபிடேகமென்னு நான்கு வகைத் தீக்ஷையும் பண்ணி, சிவந்த தாமரைமலர் போன்ற திருக்கண்ணருளினாற் பார்த்து, துன்பப்பிறப்பினாற் பட்ட புண்ணுடம்புத் துன்பமும் இருவினைத்துன்பமும் உயிரைவிட்டு நீங்கும்படிக்கு அழகு பொருந்திய தாமரைமலர்போன்ற திருக்கைத்தலத்தைச் சிரசிலே வைத்தருளி, கற்போன் றிருந்த நெஞ்சை அக்கினியைச் சேர்ந்த மெழுகுபோல உருக்கி, திரிபதார்த்த மெய்த்தகைமைப் பொருள்களெல்லாம் விரித்தோதி யுபதேசித்து, ஒற்றுமையாக ஆகாயத்தை மறைத்த பூதவிருள்வடிவானது அந்த ஆகாயத்திற் சிவந்த சூரியன் உதயமானவுடனே பூதவிருட்பிரகாசமாய் மறைந்து*

செய்யுஞ் சரியை கிகழ்கிரியா யோகத்தால்
எய்துஞ்சீர் முத்திபதம் எய்துவித்து—மெய்யன்பாற்
அ௦ காணத் தகுவார்கள் கண்டால் தமைப்பின்பு
நாணத் தரும்ஞான நன்னெறியை—வீணே
எனக்குத் தரவேண்டி எல்லாப் பொருட்கும்
மனக்கும் மலரயன்மால் வானோர்—நினைப்பினுக்குந்
தூரம்போ லேயணிய சுந்தரத்தாள் என் தலைமேல்
ஆரும் படிதந் தருள்செய்த—பேராளன்
தந்தபொருள் ஏதென்னில் தான்வேறு நான்வேறாய்
வந்து புணரா வழக்காக்கி—முந்திஎன்றன் [குங்
உள்ளம்என் றும் நீங்கா தொளித்திருந்து தோன்றிநிற்
கள்ளம்இன்று காட்டும் கழல்போற்றி—வள்ளமையால்

---

நீங்க ஆகாயம் சூரியவொளி வடிவாகி நின்ற முறைமைபோல உப தேசித்த ஞானப்பிரகாசத்தைப் பற்றி மும்மலமும் நீங்கி ஆன்ம போதம் அருளி லடங்கச்செய்து, மலம்ஆன்மபோதத்தையும் பற்றாமல் தன்னுடைய அநாதி நித்தியமுங் கெடாமல் நீதியாக நிறுத்தின நிலைமை எம்மை இரக்ஷிக்க.

79—84. மேதக்கோர் - கழல்போற்றி.

(உரை) உலகப்பற்று அற மேம்பாட்டுடனே தாதமார்க்கஞ் சற்புத்திரமார்க்கஞ் சகமார்க்கஞ் சன்மார்க்கமென்னும் நான்கு வழியினும் நின்று உண்மைச் சரிதைகிரியாயோகங்களை விதிதப்பாமல் அநுட்டித்துச் செய்த அடியார்களுக்குச் சிறப்பு மிகுந்த பதமுத்தியான சாலோக சாமீப சாரூபம் எய்தும்படி செய்வித்து அதனால் ஞானதாக முற்ற அடியார்கள் அநுக்கிரகத்தைப் பெற்று மெய்யன்பினாலே சிவரூபத்தில் ஆன்மதரிசனை பண்ணிச் சிவதரிசனத்தில் ஆன்மாவின் தன்னியல்பை யறிந்து பின்பு பெத்தமுத்தி இரண்டினும் உபகரித்து இரக்ஷிக்கிற கர்த்தாவினுடைய கருணையை மறந்து நாம் ஒரு முதலென்றிருந்தோமேயென்று லஜ்ஜைப்பட்டு நாணிப் பதைப்பற அருளினமூந்தி இரண்டற் றநுபவிக்குஞ் சிவாநுபவத்தைத் தடுமாறியானாலுஞ் சிவசிவாவென்று நினையாத எனக்கும் வீணே இரங்கி அநுக்கிரகம் பண்ணவேண்டி வேதாகமபுராண சாத்திரங்களிற் சொல்லப்பட்ட எல்லாப் பொருளுக்கும் மனத்துக்குந் தாமரைமலரி

அரு தன்னைத் தெரிவித்துத் தன்றாளி னுட்கிடந்த
என்னைத் தெரிவித்த எல்லையின்கண்—மின்னாரும்
வண்ணம் உருவம் மருவுங் குணமயக்கம்
எண்ணுங் கலைகாலம் எப்பொருளும்—முன்னமெனக்
கில்லாமை காட்டிப்பின் பெய்தியவா காட்டிஇனிச்
செல்லாமை காட்டுஞ் செயல்போற்றி—எல்லாம்போய்த்
தம்மைத் தெளிந்தாராய்த் தாமே பொருளாகி
எம்மைப் புறங்கூறி இன்புற்றுச்—செம்மை

---

னெழுந்தருளி யிருக்கும் பிரமா விஷ்ணு முதலாகிய தேவர்கள் நினைப்புக்குந் தெரியப்படாத தூரம்போல நின்றும் ஜடசித்துக்களிடத்தினும் அணித்தாய் நிறைந்திருக்கிற அழகு பொருந்திய சீர்பாத கமலத்தை அடியேன் சிரசின்மீதிருந்து பிரகாசிக்கும்படிக்கு வைத்துப் பெரிய மஹாதேவரென்னும் பெயரையுடைய மறைஞானசம்பந்த ஞானுசாரியர் எனக்கு அநுக்கிரகம் பண்ணிய பொருள் ஏதென்னில், தான்வேறு நான்வேருய் வந்து பொருந்தினதில்லை யென்னும் வழக்கை யறிவித்து, அநாதியே தொடுத்து உன்னிடத்திலே யொளித்திருந்து நீ நம்மைக் காணுதிருக்க நாம் என்றும் உன்னைக் கண்டு கொண்டிருந்தோ மென்கிற கள்ளத்தை இப்போது உயிர்க்குயிராய்ப் பிரகாசித்துநின் றறிவித்த பாதமானது எம்மை இரக்ஷிக்க.

84—97. வள்ளமையால் - செயல்போற்றி.

(உரை) வளப்பமிகுந்த கிருபையினுற் கர்த்தா தன்னைத் தெரிவித்துத் தன் பாததாமரையான திருவருளுக்குள்ளே பிரியாமல் என்றுங் கிடந்த என்னையுந் தெரிவித்த எல்லைக்கண் மின்போன்று தோன்றி யழிகிற வண்ணத்தையுடைய தேகமுந் தேகத்தைப் பொருந்தியகுணமயக்கங்களும் அறிவை விளக்கப்பட்ட கலைகால முதலாகிய தத்துவங்களும் முன்னில்லாத கேவலாவத்தையை முன்னே அறிவித்துப் பின்பு தேகமுதலிய கருவிகாணுதிகளுங் கூடின சகலாவத்தையையும் அறிவித்து இனி அருளை விட்டுத் தேகமுதலான கருவிகாணுதிகளிற் செல்லாத சுத்தாவத்தையையும் அறிவித்த செயல் எம்மை இரக்ஷிக்க.

87—95. எல்லாம் - போற்றிசைப்பேன் யான்.

(உரை) எல்லாத் தத்துவங்களையும் பொய்யென்று கண்டு நீங்கித் தம்மைத் தெளிந்தோமென்றும், நமக்கு மேலே வேறொரு பொரு

அவிகாரம் பேசும் அகம்பிரமக் காரர்
வெளியாம் இருளில் விடாதே—ஒளியாய்நீ
நின்ற நிலையே நிகழ்த்தி ஒருபொருள்வே
றின்றியமை யாமை எடுத்தோதி—ஒன்றாகச்
சாதித்துத் தம்மைச் சிவமாக்கி இப்பிறவிப்
பேதந் தனில்இன்பப் பேதமுறுப்—பாதகரோ
டேகமாய்ப் போகாமல் எவ்விடத்துங் காட்சிதந்து
போகமாம் பொற்றாளி னுட்புணர்த்தி—ஆதியுடன்
நிற்கூ அழியா நிலைஇதுவே என்றருளி
ஒக்க வியாபகந்தன் னுட்காட்டி—மிக்கோங்கும்
ஆநந்த மாக்கடலில் ஆரா அமுதளித்துத்
தான்வந்து செய்யுந் தகுதியினால்—ஊன்உயிர்தான்
முன்கண்ட காலத்தும் நீங்காத முன்னோனை
என்கொண்டு போற்றிசைப்பேன் யான்.

---

ளில்லையென்றும், சைவசித்தாந்திகளுடனே கூடலாகாது அவர் நமக்குப் புறம்பென்றும் பேசித் தன் இன்பத்தைத் தானே புசித்திருப்போமென்று மகிழ்ச்சியுற்றுச் செவ்விதான நிருவிகாரி நாமேயென்று பேசி அகமே பிரமமென்னும் வாதிகள் தன்னையு மறியாமல் தலைவனையு மறியாமல் மயங்கி நிற்கிற வெளிபோன்ற இருளில் என்னை விடாமல், ஞானசொரூப வொளி வடிவாய் இப்போது நீ நிற்கிற நிலையென்று நிகழ்த்தி, இதற்கு மேலே வேறொரு பொருளின்றியமையாமையும் எடுத்தோதி, ஆன்மாவைச் சிவத்துடனே ஒன்றாகும்படி சாதித்துத் தம்மைச் சிவமாக்கி இந்தப் பிறவிப்பேதமாகிய சரீரத்திலேதானே ஜீவன்முத்தித் தன்மையும் பரமுத்தித் தன்மையும் சரியாகக் கண்டு வெற்றின்பமான சிவபோகம் புசியாமல் சமவாதம் பேசி ஆன்மசத்தியுடனே கூடி இன்பம் புசிப்போமென்கிற பாதகரோடுங் கூடி ஏகமாய்ப் போகாமல் எனக்கு எவ்விடத்துங் குருலிங்க சங்கமமாய்க் காட்சிகொடுத்து, மேலான போகமுண்டாகிற திருவருட் பாதத்திற் பிரியாமல் உள்ளே யடங்கிக் கிடக்கும்படி பொருத்துவித்து, ஞேயத்தி லழுந்திநிற்கும் அழியாத சாயுச்சியநிலை இந்த அருணிலையென்று விகற்பந்தோன்றாமல் அநுக்கிரகித்து, தமது பரிபூரண வியாபகத்துள்ளே யானும் ஒக்க வியாபித்து நிற்குந் தன்மை

யுங் காட்டி, மிகுந்தோங்கி அளவுபடாமல் நிறைந்து நின்ற தமது பேரானந்தத் திருவருட் கடலில் விளைந்த ஆராத ஞேயவமுதத்தைப் புசித்துக் களித்திருக்கும்படி தாமே என்னைத் தேடிவந்து கொடுத்த பெருங்கருணைத் தகுதியினால் ஊனுயிர் தானே முதன்மையென்று நின்ற பெத்தகாலத்தும் அதற்கு முதன்மையுங் கொடுத்து நீங்காமல் நின்ற முன்னோனை எந்தவிதங்கொண்டு புகழ்ந்து போற்றுவேன் யான்.

போற்றி திருத்தில்லை போற்றிசிவ போகம் [யெங்கள்
போற்றியவன் மெய்ஞ்ஞானப் புண்ணியநூல்--போற்றி
வெம்பந்த வாழ்க்கைவிட வேறாய்வந் துண்ணின்ற
சம்பந்த மாமுனிபொற் றாள்.

**(உரை)** அழகிய தில்லை நகரம் எம்மை இரக்ஷிக்க; சிவபோகம் எம்மை இரக்ஷிக்க; அவனருளிச்செய்த மெய்ஞ்ஞான நூல் எம்மை இரக்ஷிக்க; எம் கொடிய பாசபந்தங்களுக்கு வேறாகி வந்து உள்ளே யெழுந்தருளியிருந்த சம்பந்தமாமுனியின் அழகிய பாதங்கள் எம்மை இரக்ஷிக்க.

## போற்றிப்பஃறொடை யுரை முற்றியது

திருச்சிற்றம்பலம்

---

[**போற்றிப்பஃறொடை யுரை** சென்னைச் சிவஞானபோத யந்த்ரசாலைப் பதிப்பி லுள்ளபடியே இன்றியமையாத சில திருத்தங் களோடு இங்குப் பதிப்பிக்கப்பட்டது. இதற்குக் கையெழுத்துப் பிரதி கள் அகப்படவில்லை. உரை விளக்கமாகவுள்ளது. உரை செய்தார் பெயர், உரை செய்த காலம் முதலியன விளங்கவில்லை. இறுதியிலுள்ள வெண்பாவினுரை **மெய்கண்டசாத்திர** வுரைப்பதிப்பிலுள்ள உரை யைத் தழுவி யெழுதப்பட்டது.—**S. அனவரத விநாயகம் பிள்ளை.**]

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

உமாபதி சிவாசாரியர்

அருளிச்செய்த

# கொடிக்கவி மூலமும் பழைய உரையும்

---

### கட்டளைக்கலித்துறை

1. ஒளிக்கு மிருளுக்கு மொன்றே யிடமொன்று மேலிடிலொன்
றொளிக்கு மெனினு மிருளட ராதுள் ளுயிர்க்குயிராய்த்
தெளிக்கு மறிவு திகழ்ந்துள தேனுந் திரிமலத்தே
குளிக்கு முயிரருள் கூடும் படிக்கொடி கட்டினனே.

(உரை) ஒளிக்கும் இருளுக்கும் ஒன்றே இடம் - ஆணவத்துக்கும் ஞானத்துக்கும் இடம் ஒன்றே ; ஒன்று மேலிடில் ஒன்று ஒளிக்கும் - ஞானம் மேலிட்ட காலத்து ஆணவம் ஒளித்து நிற்கும், ஆணவம் மேலிட்ட காலத்து ஞானம் ஒளித்து நிற்கும் ; எனினும் இருள் அடராது - ஒன்று மேலிட்ட காலத்திலே ஒன்று ஒளித்து நின்றாலும் ஞானத்தை ஆணவம் பொருந்தாது ; உள்ளுயிர்க்கு உயிராய்த் தெளிக்கும் அறிவு திகழ்ந்துளதேனும் திரிமலத்தே குளிக்கும்-பூர்வ வாதனாவிசேஷத்தாலே உள்ளே கிடந்த சிவஞானம் சற்று விளங்குமானாலும் மும்மலங்களிலே மூழ்கிக் கிடக்கு மல்லாமல் அது கொண்டே நீங்கமாட்டாது ; உயிர் அருள் கூடும்படி கொடிகட்டினனே - இப்படி மும்மலங்களிலே மூழ்கிக்கிடக்கிற ஆன்மா அருள் கூடும்படிக்குத் தீட்சைக்கிரமங்களினாலே மலங்களைப் போக்கத் துசங்கட்டினேன்.

(கருத்து) ஆணவத்துக்கும் ஞானத்துக்கும் இடம் ஒன்றாயிருக்கத் தனது காரணங் கெடாமலிருக்கிற மலத்தைத் தீட்சைக் கிரமத்திலே போக்கி மோட்சத்தை அடைவிப்போம்.

(நுட்பம்) ஆணவத்துக்கும் ஞானத்துக்கும் இடம் ஒன்றென்றதற்கு உதாரணம்: **சிவஞானபோதத்**தில் [vii, 5], 'மெய்ஞ்ஞானந் தன்னி'லென்ற பாடத்தில், 'தண்கடனீ ருப்புப்போற், றானே யுளவுளவாய்த் தான்' என்பது கண்டுகொள்க. ஒன்று மேலிட்ட காலத்திலே ஒன்று ஒளித்து நிற்கும் என்றதற்கு உ - ம்: **சிவப்பிரகாசத்**தில் [70], 'மாயைமா மாயை மாயா' என்ற விருத்தத்திற் கண்டுகொள்க. இதல்லாமல் ஆணவம் மேலிட்ட பெத்தக்காலத்திலே ஞானம் ஒளித்து நிற்குமென்றதற்கும் முத்திக் காலத்திலே சிவம் பிரகாசித்து ஆணவம் கெவுரவம் கெட்டு ஒளித்துநிற்கு மென்றதற்கும் உ - ம்: **போற்றிப்பஃறொடை வெண்பா**விலே [83], ' என்ற, னுள்ளமென்று நீங்காதொளித்திருந்து தோன்றிநின்ற, கள்ளமின்று காட்டுங் கழல்போற்றி' என்றும், **சிவஞானபோத**த்திலே [xii, 3], 'நேசத்தர் தம்பா னிகழுந் ததிசெய்போற், பாசத்தார்க் கின்றாம் பதி' என்றும் வரும் ஏதுக்கள் கண்டுகொள்க. ஞானத்தை ஆணவம் பொருந்தாதென்பதற்கு உ - ம்: **சிவஞானபோத**த்தில் [vii, 1], 'அந்நியமி லாமை யரற்கொன் றுணர்வின்றாம்' என்ற பாடத்தில் கண்டுகொள்க. சூரியனை அந்தகாரம் பொருந்தாமல் நிற்குமென்பதுங் கண்டுகொள்க. முன்விட்ட குறையினாலே உயிர்க்குயிராயிருக்கிற ஞானம் சற்று விளங்குமானாலும் மலத்திலே அழுந்திக்கிடக்கு மல்லாமல் நன்றாகச் சுத்தியாகமாட்டாது. இப்படி யிருக்கிற ஆன்மா அருளைக் கூடும்படி துசங்கட்டினன் என்றதற்கு உ - ம்:* ஆசாரியர் தீட்சைக்கிரமத்தினாலே மலத்தைப் போக்கி அருளைக் கொடுப்பர்; அந்தச் சிவஞானம் ஆசாரியரையல்லாமல் வாராது. அதற்கு உ - ம்: **சிவப்பிரகாசத்**தில் [9], ' விரும்பியமந்திராதிகார மர்ச்சனாதிகார ' மென்ற விருத்தத்திற் கண்டுகொள்க. **சித்தியா**ரில் [viii, 3], 'பலவிதமா சான்பாச மோசனந்தான் பண்ணும் படி'யென்றும், [xii, 6], 'அடிசேர் ஞான மாசா னருளால், வந்திடுமற் றொன்றாலும் வாராதாகு'மென்றும் வருவன கண்டுகொள்க.க

---

*அகப்பட்ட இரண்டு ஏட்டுப் பிரதிகளிலும் உதாரணச் செய்யுள்கள் காணப்படவில்லை.

## நேரிசை வெண்பா

2. பொருளாம் பொருளேது போதேது கண்ணே
இருளாம் வெளியே திரவே—அருளாளா
நீபுரவா வையமெலா நீஅறியக் கட்டினேன்
கோபுர வாசற் கொடி.

**(உரை)** பொருளாம் பொருள் எது - பொருளிலே அழியாத பொருள் எது ; போது எது - கிரணமாகிய சத்தி எது ; கண் எது - கண்போல ஆன்மா எது ; இருளாம் வெளி எது இரவு எது - அஞ்ஞானமாகிய சகல கேவலந்தான் எது ; அருளாளா - அருளையுடையவனே ; நீ புரவா வையமெல்லாம் நீ அறிய - வையமாகிய மலமாயாதி கன்மங்களிலே பொருந்தாமல் ஆன்மாக்களிடமாகப் பொருந்தியிருக்கிற தேவரீர் அறிய ; கோபுர வாசற்கொடி கட்டினேன் - கோபுரவாசலிலே கொடி கட்டினேன்.

**(கருத்து)** கர்த்தா எது சத்தி எது ஆன்மா எது கேவலசகலம் எது இது சொல்வார் உளரோ என்று கொடி கட்டினோம்.

**(நுட்பம்)** அழியாத பொருள் எதென்னில், அகண்ட பரிபூரணமாய் உயிர்க்குயிராய் ஆனந்த ரூபமாயிருக்கிறது தற்சிவம். அதற்கு உ - ம் : **சிவப்பிரகாசத்தில்** [13], 'பலகலையா கமவேதம்' என்ற பாடத்திற் கண்டுகொள்க. கிரணமொப்பாகிய சத்திதான் எதென்னில்; சத்தியென்பது தனியே ஒரு முதலல்ல சூரியனுங் கிரணமும்போல மரமும் காழ்ப்பும்போலத் தடையற்ற ஞானமாயிருக்கும். அதற்கு உ - ம் : **சிவப்பிரகாசத்தில்** [75], 'சுத்தமாஞ் சத்தி ஞானச் சுடராகும்' என்ற பாடத்திற் கண்டுகொள்க. **சித்தியா**ரில் [i, 62], 'சத்திதன் வடிவே தென்னிற் றடையிலா ஞான மாகு' மென்றும், [i, 67], 'ஒருவனே யிராவ ணாதி' யென்ற பாடத்தில், 'வரும்வடி வெல்லாஞ் சத்தி சத்திதான் மரமுங் காழ்ப்பு, மிருமையும் போல மன்னிச் சிவத்தினோ டிசைந்து நிற்கும்' என்றும் வருவன கண்டுகொள்க. கண்ணொப்பாகிய ஆன்மா எதென்னில், அது அதுவாய் அடுத்ததின் தன்மையாய் வசிப்பைப் பற்றின வியாபகமாய்க் கண் படிக மாகாசம்போல ஒப்பையுடையதாய் அக்கினியைப்போலப் பற்றிநிற்கிற தல்லாமல் தனித்து நிறகிற முதலல்லவாய் அருவம் உருவம் ரூபாரூப மல்லவாய்ப் பூவிற் கந்தம்போன்றதாயிருப்பது ஆன்மா.

இதற்கு உ - ம்: **சிவஞானபோதத்தில்** [iv, 5], 'மாயா தனுவிளக்காய் மற்றுள்ள' மென்ற பாடத்திலும், **சிவப்பிரகாசத்தில்** [59], ஓரிடத் திருத்த' லென்ற பாடத்திலும், **சித்தியாரில்** [iv, 20], 'அசித்தரு வியாப கம்போல் வியாபக மருவ மின்றாய், வசித்திட வரும்வி யாபி யெனும்வழக் குடைய னாகி' யென்றும்; **திருவருட்பயனில்**, [18] 'இருளி லிருளாகி யெல்லிடத்தி லெல்லாம், பொருள்க ளிலதோ புவி' யென்றும், **சித்தியாரில்** [பாயக். உலகா. மறு. 20], 'அங்கி யானது தானு மொன்றை யணைந்து நின்று நிகழ்ந்திடும், பங்கி யாதுயிர் தானு மப்படி பற்றி யல்லது நின்றிடா' என்றும், **சிவஞானபோதத்திலே** [vii, 3], 'தோன்றல் மலர்மணம்போற் றெருக்கு' என்றும் வரும் ஏதுக்களைக் கண்டுகொள்க. அஞ்ஞானமாகிய கேவலசகலந்தான் ஏதென்னில்: அதிற் கேவலமாவது தத்துவங்களோடே பொருந்தாமல் போகத்திற் கொள்கை யில்லாதவனாய் அறிவில்லாதவனாய் அந்தகாரத் திலே அலரவிழித்த விழிபோன்றதாய் மலமொன்றுமேயாய் அதுவாய் அந்த மல மாய்கையைவிட்டு நீங்குமுறைமை யில்லாததாயிருப்பது கேவலம். இதற்கு உ - ம் : **சிவப்பிரகாசத்தில்** [33], 'ஓங்கிவரும் பல வுயிர்கள்' என்ற பாடத்திலும், **சித்தியாரில்** [iv, 38], 'அறிவில னமூர்த்த னித்த னாகாதி குணங்க ளோடும்' என்ற பாடத்திலும் வரும் ஏதுக்களைக் கண்டுகொள்க. சகலமாவ தேதென்னில், சகலத் துக்கு வெளியென்றும் தீபமென்றும் பெயர். வெளி தீபமென்றிருக் கிற சகலத்தை அஞ்ஞானமென்று சொல்லுவானேனென்னில், *சக லம் மாயா போகத்தைப் புசிப்பிக்கத் தீபமாக வந்தது, தனக்கு வேண் டிய தன்னை வினையைத் தலைவனை உணர்த்தாதாகையாலும் அஞ்ஞா னமே இயக்குவிக்குமென்பதினாலும் அறிக. இதற்கு உ - ம் : **சிவப் பிரகாசத்தில்** [37], 'புகலுமல மொழித்தற்கு' என்ற பாடத்திலும், **இருபாவிருபதில்** [20, 6], 'இருள் வெளியாகு மருளினை யறுத்து'

---

*'சகலத்திலே அஞ்ஞானமாகிய மாயாபோகத்தைப் புசிப்பிக்கு மல்லாமல் ஞானத்தினை யுணர்த்தாது : ஞானம் சுத்தத்திலே யல்லா மல் உண்டாகாது: ஆகையால் சகலமும் போகத்தைப் புசிப்பிக்கிற நிமித்தமாகக் கேவலத்திற்கு இது தீபமென்றும் வெளியென்றும் சொன்னதல்லாமல் இதுவும் அஞ்ஞானமே தப்பாது' என்பது இராசாங்கக் கையெழுத்துநூல் நிலையப் பிரதியிற் காணும் பாடம்.

என்பதிலும் அறிக. அருளாளா - கிருபை யுடையவனே. நீ புரவா வையமெல்லாம் நீ யறியக் கட்டினேன். *சர்வத்ர பரிபூரணனுக இருக்கப் பிரபஞ்சத்திலே பொருந்தாமல் உயிர்களிடமாய் நிறைந்திருக்கிறது எப்படியென்னில், சூரியன் அந்தகாரத்தைப் பொருந்தாமல் எங்கும் வியாபித்து நிற்கிறதுபோலும்; உயிரும் சிவமும் கலப்பாக இருக்க ஆன்மாக்களை மலம் பொருந்தினது எப்படி யென்னில், சமுத்திரமும் சலமும் உப்பும்போல. உ - ம் : **நெஞ்சுவிடுதூ**தில் [8], 'படநாகம் பூண்ட பரமன் பசுவி, னிடமாய் நிறைந்த விறைவன்' என்றும், **சித்தியாரி**ல் [vii, 1], 'அனைத்துஞ்சத் தென்னி னொன்றை' யென்றும், [vii, 3], 'சுத்தமெய்ஞ் ஞானச் சோதியா' லென்றும் வரும் எதுக்களைக் கண்டுகொள்க. கோபுர வாசற் கொடி - அந்தக் கர்த்தாவே கர்ண பாரம்பரையாக அநுக்கிரகம் பண்ணி யறிகிறதென்பது கருத்து. உ

3. வாக்காலும் மிக்க மனத்தாலும் எக்காலும்
தாக்கா துணர்வரிய தன்மையனை—நோக்கிப்
பிறித்தறிவு தம்மிற் பிரியாமை தானே
குறிக்கு மருள்நல்கக் கொடி.

**(உரை)** வாக்காலும்...தன்மையனை - வாக்கு மனங்களாலும் ஒரு காலத்திலுந் தாக்காமல் அறிதற் கரிதாகிய தன்மை யுடையவனை; நோக்கி - விசாரித்துப் பார்த்து; பிறித்து - பகுக்கு மிடத்து; அறிவு ...கொடி - அறிவுக்கறிவாயிருக்கிறதைப் பிரியாமற் குறித்து அருள் பொருந்தத்தக்கதாகக் கொடி கட்டினேன்.

---

*'சர்வத்ர பரிபூர்ணனு யிருக்கிறவர் பிரபஞ்சமாகிய மல மாயா கன்மங்களைப் பொருந்தாமல், ஆன்மாக்களிடமாக இருப்பாரென்று சொல்லுவானேனென்னில், சிவனை மல மாயாதி கன்மங்கள் பொருந்தா. ஆனல் சர்வ வியாபகம் எப்படியென்னில், சூரியனுடைய சன்னிதியிலே அந்தகாரம் பொருந்தாமல் நிற்கிறதுபோல மலமும் சிவன் சன்னிதியிலே நிற்கிறது. அப்படிச் சிவன் ஆன்மாக்கள் தோறும் நிறைந்திருக்கச் சிவனைப் பொருந்தாமல் ஆன்மாக்களை மலம் பொருந்தினது எப்படியென்னில், சமுத்திர சலமும் உப்பும்போல' என்பது இராசாங்கக் கையெழுத்துநூல் நிலயப் பிரதியிற் காணும் பாடம்.

(கருத்து) வாக்கு மனங்களுக்கு மெட்டாமல் ஒரு காலத்திலுந் தாக்காமல் அறிதற்கரிதாகிய அறிவுக்கறிவாயிருக்கிற பொருளை இவனிடத்திலே பொருந்தத் தக்கதாகக் கொடி கட்டினேன்.

(நுட்பம்) மனம் வாக்குக் காயங்களினாலே ஒருகாலுந் தாக்காதவனென்றும் ஆன்மபோதத்தா லறியப்படாதவனென்றும் சொன்னதற்கு உ-ம்: சித்தியாரில் [பாயி. 4] 'மறையினா லயனால் மாலால் ...கூறொணா·வாகி நின்ற விறைவனு'மென்றும், சிவப்பிரகாசத்தில் [84], 'பாசமா ஞானத் தாலும் படர்பசு ஞானத் தாலும், ஈசனை யறிய வொண்ணா' என்றும் வரும் ஏதுக்களைக் கண்டுகொள்க. விசாரித்துப் பார்க்குமிடத்தில் என்றது இப்படி மனம் வாக்குக் காயங்களுக்கும் ஆன்மபோதத்துக்கும் எட்டாத சிவனை ஆசாரியர் தீட்சைக் கிரமங்களினாலே மலமாயாதி கன்மங்களைப் போக்கிப் பசுகரணங்களைச் சிவகரணமாக்கி மலத்திலே பற்றாக இருந்த அறிவைத் திருப்பி அருளிலே பற்றாக்கி என்றதற்கு உ-ம். நெஞ்சுவிடுதூதிலே [60], 'பார்த்தான் பழையவினைப் பஞ்சமலக் கொத்தையெல்லாம், தீர்த்தான் நினைவுவே றாக்கினான்' என்பது கண்டுகொள்க. அறிவு தம்மிற் பிரியாமை தானே குறிக்கும் என்றது இப்படி மலங்களைப் போக்கி அறிவை அருளினாலே திருப்பின ஆசாரிய ரனுக்கிரகத்தினாலே ஞாதுரு ஞான ஞேயங்களாகிய சங்கற்பனை ஞானங்களிலே போகாமல் தன்னிடத்திலே உயிர்க்குயிராய் அநாதியே தோன்றாமற் பொருந்தியிருக்கிற திருவருளிலே அறிவு தாரகமாக நிறுத்தி என்றதற்கு உ-ம். சித்தியாரில் [xi, 2,] 'ஞா துருஞான ஞேயந் தங்கிய ஞா னஞ்சங்கற் பனைஞான மாகுந், திருஞான மிவையெல்லாங் கடந்த சிவ ஞான மாதலாற் சிவன்முத்தர் சிவமேகண் டிருப்பர்' என்பது கண்டு கொள்க. அருள் நல்கக் கொடி என்றது இப்படி ஆசாரியரனுக்கிரகம்பெற்ற அனுட்டானத்தினாலே சிவன் ஆன்மாவைக் கவளீகரித்துக் கொள்ளுவனென்றும் இந்த முறையிலே யல்லாமல் மோட்சம் அடையப்படாதென்றும் கொடிகட்டினே மென்பது கருத்து. அருள் பொருந்து மென்றிருக்கச் சிவன் கவளீகரிப்பனென்று சொல்லுவானே னென்னில், அருளென்றும் சிவமென்றும் வேற்றுமையில்லை யென்றது. ஆன்மாவைச் சிவன் கவளீகரித்ததெப்படி யென்னில், ரசகுளிகை பொன்னைத் தனக்குள்ளே அடக்கிக்கொண்

டது போலவும்; தாஞக்கினது எப்படியென்னில், அக்கினி இரும்பைத் தாஞக்கினது போலவும்; சிவன் ஆன்மாவை வசித்து விடாதது எத்தன்மையென்னில், காந்தம் இரும்பை வசித்தால் ஒருகாலும் விடாது அத்தன்மைபோலவும்; சிவன் ஆன்மாக்களுக்கு மலத்தைப் போக்கித் திருவடியிலே கூட்டினது எப்படி யென்னில், அக்கினி காட்டத்தைக் கெடுத்தது போலவும் சூரியன் அந்தகாரத்தைப் போக்கினது போலவும் மலத்தைப் போக்கி உப்பை யணைந்த அப்பைப் போல ஒன்றுபட்டுத் திருவடியிலே கலந்திருப்பது. ஆன்மாச் சிவனைப் பொருந்திச் சிவனாய் நீங்காமலிருக்கிறது எப்படி யென்னில், குளத்திலே கட்டுப்பட்ட தண்ணீர் அணையை முறித்துக்கொண்டு சமுத்திரத்திலே சேர்ந்தபோது அந்தச் சமுத்திர சலமேயாய் அந்தச் சமுத்திரத்தைவிட்டு நீங்காத முறைமைபோலவும் ஆன்மாச் சிவனைப் பொருந்திச் சிவமேயாய்ச் சிவனைவிட்டு நீங்காமல் சிவனுடைய திருவடியிற் கலந்து கிடக்கிறது இந்த முறைமைத்து. இதற்கு உ - ம்: **சித்தியாரில்** [xi, 12,] 'இரும்பைக்...கலந்தே' என்றும், **சிவஞான போதத்தில்** [xi, 4,] 'மன்னு மிருளை மதிதூர்ந்த' என்ற பாடத்திலும், [xi, 5] 'நசித்தொன்றி னுள்ளம்' என்ற பாடத்திலும், [viii, 7] 'சிறைசெய்ய நின்ற' என்ற பாடத்திலும் வரும் ஏதுக்களைக் கண்டு கொள்க.

4. அஞ்செழுத்தும் எட்டெழுத்தும் ஆறெழுத்தும் நாலெழுத்தும்
பிஞ்செழுத்தும் மேலைப் பெருவெழுத்தும்—நெஞ்சழுத்திப்
பேசும் எழுத்துடனே பேசா எழுத்தினையும்
கூசாமற் காட்டக் கொடி.

**(உரை)** அஞ்செழுத்தும்...நாலெழுத்தும் - சிவாயநம என்கிற அஞ்செழுத்தும், ஓம் ஆம் ஔம் சிவாயநம என்கிற எட்டெழுத்தும், ஓம் நமசிவாய என்கிற ஆறெழுத்தும், ஓம் சிவாய என்கிற நாலெழுத்தும் ஆக இப்படி உச்சரிக்கிற விதிப்படியே உச்சரித்து; பிஞ்செழுத்தும்...நெஞ்சழுத்தி - விதிப்படி உச்சரிக்கிற முறைமையை விட்டுப் பஞ்சாட்சரத்தினுடைய சொரூபத்தை யறிந்து பிஞ்செழுத்தாகிய வகாரமாகிய பராசத்தியையும் மேலைப் பெருவெழுத்தாகிய சிகாரமாகிய சிவத்தையும் தன்னுடைய இருதயத்திலே வைக்கில்; பேசும்...கொடி - பேசும் எழுத்தாகிய வகாரமாகிய சத்தி பேசா

எழுத்தாகிய சிகாரமாகிய சிவத்தை இரண்டறக் கூசாமல் அழுத்து விக்கக் கொடிகட்டினேன்.

**(கருத்து)** பஞ்சாக்கர முதலாகிய மந்திரங்களை உச்சரித்து அதன் பிறகு அந்த மந்திரத்தினுடைய அட்சரசொரூபத்தை அறிந்து சத்தி சிவான்மகமாயிருக்கிற அட்சரத்தை இருதயத்திலே வைத்தால் அந் தச் சத்தி தானே சிவனை இரண்டறக் கலப்பிப்பளென்று பஞ்சாக் கரத்தினாலே மோட்சத்தை அடையும்படிக்குக் கொடி கட்டினேன்.

**(நுட்பம்)** அஞ்செழுத்தும்...நெஞ்சழுத்தி - பஞ்சாட்சர முச்ச ரிக்கிற முறைமையிலே தூல பஞ்சாட்சரம் சூக்கும பஞ்சாட்சரம் அதி சூக்கும பஞ்சாட்சரம் சூட்சுமாசூட்சும பஞ்சாட்சரமென்று உச்சரிக் கிற முறைமை நாலுவித முண்டு. அந்த முறைமை உச்சரித்து அந் தப் பஞ்சாட்சரத்தினுடைய சுபாவ மறிந்து - அது எதென்னில், சிகாரம் சிவம், வகாரம் சத்தி, யகாரம் ஆன்மா, நகாரம் திரோதம், மகா ரம் மலம் ஆக இந்த முறைமையை யறிந்து - இதிலே ஊன நடன மாகிய நகார மகாரத்திலே சென்று செனன மரணத்திலே போகா மல் ஞான நடனமாகிய சிகார வகாரத்தைப் பொருந்திச் சிகார முத லாக உச்சரித்து அப்படி உச்சரிக்கிற முறைமையும் விட்டு வகார மாகிய ஞானந் தானாக நிற்கவே சிகாரமாகிய ஞேயத்திலே அழுத்து விக்கும். அது எப்படி யென்னில், சத்தியாகிய வகார மிடமாகச் சிவமாகிய சிகாரத்தி னிடையிலே அழுந்தவே அத்தன்மை யுண்டாக் கும். அதற்கு உ - ம்: **நெஞ்சுவிடுதூ**திலே [93], 'அஞ்செழுத்தை, யுச்சரிக்குங் கேண்மை யுணர்த்தி யுணர்த்தியபின், வைச்சிருக்கு மந்த வழியாக்கி' என்றும், **சிவப்பிரகாச**த்திலே [91], 'திரு வெழுத்தஞ்சி' லென்ற பாடத்திலும், **திருவருட்பய**னில் [83] 'ஊன நடன,' [89] 'ஆசினவா' என்ற குறள்களிலும் வரும் ஏதுக் களைக் கண்டுகொள்க. ஆனால் பஞ்சாட்சரத்தை உச்சரித்தாற் போதாதோ உச்சரிக்கவும் அதன்மேலே சத்தி சிவான்மகமாகிய எழுத்தினிடத்திலே நிற்கவும் அதன்மேலே மோட்சமுண்டாமென் றது எதென்னில், பஞ்சாட்சரத்தை உச்சரித்ததனாலே அஞ்ஞானம் நீங்கி ஞானம் பிரகாசிக்கும். அதற்கு உ - ம்: **சிவஞானபோதச் சூர**ணை யில்[xi] 'பஞ்சாட்சரத்தை விதிப்படி உச்சரிக்க' வென்றது இவ் வான் மாக்களுக்கு ஞானம் பிரகாசித்தும் அஞ்ஞானம் வேம்பு தின்ற புழுப்

போல நோக்கிற்றை நோக்கி நிற்குமாதலின் அது நீக்குதற்கெனக் கொள்க. இந்தப் பஞ்சாட்சர உச்சரிப்பிலே விளங்கின ஞானத்திலே நகார மகாரந் திரோத மலமென்றும் யகாரம் ஆன்மபோதமென்றும் மூன்றெழுத்தும் நீங்கி ஞானமேயாய் அந்த ஞானத்தினாலே சிகார வகாரத்தி னிடையிலே நின்றழுந்துகிறது வைச்சிருப்பு. அதற்கு உ-ம்: திருவருட்பயனில் [89], 'அருளினால் வாசியிடை நிற்றீவழக்' கென்பது கண்டுகொள்க. இப்படி ஞானத்திலே அழுந்துகிறோ மென்கிறதையும் விடவே சிவன்தானே இவனைக் கிரகித்துக் கொண்டும் இவன் செயலெல்லாந் தன் செயலாகவும் இவனுந் தானாகவே நிற்பன். இதற்கு உ-ம்: திருவுந்தியாரில் [6], 'நஞ்செய லற்றிந்த நாமற்ற பின்னாதன், றன்செயல் தானேயென் றுந்தீபற, தன்னையே தந்ததென் றுந்தீபற' ஆக மூன்று வகையுங் கண்டுகொள்க. ௬

கொடிக்கவி யுரை முற்றும்.

---

[இங்குப் பதிப்பித்த **கொடிக்கவியுரை** திருநெல்வேலி திரு **M. P. S.** துரைசாமி முதலியாரவர்கள் அனுப்பி வைத்த எட்டுப் பிரதியிலுள்ளது. இதனை யொப்பு நோக்கற்குத் துணையாயிருந்தன இராசாங்கத்துக் கையெழுத்து நூல்நிலயத்துப் பிரதியும் அதனைப் பெரிதும் ஒத்த சிவஞானபோத யந்த்ரசாலைப் பதிப்பும். இவ்வுரை விளக்கமாயுள்ள விரிந்த வுரை. இதனை யியற்றியார் பெயர், இயற்றிய காலம் முதலியன விளங்கவில்லை.

—S. அனவரதவிநாயகம் பிள்ளை.]



ௐ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

உமாபதி சிவாசாரியர்

அருளிச்செய்த

# நெஞ்சுவிடு தூது மூலமும் பழைய உரையும்

கலிவேண்பா

பூமேவும் உந்திப் புயல்வண்ணன் *பொற்பதுமத்
தார்மேவும் மார்பன் சதுமுகத்தோன்—தாம்மேவிப்
பன்றியும் அன்னமுமாய்ப் பாரிடந்தும் வான்பறந்தும்
என்றும் அறியா இயல்பினன்—அன்றியும்

---

1—2. பூமேவும் - இயல்பினன்.

**(உரை)** அழகிய உதாத் திலஞ்சியிலே பிரமா உதிப்பதற் கிடமாகிய தாமரைப்பூவையும் மேகநிறமாகிய திருமேனியையுமுடைய திருமாலும், ஸ்வர்ணநிறத்தையுடைய தாமரைமாலை நீங்காப் புயத்தையும் நான்கு திருமுகத்தையுமுடைய பிரமாவும், இவர்களிருவரும் இகலாற் பொருந்தி விஷ்ணு வராகரூபமாகியும் பிரமா ஓதிமமாகிய பக்ஷிரூபமாகியும் நிரைநிரையே பூமியை யிடந்து சப்தபாதாளங்களையுங் கீன்று திருவடியைச் சோதித்தும் காணாத திருவடியும் சப்தலோகங்களினும் பறந்துதேடிக் காணாத திருமுடியும், இவர்கள் சங்கற்பத்தினாற் காண்பாமென்கையால் எக்காலத்திலும் அவர்களுக் கறியப்படாத இயல்பினை யுடையவன்.

**(இதற்குப் பிரமாணம்)** "தேட்டற்று நின்றவிடஞ் சிவமாம்" [திருக்களிற்றுப்படியார், 29] என்பதறிக.

---

*பொற்பமைந்த நாமேவு மாதுபுணர் நான்முகத்தோன் - பாடபேதம். .

இந்திரனும் வானோரும் ஏனோரும் எப்புவியும்
மந்தர வெற்பும் மறிகடலும்—மந்திரமும்
வேதமும் வேத *முடிவின்விளை விந்துவுடன்
நாதமுங் காணா நலத்தினன்—ஓத
௫ அரியான் எளியான் அளவிறந்து நின்ற
பெரியான் சிறியான்பெண் பாகன்—தெரியா

---

2—8. அன்றியும் - சுடரொளியான்.

(உரை) இருதொழிற் கடவுளாகிய இவர்களிருவரு மல்லாமல் தேவேந்திரனும், தேவர்களும், அன்றி ஸ்வர்க்க மேலடுக்குக்களிலே பலப்பிராப்திகள் பலவிதத்திலே யிருக்கப்பட்ட பேர்களும், மந்த்ரசஞ்சாரரும், பூமி முதலாய அதோமுக அடுக்குக்களி லிருக்கப்பட்ட பல வகை யான்மாக்களும், உலகரக்ஷை காரணமாக ஒப்பற்ற ஸ்வர்ணமலை ரூபமாகத் தாங்கியிருக்கப்பட்ட மஹாமேருவும், ஜலரூபமாகி விரிந்து திரைக்கரங்களையுடைய சமுத்திராதிபரும், சப்தகோடியாய் விரிந் திருக்கப்பட்ட மந்திரமூர்த்திகளும், இருக்கு யஜுஸ் சாமம் அதர்வண மென்று பெயர்பெற்றுச் சப்தரூபமாக விரிந்த வேதாதிபரும், அந்த வேதத்துக்குக் காரணமாகிய சுத்தமாயாசத்திகளும், ஓசைவடிவாகிய நாதாதிகளும், முந்த இந்த நிலைமைகள்தாமே கதியென்றும் கடவுளென்றும் பற்றி நிற்கிற ஆன்மகோடிகளுங் காணப்படாததே குணமாகவுடையவன். சொல்லிறந்தவிடத்துத் தோன்றலானகையால் வாக்குகளாலே யெட்டாதவன். போதாவிதற்குச் சற்றும் பிரயாசமில்லாத காட்சியான். தர்க்கங்களினாலே அளந்தறிதற் களவுபடாப் பெருமையினாலே தர்க்கநிர்ணயங் கடந்த பெருமையான். அணுவுக்குத் தான் அணுவாய் நுணங்குவனாதலாற் சிறுமையை யுடையவன். இப்படிப் பெரிதுஞ் சிறிதுமுடைய பெற்றியனாயினும் பிரத்தியக்ஷத்திற் காணும்படி அடியவர்க்குத் தனது காருண்ய சத்தியை வாமபாகத்திலுடையவன். வாயுப்போல ஆகாயம்போலத் தோன்றாத அருவமே திருமேனியானவன்—அன்றியும், அபரவிந்து, அபரநாதம், பரவிந்து, பரநாதமாயுள்ள நான்கு பேதத் திருமேனியுமானவன்.—அசுத்தமாயை, பிரகிருதிமாயை யதிட்டித்துச் சிருஷ்டி நடத்தும்போது மகேசுரர் உருத்திரர் விஷ்ணு பிரமாவென்று நான்கு

---

*முடிவும்விளை - பாடபேதம்.

அருவான் உருவான் *அருவுருவ மல்லான்
மரியான் மரிப்பார் மனத்தான்—பரிவான
மெய்யர்க்கு மெய்யன் வினைக்குவினை யாயினான்
பொய்யர்க்குப் பொய்யாய பொய்யினான்—ஐயன்
படநாகம் பூண்ட பரமன் பசுவி
னிடமாய் நிறைந்த இறைவன்—சுடரொளியான்
என்றுமுளன் அன்றளவும் யானும் உளனாகி
நின்றநிலை யிற்றரித்து நில்லாமற்—சென்றுசென்று

பேதமாகப் பிரத்தியக்கத் திருமேனியை யுடையவன். உத்யுக்த ராய்ச் சதாசிவமூர்த்தமு மல்லாமற் பேரொளியாய் விளங்குந் திருவுருவத்தையு முடையவன்—அன்றியிலும் இப்படிப்பட்ட திருமேனியையுங் கடந்தவ னென்றுமாம்.—நித்தமுத்த சுத்தனாகையாற் சாதலாயது எக்காலமு மில்லாதவன்—அன்றியும் ஒன்றைத் தனக் குச் சுட்டியறியவேண்டும் பகுதியில்லாதவன்.—அப்படிப்பட்டவனாயி னும், பிறந்திறந்து திரிகிற ஆன்மகோடிகளி னுயிர்க்கு உயிரானவன் —அன்றியும் தன்னை நினைக்குமவ ருள்ளம் நீங்காதவன்.—தன திடத் தாராமைபூண்ட சத்தியர்க்குச் சத்திய தரிசனானவன். சரியை கிரியை யோகமென்னுந் தந்திரத்து நின்றவர்களுக்கு ஸ்வதந்தரந் தானாய் நின்றவன். சாருவாகன் புத்தன் முதலாய திரிபதார்த்த நிர் ணயமில்லாத அசத்தியர்க்கெல்லாம் அசத்தியனா யுள்ளவன்—அன்றி யும் நாஸ்திவிரத்திகளுக்கும் இல்லாமையாகவே யானவன்.—எப்படிப் பட்ட ஆன்மாக்களுக்கும் பிதாவானவன். தாருகாவனத்து அபிசார ஓமத்துண்டாய்ச் சங்கரிக்க இருடிகளேவலால் வரப்பட்ட பெரும்பாம் பைத் தானே தனக்கு ஆபரணமாகத் தரித்த எல்லாவற்றிற்கும் மேலா னவன். ஆன்மாக்கள் எண்ணிறந்திருந்தாலுந் தாலொருவனேயாயினும் ஆன்மகோடிகளுள்ளமட்டும் பூரணனாகிலும் ஓவாது மேலாய்க் கர்த்த னாகப் பட்டவன். சோமசூரியாக்கினிமுதற் பலவாகிய பிரகாசத்துக் கெல்லாம் ஒளியைக் கொடாநின்றவன்.

9—16. என்றுமுளன் - உரையேன்.

**(உரை)** இப்படிப்பட்ட சிவனானவன் ஆதியாகத் தோன்றாது நித்தனாக இருக்கப்பட்டவன்றே அவனைப்போல அனாதியாய் யானும்

*அருவுருவுமில்லான் - பாடபேதம்.

௧0 தோற்றியிடும் அண்டஞ் சுவேதசங்கள் பாரின்மேற்
சாற்றும்உற் பீசஞ் சராயுசங்கட்—கேற்றபிறப்
பெல்லாம் பிறந்தும் இறந்தும் இருவினையின்
பொல்லாங்கு துய்க்கும் பொறியிலியேன்—கல்லா
உணர்வின் மிசையோ டுலகா யதனைப்
புணர்வதொரு புல்லறிவு பூண்டு—கணையிற்
கொடிதெனவே சென்று *குடிப்பழியே செய்து
கடிய கொலைகளவு காமம்—படியின்மிசைத்
தேடி யுழன்று தெரிவைத் தெரியாமல்
வாடி இடையும் மனந்தனக்கும்—நாடிஅது

கித்தனுகிலும், அவனைப்போல் அனாதிமலரகிதனுகாதபடியாலே அனா தியே அவனுடனே கலந்திருந்துஞ் சலிப்பறநில்லாமல் மலனுகையால் ஏகதேசப்பட்டுச் சிருஷ்டிகள்தோறுங் கர்த்தாவாலே யுண்டாக்கப் பட்ட தோற்றம்நால்வகையாய் அதிலமைந்த பிறப்புத்தாபரம் ஊர்வன தேவர் நீர்வாழ்வன பறவைகள் நாற்காலிகள் மானுடர் உட்பட்ட எழு வகை யெண்பத்துநான்கு நூறாயிரம் யோனிகள்தோறுஞ் ஜனித்தும் மரித்தும், அந்தந்த ஜன்மங்கள்தோறுந் திரிவிதகரணங்களால் தரிசிக் கப்பட்ட புண்யபாவத்தின் பகுதியாகிய பலபதத்தை யுண்டாக்கப் பட்ட தானத்தையுடையேன்; நூலுணர்வில்லாத பாசஅறிவால் மிக்குச் சாருவாகன் மதத்தைப் பொருந்துங் கிஞ்சிஞ்ஞவுணர்வனுசி, கோரமாகப்போமிடத்துத் தனுவினின்றும் புறப்பட்ட பகழியினது வேகம்போலப் போய், மயக்கமிகுதியாலே தொன்றுதொட்டுப் புண்ய பாவத் தாழ்ச்சி யுயர்ச்சியினுலே வரப்பட்ட ஜாதியினது பேதமும் பாராமற் பிறர்மனையால் வருங் குற்றமும் நோக்காமற் பிறனில் விழைந் தும்.இந்தப் பூமியினிடத்து நல்லோர்களாலும் நீதிநூல்களாலும் நீக்கப் பட்டுச் சற்றுங் கிருபையில்லாமற் பண்ணப்பட்ட வதைத்தொழிலும், பிறர்பொருளென்று ஒன்றையும் புத்திபண்ணுது அதற்கான மார்க் கஞ்செய்து அபகரிப்பும், காலம் இடம் வேளைபாராமல் மயக்கமாகிய மாதர் புணர்ச்சி வேட்கையும் இவைகளினிமித்தமாகத் தேசந் திக்கு நாடுகளில் முசிப்பில்லாமல் திரிந்தும், சகல உயிர்ச்செய்தியும் இயற் கையாகக்கண்டு அவைகளை அதற்கேற்றபடி முறைபிறழாது ஊட்டி உற

*குடிப்பழுதே - பாடபேதம்.

கறு போன வழிபோகும் புந்திக்கும் புந்தியுடன்
ஆன திறலார் அகந்தைக்கும்—மேனி
அயர அயர அழிய அழியும்
உயிரின் துயரம் உரையேன்—வைரமே [கும்
கொண்டதொரு காமனுக்குங் கோபனுக்கும் மோகனுக்
மண்டு மதமாச் சரியனுக்கு—திண்டிறல்சேர்
இந்திரியம் பத்துக்கும் ஈரைந்து மாத்திரைக்கும்
அந்தமிலாப் பூதங்கள் ஐந்துக்குஞ் சிந்தைகவர் [தை
மூன்றுகுற்றம் மூன்றுகுணம் மூன்றுமலம் மூன்றவத்
ஏன்றுநின்று செய்யும் இருவினைக்குந்—தோன்றாத

---

க்கி நடத்திப் பாராமல் நிற்கிற பேரறிவாகியும் அந்தந்த அறிவுக்கீடாக அத்தனுக்கள் அடங்கின திருவருளை நாடாது, தான் பிறவிக்குச் சேரவுமில்லை அப்படிச் செய்தும் வந்ததில்லையென்னும் நினைவுதொழி லினுற் சோம்பி யிடையுங்கருவிகளில் தலைமையாகிய மனதுக்கும், மனதாகிய கருவி விளங்காமற் பற்றிய விடயங்களை மறத்தல்பண்ணுது அதறகேற்றபடி நிச்சயம்பண்ணும் புத்திக்கும், யானெனதென்று மேற்செல்லும் வலியினையுடைத்தாய்ப் புந்தியினின்று மூன்ருய ஆங்காரதத்துவத்துக்கும்,வாராதுநினைத்து நிச்சயித்ததொரு விடயத்தி னது குற்றம்பாராது முடித்தலால் அந்த விடயத்திலே வேறொன்றுந் தெரியாமற் படுத்திநிற்குஞ் சித்தத்துக்கும் இந்தக்கர்ணங்களுக்குந் தலைமையாய் அதன்வழிக்காய் அதுகள் ஒன்றுசெய்தது ஒன்று செய் யாது மாறுபட்டுத் தனித்தனி செயல்களுக்கெல்லாந் தான் ஏகனுய் நித்தியனுயிருநது அந்தரங்கத்திற் படும் விதனமுமன்றிப் பிறப்பிற் கருவியாய தனுவின் மூப்பாற் சோர்வுண்டாயபோது அயர்ந்தும் அந்தத் தனுக் கெடும்போது படுந் துயரப்பகுதி முற்றும் படும் ஆன்மா வினது துயரசாகரத்தை யுரைப்பதற்கு வரையறை பண்ண மாட் டேன்.

16—22. வைரமே - மயங்கினேன்.

**(உரை)** பதியுள்ளவன்றே தொடங்கி இற்றைவரையும் எடுத்த தனுக்களில் விழைவு முதலாய இன்பத்தை முள்ளிப் பூவினது மது வெனக் கண்டுங் கேட்டும் ஒழியாது நாடோறும் முற்றிப் பலமுடைய ஆசைப்பற்றுக்கும், சிறிதுஞ் சாந்தியில்லாமல் விரோதமே விளைக்

௨0 வாயுஒரு பத்துக்கும் மாருத வல்வினையே
யாய கிளைக்கும் அருநிதிக்கும்—நேயமாம்
இச்சை கிரியை யிவைதரித்தங் கெண்ணிலா
அச்சங் கொடுமை யவைபூண்டு—கச்சரவன்
சீரில்நிலை நில்லாது திண்டாடும் பல்கருவி
வாரில் அகப்பட்டு மயங்கினேன்—தேருங்கால்

---

கின்ற கோபனுக்கும், தான் பொருந்திய விடயத்தினது நலம் தீமை காணாது அதுதானாக மயக்குவிக்கும் மோகனுக்கும், மிகுந்த கர்வத்தை யுஞ் செய்து பிறர்மாட்டு விரோதங் காட்டாது அனுகூலம்போல இருந்து விரோதத்தை முற்றுவிக்கும் மாச்சரியனுக்கும், மாறுபடாத வல்லமையேவெற்றியாகவுடைய சோத்திரந் தொக்கு சக்ஷு சிங்ஙுவை ஆக்கிராணமாகிய ஞானேந்திரியங்களைந்தும் வாக்கு பாதம் பாணி பாயுருவுபத்தமாகிய கன்மேந்திரிய மைந்தும் ஆகப் பத்தாகிய இவைகளுக்கும், சத்த பரிச ரூப ரச கந்தமும் வசன கமன தான விசர்க்கம் ஆனந்தமுமான பத்துக்கும், தனுவுள்ளமட்டுங் காரிய காரணங்களாய் அழியாது நின்றுபகரிக்கும் ப்ருதிவி அப்பு தேயு வாயு ஆகாசமென்னும் பூதமைந்துக்கும், சித்தத்தை நல்வழி சிந்தியாதபடி பற்றிக் கொண்டு நோக்காடுசெய்யும் ஆதிதைவிகம் ஆதிபௌதிகம் ஆதியாத்மிகமாகிய துக்கத்ரயங்களுக்கும்—அன்றியுங் காமம் வெகுளி மயக்குமுமாமென வறிக.—சாத்விகம் இராசதந் தாமதமாகிய முக்குணங்களுக்கும், முதற்காரணமாகிய ஆணவமும் மாயையும் கன்மமுமாகிய மூன்றுக்கும், கேவல சகல மத்யமாகிய மூன்றவத்தைகளுக்கும், தனது சுதந்தரமாக வந்த வேளை முறைபிறழாது பொருந்திப் புசிப்பிக்கும் புண்ணிய பாவங்களுக்கும், பிரத்யக்கமல்லாத பிராணன் அபானன் உதானன் வ்யானன் சமானன் நாகன் கூர்மன் கிரிகரன் தேவதத்தன் தனஞ்சயன் ஆகப் பத்தாய வாயுக்களுக்கும், ஒருக்காலும் இதஞ்சொல்லாது பெற்றதினும் அமையாதுகுறைகளைச்சொல்லி ஆதியேதொன்றுதொட்டு வரப்பட்ட மாதா பிதா மாதுலன் முதலாயினோர்க்கும், மிகவும் வருந்தித் தேடப்பட்ட திரவியத்தின்பொருட்டும், அன்புடனே பற்பலவாய இவைகளின் பொருட்டாக இச்சாஞானக் கிரியாசொரூபனாகி, அவ்விடத்துத் தன்னை வினையைத் தலைவனை ஊன்றிப் பாராமல் விஷயாதியின் பொருட்டு அவைகளுக் கேற்ற தொழில் செய்யு

*உன்னை ஒழிய உறவில்லை என்னுமது*
*தன்னை அறிவை தனியறிவை—முன்னந்*
*தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி*
*வலைப்பட்டார் மற்றையவ ரென்று—நிலைத்தமிழின்*
௨௫ *தெய்வப் புலமைத் திருவள் ளுவர்உரைத்த*
*மெய்வைத்த சொல்லை விரும்பாமல்—ஐவர்க்கும்*
*ஆவதுவே செய்தங் கவர்வழியைத் தப்பாமற்*
*பாவமெனும் பௌவப் பரப்பழுந்திப்—பூவையர்தம்*

---

*மிடத்து எப்படியாமோ வென்னுஞ் சங்கையில்லாத பயத்துடனும் அவை முடித்தற் பொருட்டுச் சாருந் தாக்ஷண்ய மில்லாமையுங் கல லுகத் தரித்து, அரையிலே மஹாநாகத்தைக் கச்சையாகச் சாத்தி யருளுஞ் சிவன் அருளிச்செய்த திவ்யாகமங்களினுண்டான வசனத்து வழி யாதரியாமல், ஒன்று போயவழி ஒன்று போகாமலிருக்க அதனாலே அம்பெடுத்துப் பல்வகையான தத்துவங்களின் சூதாய சூட்சி வார்க்குத்தியிற் பொருத்தி மருண்டேன்.*

22—29. தேருங்கால் - புகலர்கேள்.

**(உரை)** *விசாரிக்குமிடத்து எனக்குச் சகாவாய் யான் படும் பல வாய துயர் நீக்குகைக்கு நீயன்றியிலே ஒருவரு மில்லையென்பதை நீதானே யறிவையே!—அதாவது, எனக்கு விட்டு நீங்காத தானமாக வுடையையாகலின் நீ அறிவையே.—பாசஅறிவு பசுஅறிவு போலாது எப்போதும் ஒருபடித்தாய் எல்லாவறிவுக்குந் தான் முதன்மையாய்த் தனக்கொரு சகாவேண்டுமென்பதில்லா ஒப்பற்ற சிவஞானத்தைப் பூர் வத்தில் 'புறப்பற்றாகிய பொருட்பற்றும் அகப்பற்றாகிய இரண்டடம் பிற் பற்றும் முற்றத் துறந்தவர்களே சிவஞானம் பெற்றவர்கள். இதில் யாதானுமொன்றிற் சிறிதாயினும் பற்றிருந்ததாயின் அவர்களே ஜனன மரணமாகிய பந்தமுற்றவர்கள்' என்று தமிழ் நிலையிட்டுச் சங்கப்பலகை யிடங்கொடுத் தேறியிருந்த நாற்பத்தொன்பது பேர் களையும் விழத்தள்ளித் தனக்குமாத்திரஞ் சங்கப்பலகையாகக் குறுக் கின குறள் வெண்பாவின் சொல்லும் பொருளும் நாவிடங்கொண்ட தெய்விக வித்வானான அழகிய வள்ளுவநாயனார் ஓதியருளின சத்திய வாசகப் பயனை ஆசையாகப் பாராமல், பஞ்சேந்திரியங்கள் அது அது வேண்டிய விஷயத்திற் செல்வதற் கன்யமாக மாறுபடாமல் அதற்*

கண்வலையிற் பட்டுக் கலவிக் கலைபயின்றங்
குண்மை நிலையுணர்ச்சி ஓராமல்—திண்மையினால்
நாவிற் கொடுமை பலபிதற்றி நாடோறுஞ்
சாவிற் பிறப்பில் தலைப்பட்டிங்—காவிநிலை
நிற்கும்வகை பாராய் நிலையான நெஞ்சமே
பொற்பினுடன் யானே புகலக்கேள்—வெற்பின்மிசை
வந்திருக்க வல்லான் மதியாதார் வல்அரணம்
செந்தழலில் மூழ்கச் சிரித்தபிரான்—அந்தமிலா
வேத முடிவில் விளைவில் விளைவிலொளி
ஆதி யமலன் நிமலனருட்—போத
அறிவி லறிவை அறியு மவர்கள்
குறியுள் புகுதுங் குணவன்—நெறிகொள்

---

கேற்கப் பொருந்தி அதன் வரம்பு கடவாது நிற்க அதனால் விளைந்த பாவமாகிய நரகசமுத்திரத்திலே தாழக் கரைகாணாதவண்ணம் அமுக்குண்டு, மீண்டு வெளிப்பட்டவிடத்திலும் மெல்லியாகிய மாதர்தம் மான்விழி போன்ற விழிப்பிறழ்வின் பாசப்பிணிப்பினுக்குள்ளாய் அவர்களுடனே கூடுதற்கு வேண்டிய அமருகம் கொக்கோகம் முதலிய நூலின் பயனைப் புத்திபண்ணி, மெய்யாகிய ஞானத்தைத் தரப்பட்ட நூல்களைப் படித்தறியாமல், அறிவு சிறிதும் புகப்படாமற் சிக்கென்ற நெஞ்சாகையால் நாவாற் கடினமான கற்றுக் கதறியும், தினந்தினம் இந்தப்படி இறக்கிறதும் பிறக்கிறதுமே மேம்பாடாகப் பூண்டு திரியும், இப்படி இன்னதுவன்றியிலே சரிக்கும் ஆன்மாவாகிய நான் அசைவற ஒன்றினும் படாமலிருக்கும் நிலைக்கான உபாயஞ் சிந்தியாய், நீயே நானே யென்று பேதமில்லாத சத்தியாகிய மனமே! அதற்கு வகையாவது எப்படியாமென்று கேட்பாயாகில், உனக்கு நன்றாய் அழகுறத் தெரியும்படி நான் சொல்லுகிறேன் கேள்.

29—38. வெற்பின்மிசை - பேணிக்கேள்.

(உரை) தென்றிசை புனிதமாகவும் தேவர்கள் இருடிகள் பொருட்டாகவும் திவ்யமான திருமேனியாக உமையுடனே வெள்ளிமயமாகிய கைலாயமலையி னுச்சியிலே எழுந்தருளி யிருக்குந் தகுதியையுடையவன். அதுவன்றியிலும் தங்கள் தவ மிகுதியின் கர்வத்தாலுங் கோட்டைவலியின் பலத்தாலுந் தேவர்கள் இருடிகள் ஒருவரும் எண்

வெளியில் வெளியில் வெளியன் வெளியில்
ஒளியில் ஒளியில் ஒளியன்—ஒளியில்
அளியில் அளியில் அளியன் அளியில்
அளவில் அளவில் அளவன்—அளவிறந்து
நரு நின்றான் அனைத்தும் நிறைந்தான் நினைப்பவர்பாற்
சென்றான் தெரியத் தெரியாதான்—குன்று
விளக்காய் நிறைந்த விரிசுடரான் *மண்மேல்
துளக்காமல் நின்றபெருஞ் சோதி உளக்கண்ணுக்

ணிக்கையில்லாததுபோல அவர்களுட னொப்பாக நினைந்திருந்த முப்புராதிகளும் அவர்களுடைய கோட்டையுஞ் சிவந்த அக்னிசமுத்ரத்தினாலே காணாமற் போம்படி கோபாக்னியாகிய சிறுநகை செய்தருளின ஸ்வாமி. அப்படிப் பிரத்யக்ஷமான திருமேனியாயினும் சர்வ சப்தங்களையுந் தனக்குள்ளே யடக்கி முடிவில்லாமல் நிற்கும் வேதத்தின் தாற்பரியத்தின் பொருளுக்குத் தொனியர்த்தமான அறிவானது. முதலே மலமில்லாத நின்மலனாயினுங் கிருபையானவன். எல்லா அறிவுக்கும் மேலான ஞானமும் அதற்குத் தலைமையுந் தரிசித்த ஞானனந்திகள் திருமேனிகள் திருமேனியே தனது திருமேனியாகவுடைய இயற்கையன். ப்ருதிவி ஈறாக அடைவே தரப்பட்ட ஆகாச வெளிக்கும் வெளியாகிய பிரகிருதி வெளி அதற்குக் காரணமாகிய கலையான வெளியிலே நிலையானவன். அந்தக் கலாதத்துவத்திலிருந்தும் அதில் தோய்விலாதவன். அந்தக் கலைக்கு மேலாகிய ஒளியான அசுத்தமாயையொளி அதற்கு மேலாகிய சுத்தவித்தை யொளி அந்தச் சுத்தவித்தை யொளிக்கு மேலாகிய விந்துவாகிய வொளியிலிருந்து சகலமும் உண்டாக்கப்பட்டவன். அந்த விந்துவுக்கு மேலாய் அநுக்ரஹமே தொழிலான சதாசிவனுக்கு மேலாய்க் கிருபை தானான பராசத்தி அந்தப் பராசத்திக்குக் காரணமாய பரமசிவம். அப்படிக் கிருபையனாயினும் காண்டல் கருதல் உரையென்னும் அளவளந்த அறிஞரளவிற் களவானவன். ஆகிலும் அறிஞர் அளந்தறிந்ததில் அமிழ்ந்தாது அவ்விடத்து விரகு பிறக்கிற் சற்றுந் தோற்றாதாய் நீங்குஞ் சத்தியுடையவன். அளவையினாலே அளப்பதற்கும் அளப்பரிதாய நிலையையுடைத்தாய் ஜடசித்தாகிய எல்லாம் பூரணமாகி இப்படி

*விண்மேல் - பாடபேதம்.

கல்லாது தோன்றா அமலன் அகிலமெலாம்
நில்லாமல் நின்ற நிலையினான்—சொல்ஆரும்
ஈசன் பெருமை இருவினையேன் இன்றுனக்குப்
பேசுந் தகைமையெலாம் பேணிக்கேள்—பாசம்
பலவுங் கடந்து பரிந்தருள்சேர் பண்பாற்
குலவி விளங்குகுணக் குன்றோன்—இலகவே

ஒருபொருள் உண்டென்று நிச்சயிக்கப்பட்டவர்கள் மனதிலே புதிதாகத் தோன்றப்பட்டவனாகிலும் ஆன்மபோதத்தால் அறியப்படாதவன். ஒருகாலத்து ஓரிடத்து விளங்கியும் ஓரிடத்து ஓர்கால் நந்தியும் வாராது ஒருபடித்தாய் அசைவாற் கீர்த்தியாய் இருளறுக்கும் விளக்குப்போல ஆன்மாககள் மலவிருள் இரிக்கைக்கு விளக்காய் ஏகதேசப்படாமற் சர்வான்மாக்களிடத்தும் நிரம்பி மேன்மேற் பிரகாசிக்கப்பட்ட தேஜசாய்ப் பூமியின்க ணன்றியிலுஞ் சர்வ தேவர்களுக்குந் தேவனாகச் சலனமற்று ஒளியாய் வழங்குவதற்கெல்லாந் தான் ஒளி கொடுப்பதாய்ப் பெருமையுடைய பிரபை. தற்றெரிசனிக ளறிவின் கண்ணே தோன்றுவதன்றிக் கடபடாதிகள் போல ஊனக்கண்களுக்குக் காணப்படாதவன். அனாதி மலமில்லாதவன். அண்டங்கள் புவனங்கள் யாவையினும் அதன்கண் வாழுந் தாபரசங்கமங்கள்மாட்டுந் தோன்றாத் துணையாய் நிற்பதுதானே நிலைமையானவன். கன்மமல மாயாமல மிரண்டும் நீங்கின அஞ்ஞான ஆன்மாக்கள் எண்ணிறந்த படியாக வேதாகமங்களாலே திருவுளம் பற்றப்பட்ட புகழையுடைய சிவனது சரித்திரத்தைப் புண்ணியபாவப் பகுதியாகிய கன்மமல மாயாமல பந்தனாகிய யானும் இப்போதும் என்னாலியன்ற மரியாதி உனக்கின்னும் ஒருவகைத் தகுதிப்படச் சொல்லுகிறேன். அதை நன்றாகப் புத்திபண்ணிக் கேட்பாயாக.

38—39. பாசம் - குன்றோன்.

(உரை) காமியம் மாயை ஆணவமென்னு மும்மலத்தின் காரிய காரணங்களை யறிந்து நீங்கின உபசாரத்துடன் சிவஞான சம்பந்தரான ஆன்மாக்க ளிருதயமான பொதுவெளியிலே விளங்கி நின்ற குணமான மலையான்—இதுவன்றி எண்ணிறந்த படித்தாகும் பிணிப்பையுடைய ஐவகைச் சத்திகளினது வியாத்தி வியாபகங்களுக்கப்பா

செய்ய தருமச் செழுங்கிரியின் மீதிழிந்து
வையம் பரவ மகிழ்ந்தெழுந்தங்—கையங்
களவுபயங் காமங் கொலைகோபங் காதி
அளவில்வினை யெல்லாம் அழித்திங்—குளமகிழத்
தொம்மெனவே எங்கும் முழங்கிச் சுருதிபயில்
செம்மைதரும் ஆகமங்கள் சேர்ந்தோடி—மும்மலத்தின்
காடடங்க வேர்பறித்துக் கல்விக் கரைகடந்தங்
கோடுபல் பூதத் துணர்வழித்து—நீடுபுகழ்
மெய்வாய்கண் மூக்குச் செவியென்னப் பேர்பெற்ற
ஐவாய வேட்கை யவாஅகற்றி—மையும்இயல்
வாக்குப்பா தம்பாணி பாயுருபத் தம்பலவும்
நீக்கிச் செறிந்து நிறைந்தோடிப்—போக்கரிய
பந்தமெனுஞ் சோலை பறித்துப் பரந்தலைக்கும்
அந்தமனம் புத்தியுடன் ஆங்காரம்—சிந்திவிழ

---

லாகியும் அதனுட் கட்டுற் றிலக்கமிலவாய உயிர்க ளிவைக் கந்தரம் போற் றலையளிசெய்யும் பேரறிவா யதுவே பொருந்தும் தில்லைப் பொதுவில் யாவருங் கண்டு மகிழ்வுண்டாக நட்டம் பயில்வனவே குணமான மலையென் றுமாமென்க.

39—57. இலகவே - ஆறுடையான்.

**(உரை)** விளங்கச் செய்யப்பட்ட சிவபுண்யமான மலையிலே யிறங்கி, அபரஞானத்தின் தலைமைகண்டவரது கூர்ந்த அறிவுக்குப் பிரயோசனமாகி யேத்தும்படிக்குச் சந்தோஷத்துடனே வேக முடைத்தாய், ஒன்றை யொன்றாகத் திரியக் காணுதலையும் அங்குத் தோன்றுபுத் தோன்றுமாக நினைக்குதலையும் அச்சப்படுதலையும் ஆசைப் பற்றையும் பிறவுயிர் வதையையும் அகங்காரத்தையும் முறுக்கி, சத்தி அனந்தமான புண்யபாவங்களை யெல்லாங் கெடுத்து, களிப்புடனே ஜடசித்துக்கள் முற்றும் இயல்பாய் நாதமுழக்கஞ் செய்து வேகத்தினாலே நடந்து ஞானத்தின் பகுதியாய்த் திவ்யாகமங் களில் நன்றாய் அறிவாய்ச் சென்று, ஆணவம் மாயை காமியமென்று விரிந்திருண்ட காட்டு விருத்தி நாசமாம்படி அதற்குக் காரணமாகிய கிழங்கைப் பிடுங்கி, சர்வமுமாய்ச் சகல சத்தங்களுஞ் சகல சத்தத்தின் பொருள்களு முண்டாக்கியறிகையால் அதுவெல்லாந் தனக்குக் கீழா

*மோதி அருணீர்மை ஓங்கிவிறல் முக்குணமுங்
காதி உரோமமெலாங் கைகலந்து—சீதப்
புளக மரும்பப் புலன்மயக்கம் போக்கி
விளைவில் புலன்முட்ட மேவிக்—களபதன
மாதர் மயக்கம் அறுத்துவளர் மண்டலத்துச்
சோதியொரு மூன்றினையுஞ் சோதித்து—நீதியினால்
ஆதாரம் ஆறினுஞ்சென் றூறிஅடல் வாயுக்கள்
மீதான பத்தும் மிகப்பரந்து—காதிப்

கையாலும் அதனளவில் அளவுபடாமையாலுங் கல்வியினது வாம்பையும் உடைத்து, ப்ருதிவி அப்பு தேயு வாயு ஆகாயமென்னும் ஐந்து பூதமும் ஐந்து நான்கு மூன்று இரண்டு ஒன்றென்னும் அதன் ஜடப் பிரஞ்ஞைக் குணங்களின் விரிவையும் போக்கி, அநித்யமான ஊரும் பேரும் குடிமையும் அழகும் பெரியனென்னுங் கீர்த்தியும் நிறுத்தப்பட்ட ஆன்மாக்கள் சரீரத்தில் நிற்கும் பரிசத்தினது தன்மையும் வாயினிடமாக நின்ற சிங்ஙுவையின் தன்மையும் நேத்திரத்தினிடமாய் நின்ற ரூபத்தினது தன்மையும் துண்டத்தினிடமாக நின்ற ஆக்ராணத்தினது தன்மையும் கர்ணத்தினிடமாக நின்ற சோத்ரத்தினது தன்மையும் இப்படிப் பலவாய தன்மையாய்ச் சிங்கம்போன்று ஐந்து வாயினானும் விழைவை விரும்பும் ஞானேந்திரியங்களாற் பற்றும் ஆசையைப் போக்கி, தன்னைப் பெருமைக்காகாது கீழ்ப்படுத்துவிக்கு மியல்பினை யுடைத்தாகிக் கடின பாடணமாகச் சொல்லினின் விளக்கும் வாக்கையும் பாவவேதுவான காரியத்திலே செல்லக் கால்நின்று கமனிக்கும் பாதத்தையும் கியாதிலாப் பூச்சியங்களைத் தழுவாத புண்ணியத்திற் செய்யாது ஆர்வங் கண்ணோட்டமாகிய பசுத் தர்மத்திலே யிடுதலும் இது ஏற்கவொண்ணாதென்று விசாரியாமல் ஏற்குங் கையினின்று செய்யும் பாணியினையும் உதரத்தினின்று ஜலத்தையுங் கட்டத்தையும் வேறுவேறுபடுத்தும் பாயுருவையும் விடயானந்தத்தை இருவகையான கோசபவக் குறியினின்று விளக்கும் உபத்தத்தையும் இப்படிப் பலபேதப்பட்ட கன்மேந்திரியங்களைந்தையும் விடுவித்துத் தான் நெருங்கி அந்தத் தானங்களெல்லாம் நிரம்புவித்து, என்றும் நீக்கப்படாத சங்கற்ப விகற்பமாகிய பொழிற்

*மோதி யலைக்கும் அருணீர்மை முக்குணமுங் - பாடபேதம்.

பிருதிவியப் புத்தேயு வாயுஆ காய
உறுதி நிலமைந்தும் ஓடி—மறுவிலா
நான்முகன்மால் ஈசன் மகேசன் நலஞ்சிறந்த
தான்முகம் ஐந்தாஞ் சதாசிவமும்—ஆனதொரு
விந்துநா தங்கடந்து சுத்த வெறுவெளியில்
அந்தமிலாப் பாழடங்கத் தேக்கியபின்—முந்திவரும்

---

செறிவை வெளியாக உருவியும் நிறைந்தோடி, நான்கு நான்கு பேத மாக ஆட்டுக்காணும் அந்தக்கரணங்களினுடைய தற்குணங் கெடத் தாக்கி, பற்பலவாகச் செய்யுந் தத்வங்களின் சேட்டையை நிறுத்தி யாவுஞ் சிவஞானத்தின் தன்மையேயாகிப் பெருக வளரப்பண்ணி, சாத்விகம் ராசதம் தாமதமென்னும் பெயரினையுடைய குணத்ரயங் களின் செயல் பதி மாறிமாறிவரும் மிகுவெற்றியையெல்லாந் தனது ஒருபடித்தாய இன்பநிறையாற் கோபித்து, உடல்முழுவ துள்ளும் நிரம்பி மிகுதியாற் புறம்பு புக்கோடி மூன்றரைக்கோடி யுரோமவழி யெல்லாஞ் சுகம்பிறந்து மயிர்கள் சிலிர்ப்ப மாயாதனுவின் நித்யகுண மான தாபசோபமும் அஞுதி ஜனனமரண அழலிக்கையும் நீக்கித் தட்பமுடையவாய பெருஞ்சுகம் விளையப் புலன்களைந்தின் சிறுதொழி லான் மருட்டுவழிச் சார்தல் அறப்பண்ணி, அண்டத்துந் தனுகரணங் களுக்குக் காரணமாகிய வினைகள் நிரம்பிய சந்திர முதற் கலையீரு அறு வகை நிலங்களும் அடங்கச் சென்று பாய்ந்து, பசுங்கூட்டாகிய சந் தனங்களினுற் பொதிந்து நெருங்கிய கொங்கைகளையுடைய அங்கனை யார்கள் செய்யுங் கோலக்கோட்டிகளால் விழைவுற்றுச் செல்லும் அறி யாமையை நீக்கி, அண்டத்தும் பிண்டத்தும் எழுதல் இயல்பாகி வாத னையுடைய அக்னிமண்டலம் ஆதித்தமண்டலஞ் சந்த்ரமண்டலமாகிய முச்சுடர்களுந் தனது காருண்ய ஆணைப்படியே சர்வத்துக்கும்பொது வாய் நடுவுநிலைமையாயே நில்லாது அதிகாரமலத்தால் விகாரப்படாமல் பார்த்து நிறுத்தி, மூலாதாரஞ் ஸ்வாதிஷ்டானம் மணிபூரகம் அனுகதம் விசுத்தி ஆஞ்ஞையென்னும் ஆதாரத்தினடைவே முற்றும் நிறைந்து, ஒன்றோடொன்று மாறுபட்டுப்பொருதல்புரியும்பிராணன் அபானன் உதானன் வியானன் சமானன் நாகன் கூர்மன் கிருகரன் தேவதத் தன் தனஞ்செயனென்னு மேலாய மாருதமும் அண்டத்துக் காரண வாயுப் பத்தும் விளங்க மேற்கொண் டோடி மேலடாது கோபித்து,

அவ்வறிவுக் கப்பாலுஞ் சென்றகண்டம் உள்ளடக்கிச்
செவ்வறிவே யாகித் *திகைப்பொழிந்திட்—டெவ்வறி
ருரு தானுய வீடளித்துத் தன்னிற் பிறிவிலா [வுந்
ஊனுகி எவ்வுயிர்க்கும் உள்புகுந்து—மேனியிலா
அஞ்சவத்தை யுங்கடந் தாயபெரும் பேரொளிக்கே
தஞ்சமெனச் சென்று தலைப்பட்டு—வஞ்சமறத்

தேகத்தின் காரியமாய்ப் பஞ்சபூதத்தின் காரணமாகிய அண்டத்து அதோமுகமாய் நீடுகிற்கும் ஐவிதமான பூதத்தானங்கள் கலைக ளெங்கும் பரந்துநின்று, அண்டத்தும் பிண்டத்தும் உற்பவநாச குற்றந் தீரா ஆன்மாக்கள்போலாது கடவுளாகி நிராதார அதிட்டிதமாகி நிவர்த்தி கலை யதிபரான பிரமசிருட்டியையும் பிரதிட்டா கலையினின்று திதி பெற்றுச்செய்யும் விஷ்ணுவின் திதியையும் வித்தியா கலையினிருந்து சங்காரத்தைச் செய்யும் உருத்திரமூர்த்தி சங்காரத்தையும் சாந்தி கலையினிலையாகித் திரோபவத்தைப் பண்ணும் மஹேசுரர் மறைப்புச் செய்தலையும் ஆகாயபூத வியாபகவந்தமான சாந்தியாதீத கலைக்குக் காரணராகி அனுக்கிரகத்தை ஐவகை நிறமுடைய முகங்களாற் புரியுஞ் சதாசிவமூர்த்தி யனுக்கிரகத்தையும் இந்தக்கலைகளும் இந்தச் சதாசிவ மூர்த்திகளுந் தனுகரணமுதலியவையாகக் காரணமான சுத்தமாயை யின் அதோமுகமான விந்துவான பராசத்தியையும் அந்தச் சுத்த மாயையில் ஊர்த்துவமுகமாய் ஒசைவடிவாகிய அபரநாதத்தையும் பிற கிட்டு மேற்சென்று, சுத்தமாயாகாரணங் கடந்து நின்மலமாகி, நிராமய மான பரவிந்துவென்னும் பராசத்தியினது முடிவிலா வியாத்தியாகிச் சித்தஞ்செல்லாத சூனியமெங்குங் குறைவற நிரம்பி, அவ்வளவிலும் நில்லாது பரந்து, ஞானபாதங்களில் முதற் பேசப்பட்ட பராசத்தி ஞானத்து மேலாகிப் பூரணமான பரநாதத்தையுந் தனக்குள்ளே யாக மேல் தனதெல்லையளவு செறிந்தோடும் நீர்மையாய்ச் சுத்தப் பேரறி வேயாகி வேறு சந்தேகமில்லாது தீர்ந்து, பாதாளசத்தி தொடங்கிப் பரந்த வியாபகமும் பலவாய சத்திகளுமன்றி ஜடசித்தாகிய எல் லாப் பொருள்களின் ஞானங்களுந் தன்னதேயாகிய வாயினுஞ் சேர்ந்த உயிர்களுக்குச் சுத்தமுத்தியுங் கொடுத்துத் தனக்கு அபின்ன மான நிரதிகாரத்துக்குத் தான் திருமேனியாகியிருந்தாலும் மூவகையு

*திகைப்பொழிந்தங் கெவ்வறிவுந் - பாடபேதம்.

*தான்அந்தம் இல்லாத தண்ணளியால் ஓங்கிவரும்*
*ஆனந்தம் என்பதோர் ஆறுடையான்—ஆனந்தம்*
*பண்ணும் பயன்சுருதி ஆகமங்கள் பார்த்துணர்ந்து*
*நண்ண அரியதொரு நாடுடையான்—எண்ணெண்*
*கலையால் உணர்ந்து கருத்தழிந்து காம*
*நிலையான தெல்லாமும் நீத்தங்—கலைவறவே*

---

மல்லாத உயிர்களுக் குயிராய் நிற்குந் தன்மையுங் குன்றாதுமாகி, கண்டிக்கப்படாததாய்ச் சர்வமும் நிரம்பித் தூலசூக்குமமான இருவகையிற் சிருட்டி திதி சங்காரம் திரோபவம் அனுக்கிரகங்களாய ஐந்தவதாரமும் இல்லாததாகிப் பரமாய் நிர்மலமாய் நித்தமாய் ஒன்றாய்ச் சருவப் பிராணிகளுக்கும் அறிவாகி அசலமாகிப் போதங்களாற் செப்பவரிதாய்த் தற்சிவமாகிய மிகுந்த ஒளியே தனக்குக் காரணமாய்க் கதியாக அதனுடன் இரண்டறப் போய்ப் புக்கு—இதுவன்றியுஞ் சுத்தாவத்தையி லுண்டாகிய பஞ்சபேதமான அவத்தையுங் கடந்த பேரொளியே கதியாகச் சென்று யாய்ந்தெனவுமாம்.—, சொல்லிப்போந்தவை யாவுஞ் செய்யுமிடத்துச் சர்வப் பிராணிகளுக்கும் தத்தம் வினையால் வேறுபாடு காண்டலல்லது தான்செய்தால் பக்கஞ் சார்தலின்றி முடிவும் முதலென்பதும் இலவாகிச் சகல உயிர்களையுந் தனதியல்பில் நிறுத்துமென்னு நினைவாய் அளவிறந்த காருண்யந் தானே மேன்மேலும் வளர்கின்ற மிகுமின்ப சுகந்தானே தசாங்கப் பொருளுக்கு ஆறாய பகுதியுடையவன்.

57—58. ஆனந்தம் - நாடுடையான்.

**(உரை)** அருளாய் அடைந்த ஆன்மாக்களுக்குஞ் சுகசொரூபமே செய்வதற்குக் காரணமாகி அருணிலைமை அறிதற்குக் காரணக் கருவியான நான்கு வேதமும் இருபத்தெட்டுத் திவ்யாகமமுங் களங்கமற ஓதி அதன் தாற்பரியமுடிவை யறியச்செய்த மஹத்துக்களுக்கும் அந்த அறிவாற் பொருந்தப்படாது நுண்ணியதான சிற்சத்தித் தானமே தனக்கும் சுத்தமான நாடாக உடையவன்.

58—60. எண்ணெண் - ஊருடையான்.

**(உரை)** விரிந்த அபர ஞானமாகிய அறுபத்துநான்கு வகைப்பட்ட கலைகளினது ஞானங்களை ஆராய்ந்து ஒன்றின் கருத்து ஒன்று சொல்லாது வெவ்வேறு பேதப்பட்டுச் சொல்லுகையாற் பயன் நிலை

கூ0 தேட்டற்ற சிந்தை சிவஞான மோனத்தால்
ஓட்டற்று வீற்றிருக்கும் ஊருடையான்—நாட்டத்தால்
தெண்ணீ ரருவிவிழச் சிந்தைமயக் கந்தெளிந்
துண்ணீர்மை யெய்த உரோமமெலாம்—நண்ணும்
புளகம் புனைமெய்யர் பொய்யிற்கூ டாம
லுளகம்பங் கொண்டுள் உருகி—அளவிலா
மாலா யிருக்கு மவர்மனத்தை வாங்கஅருள்
மேலாய் விளங்கலங்கல் மெய்யினன்—தோலாத

---

யாமை கண்டு மனமுருகி நொந்து திரிவிதகரணங்களும் எப்போதும் பற்றாக ஆசைப்படுஞ் சுத்தமாயா பீடத் திருத்தல் முதலிய கீழுள்ள போகத்தானங்கள் முடிய அநித்யமென்று நீத்து அருளுருவாற் சலிப் பற நின்ற ஆன்மாக்களிடத்திலே அவ்விடத்து உதிக்குஞ் சிவஞான மதுவே தனுவாக ஆன்ம சகா விதமாகிய போக்குவரவற்ற பூரணத் வம் வந்தவிடத்து அழகுசெறியும் அனுபூதியாய பகுதிக்கு நாயகன்.

60—63. நாட்டத்தால் - மெய்யினன்.

(உரை) என்பதை-பொய்யிற் கூடாமற் சிந்தைமயக்கந் தெளிந்து நாட்டத்தாற் றெண்ணீ ரருவிவிழ வுண்ணீர்மையெய்த வுரோமமெலா நண்ணும் புளகம்புனை மெய்ய ருளகம்பங்கொண் டுள்ளுருகி யளவிலா மாலா யிருக்குமவர் மனத்தை வாங்க வருள் மேலாய் விளங்கலங்கன் மெய்யின னெனமாறுக. பொருளாவது :—மலையினுச்சியி னட்டுத் தெளிந்த நறுநீரானது இடையறாது விழுமாப்போல இரண்டு கண் களினாலுங் கண்ணீர் தாரைவிட ஆன்மாவினுடைய ஐயுறவு நீங்கி உள்ளே ஞானம் விளங்க மயிர்க்கால்தோறுஞ் சுகபுளக முண்டாகுஞ் சத்தியத் திருமேனியானவர் இந்தப் பிரபஞ்சப் பொய்யை நீத்தவர்க ளிடத்திலே கம்பிதமான ஆனந்தமுண்டாகத் தான் ஒரு பொரு ளென்னுந் தன்மைபோய் நீராளமாய்க் கரையிறந்த பற்றும் வாஞ்சை யுடைய ஆன்மாக்கள் செயலானது விஷயாதிகளிற் செல்லாமல் நிறுத் தித் தன்வயத்தாக்கும் அருளே யாவைக்கும் அதிகமாகத் தோற்றப் பட்டவையை அழகுசெறிய மாலையாகத் தரித்து அறிவுதானே தடித் தனவே திருமேனியாக உடையவன்.

வானம் புவனம் மலைகடல்ஏழ் பாதாளம்
ஊன்ஐந்து பூதத் துயிருணர்ச்சி—ஞானமாய்
எல்லாமாய் அல்லவாய் எண்ணுவார் எண்ணத்து
நில்லாமல் நிற்கும்நீள் வாசியான்—சொல்ஆரும்
பாதாளம் ஊடுருவிப் பாரேழும் விண்ணேழும்
ஆதார மாகி அகண்டம்நிறைந்—தோத
அரிதாய் எளிதாய் அருமறையா றங்கத்
துருவாய் உயிராய் உணர்வாய்ப்—பெரிதாய
வெய்யதுயர்ப் பாசமற வீசியே வெம்பிறவித்
துய்ய கடலைத் துகளெழுப்பி—ஐயமுறுங்

---

63—65. தோலாத - வாசியான்.

(உரை) பேரிருளாய் வழங்குதலில்லாத வெறுவெளிகளும் இருநூற்றிருபத்துநான்கு புவனங்களும் அஷ்டகுல பர்வதங்களுஞ் சப்த சமுத்திரங்களுஞ் சப்த பாதாளங்களும் ஆன்மகோடிகளுக் குடம்புண்டாகைக்கு மூலமுங் காரியப்படுவதுமான பஞ்ச பூதமும் அந்த ஆன்ம கோடிகள் யாவைக்கும் அறிவு எவ்வளவோ அவ்வளவுக்குத்தேர்தலுள வவ்வளவவ்வள வதன்றியேயாகியுஞ் சொல்லப் போந்தவை யித்தனையுந் தன்னிடத்திலே யுண்டாக்கி உண்டாக்கியும் வினைப்பகுதியால் விளக்குகையால் தானல்லவுமாய் போதமிக்கால் பகுத்தறியும் அறிவினர் பகுத்துக் காண்கைக்குக் காணுமையுங் காட்டுவதுமான சித்தாய் மனவேகமான இச்சை கிரியை ஞானசத்திகள் இத்தன்மையவானதே கடுங் குதிரையாக உடையவன்—இதுவன்றி அப்படித் தோய்ந்தும் தோயாமையுமான விசித்ரமான வாசியே வாசியாயுடையனென்க.

65—73. சொல்லாரும் - ஆணையான்.

(உரை) ஈசுவரவாக்யங்களாலே அதோமுகவுலோகங்களெங்குந் தடையறப் புகுந்து அதன்மேல் ஆதிருடுவாய் அதிற் பிலக்கத்தீவுமுதல் புண்டரீகத்தீவு ஈறுகச் சப்ததீவுள்ளும் அதன்மேலாகி ஊர்த்தமுகமான பூலோகமுதலாக அடைவே உயர்ந்த சத்யலோகமீறுக எழுமேலுலோகங்களுள்ளவாய்த் தான் நிலையாக நிற்கைக்குத் தானமாகி, அன்றியும் அதன்மேலாய வுலோகங்களாய்க் கண்டிதமன்றி அருவாயிருக்குஞ் சுத்த மாயாலோகம் யாவும் நிறைந்து, இப்படியிருந்தாலுஞ்

காமக் *குரோதலோப மோகமதங் காய்ந்தடர்த்துச்
சாமத் தொழிலின் தலைமிதித்து—நாமத்தாற்
கத்துஞ் சமயக் கணக்கின்விறற் கட்டறுத்துத்
தத்தம் பயங்கொலைகள் ஆங்கழித்தே—தத்திவரும்
பாசக் குழாத்தைப் படஅடித்துப் பாவையர்தம்
ஆசைக் கருத்தை அறவீசி—நேசத்தால்
ஆனவே கங்கொண் டருள்மும் மதத்தினால்
ஊனையார் தத்துவங்க ளுள்புகுந்து—தேனைப்

சுட்டிச் சொல்வதற்குக் காட்சியிற் படாது, ஆனால் இல்லாததோ வென்னிற் சுட்டிறந்தாற் சொல்லிற் பட்டதாய், அன்றியும் மேலோர்க் கல்லது உச்சரிக்கப்படாத வேதம் நான்கும் சிக்ஷை கற்பம் வியாகரணம் நிருத்தஞ் சோதிடஞ் சந்தமென்று சொல்லப்பட்ட அங்கங்களாறும் இவைக்குத் தானல்லது வேறுயிரின விலதாய் அதிற் பிரித்துப் பிரவஞ்ச சருவமுஞ் சொல்லுவதாய் அதுவே அதனுக்குயிராய் அதிலே நிச்சயமான தாற்பரியமே அந்த உயிர்க்கு ஞானமாய் இந்த விதத்தாலாய சரீரமே மிகப்பருத்து, தனது மெய்யடியார்களிடத்தில் கடினப் பிரவிர்த்தியான பொல்லாத பந்தக் கட்டை அற்றுப்போம்படி செய்து, திரிவித காரணங்களினால் ஏறுசெய்திக் கிடான பற்பல ஜனிப்புத் தாபசோபமாய்ப் பற்றுக்கோடாய்க் கரையிறந்து நிலைகாணாத சாகரத்தைப்போலப் பயனிலவாய ஜனனசாகரத்தை நன்றாய் நசையீரஞ் சிறிது மில்லாது தகவெழக் கடந்து, சந்தேகப்படுவனவும் விஷய விருப்பும் அதனால் வரும் வெகுளி ஈயாமை யாதுந் தெரியாமல் மயக்கிற்படுகை தன்னை மதித்து கெர்வித்தல் முதலானவைகளை வெகுண்டு நெருக்கி, மரித்து மரித்துத் திரிவதற்குக் காரணமாய புவனபோகத்தை நசுங்க மிதித்து, வேறுவேறு பெயரிட்டு—கொள்ளே அச்சம் பொருந்தி—,தீர்க்கப் பிரயோசனமில்லாத நூலாகிய பற்பல வார்த்தையாகக் குரைக்கும் புறச்சமயிகளாகிய புன்மையர் கோவை செய் தகுதியின் வெற்றியைச் சின்னாபின்னமாகத் துணித்து, தன் திறமற்று அச்சமுறல் பிறவுயிர் கோறல் முதலிய செய்வதற் கிசைதலை நாசஞ்செய்து, நாடோறும் நாடோறும் புனைந்த செயலுரைகளின் பிணிப்பாற் பெருகிவரும் புத்திரர் முதலாயின் பற்றும் வேரற அடர்த்து

*குரோதமத மாச்சரியங் - பாடபேதம்.

பருகிக் களித்துயர்ந்து பன்மறைநாற் கோட்டால்
மருவித் திகழ்ஞான ஆனையான்—இருமுச்
சமையங் கடந்து தனக்கொப் பிலாது
சுமைதுன்ப நீக்குந் துவசன்—கமையொன்றித்
தம்மை மறந்து தழலொளியுள் ளேயிருத்தி
இம்மை மறுமை இரண்டகற்றிச்—செம்மையே

---

மோதி, காத்ரப்பற்றைச் சிறிதுமில்லாம லறுத்து, அளவற்ற கருணையினால் எந்த விதத்தினாலே ஆன்மகோடிகளின் பந்தம் நீங்குமென்கிற நினைவான கடுமைதானே குணமாகி--அதுவன்றியிலும் அந்தக் கிருபைதானே மிக்க ஆராமையாகிய மயக்குற்று.-,உமை திரு வாணியென்னும் மூன்று சத்திகளையும் மும்மதமாகப் படைத்து அந்த மதங் களைக்குங் கர்வத்தாற் சாதாரணமாகி தேக காரியமான தத்வம் எவ்வளவுள அவ்வளவும் அதனுட்செறிந்து அந்தத் தத்வங்களுடம்பாய உயிர்கள் அவைகளினாலே விஷயநுகர்ச்சி நுகர்தற்குரியன உட்கலந்து நிற்றலாலே அந்த புவனபோகங்களில் தனக்கு யோக்யமான நிர்மலமாய சுத்த மாயாபோகத்தில் உண்டோ வில்லையோவெனச் சிறிதே தேன் போன்ற தெளிவைக்குடித்து அதனால் மிகுசலில்லாப மடைந்து வீறிட்டு மிகவும் உன்னதமாக யாவையினும் நீண்டு வெகுவிதமான வேதங்களெல்லாவற்றையுந் தனக்கு நாலு கொம்பாகப் பொருந்தி விளங்கா நின்ற கிரியை இச்சா ஞானமே தனக்கு அங்கமான கொலுயானையாக உடையவன்.

73—74. இருமுச் - துவசன்.

**(உரை)** உட்சமயங்களான வாமம் வைரவம் மஹாவிரதம் காளாமுகம் பாசுபதம் சைவம் ஆறினுங் கொண்ட பொருணிலைக்கு மேம்பட்டு அந்த நிலை அந்த அருளினர் நிலைக்கல்லது பின்னை யாவர்க்குங் கட்டாமையால் ஒப்பற்றுச் சர்வதொழிலையுஞ் சுமத்திக்கொண்டு துன்புறும் உயிர்களினை வைத்துத் தாம் யாவைக்கும் பிராத்திகனென்னும் அறிவை விளக்கி அந்தத் துன்பச்சுமை யில்லாதபடி செய்தலால் அவையே அவனுக்குக் கொடியாக உடையவன்.

74—77. கமையொன்றித் - செடுமுரசோன்.

**(உரை)** விஷயப்பகுதியாற் புலன்வழிச் சேறலை யடக்கித் தாப சோபமாற்றி உயிரென்று வேறேயொன் றில்லை பிராணவாயுவே

*வாயுவை ஓடா வகைநிறுத்தி வானத்து*
*வாயுவையும் அங்கே யுறஅமைத்துத்—தேயுவால்*
*என்றும் ஒருதகைமை யாயிருக்கும் இன்பருளே*
*நின்று முழங்கும் நெடுமுரசோன்—அன்றியும்*
*மாலும் அயனும் வகுத்தளித்த வையமெலாஞ்*
*சாலும்அதற் சப்பாலும் எப்பாலும்—மேலை*
*யுலகும் உலகால் உணரவொண்ணு ஊரும்*
*இலகி நடக்கும்எழில் ஆணையான்—அலகிறந்த*

---

யென்று அறுதியிட்டு முக்கோணமான மூலாதாரத் தக்கினியை ஜொலிப்பதற்காம் வகையாலே ஜொலிக்கப் பண்ணி இந்தப் பூததனு விற் புசிப்பும் இதுவன்றி நீங்கித் தேவலோகம் முதலான தானங்களுக் கான உடம்பிற் புசிப்பும் இவையிரண்டுமல்லவாய் இந்தத் தனுவிலே சுபாவமாக நடக்கும் இடைபிங்கலையான வாயுக்கள் இரண்டும் நட வாது தம்பிக்கச்செய்து, அதுவன்றியும் புறம்பாய் இதற்குச் சகா காரணமாயுள்ள பூதவாயுவின் சகாயத்தையும் நிறுவித்துச் சுழுமுனை நாடியி னுண்டாய வாயுவாலே மூலாதாரத்தில் ஜொலிக்கிற அக் கினியை யெழுப்பி இலாடத்தானத்துச் சந்திரமண்டலத்திலே தாக்கி அதினுண்டாய அமிர்த கசிவாய புசிப்பால் உள்ளெங்கு மின்பாய் அதுவே புசித்து முன்னுள்ள தனுவுக்குள் நரை திரை மூப்புமிருத மற்று அந்த உடம்பே வஜ்ரகாயமாய் இளமைபெற்று அளவிறந்த காலம் நித்யராயிருக்கும் மஹாத்மாக்களுள்ளே நீங்காமல் எப்பொழு தும் விளங்கிய பேரொலியே பெரிய பேரிகையொலியா யுடையவன்.

**77—79.** *அன்றியும் - ஆணையான்.*

**(உரை)** அல்லது பிரமாவினுலே சிருஷ்டிக்கப்பட்டு விஷ்ணுவி னுலே இரக்ஷியாநிற்கின்ற பிரகிருதிக்குக் கீழ்ப்பட்ட உலகமெங்கும் பெருகினதன்றி அசுத்தமாயையினுடைய உருத்திரமூர்த்திகளாலே நடக்கப்பட்ட உலகங்களும், அன்றியினுந் தனித்தனியாகக் கீழும் மேலும் உண்டாய உலகங்களும் அதற்குக் காரணர்கள்மாட்டு யாவைக் கும் மேலாய் அசுத்தமாயையினுண்டாய உலகங்களினும் அதில் அதிப ரிடத்தும் ஆன்மாக்க ளறிவால் அறியப்படாத குய்யத்தானங்களினும் விளங்கப் பிரகாசித்துச்செல்லும் அழகிய ஆக்கினையினை உடையவன்.

அ0 காட்சியான் காட்சிக்குங் காணான் கலைஞான
ஆட்சியான் ஆட்சிக்கும் ஆயினான்—சூட்சியான்
பாருந் திசையும் படரொளியா லேநிறைந்தான்
தூருந் தலையுமிலாத் தோன்றலான்—வேராகி
வித்தாகி வித்தின் விளைவாகி மேவுதனுச்
சத்தாதி பூதங்கள் தானாகிச்—சுத்த

79—81. அலகிறந்த - தோன்றலான்.

(உரை) எண்ணிறந்த ஆன்மாக்களுக்குந் தான் ஒருவனே புகலிடமாக இருந்தாலும் ஒருபடித்தாகாமல் அவரவர் கோட்பாடுகளுக்குத் தக்கதாக வேறுவேறு ஒன்றோடொன்று இசையாதபடியாகக் காணுந் தன்மையன். உயிர்கட்கு மேலாய ஞானங்கொண்டல்லது தற்போதங்களினாற் காணப்படாதவன். வேதாகமங்களின் பொருளினாக நிச்சயிக்கப்பட்டுள்ளவன். அந்த வேதாகமங்களினால் நிச்சயம் நிலையிடப்பட்டவைக்கெல்லாந் தான் நிலையாதவன். தான் மேலாய ஸ்வரூபியாயிருக்கினும் சர்வான்மாக்களுக்கும் அதுவே பேறாக்குகையின் பொருட்டு அவ்வவர்கள் மதத்துக்கிடாக நன்மை தீமை புசிப்பதற்கு வேதனை விதமான காரியங்களையும் உண்டாக்கப்பட்டுடையவன். பூலோகமெங்கும் எட்டுத்திக்கும் கீழும் மேலுஞ் சஞ்சரிக்கப்பட்ட பரிதி அங்கி இந்து மற்றுமுள்ள ஒளிகட்குத் தான் ஒளியுமாய் அந்த ஒளி மூர்த்திகளுக்கும் பிரபை கொடுத்துள்ளவன்; ஒரு முதல் சொல்லப்படுமிடத்து அதற்கு அடி முடி உண்டாகையால் அப்படிப்போல்வதோர் அடி நடு அந்தமிலாதாகித் தானே தோன்றிய முதலானவன்.

81—83. வேராகி - ஒருவன்.

(உரை) தாபர சங்கமமென்னும் இருவகைத்திணையில் தாபரங்களுக்குப் பொருந்தும் உயிர்காறுங் கருவிமுதற் காரணமாகிய பீஜமும் அதற்கு நிலையாகிய மூலமும் அதன்மே லெழுந்துண்டாம் பணை சினை அடை தளிர் பலங்களுமாக்கி, சங்கமங்களுக்குப் பொருந்துமுயிர்க்கு அது அதுகளுக்கேற்குங் காரணங்களுந் தனுக்களுமுண்டாக்கி, அதற்குள் நடத்துங் காரண பூதங்களையும் படைத்து, அந்தப் பூதாதிக்குக் காரணமாய தன்மாத்திரையாய்ச் சத்தமுதலியவற்றைப் பூதாதியாங்காரத்தினும் உண்டாக்குவித்து, அப்படிப் பிரகிருதி மாயாகாரியத்தை அதிஷ்டித் தாக்கினாலும் அவனுண்மை சொல்லுமிடத்துச்

வெறுவெளியாய்ப் பாழாய் வெறும்பாழுக் கப்பால்
உறுபொருளாய் நின்ற ஒருவன்—பொறியிலியேன்
வெம்பும் பிறவியலை வீழாமல் வீடளித்த
சம்பந்த மாமுனியென் தம்பிரான்—அம்புவியோர்
அஞ்சு போற்றுந் திருவடியென் புன்தலைமே லேபொறித்தோன்
ஏற்றின் புறத்தமைந்த எங்கோமான்—சாற்றுவார்

---

சுத்தமென்ற அபரவிந்துவையும் வெறுவெளியாய அபரநாதத்தை யும் பாழாய பரவிந்துவையும் வெறும்பாழாய பரநாதத்தையுங்கடந்து இவைகளிற் றோய்ந்த குணமில்லையாய்த் துகள்தீர்ந்த ஆன்மாக்கள் பெறும் பேறாய்ச் சலனமற்ற தனி முதல்வன்.—அபரவிந்துவைச் சுத்தமென்றது சதாசிவ முதலிய மூர்த்திகளுக்குத் தனுவாகையினு னுஞ் சுத்தமாயாமந்திரம் இதிற் பிறக்கையானுஞ் சிவசத்திகள் இதிற் றோய்ந்திட்டிருக்கையானுமென வறிக. அபரநாதத்தை வெறுவெளி யென்றதென்னையெனில், சிவசத்திகள் தாக்கின் மேற்கொண்டு பரா சத்தி வெளியிற் படருகையாலும் அருவாகையாலுஞ் சுத்தமாயையில் ஊர்த்தமுக மாகையாலும் அவ்விடத்துண்டாவது யாதுமில்லையாகை யாலுமெனவறிக. பரவிந்துவைப் பாழென்றது அவ்விடத்துப் பொருந் திய ஆன்மாக்களின் சத்தி செயலில்லாதாகையாலும் நித்தநிராமய மாகிய நிர்மலமாகையாலு மெனக்கொள்க. பரநாதத்தை வெறும் பாழென்றது அந்தத் தானங்களிற் பற்றிய உயிர்கள் உயிரொன்ப தொரு முதலு மற்று ஞேயந்தானே யாகுகையால் அப்படிச் சொன்ன தென அறிக. அப்பாலுறு பொருளாய் நின்ற ஒருவனென்பது திரி புடியும் நஷ்டமான பெறும்பேறாய் ஏகாந்தனாய் நிறைந்த அசல மென்றதெனவறிக.—இப்படிப்பட்டவன்,

83—88. பொறியிலியேன் - இயல்பினன்.

**(உரை)** அப்படி சர்வசூன்யனாகி மறைந்தவனாயினும் பிரத்யக்ஷ மாகப் பிரபஞ்சத்திலே சத்தாதியாய இந்திரியம் நிற்க மெய் வாய் கண் மூக்குச் செவியென்னுந் தானங்களும் வழக்கமில்லாத யான்—அது வன்றியினும் அவன்செய்த காரியத்துக்குப் பிருத்தியான பாத்ரமில் லாத யான்—துயரஅழலினாலே வாட்டும் பிறவிக்கடலில் அழுந்தாமல் மோக்ஷத்தைத் தந்து சம்பந்தமாமுனியென்னும் மஹத்தாய நாமத் தினையும் புனைந்து எனக்குச் சாமியுமானான். இம்மட்டுமல்லாமல்,

*சாற்றும் பொருளான் தனிமுதல்வன் தானல்லான்*
*வேற்றின்பம் இல்லா விளங்கொளியான்—போற்றுங்*
*குருவேட மாகிக் குணங்குறியொன் றில்லாப்*
*பெருவேட மாய்நிறைந்த பெம்மான்—கருவேடங்*
*கட்டும்உருக் கட்டறுத்தான் கற்றவர்வாழ் தில்லையான்*
*எட்டுமவர்க் கெட்டா இயல்பினன்—மட்டவிழ்தார்*

---

சமுத்ரஞ்சூழ்ந்து அழகிய உலகிலுண்டான மஹத்துக்களும் மானுடராயினோர் யாவரும் வந்தனை செய்யப்பட்ட தனது அழகிய பாதமிரண்டும் ஒன்றுமாகாத ஈனமான என்னுடைய சிரசில் ஒருக்காலும் மறையாமல் விளங்கவைத்தவன். அவன் நாமரூபியாயிருந்தாலும் அறிவால் விசாரிக்கில் புண்ணியரூபமான விடபநந்தி முதுகின் மேலே யிருக்கப்பட்ட என்னுடைய கத்தன். பற்பலவாய சமயிகள் அவரவர்கள் வேறு வேறாகச் சொல்லுஞ் சொற்கு அர்த்தமானவன். ஒன்றோடுங் கூடாது ஒருவனாகச் சர்வத்துக்குங் காரணனாயினும் அப்படிச் சுட்டிக் காணப்படாதவன். நிர்மலமாய் அழியாததாய் வேறொன்று வந்து பொருந்தாததாய் ஒப்பற்றதா யிருக்கப்பட்ட சுகசொரூபமாய்ப் பிரகாசிக்கப்பட்டவன். இப்படி நிகழ்த்தலாய்ப் பிரகாசத்தை யுடையனாயினும், மந்தம் மந்ததரம் தீவ்ரம் தீவ்ரதரமென்னும் நான்கு சத்திநிபாதமும் பொருந்திய சகலரை இரக்ஷிக்கை நிமித்தமாக அவர்கள் அறிந்து வழிபடத்தக்க ஆசிரியரூபத்தைத் தரித்துளனாயினும் நாமரூபக் குணங்குறியிலவாகி எங்கும் நிரம்பி ஒழியாத திருமேனியான பெரிய கத்தன். நால்வகைத் தோற்றத்தின் எழுவகைப் பிறப்பினும் அதற்கதற் கேற்ற யோனிகளினுருவாகைக்குக் காரணமான கன்மமல ஆணவமல அனாதிப்பிணிப்பைச் சுத்தமாக அரிந்தவன். வேதாகம சம்பன்னராயுள்ளவர்கள் நிரம்பிய வாழ்வுடைய சிதம்பரமாகிய தில்லைவனமே தனக்கு ஊராக உடையவன்.—நூலறிவாலே மிக்கவர்களைப் பிரபஞ்சவாழ்க்கையில் வாழுதலிலதாகச் செய்பவனெனவுமாம்.—பிரமா விஷ்ணு இருவருஞ் சபதமிட்டுக்கொண்டு அடிமுடி யறுதியிடுவோமென்று தேட இன்னுங் காணாதவன்.—அன்றியும் தற்போதமிகுத்தோர் அளவைகொண்டு மட்டிட அந்த மட்டில் அடங்காதவன்.

வானோன் பவனி வரக்கண்டு வல்வினையேன் [ப்
ஏனோரும் ஏத்துதல்கண் டேத்தினேன்—தானென்னை
௯௦ பார்த்தான் பழையவினைப் பஞ்சமலக் கொத்தையெல்லா
நீத்தான் நினைவுமே வாக்கினான்—ஏத்தரிய [ம்
தொண்ணூற் றறுவர்பயில் தொக்கிற் றுவக்கறுத்தான்
கண்ணூறு தேனமுதங் காட்டினான்—வெண்ணீறும்

---

88—91. மட்டவிழ்தார் - காட்டினான்.

(உரை) ஞானசூரியனாக என்னுடைய ஸ்வாமி எழுந்தருளுகை யால் மலபந்தமாய்த் திணிந்த பூதவிருளாய் அந்தகாரமாய் மூடிக் கொண்டிருக்கும் ஆன்மாக்க ளிதயமாகிய மொக்கை விகசிதமாக்கி மலர்த்துதலால் அதில் ஞானாமிர்த மதுக்களை யுண்டு தேக்கிடப்பெற்ற பிரகாசம் பொருந்திய ஞான சிற்சத்திவடிவாகிய கொன்றைமாலை மார் பிலங்க எழுந்தருளி வாராநின்ற பெண்ணாகடந் திருப்படைவீடாகிய மறைஞானசம்பந்தமாமுனி ஒன்றுக்கும் பற்றாத என்னை அடிமைக் கொள்ளும்படி பவனிவரக் கண்டு நல்வினை வல்வினை யிரண்டும் அறி யாத எண்பத்துநான்குநூறாயிரம் யோனிபேதத்தில் மொத்துண்ட உயிர்கள் யாவருங் கண்டு ஆனந்தபரவச மடையும் பகுதியில் யானும் ஓர் உயிராகக் கண்டு தொழுதேன். அடியேன்பேரிற் சிவோகம் பாவித்துப் பூரண திருஞானப் பார்வைசெய்து யானெனதென்னும் பழவினையாகிய மூலஆணவமலம் திரோதை மாயை கன்மம் மஹா மாயை இவ்வைந்தினுடைய மூலக்கிழங்கை ஞானாக்கினியினாற் பசை யற எரித்துப் பாழ்படுத்தி யான் ஒரு நாயகபுருடனாகவுந் தமது திரு வருளே நாயகியாகவும் அளிகள் மத்தமதுக்களை யுண்டு மயங்கிக் கிடப் பதுபோல என்மனத்து எனக்குத் தெரியாமையாய்ப் பற்றற வேறாக் கிப் பசுகரணஞ் சிவகரணமாக்கி இரதகுளிகையைச் சேர்ந்த செம்பு போல என்னைத் தன்வசமாக்கித் தத்துவக்குப்பைகளாகிய தொண் ணூற்றறுவரையுங் கீழ்ப்படுத்திச் சரீரத்துவக் குப்பைகளனைத்தையும் பதைப்பற அறுத்து ஞானானந்தத் திருநோக்கினாலே பேரின்பவெள் ளத்தை என்னுள்ளும் புறம்பும் ஒழுகும்படி காட்டினான்.—தனது சிற்சத்தி விளங்காநின்ற திருவடியை அடியேனுக்கு உள்ளபடி காட்டி னான்.

வேடமும் பூசையுமே மெய்யென்றான் பொய்யென்றான்
மாடையும் வாழ்க்கை மனையுமே—நாடரிய
அஞ்செழுத்தின் உள்ளீ டறிவித்தான் அஞ்செழுத்தை
நெஞ்சழுத்தி நேய மயலாக்கி—அஞ்செழுத்தை
உச்சரிக்குந் தேண்மை யுணர்த்திஅதன் உச்சரிப்பு
வைச்சிருக்கும் அந்த வழியாக்கி—அச்சமறச்
சென்று விளக்கை எழத்தூண்டிச் செஞ்சுடரின்
ஒன்றி ஒருவிளக்கின் உள்ளொளியாய்—நின்ற

---

91—92. வெண்ணீறும் - மனையுமே.

(உரை) பராபரமாகிய வஸ்துவே திருவெண்ணீறும், அகப்பற்றுப் பாழ்படுத்திய அடியார்கள் திருவேடமும், பஞ்சசுத்திசெய்து சித்திர தீபம்போல மனதை நிறுத்திச் செய்கிற பூஜையுமே மெய்யென்றும், பொய்யான திரவியமும் பிரபஞ்ச வாழ்க்கையும் மனைகளும் பொய்யென்றும்,

92—99. நாடரிய - ஈர்த்தான்.

(உரை) சம்பிரதாய வழியிற் கர்ணபாரம்பரையல்லது தறிய அரிதாகிய அஞ்சக்கரத்துக்கு அதிதெய்வஞ் சிவமுதல் மலமீறாக ஐந்து காரணமும் அடைவே நிற்குந் தன்மையுணர்த்தி, அதன்றி அந்த மந்திரம் இருதயத்திலே நீங்காதபடி வடுப்படச்செய்து அதினுண்டா மனுபவத்துக்கும் ஆசைப்பற்றுண்டாக்கி—இப்படியல்லது நெஞ்சுள் நடுவாக உயிரடையாளம் நிறுத்தி மேல் தாலு இலாடத்தானத்தில் ஞானநேயத்தை நிறுத்தி அதனோடு பொருந்துமாசையை யுண்டாக்கி யெனவுமாம்.—, இலாடந் தாலு இருதயம் நாபி மூலமாகிய அஞ்சு காரணத்திலுஞ் சிகாரமுதலாய் அமைத்தபடியே உச்சாரணம் பண்ணும் வகையையும் அனுதியுள்ளபடி யறிந்து அந்த உச்சாரணம் பண்ணுகைக்கே அக்கரமும் அதன் மூர்த்திகளும் நிறுத்தி மார்க்கத்திலே மனதினுடைய சஞ்சலத்தை நிறுத்தி இந்தச்செய்தொழிலிலே பிரவர்த்தித்து, எரியுந் தீபத்தைக்கோல்கொடு தூண்டியபோது உண்டாய மிகுபிரபை போன்றதாகச் சிகார அக்கரத்தையும் அதனை நீங்காத சத்திரூபமான வகரம்நிலையொத்த தீபநிறமாகவும் அதற்குள்ளே கனற்பொறி நிறம் பெற்று நின்ற யகரமாகிய ஆன்மாவை வகரவொளியானது பற்றி மேலாய் மிகுந்த சிகாரமாகிய தீக்ஷையிலே உச்சரிப்புக்

பெருவிளக்கின் *பேரொளியாய் உள்ளே பிரசம்
மருவும் மலர்போல் மதித்தங்—கருவினுருக்
கொள்ளா அருளைக் கொளுத்திக் குணங்குறியொன்
றில்லா இடத்தே இளைப்பாற்றி—விள்ளாத
உள்ளம் முதலாக உள்ளதெலாம் வாங்கஅருள்
வெள்ள மயலளித்து மேவினான்—கள்ளம்
மறப்பித்தான் மெய்ஞ்ஞான மாக்கிமன மெல்லாம்
இறப்பித்தான் என்பிறவி யீர்த்தான்—விறற்சொல்லுக்
கெட்டானை யார்க்கும் எழுதா இயற்குணங்க
ளெட்டானை ஆற்றா எழுத்தினான்—மட்டாரும்

---

கூட்டி இலாடமுதல் இருதயமீறாக உள்ளேதான் பாவிப்பித்து, இப்படிப் பாவிக்குமிடத்துப் பூவினுண்டாய தேன் போக்குவரத்தில் லாமல் அவ்விடத்துப் பருவத்தாயதுபோலப் பாவித்து, இப்படிப் பாவிப்பித்தவிடத்து அந்தப் பாவனை இறக்க அவ்விடத் துண்டா கிய மாயையில் தோயாத அருளைப்பிரவேசிப்பித்து, அருளொழியினும் நில்லாது காண்டலும் உணர்ச்சியிற்படலும் இல்லாதாகிய தானத்திலே என்னுடைய ஜனனமரண தாபசோபத்தைப் போக்கின ஞேயமான சுகத்தில் நிறுத்தி. வாயே திறக்க வழக்கில்லாமல் என் உயிர் உடல் பொருளாயதெல்லாம் தான்கொண்டதனுக்கு அவனால் தரப்பட்டது தன்னுடைய கிருபாசமுத்திரமாகத் தலையளிசெய்த பற்றேபற்றாக வாழ்ந்து மயங்க எனக்குத் தந்து இரண்டற்ற உணர்ச்சியாகக் கூடினான். எனக்குளதாய அஞ்சவத்தையெல்லாம் போக்கிப் பேரறிவே யாகச் செய்து என் கரணச்செயல் யாவையுங் கெடுத்து எனக்குள்ளதாய நடந்த ஜனனத்தையும் அறுத்தான்.

99—100. விறற்சொல்லுக் - எழுத்தினான்.

**(உரை)** சர்வசொற்களுக்கும் மூலமாய் மேலாய வேதங்களுக்கும் அறுதியிடப்படாதவன். ஒருவராலுஞ் செய்துமுடியாக் கிரமமும் யாவராலு மொப்புத்தீட்டாச் சரீரமு முடையவன். பிரபஞ்ச சிருஷ்டி இரக்ஷை காரணமாகிய மாயாகாரியத்துக் காரியமாகிய குணங்களைப் பொருந்தினனாயினும் அதில் தோய்விலாதவன்.—ஆகில் அதற்கு அறுதி எப்படி என்னில்? என்றும் பசுஞானங்களைப் பொருந்தின னாயினும் அதில் தோய்விலாதவன். ஆகில் அதற்கு அறுதி எப்படி

---

*பேரொளியி னுள்ளே - பாடபேதம்.

பாடலார் ஆடலார் பண்பலார் நண்பலார்
ஆடலா ராடல் அகன்பதியாம்—கூடலார்
காணக் கிடையாதான் காண்பார்க்குக் காட்சியான்
பாணர்க் கிலகு பலகையிட்டான்—சேணிற்
சிறந்த உருவான் திருமாலுக் கெட்டான்
நிறைந்த திருவுருவில் நிற்போன்—கறங்குடனே

யென்னில், நாற்செய்தியுந் தொழிலுஞ் சரித்திரமுங் காட்டலுமே அதுதானே இயற்கையாகிய சர்வகர்த்திருத்வ முடையவன் என்க.—இப்படிப்பட்டவனாகிலும் வழிபடுமடியார் விதியானவன்—அன்றியும் சர்வத்துக்கும் உற்பத்திக்காரணமான பிரணவாக்ஷரகாரணன்.

100—102. மட்டாரும் - பலகையிட்டான்.

**(உரை)** என்பதை-ஆடலாராடல் அகன்பதியாங் கூடலார் மட்டாரும் பாடலா ராடலார்பண்பலார் நண்பலார் பாணற்கிலகு பலகையிட்டான் காணக்கிடையாதான் காண்பார்க்குக் காட்சியான் என்று பொருளுக்கேற்க மாறுக. பொருளாவது:—தாளவகை முழுவதும் நவநாடகவிதி முழுவதும் அறிந்து எந்த வேளையினும் நடம்புரியாது பெருகி மிக்க நகரமாகிய மதுரையிலே மந்தரம் மத்திமை தாரகமென்னும் அறுதியையுடைய பண்கள் இராகங்கள் யாவையுங் கரைகண்டு அந்தப் பண்களுக்குள்ள தாளவகையையும் நூற்றெட்டுத் தாண்டவத்தையும் நிலையிட்டதுமன்றிப் பலபேதமாகிய பண்பு முழுவதுங் குணங்கள் யாவையினும் அதிகமான நண்பாய வகை யாவும் நிறைந்த அடியாராகிய யாழ்ப்பாணநாயனுர் ஏறியெழுந்தருளியிருந்து தம்மைப் பாடி யாழ்வாசிக்க யுகந்தோறும் யுகந்தோறும் வித்வமுத்திரையா லுயர்ந்தோர் பலரும் ஏறியிருக்க இடங்கொடுத்து விளங்கப் பட்டுவருஞ் சங்கப்பலகை யாசனம் போட்டருளினவன்.—அன்றியிலும் பொற்பலகை போட்டருளினு னெனவுமாம்.—எந்தெந்தத் தந்திரங்களினாலுங் காண்போமென்பவர்க்குங் காணப்படாதவன். தனதருட் காட்சியார்க்குப் பிரத்தியக்ஷமானவன்.

102—107. சேணிற் - செப்பக்கேள்.

**(உரை)** அதுவன்றியிலும் அந்திவானில் விளங்குஞ் சிவப்புப் போன்ற திருமேனியனாயினும் பூமிமுதல் ஆகாயமளவாக வளர்ந்த விஷ்ணுவுக்கு முயர்ந்தவன். அதுவுமன்றிச் சர்வ அண்டங்களினும்,

சூறைசுழல் வண்டு சுழல்கொள்ளி *வட்டமெனு
மாறு கருணையினால் மாற்றினான்—நீறணிந்த
மெய்யன் விமலன் அமலன் அருள் வீடளிக்கும்
ஐயன் அறி வுக்கறி வாயினான்—பொய்யர்பாற்
பொய்மையாய் நின்றான் புரிந்தவர் தம் நெஞ்சத்து
மெய்மையாய் நின்று விளங்கினான்—கைமழுவன்
அத்தன்பால் நீசென் றடையும் இடத்தையெலாஞ்
சித்தஞ்சேர் நெஞ்சமே செப்பக்கேள்—நித்தலுமே
பூசிமுடித் துண்டுடுத்துப் பூங்குழலார் தங்கலவி
யாசைதனிற் பட்டின்ப ஆர்கலிக்குள்—நேசமுற

சர்வ புவனங்களினும் எண்ணில் உயிர்கள்மாட்டும் ஒழியாது அழகு பெற நிரம்பியவன். தாபரம் ஊர்வன தேவர்கள் நீர்வாழ்வன பறப்பன நாற்காலுடையன மானுடராய எழுவகை ஜனனத்துள் எண்பத்துநான்கு நூறாயிரம் யோனி வகையினுங் காற்றாடி, சுழற்காற்று, வட்டஞ் சுற்றும் வண்டு, கையிற் பிடித்து வீசும் உற்கை இவையின் வேகம்போல மாறிமாறிப் பிறக்கும் வேகச்சுற்றைத் தனது கிருபையினாலே போக்கிச் சலிப்பற நிறுத்தினான். விபூதிதூளனவொளி மிளிருந் திருமேனியன். நிர்மலமானவன். அனாதியே மலமில்லாதவன். தனது ஞானத்தை எனக்கு நிலையாகத் தந்த முன்னோன். சர்வ பிராணிகளும் அறியும் பகுதியாய கீர்த்திக்குத் தான் காரணனாயுள்ளவன். அஞ்ஞானிகளாயுள்ள ஆன்மாக்களுக் கெல்லாந் தான் உண்மை ஞானமாகாச் சூன்யமாயுந் தன்னை முதலென்றறிந்து வழிபட்ட ஆன்மாக்க ளுளத்திற் சத்யமாகத் தோன்றப்பட்டவன். இப்படிப்பட்டவனாகிலுஞ் சீறி யுத்தத்திலே தாருகாவனத்து இருடிகள் கோபித்துச் சங்கரிக்க விட்ட பரசைத் தானே தனக்காயுதமாகச் சதாகாலமுந் தரிக்கப்பட்டவன். என்னுடைய ஸ்வாமி. அவன் பக்கலில் நீ போமிடத்து நடுவே நடுவே இடையூறுகளுண்டு. அவைகளை உனக்கு உளவாகச் சொல்லுகிறேன். அந்தக்கரணங்களின் பகுதியிற்படும் எனதுள்ளமாகிய சத்தியே! சொல்லக் கேட்பாயாக.

107—110. நித்தலுமே - உறாதே.

(உரை) நாடோறும் நாடோறும் அநித்தியமாய்க் குற்றமான சரீரத்தை நித்தியமாகக் குணமெனக் கருதி நலமாகச் சந்தனகளப கஸ்

*வட்டமென மாறில் - பாடபேதம்.

நின்று திளைக்கும் இதுமுத்தி யல்லதுவே
றொன்று திளைக்கும் அதுமுத்தி—யன்றென்
றிலகா இருளலகை போல்இகலே பேசும்
உலகா யதன்பால் உறாதே—பலகாலும்
தாம்பிரமங் கண்டவர்போல் தம்மைக்கண் டாங்கதுவே
நான்பிரமம் என்பவர்பால் நண்ணாதே—ஊன்தனக்குக்
கொன்றிடுவ தெல்லாங் கொலையல்ல என்றுகுறித்
தென்றும்அற மேதெய்வம் என்றென்று—வென்றிப்

தூரிகளால் திமிர்ந்துகொண்டு சுகந்தவகை மாலைகளையும் முடித்து நல்ல சாலியன்னத்துடனே பால்முதலிய வஸ்துக்கள் கூடின அறு சுவை யமைந்த ஐவகை யுண்டியும் புசித்து மேலாய பருத்திவர்க்கம் பட்டு பீதாம்பர முதலிய தரித்துப் பற்பல வாசனையுடனே கூடி நெய்த்திருண்ட குழலினையுடைய மாதர்களுடனே சரசலீலை பிறியாத பற்றாகப் போதிக்கப்பட்டு அவ்விடத்தினுண்டாம் இணைவிழைச் சாய சங்கமச் சிற்றின்ப சமுத்திரத்துக்குள் அழுந்தி விடாதபண்பு பெருக அநுபவிப்பதே பிரத்யக்ஷமுத்தி; இதுவேயல்லது இந்தச் சரீரத்திலே நித்யனாக ஓர் ஆன்மா உண்டென்றும், பிரத்யக்ஷமான ராசாவேயல்லது கரணரகிதமாகக் காணும் ஒரு சிவன் உண்டென்றும், அந்தச் சிவயோகத்தை அந்த ஆன்மா அசரீரியாய் இரண்டற்றுப் புசிப்பனென்றும் வேதாகமங்களிற் சொல்லுகிறதெல்லாம் அல்ல வென்று கொள்ளிக்கு நீக்கங் கொடாது மைபோன்ற அறியாமையே குணமாய்ப் பசாசுகள்போலக் குற்றமே இயல்பாய்ச் செய்து திரியுஞ் சார்வாகனுடைய வெறும அசத்தாய காட்சியிற் பட்டு நின்றுவிடாதே.

110—111. பலகாலும் - நண்ணாதே.

**(உரை)** எந்த வேளையினும் எந்தக் காலத்தினும் எந்த அவத்தை யினும் மறவாது தன்னையும் பரத்தையும் பிரித்தறிந்து பெறுவானும் பேறுமாக இரண்டற்றிருக்கும் ஜீவன்முத்தரைப்போலக் கருவி நீக்கத்து ஆன்மாவைத் தரிசித்துத் தானே அகம்பிரமமென்னும் மாயா வாதிகள் பக்கல் போய்விடாதே.

111—113. ஊன்தனக்கு - விழாதே.

**(உரை)** உடம்பு வளர்க்கும் பொருட்டாக நாற்காலுடையவை பறவைகள் சில ஜந்து முதலியவைகளைத் தன்பொருட்டாக ஒரு

பொறையே யெனும்புத்தன் பொல்லாத புன்சொல்
மிறையே விரும்பி விழாதே—நிறைமேவி [நித்துத்
வாழ்பவர்போல் மன்னுடம்பில் மன்னும்உரோ மம்ப
தாழ்வுநினை யாதுதுகில் தான்அகற்றி—ஆழ்விக்கும்
௧௧௫ அஞ்சும் அகற்றும் அதுமுத்தி என்றுரைக்கும்
வஞ்சமணன் பாழி மருவாதே—செஞ்சொல்புனை
ஆதிமறை ஓதி அதன்பயன்ஒன் றும்அறியா [மேல்
வேதியர்சொல் மெய்யென்று மேவாதே—ஆதியின்

வன் வதைத்துப் புசிப்பதால் தனக்குப் பாவ மில்லையென்று சிருஷ்டித்துக்கொண்டு தன்வயத்தான ஆன்மகோடிகளுக்கும் உபதேசமாகச் செய்ததுமன்றித் தெய்வமென்பது அனுதியாகப் புண்ணியமே தெய்வமாக உள்ளதென்று நூலுடனும் நிச்சயித்து, அந்தப் புண்ணியப் பொருளைப் பெறுவதற்குக் காரணம் வெற்றியாக நட்பு பகை யிரண்டினிடத்தும் விருப்புவெறுப்பற்று ஒத்திருப்பதாதலால் அந்தப் புண்ணியம் பெறலாம் அதுவே நிஜமான முத்தியென்னும் பவுத்தர் பாவத்துக் கேதுவான ஈனவார்த்தையின் வகையிலே பற்றாய் மயக்குற்றுத் தடுமாற்றப்பட்டு நின்றுவிடாதே.

113—115. நிறைமேவி - மருவாதே.

**(உரை)** பக்கஞ்சார் துலைநாப் போன்று எவ்வுயிர்க்கு மொத்துத் துக்கஞ்செயாது நாடோறும் நடப்பாரைப்போலப் புறந்தூய்மையும் நீராற் றூய்மைசெய்யாது உள்ளம்போல உடம்பும் அழுக்கடைந்து புழுதி படைத்துத் தலைமுதலாகத் தன் சரீரத்துப் பொருந்திய மயிரெல்லாந் தனது உயிர் வருத்தமுறப் பிடுங்கி உயிர்க்கொலையைத் தவிர்ந்து உடையை நீத்துச் சீவாந் தாங்கித் தாழ்வாகிய பிறப்புக்கேதுவாய உருவம் வேதனை குறிப்பு பாவனை விஞ்ஞானமென்னும் பஞ்சகந்தங் கெட இருப்பது மோக்ஷமென்னும் சூழ்ச்சியினைத் தவிராது மூன்னிலும் மிகவுடையனுய சமணனுகுமவன் பிரயோசனத்திலே சென்று விடாதே.

115—116. செஞ்சொல்புனை - மேவாதே.

**(உரை)** வேறு சந்தேகப்படுவதற் கிடமில்லாமல் விதிவாக்யமே சத்யமாக எவர்க்கும் பொருந்திய பிரமாணமாய்ச் சர்வநூலுக்கும் பிரதானமாகிக் கடவுட்டன்மையுடைய வேதத்தை நன்முக அத்ய

உற்றதிரு நீறுஞ் சிவாலயமும் உள்ளத்துச்
செற்ற புலையர்பாற் செல்லாதே—நற்றவஞ்சேர்
வேடமுடன் பூசைஅருள் மெய்ஞ்ஞான மில்லாத
மூடருடன் கூடி முயங்காதே—நீட
அழித்துப் பிறப்ப தறியா தானைப்
பழித்துத் திரிபவரைப் பாராதே—விழித்தருளைத்

---

யனம்பண்ணியும் அதன் தாற்பரியத்தை முன்னொடுபின் சீர்தூக்கி மற வாது பார்த்துப் பொருள் நிச்சயிக்கமாட்டாது கருமமே துணையென் னும் பாட்டப்பிரபாகராதி வைதிகர் சொல்லும் போதகத்தைச் சத்திய மென்று புத்திபண்ணி அவர்கள் பக்கலிற் போய்விடாதே.

116—117. ஆதியின்மேல் - செல்லாதே.

**(உரை)** சர்வகடவுளர்க்குஞ் சர்வாதிகாரத்துக்கும் முதலாகிய சிவன் தனது காருண்யமேனியிற் சாத்தியருளும் பெருமையுடைய விபூதியினையும் மஹாலிங்கங்களாய் ஸ்வயம்பு மூர்த்தமாக எழுந் தருளியிருக்கும் அழகிய கோயில்களையும் அன்புடனே தரித்தலும் வணங்கலுமின்றி அவ்விரண்டினுந் த்வேஷமான மனதினையுடைய பிரத்தியக்ஷமான அறிவினுக்கு அவரே நீசர் அவர்களண்டையிலே போய்விடாதே.

117—118. நற்றவஞ்சேர் - முயங்காதே.

**(உரை)** 'மாலற நேய மலிந்தவர் வேடமு' [சிவஞானபோதம், xii] மென்றும், 'அந்தரி யாகந்தன்னை முத்திசா தன' [சித்தியார், ix, 10] மென்றும், 'அறியறிவி னருளானே யறிந்' [?சித்தியார், viii, 30] தென்றும், 'ஆ சானருளா லடிசேர் ஞான' [சித்தியார், xii, 6] மென்றும் இத்தன்மையுடைய மஹத்துக்களுட னுசாவியிருத்தலால் ஆன்மலாபமும் உயிருக்குறுதியுந் தானே விளையும் அந்த வழியில் நில் லாமல் என்போலிகள் போன்ற பாஷண்டியான மூடருடன் கூடி னால் நல்லறிவு உனக்கு வரமாட்டாது; அஃதெப்படி யென்றால் ஆன்மசத்தி கூடினதுடனே கூடி நிற்குந் தன்மை அதன் சுபாவ மாகையால் வீணாய் அலக்கழிந்து திரியாதே.

118—119. நீட - பாராதே.

**(உரை)** சகல ஆன்மாக்களையும் சிருஷ்டி திதி தேவதைகளையும் தேவேந்திரன் முதலிய தேவர்களையும் சரம் அசரங்களையும் சர்வ

கஉ0 தந்தெம்மை ஆண்டருளுஞ் சம்பந்த மாமுனிவன்
அந்தங் கடந்தப்பா லாய்நின்றோன்—எந்தைபிரான்

முஞ் சிருஷ்டி திதி சங்காரப்படுத்திச் சகல ஆன்மாக்களுக்கும் ஜனன மரண இளைப்பொழித்துத் தமது திருவடிநீழலி லிருக்கும்படி செய்யுங் கர்த்தவ்யத்தைப் பழித்துச் சொல்லப்பட்ட பேரை நீ பாராதே; 'வரமுடைத் தக்கன் செய்த மாவேள்வி தீமை யாகி' [சித்தியார், ii, 29] யென்றார் மேலோர். அன்றியும், 'ஈசனை யன்றித் தேவர் கணத்திடை யாரேயோ' என்றார் மேலோர்.

119—120. விழித்தருளைத் - லாய்நின்றோன்.

**(உரை)** சகலமுந் தனது காருண்யமாய் விளங்காநின்ற பொற்பிரகாசமாய்ப் பொருந்தியிராநின்ற திருவடியிற் பொருந்தும்படி முன்னமே சத்யோநிருவாண தீக்ஷைக்கிரமத்திலே ஆறத்துவா சோதித்துக் கலாசோதனை பண்ணும்போது அடியேனுடைய பொல்லாத கருக்குழிக்கும்பியில் குருஸ்வாமி நாடீசந்தான வழியாய் உள்புக்கு அவ்விடத்து ஞானசூரியனாகி எழுந்தருளியிருந்து அத்வாவிற் கட்டுப்பட்டிருந்த சஞ்சித பிராரத்த கன்மத்தைத் தனது ஞானாக்கினியினாலே பசையற அருள்கூர்ந்து திருநோக்கம் பாலித்து அருட்சத்தியை நிலைக்கும்படி நிறுத்தி என்னையுந் தன்னையுங் காட்டி அடிமைபடைக்கவும் மலங்களைப் போக்கவும் நாம் வயிரியென்றும் வீரகண்டாமணியையும் துவசக்கொடியையுங் கட்டியிருக்கிறோமென்றும் ஆன்மாவைத் தனது திருவடிநீழலின்கீழ் இரண்டறப் புணர்ந்து பொருந்தும்படி செய்தான்.

'முத்தாந்தப் பாதநிழற் கீழ்வைப்ப' [சித்தியார், viii, 16] னென்றும், 'ஆரியனா மாசான்வந் தருளாற் றோன்ற வான்மாவி னடிஞானந் தோன்றுந் தோன்றத், தூரியனாஞ் சிவந்தோன்றுந் தானுந் தோன்று' [சித்தியார், viii, 28] மென்றார் மேலோர். அன்றியும், பரம்பரையாகையால் குருகொள்லீலை யுபரிசுரதலீலை சையோகஞ் சம்பிரதாயமென்றார். அன்றியும், 'அன்னத்தின் மேலேறி யாடு மணிமயில்போ, லென்னத்தா லென்னையு மாட்கொண்டா' னென்றார் மேலோர். அன்றியும், அந்த அந்தரங்கத்தில் அடியேனுக்குச் சிந்தாமணிபோலுஞ் சிரோரத்னம்போலும் உள்ளங்கை நெல்லிக்கனிபோலுங் கருவூலமாகப் போதனென்னும் ஒரு பிள்ளையைக் கட்டளையிட்டாராகை

வீற்றிருக்கும் ஓலக்கம் எய்தி அடி வீழ்ந் திறைஞ்சிப்
போற்றி சயசய போற்றியென—ஆர்த்தகரி

யால் அடிமைக்குங் குருவுக்குஞ் சம்பந்தமென்பதற்கு ஓர் உத்தரம் வாய்திறந்து சொல்ல வேண்டுவதில்லை. அன்றியும், முனிவனென்னுங் கருத்து குரு அடியேனை அடிமை படைக்க எழுந்தருளி உள்ள படி கட்டுப்பட்டிருந்த வினைகளை ஞானக்கினியினாலே பசையற எரித்ததனாலென்றறிக. 'கட்டறுத்தெனை யாண்டு' [திருவாசகம், திருச்சதகம், 49] கொண்டானென்றார் மேலோர். 'பூதவிருள் போமடியிற் பொருந்த மலம் போ'மென்றார் மேலோர். அந்தங்கடந் தப்பாலாய் நின்றானென்பதற்கு அச்சமயிகள் அவரவர் கொண்ட கோட்பாட்டுக் கேற்ற பொருளாய் அதுகளுக்கும் வேறாய்க் குருகாட்டுங் குறியுடைத்தாய் வேதாகமங்க ளளவைப் பிரமாணங்களி னளப்பரிதாய்க் குறியிறந் தறியும் அறிவினுள் அறிவாய் அப்பாலுக் கப்பாலாய் இருந்தான் குரு.

120—121. எந்தைபிரான் - ஓலக்கம்.

**(உரை)** ஏகாந்தமாய்க் குருவிருந்த இடம் மனவாக்குக் காயங்களினாலே அளவு பிரமாணஞ் சொல்லி முடியாது, அந்த இடம் 'அத்தன் பரதத்துவ' னென்னுந் திருவிருத்தத்திற் கண்டுகொள்க. அன்றியும், 'ஓங்கார மேநற் றிருவாசி' [உண்மைவிளக்கம், 35] யென்றும், 'உய்யவென் னுள்ளத்தி னோங்காரமா' [திருவாசகம், சிவபுராணம், 33] யென்று மிருப்பது கண்டுகொள்க. குரு இருந்த கோலம் 'ஓமெனு மோங்காரத்து' ளென்றும், 'ஓங்காரத்துட் பொரு' [திருவாசகம், அச்சோ, 7] ளென்றும், 'துரிய மிறந்திட' மென்றும், 'அத்துவிதப் பொரு' ளென்றும், 'முப்பாழும் பா'ழென்றும், 'அம்மானிருந்தது' மென்றும், 'தான்றன் றம்பிரா' னென்றும், 'ஆதாரத்தாலே நிராதாரத்தே சென்று மீதானத்தே' [திருவுந்தியார், 8] யென்றும், 'குரவுவா ரளகி கணவகே ளொன்றுக்கொன்று குழிமா'ர' வென்றும், 'நின்றவை சாக்கிரத்துரிய' மென்றும், 'முற்றார்ந்தவீதி' யென்றும், 'உடையா ளுன்ற னடு முடியா . . . முதலே' [திருவாசகம், கோயில்மூத்த திருப்பதிகம், 1]யென்றும், பின்னும் 'அளவிறந்த பொரு'ளென்றும் மேலோர் சொல்லுவார்கள். 'குரு இருந்த கோலங் கூறரி'தென்றார் மேலோர். அந்த ரகசியமான இடத்தில்,

அன்றுரித்தாய் நின்பவனி ஆதரித்தா ரெல்லாரும்
வென்றிமதன் அம்புபட வீழ்வரோ—நின்றிடத்து

121. எய்தி அடி - போற்றியென.

**(உரை)** தங்கள் நாயகன் இருந்த இடத்துக்குச் செல்லுகிறதற்குத் தங்குதடை யிடையில்லையென்று நீ ஆன்மசத்தி வேகமாய்ப் போகாதே, கைகட்டி வாய்புதைத்து முந்தானை யொதுக்கிப் பையப் பையச்சென்று இடதுபாகத்தில் ஓவியம்போல நில்லு, அந்த அவசரத்திற் சிற்பரன் திரும்பி நிரம்பிய கிருபையுடன் அருள்நோக்கம் பாலிக்க அந்தத் திரும்பின முகத்திற் சிற்சத்தி நிற்பள், அந்த அவதரத்தில் உள்ளும் புறம்பும் ஒருதன்மையாக அட்டாங்க பஞ்சாங்க திரிவிதாங்க த்விதாங்க ஏகாங்கமாக உன் உடையவிழ உடலவிழ உரையவிழ உயிரவிழ உணர்வவிழ உளமவிழ இந்த ஜடகாரியமும் அவிழும்படியாகத் தண்டனிட்டு, 'என் கருத்து முடியும் வண்ணமுன்னின்' [திருவாசகம், கோயில்மூத்த திருப்பதிகம், 1] றென்றும், 'ஏகமாய் நின்றே யிணையடிகள் . . . உள்குவா ருள்கிற்றை, யுள்ளத்தாற் காணுவோ வுற்று' [சிவஞானபோதம், xi, 2] என்றும், 'இரும்பைக்காந் தம் வலித்தாற்போ' [சித்தியார், xi, 12] லென்றும் திருவுள்ளத் துதிக்கும் அந்த அவதரத்தில் எக்காலமும் நிறைகுறைவில்லாமல் நீ இப்படியே வாழ்க வாழ்க அளவிறந்த அடிமைகளுக்கும் இனிமேலுந் திருவடிக்காளாய் வருகிற அடியார்களுக்கும் அடிமையாக்கி என்னைப் பாதுகாத்து ரக்ஷிக்கவேண்டுமென்று, 'இமைப்பொழுது மென்னெஞ்சி னீங்காதான் றாள்வாழ்க' [திருவாசகம், சிவபுராணம், 2] வென்றார் மேலோர், திரிகாணசுத்தியாய்ச் சிரசின்பேரிற் கைகூப்பி அபிநயமாய் அடியேன் படும் இடருகளெல்லாம் விண்ணப்பஞ்செய.

121—122. ஆர்த்தகரி - வீழ்வரோ.

**(உரை)** தாருகாவனத்து ருஷிகள் மஹாகோபத்துடன் அபிசார ஹோமஞ்செய்து அந்த ஹோமத்தில் வரப்பட்ட பெருமை பொருந்திய கன்னமதங் கபோலமதங் கோசமதம் மூன்றும் வெள்ளமாய்ப் பெருக வெகு ஆங்காரத்துடன் வருகின்ற வெறுமலையென்னும் யானையைக் கங்காளவேடமாய் வந்த ஸ்வாமியை விழுங்கும்படி யனுப்ப, அப்படியே யானை சுவாமியை விழுங்க, அதுகண்டு உமையவள் அஞ்சி விநாயகனை முன் நடத்திக் கந்தனை யிடுக்கிக்கொண்டு த்வஜஸ்தம்ப

நில்லாத செல்வம் நிலையென் றுனைநீங்கிப்
பொல்லா நரகிற் புகுவரோ—பல்லோரும்

மட்டும் போய்த் திரும்பிப் பார்க்க, ஸ்வாமி மான் மழு சூல கபாலங் கடகங் கேடையம் வரதம் அபயமுடைய அஷ்டபாணியாய் வீரட்டேசுர மூர்த்தமாய் யானை வீறிட்டலறும்படி தலைகீழாக மிதித்து அட்டகாசஞ் செய்து யானையைக் கிழித்துப் போர்வையாகத் தரித்துக் கொண்டு குருஸ்வாமி ஆனந்த நிருத்தஞ் செய்ததைக் கண்டு, உமையவள் ஸ்வாமி பக்கத்தில் வந்து திருவாய்மலர்ந்தருளினாள். ஆதலால் இரண்டாயிரந் தந்தபந்தியையுடைய ஐராவதத்தின்மேல் எழுந்தருளிப் பவனிவருகிற ஸ்வாமியைக் கண்டு தேவர்கள் பொன்மாரி புஷ்பமாரி பொழியத் தேவதுந்துபி முழங்க மூன்று லோகத்தாரும் அடியார்களுந் தோத்திரஞ் செய்து தொழுது பேரானந்தப் பெருவெள்ளத் தழுந்தித் தேக்கிட்டுப் பரவசராகி யிருந்தார்கள். தென்றல் தேராகவும், இரவு யானையாகவும், தத்தை குதிரையாகவும், பெண்கள் பதாதியாகவும், சந்திரன் குடையாகவும், சமுத்திரம் பேரியாகவும், ரதி தேவியாகவும், பூஞ்சோலை பாசறையாகவும், கரும்பு வில்லாகவும், வண்டு நாணாகவும், அரவிந்தம் சூதம் அசோகு முல்லை நீலோற்பலம் பாணமாகவும் இப்படி வெற்றி பொருந்தி மூன்று லோகத்தாரையுந் தனது வசப்படுத்த வல்லமையுடைய மன்மதன் மாய்கையில் வீழார்கள் உம்முடைய பவனி கண்ட பேர். 'யானை யிரதம் பரியாளவை யில்லை, தானு மனங்கன் றனுக்கரும்பு - தேனார், மலரம்பால் வென்று வடுப்படுத்தான் மார, னுலகங்கண் மூன்று மொருங்கு' என்றார் மேலோர். இப்படி நொய்யவனாகையால் 'மதனம்புக் கிளையா" சொன்றார் மேலோர்.

122—123. நின்றிடத்து - புகுவரோ.

**(உரை)** பிரமவிஷ்ணுக்கள் தேவேந்திரன் முதலாகியார் செல்வமும் அதோமுக அடுக்குகளி லிருக்கப்பட்ட பேர்கள் செல்வமும் பெரிதென்று மனவாக்குக்காயத்திலும் எண்ணுவதில்லை. 'செல்வன் கழலேத்துஞ் செல்வஞ்செல்வமே' [சம். தேவா. செல்வநெடு.] என்றார் மேலோர், அப்படி யெண்ணமல் அவர்கள் செல்வத்துக் கவாவாகி நரகவேதனைப்பட் டுழலார்கள் உம்முடைய திருவடி கண்ட பேர்.

கத்துஞ் சமயக் கணக்கிற் படுவரோ
சித்தம் பலகால் திகைப்பரோ—முத்தம்
பொருத நகைமடவார் புன்கலவி யின்பம்
மருவி மயங்கி வருவரோ—இருபொழுதும்
நாள்இருபத் தேழும் நவக்கிரக மும்நலியுங்
கோள்இதுவென் றெண்ணிக் குறிப்பரோ—வேளை

---

123—124. பல்லோருங் - திகைப்பரோ.

**(உரை)** சகல வேதாகம புராண கலைஞானம் சமைவாக்கு மற்று முள்ள சாத்திரங்கள் இவைகளனைத்துஞ் சைவசித்தாந்த சமயமே சமயம் பரமசிவமே அதற்குக் காருண்யமான பொருளென்று சொல்லி முறையிடப் பதிபசுபாசத்தினுண்மையை விளங்கச் சொல்லும் மெய் கண்ட சந்தானமே சந்தானம் அதைப் பெரிதென் றெண்ணுமல் மனம் பலகாலுந் திகைத்துத் திரியார்கள்.

'தலைப்படு சால்பினுக்குந் தள' [திருக்கோவையார், 25] ராரென் றார் மேலோர். அன்றியும் புறச்சமயிகள் மார்க்கத்திற் செல்லார்கள். 'வாழ்வெனு மையல்விட்டு . . . போழிள மதியி னானைப் போற் றுவா ரருள்பெற் றாரே' [சித்தியார், ii, 91] என்றார் மேலோர்.

124—125. முத்தம் - வருவரோ.

**(உரை)** பேதைமுதற் பேரிளம்பெண்ணந்தஞ் சிறியன தந்த பந்திகளைக் கண்டு முல்லையரும்பும் மாதளம்பழவித்தும் இகலி வெட்கி நாணும், பெண்கள் பாதாதி கேசமளவுங் கரும்புரசனையென்று அவர்க ளின்பங் கிஞ்சித வின்பம் அதைப் பெரிதென்றெண்ணி மயங்கித் திரியார்கள்.

'இறைவன் கழலேத்து மின்ப மின்பமே' [சம். தேவா. நிறை வெண்] என்றார் மேலோர்.

125—126. இருபொழுதும் - குறிப்பரோ.

**(உரை)** இராவும்பகலும் இருபத்தேழு நக்ஷத்திரமும் நவக்கிரக முங் கோள்களினாலே வரப்பட்ட நலந்தீங்குகளென்று குறியார்.

126—127. வேளை - தையல்.

**(உரை)** முன்னஞ் சொல்லப்பட்ட வெற்றியையுடைய மன்மதனை யெரித்த பாலநேத்திரத்தினுடைய உண்மையை இவ்வளவென்று சொல்லி முடியாது. அது என்னெனில், 'தூயநேத் திரத்தி னாலே சுட

எரித்த விழியாய்நின் இன்பக் கடற்கே
தரித்து மதிமறந்த தையல்—வருத்தமெலாந்

ரொளி கொடுத்த பண்பாற், றேயமா ரொளிக ளெல்லாஞ் சிவனுருத் தேச'மென்றார் மேலோர். அந்த இடம் நிறைவு குறைவில்லாத இடம். அஃதெப்படியென்றால், அதனுடைய நுட்பம் 'விண்ணுற வடுக்கிய விறகின் வெவ்வழ, லுண்ணிய புகிலவை யொன்று மில்லையா' [அப். தேவா. விண்ணுற.] மென்றார் மேலோர். சகல ஆன்மாக்களையும் இருவினையொப்பு மலபரிபாகம் வரும்படி எம்முடைய குரு கருணை கூர்ந்துவிட நேயத்தழுத்தவென்றும் பேரின்ப வெள்ளத்தின்ப மிருக்குமிடமிதுவென்று சுட்டிக் காண்பிக்கு மிடமாய்ப் 'பிறவி வழக்கறுத் தானந்தவாரியி னேயத்தழுத்த' வென்றார் மேலோர். அந்த இடந் தான் பெறவேணுமென்று தன் மதி மறந்து பேரானந் தப் பெருவெள்ளத்தின்பம் என்று கிடைக்குமோவென்று சகோர பக்ஷி சந்திரகிரணத்தைப் புசிக்கக் காத்திருந்ததுபோலும், தலையீற் றுக்கன்றானது கறவை யெப்போவருமென்று அமுதம் புசிக்கக் காத் திருந்ததுபோலும் பேதைமுதற் பேரிளம்பெண் பருவமட்டும் இந்தத் தையலாகிய பெண் முன்னங் குருபரன் செய்த சகாயத்தை மறந்தவ ளாகையாற் பார்த்துப்பார்த்து ஏங்கி யேங்கி யிடருற்றாள்.—அன்றியும், முன்னந் தீக்ஷையென்னும் இயற்கைப்பெயரையுடைய சிவசத்தியால் என்னை அநாதியிற் பசுத்துவத்தினால் அஞ்ஞானியா யிருக்கின்ற ஜனன மரணத்துக் கேதுவாகிய மலமாயாகன்மங்களோடு பொருந்தாம லிருக்க ஷடத்துவாசோதனைசெய் தெடுத்துச் சமனுந்தம் பாசக்கூட் டங் கூடாதவகை சின்மாத்திரஞ் சுத்தகேவலமாய்ச் சேட்டிக்கப் பண்ணிய குருவுக்குத் தெரியும்படிசொல்.

127—128. வருத்தமெலாம் - தாழ்ந்திறைஞ்சி.

**(உரை)** அடியேன்படுந் துயரமெல்லாந் தீர்க்கவேணுமென்று நீ குருபானுக்குத் தெரியும்படி சொல்லிப் பொற்பிரகாசம் பொருந்தி ஆயிரத்தெட் டிதழையுடைய செங்கமலப் பூவினுஞ் சிறந்த திருத் தாளைத் தாவேணுமென்று சிரசின்பேரிற் கைகூப்பி மும்முறையே தண்டனிட்டுத் தொழுது தோத்திரஞ் செய்து மயிர்க்கூச்செறிய— அந்தத் திருவடியினுடைய பெருமையின் நுட்பமும் யாவராலும் மட் டிட்டுச் சொல்லி முடியாதென்று மேலோர் சொல்லுவார்கள். என்ன

*தீராய் எனஉரைத்துச் செங்கமலப் பூந்திருத்தாள்*
*தாராய் எனப்பலகால் தாழ்ந்திறைஞ்சி—வாரூரும்*

---

வெனில், 'ஏகமாய்நின்றே யிணையடிக' [சிவஞானபோதம், xi, 2] என்றும், 'மெய்ச்சுடருக்கெல்லா மொளிவந்த பூங்கழ' லென்றும், 'மின்னே ரனைய பூங்கழல்க' [திருவாசகம், ஆனந்தமாலை, 1] என்றும், 'போற்றி யருளுகநின் னாதியாம் பாதமல' [திருவெம்பாவை, 20] ராதியெழு பருவமு மென்றும், 'விரவியெனை யெடுத்தாண்ட செய்யதிருவடி' யென்றும், 'ஆனந்த வாரியி லான்மாவைத் தானழுத்த, னெந்தை யார்பாதந் தா' [உண்மைவிளக்கம், 37] னென்றும், 'உள்ளும் புறம்பு மொழிவின்றி நின்ற, வள்ளன்மை காட்டு மலரடி' [இருபாவிருபது, 20] யென்றும், 'ஆட வெடுத்திட்ட பாத மன் றேநமை யாட்கொண்டதே' [அப். தேவா. சாடவெடுத்தது] யென்றும்—இப்படிச் சொல்லப்பட்ட திருவடியைத் தரவேணு மென்று திருவடியிலே தாழ்ந்து தண்டம் பண்ணிக் கேள். 'வேண்டு வார் வேண்டியது மெய்தருகுவா' னென்றார் மேலோர்.

128—129. *ஏரூரும் - இனி.*

**(உரை)** அழகுபொருந்திய அருட்சத்தியாகிய சிவகந்தம் பரிமளிக்கவும் ஆன்மவர்க்கமாகிய மதுகரங்கள் தேன்களை யுண்டு தேக்கிட்டுச் சிவோகம் பாவிக்கப்பட்டவுமான கொன்றை மாலையை வாங்கும்படியாய்ப் புகழ்ந்து, இன்பத்தைச் செய்யும் நெஞ்சமே, மீட்டும் என்னுடன் பொருந்தும்படி இவ்விடத்து வந்து இனிச் சேருவாயாக.

புகழ்வது என்னவென்றால், 'வேண்டுக வேண்டுக மறவாமை' யென்றும், 'இங்கிலை யதனி னேழையேற் கிரங்கி' [இருபாவிருபது, 12], 'நின்னது கருணை சொல்லளவின்' [ஷை, 14] றென்றும், 'உள்குவா ருள்கிற்றை, யுள்ளத்தாற் காணுணே வுற்று' [சிவஞானபோதம், xi, 2] என்றும், 'பெண்டான் சமைந்து பெரியவ னாகுநாட், கொண்டா னறிவான் குணகுணத்தை' யென்றும், 'எழுதாத புத்தகத் தேட்டின் பயனைப் . . . பிறவாத வண்டு மணமுண்ட வாறே' [திருமந்திரம், 2885] யென்றும், 'போதருளுதல் பெரியோர் கடனே' [இருபாவிருபது, 16] யென்றும், 'ஈய வேண்டு மென்னும்விதி யின்று' [ஷை, 14] மென்றும், 'ஒன்று காம விரண்டாகாம, லொன்று மிரண்டு மின்று காம' [ஷை, 20] லென்றும், 'மாலை

*பூங்கொன்றை வாங்கிப் புகழ்ந்துபுரி நெஞ்சமே*
*ஈங்கொன்ற வாராய் இனி.*

---

யா மற்ற மதி'யென்றும்,'உரையும் பொருளு முடலு முயிரும், விரையு மலரும்போல் விம்மிப்-புரையின்றி' [கைலைபாதி காளத்திபாதி யந்தாதி, 27] யென்றும், 'மாலை வருகு'தென்றும், 'மாலாகி ளுள் கொன்றை மாலைவரக் கண்டு மகிழ்ந்தா' ளென்றும், 'தான்றன் றம்பிரா'னென்றும் இங்ஙனஞ் சொல்லிவந்த காரணகாரியங்களெல்லாம் அடியேன் உனக்குச் சொன்ன காரணம் மறந்து மயங்கியிருக்கப் போகிறுயென்று உனக்குத் திடம்வரச் சொன்னது. அடியேன் செய்த பாக்கியம், குருபரனை நீ கண்டு, அவருடைய 'திருவடியைக் கண்டபேருக்குத் தீங்கில்லை'யென்றுர் மேலோர், 'உன் கையிற் பிள்ளை யுனக்கே யடைக்கலம்' [திருவெம்பாவை, 19], 'வெஞ்சே லனைய கண்ணார்தம் . . . யஞ்சே ரடியாள் பாகத் தொருவா பவளத் திருவாயா, லஞ்சே லென்ன வாசைப்பட்டேன் கண்டா யம்மானே' [திருவாசகம், ஆசைப்பத்து, 10], 'அன்றே யென்ற ஞவியுமுடலு முடைமை யெல்லாமுங், குன்றே யனையா யென்னையாட் கொண்டபோதே கொண்டிலையோ, வின்றோ ரிடையூ றெமக்குண்டோ வெண்டோண் முக்க ணெம்மானே, நன்றே செய்வாய் பிழைசெய்வாய் நானே விதற்கு நாயகமே' [திருவாசகம், குழைத்தபத்து, 7], 'கூசி மொழிந் தருண்ஞானக் குறியினின்று கும்பிட்டுத் தட்டமிட்டுக் கூத்தாடித் திரியே' [சித்தியார், xii, 2], 'மாதாளும் பாகத் தெந்தை, யாவர்கோ னென்னையும்வந் தாண்டு கொண்டா னியாவர்க்குங் குடியல்லோ மியாது மஞ்சோ, மேவினோ மவனடியா ரடியா ரோடு மேன்மேலுங் குடைந்தாடி யாடு வோமே' [திருவாசகம், திருச்சதகம், 30], 'செங்கமலத் தாளிணைகள் சேரவொட்டாத் திரிமலங்க ளறுத்தீசனேசரொடுஞ் செறிந்திட், டங்கவர்தந் திருவேட மாலயங்க ளெல்லா மரனெனவே தொழுதிறைஞ்சி யாடிப் பாடி, யெங்குமியா மொருவர்க்கு மெளியோ மல்லோ மியாவர்க்கு மேலானே மென்றிறுமாப் பெய்தித், திங்கண்முடி யாரடியா ரடியோ மென்று' [சித்தியார், xii, 1] இப்படியெல்லாம் மேலோர் திருவுளம்பற்றினுர்கள். அன்றியும், 'அருளி னருளே யருளாம்பே ரின்பப், பொருளின் பொருளாம் பொருளே—குருவாம், மருதத் தலைவர்கொன்றை மாலைதனை நெஞ்சே,

தருகவெனக் கின்று தரும்,’ ‘வாராது வாராது வள்ளிதழேய் பூங் கொன்றைத், தாரார் புயமருதச் சம்பந்தன்—சேரார்ந்தே, வெங்கிலுந் தான்சடசித் தாயிருந் தானெஞ்சே, யிங்கினியு முண்டோ விடர்’ என்பன கண்டுகொள்க.

வெண்பா

வெம்பும் பிறவியலை வீழாமல் வீடளித்த
சம்பந்த மாமுனிவன் தார்வாங்கி—யம்புந்தும்
வஞ்சமே வும்விழியார் வல்வினையெல் லாம்அகல
நெஞ்சமே வாராய் நினைந்து.

---

[நெஞ்சுவிடுதூதிற்கு இங்குப் பதிப்பிக்கும் உரைக்கு மூலமாயது கொ. ஷண்முகசுந்தர முதலியார் சிவஞானபோத யந்த்ரசாலையிற் பதிப்பித்து வெளியிட்டதே யாகும். இதற்குக் கையெழுத்துப் பிரதிகள் கிடைத்தில. உரை சாத்திரப் பயிற்சி மிக்க ஆசிரியர் ஒருவரியற்றிய பழைய உரையாகும்.

—S. அனவரதவிநாயகம் பிள்ளை.]



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

சீகாழித் தத்துவநாதர்

அருளிச்செய்த

# உண்மைநெறிவிளக்கம் மூலமும் சிந்தனையுரையும்

1. மண்முதற் சிவமதீரும் வடிவுகாண் பதுவே ரூபம்
மண்முதற் சிவமதீரும் மலம்சடம் என்றல் காட்சி
மண்முதற் சிவமதீருட் வகைதனில் தான்நி லாது
கண்ணுத லருளால் நீங்கல் சுத்தியாய்க் கருது மன்றே.

(உரை) மண்முதற்...ரூபம் - பிருதிவி தத்துவமுதலாகச் சிவ தத்துவமீறாக வரும் முப்பத்தாறு தத்துவத்தின் வடிவை இம்முறையிலே காண்பதுவே தத்துவ ரூபம்; மண்முதற்...காட்சி - இப்படி வந்த தத்துவம் முப்பத்தாறும் ஆன்மாக் கூடியறிியினல்லாது தானாக அறியாதாகையால் சடமென்று காண்பதுவே தத்துவ தரிசனம்; மண்முதற்...மன்றே - சிவன் ஆசாரியமூர்த்தமாய் எழுந்தருளி வந்து மண் முதலாகச் சிவமீறாக வரும் பூதம் பொறி அந்தக்கரணம் கலாதி சுத்ததத்துவமென்று அஞ்சுவகையாம் முப்பத்தாறு தத்துவமும் அசத்தாய்ச் சடமா யழிந்துபோகிறதென் றறிவிப்பதா லொக்குமெனப் பொருந்தி, ஆன்மாப் பூதமல்லவென்று பழித்தும் பொறியல்லவென்று உணர்ந்தும், அந்தக்கரணமல்லவென்று நீக்கியுங் கலாதி ஞானமல்லவென்று நிராகரணம் பண்ணியுஞ் சுத்த தத்துவமல்லவென்று தூடணஞ் செய்தும் இவையிற்றின் நில்லாது நீங்கித் தத்துவாதீதமாய் இந்தத் தத்துவத்தின் மீண்டுங் கூடாமல் விஞ்ஞான கலத்துவம் பிறந்து சகல தரிசனமாய் நிற்றல் தத்துவ சுத்தியாம். க

2. பாயிருள் நீங்கி ஞானந்
தனைக்காண்டல் ஆன்ம ரூபம்
நீயும்நின் செயலொன் றின்றி
நிற்றலே தெரிச னந்தான்
போய்இவன் தன்மை கெட்டுப்
பொருளிற்போய் அங்குத் தோன்றா
தாய்விடில் ஆன்ம சுத்தி
அருணூலின் விதித்த வாறே.

**(உரை)** பாயிருள்...ரூபம்-பரந்த இருளாகிய கேவலம் அதீதமாய் அவ்விடத்துண்டாகிய ஞானத்தைத் தானென்று காணுதல் ஆன்ம ரூபமாம்; நீயும்...தான் - நீ கண்ட ஞானத்துக்கே செயலெனக் கண்டு உனது செயல் சற்றேனுமின்றி நீயும் அந்த ஞானமுமாய் நிற்றல் ஆன்ம தரிசனமாம் ; போய்...வாறே - அந்தச் சிவஞானத்தோடு ஒத்து நில்லாது பரையிற் போய் இவன் தன்மையாகிய போதப் பதைப்புக் கெட்டு அவன் தன்மையாய் அதில் அழுந்திச் சிவமெனும் பேறுபெற்றோமென்னும் பரமானந்தப் பொருளிற் போய்த் தரிசித்து அவ்விடத்துத் தான் தோன்றாது அந்தப் பரமானந்தப் பொருளோடு கூடி அதுவாய்விடில் ஆன்மசுத்தியாமென்று சிவாகமங்களில் விதித்தவாறு இவ்வாறாம்.

'பாயிருள் நீங்கி' என்றது தத்துவங்களெல்லாம் நீங்க வருந் தன்னுண்மையாங் கேவலத்தைச் செம்பிற் களிம்புபோல் ஒன்றாய் நீரினிழற்போற் றோன்றாது இன்றளவும் நின்றது இதுவோவென்று தரிசித்து அதீதமாவதை. 'நீயும்நின் செயலொன் றின்றி நிற்றல்' என்றது ஞானசொரூபியாய் நின்ற நீயும் அந்த ஞானத்தோடொத்து உனது போதம் சற்றேனுமின்றி நிற்குமதை. 'போய் இவன் தன்மை கெட்டு' அவன் தன்மையா யென்றது தற்றெரிசனம் பண்ணிநின்ற உன்னிடத்திலே, மலரும் பக்குவமா மேலே மணம் பிரகாசித்தாற் போல, உன்னறிவிலே பிரகாசித்து நீ யொத்து நின்ற ஞானத்தை இதுவாகிலும் நமக்கு அறிவித்ததென்று தரிசித்துக் கண்பெற்றார் கண்ட கதிரொளிபோல மற்றொன்றையுங் காணாது உள்ளும் புறம்பும் இந்த ஞானம் பூரணமான பரையையும் தரிசித்துக் கண்ணிற் கதிரோன் கலந்தாற்போற் றெரிசித்த பரையிலே

வியாத்தமாய், விண்ணின் விகற்பமற மேவிய கால் நின்றதுபோலவும் திரையற்ற நீர்போலவும் விகற்பமற ஒன்ருய் நிற்கும் பராயோக மாய், அப்படித் திரையற்ற நீர்போல நின்று தெளிவுபெற்றுப் பராபோகமாய், உண்மைஞானப் பயனுந் தசகாரியம் ஒன்றுமில்லாத சுழுத்தியில் உன்னைவிட்டு நீங்காமல் நிற்க நீ கண்ட பரை பஞ்சகிருத்தி யஞ் செய்து உன்னை மோட்சத்திலே விடவேண்டுமென்று விரும்பின அதன் விருப்பத்தை மிகுதியும் நீ பொருந்தினதால் அதைப்போல நாமும் பஞ்சகிருத்தியஞ் செய்யவேண்டுமென நின்ற சுத்த பராயோக மாய், அந்தச் சுழுத்தியிலுள்ள பரையினது விருப்பத்தி லழுந்தின மயக்கந் தீர்ந்து கண்ணுஞ் சூரியனும்போல உன்னையும் பரையையுங் கண்டு பரையினது கிரியையைப் பொருந்திப் பணிசெய்து நிற்கும் முத்திச் சாக்கிரமாய், சிவனையன்றிப் பரை செய்யமாட்டாத பஞ்ச கிருத்தியத்துக்குப் பரைக்குக் கருவியாயிருந்த நமக்குப் பணிசெய்வ தற்கும் ஒரு செயலுண்டோவெனப் பணிசெய்யாது விட்டுச் சாக்கிரா தீதமாய், இப்படிப் பணியையும் பணியறுதியையும் பாராது பஞ்ச கிருத்தியம் பண்ணுதற்குப் பரைக்குமேலும் ஒரு முதலுண்டோ அதெப்படி யறியப்போகிருேமென்று இச்சை கிரியை ஞானம் மூன்றையும் விட்டுப் பரையாதீதமாய், ஒன்றுங் குறியாது திகைக்குஞ் சுத்தாவத்தையிற் போய் இவன் தன்மையாகிய போதப்பதைப்பற்றுச் சோகம் பிறந்தபோது சிவன்தனது தன்மையாஞ்சுகந்தோன்றுவதை. 'பொருளிற் போய் அங்குத் தோன்ருது தாய்விடி' லென்றது இந்தச் சுகமும் சிவனுக்கு ஓர் இன்பசத்தியென்று கண்டு அது நீங்குஞ் சுகா தீதத்தின் உண்மையாஞ் சிவத்தைக் கிட்டி அதினுலே வரும் பரமா னந்தவெள்ளப் பொருளிற்போய்த் தரிசித்து அவ்விடத்துத் தான் தோன்ருது அந்தப் பரமானந்தப் பொருளதுவாய்விடும் பரமானந்த யோகத்தையென விரித்துணர்ந்துகொள்க.

நீயு நின் செயலொன்றின்றி யென்னும் உம்மை உயர்வு சிறப் பின்கண்ணும், நிற்றலே யென்னும் ஏகாரம் தேற்றத்தின்கண்ணும் வந்தன. இவன் தன்மை கெட்டு அவன் தன்மையாயெனச் சொல் லெச்சமாய் வருவிக்கப்பட்டது. உ

3. எவ்வடி வுகளும் தானும் எழிற்பரை வடிவ தாகிக்
கவ்விய மலத்தான் மாவைக் கருதியே ஒடுக்கி ஆக்கிப்

பவ்வமீண் டகலப் பண்ணிப் பாரிப்பான் ஒருவ னென்றே
செவ்வையே உயிருட் காண்டல் சிவரூப மாகு மன்றே.

**(உரை)** எவ்வடிவு...தாகி - சிவஞ் சத்தி நாதம் விந்து சதா சிவன் மயேசுரன் ருத்திரன் விட்டுணு பிரமா மற்றுமுள்ள வடிவுக ளெல்லாந் தானே யாகின்ற சிறந்த பரைவடிவே தனக்கு வடிவாகி ; கவ்விய...யாக்கி - மலத்தைப் பிடித்துக் கிடக்கும் ஆன்மாக்களையும் அவ்வான்மாக்கள் ஆர்ச்சித்த வினைகளையும் அறிந்து பொசிப்பிப்பது காரணமாக மாயாகாரியமாகிய உடலுந் தத்துவங்களும் புவனங்களும் பொசிக்கும் பதார்த்தங்களுமாக விசாரித்து நிறுத்திப் பொசிப்பித்துத் துலைப்பிக்குமளவிலே வேலைகொள்வானொருவன் வேலைசெய்வா னொருவ னிளைப்புக் கண்டு நடுவே யிளைப்பாற்றி வேலைகொள்ளும் முறைமைபோல மலத்திடைப்பட்டுக் கிடக்குந் துயரந் தீருமளவும் மாயையின் காரியத்தை யொடுக்கிப் பின்னுமுண்டாக்கி ; பவ்வ... மன்றே - அப்படித்தாகு முறைமையை அடைவிலே தொலைப்பித்து இரட்சிப்பானொரு பரமேசுரன் வடிவு பரையென்றும் அது உயிர்க் குயிராய்த் திருவடி ஞானமாய் நின்று அறிவிப்பதைத் திருவருளையே இடமாக நின்று காணுதல் சிவரூபமாம். ௩

4. பரைஉயிரில் யானெனதென் றறநின்ற தடியாம்
பார்ப்பிடமெங் குஞ்சிவமாய்த் தோன்றலது முகமாம்
உரையிறந்த சுகமதுவே முடியாகும் என்றங்
குண்மையினை மிகத்தெளிந்து பொருள்வேறொன் றின்றித்
தரைமுதலிற் போகாது நிலையினில்நில் லாது
தற்பரையி னின்றழுந்தா தற்புதத்தி னாகுந்
தெரிவரிய பரமானந் தத்திற் சேர்தல்
சிவனுண்மைத் தெரிசனமாய்ச் செப்பு நூலே.

**(உரை)** பரை உயிரில்...தடியாம் - முன் உயிர்க்குயிராய் நின் றறிவித்த அடிஞானமாகிய பரையானது உயிரிலே யானெனதென்ப தற நின்றது திருவடியா மென்றும்; பார்ப்பிட...முகமாம் - சோகந் தோன்றிச் சுகத்திற்பட்டுப் பார்க்கப்பட்ட பாசப்பரப்பெங்குஞ் சோதிக்குட் சோதியாஞ் சிவமாய்த் தோன்றலது முகமாமென்றும் ; உரையிறந்த...என்று - தரிசித்த அந்தச் சிவப்பேற்றில் வாக்கு

மனுதீதமாய் ஒரு ஆனந்தமுண்டாம் அதுவே முடியாமென்றும்; அங்குண்மையினை...நூலே - சிவனுக்குத் திருவடி யென்றுந் திருமுகமென்றுந் திருமுடி யென்றுஞ் சொல்லப்படுமவைகளின் உண்மையை மிகவுந் தெளிந்து அதுவே பொருளாய் மண் முதலான தத்துவங்களின் மீண்டும் போகாது, துறந்து நின்ற நான் பிரமமென்னும் பசுஞானமான தன்னிலையிலேயும் நில்லாது, மேலான பரையிலேயும் நின்றழுந்தாது, சிவப்பேற்றிலாகும் அறிதற்கரிய பரமானந்தத்தே சேர்தல் சிவனை உள்ளபடி தரிசிப்பதாஞ் சிவதரிசனமென்று சிவாகமங்கள் சொல்லும்.

5. எப்பொருள்வந் துற்றிடினும் அப்பொருளைப் பார்த்திங்
  கெய்தும்உயிர் தனைக்கண்டிவ் வுயிர்க்கு மேலாம்
ஒப்பில்அருள் கண்டுசிவத் துண்மை கண்டு
  உற்றதெல்லாம் அதனாலே பற்றி நோக்கித்
தப்பினைச்செய் வதும்அதுவே நினைப்பும்அது தானே
  தரும்உணர்வும் பொசிப்பும்அது தானே யாகும்
எப்பொருளும் அசைவில்லை யெனஅந் தப் பொருளோ
  டிசைவதுவே சிவயோகம் எனும்இறைவன் மொழியே.

**(உரை)** எப்பொருள் வந்து உற்றிடினும் - அந்தப் பரமானந்த நிலை குலைந்து உலகமே வந்து பொருந்தினும்; அப்பொருளைப் பார்த்து - அந்த உலகப்பொருளை அசத்தாய்ச் சடமாய் அழிந்து போகிற பாசமெனப் பார்த்து; இங்கு எய்தும் உயிர்தனைக் கண்டு - இந்தப் பாசத்துட் பொருந்தாநின்ற உயிருக்குச் சுதந்தரமாய் ஒரு செய்தியும் இல்லையெனப் பார்த்து; இவ்வுயிர்க்கு மேலாம் ஒப்பில் அருள் கண்டு - இவ்வான்மாவுக்கு ஒரு செயலற்றுந் தனக்கு மேலாய் ஒப்பற்ற அருள் கண்ணுக நிற்குமதனைக் கண்டு; சிவத்துண்மை கண்டு- அவ்வருளினுட் பரையை அடியாகவுஞ் சுகத்தை முகமாகவும் ஆனந்தத்தை முடியாகவுங் கொண்டு நின்ற சிவத்தினது உண்மையைக் கண்டு; உற்றதெல்லாம அதனாலே பற்றி நோக்கி - பொருந்திய உலகப் பொருளாகிய அவன் அவள் அதுவென்னுஞ் சடசித்துக்களெல்லாவற்றையும் அந்தச் சிவத்தினாலேதானே பற்றிப் பார்த்து; தப்பினைச் ...மொழியே - மறப்பினைச் செய்வதும், நினைப்பினைச் செய்வதும் அறிவிக்க அறியும் ஆன்மபோதமும், கர்மப் பொசிப்புஞ் சிவன்தானே,

யென அறிந்து அவனை யொழிய வேறொரு திரணமும் அசைவில்லை யெனக் கண்டு அகமும் புறமும் அந்தச் சிவத்துடனே கூடி நிற்றலே சிவயோகமாமென்று சிவாகமங்கள் சொல்லும். ரு

6. பாதகங்கள் செய்திடினும் கொலைகளவு கள்ளுப்
   பயின்றிடினும் நெறியல்லா நெறிபயிற்றி வரினும்
சாதிநெறி தப்பிடினும் தவறுகள்வந் திடினும்
   தனக்கெனஓர் செயலற்றுத் தான்அதுவாய் நிற்கில்
நாதன்இவன் உடல்உயிராய் உண்டுறங்கி நடந்து
   நானாபோ கங்களையுந் தானாகச் செய்து
பேதமற நின்றிவனைத் தானாக்கி விடுவன்
   பெருகுசிவ போகமெனப் பேசுநெறி இதுவே.

**(உரை)** பாதகங்கள் செய்திடினும் - அப்படித் தற்செயலற்று நின்றவன் 'காமங் கோபங் கசடுறு முலோபந், தீமன மோகஞ் சேர்மத மச்ச' [சிற்றம்பல நாடிகள் திருச்செந்தூரகவல்] மிவை முதலிய பாதகங்கள் செய்யினும்; கொலைகளவு கள்ளுப் பயின்றிடினும் - பஞ்சமாபாதகமாகிய 'கடுங்கொலை வெறும்பொய் களவுகட் காமஞ்' [ஷை, ஷை] செய்யினும்; நெறியல்லா நெறி பயிற்றிவரினும் - நெறியல்லாத அவநெறியைத் தவறாது நடத்திவரினும்; சாதிநெறி தப்பிடினும் - தனதான சாதி முறைமை குலையினும்; தவறுகள் வந்திடினும் - ஒரு குற்றம் தன்னை யறியாமல் வந்துற்ற காலத்தும்; தனக்கென ஓர் செயலற்றுத் தான் அதுவாய் நிற்கில் - தான் அதுவாய் ஏகனாகி இறைபணி வழுவாது தனக்கென ஓர் செயலற்றே நிற்பானாகில்; நாதன் இவன் . . . இதுவே - அந்தச் சிவன் இவனுடலும் உயிருமாய் நின்று உண்டு உறங்கி நடந்து பிராரத்தமாகிய நானாவித விடயபோகங்களையும் சிவபோகமாகவே செய்து இவனைப் பேதமற நின்று தானாக்கி விடுவன்; இது ஆன்மலாபமான பரமானந்தத்தைப் பொசித்து நிரம்பி அது பொங்கி மேலிட்டது கரைபுரண்டு அவசமுறுஞ் சிவபோகமென்று சிவாகமங்கள் சொல்லும் வழி இதுவாம். சு

## பாயிரம்

எண்ணும் அருணூல் எளிதின் அறிவாருக்
குண்மை நெறிவிளக்கம் ஓதினன்—வண்ணமிலாத்

*தண்காழித் தத்துவனார் தாளே புனைந்தருளும்*
*நண்பாய தத்துவநா தன்.*

**(உரை)** வண்ணமிலாத் தண்காழித் தத்துவனார் தாளே புனைந்தருளும் நண்பாய தத்துவநாதன் - மாயாவுருவின்றிச் சச்சிதானந்தசொரூபியாய்க் குளிர்ச்சி பொருந்திய காழிநகர்க்குத் தலைவனை தத்துவனார் தமது சீபாதங்களையே சிரசிலே சூட்டியருளும் விருப்பத்தைப் பெறுகின்ற தத்துவநாதனென்னும் திருநாமத்தை யுடையோன்; எண்ணும் அருள்நூல் - தமதாசிரியர் கருதிச் செய்யும் ஆகமசித்தாந்தமாம் முப்பது அவசரத்தையும்; எளிதின் அறிவாருக்கு உண்மை நெறிவிளக்கம் ஓதினான் - எளிதாக அறியும் பக்குவ ஆன்மாக்களுக்கு ஆறு திருவிருத்தத்திலே பத்து அவசரமாகத் தொகுத்து உண்மைநெறிவிளக்க மென்னுந் திருநாமத்தினையுஞ் சாத்தித் திருவுளம்பற்றினான்.

**துகளறுபோதம்** முப்பது அவதாரமும் **உண்மைநெறிவிளக்கம்** ஆறு பாட்டினுந் தசகாரியமாய் அடங்கி வருவதற்கு வகை:

பூதப்பழிப்பு, பொறியற வுணர்தல், அந்தக்கரண சுத்தி, கலாதிஞான நிராகரணம், சுத்த தத்துவ தூடணம், தத்துவாதீதம், சகல தரிசனம் ஆக ஏழும் முதற்பாட்டில் அடங்கிவருவது காண்க.

இனி இரண்டாம் பாட்டிற் கேவலம், கேவலதரிசனம், கேவலாதீதம், தன்னுண்மை ஆக நான்கும் 'பாயிருணீங்கினபின் தானென்று ஞானந்தனைக் காண்ட லான்மரூபம்' என்பதனு ளடங்குவது காண்க. சைதன்னிய தரிசனம், ஞானதரிசனமாம் இரண்டும் 'பாசவடிவை விட்டு ஞானமே வடிவாம் நீயும் நின்செய லொன்றின்றி நிற்ற'லென் பதனி லடங்குவது காண்க. பரைதரிசனம், பரையில் வியாத்தம், பராயோகம், பராபோகம், சுத்தபராயோகம், முத்திசாக்கிரம், சாக்கிராதீதம், பரையிலதீதம்,சுத்தாவத்தை, சுகரூபம், சுகாதீதம், சிவப்பேறு ஆகும் இப்பன்னிரண்டும் 'போய் இவன் தன்மைகெட்டு அவன் தன்மையாய்'என்பதினு ளடங்குவது காண்க. இவன் தன்மைகெட்டு என்பதினால் அவன் தன்மையாவதெனை வருவிக்கப்பட்டது. பரமானந்த தரிசனம், பரமானந்த யோகமாமிரண்டும் 'பொருளிற்போய் அங்குத் தோன்றாதாய்விடி'லென்பதினு ளடங்குவது காண்க. ஆக இரண்டாம் பாட்டில் இருபது அவதாரமும் அடங்குவதறிக.

சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம் ஆக மூன்றும் முற்கூறிய இரண்டாம் பாட்டில் ஆன்ம தரிசனம், ஆத்மசுத்தியி லடங்கிவருமென அறிக.

ஆறும் பாட்டில் பரமானந்தபோகம், பரமானந்தமேலீடு, பரமானந்த அவசம் ஆக மூன்றும் அடங்குவது காண்க.

இங்ஙனங் கூறும் ஆறு பாட்டிலும் பாசவவதரம் ஏழும் பசுவவதரம் பதினைந்தும் பதியவதர மெட்டுமாம் முப்பதவதரத்தையுந் தசகாரியமாக அடக்கிக் கூறியது காண்க. 'தற்காண்டல் சாக்கிரமாந் தற்பரையே சொப்பனமாந், தற்காணு வெற்றவெறுந் தற்பரையே—நற்சுழுத்தி, ஞானனந் தந்துரியம் ஞானசுகா தீதத்தே, தானுகா வுண்மையதீ தம்' [சிவானந்தமாலை, 36] என்றும், 'பாயிரு ணீங்கி ஞானந் தனைக்காண்டல் ஆன்ம ரூப'மென்றும் வரும் வசனப்படி அவதர முப்பதும் ஞானதெரிசனமாஞ் சாக்கிரத்திற் பதின்மூன்றும், பரைதரிசனமாஞ் சொப்பனத்தில் நாலும், சுத்த பராயோகமாஞ் சுழுத்தியில் நாலும், பரமானந்த யோகமாந் துரியத்திலாறும், பரமானந்தபோகமாந் துரியாதீதத்தில் மூன்றுமாக அஞ்சவத்தையிலும் அஞ்சவதரமாய் அடங்கி வருவது காண்க.

நமசிவாயகுருபாதமே கெதி.

திருச்சிற்றம்பலதேசிகன் திருவடி வாழ்க.

---

[நெடுநாளாக **உண்மைநெறிவிளக்கம்** உமாபதிசிவாசாரியர் அருளிச் செய்ததாக வழங்கிவந்திருக்கிறது. 'உந்திகளிறு' என்ற செய்யுள் 'உண்மைநெறி' யென இந் நூலை மாத்திரஞ் சுட்டியதேயன்றி இதன் ஆசிரியர் பெயரைக் கூறுதொழிந்தது. **சிவப்பிரகாச** முதற் **சங்கற்ப நிராகரண** மிறுதியாக வுள்ள எட்டு நூல்களையும் சித்தாந்தாஷ்டகம் என்னும் பெயரோடு கொ. ஷண்முகசுந்தர முதலியார் பதிப்பித்து அவையெல்லாம் உமாபதிசிவாசாரியர் அருளியனவாகக் கொண்டனர்.

இனி, ஆசிரியர் பெயருரைக்கும் 'எண்ணும் அருணூல்' என்னும் பாயிரச் செய்யுள் இங்குக் காணும் சிந்தனையுரையில் மாத்திரமே

யன்றி, இராசாங்கக் கையெழுத்துநூல் நிலயத்துள்ள **சிவஞானபோத** வுரையிடைத் தசகாரியத்தை விளக்கும் பொருட்டுக் காட்டப்படும் இந்நூல் மூலத்திறுதியிலும், இலக்கண விளக்க ஆசிரியர் பரம்பரை திருவாரூர் - சோமசுந்தரதேசிகரவர்களிடத்துள்ள வேறு உரைப் பிரதியின் ஈற்றிலும் காணப்படுகிறது. சீகாழித் தத்துவநாதர்க்குக் குருவாக உரைக்கப்படும் சீகாழித்தத்துவனூர் சீகாழிச் சிற்றம்பல நாடிகளே யென்று துணிந்துரைத்தற்குத் தக்க ஆதாரமில்லையாயினும் உரைகாரர் இந்நூலைத் **துகளறுபோத**த்தின் வழிவந்ததென்று குறிக் கின்றமையின் அதன் ஆசிரியராகிய சீகாழிச்சிற்றம்பலநாடிகளே இவ் வாசிரியர்க்குக் குருவாவர் என்றுரைக்கவேண்டியிருக்கின்றது. இச் சீகாழித் தத்துவநாதர் **இருபாவிருப**திற்கு ஓர் சிறந்தவுரை யியற்றி யுள்ளார். அவ்வுரையிறுதியிற் காணப்படும் 'இருபா விருப துரை யெழுதி னேன்முன், ஒருவா விகற்ப முணர்ந்தோன்—அருளுடம் பாம், பண்புடைய சிற்றம் பலநாடி தாள்பணிவோன், சண்பைநகர்த் தத்துவநாதன்' என்னும் வெண்பா சீகாழித் தத்துவநாதர் சிற்றம்பல நாடிகள் சீடரென்று தெளிவாக உரைத்தது.

**உண்மைநெறிவிளக்கத்**துக்குப் பல வுரைகளுண்டு. இங்குப் பதிப்பிக்கும் சிந்தனையுரை என்னிடமுள்ள ஓலைச்சுவடியொன்றில் காணப்படுவது. இவ்வுரை தொடங்கும் இதழுக்கு முந்திய இதழில் 'குருபாதம்

இசைவி ளங்கிட வியல்பினிற் பாடிநின் றேத்தி
மிசைவி ளங்கிய மேனியா ரருளினன் மீண்டுந்
திசைவி ளங்கிடத் திருவருள் பெற்றவர் சிலநா
ளசைவில் சீர்த்தொண்டர் தம்முட னப்பதி யமர்ந்தார்.

[—**பெரியபுராணம், சம்பந்தர்** -] உாஉ௰அ.

சிவக்கியான சுவாமிகள் சன்னிதானத்திலே சிற்றம்பல நாடி யள் சாஷ்த்திர உரையை அறிக்கை செய்யிறதுக்கு உத்தரவு கட் டளை யிட்டது. கஈஙு௰ஙுளு ஆடிமீ உ௰௳ சோமவாரம்' என்றொரு குறிப்புள்ளது.

இக்குறிப்பு **உண்மைநெறிவிளக்க** வுரையைப்பற்றியதோ அன் றிச் சுவடியிற் பின்னர்க் காணப்படும் **சிவானந்தபோத** உரையைப்

பற்றியதோ **சிற்றம்பல நாடிகள் வெண்பா** முதலிய சாஸ்திரங்களின் உரைகளைப்பற்றியதோ எல்லாவற்றையும் பற்றியதோ ஒன்றுந் துணிந்துரைத்தற்கில்லை. **உண்மைநெறிவிளக்க**மும் சிற்றம்பலநாடிகள் வழியில் வந்ததே. இங்குக் குறித்த ஆண்டுக்கு நேராகிய கி. பி. 1780-க்குப் பின் ஐந்து ஆண்டுகள் சென்று சிவஞானமுனிவர் சிவபரிபூரண முற்றதாக 'மன்னும் விசுவா வசுவருடம்' என்னும் வெண்பா உரைத்தலின், அவர் இவ்வாண்டில் தென்னாட்டுக்கு யாத்திரை சென்று சிறிது காலம் ஓரிடத்துத் தம் சீடர் முதலாயினரோடு வதிந் திருத்தல் வேண்டும்.

இந்நூற்குச் சிந்தனையுரை யியற்றியார் பெயர் கிடைத்திலது. ஆயினும் இது முன்வந்த குறிப்புக்களால் திருநெல்வேலியிற் செய்யப் பட்டிருக்க வேண்டுமென்று தெரிகிறது. வேறு பல்லுரைகள் சென்னை முதலிய பிறவிடங்களில் அகப்படினும் இச் சிந்தனையுரைப் பிரதிகள் வேறு அகப்படவில்லை.

S. அனவரதவிநாயகம் பிள்ளை.]



சிவமயம்

திருச்சிற்றம்பலம்

உமாபதிசிவாசாரியர்

அருளிச்செய்த

# சங்கற்பநிராகரணம் மூலமும் ஞானப்பிரகாச தேசிகர் உரையும்

---

## காப்பு

திருந்திய அருந்தவம் பொருந்துபல் முனிவர்
கமையாக் காதல் அமையாது பழிச்சும்
நிகரில் செக்கர்ப் புகர்முகத் தெழுந்த
புனிற்று வெண்பிறைத் தனிப்பெருங் கோட்டுத்
தழைசெவி மழைமதப் புழைநெடுந் தடக்கை

---

**(உரை)** திருந்திய அருந்தவம் பொருந்து பல் முனிவர்-சாத்திரங்களில் உத்தமப் பிரகாரமாக விதிக்கப்பட்டுள்ள அரிய தவசுகளோடுங் கூடியிருந்துள்ள மகருஷிகள் பலருங் கூடி—கமையாக் காதல் அமையாது பழிச்சும் - ஒருக்காலும் நிரம்பாத ஆசையோடுங்கூடி அனவரதமுந் தோத்திரங்களைப் பண்ணும்—நிகரில் செக்கர்ப் புகர்முகத் தெழுந்த புனிற்று வெண்பிறைத் தனிப் பெருங்கோட்டு-ஒப்பில்லாமலிருக்கிற செக்கர் வானம்போன்ற சிவந்த புகரோடுங் கூடியிருக்கிற முகத்திலே தோன்றப்பட்ட ஈன்றணித்தாயுள்ள வெள்ளிய பிறைபோலும் ஒப்பில்லாத பெரிய கொம்பினையு முடையதாய்—தழைசெவி மழைமதப் புழைநெடுந் தடக்கை - தழைந்த செவியினையுங் கார்போலும் பொழியாநின்ற மதத்தினையும் இரண்டு துவாரத்தோடுங்கூடி நெடிதாய்ப் பருத்திருக்கிற துதிக்கையினையு முடைத்தாய்—வாட்டரு

வாட்டரு மும்மை நாட்டம் நால்வாய்ப்
பாசம் அங்குசம் தேசுறும் எயிறொண்
கனியிவை தாங்கும் புனித நாற்கரத்
தங்கதம் கடகம் பொங்கிழை யாரம்
நிறைமணிச் சுடிகைக் கறையணற் கட்செவி
கொண்ட திண்பெரும் பண்டிக் குறுந்தாட்
களிறுதன் இருகழல் கருதா
வெளிறுறு துயரம் வீட்டினம் பெரிதே. ௧

---

## ௨. பாயிரம்

பெருங்கடல் உதவுங் கருங்கடு வாங்கிக்
கந்தரத் தமைத்த அந்தமில் கடவுள்

---

மும்மை நாட்டம் நால்வாய் - ஒளியினையுடைய மூன்று கண்ணினையும் நான்ற வாயினையு முடையதாய்—பாசம் அங்குசம் தேசுறும் எயிறு ஒண்கனி இவை தாங்கும் புனிதநாற்கரத்து - பாசத்தினையுந் தோட்டியினையும் பிரகாசத்தையுடைய கொம்பினையும் அழகிய மாங்கனியினையும் இவையிற்றைத் தரித்துக் கொண்டிருக்கிற சுத்தமாயுள்ள நாலு கையினையு முடையதாய்—அங்கதம் கடகம் பொங்கிழை யாரம் நிறையணி சுடிகைக் கறையணற் கட்செவி கொண்ட திண்பெரும் பண்டிக் குறுந்தாள் - தோள்வளையினையும் இரத்தின கடகத்தினையும மிக்க நவரத்தினங்களை யழுத்தி யிழைக்கப்பட்டிருக்கிற ஆரத்தினையுங் குறைவற அணிந்து இரத்தினத்தையுடைய தலையினையுங் கறுத்திருக்கிற கண்டத்தினையு முடைத்தாய்க் கண்ணே செவியாகக் கேட்கிற பாம்பு கொண்டு கட்டப்பட்டுச் சிக்கென்று பெரிதாயிருக்கிற வயிற்றினையுங் குறுகியிருக்கிற காலினையு முடையதாயிருக்கிற—களிறுதன் இரு கழல் கருதா - இப்படிக்கொத்த யானையினது இரண்டு பாதங்களையும் மனதார நினைந்து—வெளிறுறு துயரம் வீட்டினம் பெரிதே - குற்றத்தோடுங் கூடியிருக்கிற துக்கங்களை மிகவும் விடுவியாநின்றேம். ௧

**(உரை)** பெருங்கட லுதவுங் கருங்கடு வாங்கிக் கந்தரத் தமைத்த அந்தமில் கடவுள் - பெரிதாயுள்ள திருப்பாற்கடலிலே நின்றும் உண்டாகப்பட்ட கறுத்த நஞ்சினைத் தனது சீகத்தத்திலே வாங்கி

பாலரை யுணர்த்தும் மேலவர் போலக்
கேட்போ ரளவைக் கோட்படு பொருளால்
அருளிய கலைகள் அலகில வால்அவை
பலபல சமயப் பான்மைத் தன்றே
அஃதால் அந்நூற் றன்மை யுன்னிய
மாந்தர் இதுவே பொருளென் றதன்நிலை
அறைதலின் வேற்றோர் பனுவல் ஏற்றோர்க்
கிசையா மாறுபாடு கூறுவர் அதனாற்

---

அமுதுசெய்து கண்டத்திலே தரித்துக்கொண் டிருக்கச்செய்தேயுந் தனக்கு முடிவில்லாத கடவுள். என்னவே கர்த்தாவை நீக்கி முற்காலத்திலே தேவர்கள் அமுதங் கடைய அதிலே நஞ்சு பிறந்து அதினாலே அவர்கள் பீடைப்படுகையினாலே துட்டநிக்கிரகமும், அவர்கள் கர்த்தாவை நோக்கி அபயமிட அஞ்சாதேயென்று அந்த நஞ்சை அமுதுசெய்து அவர்களை இரட்சிக்கையினாலே சிட்ட பரிபாலனமுமாய் நின்றதெனக் கொள்க. இப்படித் துட்டநிக்கிரகமுஞ் சிட்ட பரிபாலனமு முடைய கடவுளானவன்—பாலரை யுணர்த்தும் மேலவர் போல - தங்கள் பிள்ளைகளுக்கு அந்தந்தப் பக்குவங்கள்தோறும் அறிவையுந் தொழிலையுங்கொளுத்திவந்த மாதாபிதாக்களைப்போல—கேட்போ ரளவைக் கோட்படு பொருளால் அருளிய கலைகள் அலகில- கேட்கிற ஞாதாக்களுடைய எல்லைக் கோட்பாடுகளுக் கீடாயுள்ள அர்த்தங்களைக் கொண்டு அருளிச்செய்யப்பட்டிருக்கிற சாத்திரங்கள் எண்ணிறந்திருக்கும்—ஆல்அவை பலபல சமயப் பான்மைத் தன்றே - அப்படியிருக்கையால் அந்தச் சாத்திரங்கள் வெகுவிதமாயுள்ள சமயப் பகுதிகளோடுங் கூடியிருக்கும்—அஃதால் அந்நூற் றன்மை உன்னிய மாந்தர் இதுவே பொருளென் றதன்நிலை யறைதலின் - ஆகையால் அந்தச் சாத்திரங்களினது உண்மையை ஆராய்ந்தறிந்த ஆன்மாக்கள் இதுவே சாத்திரமும் இதுவே அர்த்தமுமென்று அந்தச் சமயத்தையே பெலமாகச் சொல்லி நிற்கையினாலே—வேற்றோர் பனுவல் ஏற்றோர்க் கிசையா மாறுபாடு கூறுவர் - மற்றொரு சாத்திரங்களை யாராய்ந்தறிந்தவர்களுக்கு அவன் சொல்லுகிற சாத்திரமும் அர்த்தமும் பொருந்தாது, ஆகையால் அவன் சொன்னது இவனுக்குப் பொருந்தாமல் இவன் சொன்னது அவனுக்குப் பொருந்தாமல் ஒன்

புறச்சம யங்கள் சிறப்பில வாகி
அருளில் மாந்தரை வெருளுற மயக்கி
அலகைத் தேரி னிலையில் திரும்
ஈங்கிவை நிற்க நீங்காச் சமய
௧௫ மூவிரு தகுதி மேவிய தாமும்
ஒன்றோ டொன்று சென்றுறும் நிலையில்
ஆறு மாறு வீறுடைத் திவற்றுள்
எவ்வ மில்லாச் சைவநற் சமயத்
தலகில் ஆகமம் நிலவுத லுளஅவை

றுக்கொன்று மாறுபடச் சொல்லாநிற்பர்கள்—அதனாற் புறச்சமயங்கள் சிறப்பில வாகி அருளில் மாந்தரை வெருளுற மயக்கி அலகைத் தேரின் நிலையில் திரும் - அப்படி யிருக்கையினாலே உலகாயதன், புத்தன், சமணன், மீமாங்கிசன், மாயாவாதி, பாஞ்சராத்திரி என்று சொல்லப்பட்ட புறச்சமயங்களினுள்ள அர்த்தங்கள் உண்மைப் பகுதி யில்லாதாய்ச் சிவனுடைய அனுக்கிரகத்துக் கேதுவல்லாத அபக்குவான்மாக்களை ஈது ஓர் அர்த்தம் இருந்தபடியென் என்று அச்சப்படத் தக்கதாக மருட்டி, பேய்த்தேரைத் தண்ணீரென்று கருதி இத்தைக் குடித்துத் தாகந்திரலாமென்று வந்தவனுக்கு அந்தத் தண்ணீர் பொய்யாய்ப் பேய்த்தேர் மெய்யான தன்மைபோல, இந்தச் சாத்திரங்களும் அர்த்தங்களுஞ் சத்தியம்போலத் தோன்றி அசத்தியமாய் முடியும்—ஈங்கிவை நிற்கநீங்காச் சமய மூவிரு தகுதி மேவிய தாமும் - ஆகையால் இவ்விடத்திற் சொல்லப்பட்ட சமயங்களும் அர்த்தங்களும் நமக்கு வேண்டுவதில்லை, தன்னில் ஒன்றோடொன்று கூடிக்கொண்டிருக்கிற சைவம், பாசுபதம், மகாவிரதம், காளாமுகம், வாமம், வயிரவம் என்கிற உட்சமயங்க ளாறும்—ஒன்றோ டொன்று சென்றுறும் நிலையில் ஆறும் மாறு வீறுடைத்து - இவை ஒரு சமயத்தோ டொரு சமயந் தாக்கிப் பார்க்குமளவில் இந்த ஆறு சமயமுந் தனித்தனியே மகத்துக்களா யிருக்கும்—இவற்றுள் எவ்வமில்லாச் சைவநற் சமயத் தலகில் ஆகமம் நிலவுத லுள - இந்தச் சமயங்களில் வைத்துக்கொண்டு ஒருசற்றுங் குற்றஞ்சொல்லவொண்ணாம லிருக்கிற சைவமாகிய நல்ல சமயமொன்றையும் நோக்கித் தம்பிரானார் அருளிச்செய்யப்பட்டிருக்கிற ஆகமங்கள் எண்ணிறந்து பொருந்தாநிற்

உ0 கனகம் இரணியம் காஞ்சனம் ஈழம்
தனம்நிதி ஆடகம் தமனியம் என்றிப்
பலபெயர் பயப்பதோர் பொருளே போலப்
பதிபசு பாச விதிமுறை கிளக்கும்
வாய்ந்த நூல்கள் ஆய்ந்தன ராகி
உரு ஆசா ஞகி வீசிய சமத்துடன்
ஏழுஞ் சிறுநூ றெடுத்த ஆயிரம்
வாழுநற் சகனம் மருவா நிற்பப்
பொற்பொது மலிந்த அற்புதன் ஆனி
யாரும் விழவிற் பொற்றே ராலயத்

---

கும். ஒரு சமயத்தை நோக்கிப் பல சாத்திரம் அருளிச்செய்வானே னென்னில்—அவை கனகம் இரணியம் காஞ்சனம் ஈழந் தனம் நிதிஆடகம் தமனியம் என்று இப் பலபெயர் பயப்பது ஓர்பொருளே போலப் பதி பசு பாச விதிமுறை கிளக்கும்-அப்படிப் பலவாக அருளிச்செய்ததும் ஒரு பொருளைப் பற்றியிருக்கும்; அதெங்ஙனென்னில், கனகமென்றும், இரணியமென்றும், காஞ்சனமென்றும், ஈழமென்றும்,தனமென்றும், நிதியென்றும், ஆடகமென்றும், தமனியமென்றும் அங்ஙனம் பல பெயராகச் சொல்லப்பட்டவை யெல்லாம் பொன்ஞகிய ஒரு பொருளைப்பற்றி நின்ருற்போல அந்தச் சாத்திரங்களும் பதியினது லட்சணத்தையும், பசுவினது லட்சணத்தையும், பாசத்தினது லட்சணத்தையுமே சொல்லாநிற்கும்—வாய்ந்த நூல்கள் ஆய்ந்தன ராகி ஆசா ஞகி வீசிய சமத்துடன் - இங்ஙனம் பொருந்தப்பட் டிருக்கிற ஆகமங்களைக் கற்ருராய்ந்த போதவான்களாய்ச் சமயம் விசேடம் நிருவாணம் ஆசாரிய அபிஷேகமென்கிற நாலு தீட்சைகளையுமுடையவர்களாய் எங்கும் பிரகாசிக்கப்பட்டிருக்கிற பட்சப் பிரதிபட்சமில்லாத சமபோதவான்களாயுள்ள இந்தப் பெரியோர்கள்—எழுஞ் சிறுநூறெடுத்த ஆயிரம் வாழுநற் சகனம் மருவா நிற்ப - சகாத்தம் ஆயிரத்திருநூற்று முப்பத்தஞ்சாவது செல்லாநிற்கிற காலத்திலே—பொற்பொது மலிந்த அற்புதன் ஆனி யாரும் விழவில்-பொன்னிஞலே செய்யப்பட்ட திருவம்பலத்தின்கண்ணே நிறைந்தெழுந்தருளி யிருக்கிற ஆச்சரியஞயுள்ள திருவம்பலமுடைய தம்பிராஞருடைய ஆனி

கூ0 தேரு *அறுவர் நிரையி லிருப்ப
மயங்கு வாத மாயா வாதி
முயங்கிட ஒருதலை முதுவெதிர் மணிசேர்
பெண்ணை சூழ்ந்த வெண்ணெயம் பதிதிகழ்
மெய்கண் டவன்அருள் கைகண் டவர்களில்
கூரு ஒருவர் ஓர்தலை மருவி யிருப்ப
வஞ்சப் பிறவிக் கஞ்சிவந் தொருவன்
எதிறை யருளென இதுவெனும் மாயா
வாதியை அயலினர் மறுதலைத் தருள்தர

மாதத்தி லாரூந் திருவிழாவிலே—பொற்றேராலயத் தேரு அறுவர் நிரையிலிருப்ப-பொலிவினை யுடைத்தாயிருக்கிற தேர்மண்டபத்திலே யேறி முன் சொல்லப்பட்ட ஆசாரியன்மார் ஆறுதிருப்பேர் ஒழுங்கிலேயெழுந்தருளியிருக்கிற அவதாரத்திலே—மயங்குவாத மாயாவாதி முயங்கிட ஒருதலை - சற்காரிய வாதமின்றி ஒருக்காற் சொன்னது ஒருக்காற் சொல்லாமல் முன்னொடு பின் மலைந்து வருகிற அர்த்தத் தோடுங் கூடியிருக்கிற மாயாவாதி என்கிற சமயி ஒரு புறத்திலே வந்து கூடியிருக்க—முது வெதிர் மணிசேர் பெண்ணை சூழ்ந்த வெண்ணெயம் பதிதிகழ் மெய்கண்டவ னருள் கைகண்டவர்களில் ஒருவர் ஓர்தலை மருவி யிருப்ப - முதிர்ந்த மூங்கில்களி னுண்டாகிய முத்துக்களோடுங் கூடிவருகிற பெண்ணையாறு சூழப்பட்ட திருவெண்ணெய்நல்லூரென்கிற திருப்படைவீட்டிலே திருவவதாரஞ் செய்யப்பட்ட மெய்கண்டதேவ நாயனாருடைய அனுக்கிரகத்தைப் பெற்ற அடியார்களிலே ஒருத்தர் அந்தக் கூட்டத்தின் ஒருபுறத்திலே பொருந்தி எழுந்தருளியிருக்கிற அவதாரத்திலே—வஞ்சப் பிறவிக்கு அஞ்சி வந்து ஒருவன் எது இறை யருள் என - பொல்லாங்கை விளைப்பதாயிருக்கிற பிறவிப் பிணிக்குப் பயப்பட்டானொரு பக்குவன் வந்து இவர்களைத் தெண்டன்பண்ணித் தம்பிரானாருடைய திருவருள் எப்படியிருப்பதென்று அவன் வினவ—இதுவெனும் மாயாவாதியை அயலினர் மறுதலைத் தருள்தர - தன்னுடைய அர்த்தத்தைப் பாரித்து இதுவே பொருளென்று நாட்டின மாயாவாதியை அருகே யெழுந்தருளியிருந்தவர் அவன் சொன்ன அர்த்தத்தைக் கண்டித்து அது அர்த்தமல்லவென்று தள்ளித் தம்முடைய அர்த்தத்தை இதுவே

* எண்மர் - பாடபேதம்.

மற்றவ ரயலினர் அவருரை மறுத்துச்
சொற்றர அயலரில் அவருந் தொலைவுற்
றின்னே *எழுவரும் முன்னே கழியுழி
ஆங்கய லிருந்த அருளினர் அழகிது
நீங்கள் சங்கற்ப நிராகரித் தமையென
மற்றவர் உரைத்த சொற்றரு பொருள்கொடு
வாத செற்பை விதண்டையும் ஏதுவும்
ஓது நால்வகை உவமையுந் திகழ்தர

பொருளென்று நாட்ட—மற்றவ ரயலினர் அவருரை மறுத்துச் சொற்றர - அவருடைய பக்கத்திலே யிருந்தவர் அவர் சொன்ன அர்த்தத்தைக் கண்டித்துத் தம்முடைய அர்த்தத்தை இதுவே பொருளென்று நாட்ட—அயலரில் அவருந் தொலைவுற்று - அவருடைய அருகே யிருந்தவராலே அவருங் கண்டிக்கப்பட்டு—இன்னே எழுவரும் முன்னே கழிவுழி - இப்படி ஒருவரையொருவர் மறுத்து எழுபேரும் முன்னே தள்ளுண்ட அவசரத்து—ஆங்கயல் இருந்த அருளினர் அழகிது நீங்கள் சங்கற்பம் நிராகரித்தமையென மற்றவர் உரைத்த சொற்றரு பொருள்கொடு - அவ்விடத்து அவர்களருகே யெழுந்தருளி யிருந்த ஆசாரியர் அவர்களைப் பார்த்து நீங்கள் உங்க ளர்த்தங்களைச் சங்கற்பித்து மதத்தை நிராகரித்தது மிகவும் நன்றாயிருந்ததென்று ஆசியஞ்செய்து அவர் சொன்ன சொல்லி லுண்டாகிய பொருளை யெடுத்துக்கொண்டு யான்—வாத செற்பை விதண்டையும் ஏதுவும் ஓது நால்வகை உவமையுந் திகழ்தர-வாதமென்ற சொல்லுத் தான் கெட்டு †விதாரமென்றும் ‡விசியுழியென்று மிரண்டாம். இதில் விதாரமென்றது குருவுஞ் சிஷனுமாகுதல் தன்னோடொத்த பக்ஷபாதனோடாகுதல் மாறுபாடின்றிப் பிரமாணங்களி லுண்டாகிற தர்க்கங்களைத் தர்க்கித்து அதிலுண்டாகிய குற்றங்களை நீக்கிச் சத்தியமான அர்த்தத்தை நியமிக்கப்படுவதெனக் கொள்க. விசியுழி யென்ற சொல்லுத் தான் கெட்டுச் செற்பை யென்றும் விதண்டை யென்றும் இரண்டாம். இதிற் செற்பை யென்றது பிறருடைய அர்த்தங்களை நிராகரித்துத் தன்னுடைய பொருளை மலைவற நாட்டுதலெனக் கொள்க. விதண்டை யென்றது பிறருடைய அர்த்தங்களை நிராகரித்துத் தன்னுடைய

*எவரும் - பாடபேதம்.

†விதாரம் - விசார:. ‡விசியுழி - விஜிகீஷாகதா.

அருள்சேர் மாந்தர் வெருள்சே ராமற்
தற்கமும் விடையமுங் கற்க
நற்கவி மாந்தர் நகைநவிற் றுவனே. உ

## ௩. மாயாவாதி சங்கற்பம்

நவிற்றிய நிரையில் அவித்தையி னோன்உரை
நித்தன் அறிவன் சுத்தன் அகண்டிதன்
நிருவி கற்பன் நிர்த்தத்துவன் நிரஞ்சனன்
சொல்வகை எவையுந் தொடாத் தூய்மணி
௫ வரம்பில் வேதச் சிரந்தரு பரம்பொருள்

---

அர்த்தந் தோன்றுமல் நின்று சாதிக்கப்படுவதெனக் கொள்க. ஏது என்றது அளவைப் பிரமாணங்களிலே விதிக்கப்பட்டிருக்கிற பல ஏதுக்களும், வினை பயன் மெய் உரு என்று சொல்லப்பட்ட நால் வகை உவமையும் இந்த நூலிலே விளங்கத்தக்கதாக—அருள்சேர் மாந்தர் வெருள் சேராமல் - திருவருளுக் கேதுவாயுள்ள பக்குவான் மாக்களுக்கு அர்த்தமலவென்கிற அச்சம் வந்து பொருந்தாமல்; தற்கமும் விடையமுங் கற்க நற்கவி மாந்தர் நக நவிற்றுவனே - முன் னூலி லுண்டாகிய தர்க்கங்களையும் விடயங்களையுங் கற்கத்தக்கதாக வும் நல்ல கவித்துவத்தோடுங் கூடியிருக்கிற வித்துவான்கள் இவ னும் ஒரு நூல் செய்வதேயென்று சிரிக்கத்தக்கதாகவும் இந்த நூலைச் சொல்லாநின்றேன். உ

(உரை) நவிற்றிய நிரையில் அவித்தையினோன் உரை - முன் சொல்லப்பட்ட ஒழுங்கில் மாயாவுபாதிகளினாலே வாதிக்கப்பட்டுப் பரப் பிரமம் இப்படி மயங்கி நிற்குமென்று சொல்லுகிற மாயாவாதியுடைய மதமிருக்கிறபடி—நித்தன் அறிவன் சுத்தன் அகண்டிதன் - ஒருக்கா லும் அழியாதவனுமாய் சருவக்கியனுமாய் நின்மலனுமாய்க் கண்டிக்கப் படாதவனுமாய்—நிருவிகற்பன் நிர்த்தத்துவன் நிரஞ்சனன் - விகற்ப மில்லாதவனுமாய்த் தத்துவாதீதனுமாய் மறைப்பில்லாதவனுமாய்— சொல்வகை எவையுந் தொடாத் தூய்மணி - சொல்லும் பொருளுமா யிருக்கிற சாத்திரங்க ளொன்றாலுஞ் சென்று கிட்டவொண்ணாமை யிருக்கிறசுத்தரத்தினமாய்—வரம்பில் வேதச் சிரந்தரு பரம்பொருள்- அந்தச் சாத்திரங்களால் அளவிடப்படாம லிருந்துளதாமாயினும்

சத்தாய் எவையுந் தானாய் அவித்தை
தொத்தா துயர்ந்த தொல்சுடர் மூவா
இன்ன தன்மையன் ஏகன் அநேகன்
கன்னற் பெருஞ்சுவை தன்னிற் பிறவாப்
பெற்றியி னிருந்து பொற்பணி யியல்பினின்
வான்வளி அனல்நீர் மண்மருந் தன்ன
மான தாது ஆறைங் கோசத்
தொகுதி யாக்கைப் பகுதிய தொருபுடை
சுத்தி வெள்ளி யொத்தென மித்தையிற்

---

எல்லையற்றிருக்கிற வேதத்தினது தலையிலே சுமந்து தரப்பட்ட எல்லாத்துக்கும் மேலாயிருக்கிற அர்த்தமாய்—சத்தாய்-சுத்தசைதன்னியமாய்—எவையுந் தானாய்-எல்லா உபாதிகளுந் தானேயாய்—அவித்தை தொத்தா துயர்ந்த தொல்சுடர் - அப்படியிருந்ததாமாயினும் அந்த உபாதிகள் தன்னைத் தொந்தியாதபடி மிக்குப் பழையதாயுள்ள பிரகாசமாய்—மூவா இன்ன தன்மையன் - ஒருக்காலும் போதுசெய்யாமலிருக்கிற இந்த ஞாயத்தோடுங் கூடியிருப்பவனாய்—ஏகன் அனேகன் - ஒருத்தனுமாய்ப் பல யோனிகளிலும் நிற்கிறவனுமாய்—கன்னற் பெருஞ்சுவை தன்னிற் பிறவாப் பெற்றியி னிருந்து - கரும்பிலுண்டாகிய மிக்க இரதமானது அந்தக் கரும்புக்குத் தோன்றாத இயல்புபோலத் தன்னிடத்திலுண்டாகிய இன்பத்தையுந் தான் அறியாமலிருந்துள்ள பரப்பிரமமானது பிரபஞ்சலீலையை யுண்டாக்குமிடத்து—பொற்பணி யியல்பினில் - பொன்தானே பல ஆபரணங்களாயிருந்த தன்மைபோல—வான் வளி அனல் நீர் மண்மருந் தன்ன மான தாது ஆறைங் கோசத் தொகுதி யாக்கைப் பகுதியது ஒருபுடை - பரப்பிரமந்தானே ஆகாசமும், வாயுவும், அக்கினியும், அப்புவும், பிருதிவியும், அவுஷதிகளும், உணவுகளும், இதனாலுண்டாகப்பட்ட தாதுக்களாறும், அன்னமயம் பிராணமயம் மனோமயம் விக்கியானமயம் ஆனந்தமயமென்கிற ஐங்கோசங்களும் ஒரு பட்சம் இவையெல்லாமாகக் கூடி யிருக்கிற சரீரத்தின் பகுதியதாயிருக்கும். இங்ஙனந் தோன்றப்பட்ட பிரபஞ்சம் நித்தியமோ அநித்தியமோ அநித்தியமென்னில் இது நித்தியமாய்த் தோன்றுவானேனென்னில்—சுத்தி வெள்ளி யொத்தென மித்தையில் - சுத்தியானது வெள்ளியை யொத்

றானென லாகுந் தன்மைத் துலூதையிற்
சின்னூற் றகையின் வேற்றுமை மரீஇய
தென்னப் பன்மைய தெனின்இலை பழம்பூத்
தோனார் வயிரந் தருத்தருந் தொன்மையின்
வானா ரந்திரை நுரைதரு வாய்மையிற்
கூடும் அசித்தைச் சித்துத வாதெனின்
நெற்பதர் பலாலத் திற்பரந் தரும்இது
தன்னியல் பென்றும் விளையாட் டென்றும்

---

துத் தோன்றிற்றென்று சொல்லலாம், மதிப்பிரமையினாலே அநித்தியமாயுள்ள பிரபஞ்சமும் நித்தியமாய்த் தோன்றும். ஆனால் அந்தப் பரப்பிரமமும் இந்தப் பிரபஞ்சமுந் தன்னில் வேறோவென்னில்—தானென லாகுந் தன்மைத்து - அந்தப் பரப்பிரமந்தானே இந்தப் பிரபஞ்சமென்று சொல்லுந் தன்மையை யுடையதாயிருக்கும். அந்தப் பிரமத்தைப் போலே யிராமல் இந்தப் பிரபஞ்சம் வேற்றுமையாயிருப்பானே னென்னில்—உலூதையிற் சின்னூற் றகையின் வேற்றுமை மரீஇயது - சிலந்தியினிடத்துண்டாகிய சிறிய நூலினை யொக்கப் பிரபஞ்சமும் பிரமத்துக்கு வேற்றுமையைப் பொருந்தியிருக்கும்—என்னப் பன்மையதெனின் - சிலம்பி நூல் போலே என்று நீர் சொல்ல அது ஒரு தன்மையா யிருந்தது, பிரபஞ்சம் பல பிரகாரமா யிருப்பானே னென்னில்—இலை பழம் பூத் தோல் நார் வயிரந் தருத் தரு தொன்மையில் வான்நா ரந்திரை நுரைதரு வாய்மையிற் கூடும் - இலையும் பழமும் பூவுங் காயுந் தோலும் நாரும் வயிரமு மிவையெல்லாம் மரமானது தந்த தன்மை போலவும் பெருமையுடைய தண்ணீரானது திரையையும் நுரையையுந் திவலையையுங் குமிழியையுந் தந்த உண்மைபோலவும் இப்படிப் பிரபஞ்சமும் பலவாகச் சொல்லப்படும்—அசித்தைச் சித்து உதவாதெனில் - அசித்தாயுள்ள பிரபஞ்சஞ் சித்தாயுள்ள பிரமத்திலே தோன்றாதென்னில்—நெற்பதர் பலாலத்திற் பரம் தரும் - நெல்லானது பதரையும் வைக்கோலையுந் தந்த தன்மைபோலச் சித்தாகிய பிரமமுஞ் சடமாகிய பிரபஞ்சத்தைத் தாராநிற்கும், இந்தப் பிரமம் இப்படிச் செய்யவேண்டுவானே னென்னில்—இது தன்னியல்பென்றும் - இப்படிச் செய்து வருகிறது இந்தப் பிரமம் தன்னுடைய இயல்பா யிருப்பதொன்றென்

முன்னுள மறைகள் மொழிதலின் ஒருநூற்
பன்மணி நிலையும் பசுப்பால் எனவும்
பலஅகல் நீரில் அலர்கதிர் எனவுங்
கூவல் ஆழி குளம்சிறு குழிகால்
வாவி யாவையும் வருபுனல் எனவும்
அவ்வவற் றடங்கி ஆடியுள் நிழலெனத்
தோன்றி யாக்கைநற் காந்தத் திரும்பும்

றும், பிரமம் இந்த உபாதிகளினாலே வாதிக்கப்பட்டிருப்பானேனென்னில்—விளையாட்டென்றும் - இந்த உபாதிகளோடும் கூடிக்கொண்டு நிற்கிறதைப் பிரமத்துக்கு விளையாட்டாய் இருப்பதொன்றென்றும், பாப்பிரமத்துக் கியல்பென்றும் விளையாட் டென்றும் எங்கே காணப்பட்ட தென்னில் — முன்னுள மறைகள் மொழிதலின் - அனாதியேயுள்ள வேதங்கள் சொல்லுகையினாலே ; இந்த உபாதிகள் பலவாகக் காணப்பட்டாற்போல அந்தப் பிரமமும் இப்படிப் பலவாகக் கண்டிக்கப்பட் டிருக்குமோவென்னில்—ஒரு நூல் பன்மணி நிலையும் பசுப்பால் எனவும் பலவகை நீரில் அலர் கதிர்எனவுங் கூவல் ஆழி குளம் சிறுகுழி கால் வாவி யாவையும் வருபுனல் எனவும் அவ்வவற் றடங்கி - மணிகள் பலநிறமாயிருந்ததாயினும் அதிலே கோப்புண்ட நூல் ஒரு தன்மையா யிருந்தாற்போலவும், பசுக்கள் பல வன்னங்களாயிருந்ததாமாயினும் பால் ஒரு நிறமாயிருந்த தன்மைபோலவும், நீர்பொருந்திய பாத்திரங்கள் பலவாயிருந்ததா மாயினும் அவையிற்றிற் பிரதிவிம்பஞ் செய்த ஆதித்தன் ஒன்றாயிருந்த தன்மைபோலவும், கிணறுங் கடலுங் குளமுஞ் சிறிதாயுள்ள குழிகளும் வாய்க்கால்களும் வாவிகளு மிவையெல்லாம் பலபேதமா யிருந்ததாமாயினுந் தண்ணீர் ஒன்றாயிருந்த தன்மைபோலவும், இப்படியே யோனிகள் பலவாயிருந்த தாமாயினும் அறிவு ஏகமாய் அந்தந்த யோனிகள் தோறுங் கூடியிருக்கும். அப்படி யோனிகள்தோறும் அறிவு கூடி யிருந்ததாமாயின் அந்த உடல்கள் தோறும் பந்திக்கப்படாதோ வென்னில் — ஆடியுள் நிழலெனத் தோன்றி யாக்கை - கண்ணாடியிலே நிழலானது தோன்றி நிற்கச் செய்தேயும் அதில் தோய்வற நின்றாற்போல உடலிலே அறிவானது தோன்றிநிற்கச்செய்தேயும் அந்த உடலில் தானுந் தோய்வற நிற்கும். அப்படி அந்த அறிவு உடலில் தோய்வற நிற்குமாமாகில் இந்த உடல்

௩௦ கனவிற் றீங்குங் கங்குலிற் கயிறும்
புனலிற் றோன்றும் பேய்த்தேர்ச் செய்தியும்
*அன்னதும் பின்னர் நன்னிறப் பளிங்கெனப்

காரியப்படும்படி எப்படியென்னில்—நற் காந்த இரும்பில் - நல்ல காந்தமானது தோய்வற நிற்க அதின் சன்னிதியிலே இரும்பானது காரியப்பட்டாற்போலப் பிரமந் தோய்வற நிற்க அதின் சன்னிதியிலே உடலானது காரியப்படாநிற்கும். அந்த அறிவும் இந்த உடலிலே நின்று சுகதுக்கங்களை அனுபவிக்குதே அது வருவானேனென்னில்—கனவில் தீங்குங் கங்குலிற் கயிறும் புனலில் தோன்றும் பேய்த்தேர்ச் செய்தியும்-ஒருவன் சொற்பனங் காண்கிற விடத்து அவனை ஓர் ஆனை பின் பிடித்துக்கொண்டுவா அதற்குப் பயப்பட்டு இவன் ஓடச்செய்தே முன்னே ஒரு கிடங்கு அனேக ஆழமாயிருந்தது அதுகொண்டு அங்கும் போகமாட்டாமல் இங்கும் நிற்கமாட்டாமல் நின்று தவிக்கச்செய்தே விழித்த அவதரத்தில் இவையெல்லாம் பொய்யாயிருந்த தன்மை போலவும், ஒருவன் இராக்காலத்திலே ஒரு புற்றின் வாசலிலே கயிறு கிடக்கிறதைக் கண்டு ஒரு பாம்பு கிடக்கிறதைப் பாரீரென்று பிரமித்து நிற்கச்செய்தே விடிந்த அவதரத்து அந்தப் பாம்பு பொய்யாய்க் கயிறு மெய்யான தன்மைபோலவும், ஒருவன் தண்ணீர்த்தாகத்தின் மிகுதிகொண்டு கானலைத் தண்ணீரென்று புத்திபண்ணிக்கொண்டு வந்தான் அதினுடைய உண்மையைப் பார்த்தபொழுது அவனுக்குத் தண்ணீர் பொய்யாய்க் கானல் மெய்யான தன்மைபோலவும் இந்தப் பிரமம் உடலோடுங் கூடிநின்று சுகதுக்கங்களை யனுபவித்தாற்போல இருக்குமதொழிந்து தன்னுண்மையைப் பார்க்குமிடத்து இந்தச் சுகதுக்கங்களும் அந்த அறிவுக் குண்டாகாது. இப்பொழுது பிரத்தியக்ஷமாகச் சோத்திராதிகளோடுங் கூடி அதுதானய்க் கன்மங்களைப் பொசிக்கிறது காணப்பட்டிருக்குதே யென்னில்—அன்னதும் பின்னர் நல்நிறப் பளிங்கென - அப்படியே அந்த இந்திரியங்கள் தானய் நின்றதாயினும் பிரமத்துக்கு அந்த அனுபோக முண்டாகாது; அதென்போலவென்னில், படிகமானது நல்ல பஞ்சவன்னங்களோடுங் கூடி அதுதான யிருந்ததாமாயினும் அவையிற்றோடும் படிகம் ஒரு சற்றுஞ் சம்பந்தமற நின்றாற்போலுமெனக் கொள்க.

*அன்ன தின்பின் - பாடபேதம்.

பதினூற் கரணத் தொருமூன் றவத்தை
நாளும் நாளும் நயந்துறும் இருபயன்
கூரு தன்னிற் சாராத் தொன்மைத் தன்மை
தற்பண நிழற்கண் குற்றிபாய்ந் தற்றே
இவ்வியற் பந்தப் பவ்வம தகல
விண்முதல் தந்த கொண்மூப் படலத்
திருள்அற உதித்த கால்தக விவேகந்

இதன்றியும்—பதினூற்கரணத்து ஒருமூன்று அவத்தை நாளும்நாளும் நயந்துறும் - சோத்திராதிகள் ஐந்தும் வாக்காதிகள் ஐந்தும் அந்தக் கரணங்கள் நாலும் ஆகப் பதினூலோடுங் கூடிப் புருவமத்தியத்திலே சாக்கிராவத்தையும், இதிலே சோத்திராதியும் வாக்காதியும் நிற்க அந் தக்கரணங்களோடுங் கூடிக் கண்டத்தானத்திலே சொற்பனுவத்தை யும்,இதிலே மனூபுத்தி யாங்காரம் நிற்கச் சித்தத்தோடுங் கூடி இதயத் தானத்திலே சுழுத்தியவத்தையும், இந்த அவத்தைகளிலே நாடோ றும் நாடோறும் பொருந்தியனுபவியா நிற்கும். அறிவானது இந்த அவத்தைகளோடுங் கூடி யனுபவிக்குமாயின் இதற்குப் புண்ணிய பாவத் தொந்தனே யில்லையாமோ வென்னில்—இரு பயன் தன்னிற் சாராத் தொன்மைத் தன்மை தற்பண நிழற்கண் குற்றி பாய்ந்தற்றே - இந்த அவத்தைகளோடுங் கூடிநின்றதாமாயினும் அனூதியேபுண்ணிய பாவத் தொந்தனே இந்தப் பிரமத்தைச் சாராது, அது எத்தன்மைத் தென்னிற் கண்ணூடியிலே ஒருவன் முகம் பிரதிவிம்பஞ் செய்த விடத்து அந்த முகத்திற் கண்ணிலே பாரைகொண்டு பாய்ந்த விடத்து அந்தக் கண்ணூடி யுடைந்தொழிந்து கண்ணுக்கு ஈனம் வாராதிருந்தாற்போலுமெனக் கொள்க. இது பெத்ததசை.

மேல் முத்திதசை யருளிச்செய்கிருர்: இவ்வியற் பந்தப் பவ்வமது அகல - இப்பொழுது நான் சொல்லிவந்த முறைமையிலே இந்தப் பிரமத்தை வாதிக்கப்பட்ட மாயாவுபாதிகளி லுண்டா கிய பிறவித் தொந்தனே இதற்கு நீங்குகை நிமித்தமாக—விண் முதல் தந்த கொண்மூப் படலத்து இருள் அற உதித்த கால் தக - ஆகாசமென்கிறத்திலே நின்று மேகமானது தோன்றி அந்த ஆகா சத்தை மறைக்க அதனூ லுண்டாகிய இருளானது நீங்குகை நிமித்த மாக அந்த ஆகாசத்திலே கின்றுந் தோன்றி அந்த மேகங்களே நீக்கி

௪௦ தன்னில் தோன்றிச் சாதக மனைத்தையும்
மன் அகப் பிரிப்பும் மடியிழை வாங்கலும்
போல ஞாலம் பொய்யறக் கழீஇத்
தானே தானாய்த் தன்னில் தன்னைத்
தானே கண்டு தன்நலம் உற்று
௪௫ வசையில் தத்துவ மசிபதத் தெளிவால்
அகமே பிரம மாயினன் என அறிந்
தசல னாகிநற் சலசல மதியெனக்

---

ஆகாசத்தை நின்மலமாக்குவித்த வாயுவைப்போல—விவேகந்தன்னில் தோன்றி-அந்தப் பிரமத்திலே நின்றும் விவேகக்கியானந் தோன்றி—சாதகமனைத்தையும் - இந்தப் பிரமத்துக் குண்டான மறைப்புக்க ளெல்லாத்தையும்—மன் அகப் பிரிப்பும் மடியிழை வாங்கலும்போல ஞாலம் பொய் அறக் கழீஇ - நிலைபெற்று வாராநிற்கிறதொரு வீட்டை ஒருத்தன் ஒவ்வொரு வைக்கோலாகவும் ஒவ்வொரு கழியாகவும் ஒவ்வொரு மரமாகவும் நாளிலே பிடுங்கிப் பிடுங்கிப் போட்டபின்பு அந்த வீடென்கிற சொரூபம் இல்லையாய்ப்போன தன்மைபோலவும் ஒரு புடைவையை ஒருத்தன் ஒரோ ரிழையாக நாளிலே பிடுங்கிப் பிடுங்கிப் போட்ட பின்பு அந்தப் புடைவை யென்கிற சொரூபம் இல்லையாய்ப் போன தன்மைபோலவும், பிரபஞ்சமாகிற பொய்யையும் பிருதிவி முதலாகக்கொண்டு இது நானல்ல இது நானல்லவென்று நேதி பண்ணி நாளிலே நீக்கிக்கொண்டு—தானே தானாய் தன்னில் தன்னைத் தானே கண்டு தன் நலமுற்று - இப்படி அந்த உபாதிகள் நீங்கின விடத்து இந்த அறிவானது அந்தப் பிரமந் தானேயாய்த் தன்னிடத் திலே தற்சொரூபத்தைத் தானே தரிசித்துத் தன்னிடத்தி லுண் டாகிய இன்பத்தைத் தான்தானே அனுபவித்து—வசையில் தத்துவ மசிபதத் தெளிவால் அகமே பிரமமாயினன் என அறிந்து - குற்றமற் றிருக்கிற தத்துவமசிபத மென்கிற மகா வாக்கியத்தின் தெளிவு கொண்டு அந்தப் பிரமம் நானானேன் என்கிற பிரமக்கியானத்தைத் தீர விளங்கி—அசலனாகி-இந்தப் பிரமக்கியான முண்டான விடத்துப் பின்னைச் சற்றுஞ் சலனமில்லாதவனாய் ; உபாதிகளோடுங் கூடிச் சத்தாதி விடயங்களைப் பொசிக்கச்செய்தே சலனமில்லையென்ற தென்னென்னில்—நற்சல சலமதியெனக் கண்டிடும்-உபாதிகளோடுங்

கண்டிடும் உடலம் விண்டகல் கடத்து
மங்குல துடைதர எங்குமாம் தகைத்தே
இவ்வகை யுணர்ந்து செய்தொழில் அறாத
மடவோர் தாமும் கடனா இயற்றுங்
கன்ம காண்டத் தொன்மைப் புரிவால்
தோற்றிய வித்தை மேற்கடை அரணியில்
எழுந்தெரி அவற்றை விழுங்கிய தென்னத்
தன்னொழிந் துள்ள தானா யொழியும்

---

கூடிச் சத்தாதி விஷயங்களைப் பொசிக்கச்செய்தே அந்த உண்மைக்குச் சலனமில்லாதது, நல்ல சலமானது அசைந்தவிடத்து அத்தோடுங் கூடின சந்திரனும் ஒக்க அசைந்தாப்போலே அந்தச் சந்திரனுண்மையைப் பார்த்தவிடத்து அது அங்கில்லையானாற்போல அப்படி இந்த அறிவையுங் காணப்படும். இது சீவன்முத்த ரிலக்கணம்.

இனிப் பரமுத்த ரிலக்கணம்: உடலம் விண்டகல் கடத்து மங்குல் அது உடைதர எங்குமாம் தகைத்தே - இந்தச் சரீரதொந்தனை விட்ட அவதரத்து இந்த அறிவும் அந்தப் பிரமமுந் தன்னி லொன்றுபட்டு விட்டது என்போல வென்னில், இடவிதாயிருக்கிற குடத்துக்குள்ளே அகப்பட்டு நின்ற ஆகாயம் இந்தக் குடமானது உடைந்த அவதரத்து அந்தப் பராகாசமுந் தானும் ஒன்றுபட்டாற் போலவா மெனக் கொள்க. இது பரமமுத்தி—இவ்வகை யுணர்ந்து செய் தொழில் அறாத மடவோர் தாமும் - அது நானானேன் என்கிற பிரமக்கியானத்தை யறிந்து தான் முன்பு செய்துவந்த கன்மங்க ளெல்லாத்தையும் விட்டுவிட மாட்டாத அறிவில்லாதவர்கள் தாங்களும்— கடனா இயற்றுங் கன்மகாண்டத் தொன்மைப் புரிவால் தோற்றிய வித்தை - அந்தப் பிரமஞானமுண்டாகை நிமித்தமாகச் சாதன சதுட்டயமாகிய கன்மங்களை யனுட்டித்து அந்தத் தொழில்களைப் பழகச் செய்து வரவே விவேகக்கியானமானது அவர்களுக்கு உண்டாகாநிற்கும்—மேற்கடை அரணியில் எழுந்து எரி அவற்றை விழுங்கியதென்னத் தன்னொழிந் துள்ள தானா யொழியும் - அப்படி யுண்டான விவேகமுந் தீக்கடைக்கோலை மேலே வைத்துக் கடைய அந்தத் தொழிலினாலே யுண்டாகிய நெருப்பு அந்த அரணியையுங் கோலினையுஞ் சேரச் சுட்டுப்போட்ட தன்மைபோலத் தான் ஒன்றுமொழிந்து

அந்நிலை யன்றி அழிவறு முத்தி
ஏயா தென்றுதன் இயல்பை
மாயா வாதி வகுத்துரைத் தனனே. ௩

---

## ச. மாயாவாதி நிராகரணம்

உரைதரு பிரமம் ஒன்றெனும் உரைக்கண்
வருபிர மாணம் மறையெனில் அருமறை
ஒன்றென்ற தன்றி இருபொருள் உரைத்தல்
நன்றன் றபேதம் நாடிய பொருளேற்
௫ பேதமும் அபேதமும் ஓத வேண்டா

---

மற்றுண்டாகிய கன்மங்களெல்லாத்தையும் அழித்துப் போடாநிற்கும்—அந்நிலையன்றி - அந்த நிலையிலே நின்றுவிடக் கடவன்; அது ஒழிந்து—அழிவறு முத்தி ஏயாதென்று தன் இயல்பை மாயாவாதி வகுத்து உரைத்தனனே - நிலைபெற்றுடையதாயிருக்கிற முத்திப்பேறு பொருந்தாது. இப்படியே தன்னுடைய பெத்தத்திலும் முத்தியிலுமுண்டாகிய முறைமையினை மாயாவாதியானவன் வித்தரித்துச் சொன்னான். மேல் ஐக்கியவாதி மறுக்கிறான்: ௩

(உரை) உரைதரு பிரமம் ஒன்றெனும் உரைக்கண் வரு பிரமாணம் மறையெனில்-நீ பெத்தமாகவும் முத்தியாகவுங் கூறின உன்னுடைய மதத்தின் தாற்பரியம் பிரமமொன்றுமே யுள்ளதென்று சொல்லுமிடத்து ஒன்றென்றதற்குப் பிரமாணம் ஏதென்னில், வேதமே பிரமாணமாயிருக்கு மென்னில்—அருமறை ஒன்றென்ற தன்றி இரு பொருள் உரைத்தல் நன்றன்று- அரிய வேதமானது பிரமமொன்றுமே யுள்ளதென்று சொல்லுவதன்றிச் சீவபரமென்று இரண்டாகச் சொல்லச்செய்தே நீ இட்ட பிரமாணத்துக்கு நன்றாகாது—அபேதம் நாடிய பொருளேல் - வேதம் அப்படி இரண்டென்றதும் அபேத சித்தாந்தத்தைச் சொன்னதா யிருக்குமென்னில்—பேதமும் அபேதமும் ஓத வேண்டா-நீ ஒன்றென்றதற் கிட்ட பிரமாணம் இரண்டென்றும் இரண்டல்லவென்றுஞ் சொல்ல வேண்டுவதில்லை; பேதமென்றும் அபேதமென்றும் பேதாபேத மென்றும் வேதஞ் சொல்லுகிறதெல்லாம் அந்தப் பிரமமொன்றையுமே யென்னில்—பேதமெனினும்

பேத மெனினும் அபேத மெனினும்
பேதா பேத மெனினும் அமையும்நின்
ஐயமில் உரையிற் பையவந் துளதாம்
திகழ்பிர மாண இகழ்வுமுண் *டன்றிப்
பெத்தம் பேத முத்தி அபேதமேல்
அநவத் திதமாம் அவைஇரு திறனும்
இனிஅப் பழமொழி இரண்டல ஒன்றேல்
அன்றியும் பெத்தம் பேதத் தறைதலும்
ஒன்றிய முத்தி அபேதத் துரைத்தலும்
பழுதாம் இத்திறன் பதையா தாய்கமற்

அபேதமெனினும் பேதாபேதமெனினும் அமையும் நின் ஐயமில் உரையிற் பையவந் துளதாம் திகழ்பிரமாண இகழ்வும்-வேதம் இரண்டென்றாலும் இரண்டல்லவென்றாலும் இரண்டுமாய் இரண்டல்லவுமாயிருக்குமென்றாலும் அமைவு பிறந்திருப்பதா யிருக்கிற உன்னுடைய சந்தேகமற்றிருக்கிற சாத்திரத்திலே விசாரித்துப் பார்க்குமிடத்துக் கிரமத்திலே விளங்கப்பட்ட பிரமாண விரோதமும் உண்டாகாநிற்கும்—உண்டன்றிப் பெத்தம் பேதம் முத்தி அபேதமேல்-அப்படிப் பிரமாண விரோதம் உண்டாகாது காணும், அந்த வேதம் பெத்தத்திற் பேதமென்றும் முத்தியில் அபேதமென்றுஞ் சொல்லுமென்னில்— அநவத்திதமாம் அவை இருதிறனும்-சாத்திரம் பெத்தத்திற் பேதமென்றும் முத்தியில் அபேதமென்றுஞ் சொன்ன இரண்டு வகையையும் விசாரித்துப் பார்க்குமிடத்து உன்னுடைய சாத்திரம் உறுதியில்லாததாம், ஆகையால் சாத்திர விரோத முண்டென்கிறது தப்பாது—இனி அப் பழமொழி இரண்டல ஒன்றேல் - நான் அநவத்திதமா யிருக்குமென்றதுகொண்டு நீ இப்பொழுது அந்தப் பழைய மொழியாகிய வேதம் இரண்டென்று சொல்லாது ஒன்றென்றே சொல்லுமென்னில்—அன்றியும் பெத்தம்பேதத் தறைதலும் ஒன்றிய முத்தி அபேதத் துரைத்தலும் பழுதாம் இத்திறன் பதையாது ஆய்க - முன்னே இரண்டென்று சாத்திரஞ் சொல்லி இப்பொழுது ஒன்றென்று சொன்ன தோஷமன்றியும் பெத்ததசையிற் சீவபரமென்று இரண்டாயிருக்கு மென்றதும் முத்திதசையிற் சீவபரமிரண்டும் ஒன்றாயிருக்குமென்றதுங் குற்றத்தை யுடைத்தாயிருக்கும்,

*டன்றப், டானற் - பாடபேதம்.

றெழுதா மொழியெனும் இப்பிர மாணம்
ஆர்உரை தானே யாயின தேல்உன
தேகம் அநேக முறும்இயம் பாமற்
சத்த ரூபந் தகாதெனில் வானத்
தொத்தொலி உறழு மெனில்வறி துதியா
தன்றியும் பதமும் பாழியும் அனைத்து
மின்றிஓர் ஒலியா யெழுந்திடு மதனுக்
கறிவில துருவில தறியா தறையா

---

இப்படி நான் சொன்ன வகையைப் பதறாமல் ஆராய்ந்து பார்ப்பாயாக—மற்று எழுதா மொழியெனும் இப்பிரமாணம் ஆர் உரை - அது ஒழிந்த எழுதப்படாத வேதமாகிய இந்தப் பிரமாணம் ஆராலே சொல்லப்பட்டது?—தானே ஆயினதேல் - அது ஒருவராற் சொல்லப் பட்டதல்ல சுயம்புவாயுள்ள தொன்றென்னில்—உனது ஏகம் அனேகம் உறும் - நீ பிரமம் ஒன்றென்றது போய்ப் பிரமம் ஒரு முதலும் வேதம் ஒரு முதலுமாக உன்னுடைய ஏகம் அனேகமாகப் பொருந்தா நின்றது. இதன்றியும்—இயம்பாமற் சத்த ரூபந் தகாதெனில் - ஒருவர் உச்சரியாமற் சத்தத்தினுடைய சொரூபந் தானாகத் தோன்றா தென்னில்—வானத்து ஒத்து ஒலி உறழுமெனில் - ஆகாசத்திலே ஒருவர் உச்சரியாமற் சத்தமானது உண்டானாற் போல வேதமும் ஒருவர் சொல்லாமல் தானே உண்டாகாநிற்குமென்னில்—வறிது உதியாது - ஆகாயத்திலே வாயு ஏதுவாகக் கொண்டு சத்தம் உண்டாவதொழிந்து சும்மா சத்தந் தோன்றாது—அன்றியும் பதமும் பாழியும் அனைத்து மின்றி ஓர் ஒலியா யெழுந்திடும் அதனுக்கு அறிவிலது - அதன்றியும் பதமென்றுங் கிரமமென்றும் பாழியென்றும் பின்னும் பல சத்தங்களும் அர்த்தங்களுமாயிருக்கும் வேதமானது; இப்படியன்றி ஆகாசத்திற் சத்தம் ஒரு பிரகாரமாயிருக்கும், அந்தச் சத்தத்துக்கு அறிவென்பதொன்றில்லை; இந்த வேதம் அறிவாயிருப்பதொன்றாகையால் அந்த ஆகாசத்திலுண்டாகிய சத்தம்போலும் இந்த வேதமென்று சொலலாகாது; வேதந்தானே உண்டாகாதென்றால் இந்த வேதத்தைச் சொன்னோர் சிலர் வேண்டும். இதற்கு—உருவிலது அறியாது அறையாது - இந்தச் சரீரத்தாலே சொல்லப்பட்டது வேதமென்னில் இது சுத்தசடமா யிருந்தபடியாலே ஒரு சத்தத்தையும் அர்த்தத்தை

தன்றியும் அவ்வகை யகண்டிதம் அதுஇது
வென்றது குறிப்ப தெவ்வகை யாவும்
ஒன்றெனும் உரையும் ஒழிந்தனை யன்றே
அருமறை பிரம வுரையெனில் அதற்குத்
தந்தம் தாலு முதல்நவில் பொறியில
தென்னில்ஓர் உடற்கண் மன்னிய அலகை
அறைந்தற் றென்ப தார்சொல தமலத்
திறம்பெற் றின்றே செய்தோர் பெயராற்

---

யுஞ் சொல்லமாட்டாது—அன்றியும் அவ்வகை அகண்டிதம் அது இது என்று அது குறிப்பது எவ்வகை - அந்தச் சரீரத்தின் பகுதியையன்றியும் பிரமத்தினுடைய தன்மையை விசாரிக்கில் அது கண்டிக்கப் படாததாய் அகண்டிதமாயிருந்தபடியாலே சத்தத்தையும் அர்த்தத்தையுஞ் சுட்டிச் சொல்லும் பகுதி எப்படி?—யாவும் ஒன்றெனும் உரையும் ஒழிந்தனை யன்றே - ஆகையால் எல்லாம் ஒன்றேயென்று சொன்ன சொல்லையும் விட்டுவிட்டாயாகும்—அருமறை பிரம வுரையெனில் - அரிய வேதமானது அந்தப் பரப்பிரமத்தாலே உச்சரிக்கப்பட்டதென்னில்—அதற்குத் தந்தம் தாலு முதல் நவில்பொறி இலது - அந்தப் பிரமம் அகண்டிதமாகையால் பல்லு நாக்கு முதலாக இதற்குச் சொல்லப்பட்ட கருவிகள் இல்லாதபடியால் அந்தப் பிரமத்தாற் சொல்லப் படாது—என்னில் ஓர் உடற்கண் மன்னிய அலகை அறைந்தற்று - அந்தப் பிரமத்தாலே வேதஞ் சொல்லப்படாதென்னில் பேயானது ஒருவன் சரீரத்திலே நிலைபெற்றுநின்று வருகாலத்தின் நிகழ்ச்சிகளைச் சொன்னாற்போல அந்தப் பிரமமும் ஒருவருடலைச் சார்ந்து நின்று வேதத்தைச் சொல்லும்—என்பது ஆர்சொல் அது அமலத்திறம்பெற் றின்றே - அப்படி ஓர் உடலைச் சார்ந்து நின்று வேதத்தைச் சொல்லுமென்றது ஒரு தேவரைச் சார்ந்தோ ஒரு ரிஷியைச் சார்ந்தோ ஆரைச் சார்ந்து நின்று வேதத்தைச் சொல்லப்பட்டது? அப்படி ஒருவரைச் சார்ந்து நின்று சொன்னதாமாகில் அது பசு வாக்கியம், ஆகையால் அந்தச் சொல்லுக்கு நின்மலத்துவ முண்டாகாது. பின்னை வேதத்தைப் பிரபஞ்ச மெல்லாஞ் சொயம்பு வென்று சொல்வதேனென்னில்—செய்தோர் பெயராற் சொயம்பு வென்று உலகு இயம்பு மென்று அறி இனி-நிட்களமாய் நின்ற கத்தா சகளீகரித்து அவனாலே

சொயம்பு வென்றுல கியம்பும்என் றறிஇனித்
தற்கீட் டலைவரைத் தான்தொழு துரைக்குஞ்
சொற்கேற் புரவல னேவ லமைச்சரை
*அடியேம் மற்றெம் குடிமுழு தாள்மின்என்
றேத்தி இறைஞ்சிற் காப்பர்கள் என்றாங்
கீசன் நாம்செயப் பேசினன் அன்றி
இனையவை பிறரிற் கனவினும் இலனே
தன்னைத் துதிக்குஞ் சொன்னலந் தானுமத்
துறைஅறி வாணர்க் கறைவதொன் றன்றியுந்

---

பிறந்து அவ் வேதம் உச்சரிக்கப்படுகையாலே இத்தைச் சொன்னவன் சொயம்பு வாகையால் இந்த வேதத்தையுஞ் சொயம்புவென்று உலகஞ் சொல்லாநிற்கும், இது இப்படி யிருக்குமென்று மேலறிவாயாக—தற்கீழ்த் தலைவரைத் தான் தொழுதுரைக்குஞ் சொற்கேல் - வேதம் உம்முடைய கர்த்தா சொன்னதாகில் அவன் தனக்குக் கீழாயுள்ள தேவதைகளைத் தான் நமஸ்கரித்துச் சொல்ல வேண்டுவானேனென்னில்—புரவலனேவலமைச்சரை அடியேம் மற்றெம் குடி முழுதாள்மின் என்று ஏத்தி இறைஞ்சின் காப்பர்களென்றாங்கு ஈசன் நாம் செயப் பேசினன் - இராசாவினுடைய குடியாயுள்ளவர்க ளெல்லாரும் அந்த இராசாவைக் கண்டு தங்கள் மேற்கருமஞ் சொல்லிக்கொள்ள மாட்டார்கள், வாசலிற் காரியப்பேர்களைக் கண்டு அடியோங்கள் தேவரீர்க்குப் பழைய அடிமையாயிருக்குமென்று வணங்கின விடத்து அவர்களுக்குண்டாகிய மேற்கருமம் அந்தக் காரியப்பேர்களாலே தீர்க்கப்பட்டாற் போலக் கர்த்தாவும் எல்லாரும் பக்குவ ரல்லாதது கொண்டே அபக்குவராயுள்ளவர் வழிபாடு செய்யத்தக்கதாக அந்தத் தேவதைகளையுஞ் சொன்னதா யிருக்கும்—அன்றி இனையவை பிறரிற் கனவிலும் இலனே - இது ஒழிந்து பிற தெய்வங்களை அவன் நமஸ்கரித்துச் சொன்ன னென்கிறது அவனுக்குச் சொற்பனத்திலுங் கூட உண்டாகாது. உம்முடைய கர்த்தா தன்னைத்தானே தோத்திரம் பண்ணுவானே னென்னில்—தன்னைத் துதிக்குஞ் சொல் நலந்தானும் அத்துறை அறி வாணர்க்கு அறைவ தொன்று - கர்த்தா தன்னைத்தான் நன்றாகத் தோத்திரம் பண்ணுவானென்கிறதும் பக்குவான்மாக்களா யுள்ளவர்கள் தன்னை வழிபாடு செய்யத்தக்கதாகச்

---

*அடிகள் - பாடபேதம்.

தனக்குத் தானே தன்நலம் பகரா
தசத்துக் குரையா தார்க்குரை உயிர்க்கெனில்
உரைபிர மாணம் இறைபிர மேயம்
நீபிர மாதா நின்பிர மிதியென
௪௫ நால்வகை யுளதுன தேகம்நன் றன்றே
நற்பிர மாணம் நிற்பதொன் *றாய்த்தன்
றப்பிர மேயமும் அதன் இயல் பன்றே
கன்னற் சுவையில் அன்னியம் இலதால்
இனிமை தோன்றாத் †தன்மைத் தென்றனை

சொன்னதாயிருக்கும்—அன்றியும் தனக்குத்தானே தன்நலம்பகராது அசத்துக்கு உரையாது ஆர்க்கு உரை உயிர்க்கெனில் - இதுவன்றியும் கர்த்தா தன்னுடைய பெருமையைச் சொல்லுமிடத்து வேறே ஒருத்தர் கேட்கச் சொல்லுவதொழிந்து தனக்குத் தான் தன்னுடைய பெருமையைச் சொல்லிக் கொள்ளாது, பின்னைச் சரீரஞ் சடமானபடியாலே அந்தச் சரீரத்தை நோக்கிச் சொல்லாது, பின்னை இவனுடைய பெருமையைச் சொன்னது ஆரை நோக்கி? அது பிறரை நோக்கிச் சொன்னதெனன்னில்—உரை பிரமாணம் இறை பிரமேயம் நீ பிரமாதா நின்பிரமிதி என நால்வகை யுளது உனது ஏகம் நன்றன்றே - சாத்திரமாகிய பிரமாணம், கர்த்தாவாகிய பிரமேயம், ஆன்மாவாகிய பிரமாதா, ஆன்மாவின் அறிவாகிய பிரமிதி என்று நாலுவகையாகக் காணப்பட்டது ; ஆகையால் நீ ஒன்றென்றது நன்றாயிருந்தது—நற்பிரமாண நிற்பதொன் றாய்த்தன்று - ஆகையால் நன்றாக இதற்குப் பிரமாணமென்று நாட்டின வேதமும் ஒன்றென்று சொல்லி நிலை நிற்கப்பட்டதில்லை—அப் பிரமேயமும் அதன் இயல்பன்றே - இந்தப் பிரமாணத்தாலே அளவிடப்பட்டதாய் மேல் மறுக்கப்பட்டதுபோற் பிரமேயமும் அந்தச் சாத்திரத்தினுடைய இயல்பாகப்படும். இது வேதஞ் சொயம்புவென்றதை மறுத்தது.

மேற் பிரமேயத்தை மறுக்கிறார் : கன்னற் சுவையில் அன்னியமிலதால் இனிமை தோன்றாத் தன்மைத்து என்றனை - கரும்பிலுண்டாகிய இரதம் தன்னில் வேறுபாடில்லாதது கொண்டு தன்னுடைய இரதந் தனக்குத் தோன்றாமலிருந்த தன்மைபோலும் பிரமமும் தன்னுடைய இன்பத்தைத் தான் அறியாதென்று நீ

*றன்றா லப்பிர. †தனிமைத் - பாடபேதம்.

ருO அறிவிற் குவமை அசத்தாம் கட்டி
பிறிவித் தொட்டினும் பேற துறாதே
தற்பர விரிவு பொற்பணி தகுமெனிற்
செய்வோ ரின்றிச் செய்வினை இன்மையிற்
பொற்பணி யாகை தன்பணி யன்றே
ருரு செய்வோர் போலாச் செயப்படு பொருள்முதற்

---

உன் மதத்திலே சொன்னாய்—அறிவிற்கு உவமை அசத்தாம் கட்டி பிறிவித்து ஒட்டினும் பேறது உறாதே - அறிவாயுள்ளதற்கு உவமை சொல்லுமிடத்து அறிவாயுள்ளத்தைச் சொல்லாமற் சடமாயுள்ள கரும்பில் இரதம்போலுமென்று சொன்னாய், அந்தத் தோஷமன்றியுங் கரும்பிலுண்டாகிய கட்டியைத் தன்னிலே பிறித்து வைத்து மேல் ஓர் அவதரத்திலே கூட்டினவிடத்து இத்தனை நாளும் இந்த இரதத்தை யிழந்தோமே இப்பொழுது இந்த இரதத்தைப் பெற்றோமே என்கிற தன்மை இந்தக் கட்டிக்கு உண்டாகாது; ஆகையால் இது பிரமத்துக்கு உவமையன்று. இதன்றியும்—தற்பர விரிவு பொற்பணி தகுமெனில் - பரப்பிரமந் தேகாதிப் பிரபஞ்சமாகப் பலவாயிருந்த தன்மை பொன்னானது பணி பலவாயிருந்த தன்மை போலுமென்று நீ சொல்லில்—செய்வோரின்றிச் செய்வினை இன்மையின் பொன் பணியாகை தன் பணியன்றே - இந்தப் பிரபஞ்சத்திலே செய்வோ ரொருவரையின்றிச் செய்தொழிலானது காணப்படாதாற் போலப் பொன்னானதும் ஒருவன் பண்ணப் பல பணியாயிருந்த தொழிந்து தானாகப் பல பணியாகாது. பிரமம் பிரபஞ்சமாய் விரிந்ததும் வேறே யொருவனாலே செய்யப்பட்டதாக வேண்டும். அப்படியன்று காணும், எல்லாத்தையுஞ் செய்தது பிரமந்தானே யென்னில்—செய்வோர்போலாச் செயப்படுபொருள் முதல் - இந்த உலகத்திற் செய்கிறவர்களைப்போலே யிராது இவர்களாற் செயப்படும் பொருள்களுக்கு முதலாயுள்ள உபாதானமும். அதென்போல வென்னில், குலாலனைப்போலே யிராது சால் குடஞ் சட்டி பானைக்கு உபாதானமாகிய மண்ணும். ஆகையால் இந்தப் பிரமத்தை யின்றிப் பிரபஞ்சத்துக்கு உபாதானம் வேறே யொன்று உண்டாகவேண்டும். அப்படி ஓர் உபாதானமுண்டாகில் அதுவே அமையாதோ இந்தப் பிரமம்

செய்வோர் ஏயாச் செய்யவும் படுமே
சுத்தி வெள்ளியிற் றோன்றிற் றாயினுஞ்
சத்துல கேதும் தாரா தருமெனின்
உலகம் மித்தையென் றோரா துரைத்தனை
நிலவும்நின் மரபு நினைந்திலை யாம்கொல்
விவகா ரத்தில் வேண்டுதும் உலகம்
பரமார்த் தத்தில் பகரா மென்னில்
பாத்துள தேல்இவை யும்பர மார்த்தம்

---

ஏனென்னில்—செய்வோர் ஏயாச் செய்யவும்படுமே - அந்த உபாதானஞ் சடமாயிருந்தபடியாலே அது தானாகப் பிரபஞ்சமாகாது; அந்த உபாதானத்தைக் கொண்டு செய்கைக்குக் கர்த்தாவேண்டும்; அதன்றிப் பிரபஞ்சத்தில் யாதொரு பொருள்களுஞ் செய்வோரொருவரையில்லாமல் அந்தத் தொழில்கள்தானே செயற்பட்டு வருவதுமுண்டாமே?—சுத்தி வெள்ளியில் தோன்றிற்றாயினுஞ் சத்து உலகேதும் தாரா - சுத்தியானது வெள்ளியாகத் தோன்றினாற்போலக் கண்டவர்களுக்கு அசத்தியமாயுள்ள பிரபஞ்சமுஞ் சத்தியமாகத் தோன்றிற்றாயினும் அறிவாயுள்ள பிரமம் சடமாயுள்ள பிரபஞ்சத்தை ஒரு பிரகாரத்தால் உண்டாக்காது—தருமெனில் - பிரமத்தின்முன் அசத்தியமாயுள்ள பிரபஞ்சமுஞ் சத்தியமாகத் தோன்றுமென்னில்—உலகம் மித்தையென்று ஓராது உரைத்தனை - நீ முன்னே இந்த உலகத்தைப் பிராந்தியென்று சொன்னது விசாரியாமற் சொன்னாயாகவேண்டும்—நிலவும் நின் மரபு நினைந்திலையாம் கொல் - இப்படி மலைவு வருதலாற் பொருந்தப்பட்ட உன்னுடைய அர்த்தத்தினுடைய கிரமத்தினையும் மறந்தாயாகவேண்டும்—விவகாரத்தில் வேண்டுதும் உலகம் பரமார்த்தத்திற் பகராம் என்னில் - இந்தப் பிரமம் உபாதிகள் வசத்தினாலே தன்னைச் சீவனென்று பிரமாணம் பண்ணிக்கொண்டு நிற்கிற இந்த விவகார தசைக்கு உலகமென்று கொள்ளப்படுமதொழிந்து நான் பிரமமென்றறிந்த பரமார்த்ததசையில் எல்லாம் பொய்யாயிருந்தபடியாலே அவ்விடத்து உலகமென்று சொல்லப்பட்டிராதென்னில்—பாத்துளதேல் இவையும் பரமார்த்தம் - இந்த உலகம் பரமார்த்தமாயுள்ள பிரமத்திலேநின்றும் உண்டானதாயின் அசத்தியமாயுள்ள பிரபஞ்சமுஞ் சத்தியமாயுள்ள பிரமமாக வேண்-

பரத்திலதேல்ஒழி முன்பகர் மாற்றம்
அதன்முதல் இதுவென உதவுக அன்றியும்
விவகரிக் குங்கால் திகழ்பர மார்த்த
நிலைஅது தெரியின் இதுநீ நீயேல்
தெரியா தாயின் அஃதுந் தெரியாது
உரையார் அளவையும் ஒழிந்தனை அன்றே
அளவை காண்டல் கருதல் உரையென

---

டும்—பரத்திலதேல் - உலகம் பொய்யாயிருந்தபடியாலே இது அந்தப் பரமார்த்தத்துக்குப் பணியல்லவென்னில்—ஒழி முன் பகர் மாற்றம் - உலகம் பிரமத்திலே நின்றுந் தோன்றிற்றென்று நீ முன்னே சொன்ன வார்த்தையை ஒழிந்து விடுவாயாக—அதன்முதல் இதுவென உதவுக - இந்த உலகம் பிரமத்திலே தோன்றின தல்லவாயின் அது தோன்றின உபாதானம் உனக்குத் தெரியுமாயின் இன்னதென்று சொல்லுவாயாக—அன்றியும் விவகரிக்குங்கால் திகழ் பரமார்த்த நிலை அது - இந்தத் தோல்வியன்றியும் இன்னமுஞ் சொல்லுமிடத்து நின்மலமாய் எல்லா உபாதிகளையுங் கழன்ற பரமார்த்த நிலையாயிருப்பதொன்று அந்தப் பிரமம்—தெரியில் இது நீ - விசாரித்துப் பார்க்குமிடத்து மலமாயிருக்கிற இந்த மாயாவுபாதிகளோடுஞ் சம்பந்தியாயிருப்பானொருத்தன் நீ, ஆகையால் இந்தச் சீவனுந் தனியே ஒரு முதலென்—நீயேல் - அந்தப் பிரமந்தான் காணும் நானென்னில் அது அறிவாயிருக்குது. இது அறியாமலிருப்பானேன்—தெரியாது - இது உபாதிகள் வசத்தினாலே தெரியாமலிருக்கும்—ஆயின் அஃதுந் தெரியாது - நீயும் அந்தப் பிரமமும் ஒரு முதலாயிருக்கச்செய்தே இது உபாதி வசத்தினாலே அறியாதிருக்குமாயின் அந்தப் பிரமமும் அறியாததாகவேண்டும்—உரையார் அளவையும் ஒழிந்தனை யன்றே - உன்னுடைய அர்த்தத்தை அளவிட்டுச் சொல்லிவருகிற பிரமாணத்தையும் விட்டுவிட்டாய். அதென்னென்னில் அது ஒன்றைச் சொல்ல நீ ஒன்றைச் சொல்லுகையால். அந்தச் சாத்திரத்தின்படியே காணும் நான் சொன்னதுமென்னில்—அளவை காண்டல் கருதல் உரையென உளது-பிரமாணமாவது பிரத்தியக்ஷமென்றும் அனுமானமென்றும் ஆகமமென்றும் மூன்று வகைப்படும்—அவை மூன்றின் மொழிவழி நுழையின் நின் பிரமேயமென்

*உள தவை மூன்றின் மொழிவழி நுழையின்*
*நின்பிர மேயம் என்பதெனும்கொல்*
*பொற்பிதிர் பிதிர்ந்தும் பொன்னே யாம்நின்*
*தற்பரம் அசித்தைத் தருமா றென்னெனச்*
*சிலம்பி நூல்தரு நலம்போற் றோன்றும்*
*என்றனை அதுவும் தன்தொழில் அன்றியும்*
*ஒன்றதன் இயல்புல கோரியல் பன்றெனப்*
*பலமிலை பழம்பூப் பாதவந் தரும்நீர்*

---

பது எனும்கொல் - அங்ஙனஞ் சொல்லப்பட்ட பிரத்தியக்ஷத்தின் வழியாலும் அனுமானத்தின் வழியாலும் ஆகமத்தின் வழியாலும் நுழைந்து ஒன்றை யறிந்துகொண்டுவருமாயின் வாக்குக்கும் மனத்துக்கு மெட்டாத உன்னுடைய பிரமேயமென்று சொல்லப்பட்டது என்னமாய் முடியும். இது பிரமேயத்தை மறுத்தது.

மேல் சித்தினிடத்து அசித்துத் தோன்றுமென்றதனை மறுக்கிறார்: பொற்பிதிர் பிதிர்ந்தும் பொன்னேயாம்நின் தற்பரம் அசித்தைத் தருமாறு என்னென - பொன்னும் பணியும்போலப் பிரமமும் பிரபஞ்சமுமென்றாய், பணியானது பின்பு பொன்னோடு கூடப் பொன்னாய் நின்றது கண்டோம், பிரபஞ்சமானது பின்பு பிரமத்தோடு கூடிப் பிரமமாய் நின்றது கண்டோமில்லை. ஆகையால் உன்னுடைய அந்தச் சததாயுள்ள பிரமம் அசத்தாயுள்ள பிரபஞ்சத்தைத் தந்த பிரகாரம் எப்படியென்று நான் முன்னே உன் மதத்திலே கேட்டபொழுது— சிலம்பி நூல் தரும் நலம்போல் தோன்றும் என்றனை - சித்தாயுள்ள சிலந்தி சடமாயுள்ள நூலைத் தந்த தன்மைபோலுஞ் சித்தாயுள்ள பிரமத்திலே சடமாயுள்ள பிரபஞ்சம் தோன்றிற்றென்று சொன்னாய்— அதுவும் தன்தொழில் - அந்த நூலை அனவரதமுந் தோற்றுவித்துக்கொண்டு நிற்கிறது அந்தச் சிலந்திக்குள்ள தொழில்; பிரபஞ்சம் பிரமத்திலே நின்று ஓர் அவதரத்திலே தோன்றுமதொழிந்து அனவரதமுந் தோன்றிக்கொண்டு நில்லாது— அன்றியும் ஒன்று அதன் இயல்பு உலகு ஓர் இயல்பன்று என-அதன்றியும் சிலந்தியினிடத்திலே தோன்றின நூல் ஒரு தன்மையாகக் காணப்பட்டது, பிரமத்தினிடத்திலே தோன்றின பிரபஞ்சம் ஒரு தன்மையாகக் காணப்பட்டதில்லையென்று நான் முன்னே சொன்னபொழுது—பலம் இலை பழம் பூ பாத

திரை நுரை திவலை சிலதரும் இவைபோல்
தானே பலவாம் எனநீ சாற்றினை
சத்தசத் தாகவும் சத்தினில் அசத்தின்
கொத்துள தாகவும் கூறினர் இலரால்
வித்திலை கனிநனி விழுதால் தருநெறி
சத்தல தொன்று தான்தர வேண்டும்
நெற்பதர் பலாலத் திற்குபா தானம்என்
காரண மின்றிக் காரியம் பிறவா

---

வம் தரும்நீர் திரை நுரை திவலை சில தரும் இவைபோல் தானே பலவாம் என நீ சாற்றினை-காயையும் இலையையும் பழத்தையும் பூவையும் மரமானது தந்த தன்மைபோலவும் திரையையும் நுரையையுந் திவலையையும் குமிழியையும் நீரானது தந்த தன்மைபோலவும் பிரமந்தானே பலவிதமாயுள்ள பிரபஞ்சமா யிருக்குமென்று உன் மதத்திலே நீ சொன்னாய்—சத்து அசத்தாகவும் சத்தினில் அசத்தின் கொத்துள தாகவும் கூறினர் இலரால்-ஆல் அசை. அறிவாயுள்ளது அறியாமையா யிருக்குமென்றும் அறிவினிடத்திலே அறியாமையினது கூட்டங்கள் தோன்றுமென்றும் நீ சொன்ன இந்த மலைவு புத்தர் சமணர் முதலானவர்களுஞ் சொல்லார்கள். பின்னை இந்தப் பிரபஞ்சம் தோன்றினபடி எப்படி யென்னில்—வித்து இலை கனி நனி விழுது ஆல் தரு நெறி சத்தல தொன்று தான் தர வேண்டும் - சூக்குமமாயுள்ள வித்தானது இலையையும் பழத்தையும் மிகுதியாயுள்ள விழுதையுமுடைய தூலமாகிய ஆலமரத்தைத் தந்த தன்மைபோலத் தூலமாய்ப் பலவா யிருக்கிற பிரபஞ்சத்தையும் சூக்குமமாய் அசத்தாயிருக்கிறதோர் உபாதானம் தந்ததாகவேண்டும். அப்படியன்று காணும் நெல்லிலே நின்றும் வைக்கோலும் பதரும் தோன்றினாற்போலச் சித்திலேநின்றும் சடமான பிரபஞ்சந் தோன்றுமென்னில்—நெற்பதர் பலாலத்திற்கு உபாதானம் என் - நெல் சூக்குமமாய்ச் சடமாயிருக்கையால் அது வைக்கோலுக்கும் பதருக்கும் உபாதானமென் றறிவாயாக—காரண மின்றிக் காரியம் பிறவா - ஆகையால் தனதாவுடைய காரணத்தில்நின்றுங் காரியந் தோன்றும தொழிந்து அன்னிய காரணத்திலே நின்றுங் காரியந் தோன்றாது. அப்படித்

பாரிடை ஒருபடம் பண்ணவும் படுமே
அந்தமில் பிரமம் அவித்தைகா ரணமெனத்
தந்தனை அவித்தை தானெய் துறுதல்
தன்னியல் பென்னில் வன்னிதன் வெம்மையிற்
சத்தின தியல்புஞ் சத்தே அசத்தெனில்
வைத்ததன் இயல்பெனும் வழக்கொழி அன்றியும்
இருள்பொதி விளக்கென வரும்இரு விளக்கிற்
கருமை பயந்த பெருகொளி தகுமெனில்

---

தோன்றுமென்னை யாகில்—பாரிடை ஒரு படம் பண்ணவும் படுமே - பருத்தி காரணமாகப் புடைவை யுண்டாவ தொழிந்து மண் காரணமாகப் புடைவை பண்ணவும் வேண்டும். ஆகையாற் சடங் காரணமாகச் சடமுண்டாவ தொழிந்து சித்துக் காரணமாகச் சட முண்டாகாது. இப்படி யிருக்கச்செய்தே நீ—அந்தமில் பிரமம் அவித்தை காரணமெனத் தந்தனை - சடமாய் அழிந்து போவதா யிருக்கிற தேகாதிப் பிரபஞ்சத்துக்குச் சித்தாய் அழிவில்லாம லிருப்பதாகிய பிரமம் காரணமென்று நீ சொன்னாய்—அவித்தை தானெய்துறுதல் - சித்தாயுள்ள பிரமத்திலே சடமாயுள்ள பிரபஞ்சம் தோன்ற வேண்டுவானேன்—தன் இயல்பு என்னில் - இந்தப் பிரபஞ்சம் உண்டாகிறது அந்தப் பிரமத்துக்கு இயல்பா யிருப்ப தொன்றென்று நீ சொல்லில்—வன்னிதன் வெம்மையிற் சத்தின தியல்புஞ் சத்தே - அக்கினிக்கு உட்டணம் இயல்பானாற் போல நீ சித்துக்கு இயல்பென்று சொன்ன பிரபஞ்சமுஞ் சித்தேயாக வேண்டும்—அசத்தெனில் - பிரபஞ்சத்தைச் சடமென்னில்—வைத்த தன் இயல்பெனும் வழக்கு ஒழி - சத்தாக வைக்கப்பட்ட பிரமத்தினுடைய இயல்பு இந்தப் பிரபஞ்சமென்று சொன்ன வழக்கை விடுவாயாக—அன்றியும் இருள் பொதி விளக்கென வரும் - இந்தக் குற்றமன்றியுஞ் சித்தாயுள்ள பிரமத்துக்குச் சடமாயுள்ள பிரபஞ்சம் இயல்பென்று நீ சொல்லுகிறது பிரகாசமாயுள்ள விளக்கு இருளானதைப் பொதிந்து கொண்டு நின்றதென்றதை யொக்கும். அப்படியன்று காணும்—இரு விளக்கிற் கருமை பயந்த பெருகொளி தகுமெனில் - பெரிய விளக்கினிடத் துண்டாகிய மிக்க பிரகாசமானது கறுத்த மையைத் தந்த தன்மையை யொக்கும் சித்தாயுள்ள பிரமம் சடமாயுள்ள பிர

தன்னியல் *பன்றென் உபாதி வசத்தால்
மன்னிய தன்றிமைத் தான்தனின் மாயா
தொன்று னசுத்த னன்று மன்றே
ஆங்கொரு காலத் தோங்கிய தாயின்
அந்தமில் அவித்தை வந்தணை வதற்கோர்
ஏது வேண்டும் புயலியல் பெனின்வீ
டோத வேண்டா ஒழிந்தோ ரினுமுறும்
களங்கம தறஉறும் அவித்தைதற் கவித்தல்

---

பஞ்சத்தைத் தந்ததென்று நீ சொல்லில்—தன் இயல்பு அன்று என் உபாதி வசத்தால் மன்னியது - அங்ஙனம் விளக்கினிடத்திலே கறுத்த மையானது தோன்றினது விளக்கினுடைய இயல்பல்ல என், திரியென்றும் நெய்யென்றுஞ் சொல்லப்பட்ட உபாதிகள் வசத்தினாலே மையென்று நிலைபெற்றதென்று கொள்—அன்றிமைத் தான் தனின் மாயாது-அதன்றியும் பிரமத்திலே தோன்றின பிரபஞ்சம் மீளவும் பிரமத்திலே ஒடுங்காநிற்கும்; விளக்கினில் தோன்றின மையானது மீள அந்த விளக்கிலே சென்றொடுங்காது. இதன்றியும்—ஒன்றுன் அசுத்தனன்று மன்றே - இந்தப் பிரமமென்று சொல்லப்பட்ட ஒப்பிலாதவன்தான் சுத்தனொழிந்து அசுத்தனா யிருப்பானொருத்த னல்லவே. அப்படி யிருக்கச்செய்தே இந்த மாயாவுபாதிகளோடுங் கூடியிருக்க வேண்டுவானேன்—ஆங்கு ஒரு காலத்து ஓங்கியதாயின் - அந்தப் பிரமத்தினிடத்திலே ஓர் அவதரத்திலே இந்த உபாதிகள் வந்து கூடினதாயின்—அந்தமில் அவித்தை வந்து அணைவதற்கு ஓர் ஏது வேண்டும்-முடிவில்லாத இந்த மாயாவுபாதி ஓர் அவதரத்திலே பிரமத்தை வந்து கூடுதற்கு முன்னே ஒரு காரணம் உண்டாகவேண்டும்—புயலியல்பு எனின்-நின்மலமாயிருக்கிற ஆகாசத்தை மேகமானது வந்து மறைத்த தன்மைபோலச் சுத்தமாயுள்ள பிரமத்தையும் மாயாவுபாதிகள் இயல்பாக வந்து கூடுவதொழிந்து இதற்கு ஒரு காரணம் வேண்டுவதில்லை யென்னில்—வீடு ஓதவேண்டா - இந்த உபாதிகள் இயல்பாக வந்து பொருந்தின் மோட்சமென்று சொல்லவேண்டுவதில்லை. அதேனென்னில்—ஒழிந்தோரினும் உறும் - எல்லா உபாதிகளையும் நீக்கிப் பழைய சுத்தத்தைக் கூடினவர்களிடத்தும் இந்த உபாதிகள் இயல்பாக வந்து பொருந்தும். அப்படியன்று காணும்—களங்கமது அற உறும்

---

*பன்றதன் - பாடபேதம்.

விளங்கிய பிரம விளையாட் டாயின்
அவித்தை யென்பதொன் றன்னியந் தன்னில்
உதிக்கு மென்றமுன் உரையும் மறந்தனை
நுண்ணூற் குடம்பை நுந்துழி போல்உட்
படுநெறி அதனால் விடுநெறி இலதால்
தலைமையும் அறிவும் இலதென் அவித்தையை
விடுத்தெடுத் தாணரும் வேற்றோ ரன்றே
ஒளிகொள் தாமிரங் குளிகை பெற்றாங்கதன்

---

அவித்தை தற்கவித்தல் விளங்கிய பிரம விளையாட்டாயின் - பிரமத்துக்கு ஞானமுண்டாகத் தக்கதாகப் பொருந்தப்பட்ட மாயாசரீரம் இந்தப் பிரமத்தைப் பொருந்திக்கொண்டது மிக்க பிரமத்தினுண்டாய விளையாட்டாக இருப்பதொன்றாயின்—அவித்தை யென்பதொன்று அன்னியந் தன்னில் உதிக்குமென்ற முன் உரையும் மறந்தனை-விளையாடுகிறவர்களுக்கு விளையாடப்பட்ட பொருள் வேறானாற்போல பிரமத்தினுடைய விளையாட்டாகிய மாயாசரீரமும் பிரமத்துக்கு வேறாயிருப்பதொன்று, ஆகையாற் பிரமத்தினிடதிலே உபாதிகள் தோன்றிப் பிரமத்தை மறைக்குமென்று நீ முன்னே சொன்ன சொல்லையும் மறந்தனையாக வேண்டும்—நுண்நூற் குடம்பை நுந்துழிபோல் உட்படுநெறியதனால் விடுநெறி இலதால் தலைமையும் அறிவும் இலதென் - உலண்டுப் புழுவானது தன்னிடத்திலேநின்றுந் தோன்றின நுண்ணிய நூலாலே தனக்குக் கூடாகப் பண்ணித் தான் அதற்குள்ளே புகுந்து பின்னைப் புறப்படமாட்டாமல் அதற்குள்ளே செத்த தன்மை போலப் பிரமமும் மாயா சரீரத்துக்குள்ளே விளையாட்டாக வந்து புகுந்து பின்னைத் தானாகப் புறப்படமாட்டாமல் நிற்கையால் அந்தப் பிரமத்துக்குச் சர்வ முதன்மையுஞ் சர்வக்கியத்துவமு மில்லையென்று சொல்—அவித்தையை விடுத்து எடுத்து ஆணரும் வேற்றோ ரன்றே - இது பாசபந்தியா யிருக்கையாலே இந்த மாயா சரீரத்தைத் தானாக விடுவித்துக்கொள்ள மாட்டாமல் நின்மலமா யிருக்கிறதொரு குரு முதல் இந்த மாயாசரீரத்தை நீக்கிப் பாவக்குழியிலேநின்று மெடுத்துத் தனக்கடிமையாக ஆண்டுகொள்ளுகையினால் இந்தச் சரீரத்தோடுங் கூடிநிற்கிறது பிரமமாகாது. அப்படியன்று காணும்—ஒளிகொள் தாமிரம் குளிகை பெற்றாங்கு அதன் அவித்தையை வித்தை தவிர்க்கு

அவித்தையை வித்தை தவிர்க்குமென் றுரைக்கில்
நித்தன் அறிவன் சுத்தன்என் றுரைத்த
வித்தகம் என்நீ வித்தையும் *வேறென்
எம்ம னோரில் ஒருவன் நின்இறை
௧௧௫ அம்ம சைவந் தவன்நீ யன்றே
பன்மணி பசுநற் பாத்திர மெனவும்
நன்னூல் பால்நீர் நற்கதிர் எனவும்
உடலையும் உணர்வையும் உவமித் தனையேல்

மென்று உரைக்கில் - பிரகாசத்தோடுங் கூடியிருக்கிற செம்பானது இரத குளிகையோடுங் கூடினவிடத்துக் காளிதம் நீங்கிப் பொன்னான தன்மைபோல அந்தப் பிரமத்துக்கு உண்டாகிய சரீர சம்பந்தத்தையும் அதனிடத்திலே தோன்றின விவேகக்கியானம் நீக்க அந்தப் பிரமம் சுத்தமாமென்று நீ சொல்லில்—நித்தன் அறிவன் சுத்தனென்று உரைத்த வித்தகம் என் - இப்படி அசுத்தமாயிருக்கிற முதலை நீ முன்னே நித்தியனென்றுஞ் சர்வக்கினனென்றும் நின்மலனென்றுஞ் சொன்ன சாமர்த்தியம் என்தான்—நீ வித்தையும் வேறு என் - நீ விவேகமென்று சொல்லுகிறது இந்த அவித்தையோடுங் கூடிக் கொண்டு நிற்கிற முதலல்ல அத்தை வேறே முதலென்று சொல்லு. இதுதான் காணும் அதுவென்று நீ சொல்லில்—எம்மனோரில் ஒருவன் நின் இறை-நீ கர்த்தாவென்று சொல்லுகிற முதல் பாசபந்திகளா யுள்ள எங்களிலே ஒருத்தனாக வேண்டும்—அம்ம - நான் சொல்லுகிற சொல்லைப்புத்திபண்ணிக் கேட்பாயாக—சைவந்தவன்நீ யன்றே-யாதொருத்தனைப் பொல்லாதவனென்று சொல்லப்பட்டது அப்படிச் சொல்லப் பட்டவன் நீயாகவேண்டும். இது பிரமிதியை மறுத்தது.

இதன்றியும்—பன்மணி பசுநற் பாத்திரமெனவும் நல்நூல் பால் நீர் நற்கதிர் எனவும் உடலையும் உணர்வையும் உவமித்தனையேல் - இரத்தினங்கள் பலவா யிருந்ததாமாயினும் அதிற் கோக்கப்பட்ட சரடு ஒரு தன்மையா யிருந்தாற்போலவும், பசுக்கள் பலவா யிருந்ததாமாயி னும் அவையிற்றி னுண்டாகிய பால் ஒரு தன்மையா யிருந்தாற் போலவும், பாண்டங்கள் பல தன்மையா யிருந்ததாமாயினும் அவை யிற்றிலே பிரதிபிம்பஞ் செய்துகொண்டு நிற்கிற ஆதித்தன் ஒரு

*வேறென் றெம்ம - பாடபேதம்.

தடமணி சரடொடு தாம்கூ டலவே
உணர்வுணர் வொழியின் உலகுணர் வுறின்நின்
பாலும் பசுவுஞ் சாலுஞ் சாலக்
கலம்பல வன்றிச் சலம்பல இலவெனக்
காணுந ரின்றி வீண்நீ விளம்பினை
ஆடியுள் நிழல்போற் கூடுதல் கூறின்
தன்நிழல் கொண்டு தற்பணஞ் சலிக்கின்
மன்நிழல் கொண்டுடல் வந்தகன் றிடுமே

---

தன்மையா யிருந்தாற்போலவும், கூவல் ஆழி குளம் சிறுகுழி கால்கள் பலவாயிருந்ததாமாயினும் அவையிற்றி லுண்டாகிய தண்ணீர் ஒரு தன்மையா யிருந்தாற் போலவும் என்று யோனிபேதங்களா யுள்ள உடல்களுக்கும் அவையிற்றிலே கூடிநிற்கிற பிரமத்துக்கும் உவமை யாகச்சொன்னாய். அப்படியாகில்—தடமணி சரடொடு தாம்கூடலவே-பிரகாசத்தினாலே மிகுத்திருக்கிற மணிகளும் சரடும் தாமாகக் கூடின தில்லை, அவையிற்றை வேறே ஒருத்தன் கோக்கக் கோப்புண்டு நின்ற தன்மைபோல உன்னுடைய பிரமத்தையும் இந்த உடல்களை யுங் கூட்டினவன் வேறே ஒருத்தன் உண்டாகவேணும்.அதன்றியும்— உணர்வு உணர்வொழியின் உலகு உணர்வுறின் நின் பாலும் பசுவுஞ் சாலும் - உன்னுடைய பிரமமானது அறியாததாயும் அது கூடிநிற்கிற தேகாதிப் பிரபஞ்சம் அறிவேயாயும் இருந்ததாமாயின் நீ பாலையும் பசுவையும் உவமையாகச் சொன்னது ஒக்கும். அதன்றியும்— சாலக் கலம் பல அன்றிச் சலம் பல இலவெனக் காணுநரின்றி வீண் நீ விளம்பினை - மிகவும் பாத்திரங்களிற் பின்னமொழிந்து ஆதித்தனிற் பின்னமில்லை யென்றும், கூவல் ஆழி குளம் சிறுகுழி கால்களிற் பின்னமொழிந்து சலத்திற் பின்னமில்லை யென்றுங் கண்டு சொல்வார்கள் சிலரையின்றி விருதாவிலே மிகவுஞ் சில வார்த்தை களை நீ சொன்னது திட்டாந்த விரோதமாகையால் இது அர்த்த மாகாது—ஆடியுள் நிழல்போற் கூடுதல் கூறின் - கண்ணாடிக்குள் நிழ லானது தோய்வற நின்றாற்போலச் சரீரத்துக்குள்ளே பரப்பிரமந் தோய்வற நிற்குமென்று நீ உன் மதத்திலே சொன்னத்தை நான் சொல்லுமிடத்து—தன் நிழல் கொண்டு தற்பணஞ் சலிக்கின் மன்னி ழல் கொண்டுஉடல் வந்து அகன்றிடுமே-தன்னிடத்திலேநிற்கிறபிரதி

மன்அயக் காந்த மெனஉடல் பிரம
சன்னதி யளவிற் சலித்திடு மாயின்
*அகண்டிதஞ் சன்னதி யலதில தெவையும்
நடந்திட வேண்டுங் கிடந்திடப் பெறுவே
காந்தத் திரும்பு காட்டுநர்ப் பெறில்அயம்
சேர்ந்திடும் நீக்குஞ் செயல்அதற் கிலதே

---

விம்பம் பிரதானமாகக் கொண்டு கண்ணாடியானது சலித்ததாமாயில் பரப்பிரமத்தினுடைய பிரதிவிம்பம் பிரதானமாகக் கொண்டு இந்த உடல் கூடியும் பிரிந்தும் நிற்கும். இவையிற்றுக் கில்லாதபடியாலே இது அர்த்தமன்று—மன் அயக் காந்தமென உடல் பிரம சன்னதி யளவிற் சலித்திடு மாயின் - நிலைபெற்று வாராநிற்கிற இரும்பானது காந்தம் விகாரமற நிற்க அதினுடைய சன்னதி மாத்திரத்திலே விகாரப் பட்ட தன்மைபோலப் பரப்பிரமமும் விகாரமற நிற்க அதினுடைய சன்னதி மாத்திரத்திலே உடலானது போக்குவரத்தைச் செய்யா நிற்குமாயின்—அகண்டிதம் சன்னதியலது இலது எவையும் நடந்திட வேண்டும் கிடந்திடப் பெறுவே - பரப்பிரமமென்று சொல்லுகிறது கண்டிதமல்லாமல் அகண்டிதமானபடியாலே அதினுடைய சன்னதி யல்லாதவிடம் ஓரிடமுமில்லை. ஆகையாற் கடபடாதிகளா யுள்ளவை யெல்லாஞ் சன்னதி மாத்திரத்திலே போக்குவரத்தைச் செய்யவேண் டும். அதன்றி உடலானது சேட்டித்துங் கடபடாதிகள் சேட்டையின் றிக் கிடக்கிறதுஞ் சன்னதியிலே யெல்லாங் காரியப்படுமென்று சொல்லுகிறத்துக்குப் பெறு து—காந்தத்து இரும்பு காட்டுநர்ப் பெறில் அயம் சேர்ந்திடும் - காந்தமும் இரும்புங் கூடிக்கிடந்ததாமாயினும் அவை தானாகக் காரியப்படமாட்டா. அவையிற்றை முகமொக்கக் காட்டுவார் சிலரைப் பெற்றகாலத்து இரும்பானது காந்தத்தைச் சென்று பொருந்தாநிற்கும். ஆகையால் உன்னுடைய பிரமத்தையும் உடலையுங் கூட்டிக் காரியப்படுத்துகிறதொரு முதல் வேறே உண் டென்று கொள்ளுவாயாக. இதன்றியும்—நீக்குஞ் செயல் அதற்கு இலதே - காந்தமானது இரும்பைக் கூட்டிக்கொள்ளுகிற தொழிந்து அத்தை நீக்கிக்கொள்ளுந் தன்மை அதற்கு உண்டாகாது. பிரமத்தின் சன்னதியிலே உடல் கூடியும் பிறிந்தும் வருகையால் நீ காந்தமிரும்

---

*அகண்டிதன் - பாடபேதம்.

கனத்துயர் கயிற்றர வெனுச்சில தொடுத்தனை
கனவின் பயனும் நனவின் பயனும்
கருரு வினையின் பயன்அவை பொய்யென வேண்டா
உடல்மா றுட்டக் கடனது கருதுக
உற்ற புற்றும் மற்றதிற் கயிறும்
உடலுங் கூடமுச் சடமென அறிதி
அறிவு கயிறென் றறியா தன்றே
கச0 அச்சம தடைதல் கொச்சமை யுடைத்தே

---

மென்றது திட்டாந்தவிரோதமாகையால் அது அர்த்தமன்று. இதன்றி யும்—கனத்துயர் கயிற்றரவு எனுச் சில தொடுத்தனை - சொற்பனத் திலே அதிபயங்கரமாயுள்ள காரியங்களைக் காண்கிறவன் விழித்த விடத்தில் அது பொய்யான தன்மைபோலவும் இராக்காலத்திலே புற் றின் வாசலிலே கயிறு கிடக்கிறதைக் கண்டு பாம்பென்று புத்திபண் ணிப் பயப்பட்டவனுக்கு வெடிந்த அவதாரத்துப் பாம்பு பொய்யான தன்மைபோலவும் சுகதுக்கங்களா லுண்டாகிய அனுபோகங்களும் அந் தப் பிரமத்துக்கு உண்டாகாதென்று சொன்னுய்—கனவின் பயனும் நனவின் பயனும் வினையின் பயனவை பொய்யென வேண்டா - சொற்பனத்திலே சூக்குமதேகத்தோடுங் கூடி இவன் சத்தாதி விஷ யங்களைப் பொசித்ததும்,சாக்கிரத்திலே தூலதேகத்தோடுங் கூடிச் சத் தாதி விஷயங்களைப் பொசித்ததும் இரண்டும் இவன் முன்னே செய்த பிராரத்தம் பொசித்ததொழிந்து சாக்கிரத்திற் பொசித்தது மெய் யென்றும் சொற்பனத்திற் பொசித்தது பொய்யென்றும் நீ சொல்ல வேண்டுவதில்லை—உடல்மாறுட்டக் கடனது கருதுக-சாக்கிரத்துக்குத் தூல தேகத்தோடுங்கூடி யனுபவிக்கும், சொற்பனத்துக்குச் சூக்கும தேகத்தோடுங்கூடி யனுபவிக்கும்; ஆகையால் சரீரவேற்றுமை உள்ள தென்றறிவாயாக—உற்ற புற்று மற்றதிற் கயிறும் உடலுங் கூட முச் சடமென அறிதி-இவன் சென்று இராக்காலம் பொருந்தப்பட்ட புற் றும் அதின் வாசலிலே கிடக்கிற கயிறும் இவனுடைய சரீரமுமாக மூன்றுஞ் சடமென்கிறது நீயும் அறிவாய்—அறிவு கயிறென்று அறியா தன்றே - அறிவாயுள்ள பிரமம் கயிற்றைக் கயிறென்றறிய மாட்டாமற் பிரமிக்குமாகில் அத்தை அறிவென்று சொல்லப்படாது—அச்சமது அடைதல் கொச்சமை யுடைத்தே - பிரமம் கயிற்றைப் பாம்பென்று

இன்னும்அக் கனவில் இருளூறு கயிற்றிற்
பின்னும் நின்பிரமம் பிரமித் திடுமே
துன்னிய வினையிற் செம்மலர்ப் பளிங்கெனத்
தானுந் தகைமை யானல் மலரென
கசரு ஒருபய னன்றிப் பலபயன் மரீஇய
திருவினை தருபயன் எனநனி வேண்டில்
ஆண்ட வித்தையும் அவித்தைகொ டாக்கையும்
ஈண்டிரு வினையும் இயம்பினை பரத்தைக்

---

பயப்படுமாகில் அத்தைக் கர்த்தாவென்று சொல்லப்படாது. இதன்றியும்—இன்னும் அக் கனவில் இருளூறு கயிற்றிற் பின்னும் நின் பிரமம் பிரமித்திடுமே - இன்னமும் ஒரு குற்றமுண்டு. கனவில் நீங்கு பொய் யென்றறிந்துங் கங்குலிற் கயிறு பாம்பல்லவென் றறிந்து மிருக்கச் செய்தே மீளவுங் கனவைக் கண்டவிடத்துங் கங்குலிலே கயிற்றைக் கண்டவிடத்தும் உன்னுடைய பிரமமானது அச்சப்படுகிறது தகுமே? ஆகையால் இந்த உடம்போடுங் கூடி இப்படி மயங்கி நிற்கிறது பிரம மன்று. இதன்றியும்—துன்னிய வினையிற் செம்மலர்ப் பளிங்கெனத் தானுந் தகைமையானல் - சிவந்த பூவோடுங் கூடியிருக்கிற படிகம் தனது தன்மையிழந்து அந்த வன்னமா யிருந்ததாமாயினும் அதில் ஒருசற்றுந் தோய்வற நின்றாற்போலப் பிரமமும் நெருங்கி வருகிற கன்மங்களைப் பொசிக்கு மிடத்து அந்த விஷயங்கள் தானுயிருந்ததா மாயினும் அதில் ஒரு சற்றுந் தோய்வற நிற்குமாமாயின்—மலரென ஒரு பயனன்றிப் பல பயன் மரீஇயது இருவினை தரு பயனென நனி வேண்டில் - படிகம் பூவோடு கூடியிருந்த பொழுது சிவந்த வன்ன மொன்றுமேயா யிருந்தாற்போல வினையோடுங் கூடின பிரமமும் ஏகப்பிரகாரமா யிராமல் நானுவிதமாகக் கொண்டு இருப்பானேனென்ன, அது புண்ணிய பாவங்கள் பலவாயிருக்கையினலே அத்தை யனுபவிக்க வேண்டிப் பிரமமும் வெகுவிதமாயிருந்ததென்று மிகவு முனக்குப் பக்ஷமாயின்—ஆண்ட வித்தையும் அவித்தைகொ டாக்கை யும் ஈண்டு இரு வினையும் இயம்பினை-இவடத்து இவனை அடிமையாக ஆண்டு இரக்ஷித்துக்கொள்ளுகிறதொரு விவேகஞானமும் அறியாமை யோடுங் கூடியிருக்கிறதொரு சரீரமும் உண்டென்ருய், பலவிதமா யிருக்கிற புண்ணிய பாவங்களும் உண்டென்ருய். ஆகையால்—பரத்

கள்வரைப் பிணிக்குங் காவல ரெனமுயல்
தொல்வினைத் துடக்கில் தோன்றுடற் சிறையிட்
டிருவினை யூட்டும் *அருளுறும் எம்மான்
அருவினை உடற்கண் அவத்தைகள் உரைத்தனை
ஆர்உறு பவர்பரம் அகண்டிதம் அடங்கா
தோர்வில துடல்சடம் உறுநெறி யாதென
மன்னிய கரண மாறுட் டத்திற்
பன்னினம் என்னின் இவையோ பரமோ
முதலிய தாயின் இவைபிறழ் வெய்தா

---

தைக்கள்வரைப் பிணிக்குங் காவலரென முயல்தொல்வினைத் துடக்கில் தோன்று உடற் சிறையிட்டு இருவினை யூட்டும் அருளுறும் எம்மான் - இவ்விடத்துக் களவு கண்ட கள்ளரைக் கொண்டுவந்து சிறைசெய்து அதற்குத் தக்க தண்டங்களைச் செய்கிற இராசாக்களைப்போல முற்செனனங்களிலே செய்த பழைய வினையினது தொந்தனையாலே யுண்டாக்கப்பட்ட உடலாகிய சிறைச்சாலையிலே உன்னுடைய பிரமத்தையிட்டுப் புண்ணிய பாவங்களென்கிற தண்டங்களைப் பொசிப்பிக்குஞ் சர்வான்மாக்க ளளவினும் மிகவுங் கிருபை செனித்திருக்கிற எம்முடைய சுவாமியா யுள்ள கர்த்தா. இதன்றியும்—அருவினை யுடற்கண் அவத்தைகள் உரைத்தனை-அரிதாயுள்ள வினைக்கீடாக எடுக்கப்பட்ட உடலத்திலே மூன்று அவத்தைப்படு மென்று நீ உன்மதத்திலேசொன்னாய்—ஆர் உறுபவர் பரம் அகண்டிதம் அடங்காது-இந்தச்சரீரத்தோடு உண்டாகிய மூன்றவத்தையும் அனுபவிக்கிறவர் யார் தான்? பரப்பிரமமோவென்னில், அது பரிபூரணமாயிருந்தபடியாலே நனவு கனவு சுழுத்தியென்கிற அவத்தைகளில் அடங்காது—ஓர்விலது உடல் சடம் உறுநெறி யாது என-உடல் சடமாயிருந்தபடியாலே அவத்தைப்படு மென்கிற முறைமை அதற்கு உண்டாகாது.பின்னை இந்த அவத்தைப்படுகிற வழி ஏதென்று நான் கேட்க—மன்னிய கரண மாறுட்டத்திற் பன்னினம் என்னின் - நிலைபெற்று வாராநிற்கிற அந்தக்கரணங்கள் பிரிந்தவிடத்து உண்டாகிய மயக்கமாயிருக்கும் யாம் அவத்தையென்றுசொல்லப்பட்ட தென்னில்—இவையோ பரமோ முதலியது-அந்தக்கரணங்களோ பரப்பிரமமோ இந்தச் சரீரத்துக்கு முதன்மையை யுடையது? பரப்பிரமமே முதன்மையையுடைய தென்னில்—ஆயின் இவை

*எம்மான் அம்மான் - பாடபேதம்.

திவையெனில் உனது மொழிபழு துளதே
உடற்படு பிரமம் உறுமேற் சாளரத்
திடத்தகும் உறுவிரல் நுதியளி எறிதுயர்
அங்குலி தானே அருந்திடில் உடற்கண்
தங்கிய அறிவு தனித்துறு மன்றே
தற்பண நிழற்கட் குற்றிபாய்ந் தற்றால்
நற்கணிற் றுயர நணுகாத் தகைத்தெனில்
நின்மொழி விரோதமுங் காட்சி விரோதத்
தன்மையும் உறும்அவை தவறில ஆகா

---

பிறழ்வு எய்தாது - பரப்பிரமம் முதன்மையை யுடையதாயின் அந்தப் பரப்பிரமம் நிற்க இந்த அந்தக்கரணங்கள் நீங்கமாட்டாது—இவை யெனில் உனது மொழி பழுதுளதே - இந்த அந்தக்கரணங்கள் முதன் மையையுடைய தெனில் எல்லா முதன்மையு முடையது பரப்பிரம மென்று வேதஞ்சொன்னது பழுதாகவேண்டும்—உடற்படுபிரமம் உறுமேல்-அப்படியன்று காணும் அவத்தை யுறுகிறது உடற்குள்ளே அகப் பட்டு நிற்கிற பிரமமேயாகில்—சாளரத்து இடத்தகும் உறு விரல்நுதி அளி எறி துயர் அங்குலி தானேயருந்திடில் உடற்கண் தங்கிய அறிவு தனித்துறு மன்றே-பலகணி வாசலிடத்திலே புறம்பே நின்று உள்ளே ஒரு விரலை நீட்ட அந்த விரலின் நுனியிலே ஒரு குளவியானது கொட்ட அதனாலுண்டாகிய விதனம் அந்த விரல் தானே அனுபவித் ததாமாயின் இந்த உடலினிடத்திலே பொருந்தி நிற்கிற பிரமமும் அவத்தையைத் தனியே அனுபவித்ததென்று சொல்லலாம்; அந்த விரலின் நுனியிலே குளவி கொட்டின கடுப்புப் பாதாதிகேச மளவாக நின்று கடுக்கிறபடியாலே உடலினிடத்திலே தங்கி நிற்கிற அறிவு தனியே அவத்தையை யுறுமென்று நீ சொன்னது அர்த்தமாகாது. இதன்றியும்—தற்பண நிழற்கட் குற்றி பாய்ந்தற்றால் நற்கணில் துயரம் நணுகாத் தகைத்தெனில் - கண்ணாடியிடத்திலே தோன்றின நிழலி னது கண்ணிலே கூச்சுக்கொண்டு சாடினவிடத்துக்கண்ணாடி யுடைந்த தொழிந்து கண்ணுக்கு லயம் வாராத் தன்மைபோலச் சுகதுக்கங்களா லுண்டாகிய அனுபோகங்களும் உடலுக்கொழிந்து பிரமத்துக் கில்லை யென்னில்—நின்மொழி விரோதமுங் காட்சி விரோதத் தன்மையும் உறும் அவை தவறில ஆகா - உன்னுடைய சாத்திரஞ் சுகதுக்கங்களை

யாம்உடைப் பதிவகை யாவரும் பலகலை
சொல்லுதல் எளிதரி தத்தொழில் புரிவெனப்
புல்லிய பழமொழி புதுக்கினை யன்றே
அகண்டித மெனநீ பகர்ந்தமை தனக்குப்
பந்தம் இதுவெனத் தந்தமை கருதில்
வானில் நடக்குங் காலினைப் பிடித்துப்
பருவிலங் கிட்ட ஒருவன் நீயன்றே
பந்தம தகல *முந்து விவேகம்
வான்வளி யெனத்தனில் தானே தோன்றின்

---

யனுபவிக்கிறது அறிவென்று சொல்லச்செய்தே நீ இப்பொழுது உடலுக்கொழிந்து அறிவுக்கு அனுபோகமில்லை யென்கையாலே சாத்திர விரோதமும், பிரத்தியக்ஷமாக அறிவு சுகதுக்கங்களை அனுபவிக்கச்செய்தே அனுபோகமில்லையென்கையால் பிரத்தியக்ஷ விரோதமும் இவை யிரண்டுந் தப்பாமல் உண்டாகாநிற்கும்—யாம் உடைப் பதிவகை யாவரும் பலகலை சொல்லுதல் எளிது அரிது அத்தொழில் புரிவெனப் புல்லிய பழமொழி புதுக்கினையன்றே - நாம் வத்து நிர்ணயமாக நாட்டப்பட்டது 'சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாஞ், சொல்லிய வண்ணஞ் செயல்' என்று பொருந்தப்பட்ட திருவள்ளுவப்பயனிற் குறளை நீ இப்பொழுது புதுக்கினுயாகவேண்டும். நாமென்றது அலக்ஷியச் சொல். இதன்றியும்—அகண்டித மெனநீ பகர்ந்தமை தனக்குப் பந்தம் இதுவெனத் தந்தமை கருதில் - பரப்பிரமம் என்றுலுங் கண்டிக்கப்படாது அகண்டிதமாயிருப்பதொன்றென்று நீ முன்னே சொன்னதற்கு இப்பொழுது மாயாவுபாதிகளினுலே பந்திக்கப்பட்டு நிற்குமென்று நீ சொன்னத்தை விசாரித்துப் பார்க்கில்—வானில் நடக்குங் காலினைப் பிடித்துப் பருவிலங்கிட்ட ஒருவன் நீ யன்றே - ஆகாயத்தின்கண்ணே வியாபரிக்கிற காற்றினைப் பிடித்து அங்கிங் கசையாத வண்ணம் பெருத்ததொரு விலங்கையிட்டு வைத்தவன் யாவனொருவன் நீயென்று சொல்லப்படும். இது பிரமாதாவை மறுத்தது. இது அவனுடைய பெத்தமாம்.

மேல் அவனுடைய முத்தியை மறுக்கிருன்: பந்தமது அகல முந்து விவேகம் வான்வளியெனத் தனில் தானே தோன்றின் - பிரமம் மாயாவுபாதிகளினுலே பந்திக்கப்பட்டிருக்குமென்று சொன்ன அந்தப்

---

*உந்து - பாடபேதம்.

முன்புள தாயின் மயங்கா திலதெனிற்
பின்புள தாகா திலதுள தெனில்வெளி
மலரது தரும்அனல் மரக்கண் இன்ருகித்
தருவது தகுமெனில் தானே தோன்ரு
விறகின் உதித்த கனல்தகு மாயின்
அவித்தையின் உதித்த வித்தை அம்மரத்

பந்தம் பிரமத்துக்கு இப்பொழுது நீங்கத்தக்கதாக வந்து தோன்றின விவேகக்கியானம் ஆகாயத்தினிடத்திலே ஒரு வாயுத் தோன்றி அந்த ஆகாயத்தை மறைத்துநின்ற மேகங்களை யொதுக்கி அதனை நின்மல மாக்கின வாயுவைப்போல இந்த விவேகக்கியானமும் பிரமத்தி னிடத்திலேநின்றுந் தானே தோன்றினதாயின்—முன்புளதாயின் மயங்காது - இந்த விவேகம் பிரமத்துக்கு முதலே யுள்ளதாயின் அது நிற்கச்செய்தே பிரமத்துக்கு நடுவே மயக்கம் வாராது—இலதெனில்- இந்த விவேகம் பிரமத்துக்கு முதலேயுள்ளதல்ல நடுவே ஓர் அவ தாரத்திலே வந்து உண்டானதென்று நீ சொல்லில்—பின்புளதாகாது- முன்பு இல்லாதது பின்பு ஓர் அவதாரத்திலே யுண்டாகாது—இலது உளதெனில் - முன்பு இல்லாதது பின்பு உண்டாமென்னில்—வெளி மலரது தரும் - இல்லாதது உண்டாமென்கிறது ஆகாயத்திலே ஒரு பூ உண்டாச்சென்று சொல்லுதலை யொக்கும். அப்படி யன்று காணும் —அனல் மரக்கண் இன்ருகித் தருவது தகுமெனில் - அக்கினி யினது பிரகாசம் மரத்தினிடத்திலே முன்பு காணப்படாமலிருந்து பின்பு ஓர் அவதாரத்திலே காணப்பட்டாற்போல முன்பு இல்லாத விவேகமும் பின்பு உண்டாங்காணுமென்று நீ சொல்லில்—தானே தோன்ரு - விறகினிடத்து முன்பு இல்லாத அக்கினி பின்பு உண்டா மிடத்து ஒரு அரணியை வைத்துக் கடைய உண்டானதொழிந்து தானுக உண்டாகாது. ஆகையால் உன் பிரமத்துக்கும் பின்பு உண் டாகிய விவேகக்கியானமும் வேறே ஒருத்தன் உண்டாக்க உண்டான தென்று கொள். இதன்றியும்—விறகின் உதித்த கனல் தகுமாயின் அவித்தையின் உதித்த வித்தை - அன்னுவயம். அவித்தையின் உதித்த வித்தை விறகின் உதித்த கனல் தகுமாயின் என மாறுக. இதன் பொருள்: அறியாமையாகிய பெத்தநிலையிலே தோன்றின விவேகம் விறகினிடத்திலே தோன்றின அக்கினியை யொக்கு

துதித்த விவேகம் வித்தையென் றுரைத்த
வெந்தழ லனைய விவேகம துதித்த
இந்தன மனைய இறையிலன் றற்றே
கஅரு இற்படப் பிரிப்பின் மெய்ப்படும் எவற்றையும்
இதுவன் றிதுவன் றெனக்கழி காலை
அதுவே தானே யாயின தென்றனை
வித்தை முன்ன ரவித்தையு மவித்தைமுன்
வித்தையும் நில்லா வியன்ஒளி இருளென

---

மாயின்—அம்மரத்து உதித்த விவேகம் வித்தையென்று உரைத்த வெந்தழல் அனைய - அன்னுவயம்: வித்தையென்று உரைத்த விவேகம் அம் மரத்துதித்த வெந்தழலனைய என மாறுக. இதன் பொருள்: வித்தையென்று சொல்லப்பட்ட விவேகக்கியானம் அந்த விறகிலே தோன்றின வெவ்விய தழலை யொக்கும்—விவேகமது உதித்த இந்தனம் அனைய-விவேகக்கியானந் தோன்றின தானம் அந்த விறகினை யொக்கும். ஆகையால்—இறையிலன் றற்றே-விவேகக்கியானந் தோன்றினது பிரமத்திலே யென்று சொல்லப்படாது, மாயா அவித்தையிலே யாகவேண்டும். இது திட்டாந்த விரோதமாகையால் நீ சொன்னது அர்த்தமாகாது. இதன்றியும்—இற்படப் பிரிப்பின் மெய்ப்படும் எவற்றையும் இதுவன்று இதுவன்று எனக் கழி காலை அதுவே தானே ஆயினது என்றனை - வீடானதை ஒரொரு வைக்கோலாகவும், ஒரொரு கழியாகவும், ஒரொரு மரமாகவும் நாளிலே பிடுங்கிப் போடப் பின்பு வீடென்கிற சொரூபமில்லையாய்ப் போன தன்மைபோலவும், புடைவையானதை நாளிலே ஒரொரு இழையாகப் பிடுங்கிப் போட்ட பின்பு புடைவையென்கிற சொரூபமில்லையாய்ப் போன தன்மை போலவுஞ் சரீரமாகக் கூடிக்கொண்டிருக்கிற எல்லா உபாதிகளையும் இது நாமல்ல இது நாமல்லவென்று பேதிபண்ணி நீங்கினவிடத்து அந்தப் பரந்தானே இந்தச் சிவனாயிருந்ததென்று நீ சொன்னாய்—வித்தை முன்னர் அவித்தையும் அவித்தைமுன் வித்தையும் நில்லா - அறிவாகிய பிரமத்தின் முன்னே அறியாமையாகிய தேகாதிப்பிரபஞ்சம் தோன்றி நில்லாது. அறியாமையாகிய தேகாதிப் பிரபஞ்சத்தின் முன்னே அறிவாகிய பிரமமுந் தோன்றி நில்லாது. அதென்போல வென்னில்—வியன் ஒளி இருளென-மிக்க பிரகாசத்தையுடைய ஆதித்

௧௯0 இருளல ஒளிக்கும் ஒளியல இருட்கும்
ஒருகா லத்தும் ஒருபயன் இலதால்
இரண்டையும் நுகரும் முரண்தரு விழியென
வித்தையும் அவித்தையும் உய்த்ததொன் றுளதே
தானே தாணு மானுற் பயனென்
௧௯௫ தன்னில் தன்னைத் தானே காணிற்
கண்ணிற் கண்ணைக் காணவும் படுமே
தன்நல மதனைத் தானே நுகரும்
என்னின் முன்நலம் எய்தா திருந்ததென்

---

தன் முன்னே அந்தகாரம் நில்லாதாற் போலவும் அந்தகாரத்தின் முன்னே ஆதித்தன் நில்லாதாற்போலவுமெனக் கொள்க—இருளல ஒளிக்கும் ஒளியல இருட்கும் ஒரு காலத்தும் ஒரு பயன் இலது-இருளல்லாத சுத்த ஒளிக்கும் ஒளியல்லாத சுத்த இருளுக்கும் ஒரு காலத்திலும் இவையிற்றுக்கு ஒருபயனும் உண்டாகாது—ஆல் - அப்படி யிருக்கையால்—இரண்டையும் நுகரும் முரண்தரு விழியென - இருளோடுங்கூடி இருளை யனுபவித்தும் வெளியோடேகூடி வெளியை யனுபவித்தும் அவை யிரண்டு முதலு மாகாமல் தனியே ஒருமுதலாய் நின்ற பெரிய கண்ணினது தன்மையைப் போலவும்—வித்தையும் அவித்தையும் உய்த்ததொன்று உளதே - அறிவாயுள்ள பதியோடுங்கூடி இது பதியென்றறிந்தும் அறியாமையாயுள்ள பாசத்தோடுங்கூடி இது பாசமென்றறிந்தும் அவையிரண்டுமெல்லாமற் பசுவென்று தனியே ஒருமுதலுண்டென்று அறிவாயாக—தானே தாணு மானுற் பயன் என் - இந்தப் பிரமந்தானே பிரமமானதால் இந்தப் பிரமத்துக்கு உண்டாகிய பிரயோசனம் என்னதான்—தன்னில் தன்னைத் தானே காணில் - இந்தப் பிரமமானது தன்னிடத்திலே தன்னுடைய இயல்பைத் தானே காணப்படுமாயின்—கண்ணிற் கண்ணைக் காணவும் படுமே - கண்ணானது தன்னிடத்திலே தன்னுடைய சொரூபத்தைத் தானே காணுமென்று சொல்லவும் படுமே? அது உண்டாகாது. ஆகையால் நீ பிரமம் தன்னிலே தன்னைக் காணுமென்று சொன்னது அர்த்தமன்று. இதன்றியும்—தன்நலமதனைத் தானே நுகரும் என்னில் - பிரமம் தன்னிடத்தி லுண்டாகிய சுகத்தைத் தானே அனுபவியாநிற்குமென்று நீ சொல்லில்—முன் நலம் எய்தா திருந்தது என் கட்டிபோலெனக் கதறினை - பிரமம்

கட்டி போலெனக் கதறினை இன்பம்வந்
*தொட்டிடும் வத்தை யுடையையா யிடினே
தத்துவ மசியென வைத்தமுப் பதத்திற்
கொன்றே பொருளென் றன்றே பகர்வது
நீபுலி யாயினை யென்றாங் குணரில்
ஆயினை என்றதும் ஆகு வமைத்தால்
நோயா யினமெனல் ஆயா யென்றால்
அகமே பிரம மாயின தென்றால்

---

இந்தப் பெத்தமுண்டாவதற்கு முன்னே தன்னிடத்தி லுண்டாகிய சுகத்தைத் தான் அனுபவியாம லிருப்பானேனென்று நான் கேட்டதற்குக் கருப்புக்கட்டியானது தன்னிடத்தி லுண்டாகிய இரதத்தைத் தான் அனுபவியாம லிருந்தாற்போலுமென்று நீ கதறினாய்—இன்பம் வந்து ஒட்டிடும் வத்தை யுடையை ஆயிடினே - அந்தப் பிரமத்தினிடத்தி லுண்டாகிய சுகம் உனக்கு இந்த முத்தியிலே யனுபோகமானது நீ தனியே பசுவென்று ஒரு முதலாய் அதிலே பாசபந்தியாயிருந்து இப்பொழுது அந்தப் பாசம் நீங்கிப் பதியோடு கூடுகையினாலேயெனக் கொள்க—தத்துவமசியென வைத்த முப் பதத்திற்கு - தத் அது துவம் நீ அசி ஆகின்றாயென்கிற மகாவாக்கியத்துக்குப் பொருள் விசாரிக்குமிடத்து—ஒன்றே பொருளென் றன்றே பகர்வது - ஒன்றேயாயிருக்கும் இதற்கு அர்த்தமென்றல்ல அந்த மகாவாக்கியஞ் சொல்லுவது. பின்னை எங்ஙனே யென்னில்—நீ புலி யாயினை யென்று ஆங்கு உணரில்-ஒருவன் ஒருவனுடைய வீரத்தைக் கண்டபொழுது நீ புலியாயினை யென்று அவன் அங்ஙனஞ் சொன்ன சொல்லை விசாரித்துப் பார்க்கில்—ஆயினை யென்றதும் ஆகு உவமைத்தால் - ஆயினையென்றதற் குவமைத்தேயென்று லக்ஷணவிதியிற் சூத்திரங்கள் சொல்லுகையினால் அவன் புலியாகின்றானல்லன். இதன்றியும்—நோயாயினமெனில் ஆயாய் - ஒருவன் ஒருவனைப் பார்த்து நீ இப்படிப் பொல்லாதா யிருப்பானேனென்ன நாம் நோயாய்க் கிடந்தோம் கண்டீரேயென்று அவன் சொன்ன சொல்லுக்கு அர்த்தத்தை நீ தானே ஆராய்ந்துபாராய். அவன் கொண்ட வெதுப்புக்குளிர் அவனாகிறதில்லையே—என்றால்-அப்படியிருக்கையால்—அகமே பிரமமாயின

---

*தொட்டும் வித்தையை - பாடபேதம்.

சகமே அறியத் தான்வே றன்றே
உண்மையிற் சலமிலம் உடற்சலம் சலமுறும்
வெண்மதி போல விளங்கின மென்றனை
உகம அசல ஞகிச் சஞ்சல சலத்துச்
சலனம் மேவினம் எனமதி காண
வேண்டும தன்றிக் காண்பவர் பிறரேல்
ஈண்டுன தேகம்என் செய்த தியம்புக

---

தென்றால் - அகம் தானே பிரம மாகாநின்றதென்று மகாவாக்கியஞ் சொல்லுகையால்—சகமே யறியத் தான்வே றன்றே - ஒருவர் இருவரன்றி இந்தப் பிரபஞ்ச மித்தனையும் அறியத்தக்கதாக இவன் அந்தப் பிரமத்துக்கு வேறென்கிறது தப்பாதென் றறிவாயாக. அன்றியும்— உண்மையிற் சலமிலம் உடற்சலம்-எம்முடைய உண்மையைப் பார்க்குமிடத்து அதிலே நமக்குச் சலனமில்லை. இந்த உடலிலுண்டாகிய சலனம் உடலுக்காயிருக்கும். அதென்போலவென்னில்—சலமுறும் வெண்மதிபோல - சலத்தோடே கூடியிருக்கிற மதி அந்தச் சலம் அசைந்தபொழுது தானும் அசைந்தாற்போலே யிருந்ததொழிந்து அதினுடைய உண்மையைப் பார்க்குமிடத்து அந்த மதிக்கு அசைதலில்லையானாற்போல—விளங்கினம் என்றனை - இங்ஙனம் இந்த முத்தி தசையில் விளங்காநின்றோமென்று நீ சொன்னாய்—அசலனாகிச் சஞ்சல சலத்துச் சலனம் மேவினம் என மதி காணவேண்டும்-நாம் சலனமில்லாம லிருப்பானொருத்தன், ஆற்றிலே யோடுகிற சலத்தினுடைய சஞ்சலங்கொண்டு நாமுஞ் சலித்தாற்போலே யிருந்ததொழிந்து நமக்கு அந்தச் சலனமில்லையென்று அந்த மதியானது காணவேண்டும், அப்பொழுது நீ சொன்ன திட்டாந்தமும் ஒக்கும்—அதன்றிக் காண்பவர் பிறரேல் - அதொழிந்து இந்த மதிக்கு அசைதலில்லை தண்ணீருக்கே அசைதலென்று அந்த மதியை யொழிந்து வேறே யொருத்தன் கண்டு சொன்னாற்போல அந்தப் பிரமத்துக்குச் சலனமில்லை உடலுக்கே சலனமென்று அந்தப் பிரமத்தை யொழிய வேறே யொருத்தன் கண்டு சொல்லுகையினாலே—ஈண்டு உனது ஏகம் என் செய்தது இயம்புக - இவ்விடத்துப் பிரம மொன்றுமே உள்ளதென்று நீ சொன்ன சொல்லு ஏதாய் முடிந்தது சொல்லாய். இது அவனுடைய சீவன்முத்தியை மறுத்தது.

உடல்விடக் கடத்துட் படுவெளி போலெனில்
உகரு விட்டென் பெறவுடற் பட்டென் படமற்
றிகலற ஒருவன் இவ்வகை *தெளிய
அகிலமும் முத்தி யடைந்திட வேண்டும்
அறிந்தோர் முத்தி யடைந்தோ ராயின்
பிறிந்தோர் உயிர்பல பேதத் தன்றே

மேல் அவனுடைய பரமுத்தி மறுப்பு : உடல்விடக் கடத்துள் படுவெளிபோல் எனில் - பரமுத்தியானது இந்தச் சரீரம் நீங்கினவிடத்து இந்தச் சரீரத்திலே நின்ற அறிவு தன்னில் ஒன்றுபட்டு நின்றது கடத்துக்குள்ளே அகப்பட்டு நின்ற ஆகாயம் அந்தக் கடமுடைந்த அவதரத்து அந்தக் கடத்துக்குள்ளே நின்ற ஆகாயமும் மற்றப் பராகாசமுந் தன்னில் ஒன்றுபட்டு நின்றாற்போலுமென்று நீ சொல்லின்—விட்டு என்பெற உடற்பட்டு என்பட - ஆகாயங் குடாகாயமாய் நின்ற காலத்து ஒரு துக்கத்தை யனுபவித்ததுமில்லை, குடமுடைந்தகாலத்தும் ஒரு சுகத்தை யனுபவித்ததுமில்லை. அதுபோலப் பிரமமும் உடலுக்குள்ளே அகப்பட்டு நின்ற காலத்து ஒரு துக்கத்தை யனுபவித்தது மில்லையாகவேணும், இந்த உடல் விட்ட காலத்தும் ஒரு சுகத்தை யனுபவித்தது மில்லையாகவேணும். இதன்றி இந்த உடலிலே நிற்கிற அறிவு பிரத்தியக்ஷமாக இப்பொழுது துக்கத்தை யனுபவித்து விட்ட காலத்துச் சுகத்தை யனுபவித்து நிற்கையால் நீ குடாகாய ஆகாயம்போலு மென்றது அர்த்தமன்று—மற்று இகலற ஒருவன் இவ்வகை தெளிய அகிலமும் முத்தி அடைந்திட வேண்டும் - இதொழிந்தும் நீ சொன்ன சாத்திரப் பிரமாணத்திலே மாறுபாடற ஒருத்தன் நான் பிரமமென்று தெளிந்த காலத்து எல்லா அறிவுகளும் ஒன்றென்று சொல்லுகையால் சர்வான்மாக்களும் முத்தியை அடையவேண்டும்—அறிந்தோர் முத்தி யடைந்தோராயின் - பிரமக்கியான முண்டானவர்கள் முத்தியை யடைவர்கள், அல்லாதவர்கள் முத்தியை யடையார்களாயின்—பிறிந்தோர் உயிர் பல பேதத்தன்றே-அறிந்தவர்களென்றும் அறியாதவர்களென்றுஞ் சொல்லுகையால் அந்தப் பிரமத்தை யொழிந்து சொல்லப்பட்ட சீவான்ம வர்க்கமும் பல பேதமாயிருக்குமென்று கொள்ளுவாயாக. இது பரமுத்தியை மறுத்தது.

*தெளியில் - பாடபேதம்.

௨௨0 கன்ம காண்டங் காரண மாக
மன்னும் விவேகம் என்னில் அவித்தைக்
கேது காரணம் ஓதினை யில்லை
இதற்குக் காரணம் விதித்தல்வேண் டின்றே
அரணியி லுதித்த கனலவை கவர்வென
௨௨௫ விரதத் துதித்த விவேகம தழித்தல்
வருந்தி யாயினுந் திருந்திய வேத
நீதி யெல்லாம் நீத்துப் போதமொன்
றறியார் தாமும்இகழ் அவ்வழி நடத்தல்

மேல் அந்தத் தன்மை கூடாதவர்களுக்குச் சாதன சதுட்டயங் களினாலே பிரமக்கியானம் உண்டா மென்பதனை மறுக்கிறான் : கன்ம காண்டங் காரணமாக மன்னும் விவேகம் என்னில் - இந்தத் தன்மை கூடாதவர்கள் யாகாதிகளாயுள்ள கன்ம காண்டங்களை அனுட்டிக்க அது காரணமாக அவர்களுக்குப் பின்பு விவேகக்கியான முண்டா மென்று சொல்லில்—அவித்தைக்கு ஏது காரணம் ஓதினையில்லை - பிரமத்தை மாயா அவித்தைகள் வந்து ஓரவதாரத்திற் பொருந்தி அத்தை மயக்கிக்கொண்டு நிற்குமென்று நீ சொன்னதற்கு இது இன்ன காரணமாகப் பிரமத்தை வந்து பொருந்திற்றென்று ஒன்றைச் சொன்னாயில்லை—இதற்குக் காரணம் விதித்தல் வேண்டின்றே - கன்மம் காரணமாக விவேகம் உண்டா மென்றதுபோலப் பிரமத்துக்கு முன்னே இப்படி இருப்பதொரு குற்றமுண்டு, அது காரணமாக இந்த அவித்தைகள் வந்து இப்பொழுது பொருந்திற்றென்று ஒன்றை நாட்ட வேண்டும்—அரணியில் உதித்த கனல் அவை கவர்வென விரதத்து உதித்த விவேகம் அது அழித்தல் - தீக்கடைகோலை மரத்தில் வைத்துக் கடைய அந்தத் தொழிலினாலே யுண்டாகிய அக்கினி அந்த இரண்டு காட்டத்தையுஞ் சுட்டுப்போட்டதென்று சொல்லலாமாகக் கன்மங் களைச் செய்ய அதனாலே யுண்டாகிய விவேகம் அந்தக் கன்மங்களை யில்லையாக்கிப் போடுமென்கிறது—வருந்தியாயினுந் திருந்திய வேத நீதியெல்லாம் நீத்து - சதாசார சன்மார்க்கங்களை நன்றாகச் சொல் லப்பட்டிருக்கிற வேத வொழுக்கமெல்லாம் வருந்தியுங் கைவிட்டு— போதமொன்று அறியார் தாமும் இகழ் அவ்வழி நடத்தல் - பிரமக் கியான மென்கிறது ஏகதேசமுங்கூட அறியாதவர்களும் பிரமக்

பொறியோ போத நெறியோ இதுபவம்
நீங்கிடும் நெறிதரு பாங்கினைப் பழித்தல்
நன்றி கொன்ற லன்றே அன்றியும்
ஞால நீதியும் நான்மறை நீதியும்
பாலர்உன் மத்தர் பசாசரி லெனவும்
உறங்கி னோன்கை வெறும்பாக் கெனவு
தானே தவிரா தானாற் புரியா
தொழிந்திடின் நிரயத் தழுந்துதல் திடமே

---

கியான முண்டாச்சுது எங்களுக்கு ஆசாரம் வேண்டுவதில்லையென்று அனாசாரங்களைச் செய்துகொண்டு திரிகிற இது—பொறியோ போத நெறியோ - இவர்களுடைய தலையிலெழுத்தோ அல்லது அறிவுக் கீனந் தானோ—இது பவம் நீங்கிடும் நெறிதரு பாங்கினைப் பழித்தல்- இவனைவிட்டு ஒருகாலத்திலும் நீங்காமல் தொந்தித்துக்கொண்டு வருகிற பிறவித் துன்பங்கள் நீங்குகைக்கு ஏதுவாயுள்ள இந்தக் கன்மத்தின் பகுதிகளை எனக்கு ஆகாது இதுவென்று இதனைக் கைவிட்டு விடுகிற இது—நன்றி கொன்ற லன்றே - ‘எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லைச், செய்ந்நன்றி கொன்ற மகற்கு’ என்று திருவள்ளுவதேவர் சொன்ன செய்ந்நன்றி கொன்ற லிதுவா யிருக்கும். விரதத்துதித்த விவேகம தழித்தல் நன்றிகொன்ற லன்றேயென்று பொருள் கூட்டுக.—அன்றியும் ஞாலநீதியும் நான் மறை நீதியும் - இதன்றியும் லோகாசாரங்களும் நாலு வேதத்திற் சொல்லப்பட்ட ஆசாரங்களும் இவை—பாலர் உன்மத்தர் பசாசரி லெனவும் உறங்கினோன் கை வெறும் பாக்கெனவுந் தானே தவிராது-யாதொன்றையும் விகற்பியாமல் நிருவிகற்பமாக் காண்கிற பாலரைப் போலவும், வைதாரையும் வாழ்த்தினாரையுஞ் சுட்டியறியாத மதுபானஞ் செய்தவர்களைப்போலவும், ஆகார நித்திரை பயம் மைதுனமென்கிற நாலுகாரியமுமில்லாத பசாசரைப் போலவும், நித்திரை செய்கிறவன் கையிலே பிடித்திருந்த பாக்குப்போலவும் உனக்கு பிரமக்கியானமில்லாதபடியினாலே அந்த ஆசாரங்களும் தானாகப் போக அறியாது—ஆனால் புரியா தொழிந்திடின் நிரயத்து அழுந்துதல் திடமே - அவை தானே போகாதென்றால் இவன்தானே எனக்கு அந்த ஆசாரங்கள் வேண்டுவதில்லை யென்று விட்டால் தேகாந்தத்திலே மீளா நரகிலே

உய்த்தோ னின்றி முத்தி யுரைத்தல்
பித்தோ பிரமஞ் செத்தோ பெறுவ
துடலையும் நீயே சடமெனச் சாற்றினை [ம்
௨௪0 வையினும் வாழ்த்தினுங் கொய்யினுங் கொளுத்தினு
வணங்கினும் உதைப்பினும் பிணங்குதல் செய்யாப்
பிரமத் தன்மை பெறுவதெக் காலம்
இருக்கு நாள்சில எண்ணில்நூல் கதறித்
தருக்கம் பேசித் தலைபறி யுற்றுக்

போய்க் கிடந்து துக்கங்களை யனுபவிப்ப னென்கிறது தப்பாது— உய்த்தோனின்றி முத்தியுரைத்தல் பித்தோ - அந்த ஆசாரத்திலே உனக்குப் பிரமக்கியானம் உண்டாகாமல் நான் முத்தன் என்று நீ சொல்லுகிறது பித்து மேலிட்டுக் கொண்டோ?—பிரமஞ் செத்தோ பெறுவது - இவன் இருக்கச்செய்தே பிரமக்கியான முண்டாக வேணு மொழிந்து இவன் செத்துப்போய்ப் பிரமத்தைப் பெறப் போகிற தில்லை. அது வெனென்னில்—உடலையும் நீயே சடமெனச் சாற்றினை- இந்த உடலினை நீதானே சடமென்று சொல்லி வைத்தாய்—வையி னும் வாழ்த்தினுங் கொய்யினுங் கொளுத்தினும் வணங்கினும் உதைப் பினும் பிணங்குதல் செய்யாப் பிரமத் தன்மை பெறுவது எக்காலம் - ஒருவன் இவனை வைதவிடத்தும் வாழ்த்தினவிடத்தும் காலினைக் கையினைத் தறித்தவிடத்தும் இவன் மேலே எண்ணெய்ச் சீலையைச் சுற்றி நெருப்பைக் கொளுத்தினவிடத்தும் இவனைத் தெண்டன் பண்ணினவிடத்தும் கால்கொண்டு உதைத்தவிடத்தும் இதம் அகி தப்படாமலிருக்கிற பிரமக்கியானம் இவனிடத்து இற்றைவரை யள வாகக் காணப்பட்ட தில்லை. அந்தப் பிரமக்கியானம் இவனுக்கு இனி எந்தக் காலத்திலே யுண்டாகப்படுவது?—இருக்கும் நாள் சில - புருஷாயித்து நூறு. இதிலே பாதி நித்திரையிலே போம். நீக்கி நின்ற ஐம்பதிலே வாலிபமாய்ப்போம் பதினஞ்சு. விருத்தனுய்ப்போம் பதி னைந்து. நின்ற இருபதிலே ஆலசமாய்ப்போம் சில நாள். இதுக்கு நடுவே—எண்ணில் நூல் கதறித் தருக்கம் பேசித் தலை பறியுற்று - எண்ணிறந்த சாத்திரங்களை யெல்லாங் கற்று அதுகொண்டு கண்டார் கின்றுரோ டெல்லாந் தர்க்கங்கள் பேசி அதனாலே தலை பறியுண்டு—

கண்டோர் ஈய்ந்த பிண்டமுண் டலறிப்
பன்னோய் யாக்கை தன்னோ யுற்றுடல்
விடவரும் என்று நடுநடு நடுங்கி
விட்டோர் தெய்வத் தொட்டின் றன்றியும்
யானே எவரு மானேன் என்றலின்
அவ்வவர் சீறி அவ்வவர் வாணாள்
செவ்விதின் நிரயஞ் சேர்த்துவர் அதனால்
மாயா வாதப் பேயா உனக்குத்
தேவரில் ஒருவர்உண் டாக
மேவரு நரகம் விடுதலோ அரிதே. ௬

---

கண்டோர் ஈய்ந்த பிண்டம் உண்டு அலறி - இவர் நல்ல அத்தியான்மியென்று கண்டவர்கள் இடப்பட்ட அசனங்களைப் பொசித்து பிரமக்கியானஞ் சொல்லுகிறேனென்று அவரிடங்களிலேயுஞ் சிலவையிற்றைக் கூப்பிட்டு—பல்நோய் யாக்கை தன் நோயுற்று உடல்விட வரும் என்று நடுநடு நடுங்கி - பல நோய்களுங்கூடி ஒன்றாயெடுக்கப்பட்ட சரீரத்துக்கு அடைத்த வியாதி இவனை வந்து பொருந்தின பொழுது இதனாலே நமக்குச் சாக்காடு வருமென்று பதைபதை பதைத்து—விட்டோர் தெய்வத் தொட்டின்று அன்றியும் - உடல் விடுகிற காலத்து நீ பயப்படாதே நான் உண்டென்று சொல்லி உன்னை இரட்சித்துக் கொள்ளுகைக்கு ஒரு தெய்வதொந்தனையுமில்லையாயிருக்கிறது. அன்றியும்—யானே எவருமானேன் என்றலின்-நான்தானே பிரம்மாவும் விட்டுணுவும் உருத்திரனும் இந்திரனும் இயமராசனும் மற்றுமுள்ளவர்களெல்லாருமாயிருந்தேனென்றுஞ் சொல்லுகையால்—அவ்வவர் சீறி அவ்வவர் வாழ்நாள் செவ்விதின் நிரயஞ் சேர்த்துவர் - அந்தந்தத் தேவதைகள் நம்மையெல்லாம் இவன் தானென்று சொன்னானென்று உன்னோடே கோபித்துக்கொண்டு தங்களுக்குச் செல்லாநிற்கிற காலங்களெல்லாம் நன்றாகக் கொண்டு ஆழ்ந்த நரகங்களிலே தள்ளிவிடாநிற்பர்கள்—அதனால் மாயாவாதப் பேயா உனக்குத் தேவரில் ஒருவர் உண்டாக மேவரு நரகம் விடுதலோ அரிதே - அங்ஙனமிருக்கையால் மாயாவாதமென்கிற பேய்ச் சமயத்தையுடையவனே, உனக்கு எல்லாருஞ் செத்துப்போய்த் தேவர்க்கத்திலே ஒருத்தர் இருந்தாராயினும் ஒருவராலுங் கிட்டுதற்கரிதாயிருக்கிற நரகம் உனக்கு விட்டு நீங்குதலுண்டாகாதென் றறிவாயாக. ௬

## ரு. *ஐக்கியவாதி சங்கற்பம்

அரிதேர்ந் துணராப் பெரியோன் உரைத்த
பதிபசு பாசம் விதிமுறை கிளக்கில்
ஈசன் ஏகன் எண்ணிலி பசுக்கள்
பாசம் இருவகைப் பரிசின துலகத்
தாயவன் உயிர்க்கு மாயையின் அருளால்
இருவினைத் தகையின் உருவினைத் தருமால்
கருமுகில் அடர இரிதரு கதிர்போன்
றறிவாம் உயிரிற் பிறியா தேயும்

---

மேல் ஐக்கியவாதி தன் மதம் கூறுகின்றான் :

**(உரை)** அரி தேர்ந்து உணராப் பெரியோன் உரைத்த பதி பசு பாசம் விதிமுறை கிளக்கில்-விட்டுணுவானவன் பூமியெல்லாங் கீன்று ஆராய்ந்து பார்த்தவிடத்து இப்படியிருக்கும் இவனுடைய சொரூபமென் றறியப்படாத பெரியவனென்று சொல்லப்பட்டிருக்கிற சிவனாலே அருளிச்செய்யப்பட்ட பதியினது உண்மையினையும் பசுவினது உண்மையினையும் பாசத்தினது உண்மையினையும் உள்ளபடி சொல்லுமிடத்து—ஈசன் ஏகன் எண்ணிலி பசுக்கள் பாசம் இருவகைப் பரிசினது - பதியென்று சொல்லப்பட்ட பரமேசுரன் ஒரு முதலாயிருப்பானொருத்தன், பசுவென்று சொல்லப்பட்ட ஆன்மாககள் பல முதலா யிருப்பதொன்று, பாசமென்று சொல்லப்பட்டது மாயை என்றும் †கன்மம் என்றும் இரண்டு வகைப்பட்டிருப்பதொன்று— உலகத் தாயவன் உயிர்க்கு மாயையின் அருளால் இருவினைத் தகையின் உருவினைத் தரும் ஆல் - பிரபஞ்சத்துக்கு மாதாவாயுள்ள சிவன் தனது காருண்ணியத்திலே ஆன்மாக்களுக்குப் புண்ணிய பாவங்களுக் கீடான சரீரங்களை மாயையிலேநின்றுங் கொடாநிற்பன். ஆல் - அசை—கருமுகில் அடர இரிதரு கதிர் போன்று அறிவாம் உயிரிற் பிறியாது ஏயும் - கறுத்த மேகமானது பிரகாசத்தினையுடைய ஆதித்தனிடத்திலே சென்று பொருந்தினவிடத்து அந்த ஆதித்தனுடைய கிரணங்களெல்லாம் நீங்கின தன்மை போல முதலே சுத்தமாய் அறிவாயிருக்கிற ஆன்மாவினிடத்திலே

---

* அயிக்கவாதி, ஈசுரவைக்கவாதம். †மாமாயை யென்றும் கன்மமென்றும் மூன்று - பாடபேதம்.

ஈட்டும் இருபயன் ஊட்டிடும் நியதி
ஒருபோ திருபயன் நுகர்வுற மருவுத
லின்மை *யாதல் முன்னிய காலைச்
சத்தினி பாதம் உற்றிறை யருளால்
உருவுகொ டுலகு தெரிவுற மருவி
மாசுறு தூசு தேசுற விளக்குந்
தன்மையின் உணர்த்தும் புன்மைகள் நீங்கி
நீரும் நீருஞ் சேருந் தகைமையின்
அறிவினோ டறிவு செறிவுறப் பொருந்தி
ஒன்றும் என்பதை உலகோர்
நன்று முத்தி எனநவிற் றினரே. ரு

அந்த மாயா தேகம் ஒருக்காலும் நீங்காமற் பொருந்தி வாராநிற்கும்—ஈட்டும் இருபயன் ஊட்டிடும் நியதி - முன்னே செய்த புண்ணிய பாவங்களை இந்தச் சரீரத்திலே கர்த்தாவானவன் இவனுக்கு நாடோறும் பொசிப்பியாநிற்பன்—ஒருபோது இருபயன் நுகர்வுற மருவுதலின்மையாதல் முன்னிய காலை - புண்ணியபாவ மிரண்டுந் துலையொத்து ஒரு சனனத்திலே எல்லாக் கன்மங்களும் பொசித்துத் தொலையத் தக்கதாக ஏதேனுமொரு சிவபுண்ணியம் வந்து எதிர்ப்பட்ட அவதாரத்து—சத்தினிபாதம் உற்று - இவனுக்குச் சத்தினிபாத மென்பதொன்று உண்டாய், அந்த அவதாரத்திலே—இறையருளால் உருவுகொடு உலகு தெரிவுற மருவி - கர்த்தாவானவன் தனது காருண்ணியமே தனக்குத் திருமேனியாகக் கொண்டருளி உலகத்திலுண்டானவர்களெல்லாருங் காணத்தக்கதாக ஆசாரியனாக எழுந்தருளி வந்து—மாசுறு தூசு தேசுற விளக்குந் தன்மையின் உணர்த்தும் - அழுக்கினாலே மிகுந்திருக்கிற புடைவையை நன்றாக வெள்ளாவி வைத்து அந்த அழுக்கை நீக்கித் தூய்தாக வெள்ளையாக்கின தன்மைபோல இவனிடத்துண்டாகிய பாசங்களைத் தீக்ஷைபண்ணிக் கிரமத்திலே போகத்தக்கதாக உபதேசங்களை யருளவே—புன்மைகள் நீங்கி நீரும நீரும் சேருந் தகைமையின் அறிவினோடு அறிவு செறிவுறப் பொருந்தி ஒன்றும் - இவனிடத்து உண்டாகிய குற்றங்களெல்லாம் நீங்கிச் சுத்தனாகித் தண்ணீரும் தண்ணீரும் தன்னிலேகூடி ஐக்கியமாய் ஒன்றுபட்டு நின்ற தன்மைபோலச் சிவனுடைய அறிவோடே

*யாதென - பாடபேதம்.

# ௬. ஐக்கியவாதி நிராகரணம்

முத்தி என்பதை எவனோ சுத்த
அறிவெனிற் பாசம் செறியா மாயை
யுருஇரு வினையால் வரும்இரு வினையும்
உருவா லன்றி மருவா திவற்றின்
௫ முந்திய தேதோ வந்தணை வதற்கோர்
ஏது வேண்டும் தான்இயல் பென்னின்

---

தன்னுடைய அறிவு கூடி ஐக்கியம் பிறந்து ஒன்றுபட்டு நிற்கும்—என்பதை யுலகோர் நன்றா முத்தியென நவிற்றினரே - என்று இங்ஙனஞ் சொல்லப்பட்டதை உயர்ந்தோராயுள்ளவர்கள் முத்திகளெல்லாத்திலும் வைத்துக்கொண்டு இதுவே நல்ல முத்தியென்று சொல்லாநிற்பர்கள். ௫

மேல் பாடாணவாதி மறுக்கிறான்.

**(உரை)** முத்தி யென்பதை எவனோ - இத்தை நீ முத்தி யென்று சொன்னது என்னதான்! அது பின்பு சொல்லுகிறோம்—சுத்த அறிவெனிற் பாசம் செறியா-ஆன்மா அனாதியிலே சுத்தமுமாய் அறிவுமாயிருக்குமென்று சொல்லின் நடுவே ஓர் அவதாரத்திலே சுத்தமாயிருக்கிற ஆன்மாவைப் பாசம் வந்து பொருந்துகைக்கு வழக்கில்லை—மாயையுரு இருவினையால் வரும் - இந்த மாயா சரீரமானது இவனை வந்து பொருந்து மிடத்து இவன் முன்னே செய்த புண்ணிய பாவங்களுக்கீடாக வந்து பொருந்துவ தொழிந்து தானாக வந்து கூடாது—இருவினையும் உருவாலன்றி மருவாது - அந்தப் புண்ணிய பாவங்கள்தான் உண்டாமிடத்து ஒரு மாயா சரீரமுண்டாய் அதிலுண்டாகிய திரிவித கரணங்களினாலே இவன் செய்துகொள்ள உண்டாவதொழிந்து தானே யுண்டாகாது. ஆகையால்—இவற்றின் முந்தியது ஏதோ - இந்த மாயை கன்ம மிரண்டினும் வைத்துக்கொண்டு இவனை முந்த வந்து கூடின பாசம் ஏதுதான்? இதன்றியும்—வந்து அணைவதற்கு ஓர் ஏது வேண்டும் - இந்தப் பாசங்கள் நடுவே ஓர் அவதாரத்திலே இவனை வந்து பொருந்துமென்பதற்கு அனாதியிலே இவனுக்கு மலமென்பதொன்று உண்டாய் அது காரணமாக வந்து கூடிற்றென்று சொல்ல வேண்டும்—தான் இயல்பென்னின் - அப்படி மலமென்பது ஒன்

வீடுற் றவரினுங் கூடக் கூடும்
ஈங்கிவை நிற்க நீங்காக் கருவிகள்
கொண்டறி வறியக் கண்டது மன்றி
மருவிய உருவு துயில்பெறுங் காலைச்
சிறுபொறித் தறுகட் கறையணற் சுடிகைத்
துத்திக் கடுவுள் துளையெயிற் றுரகக்
கொத்தயல் கிடப்பினுங் குவைதரு நவமணி
ஒருபாற் றுதையினும் பெருகார் வத்தினோ

---

றில்லை, இந்தப் பாசங்கள்தான் நடுவே வந்து இவனைப் பொருந்தினது, வெள்ளைப்புடைவைக்கு அழுக்கேறினாற்போல இயல்பாக வந்து பொருந்துமென்று நீ சொல்லில்—வீடுற்றவரினுங் கூடக் கூடும் - இந்த மாயா கன்மங்கள் நீங்கி மோக்ஷத்தைப் பெற்றிருக்கிறவர்களிடத்திலும் இந்த மாயா கன்மங்கள் இயல்பாக வந்து பொருந்தப்படும்—ஈங்கு இவை நிற்க-இவ்விடத்து நான் சொன்னதற்கு ஓர் உத்தரமும் உனக்குச் சொல்லக்கூடாது. ஆகையால் இவை நிற்க—நீங்காக் கருவிகள் கொண்டு அறிவு அறியக் கண்டதுமன்றி - அநாதியிலே உன்னைவிட்டு நீங்காமல் நிற்கிற மலசம்பந்தத்தை இந்த மாயா கருவிகள் வந்து நீக்க அந்தக் கருவிகளைக் கொண்டு உன்னுடைய அறிவு சத்தாதி விஷயங்களை யறிந்து வருகிறது பிரத்தியக்ஷமாகக் கண்டிருக்கச்செய்தேயும் மலமென்பதொன்று இல்லை யென்றாய். இதன்றியும்—மருவிய உருவு துயில்பெறுங் காலை - அநாதியே இவனுக்கு மலமென்பதொன்று இல்லை நடுவே இயல்பாக வந்து பொருந்திற்றென்று நீ சொன்ன இந்த உடம்பு இவன் நித்திரை செய்கிற அவதரத்து—சிறுபொறித் தறுகட் கறை அணல் சுடிகைத் துத்திக் கடுவுள் துளையெயிற்று உரகக்கொத்து அயல் கிடப்பினும் - உடம்பிலே சிறிதாயிருக்கிற பொறிகளையு முடையதாய் தறுகண்மையினையு முடையதாய்க் கறுத்திருக்கிற கண்டத்தினையுந் தலையிலே துத்தியினையு முடையதாய் உள்ளே துளையாயிருக்கிற பல்லுகளிலே நஞ்சினையு முடையதாயிருக்கிற பாம்பினது கூட்டங்கள் ஒரு பக்கத்திலே வந்து கிடந்ததாயினும்—குவைதரு நவமணி ஒருபால் துதையினும் - கூட்டமா நவரத்தினங்கள் ஒரு பக்கத்திலே மிகவுங் கிடந்ததாயினும்—பெருகு ஆர்வத்தினோடு அச்சமும் அணுகாக்கொச்

டச்சமும் அணுகாக் கொச்சமை என்னே
கருவி யாவும் பிரிவுறு நிலேயேற்
பொறிபுல ஞதி குறைவற நிறைந்து
காட்சிய தளிக்கு மூட்சியின் முன்ணுக்
கொடுத்தோர் ஆழி *விடுத்தவன் நாடிக்
கொள்வோர்க் காணு துள்கி மீண்டுழித்
தந்தவற் கண்டாங் கந்தயில் அதனைத்
தருக என்னும் பெருமதி பிறங்கும
தறிவி லாமைஎன் றனே அது மலமாக்

---

சமை என்னே - இந்த ரத்தினங்கள் கிடக்கிறத்தைக் கண்டு மிகவும் பிரியம் வாராமலும் அந்தப் பாம்புகள் கிடக்கிறத்தைக் கண்டு மிகவும் அச்சம் வாராமலுமிருந்த இந்த அறியாமை இதென்னதான்!—கருவி யாவும் பிரிவுறு நிலேயேல் - எல்லாக் கருவிகளும் நீங்குகையினுலே அவ்விடத்தில் விருப்பு வெறுப்புக் காணப்பட்டதில்லேயாகில்—பொறி புலஞதி குறைவற நிறைந்து காட்சியது அளிக்கும் மூட்சியின்-பொறி யும் புலனுமாதியாயுள்ள கருவிகளெல்லாம் ஒன்றுங் குறையாமல் நிறைந்து நின்று இவனுக்கு அறிவைக் கொடுக்க இவனுடைய அறிவு சத்தாதி விஷயங்களிலே மூண்டு சீவியாநிற்கிற அவதாரத்திலே—முன்ணுக் கொடுத்து ஓர் ஆழி விடுத்தவன் நாடிக் கொள்வோர்க் காணுது உள்கி மீண்டுழித் தந்தவற் கண்டு ஆங்கு அந்தயில் அதனைத் தருக என்னும் பெருமதி பிறங்கும் - அரைநாழிகைக்கு முன்ணுக ஒருத்தன் கையிலே ஒரு மோதிரத்தைக் கொடுத்து இந்த மோதிரத்தை விற்றுக்கொண்டு வாருமென்று சொல்லிப் போக விட அந்த மோதிரத்தைக் கொள்வோரொருத்தரையுங் காணுமல் இந்த மோதிரம் நம்முடைய கையிலே வைத்துக்கொண்டிருக்கக் கடவோமல்லவென்று விசாரித்து உடனே உன்னிடத்திலே மீண்டு வந்து அவன் தந்த மோதிரத்தை வாங்கி வைத்துக் கொண்டு பின்னும் அரைநாழிகைக்குள்ளே அந்த மோதிரந் தந்தவனேக் கண்டு நான் முன்னே உம்முடைய கையிலே விற்கத் தந்த விலேமதிக்க வொண்ணுத மோதிரத்தைத் தருவீராக வென்று சொன்ன புத்திப் பெருமை மிகவும் உண்டானது என்னதான்! பெருமதி யென்றது ஆசியச் சொல்லு—அது அறிவிலாமை யென்றனே-அப்படி இவனுக்கு

---

*விடுத்ததை - பாடபேதம்.

குறிகொ ளாளர் அறைகுவ ரன்றே
அறிவிற் கறிவு செறியவேண் டின்றே
உண்மையில் இருமையும் ஒளியே எனில்ஒரு
தன்மை யாகமுன் சாற்றின ரிலரே
முன்பு நன்றுடன் ஒன்றிய காலை
இன்பம் எய்துதற் கிலதுயிர் ஆதலின்
நீயலை பொருத மாயா வாதி
ஆயினை அமையும் அருள்நிலை கேண்மதி.

---

மயக்கம் வந்தது அறியாமைகொண்டு என்று சொல்லில்—அது மலமாக் குறிகொளாளர் அறைகுவரன்றே - அப்படி அறியாமை யென்று நீ சொன்னதுதன்னைக் காண் ஆணவமலமாகக் கொண்டு திரிபதார்த்த நிண்ணயம் வந்த பெரியோர்கள் சொல்லுவர்கள். அன்றென்றது ஆமென்றதெனக் கொள்க. இது ஐக்கியவாதியுடைய பெத்த நிலையை மறுத்தது.

மேல் முத்தி நிலையை மறுக்கிறான்: அறிவிற்கு அறிவு செறிய வேண்டின்றே - ஆன்மா அறிவேயாயிருக்கில் வேறே ஓரறிவோடே சென்று கூடவேண்டுவதில்லை. இதன்றியும்—உண்மையில் இருமையும் ஒளியே யெனில் - முத்தியில் நீரும் நீரும் கூடினாற்போலப் பதியும் பசுவும் இரண்டுங் கூடிப் பிரகாசமாயிருக்கு மென்று நீ சொல்லில்—ஒரு தன்மையாக முன் சாற்றினர் இலரே - அவன் சர்வக்கியன் இவன் கிஞ்சிக்கியன், அவன் பரிபூரணன் இவன் ஏகதேசி, அவன் நிர்மலன் இவன் மலசகசன், அவன் பதி இவன் பசு இப்படி யிருக்கையால் சிவனையும் ஆன்மாவையும் ஒரு தன்மையாகக் கொண்டு இதற்கு முன்பு ஒருவருஞ் சொன்னவர்களில்லை—முன்பு நன்றுடன் ஒன்றிய காலை இன்ப மெய்துதற்கு இலது உயிர் ஆதலின் - அநாதியே சுத்தமாயிருக்கிற ஆன்மா பின்பு கூடின அசுத்தங்கள் நீங்கி முத்தியிற் சிவனோடு கூடி இன்பத்தை அனுபவிக்கு மென்றாய், இந்த மாயா கன்மங்கள் கூடுதற்கு முன்னே ஆன்மா சிவனோடு கூடி நிற்கச் செய்தே இன்பத்தை அனுபவிக்கக் கண்டோ மில்லையே, ஆகையால்—நீயலை பொருத மாயாவாதியாயினை அமையும் அருள்நிலை கேள் மதி - நீயும் பிரமந்தானே குடாகாச மாகாசம் போல நின்று இந்த உடல் நீங்கின அவதாரத்து இரண்டு பிரமமும் ஒன்றாய் நிற்குமென்று

## பாடாணவாதி சங்கற்பம்

மூல மலத்தாற் சாலு மாயை
கருமத் தளவில் தருமுரு இறைவன்
செறிந்திரு பயனு நுகர்ந்திடும் உயிர்கள்
இருளுறு மலத்திற் பருவரற் படுதலின்
இடைஇரு நோக்குந் தடைபட் டோரிற்
றுயருறும் அதனாற் செயிருறு துன்பம்
கொத்தை மாந்தர் உய்த்துறுந் துயில்போற்
காட்சி என்னக் காணாத் துயர
மாட்சியை முத்தி எனவகுத் தனரே. ௬

---

உன்னோடே வழக்கிட்டுக் கொண்ட மாயாவாதிதானாய் விட்டாய். ஆகையால் நீ சொன்ன தெல்லாம் அமையும், மேல் திருவருளினது உண்மையை நான் சொல்லக் கேட்பாயாக. மதியென்றது அசை.

மேல் பாடாணவாதி தன் மதம் கூறுகின்றான் :

மூல மலத்தாற் சாலும் மாயை - அனாதியே ஆன்மாவுக்கு ஆணவமலமென்பதொன்று உண்டு, அந்த மலத்தைப் போக்குகை நிமித்தமாக மாயை அவனை வந்து பொருந்தும்—கருமத்தளவில் தரும் உரு இறைவன் - ஆன்மா முன்னே செய்த கன்மத்துக் கீடான சரீரங்களைக் கர்த்தாவானவன் கொடுப்பன்—செறிந்து இரு பயனும் நுகர்ந்திடும் உயிர்கள் - அந்தச் சரீரங்களைப் பொருந்தித் தங்களுக்கு உண்டான புண்ணியபாவ மிரண்டையும் உயிர்களானது பொசித்துவாராநிற்கும்—இருளுறு மலத்தின் பருவரற் படுதலின் - இப்படி அனுபவித்து வரச்செய்தே ஆணவ மலத்தினாலே மறைப்புண்கையினாலே—இடை இரு நோக்கும் தடைபட்டோரின் துயர் உறும் - முன்பு கண்டு வந்த கண்ணானது நடுவே காசம் மேலிட்டு இதனாலே காணாமலிருந்தவர்களைப்போல அவத்தைப்படும்—அதனாற் செயிர் உறு துன்பம்-அப்படி அவத்தைப்பட்டு வருகையினாற் குற்றத்தை யுடைத்தாகிய பிறவித் துக்கமானது மேன்மேலும் உண்டாகாநிற்கும். இது பெத்தம்.

கொத்தை மாந்தர் உய்த்துறுந் துயில்போல் - அஞ்ஞானிகளாக இருக்கிற ஆன்மாக்கள் எல்லா அவத்தைகளும் நீங்கி அதீதாவத்தையிலே அழுந்திக் கிடக்குந் தன்மைபோல—காட்சி யென்னக் காணாத்

# எ. பாடாணவாதி நிராகரணம்

வகுத்துரை பெருகத் தொகுத்திடு முத்தி
நன்று நன்றிருள் ஒன்றிய மலத்தாம்
உளத்திற் குறுபொறி செறிபுலன் நுகர்தல்
விளக்கிற் றிகழும் மேன்மைய தன்றே
ரு கருவிகள் அகல்வுழி மருவிய துயாமும்
நன்றெனலாகுந் துன்றிய படலத்
திடைதடைப் பட்ட சுடர்விழி மாந்தர்
படலம் நீங்குதல் கடனா தலினே

---

துயர மாட்சியை முத்தியென வகுத்தனரே - அவ்விடத்துச் சுட்டிக் காண்கைக்கு ஒரு காட்சியும் இல்லையாய்ச் சுகதுக்கங்களினுடைய அனுபோகங்களும் இல்லையா யிருக்கிற அவதரத்தை முத்தியென்று நல்லோர்கள் சொல்லாநிற்பர்கள். சு-

மேல் பேதவாதி மறுக்கிறான் :

(உரை) வகுத்து உரை பெருகத் தொகுத்திடு முத்தி நன்று நன்று இருள் ஒன்றிய மலத்தாம் - சொல்லைப் பலவாக வகுத்துச் சில திட்டாந்தங்களையுஞ் சொல்லி முடிவில் ஆணவமலத்தோடுங் கூடிநிற்கிற கேவலக் கிடையை முத்தியென்று நீ சொன்னது நல்லது, இப்படி ஒருத்தருஞ் சொன்னவர்களில்லை. நன்று நன்றென்றது ஆசியச் சொல்லு—உளத்திற்கு உறுபொறி செறி புலன் நுகர்தல் விளக்கில் திகழும் மேன்மையதன்றே - சகலத்தில் ஆன்மாவுக்குப் பொருந்தப்பட்ட இந்திரியங்கள் காட்டாக அந்த ஆன்மாச் செறிந்திருக்கிற சத்தாதி விஷயங்களைப் பொசித்துக்கொண்டு வருகிறது கண்ணுக்கு விளக்கானது காட்டக் கண்டு வருகிற தன்மை போலுமாகையாற் சகலம் குற்றமறச் சொன்னாய்—கருவிகள் அகல் வுழி மருவிய துயாமும் நன்றெனலாகும் - விளக்குப்போல இவனுக்குக் காட்டாக நிற்கிற கருவிகள் நீங்கினவிடத்து ஆணவமலத்திலே அழுந்திக் கிடக்கிற கேவலமும் முன்னே சொன்ன சகலம்போல நன்றென்று சொல்லலாமாகும். அது எதுகொண்டு என்னில்—துன்றிய படலத்திடை தடைப்பட்ட சுடர்விழி மாந்தர் படலம் நீங்குதல் கடன் ஆதலினே - மிக்க படலத்தினாலே நடுவே காட்சி தடைப்பட்ட

காட்சி யென்னக் காணுத் துயர
மாட்சியை முத்தி எனவகுத் துரைக்கிற்
கரணு பாவம் மரணம் கருமரம்
ஏய்ந்தவர் முத்தி சேர்ந்தவ ரன்றே
இனைய கதிக்கோர் முனைவரும் வேண்டா
தனிதரு துயரம் எனும்இது திடனே
பாடா ணத்திற் கூடா முத்தி.

## பேதவாதி சங்கற்பம்

ஈசன தருளாற் பாசத் தொகுதி
செறிவுறு செம்பிற் களையுறு களிம்பு

---

கண்ணிணையுடைய ஆன்மாக்களுக்குப்பின்பு ஓர் அவதாரத்திலே அவுஷதப் பிரயோகங்களினுலே அந்தக் கண்ணிற் படலம் நீங்குகிறது முறைமையா யிருக்கையினுலெனக் கொள்க. இது பெத்தத்தை மறுத்தது.

காட்சி யென்னக் காணுத் துயர மாட்சியை முத்தியென வகுத் துரைக்கில் - சுட்டிக் காணுதற்கு ஒரு காட்சியுமின்றித் துக்கங்களினுடைய அனுபோகங்களுமின்றி யிருக்கிற இந்த அவதாரத்தை முத்தியென்று நீ பலவாக வகுத்துச் சொல்லில்—கரணுபாவம் மரணம் கருமரம் ஏய்ந்தவர் முத்திசேர்ந்தவ ரன்றே - கரணங்களினுடைய பிறிவினைப் பொருந்தினவர்கள் மரணம் பொருந்தினவர்கள் கருவைப் பொருந்தினவர்கள் மரங்களைப் பொருந்தினவர்கள் இவர்கள் இத்தனை பேரும் முத்தியைப் பொருந்தினவர்களாக வேண்டும்—இனைய கதிக்கு ஓர் முனைவரும் வேண்டா-இப்படிக் கொத்த முத்தியைப் பெறுகைக்கு ஓர் ஆசாரியனும் வேண்டுவதில்லை—தனிதரு துயரம் எனும் இது திடனே-இந்த முத்தி எல்லாக் கருவிகளும் நீங்கி ஆணவமலத்தோடுங் கூடி ஒன்றுமறியாமற் கிடக்கிற கேவலத்துயரமென்பது தப்பாது. ஆகையால்—பாடாணத்திற் கூடா முத்தி - கல்லுப்போலே ஒன்றும் அறியாமற் கிடக்கிறது முத்தியென்று சொல்லப்படாது. இது பாடாணவாதி முத்தியை மறுத்தது.

மேல் பேதவாதி தன் மதம் கூறுகின்றுன் :

ஈசனது அருளாற் பாசத் தொகுதி செறிவுறு செம்பிற் களையுறு களிம்பு குளிகை தாக்க ஒளிபெற் றுங்கு - அன்னு

குளிகை தாக்க ஒளிபெற் றுங்கு
நித்த சுத்த முத்த ராக
வைத்தனர் உலகில் மறைவல் லோரே. எ

---

# அ. பேதவாதி நிராகரணம்

மறைக ளாகமத் துறைகள்மற் றெவையும்
நாசமில் பதிபசு பாசமென் றுரைத்தல்
அயர்த்தோர் குளிகைச் சயத்தால் தாமிரக்
காளித நாசம் பாசத் தேய்த்தல்

---

வயம்: செறிவுறு செம்பிற் கறையுறு களிம்பு குளிகை தாக்க ஒளி பெற்றுங்கு ஈசனதருளாற் பாசத்தொகுதி என மாறுக. இதன் பொருள்: குகைக்குள்ளே செறிந்துகொண் டிருக்கிற செம்பிடத் துண்டாகிய கருமை பொருந்தியிருக்கிற காளிதமானது இரதகுளிகை சென்று கூடினவிடத்து அந்தக் காளிதம் கெட்டுப் பத்துமாற்றுப் பொன்னான தன்மைபோலப் பக்குவப்பட்ட ஆன்மாக்களுங் கர்த்தாவி னுடைய காருண்ணியத்தினாலே ஆணவம் மாயை காமியமென்று சொல் லப்பட்டு வருகிற மலங்களினது கூட்டங் கெட்டு—நித்த சுத்த முத்த ராக வைத்தனர் உலகில் மறைவல்லோரே - அழியாததாய் நிர்மலமா யிருக்கிற முத்தியினைப் பெற்றுப் பெறுவானும் பேறுமாயிருப்பார்க ளென்று சொல்லிவைத்தனர் உலகத்தின்கண்ணே வேதத்தினுடைய உண்மையைப் பொருந்தின பெரியோர்கள். எ

மேல் சிவசமவாதி மறுக்கிறான்:

**(உரை)** மறைகள் ஆகமத் துறைகள் மற்று எவையும் - நாலு வேதங்கள்முதல் ஆகமமும் வேதாகமங்களினது வழிகள் புராணங்கள் மற்றுமுண்டான சாத்திரங்கள் இவை யெல்லாம்—நாசம் இல் பதி பசு பாசமென்று உரைத்தல் - பதிக்கும் பசுவுக்கும் பாசத்துக்கும் அழிவில்லையென்று சொல்லுகிறதை—அயர்த்து ஓர் குளிகைச் சயத்தால் தாமிரக் காளித நாசம் பாசத்து ஏய்த்தல் கூடாது - நீ இப்பொழுது மறந்துவிட்டு ஓர் இரத குளிகையினது சாமர்த்தி

கூடா தன்றியும் குளிகை சீருணம்
நீடா தழித்த *நிலைஇலை ஆதலிற்
பேத வாதம் ஓதுதல் பிழையே
இன்னும் இன்னுயிர் ஏமங் குளிகை
தன்னில் அன்னியந் தருவது திடமே
வீடித் திறத்தினிற் கூடக் கூடா.

## சிவசமவாதி சங்கற்பம்

பாசமும் பசுவும் ஈசனும் என்றிம்
மூவகை உணர்வு தாம்முதன் மையவாய்ப்

---

யத்தினாலே செம்பிலுண்டாகிய காளிதமானது கெட்டுப் போகிறதைப் பாசத்துக்கு நீ உவமையாகச் சொன்னது சாத்திர விரோதமாகையால் பாசங் கெடுமென்கிறது அர்த்தமாகாது—அன்றியும் குளிகை சீருணம் நீடாது அழித்த நிலை இலையாதலிற் பேதவாதம் ஓதுதல் பிழையே - பாசங்கெடுமென்று சொன்ன தோஷமன்றியும் இரத குளிகையானது செம்பை நிலைநிற்கவொட்டாமல் அத்தையழித்துப் பொன்னாக்கின திட்டாந்தநிலை உனக்குத் தாட்டாந்தத்து இல்லையாகையால் பசுமுதல் கெடாது பெறுவானும் பேறுமாயிருக்குமென்று நீ முன்னே பேதவாதஞ் சொன்னது பழுதாம்—இன்னும் இன் உயிர் ஏமம் குளிகை தன்னில் அன்னியந் தருவது திடமே. அன்றியும் இன்னமும் ஒரு குற்றமுண்டு. அது என்னெனில் செம்பானது தன்னைச் சுத்தமாக்கின குளிகையு மாகாமல் தன்னுடைய தன்மையுங் கெட்டு நடுவே பொன்னான தன்மைபோல ஆன்மாவுந் தன்னைச் சுத்தமாக்கின சிவனுடைய சொரூபமுமாகாமல் தன்னுடைய தன்மையுங் கெட்டு வேறே ஒரு சொரூபமாகவேண்டும். ஆகையால் அது குற்றமுண்டென்றது தப்பாது—வீடு இத்திறத்தினில் கூடக் கூடா-மோக்ஷமென்கிறது செம்பும் இரதகுளிகையும் போலுமென்று நீ சொன்னவகையிற் கூடுமென்கிறது உண்டாகாது.

மேல் சிவசமவாதி தன் மதம் கூறுகின்றான் ;

பாசமும் பசுவும் ஈசனும் என்று இம் மூவகை யுணர்வுதாம் முதன்மையவாய் - பாசமென்றும் பசுவென்றும் பதியென்றும்

---

* நிலைநிலை - பாடபேதம்.

பாசம் ஐம்புலன் தேசுற உணர்த்தப்
பசுத்தனி ஞானம் பொசித்திடு மன்றே
இனைய ஞானம் பிரிவுற எரியாச்
செந்தழல் தகும்நெறி அந்தம்இல் உயிரும்
அறிவாய் ஒன்றும் அறியா தன்றே
இவ்வாறு ஒழுகும் எனைய உயிர்க்கு
முன்னோன் தனது முதிர்ஒளி ஞானம்
அறியாப் பச்சைச் சிறுபுழுக் கவர்ந்த
வண்டென உயிரைக் கொண்டிடும் உயிர்அது
தன்னை நோக்கித் தான்அது வாகி

---

சொல்லப்பட்டு வருகிற மூன்று முதலுக்கும் பாசஞானமென்றும் பசு ஞானமென்றும் பதிஞானமென்றும் சொல்லப்பட்ட மூன்றுவகை ஞானமும் அனாதியே யுள்ளதொன்றா யிருக்கையால்—பாசம் ஐம்புலன் தேசுற உணர்த்தப் பசுத் தனிஞானம் பொசித்திடுமன்றே - பாச ஞானமானது இந்திரியங்களைப் புலனாகிய சத்தாதி விஷயங்களை மயக்கமற அறிவிக்கப் பசுவுக்கு உண்டாகிய ஒப்பில்லாத ஞானமானது அந்த விஷயங்களைப் பொசித்து வாராநிற்கும்—இனைய ஞானம் பிரிவுற எரியாச் செந்தழல் தகும் நெறி அந்தம் இல் உயிரும் அறிவாய் ஒன்றும் அறியாதன்றே-இந்த இரண்டுவகை ஞானமும் நீங்கினவிடத்துக் கொழுந்துவிட் டெரியாமற் சும்மா கிடக்கிற சிவந்த தழலை யொக்குமென்று சொல்லலாமாக அவத்தையில் அழிவில்லாம லிருக்கிற ஆன்மாவும் அறிவா யிருக்கச்செய்தே இதுவென்று ஒன்றைச் சுட்டியறியும் பகுதி இதற்கு உண்டாகாது. இது பெத்தம்.

மேல் முத்தி : இவ்வாறு ஒழுகும் எனைய உயிர்க்கு - இப்படியே நாடோறுங் கேவல சகலப்பட்டு வருகிற இந்த ஆன்மாவுக்கு—முன்னோன் தனது முதிர் ஒளி ஞானம் - மூன்று முதலுக்குள்ளே முதன்மையாகிய சிவனுடைய மிக்க அறிவாயிருக்கிற ஞானமானது—அறியாப் பச்சைச் சிறுபுழுக் கவர்ந்த வண்டென உயிரைக் கொண்டிடும் - ஒன்று மறியாமற் கிடக்கிற பச்சை நிறத்தினையுடைய சிறிய புழுவினை வந்து எடுத்துக்கொண்ட வேட்டுவாளியைப்போல் ஒன்றும் அறியாத ஆன்மாவை வந்து எடுத்துக்கொள்ளாநிற்கும்—உயிர் அது தன்னை நோக்கித் தான் அதுவாகி - புழுவானது தன்னை எடுத்து

ஐவகைத் தொழிலும் மெய்வகை உணர்வும்
பிரியா வாறு பெற்றுத்
திரியாப் பெரியோர் திரட்சிசேர்ந் திடுமே. ௮

## ௯. சிவசமவாதி நிராகரணம்

சேர்ந்த மும்மை வாய்ந்த ஞானமும்
ஒருகா லன்றித் திரிவுற நிற்கில்
ஒண்பொருள் காணும் பண்பினுக் கொருகாற்
பரிதியும் மதியும் எரிதரு விளக்கும்
வேண்ட லின்றே காண்தகு காலை

---

வந்த வேட்டுவாளியை நினைத்துக்கொண்டிருந்து அந்த வேட்டுவாளியான தன்மைபோலச் சிவனுடைய ஞானம் கைக்கொள்ளப்பட்டிருக்கிற உயிரும் அந்தச் சிவனையே தியானம்பண்ணித் தான் அந்தச் சிவனுடைய சொரூபமாகி—ஐவகைத் தொழிலும் மெய்வகை உணர்வும் பிரியாவாறு பெற்றுத் திரியாப் பெரியோர் திரட்சி சேர்ந்திடுமே - வேட்டுவாளியான புழு அந்த வேட்டுவாளி செய்துவந்த தொழிலெல்லாம் தானும் செய்து வேட்டுவாளியினுடைய சொரூபம் நீங்காமல் முன்புள்ள வேட்டுவாளிகளுடைய கூட்டத்தோடும் கூடியிருந்த தன்மைபோல, இந்த ஆன்மாவும் சிவனுடைய பஞ்சகிருத்தியத்தையும் சர்வக்கியத்துவத்தையும் இரண்டுந் தன்னைவிட்டு நீங்காதவாறு பெற்று, முன்னே இந்த அறிவு தொழில் இரண்டையும் பெற்று நீங்காமலிருக்கிற பெரியோர்களது கூட்டத்தோடுஞ் சென்று கூடி நிற்கும். ௮

மேற் சங்கிராந்தவாதி மறுக்கிறான் :

**(உரை)** சேர்ந்த மும்மை வாய்ந்த ஞானமும்-இங்ஙனங் கூடி வருகிற பதி பசு பாசம் மூன்றினுக்கும் பொருந்தப்பட்ட மூன்றுவகை ஞானமும்—ஒருகாலன்றித் திரிவுற நிற்கில் - ஓர் ஓர் அவதாரத்திலே ஒரொன்று காரியப்படுமதொழிந்து மூன்றுவகை ஞானமும் ஒக்கக் கூடிநின்றே ஒரு முதல் காரியப்பட வேண்டுமாயின்—ஒண்பொருள் காணும் பண்பினுக்கு ஒருகால் பரிதியு மதியும் எரிதரு விளக்கும் வேண்டலின்றே காண்தகு காலை - கண்ணானது அழகிய பதார்த்தங்

ஒன்றொன் றாக நின்றறி வுறுமெனில்
அன்னியம் அறியா மன்உயிர் பொறிபுலன்
தானே அறியா தலைவற் குலகினை
ஆனா அறிவால் அறியவேண் டின்றே
கொழுந்தழல் தகுமேல் அழுந்திடும் அவத்தையில்
திரியாத் தலைவற் றெரியாத் தன்மைவந்

களிலே ஒன்றைக் காணவேண்டின ஒழுங்கினுக்கு விசாரித்துப் பார்க்குமிடத்து ஆதித்தனாகுதல் சந்திரனாகுதல் நன்றாக எரிகிற விளக்காகுதல் ஒன்று காட்டக் கண் காணுமதொழிந்து இவை மூன்றுங் கூடிநின்று காட்டக் கண் ஒன்றைக் காணவேண்டுவ தில்லை; ஆகையால் மூன்றுவகை ஞானமுங் கூடிநின்றே ஆன்மா ஒன்றை அறியவேண்டுமென்று நீ சொன்னது அர்த்த மன்று—ஒன்றொன்றாக நின்று அறிவுறும் எனில்-அப்படியன்று காணும், ஒவொன்றாகத் தனித்தனியே நின்று நின்று ஒவொரு விஷயங்களை யறிந்துவாரா நிற்குமென்று நீ சொல்லில்—அன்னியம் அறியா மன்னுயிர் - நிலை பெற்று வருகிற ஆன்மாவுக்கு விஷயங்கள் வேறாயிருக்கையினாலே பசு ஞானம் தானாக ஒரு விஷயங்களை அறியமாட்டாது—பொறி புலன் தானே அறியா - இந்திரியங்கள் சடமாயிருந்தபடியாலே பாச ஞானம் தானாக ஒரு விஷயங்களை அறிய மாட்டாது—தலைவற்கு உலகினை ஆனா அறிவால் அறிய வேண்டின்றே - பதிஞானம் அனாதியே கெடாமலிருக்கிற பேரறிவாயிருக்கையினாலே கர்த்தாவுக்குப் பிரபஞ்ச விஷயங்களைப் புதிதாகச் சுட்டி யறிய வேண்டுவதில்லை—கொழுந் தழல் தகுமேல் அழுந்திடும் அவத்தையில் - கருவிக ளெல்லாம் நீங்கி ஆணவமலத்தினாலே மறைக்கப்பட்டிருக்கிற அவத்தையில் ஆன்மா அறியாமல் கொழுந்துவிட் டெரியாமற் கிடக்கிற கொழுவிய தழலை யொத்திருந்ததாமாயின்—திரியாத் தலைவற் றெரியாத் தன்மை வந்து எய்தலாகா - ஒருகாலத்திலும் இவனை விட்டு நீங்காமல் எப்பொழுதும் இவனோடு கூடி நிற்கிற கர்த்தாவை இவன் தெரியாமலிருக்கிற முறைமை வந்துண்டாகிறது இவனுக்கு ஆகாது. இது அவன் பெத்தத்தை மறுத்தது.

நெய்தல் ஆகா மெய்யுறு பொருட்கு
முன்னர்க் கீடந் தன்னென எடுத்த
வேட்டுவன் இயல்பு கூட்டல் பெறாதே
வண்டிறும் பெடாஉட் கொண்டது தனக்கு
மந்திர வாதந் தந்ததும் இலதே
எடுத்திடும் அதனால் அடுத்ததென் றறையிற்
கருமயிர்க் குட்டி இருசிறைப் பறவை
யாயின தெடுத்த தாயர்சாற் றிலரே
பிறவிப் பேதத் துறையிவை கிடக்க

---

மெய்யுறு பொருட்கு முன்னர்க் கீடந் தன்னென எடுத்த வேட்டுவன் இயல்பு கூட்டல் பெறாதே - நீ சிவனோடே கூடி ஒன்றுபட்டிருக்கிற முத்தித்தன்மைக்கு முன்னே ஒன்று மறியாமற் கிடக்கிற பச்சைப் புழுவைத் தன்னுடைய சொரூபமாக வேணு மென்று சென்றெடுத்த வேட்டுவாளியினது இயல்பு உவமையாகக் கூட்டிச் சொல்லுகிறது பெறாது—வண்டு இறும்பு எடா உட்கொண்டு அதுதனக்கு மந்திரவாதந் தந்ததும் இலதே - சிவன் இந்த ஆன்மாக் களுக்கு மந்திர வுபதேசங்களைச் செய்து தற்சொரூபமாக்கினாற்போல வேட்டுவாளி புழுவை யெடுத்துக் கொண்டுபோய்த் தன்னுடைய கூட்டுக்குள்ளே வைத்து ஒரு மந்திர வுபதேசங்களைச் செய்து தற் சொரூபமாக்கினதாகச் சொல்லப்படாது. ஆகையால் நீ வேட்டுவாளி யையும் புழுவையும் முத்திக்கு உவமை சொன்னது அர்த்தமாகாது— எடுத்திடும் அதனால் அடுத்ததென்று அறையில்-அப்படியன்று காணும், அந்த வேட்டுவாளி சென்று எடுத்ததுதான் உபதேசமாக அந்தப்புழுத் தற்சொரூபமான தென்று நீ சொல்லில்—கருமயிர்க் குட்டி இரு சிறைப் பறவையாயினது எடுத்த தாயர் சாற்றிலரே-கருமை பொருந்தி யிருக்கிற மயிர்க்குட்டிப் புழுவானது தனது வாயில் நூலாலே கூடு கட்டி அதற்குள்ளே யிருந்து சிலநாட்சென்ற பிறகு பெரிய சிறகினை யுடைய பறவையாய்ப் பறந்து போன இதற்கு ஒரு தாயார் வந் தெடுத்து அது உபதேசமாக இது பறவையான தென்று ஒருத்தர் சொல்லுவாரில்லை. ஆகையால்—பிறவிப் பேதத்துறை இவை கிடக்க- புழு வேட்டுவாளியானதும் மயிர்கருட்டி பறவையானதும் கன்மத்துக் கீடாக அச்சுமாறிப்போனது, முத்திக்கு உவமையாகாது. ஆகையால்

*ஏயும் இத்திறன் ஆயுங் காலை*
*யோகத் தகுதி யாகத் தகுமே*
*ஞான மின்மையென் றோதுவ தெவன்எனில்*
*உயிரும் உணர்வும் பயிலுத லின்றி*
*வேட்டுவன் உருவம் மென்புழு உணர்வு*
*கூட்டுத லால்உருக் கூடுத லானும்*
*முத்தியில் இறையிற் பற்றுத லின்றித்*
*தன்உரு அணைந்த பின்அதன் *நினைவு*
*மாறுத லானும் ஊறுடைத் தன்றே*

---

இவையிற்றை விட்டுவிடுவாயாக. இதன்றியும்—ஏயும் இத்திறன் ஆயுங்காலை யோகத் தகுதியாகத் தகுமே - புழு வேட்டுவாளியானாற் போல ஆன்மாவுஞ் சிவசொரூபமானதை ஆராயுமிடத்து யோகத்துக்குச் சொல்லலா மொழிந்து ஞானத்துக்குப் பணியன்று—ஞான மின்மை யென்று ஓதுவது எவன் எனில் - இது ஞானத்துக்குப் பணியல்ல வென்று சொன்னது ஏனென்னில்—உயிரும் உணர்வும் பயிலுதலின்றி - ஆன்மாவும் சிவனும் கூடி ஒன்றுபட்டிருக்கிறதே முத்தியென் றிருக்கச்செய்தே ஆன்மாவும் சிவமும் வேறுபட்டிருக்குமென்று நீ சொன்ன தோஷமுமன்றி—வேட்டுவன் உருவம் மென் புழு உணர்வு கூட்டுதலால் உருக் கூடுதலானும் - வேட்டுவாளியினுடைய சொரூபத்தை மெல்லிய புழுவினுடைய நினைவானது கூட்டுதலாலே உனக்கு முத்தியிலே ஒரு சரீரம் கூடுகையினாலும்—முத்தியில் இறையிற் பற்றுதலின்றி - முத்தித்தானத்திலே நீ ஒரு சொரூபத்தை யெடுத்தும் சிவனோடும் கூடியிருத்தலன்றி வேறு யிருக்குமென்று சொன்ன தோஷமன்றியும்—தன் உரு அணைந்தபின் அதன் நினைவு மாறுதலானும் - வேட்டுவாளியினுடைய சொரூபத்தைப் புழுவானது பெற்றதற்குப் பின்பு முன்னே புழுவாயிருந்த நாம் இப்பொழுது இந்த வேட்டுவாளியின் சொரூபத்தைப் பெற்று இந்தத் தொழில்களைச் செய்யப் பெற்றோமே என்கிற நினைவு அதற்கு இல்லாதபடியாலும்—ஊறுடைத் தன்றே - இத்தை ஞானத்தா லுண்டாகிய முத்தியென்று சொல்லுகிறது குற்றத்தையுடைத்தாம். இது முத்தியில் ஆன்மா ஒரு சரீரத்தோடு கூடியிருக்குமென்பதனை மறுத்தது.

---

*உணர்வு - பாடபேதம்.

ஈசன தியல்பரு ளெய்துயிர் இயற்றல்
பேசுதல் தவறெனப் பெருமறை அறைய
ஐந்தொழில் உயிரும் தந்திடல் தகுமே
ஆவதென் முன்னாள் நாவலர் பெருமான்
பண்டொரு முதலை உண்ட மைந்தனை
வரவழைத் தனனென் றாய்பிழைப் பிலததூஉம்
தந்திட வேண்டும் என்றன ரன்றே

ஈசனது இயல்பு அருள் எய்து உயிர் இயற்றல் பேசுதல் தவறெனப் பெருமறை அறைய - கர்த்தாவுக்கு உண்டாகிய பஞ்சகிருத்தியம் திருவருளைப் பெற்ற ஆன்மாக்கள் செய்யுமென்று சொல்லுகிறது குற்றமென்று பெரிய வேதமானது சொல்லச்செய்தே—ஐந்தொழில் உயிரும் தந்திடல் தகுமே - மகத்துக்கு மகத்தாயிருக்கிற சிவனாலே செய்யப்பட்டு வருகிற பஞ்சகிருத்தியம் அணுவாயிருக்கிற ஆன்மாவினாலே செய்யப்படுமென்கிறது தகாது—ஆவது என் முன் நாள் நாவலர்பெருமான் பண்டு ஒரு முதலையுண்ட மைந்தனை வரவழைத்தனன் என்றாய்' அப்படி நீர் சொல்லுகிறது என்னதான்! முற்காலத்திலே வித்துவான்களுக்கெல்லாம் இராசாவாயுள்ள நம்பியாரூரன் திருப்புக்கொளியூரிலே இரண்டு பிராமணப் பிள்ளைகள் ஒரு குளத்திலே குளிக்கச் செய்தே ஒரு பிள்ளையை முதலை விழுங்கி மூன்று வருஷஞ் சென்றதற்குப் பின்பு மீளவும் அந்த முதலை வாயிலேநின்றும் அழைத்தனனென்று நீ சொன்னாய்—பிழைப்பிலது அதூஉம் தந்திட வேண்டும் என்றனரன்றே - அப்படி நீ சொன்னது குற்றமில்லை. அந்த முதலை வாயிலேநின்று பிள்ளையை மீள அழைத்தற்குத் திருப்பாட்டு :

உரைப்பா ருரையுகந் துள்கவல் லார்தங்க ளுச்சியாய்
அரைக்கா டரவா ஆதியு மந்தமு மாயினாய்
புரைக்காடு சோலைப் புக்கொளி யூரவி நாசியே
கரைக்கால் முதலையைப் பிள்ளை தரச்சொல்லு காலனையே.

இப்படித் தேவரீர் இந்தப் பிள்ளையைத் தந்தருள வேணுமென்று சொன்னதொழிந்து தாமாக அழைத்ததில்லை. ஆகையால் திருவருளைப் பெற்ற ஆன்மா பஞ்சகிருத்தியஞ் செய்யுமென்று நீ

இன்னவை கிடக்க முன்னவன் தன்மை
யெய்தினர் எல்லாச் செய்தியுஞ் செய்வர்
இரும்பெரி எய்தித் தருஞ்செயல் தகவெனிற்
பொருள்நிலை கிடக்க ஒருதிட் டாந்தப்
பேறே ஆயிற் சீறுக் கதுவிய
புனல்ஒரு புடைசேர் கனல்தகு மாயினும்
வேறொரு பொருளை நீறுக் கிலதே
நெருப்பெனும் இதனின் உருத்தனி காட்டுக

---

சொன்னது அர்த்தமன்று—இன்னவை கிடக்க முன்னவன் தன்மை எய்தினர் எல்லாச் செய்தியும் செய்வர் - இவையெல்லாம் மேல் நீர் சொல்லுகிறீர், இது கிடக்குது, கர்த்தாவினுடைய திருவருளைப் பெற்றவர்கள் அவன் செய்கிற சிருட்டி திதி சங்கார திரோபவ அனுக்கிரகமென்கிற தொழில்களெல்லாத்தையுஞ் செய்வர்கள். அது எங்ஙனேயென்னில்—இரும்பு எரி எய்தித் தருஞ் செயல் தகவெனில் - இரும்பானது அக்கினியோடுங் கூடி அக்கினியினது சொரூபத்தைப் பெற்றவிடத்து அந்த அக்கினி செய்கிற தொழில்களெல்லாத்தையும் இரும்பு செய்தாற்போல என்று நீ சொல்லில்—பொருள் நிலை கிடக்க ஒரு திட்டாந்தப் பேறேயாயில் - திருவருளைப் பெற்ற சுந்தர நாயினாற் பஞ்சகிருத்தியஞ் செய்யப்பட்டதில்லை யென்று பிரத்தியக்ஷமாகக் கண்டிருக்கச்செய்தே அத்தைப் போட்டு இரும்பும் அக்கினியும்போல வென்று திட்டாந்தத்தினாலே உனக்குச் சாதிக்கலாமாகில்—சீறுக் கதுவிய புனல் ஒரு புடைசேர் கனல் தகுமாயினும் - கோபத்தோடுங் கூடியிருக்கிற செலவினையுடைய தண்ணீரானது ஒரு பக்கத்திலே பொருந்தியிருக்கிற அக்கினியோடுங் கூடி ஐக்கியம் வந்திருந்ததாயினும்—வேறொரு பொருளை நீறு ஆக்கிலதே - அக்கினியைச் சேர்ந்த இரும்புபோல இந்த வெந்நீர் வைக்கோல் முதலாயினவற்றைச் சுட்டுப் பொடியாக்க மாட்டாது. அது தண்ணீரோடுங் கூடி நிற்கையினாலே வைக்கோல் முதலாயினவையிற்றைச் சுட்டதில்லைக் காணும், தனியே நின்றதாயிற் சுடுமென்று நீ சொல்லில்—நெருப்பெனும் இதனின் உருத்தனி காட்டுக - நெருப்பென்று சொல்லப்பட்ட இந்தப் பூதத்தினுடைய சொரூபம் தனியே நின்று காரியப்

அங்கியும் ஒன்றைத் தங்கி னின் றல்லது
தன்தொழில் நடத்தா தென்றறி இனிநீ
இரும்பனற் செய்தி தரும்பரி சுளதே
அதுவென் ஓர் அலகை பொதிதருங் காலை
அதன்செயல் அனைத்தும் இவன்செயல் ஆமால்
அவன்இவன் ஆகில் இவன்அவன் செய்திக்
கென்அவை என்னிற் பின்னுறு செயலும்
அதன்செய லன்றி இவன்செய லாகில்
இவன்செயல் பேயின் தன்செயல் ஆகி

---

பட்ட துண்டாமாயிற் காட்டுவாயாக—அங்கியும் ஒன்றைத் தங்கி னின் றல்லது தன் தொழில் நடத்தாதென்று அறி இனி நீ-அக்கினியும் ஒரு விறகை இரும்பைச் சார்ந்து நின்று தன்னுடைய தொழிலைச் செய்யுமதொழிந்து தனியே ஒரு முதலாக நின்று தன்னுடைய தொழிலைச் செய்ய மாட்டாது என்றறிவாயாக. ஆகையால்—இரும்பு அனற் செய்தி தரும் பரிசு உளதே - அக்கினி இரும்பைச் சார்ந்து நின்று தன்னுடைய தொழில் செய்து போனதொழிந்து இரும்பு அக்கினியினுடைய தொழிலைச் செய்யும் பரிசுண்டாகாது. ஆகையால் திருவருளைப் பெற்ற ஆன்மாக்கள் பஞ்சகிருத்தியஞ் செய்பவர்களென்று நீ சொன்னது அர்த்தமன்று—அது என் ஓர் அலகை பொதிதருங் காலை அதன் செயலனைத்தும் இவன் செயலாமால்-அப்படி நீர் பஞ்ச கிருத்தியஞ் செய்யாதென்று சொல்லுகிற தென்ன? ஒரு பேயானது ஒருத்தனை வந்து பிடித்துக்கொண்ட விடத்து அந்தப் பேயினுடைய செயலாயுள்ள தெல்லாம் இவனுடைய செயலாகக் காணப்பட்டதோ இல்லையோ? ஆகையால் அருளைப் பெற்ற ஆன்மாக்கள் பஞ்சகிருத்தியஞ் செய்வர்களென்று நீ சொல்லில்—அவன் இவனாகில் இவன் அவன் செய்திக்கு என் - அந்தச் சிவன் இந்த ஆன்மாவாயிருந்து தன்னுடைய தொழில்களைச் செய்தானுமாகில் இந்த ஆன்மா அந்தச் சிவனுடைய தொழிலைச் செய்கைக்கு என் கொண்டது?—அவை யென்னில்-அந்தத் தொழில்களைச் செய்கைக்கு இந்த ஆன்மா உரித்தென்று நீ சொல்லில்—பின் உறு செயலும் அதன் செயலன்றி இவன் செயலாகில் இவன் செயல் பேயின் தன் செயலாகி இருந்தவா வெனத் தெரிந்திட வேண்டும் - ஒருவனைப் பேய் பிடித்துக்கொண்டி

இருந்த வாஎனத் தெரிந்திட வேண்டும்
௫௫ தெரியா தாயிற் புரியிற் கடுங்கனல்
எரிந்த தென்னும் இதுதரும் அன்றியும்
அவன் இவன் ஆகில் இவன் அவன் செய்தி
என்று செய்வான் ஒன்றிய மதத்தாய்
எல்லாம் அறிதல் செல்லா துயிர்கள்

ருந்து அவனை அந்தப் பேய் விட்டு நீங்கின அவதாரத்துப் பின்பு உண்டாகிய செயல்களெல்லாம் இவனுடைய செயலாமோ அந்தப் பேயினுடைய செயலாமோ? அதெல்லாம் இவனுடைய செயலாமாகில் அந்தப் பேய் பிடித்துக்கொண் டிருக்கிற பொழுது இவன் செய்த தொழில்களெல்லாம் அந்தப் பேயினுடைய செயல்களாகி யிருந்ததாமென்று அறிந்திட வேண்டும்—தெரியாதாயின் - அப்படிப் பேயினுடைய செயலாயிருந்த தென்று அறியப்படாதாயின்—புரியிற் கடுங்கனல் எரிந்த தென்னும் இது தரும் - புரியினிடத்துக் கடிதாயுள்ள அக்கினியானது கூடி நின்று தன்னுடைய தொழில்களைச் செய்து போனாற்போலச் சிவனும் ஆன்மாவினிடத்திலே பதிந்து நின்று தன்னுடைய தொழில்களைச் செய்துபோன தொழிந்து ஆன்மாச் சிவனுடைய தொழிலைச் செய்யமாட்டாது—அன்றியும் அவன் இவனாகில் இவன் அவன் செய்தி என்று செய்வான் ஒன்றிய மதத்தாய் - இதன்றியும் அந்தச் சிவனோ வென்றால் ஒரு காலத்திலும் நாசமில்லாம லிருப்பானொருத்தன், இந்த ஆன்மாவோ என்றால் கணப்பொழுதைக்குள்ளே நாசமடைந்து போவானொருத்தன், இப்படிக்கொத்த ஆன்மா அப்படிக்கொத்த சிவனுடைய தொழில்களைச் செய்தானுமாயினும் எந்தக் காலத்திலே செய்து நிறைவேற்றுவான்? பொருந்தப்பட்டிருக்கிற உன்மத்தத்தோடுங் கூடியிருந்துள்ளவனே, இதற்கு உத்தரமுண்டாகிற் சொல். இது ஆன்மா பஞ்சகிருத்தியஞ் செய்யுமென்பதனை மறுத்தது.

எல்லாம் அறிதல் செல்லாது உயிர்கள் - முத்தியிற் பஞ்சகிருத்தியஞ் செய்யுமென்று சொன்னதை யன்றியும் ஆன்மாவுக்குச் சர்வக்கியத்துவமும் உண்டாமென்று நீ சொன்னாய். எல்லாத்தையும் அறியுமென்கிற பகுதி ஆன்மாவினிடத்து உண்டாகாது, எல்லாத்தையும் அறிந்திருக்கிற திருவருள் இவனிடத்திலே

சிற்றறி வெனும்இச் சொல்தவ றாகும்
என்பதென் அலகை தன்பத மடைந்தோர்
கொண்ட வாறு கண்டனம் என்னில்
மூங்கை அந்தருற் றோங்கிய குணங்குறி
செய்ததென் இன்னும் பவ்வமுற் றழுந்தினும்
நாழி கொள்ளா தாழியில் அலைபுனல்
அதனாற் கருத்து முதலுள தாக
வேண்டும் அன்றே ஈண்டினி அமையும்
எல்லாம் எனும்இச் சொல்லாற் படும்பொரு

---

பதிகையினாலே இவனும் எல்லாத்தையும் அறிவனென்று நீ சொல்லில்—சிற்றறிவெனும் இச் சொல் தவறாகும் - இந்த ஆன்மாவைக் கிஞ்சிஜ்ஞனென்று வேதாகம புராண சாத்திரங்கள் சொல்லுகிறது பழுதாம்—என்பது என் அலகைதன் பத மடைந்தோர் கொண்டவாறு கண்டனம் என்னில்-என்று நீர் சொல்லுகிறதென்னை? பேயினுடைய பதவியைப் பெற்றவர்கள் அந்தப் பேய்க்குண்டாகிய வருகால நிகழ்ச்சிகளையெல்லாம் தங்களிடத்திலே கொண்டு சொன்னவாறெல்லாம் கண்டோமே என்னில்—மூங்கை அந்தர் உற்றோங்கிய குணங் குறி செய்ததென் - ஊமையுமாய்க் கண்ணிரண்டுந் தெரியாதவனுமாயிருந்தானொருத்தன், அவனிடத்திலே இவையெல்லாங் குறைவற்றிருக்கிறதொரு பேய்வந்து பொருந்தினவிடத்து அவனு வழங்கி ஒன்றைச் சொன்னதுமில்லை கண் தெரிந்து ஒன்றைக் கண்டதுமில்லை. ஆகையால் பேயின் தன்மையெல்லாம் பிடியுண்டவனுக்கு உண்டாகாது—இன்னும் பவ்வமுற்று அழுந்தினும் நாழிகொள்ளாது ஆழியில் அலை புனல்-இதன்றியும் சமுத்திரத்தோடு கூடி ஆழ முகந்ததாயினும் நாழியானது அந்தச் சமுத்திரத்திலே அலையப்பட்டிருக்கிற புனலெல்லாங் கொள்ளமாட்டாது—அதனாற் கருத்து முதலுள தாகவேண்டும் - அப்படி யிருக்கையினால் பேரறிவோடு கூடியிருந்தாலும் பசுவுக்குள்ள அறிவுண்டா மொழிந்து பதிக்கு உண்டான அறிவெல்லாம் உண்டாகாதாகவேண்டும்—அன்றே ஈண்டு இனி அமையும்- அனாதியே இப்படி வருகையால் நீ அருளோடுங் கூடின ஆன்மா எல்லாத்தையும் அறியுமென்று சொன்ன சொல்லை இனி விட்டுவிடுவாயாக—எல்லாம் எனும் இச் சொல்லாற் படும் பொருளனைத்துங்

ளனைத்துந் தாக்காத் தனிப்பரத் துற்றவர்க்
கெவ்வகை உணர்வு செய்வதென் செப்புக
ஒன்றின் ஒன்றும் ஒன்றா துலகில்
நின்ற போதுயிர் நேராம் அன்றே
முத்தி உற்ற நற்றவ ரவையிடைச்
சேர்வர் என்றனை சார்தரு முத்தி
சாலோக் கியமோ சாயுச் சியமெனில்
பந்த முற்ற கந்தல கழித்த

---

தாக்காத் தனிப்பரத்து உற்றவர்க்கு - ஆகையால் ஒப்பில்லாததாய் எல்லாத்துக்கும் மேலாயிருக்கிற சிவத்தோடுங் கூடினவர்களுக்குச்சர்வ மென்று சொல்லப்பட்ட சொல்லினா லுண்டாகிய பயனெலாம் உண்டாகாது. அன்றியும் பெத்தம் நீங்கி முத்தனானபடியினாலே பழைய தன்மையென்னவு மொண்ணாது. ஆகையால்—எவ்வகை உணர்வு செய்வது என் செப்புக - திருவருளைப் பெற்றவர்களுடைய அறிவு எப்படி யிருப்பது தொழில் எப்படி யிருப்பதென்று சொல்லுவாயாக—இது சிவனைப் பெற்ற ஆன்மாக்களுக்குச் சர்வஞ்ஞத்துவம் உண்டாம் என்பதனை மறுத்தது. இதுவன்றியும்

ஒன்றின் ஒன்றும் ஒன்றாது உலகில் நின்ற போது உயிர் நேராமன்றே - முத்தியில் ஆன்மாவுஞ் சிவமும் ஒன்றாமென்னில் ஒரு முதல் இல்லையாம். அப்படிப் பரமுத்தியடையாமல் சரீரத்தோடுங் கூடிச் சீவன்முத்தனாய் நின்றதென்னில் அப்படி நின்ற ஆன்மா சிவனுக்குச் சமமாம். ஆகையால் இது அர்த்தமன்று. இதன்றியும்—முத்தியுற்ற நற்றவ ரவையிடைச் சேர்வர் என்றனை - திருவருளைப் பெற்றவர்கள் முன்னே முத்தியைப் பெற்றிருக்கிற நல்ல தவத்தையுடைய பெரியோர்கள் கூட்டத்தின் நடுவே சென்று கூடியிருப்பார்களென்று நீ சொன்னாய்—சார்தரு முத்தி சாலோக்கியமோ - இப்படிச் சென்று பொருந்தினார்களென்று நீ சொன்ன முத்தி சரிதைத் தொழிலுக்கு உண்டாகிய சாலோக முத்தியைச் சொன்னாயோ—சாயுச்சியம் எனில் - அப்படியன்று காணும், நான் ஞானபாதத்துக்கு உண்டாகிய சாயுச்சியத்தைக் காணுஞ் சொன்னேனென்னில்—பந்தமுற்ற கந்தலக

அறிவினோ டறிவு பிரியாப் பெற்றி
வேண்டுமென் பதற்கு ஈண்டிவர் இவ்வா
றிருப்பர் என்பதற் குருத்தான் வேண்டும்
அண்ணல தருளின் நண்ணினர் இருப்பினும்
சீவன் முத்தரென் றோதினர் அகன்று
நீங்கியும் உருவம் நீங்கா தாயின்
ஓங்கிய முத்தி யாவதென் உரைக்க
செடியுடல் அணுகாக் குடிலை கொடுக்குமென்
றோதினை நீயே பேதாய் பகட்டுரல்
ஒளிர்சினை முச்சித் தளிர்எனும் இதுதகும்

---

ழித்த அறிவினோடு அறிவு பிரியாப் பெற்றி வேண்டும் என்பதற்கு - தான் நீக்கவந்த சரீரத்தோடுங் கூடி நிற்கிற ஆணவமலத்தினாலே மறைக்கப்பட்டிருக்கிற சிற்றறிவுடனே பேரறிவு கூடினவிடத்து இரண்டும் தன்னிற் பிரியாமல் ஒன்றுபட்டு நிற்க வேண்டுமென்கிற இயல்பினுக்கு—ஈண்டு இவர் இவ்வாறு இருப்பர் என்பதற்கு உருத்தான் வேண்டும் - இவ்விடத்து அந்தப் பரமுத்தியைப் பெற்றவர்கள் முத்தியைப் பெற்றிருக்கிற பெரியோர்களது கூட்டத்தோடுங் கூடிக்கொண்டிருப்பார்களென்று நீ சொல்லுகிற இதற்கு இவர்களுக்கு ஒரு சரீரம் உண்டாகவேண்டும். இதன்றியும்—அண்ணலது அருளின் நண்ணினர் இருப்பினும் சீவன்முத்தரென்று ஓதினர்- கர்த்தாவினுடைய திருவருளோடுங் கூடினவர்கள் பரமுத்தியை யடையாமல் இந்தச் சரீரத்தோடுங் கூடியிருந்தார்களாயினும் அவர்களுக்குச் சரீரத்தொந்தனையில்லை, அவர்களைச் சீவன்முத்தரென்று நல்லோர்கள் சொன்னார்கள். இப்படி நல்லோர்களாலே சொல்லப்பட்டிருக்கச்செய்தே—அகன்று நீங்கியும் உருவம் நீங்காதாயின் ஓங்கிய முத்தியாவது என் உரைக்க - இந்தச் சரீரத் தொந்தனையை நீங்காமலிருக்குமாயின் மிகுந்திருக்கிற பரமுத்தியாவது எப்படிக் காண் சொல்லு. அப்படியன்று காணும்—செடியுடல் அணுகாக் குடிலை கொடுக்குமென்று ஓதினை நீயே - அந்த முத்தி இந்த அசுத்தமாயா சரீரம் பொருந்தாது, சுத்தமாயா சரீரத்தைக் கொடுக்க அந்தச் சரீரத்தோடுங்கூடி யிருப்பர்களென்று நீ சொன்னாய்—பேதாய் பகட்டுரல் ஒளிர்சினை முச்சித்தளிரெனும் இது தகும் - அறிவில்லாதவனே, நாலு

இச்சா ரூபம் நச்சினர் என்னின்
மும்மலத் தேதும் இன்மைய தன்றே
இதுவளர் முத்திப் பதமென இயம்புவர்
கூO ஈங்கிவை நிற்க.

## சங்கிராந்தவாதி சங்கற்பம்

நீங்காது ஒளிர்உயிர்
விளக்கென நிற்கும் அளப்புறும் அறிவின்
றிறைவற் கேதும் அறியவேண் டின்றே

---

மூன்று தலைமுறையாக அரிசி நெல்லுக் குத்திவருகிற பெரிய உரலினிடத்திலே ஒளி பொருந்தின கொம்புகளும் அதனுடைய நுனியிலே இளைய தளிர்களும் உண்டானதென்று சொல்லுகிறதை யொக்கும் நீ மூன்று மலங்களும் நீங்கிப் பரமுத்தியைப் பெற்றவிடத்திலே ஒரு சரீரம் உண்டாமென்று சொன்னது. இதன்றியும்—இச்சாரூபம் நச்சினர் என்னின் - சுவேச்சையினாலே யெடுக்கப்பட்டிருக்கிற சரீரத்தோடுங் கூடிப் பிரியப்பட்டிருந்தார்களென்று நீ சொல்லின்—மும்மலத்து ஏதும் இன்மையதன்றே-ஒருவனுக்கு ஒரு சரீரமுண்டாமிடத்துக் கன்மத்தாலே யொழிந்து உண்டாகாது; அந்தக் கன்மந்தான் ஆணவமலங் கிடந்தாலொழிந்து உண்டாகாது. ஆகையால் முத்தியில் மலமாயாகன்மமான மூன்று மலத்தில் ஒரு மலமும் உனக்குப் போனதில்லையாம்—இது வளர்முத்திப் பதமென இயம்புவர் - இப்படி ஒரு சரீரத்தோடுங் கூடிக்கொண்டிருக்கிற முத்தியைச் சாயுச்சியத்துக்கு ஏதுவாயிருக்கிற சாலோக்கியாதியாயுள்ள பதமுத்திகளென்று காண் நல்லோர்கள் சொல்லுவார்கள்—ஈங்கு இவை நிற்க-இவ்விடத்து நீ பழுதாகச் சொல்லிவந்த பெத்தமுத்திகளை விட்டு நான் சொல்லுகிறத்தைப் புத்திபண்ணிக் கேட்பாயாக.

மேல் சங்கிராந்தவாதி தன் மதம் கூறுகின்றான்:

நீங்காது ஒளிர் உயிர் விளக்கென நிற்கும் அளப்புறும் அறிவு இன்று - ஆன்மாவானது நீங்காத பிரகாசத்தோடுங் கூடிக்கொண்டிருக்கிற விளக்கைப்போலே சுட்டற நிற்கும், அது இது என்று அளவிட்டுச் சுட்டியறிகிற அறிவு இதற்கு இல்லை—இறைவற்கு ஏதும் அறிய வேண்டின்றே - கர்த்தா நிர்விகாரியானபடியாலே அவ

மன்னும் ஆன்ம சன்னதி அளவிற்
காந்த பசாசத் தேய்ப்ப வாய்ந்த
உயிர்உடல் இயக்குஞ் செயலுறு பூட்டைப்
பலவகை உறுப்பும் இலகிய தொழில்போல்
ஐம்பொறி புலன்கள் இன்புறு மன்றே
இனைய வாயிலின் நிகழ்தரு பயனவை
அந்தக் கரணம் முந்தி உணர்ந்திடும்
இவைஅகல் வழிஐம் பொறிபுலன் நிகழா
துயிர்நீங் கிடில்உடல் செயல்இல தன்றே
இவ்வகை வினையின் செவ்விதின் நடத்தும்

---

னுக்கு ஒன்றும் அறிய வேண்டுவதில்லை—மன்னும் ஆன்மசன்னதியளவில் காந்தபசாசத்து ஏய்ப்ப வாய்ந்த உயிர் உடல் இயக்கும்-நிலைபெற்று வாராநிற்கிற ஆன்மாவினுடைய சன்னதி மாத்திரத்திலே காந்தமானது அசைவற நிற்க அதின் சன்னதியிலே இரும்பு காரியப்பட்டாற்போல ஆன்மா விகாரமற நிற்கப் பொருந்தப்பட்ட பிராணவாயுவானது உடலைக் காரியப்படுத்தா நிற்கும்—செயலுறு பூட்டைப் பலவகை உறுப்பும் இலகிய தொழில்போல் ஐம்பொறி புலன்கள் இன்புறுமன்றே - சமைக்கப்பட்ட பூட்டைகளிடத்துப் பட்டடையென்றும் தவிலென்றும் கதிரென்றும் சந்திரவளையமென்றும் பூணியென்றும் பலபல வகையாகச் சொல்லப்பட்டு வருகிற உறுப்புக்கள் தோறும் மிகுத்து வாராநிற்கிற தொழில்களைப்போல் இந்திரியங்கள் ஐந்துஞ் சத்தாதி விஷயங்களை அனுபவியாநிற்கும்—இனைய வாயிலின் நிகழ்தரு பயனவை அந்தக்கரணம் முந்தி உணர்ந்திடும் - மெய் வாய் கண் மூக்குச் செவியென்று சொல்லப்பட்ட இந்திரியங்களாலே கொண்ட சத்தாதி விஷயங்களை மனோபுத்தியாங்கார மென்கிற உட்கரணங்கள் அறியாநிற்கும்—இவை அகல்வழி ஐம்பொறி புலன் நிகழாது - இந்த அந்தக்கரணங்கள் நீங்கின விடத்து ஐம்பொறிகளோடும் பஞ்ச விஷயங்கள் பொருநதாது. இது சகலம்—உயிர் நீங்கிடில் உடல் செயலிலதன்றே - பிராணவாயு நீங்குமாயின் உடல் சேட்டையின்றி அவத்தைப்பட்டுக் கிடக்கும். இது கேவலம்—இவ்வகை வினையின் செவ்விதின் நடத்தும் - இப்படி ஆன்மாவின் சன்னதி மாத்

பழமலம் நீங்க நிகழுங் காலை
ஏற்றோர் முகஒளி தோற்றும் கலனெனத்
தலைவன தருளுயிர் நிலவிடும் நிலவக்
காட்டத் தங்கி மாட்டத் தங்கிய
தன்மையும் அளத்துப் புல்வையின் நீப்பும்
போன்றது வாகித் தோன்றிடும் அதனாற்
பசுகர ணங்கள் சிவகர ணங்க
ளாக மாறி அறிவும்
ஏக மாம்உயிர் யானென தின்றே. கூ

---

திரத்திலே பிராணவாயுவானது பிராரத்தத்தைப் பொசிப்பித்துக் கொண்டு வாராநிற்கும். இது பெத்தம்.

மேல்முத்தியானது: பழமலம் நீங்க நிகழுங் காலை - இப்படிப் பிராரத்தம் பொசித்துக் கொண்டு வரச்செய்தே இவனுக்குச் சகசமாயுள்ள ஆணவமலம் நீங்கத்தக்கதாக இருவினை யொப்பும் சத்தினிபாதமும் உண்டான காலத்து—ஏற்றோர் முக ஒளி தோற்றுங் கலனெனத் தலைவனது அருள் உயிர் நிலவிடும் - எடுத்துப் பார்த்தவர்கள் முகத்தினது பிரதிவிம்பந் தோன்றப்பட்ட கண்ணாடியைப் போலக் கர்த்தாவினுடைய திருவருளும் ஆன்மாவினிடத்திலே பொருந்தாநிற்கும்—நிலவக் காட்டத்து அங்கி மாட்டத் தங்கிய தன்மையும் அளத்துப் புல் வையின் நீப்பும் போன்று அதுவாகித் தோன்றிடும் - இப்படி ஆன்மாவினிடத்திலே அந்தத் திருவருள் பொருந்தவே விறகினிடத்திலே நெருப்பைக் கொளுத்தின போது அந்த விறகுக்கு உண்டாகிய தன்மை போலவும் உப்பளத்திலே புல்லும் வைக்கோலுங் கூடின விடத்து இவை தன்னுடைய தன்மை கெட்டு உப்பான தன்மை போலவும் இந்த ஆன்மாவும் தன்னுடைய தன்மை கெட்டு அந்த அருட் சொரூபமாய்த் தோன்றாநிற்கும்—அதனாற் பசுகரணங்கள் சிவகரணங்களாக மாறி அறிவும் ஏகமாம் உயிர் யான் எனது இன்றே - அப்படி இந்த ஆன்மாப் பசுத்துவங் கெட்டுச் சிவத்துவமானபடியாலே பசுகரணங்களா யுள்ளவையுந் தன் தன்மை கெட்டுச் சிவகரணங்களாக மாறி அறிவும் இரண்டாக கில்லாமல் அருளோடுங் கூடி ஒன்றும். பின்னை இந்த ஆன்மாவுக்கு யான் எனது என்கிற பகுதி இல்லையாம். கூ

# கо. சங்கிராந்தவாதி நிராகரணம்

இன்றுன துரையின் நன்றி உயிர்ஒளித்
தீபம் போலத் தாபந் தரில்இருள்
செறியுந் தன்மைஎன் அறிவில தாகில்
ஒளியென உரைத்த தெளிவதற் கேதாம்
ரு சன்னதி யளவில் மன்னுஞ் செயல்உடல்
காந்தம் போல வாய்ந்த தென்ற
தன்மையும் உணராப் புன்மையை யன்றே
உயிருடல் இயக்கில் துயில்பெறுங் காலைச்
செய்ததென் மனுதி எய்துயிர் பொறிபுலன்

---

மேல் ஈசுரவவிகாரவாதி மறுக்கிறான் :

**(உரை)** இன்று உனது உரையின் நன்றி - இப்பொழுது நீ பலவாகச் சொல்லி வந்த பெத்த முத்தியினது நன்மையை விசாரித்துப் பார்க்குமிடத்து—உயிர் ஒளித் தீபம்போலத் தாபம் தரில் - ஆன்மாவானது ஒளிபொருந்தியிருக்கிற விளக்குப்போலத் தாவுதலைச் செய்யுமாயின்—இருள் செறியுந் தன்மை என் - இப்படிப் பிரகாசித்து நிற்கிற ஆன்மாவுக்கு அஞ்ஞானமாகிய இருள் பொருந்தின தன்மை என்தான்—அறிவிலதாகில் - இந்த ஆன்மாவுக்கு அறிவில்லாதது கொண்டு இருள் பொருந்தினதாகில்—ஒளியென உரைத்த தெளிவு அதற்கு ஏதாம் - ஆன்மா விளக்குப்போலே ஒளியாயிருக்குமென்று சொன்ன தேறுதல் ஆன்மாவுக்கு அறிவில்லாதது கொண்டு இருள் பொருந்தியிருக்குமென்று சொன்னதற்கு இது எப்படியாகும். நீதானே விசாரித்துப்பார்—சன்னதியளவில் மன்னுஞ் செயல் உடல் காந்தம்போல வாய்ந்ததென்ற தன்மையும் உணராப் புன்மையை யன்றே - ஆன்மாவினுடைய சன்னதி மாத்திரத்திலே பொருந்தப்பட்ட பிராணவாயுவானது காரியப்படுத்த உடல் காரியப்பட்டுவரும். அதென்போல வென்னில், காந்தத்தின் சன்னதியிலே இரும்பு காரியப்பட்டாற்போலவென்று நீ முன்னே சொன்ன தன்மையினையும் இப்போ விசாரியாத சிறுமையினையுடையவனுனய். இதன்றியும்—உயிர் உடல் இயக்கில் துயில்பெறுங் காலைச் செய்தது என் - பிராணவாயுவானது உடலைக் காரியப்படுத்துமாயின் நித்திரை செய்கிற அவதரத்துப் பிராணவாயுவும் ஒக்க நிற்கச் செய்தே உடல் காரியப்படக் கண்டோமில்லை. ஆகையால் ஆன்மா

கO நடத்த ஆவியும் சடத்தன ஆயின்
பூட்டையிற் பூணி கூட்டல் பெறுதே
புலன் ஐம் பொறியில் நிலவிடும் என்றனை
ஐஞ்சும் ஒருகால் துஞ்சா தறிதற்
கழிவென் நற்றருச் செழுமலர் இலைபலம்
கரு கனிதரு வதுபோல் இனையவை ஐந்தும்
ஒன்றென் றுக நின்றறி வுறுமெனில்

உடலைக் காரியப்படுத்துமதொழிந்து பிராணவாயுக் காரியப்படுத்த மாட்டாது. ஆன்மா அவிகாரியாயிருப்ப தொழிந்து இவையிற்றைக் காரியப்படுத்தாதென்று நீ சொல்லில்—மனுதி எய்து உயிர் பொறி புலன் நடத்த ஆவியும் சடத்தன ஆயின்-மனம் புத்தி யாங்கார சித்த மென்கிற அந்தக்கரணங்கள், பொருந்தப்பட்ட பிராணவாயு, சோத்திரம் தொக்கு சட்சு சிங்குவை ஆக்கிராண மென்கிற இந்திரியங்கள் சத்தப் பரிச ரூப ரச கந்தங்கள் என்கிற விஷயங்கள் இவை யெல்லாத்தையுங் காரியப்படுத்திக் கொள்ளுதற்கு ஆன்மாச் சடமாயிருக்குமாயின்—பூட்டையிற் பூணி கூட்டல் பெறுதே - பூட்டையினிடத்து உண்டாகிய பூணியினுலே மற்றுண்டான உறுப்புகளெல்லாங் காரியப் பட்டு வருகையினுலே நீ பூணியை ஆன்மாவுக்கு உவமை சொன்னது திட்டாந்தவிரோதம். ஆகையால் இது அர்த்தமாகாது. பூணியைப் போல ஆன்மா, தவிலைப்போல அந்தக்கரணம், கதிரினைப்போல பிராணவாயு, சந்திரவளையத்தைப்போல இந்திரியங்கள், சலத்தைப் போல இந்திரிய விடயங்கள், பட்டடையைப்போலச் சரீரமாகையால் எனக் கொள்க. இதன்றியும்—புலன் ஐம்பொறியில் நிலவிடும் என்றனை - சத்தாதி விஷயங்கள் ஐந்தும் இந்திரியங்கள் ஐந்தினும் வந்து பொருந்துமென்று நீ சொன்னுய்—ஐஞ்சும் ஒருகால் அஞ்சாது அறிதற்கு அழிவு என் - ஐந்து விஷயங்களையும் ஐந்து இந்திரியங் களுங் கொள்ளுமாயின் ஐந்தும் ஏககாலத்திலே அறியவேண்டும், விஷயங்கள் ஐந்தில் ஒன்று சீவித்து மற்றை நாலுஞ் சீவியாமலிருக்கைக் குக் குறைவென்—நற்றருச் செழுமலர் இலைபலங் கனிதருவதுபோல் இனையவை ஐந்தும் ஒன்றென்றுக நின்று அறிவுறும் எனில் - நல்ல தொரு மரமானது ஒரு காலத்திலே இலைகளைத் தோற்றுவித்தும் ஒரு காலத்திலே கொழுவிய மலர்களைத் தோற்றுவித்தும் ஒரு காலத்

ஒன்றின் பயன்நனி ஒன்றறி யாதால்
இதுவே யல்லது கதுமென இருசெவி
இருகூற் றொருகாற் றெரியாத் தன்மைவந்
தெய்தும் மனாதியும் மெய்யிற் செயலுந்
தனக்கிலை யொருவற் கெனத்தெளி கிலையே
நோக்கும் முகஒளி நீக்காத் தானெனக்
கவருந் தன்மை முகுரம் போலக்
கொடுத்தது கோடற் கடுத்ததுண் டன்றே

---

திலே காய்களைத் தோற்றுவித்தும் ஒரு காலத்திலே பழங்களைத் தோற்றுவித்தும் நின்ற தன்மைபோல இந்திரியங்கள் ஐந்தும் ஒவ்வொரு விஷயங்களாகக் காரியப்பட்டு வருமென்று நீ சொல்லின்—ஒன்றின் பயன் நனி ஒன்று அறியாது ஆல் இதுவேயல்லது கதுமென இருசெவி இருகூற்று ஒருகால் தெரியாத் தன்மை வந்து எய்தும் - ஒரு கொம்பிலே ஒரு காலத்திலே இலையும் ஒரு காலத்திலே பூவும் உண்டானாற்போல ஓர் இந்திரியத்துள்ள விஷயத்தை மற்றோர் இந்திரியம் அறியக்கண்டோமில்லை. இந்தத் தோஷமுமன்றி நீ ஒன்றொன்றாக அறியும் என்றதற்கு இன்னமும் ஒரு தோஷம் உண்டு. அது ஏதென்னில், ஓர் இந்திரியமா யிருக்கிற இரண்டு செவியினுஞ் சடக்கென இரண்டு சத்தம் ஒருகாலத்திலே சொல்ல ஒருவன் சொன்னதை யறிந்தும் ஒருவன் சொன்னதை யறியாமலுமா யிருக்கையாலும்—மனாதியும் மெய்யிற் செயலுந் தனக்கு இலை ஒருவற்கு எனத் தெளிகிலையே - அந்த இந்திரியங்களினுடைய தொழில் தனக்கின்றி ஆன்மாவுக் கானாற்போல அந்தக்கரணங்களுக்கு உண்டாகிய தொழிலும் சரீரத்துக்கு உண்டாகிய தொழிலும் இவையிற்றுக்கின்றி ஆன்மாவுக்கு உள்ளதென்று தெளிவாயாக. எனவே, ஆன்மா அவிகாரியல்ல விகாரியென்பது கருத்து. இது பெத்தத்தை மறுத்தது.

மேல் முத்தியை மறுக்கிறான் : இதன்றி நீ முத்தித் தன்மை சொல்லுகிற இடத்திலே கண்ணாடியிலே பார்த்தவர்களுடைய முகத்தில் ஒளி அந்தக் கண்ணாடியிலே தோன்றினாற்போலக் கர்த்தாவினுடைய திருவருளும் இந்த ஆன்மாவிலே பிரகாசிக்குமென்று நீ சொன்னாய் — நோக்கும் முக ஒளி நீக்காத் தானெனக் கவருந் தன்மை முகுரம்போலக் கொடுத்தது கோடற்கு அடுத்தது உண்

காட்டத் தங்கி கூட்டக் கூடும்
இந்தனத் தியற்கை வெந்தழல் தாங்கா
உப்பளத் தடுத்த புற்பலா லங்கள்
சடத்த வேனுங் கொடுத்தது கொள்ளுந்
தன்மைஉண் டுனக்கு இன்மைய தன்றே
அவமுறு கருவி சிவமய மாம்எனக்
கூறினை தாகம் வேறுருக் கவரா
தென்பதென் அவைமுற் றுன்பந் துடைக்குந்
திருவருள் மருவ உரியன என்னில்

---

டன்றே - பார்த்தவர்கள் முகத்திலுண்டாகிய ஒளியைத் தள்ளிவிடாமல் கண்ணுடி தானே யென்னத்தக்கதாகத் தன்னிடத்திலே கவளிகரித்துக்கொண்டு நிற்கிற கண்ணுடியினது தன்மைபோலக் கொடுத்தது கொள்ளுந் தன்மை உனக்கு அடுக்குமதோன் றன்று. இதன்றியும்—காட்டத்து அங்கி கூட்டக் கூடும் இந்தனத்து இயற்கை வெந்தழல் தாங்கா-விறகினிடத்து உண்டாகிய நெருப்பை ஆன்மாவோடுங் கூடி நிற்கிற அருளுக்கு உவமை சொன்னுய்.நெருப்பு விறகைச் சுட்டுப் போடுகையினுல் அது அர்த்தமன்று.இதன்றியும்—உப்பளத்து அடுத்த புற்பலாலங்கள் சடத்தவேனுங் கொடுத்தது கொள்ளுந் தன்மையுண்டு உனக்கு இன்மையதன்றே - அளத்திலே கூடின புல்லும் வைக்கோலுஞ் சடமாயிருந்ததாயினும் அவையிற்றுக்குக் கொடுத்தது கொள்ளுந் தன்மை யுண்டு; உனக்குக் கொடுத்தது கொள்ளுந் தன்மை யுண்டாகாது. இதன்றியும்—அவமுறு கருவி சிவமயமாம் எனக் கூறினை - அசுத்த மாயையிலேநின்றுந் தோன்றப்பட்டுப் பொல்லாங்குகளுக்கு ஏதுவாயிருக்கிற இந்தக் கருவிகளைச் சிவசொரூபமாமென்று உன் மதத்திலே சொன்னுய்—தாகம் வேறு உருக் கவராது - அது இந்தச் சரீரத்தோடு உண்டாகிய ஆசை நீ சொன்னுய். அதொழிந்து அந்தச் சிவசொரூபஞ் சுத்த நின்மலமாயும் இந்த மாயா ரூபம் மலமாயுமிருக்கையால் இது அதுவாகாது—என்பதென் அவை முன் றுன்பந் துடைக்குந் திருவருள் மருவ உரியன என்னில் - என்று நீர் சொன்னதென்னை ? அந்த மாயா கருவிகள் அனுதியே தொன்றுதொட்டு வருகிற செனன துக்கத்தை நீக்கி விடுகிற திருவருளைப் பொருந்தி அருட்சொரூபமாகைக்கு உரியன காணுமென்று

அருளுரு மாயா இருளின தாங்கொல்
சத்தப் பரிச ரூபரச *கெந்தமென்
றெத்திறத் தினதருள் இயம்புக அன்றியும்
நிறைந்து நீயாய் நின்றனை யேனும்
மறைந்தைம் புலனால் வாரா யென்றும்
கரணம் எல்லாங் கடந்தனை என்றும்
மரணம்ஐ யைந்தின் அப்புறத் தென்றும்
முன்னருட் டலைவர் பன்னினர் எனவும்
இனையவை ஒழிய அறிகுவ தெவ்வா
றென்ற நிற்கலிக் கொன்றிய இன்பம்
கூறுதல் தரும்மருட் பேறினை அன்றே

நீ சொல்லில்—அருளுரு மாயா இருளினதாம் கொல் - திருவருளும் மாயையிலே தோன்றப்பட்டிருக்கிற இருட் சொருபங்களிலே ஒன்றாக வேண்டும்—சத்தப் பரிச ரூப ரச கெந்தமென்று எத்திறத்தினது அருள் இயம்புக - சத்தப் பரிச ரூப ரத கந்தங்களோடுங் கூடி இவையிற்றை அறிந்துவருகிறது மாயா கருவிகள், இந்த விஷயங்களுக்கும் மனம்வாக்குக்கும் எட்டாத் திருவருள் எத்தனை தூரம், இதற்கு உத்தரமுண்டானாற் சொல்லுவாயாக—அன்றியும் நிறைந்து நீயாய் நின்றனையேனும் மறைந்து ஐம்புலனால் வாராயென்றும் கரணமெல்லாங் கடந்தனையென்றும் மரணம் ஐயைந்தின் அப்புறத்தென்றும் முன்னருட் டலைவர் பன்னினர் எனவும் இனையவை யொழிய அறிகுவது எவ்வாறு என்ற நிற்கு அலிக்கு ஒன்றிய இன்பங் கூறுதல் தரும் - இதன்றியும் [கைலைபாதி காளத்திபாதி] அந்தாதி [48], 'நிறைந்தெங்கு நீயேயாய் நின்றாலு மொன்றி, மறைந்தைம் புலன்காண வாராய்—சிறந்த, கணியாருந் தண்சோலைக் காளத்தி யாள்வாய், பணியாயா லென்னும் பரிசு' என்றும், திருவாசகம் [திருக்கோத்தும்பி, 9], 'காணங்க ளெல்லாங் கடந்துநின்ற கறைமிடற்றன், சரணங்க ளேசென்று சார்தலுமே தானெனக்கு, மரணம் பிறப்பென் றிவையிரண்டின் மயக்கறுத்த, கருணைக் கடலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ' என்றும், [அப்பர்] திருப்பாட்டு, 'பையஞ் சுடர்விடு நாகப் பள்ளிகொள் வானுளத் தானுங், கையஞ்சு நான்குடை யானைக் கால்விர லாலடர்த் தானும், பொய்யஞ்சி வாய்மைகள் பேசிப் புகழ்

*நறை - பாடபேதம்.

சரு ஏகம் உயிர்அறி வாக மொழிந்தனை
இருபொருள் ஒருமை மருவிய திலதே
இவ்வகை கிடக்க மெய்வகை கேண்மதி.

## ஈசுவரவவிகாரவாதி சங்கற்பம்

பஃறுளைக் கடத்தி னுள்விளக் கேய்ப்ப
அறிவுள தாகும் உருவுறும் உயிர்கள்

---

புரிந் தார்க்கருள் செய்யும், ஐயைஞ்சி னப்புறத் தானும் ஆரு ரமர்ந் தவம் மானே' என்றும் முற்காலத்திலே திருவருளைப் பெற்ற பெரியோர்கள் அருளிச் செய்தார்களென்று நான் சொல்லவும், இந்த இந்திரியங்களை விட்டால் இவனுடைய அறிவு சீவியாதாகையால் அந்த இந்திரியங்களை யின்றித் திருவருளை யறியும் பகுதி எப்படி யென்று கேட்கிற உனக்குச் சொல்லுகிறது ஒருவனும் ஒருத்தியுங் கூடி அனுபவித்த இன்பத்தைத் தான் அனுபவிக்கமாட்டா அலியாயுள்ளவனுக்குச் சொல்லுகிறத்தை யொக்கும்—மருட்பேறினை யன்றே - மாயைக்குள்ளே மயங்கப்பட்டு வருகிற பொருள்களை அறிகிறதுதானே பேருகக் கொண்டாயாகையால் இது அர்த்தமன்று. இதன்றியும்—ஏகம் உயிர் அறிவாக மொழிந்தனை - அருளும் ஆன்மாவுங் கூடின விடத்து இரண்டும் ஒன்ருய் விடுமென்று நீ சொன்னுய்—இருபொருள் ஒருமை மருவிய திலதே - இந்தப் பிரபஞ்சத்திலே ஒரு முதல் கெட்டு ஒரு முதலாகுதல் அல்லது இரண்டு முதலாகுதலொழிந்து இரண்டு முதல் கூடி ஒரு முதலாய் நிற்கு மென்பது உண்டாகாது. ஆகையால் அருளும் ஆன்மாவுங் கூடி ஒரு முதலாய் நிற்குமென்பது உண்டாகாது. ஆகையால் அருளும் ஆன்மாவுங் கூடி ஒன்ருய் நிற்குமென்பது அர்த்தமாகாது—இவ்வகை கிடக்க மெய்வகை கேள்மதி - இங்ஙனம் நீ பலவகையாகச் சொன்ன அர்த்தங்களைப் போட்டு நான் சொல்லப் போகிற சத்தியத்தைப் புத்திபண்ணிக் கேட்பாயாக. மதியென்றது அசை.

மேல் ஈசுரவவிகாரவாதி தன் மதம் கூறுகின்ருன் :

பல் துளைக் கடத்தினுள் விளக்கு ஏய்ப்ப அறிவுளதாகும் உருவுறும் உயிர்கள் - பல துவாரத்தோடுங் கூடியிருக்கிற குடத்துக்குள்ளே ஏற்றிவைத்த விளக்கினைப் போல நவத்துவாரங்களோடுங்

கண்ணா லோசையுங் கரணமுங் கருத
வொண்ணா தென்னும் உணர்வுடை மையினால்
அவ்வவ புலன்கட் கவ்வவ பொறிகள்
செவ்விதின் நிறுவிச் சேர்ந்தவை நுகரும்
மூல மலத்தின் பாகம்வந் துதவுழி
இருள்தரும் இற்புக் கொருபொருள் கவரத்
தீபம் வேண்டு மானவா போல
மோக மாமலம் போக ஞான
விளக்கரன் அருளால் துளக்கறப் பெற்று
நீர்நிழ லனைய சீர்பெறு கடவுளைச்

---

கூடியிருக்கிற சரீரத்துக்குள்ளே நிற்கிற ஆன்மாக்களும் அறிவேயா யிருக்கும்—கண்ணால் ஓசையும் கரணமும் கருதவொண்ணாது என்னும் உணர்வுடைமையினால் - கண்ணைக் கொண்டு ரூபத்தைக் காணும தொழிந்து சத்தத்தையும் பரிசத்தையும் கெந்தத்தையும் இரதத்தையும் அறிய வொண்ணாதென்கிற அறிவு இந்த ஆன்மாவுக்கு உள்ளதா யிருக்கையினாலே—அவ்வவ புலன்கட்கு அவ்வவ பொறிகள் செவ்விதின் நிறுவிச் சேர்ந்தவை நுகரும் - இந்த ஆன்மாத் தனக்குக் கொள்ளவேண்டின அந்தந்த விஷயங்களுக்கேற்ப அந்தந்த இந்திரியங்களை மாறுபாடற நிறுத்தி அவையிற்றிலே பொருந்தப்பட்டு வருகிற விஷயங்களைப் பொசியாநிற்கும். இது பெத்தம்.

மேல் முத்தி : மூலமலத்தின் பாகம் வந்து உதவுழி - இப்படிக் கன்மத்தைப் பொசித்துக்கொண்டு வருகிற அதனாலே ஆணவ மலத்தினுக்குப் பாகம் வந்து உண்டானவிடத்து—இருள்தரும் இல்புக்கு ஒரு பொருள் கவரத் தீபம் வேண்டுமானவா போல - இருண்டுகொண்டிருக்கிற வீட்டுக்குள்ளே சென்று ஒரு பதார்த்தத்தை எடுக்க வேண்டினவிடத்து ஒரு விளக்கை முன்னிட்டுக்கொண்டு சென்று அந்தப் பதார்த்தத்தை யெடுத்த தன்மைபோல—மோகமாமலம் போக ஞான விளக்கு அரனருளால் துளக்கறப் பெற்று - இந்த ஆன்மாத் தனக்கு உண்டாகிய அஞ்ஞான இருளாகிய ஆணவமலம் நீங்கத்தக்கதாக ஞானமாகிய தீபத்தைச் சிவனுடைய அனுக்கிரகத்தினாலே அசைவறப் பெற்று—நீர் நிழல் அனைய சீர்பெறு கடவுளை - தண்ணீரைப்போலவும் நிழலைப்போலவும் ஒருவாளவினும் பக்ஷப் பிரதிபக்ஷமின்றி மிக்க சிறப்

௬௦ சலம்இல ளுகிச் சார்ந்தவர்க் கென்றும்
நலம்மிக நல்கும் நாதனை அணைந்து
பூழி வெம்மை பொருந்தா துயர்ந்த
நீழல் வாழும் நினைவினர் போலத்
திருவடி நீழல் சேர்ந்து
௬௫ கருவுறு துயரங் களைந்திருந் திடுமே. கரு

---

## கக. ஈசுவரவவிகாரவாதி நிராகரணம்

இருந்ததுன் கேள்வி திருந்திடும் உயிர்கள்
அறிவின வாயிற் பொறிபுலன் என்னை

---

பிளுேடுங்கூடிக்கொண்டிருக்கிற கர்த்தாவை—சலம் இலளுகிச் சார்ந்தவர்க்கு என்றும் நலம் மிக நல்கும் நாதனை அணைந்து-அப்படிப் பக்ஷப்பிரதிபக்ஷமில்லாம விருக்கச்செய்தேயுந் தன்னை வந்து பொருந்தின பக்குவப்பட்ட ஆன்மாக்கள் பொல்லாங்கைச் செய்தார்களாயினும் அது தனது திருவுளத்திற் காணுமல் அவர்களுக்கு வேண்டின நன்மைப் பகுதிகளை மிகவுங் கொடுக்குஞ் சுவாமியாயுள்ளவனைச் சென்று கூடி—பூழி வெம்மை பொருந்ாது உயர்ந்த நீழல் வாழும் நினைவினர்போல - மத்தியானகாலத்திலே வழி நடந்தவர்களுக்கு அந்த வழியிலுண்டாகிய பொடிச்சூடு நீக்கத்தக்கதாக உயர்ந்த மரத்தின் நிழலிலே வந்து பிரியப்பட்டிருக்கிற நினைவினை யுடையவர்களைப்போல—திருவடி நீழல் சேர்ந்து கருவுறு துயரம் களைந்திருந்திடுமே - இந்த ஆன்மா கர்த்தாவினுடைய திருவடிநீழலைப் பொருந்தித் தனக்கு உண்டாகிய செனன துக்கங்களையெல்லாம் நீக்கிக்கொண்டிருக்கும். கரு

மேற் பரிணுமவாதி மறுக்கிறுன் :

**(உரை)** இருந்தது உன் கேள்வி - இப்படி யிருந்தது நீ கேட்ட கேள்வி. நான் சொன்னதற்குக் குற்றமென்னை?—திருந்திடும் உயிர்கள் அறிவினவாயின் பொறிபுலன் என்னை - ஆன்மாவென்று ஒரு முதல் காணப்படாம விருக்கச்செய்தே நீ உண்டென்று சொல்லப்பட்ட உயிர்கள் அறிவிளுேடுங் கூடியிருந்ததாமாயிற் சத்தாதி விஷயங்களைக் கொள்ளுகைக்கு இந்திரியங்கள் வேண்டுவதில்லை. இந்திரியங்களைக் கொண்டு அறிகையினுலே ஆன்மாவுக்கு அறிவில்லையென்பது

மற்றவை பற்றி உற்றறிந் திடுதலின்
அறிவென வழங்கும் உயிர்என உரைத்தல்
காணுங் கண்ணினன் கைகொடு தடவிப்
பூணும் பொருளின் பெயர்பல புகறல்
என்னுங் கிளவி தன்னொடு தகுமே
அவ்வவ புலன்கட் கவ்வவ பொறிகளைச்
செவ்விதின் நிறுவலின் அறிவெனச் செப்பினை
அறிவி லாமைகண் டனம்அணை புலற்குப்
பொறிகள் ஏவலின் அறிவொடு பொருந்தில்

---

கருத்து. அப்படியன்று—மற்று அவைபற்றி உற்றறிந்திடுதலின் அறிவென வழங்கும் உயிர் என உரைத்தல் - அந்த இந்திரியங்களை ஆன்மா பொருந்தி ஒரு விஷயங்களை உற்றறிந்து வருகையினாலே இந்த ஆன்மாவை அறிவென்று சொல்லப்படுமென்று நீ சொல்லுகிறது—காணுங் கண்ணினன் கைகொடு தடவிப் பூணும் பொருளின்பெயர் பல புகறல் என்னுங் கிளவி தன்னொடு தகுமே-கண்ணிரண்டுங் கொண்டு காண்பானொருத்தன் கண்ணைக்கொண்டு பார்த்துப் பதார்த்தங்களைச் சொல்லாமற் கைகளைக் கொண்டு தடவிக் கைகளிலே தட்டின பண்டங்களினுடைய பல பெயர்களையுஞ் சொன்னான் என்கிற சொல்லோடொக்கும், ஆன்மா அறிவா யிருக்கச்செய்தே தான் விஷயங்களைக் கொள்ளமாட்டாமல் இந்திரியங்களைக் கொண்டு விஷயங்களைக் கொண்டதென்று நீ சொல்லுகிற இது. இதன்றியும்—அவ்வவ புலன்கட்கு அவ்வவ பொறிகளைச் செவ்விதின் நிறுவலின் அறிவெனச்செப்பினை - ஆன்மாவுக்குக் கொள்ளவேண்டின அந்தந்த விஷயங்களுக்கேற்ற அந்தந்த இந்திரியங்களை மாறுபாடறச் செவ்வையிலே நிறுத்திக்கொள்ளுகையினாலே ஆன்மாவை அறிவென்று உன்னுடைய மதத்திலே நீ சொன்னாய்—அறிவிலாமை கண்டனம்-இதுகொண்டே ஆன்மாவுக்கு அறிவில்லையென்றது கண்டோம். அது ஏனென்னில், தான் அறிவா யிருக்கச்செய்தே தனக்குக் கொள்ளவேண்டின விஷயத்துக்குப் பொறிகளை ஏவுதலினாலே—அணைபுலற்குப் பொறிகள் ஏவலின் அறிவொடு பொருந்தில் - மற்றுஞ் சடமாயுள்ளதொன்று இந்திரியங்களைக் கொண்டு ஒரு விஷயங்களை யறியப்பெற்றோ மில்லையே; ஆகையால் தன்னொடு பொருந்தவேண்டின விஷயங்களுக்கேற்ற

கண்டதோர் பொறியாற் கொண்டிட வேண்டும்
உதவிய தொன்றாற் கதுமென இயற்றினர்
உண்டோ என்னிற் கண்டது மேல்நாள்
கடவுளிற் கடிமலர் முடுகிய மதனன்
அங்கம் அனங்கம் தங்கிடக் கிடந்தது
வையின் திரளிற் செய்ய சிறுபொறி
மாட்டி மூட்டிய தன்றே மீட்டுந்
தேனமர் தவிசில் நான்முகன் உச்சி
அறுத்ததும் கருவி பொறுத்தோ அன்றே

---

இந்திரியங்களை ஏவிக்கொள்ளுகையினாலே ஆன்மா அறிவோடுங்கூடி யிருக்குமென்று நீ சொல்லில்—கண்டதோர் பொறியாற் கொண்டிட வேண்டும் - ஆன்மா அறிவேயாகில் அந்த அவதாரத்துக்குக் கிட்டினதொரு இந்திரியத்தைக்கொண்டு தனக்கு வேண்டின விஷயத்தைப் பொசிக்கவேண்டும்; அது இல்லாதபடியாலே ஆன்மா அறிவன்று— உதவியதொன்றாற் கதுமென இயற்றினர் உண்டோ என்னில்-சோத்திரத்தைக்கொண்டு சத்தத்தைக் கொள்ளுவதொழிந்து யாதொன்றுங் கிட்டின இந்திரியங்களைக் கொண்டு சடக்கென ஒரு தொழிலைச் செய்தவர்களும் இந்தப் பூமியிலே உண்டோவென்னில்—கண்டது - அப்படிக் கண்டது உண்டு. அது எங்கே காணப்பட்டதென்னில்— மேல்நாள் கடவுளிற் கடிமலர் முடுகிய மதனன் அங்கம் அனங்கம் தங்கிடக் கிடந்தது வையின் திரளிற் செய்ய சிறுபொறி மாட்டி மூட்டியதன்றே - முற்காலத்திலே கர்த்தா யோகத்திலே எழுந்தருளியிருக்க அவனிடத்திலே மன்மதனானவன் அந்த யோகத்தைக் குலைக்கவேண்டித் தன்னுடைய மணம்பொருந்தின புஷ்ப பாணங்களைக் கொண்டு கிட்டினபொழுது அவனுடைய சரீரமானது அசரீரம் பொருந்தத் தக்கதாகச் சாம்பலாய்ப் போய்விட்டது கண் கொண்டு செய்த தொழிந்து அவன் மேலே வைக்கோற்றிரையைக் கொண்டு வந்து குவித்துச் சிவந்திருக்கிற சிறிய நெருப்புப் பொறியை நயந்த வைக்கோலிலே மாட்டி ஊதி யெரித்த தல்லவே—மீட்டும் - இதன்றியும்— தேனமர் தவிசில் நான்முகன் உச்சி அறுத்ததுங் கருவி பொறுத்தோ அன்றே - வண்டுகள் பொருந்தப்பட்டிருக்கிற தாமரைத் தவிசிலே யிருக்கிற பிரம்மாவினுடைய நடுவிற் சிரசைக் கையில் நகங்கொண்டு

ஈசனது இயல்பு பேசுதல் தவிர்க
காழி மாநகர்க் கவுணியர் கடவுள்
ஞான மாகிய நற்பதி கங்கள்
எழுதுறு மன்பர்தம் இன்புறு மொழியால்
களிறெனை அணைந்த கல்மனப் புத்தன்
முருட்டுச் சிரமொன்று உருட்டினர் அன்றி
வாய்ந்த வாளொன்று ஏந்தினர் இலரே
என்றதும் ஈர்வாள் கொன்றதென் பதுபோல்
தனித்துணை அருளால் துணித்தனர் என்பர்

---

கிள்ளிப்போட்ட தொழிந்து ஒரு வாட்கொண்டு அறுத்துப்போட்ட தில்லையே. ஆகையால் ஆன்மாவுக்கு அறிவுண்டாகாது—ஈசனது இயல்பு பேசுதல் தவிர்க - நான் ஆன்மாக்களுக்குச் சொல்ல நீர் கர்த்தாவைக் கொண்டுவந்து சொல்லலாமோ அதை விடும், ஆன்மாக்களிலே யுண்டாகிற சொல்லும்—காழிமா நகர்க் கவுணியர் கடவுள் ஞானமாகிய நற்பதிகங்கள் எழுதுறும் அன்பர்தம் இன்புறு மொழியாற் களிறெனை அணைந்த கல்மனப் புத்தன் முருட்டுச் சிரமொன்று உருட்டினரன்றி வாய்ந்த வாளொன்று ஏந்தினர் இலரே - சீகாழியென்கிற பெரிய நகரியிடத்துண்டாகிய கவுணிய கோத்திரத்துள்ளவர்களெல்லார்க்குந் தலைவராயுள்ள நல்ல சம்பந்தராலே அருளிச்செய்யப்பட்ட ஞானமாயிருக்கிற நல்ல திருப்பதிகங்களைக் கைத்திருவெழுத்துச் சாத்துகிறதே விரதமாகக் கொண்டுள்ள மிகவும் பத்திமானாயிருக்கிற சம்பந்தசரணாலயருடைய இனிய வாக்கினாலே மதத்த யானையைப் போல வாது செய்யவேண்டுமென்று எதிர்த்து வந்த புத்தனுடைய மொட்டைத் தலை உருண்டு விழத்தக்கதாகச் செய்தது வாக்குக்கொண்டல்லது கூர்மை பொருந்தி யிருக்கிறதொரு வாளை யெடுத்துக்கொண்டல்லவே. ஆகையாலே ஆன்மாக்களுங் கண்டதோர் பொறியாற் கொண்டிட வல்லர்களென்று சொல்லும்—என்றதும் ஈர்வாள் கொன்றதென்பதுபோல் தனித்துணை யருளால் துணித்தனர் என்பர்- என்று இப்படி இவர் செய்தாரென்று சொல்லப்பட்டதும் இந்த ஈர்வாள் எத்தனை பேரைக் கொன்றதென்றால் வாட்கொன்றதாகாமல் அந்த வாளைக்கொண்டு ஒருத்தன் கொன்றதானாற்போல ஒப்பில்லாத கர்த்தாவினுடைய அனுக்கிரகத்தினாலே புத்தனுடைய தலையைத்

ஆதலின் வாயில் அளவினில் அறிதலின்
ஏதமில் அறிவுயிர்க் கெய்துதல் இலதே
இருட்கு விளக்கொன்று ஏந்தினர் போல
மருட்கு ஞானம் மன்னுதல் உன்னும்
என்றனை கருவிகள் யாவும் அசேதனம்
துன்றிய உயிருந் துரியத் தண்மையன்
ஆதலின் அந்தர் அனைவரும் கூடித்
தீதற அருநெறி தெரியுமென் றற்றே
நீர்நிழல் அனைய சீர்பெறு கடவுளைச்

---

துண்டித்துப் போட்டாரொன்று பெரியோர்கள் சொல்லுவார்கள்—ஆதலின் வாயில் அளவினில் அறிதலின் ஏதமில் அறிவு உயிர்க்கு எய்துதல் இலதே - ஆகையினால் இந்திரியங்களினுடைய எல்லையிலே நின்றறிந்து வருகையினாலே குற்றமற்றிருக்கிற அறிவு ஆன்மாவுக்குப் பொருந்துதல் உண்டாகாது. இது பெத்தத்தை மறுத்தது.

மேல் முத்தியை மறுக்கிறான்: இருட்கு விளக்கொன்று ஏந்தினர்போல மருட்கு ஞானம் மன்னுதல் உன்னு என்றனை - இருளினிடத்திலே ஒரு பண்டம் எடுக்க வேண்டினவர் கையிலே விளக்கைப் பிடித்துக்கொண்டு சென்று அந்தப் பண்டமெடுத்தாற்போல இவனுடைய அஞ்ஞான இருள் நீங்குதற்கு ஞான விளக்கு நிலைபெற்று நிற்கத் தக்கதாகக் கர்த்தா அனுக்கிரகஞ் செய்யுமென்று நீ சொன்னாய்—கருவிகள் யாவும் அசேதனம் துன்றிய உயிரும் துரியத்து அண்மையன் - கருவிகள் முப்பத்தாறையும் விசாரித்துப் பார்க்குமிடத்துச் சுத்தச் சடமாயிருப்பதொன்று, அஞ்ஞானத்தினாலே நெருங்கியிருக்கிற ஆன்மாவின் தன்மையை விசாரித்துப் பார்க்குமிடத்துத் துரியத்துக்கு அண்மையன், எனவே துரியாதீதத்திலே நிற்பானொருத்தன்—ஆதலின் அந்தரனைவரும் கூடித் தீதற வருநெறி தெரியுமென்றற்றே - ஆகையால் இவை தன்னிற் கூடித் திருவருளைப் பெற்று அது காட்டாகச் சிவனைப் பெறுமென்கிறது, அனேகங் குருடர் தம்மிற் கூடிக் குற்றமற்றிருக்கிறதொரு பெருவழியைக் கண்டு அந்த வழியே போய் ஒரூரிலே சென்று தலைப்பட்டார்களென்று சொல்லுகிறதுக்கொக்கும். இதன்றியும்—நீர் நிழல் அனைய சீர்பெறு கடவுளைச் சேர்ந்தவர்க்கு இன்பம் வாய்ந்திடுமென்றனை -

சேர்ந்தவர்க் கின்பம் வாய்ந்திடும் என்றனை
பாதவம் என்றும் சேதனம் இன்மையின்
இளைத்தோர் வம்மின் என்பதும் துன்பம்
விளைத்தோர் தம்வயின் வெறுப்புமொன் றிலதே
பொடித்திடு கொப்புள் வெடித்திடு பாதம்
வெய்ய பூழியின் *உள்ளுற அழுங்கி
ஆற்றுதல் இன்றி யாறியங் குநர்முன்
தோற்றிடும் என்று சொல்லவும் இலதால்
இவ்வகை கடவுட் கியம்புதல் தவறே

---

நீரைப்போலவும் நிழலைப்போலவும் பக்ஷப்பிரதிபக்ஷமின்றி யிருக்கிற சிறப்போடுங் கூடியிருந்துள்ள கர்த்தாத் தன்னைவந்து கூடின பக்குவான்மாக்களுக்குப் பேரின்பம் உண்டாகத்தக்கதாக அனுக்கிரகஞ் செய்யுமென்று நீ சொன்னாய்—பாதவம் என்றும் சேதனமின்மையின் இளைத்தோர் வம்மினென்பதும் துன்பம் விளைத்தோர் தம்வயின் வெறுப்பும் ஒன்றிலதே - மரமானது ஒருக்காற் சடமாயும் ஒருக்காற் சித்தாயும் இராமல் எப்பொழுதுஞ் சடமாயிருந்தபடியாலே வெயிலாலுந் தண்ணீர்த் தாகத்தாலும் இளைத்துப் போகிறவர்களை ஐயோ இங்கே வாருங்கோள் என்னுடைய நிழலிலே யிருந்து இளைப்பாறிப் போங்கோளென்று பிரியப்பட்டுச் சொல்லுவதுமில்லை, தன்னை அடியோடே வெட்டிச் சாய்த்துப் போட்டவர்களளவில் ஐயோ இப்படிச் செய்தார்களென்று அகிதப்பட்டதுமில்லை. இதன்றியும்—பொடித்திடு கொப்புள் வெடித்திடு பாதம் வெய்ய பூழியின் உள்ளுற அழுங்கி ஆற்றுதலின்றி ஆறு இயங்குநர் முன் தோற்றிடுமென்று சொல்லவும் இலதால் - உள்ளங்காலிலே கொப்புட்கொண்டு அது உடைந்த வாயிலே சுடுகிற புழுதியிலே பட்டழுந்தி அதனாலே ஆற்றமாட்டாமல் எங்கே தண்ணீர் காண்போம் எங்கே ஒருநிழற் காண்போமென்று மத்தியானத்திலே வழியிலே நடந்துவருகிறவர்கள் முன்னே மரமானது சென்று தோன்றி அவர்கள் விதனத்தைத் தீர்த்துவிட்டதென்கிற சொல்லும் இதற்கு இல்லாதபடியாலே—இவ்வகை கடவுட்கு இயம்புதல் தவறே - நீரும் நிழலும் போலுமென்கிற அவிகாரவாதம் கர்த்தாவுக்கு நீ சொன்னது மிகவும் பழுதாம். ஆகையால்—

*நொய்யென - பாடபேதம்.

*பாச அஞ்ஞானப் பழிவழி ஒழிக
ஈசன தருள்வழி இயம்புவன் கேண்மதி.

## நிமித்தகாரணபரிணாமவாதி சங்கற்பம்

புவனம் யாவையும் புனிதன துருவாம்
சிவமுஞ் சத்தியும் எனத்தெளி அவற்றுள்
அசேதனம் என்றொன் றறைதற் கிலதது
சேதனன் நுகர்பொழு திரண்டும்ஓர் திறத்தே
இதுவெனும் ஒன்றை அதுவாய்ப் படுத்துப்
பொதுமையில் நிற்கும் போதம்என் றறிக
பொற்பணிப் பேதம் புரைவழி ஒருவழி

---

பாச அஞ்ஞானப் பழிவழி யொழிக ஈசனது அருள்வழி இயம்புவன் கேண்மதி - சரீரசம்பந்தமும் நீங்காமற் கர்த்தாவையும் அவிகாரவாதஞ் சொன்ன இந்தக் குற்றத்தை யுடைத்தாகிய முத்திநெறியை விட்டு ஞான கர்த்தாவினுடைய திருவருளின் வழியைச் சொல்லுகிறேன். நீ புத்தி பண்ணிக் கேட்பாயாக. மதியென்றது அசை. ௧௬

மேல் நிமித்தகாரணபரிணாமவாதி தன் மதம் கூறுகின்றான் :

புவனம் யாவையும் புனிதனது உருவாம் சிவமும் சத்தியும் எனத் தெளி - இந்தப் பிரபஞ்சமாகக் காணப்பட்ட உலகங்கள் இத்தனையுஞ் சிவசொரூபமாயிருப்பதொன்று, இதில் திரிசியமாயுள்ளதெல்லாஞ் சத்தியின் கூறென்றும் அதிரிசியமாயுள்ளதெல்லாஞ் சிவத்தின் கூறென்றும் நீ தெளியாயாக—அவற்றுள் அசேதனமென்று ஒன்று அறைதற்கு இலது-அந்த இரண்டு வகைக்குள்ளும் அசேதனமாகச் சொல்லப்பட்டதொரு பொருளுமில்லை—அது சேதனன் நுகர்பொழுது இரண்டும் ஓர் திறத்தே - அதிரிசியமாய் அறிவாயிருக்கிற இவன் அனுபவிக்குமிடத்து அந்த இரண்டு வகையும் ஒரு பகுதியாயிருக்கும்—இதுவெனும் ஒன்றை அதுவாய்ப் படுத்துப் பொதுமையில் நிற்கும் போதம் என்று அறிக- இதுவென்று சுட்டப்பட்டதொரு விஷயத்தை அனுபவிக்குமிடத்து அதே விஷயந் தானேயாய் அந்த அறிவானது தானென்றும் விஷயமென்றும் இரண்டாகாமற் பொதுமையிலே நிற்குமென்று அறிவாயாக. இதன்றியும்—பொற்பணிப் பேதம் புரைவழி யொருவழி - பொன் ஒன்றா யிருக்கச்செய்தே

---

*பாசஞானப் - பாடபேதம்.

நற்பொனில் திகழ்வென் நயப்பதொன் றன்றால்
ஆவதும் ஆகா தொழிவதும் என்றிப்
பாவகம் உண்மை பாரா தோர்க்கே
பாரா தோர்எனப் பகர்தலிற் பல்லுயிர்
ஆராய்ந் துரைக்கின் அவைபிற அல்ல
பலபல பேதம் இலஎன் போரும்இல்
கண்ணின தொளிஅக் கண்ணின தெனில்அது
திண்ணிய இருளிற் செறிபொருள் தெரித்தலும்

---

பொன்னுக்கும் பணிக்கும் பின்னஞ் சொன்னாற்போல அறிவுக்கும் பிரபஞ்சத்துக்கும் ஒருபக்ஷம் இப்படியுஞ் சொல்லலாம்—நற்பொனில் திகழ்வு என் நயப்பதொன் றன்றால் - நல்ல பொன்னினுண்டாகிய மாற்றுப் பணியினிடத்துக் காண்கையாற் பொன்னும் பணியும் ஒரு தானமா யிருக்கப் பொன்னையும் பணியையும் அறிவுக்கும் பிரபஞ்சத்துக்கும் உவமை சொன்னது என்னை யென்று நீ கேட்கில்—ஆவதும் ஆகா தொழிவதும் என்று இப்பாவகம் உண்மை பாராதோர்க்கே - இந்த உவமை ஆம்பகுதி இந்த உவமை ஆகாப்பகுதி யென்று சொல்லுகிற இந்தப் பாவகம் உண்மையைத் தரிசியாதவர்களுக்கா யிருக்கும், உண்மையைத் தரிசித்தவர்களுக்கு எல்லா உவமையும் தானா யிருக்கும். உண்மை பாராதவர்களென்றும் உண்மை பார்த்தவர்களென்றும் சொன்னது கொண்டே அறிவிலே பின்னமுண்டு என்னீர் என்ன—பாராதோரெனப் பகர்தலிற் பல்லுயிர் ஆராய்ந்துரைக்கின் அவை பிற வல்ல - உண்மை தரிசியாதவர்களென்று நான் சொன்னதுகொண்டே நீ ஆன்மாக்களைத் தனியே ஒரு முதலென்று சொல்லிற் பலவாகச் சொல்லப்பட்டு வருகிற ஆன்மாக்களுடைய தன்மையை விசாரித்து நான் சொல்லுமிடத்து அந்த ஆன்மாக்கள் சிவனுக்கு வேறாயிருப்பதொன்றல்ல எல்லாஞ் சிவமுதலென்று அறி. இதன்றியும்—பலபல பேதம் இலவென்போரும் இல் - சிவம் ஒருமுதல், ஆன்மாக்கள் ஒரு முதல், பிரபஞ்சம் ஒரு முதலென்று பலபல பேதங்களாகச் சொல்லுவார்களும் உண்டு, அது சத்தியமன்று. கண் என்று ஒரு முதல் கண்டு வருமாப் போல் ஆன்மா என்று ஒரு முதல் தனித்து அறிந்துவரச் செய்தே இத்தை இல்லையென்பானேன் என்னில்—கண்ணினது ஒளி அக் கண்ணினது எனில் அது திண்ணிய இருளிற் செறிபொருள்

இன்மை மின்மினி யெனஇரு கண்மணித்
தன்மை தானுந் தாவில ததனால்
கண்ணின துருவும் அதிற்கதிர் ஒளியும்
நண்ணருஞ் சத்தி சத்தர்கள் நடிப்பே
உலகேழ் எனத்திசை பத்தென ஒருவன்
பலவாய் நின்ற படிஇது என்றும்
ஊனாய் உயிராய் உணர்வாய் என்றும்
மானக் கண்ணே மணியே என்றும்

---

தெரித்தலும் இன்மை - கண் ஒன்றைக் கண்டு வருகிற காட்சி அந்தக் கண்ணுக்கு உள்ளதாமாயின் அப்படிக்காண்கிற கண் நெருங்கியிருக்கிற இருளுக்குள்ளே பொருந்தியிருக்கிற பண்டங்களில் இது இன்ன பண்டமென்று ஒன்றைக் காணும் பகுதி கண்டோமில்லையே. இதன்றியும்—மின்மினியென இரு கண்மணித் தன்மை தானுந் தாவிலது-ஒரு மின்மினி இருளை நீக்கின மரியாதி இரண்டு கண்ணின் மணியுங் கூடி இருளை நீக்கக் கண்டோமில்லையே—அதனாற் கண்ணினது உருவும் அதிற் கதிரொளியும் நண்ணருஞ் சத்தி சத்தர்கள் நடிப்பே - ஆகையால் கண்ணினுடைய வடிவும் அதினிடத்து ஆதித்தப்பிரகாசத்தால் உண்டாகிய காட்சியும் இவையெல்லாம் மனதினால் எட்டுதற்கரிய சிவம் சத்திகளுடைய நாடகமென்று அறிவாயாக. இது எங்கே காணப்பட்டதென்னில்—உலகு ஏழ் எனத்திசை பத்தென ஒருவன் பலவாய் நின்றபடி இதுவென்றும் - **திருவாசகம்,** ‘ நிலநீர் நெருப்புயிர் நீள் விசும்பு நிலாப்பகலோன், புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்துநின்றா, னுலகே ழெனத்திசை பத்தெனத்தா னொருத் தனுமே, பலவாகி நின்றவா தோணோக்க மாடாமோ’ என்றும்—ஊனா யுயிரா யுணர்வா யென்றும் - [அப்பர்] திருப்பாட்டு, ‘ஊனாகி உயி ராகி யதனுள் நின்ற உணர்வாகிப் பிறவனைத்தும் நீயே ஆனாய், நானேது மறியாதே யென்னுள் வந்து நல்லனவுந் தீயனவுங் காட்டா நின்றாய், தேனாருங் கொன்றையனே நின்றி யூராய் திருவானைக் காவிலுறை சிவனே ஞான, மானாய்நின் பொற்பாத மடையப் பெற்றால் அல்லகண்டங் கொண்டடியே னென்செய் கேனே’ என்றும்— மானக்கண்ணே மணியேயென்றும் - [அப்பர் தேவாரம்] ‘திருவே யென் செல்வமே தேனே வானோர் செழுஞ்சுடரே செழுஞ்சுடர்நற்

தாமே தானுச் செய்தனன் என்றும்
நாமே சிவமாய் நண்ணினம் என்றும்
காயாய்ப் பழமாய்ச் சுவையாய் நுகர்வும்
ஓயா துண்போன் தானே என்றும்
அறிவோன் தானும் அறிவிப் போனும்
அறிவாய் அறிகின் றோனும் அறிவுறு
மெய்ப்பொருள் தானும் வியந்திது வெனப்படும்
அப்பொருள் யாவும் அவனே என்றும்

---

சோதி மிக்க, உருவேயென் னுள்ளுறவே ஊனே ஊனி னுள்ளமே உள்ளத்தி னுள்ளே நின்ற, கருவேயென் கற்பகமே கண்ணே கண்ணிற் கருமணியே மணியாடு பாவாய் காவாய்,அருவாய வல்வினைநோய் அடையா வண்ணம் ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே' என்றும்—தாமே தானுச் செய்தனன் என்றும் - [சம்பந்தர் தேவாரம்] 'பத்திப்பேர் வித்திட்டுப் பரந்தவைம் புலன்கள்வாய்ப் பாலே போகாமேகாவாப் பகையறும் வகைநினையா, முத்திக்கே விக்கத்தே முடிக்குமுக்கு ணங்கள்வாய் மூடா ஊடா நாலந்தக் கரணமு மொருநெறியாய்ச், சித்திக்கே யுய்த்திட்டுத் திகழ்ந்தமெய்ப் பரம்பொருள் சேர்வார்தாமே தாமாகச் செயுமவ னுறையுமிடங், கத்திட்டோர் சட்டத்தங் கலந்திலங்கு நற்பொருள் காலேயோவா தார்மேவுங் கழுமல வளநகரே'என்றும்—நாமே சிவமாய் நண்ணினமென்றும்-திருவாசகம் 'அவமாய தேவ ரவகதியி லழுந்தாமே, பவமாயங் காத்தென்னை யாண்டுகொண்ட பரஞ்சோதி, நவமாய செஞ்சுடர் நல்கும் பண்டை நாமொழிந்து, சிவமாய வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ' என்றும்—காயாய்ப் பழமாய்ச் சுவையாய் நுகர்வு மோயாதுண்போன் றானேயென்றும் - திருப்பாட்டு, 'தீயாகி நீராகித் திண்மையாகித் திசையாகி அத்திசைக்கோர் தெய்வமாகித், தாயாகித் தந்தையாய்ச் சார்வுமாகித் தாரகையும் ஞாயிறுந்தண் மதியு மாகிக், காயாகிப் பழமாகிப் பழத்தி னின்ற இரதங்கள் நுகர்வானுந் தானே யாகி, நீயாகி நானாகி நேர்மையாகி நெடுஞ்சுடராய் நிமிர்ந்தடிகள் நின்ற வாறே' என்றும்—அறிவோன்தானும் அறிவிப்போனும் அறிவாய் அறிகின்றோனும் அறிவுறு மெய்ப்பொருள் தானும் வியந்திது எனப்படும் அப்பொருள் யாவும் அவனே என்றும் - [அற்புதத்திரு]அந்தாதி, 'அறிவா

*தாய்தலைப் பட்டங் கொன்றாய்த் தென்றும்*
*ஏத மறநான் கெட்டேன் என்றும்*
*இன்னும் இன்னும் இறையோர் அளித்தவை*
*பன்னில் எண்ணரும் பான்மைத் தாதலின்*
*தருபொருள் கொள்பொருள் தருவோன் கொள்வோன்*
*ஒருபொருள் இவ்வியல் உவப்பென உணர்க*
*நுகர்பொருள் சத்திது நுகர்வோன் சத்தன்என்*
*றிகலறும் உணர்வுவந் தெய்துதல் அரிதே*

---

*னுந் தானே அறிவிப்பான் தானே, அறிவாய் அறிகின்றான் தானே— அறிகின்ற, மெய்ப்பொருளுந் தானே விரிசுடர்பா ராகாச, மப்பொரு ளுந் தானே யவன்' என்றும்—தாய்தலைப் பட்டங் கொன்றாய்த்து என்றும் - [கருவூர்த்தேவர்]* **திருவிசைப்பா,** *'மோதலைப்பட்ட கடல்வயி னுதித்த முழுமணித் தரளம தாங்கே, தாதலைப் பட்டங் குருகியொன் றான தன்மையி னென்னைமுன் னீன்ற, நீதலைப் பட்டால் யானுமவ் வகையே நிசிசர ரிருவரோ டொருவர், காதலிற் பட்ட கருணையாய் கங்கை கொண்டசோ ளேச்சரத் தானே' என் றும்—ஏதமற நான் கெட்டேன் என்றும் -* **திருவாசகம்,** *'வான்கெட்டு மாருத மாய்ந்தழல்நீர் மண்கெடினுந், தான்கெட்ட லின்றிச் சலிப் பறியாத் தன்மையனுக், கூன்கெட் டுயிர்கெட் டுணர்வுகெட்டென் னுள்ளமும்போய், நான்கெட்ட வாபாடித் தெள்ளேணங் கொட்டா மோ' என்றும்—இன்னும் இன்னும் இறையோர் அளித்தவை பன்னில் எண்ணரும் பான்மைத்து - முதலே சொல்லி வந்த திருவாக்குக்களன்றி இன்னமும் மேலும் அனுக்கிரகம் பெற்ற அடியார்கள் அருளிச்செய்த செயல்களைச் சொல்லுமிடத்து எண்ணிறந்த பகுதியை புடைத்து—ஆதலின் தருபொருள் கொள் பொருள் தருவோன் கொள்வோன் ஒரு பொருள் இவ்வியல் உவப் பென உணர்க - ஆகையால் ஒருவன் ஒருத்தனுக்குக் கொடுக்கிற பொருள், தான் கொள்ளுகிற பொருள், ஒரு பொருளைக் கொடுக்கிற வர்கள், அந்தப் பொருளைக் கொள்ளுகிறவர்கள் அவையெல்லாம் ஒரு பொருளாயிருக்கும். அந்த முறைமையுள்ளதாகிய அர்த்த மென்ற றிந்து பிரியப்படுவாயாக. ஆகையால்—நுகர்பொருள் சத்து இது நுகர் வோன் சத்தன் என்று இகலறும் உணர்வு வந்து எய்துதல் அரிதே -*

நான்அவன் எனும்இது நவைவழி நல்வழி
தான்அவன் ஆகை இதுசா யுச்சியம்
இத்திறன் தெளிய உய்த்திடு மளவும்
யாதொரு வகையால் நீதிய தாகத்
தான்அறி வழியே தலைநின் றென்றும்
ஊன்உயிர் சிவத்தில் ஒடுங்கிட நடத்தி
மூடு முழுமலம் வீடுங் காலைக்
கருவிகள் அளவில் புரிதரும் அறிவு

---

இது இவனாற் பொசிக்கப்பட்டிருக்கிற சத்தாதி விஷயங்களும் சைதன்னியம், அந்த விஷயங்களைப் பொசிக்கிற இவனும் சைதன்னியன், இவையிரண்டும் வேறல்லவென்று மாறுபாடற அறிகிற அறிவு ஒருவனுக்குண்டாகிறது மிகவும் அரிது. இது பெத்தம்.

மேல் அவனது முத்தி: நான் அவன் எனும் இது நவைவழி நல்வழி தான் அவன் ஆகை இது சாயுச்சியம் - ஆன்மாவும் தனியே ஒருமுதல் சிவமும் தனியே ஒரு முதல் என்று இங்ஙனஞ் சங்கற்பித்துக் கொண்டு நிற்கிறது குற்றத்தை யுடைத்தாகிய வழியாயிருக்கும், நல்வழியாகச் சொல்லப்படுவது தான் ஒரு முதலறச் சிவமுதலேயாய் நின்று வருகை, சாயுச்சிய மென்று சொல்லுவது இப்படிச் சரித்துக் கொண்டு வருகிறதாக இருக்கும்—இத்திறன் தெளிய உய்த்திடு மளவும் - இப்படி நான் சொன்ன உண்மை இவனுக்கு அறுதிவரத் தக்கதாக இவன் போதஞ் செலுத்துமளவும்—யாதொரு வகையால் நீதியதாகத் தான் அறி வழியே தலைநின்று - மக்கள் ஒக்கல் சம்ஸாரத்தோடுங் கூடியிருப்பனாகிலும், அவையிற்றை விட்டுத் தான் அறிவனாகிலும் தான் நின்றது நீதியாகக் கொண்டு இது நமக்கு முத்திக்கு வழியென்று தன்னுடைய போதத்துக்குத் தோன்றின வழியிலே தலைநின்றுகொண்டு—என்றும் ஊன் உயிர் சிவத்தில் ஒடுங்கிட நடத்தி - நனவிலுங் கனவிலும் இந்த உடம்பையும் உயிரையும் சிவத்துக்குள்ளே ஒடுங்கத்தக்கதாக இவையிற்றினுடைய தோற்றமற நடத்திக்கொண்டு வரக்கடவன்—மூடு முழுமலம் வீடுங்காலை - இதனாலே ஒன்றையும் அறிய வொட்டாமற் பொதிந்துகொண்டு நின்ற ஆணவ மலமானது நீங்கின அவதரத்து—கருவிக ளளவிற் புரிதரும் அறிவு சாக்கிரங் கனவு நீக்கமில் சுழுனை துரியமென்று இவை பயில்தரும்

சாக்கிரம் கனவு நீக்கமில் சுழுனை
துரியம் என்றிவை பயில்தரும் அறிவு
துரியா தீதம் திரியாத் தன்மையில்
இறையருள் உதவும் கறையற மாறி
அறிவே யாகும் பிறியாக் கருவிகள்
நிறைமுதல் அவத்தையில் அறிவில தாகத்
துரியா தீதந் தோற்றத்
திரியா ததுநற் சிவகதித் திறனே. கக

## கஉ. நிமித்தகாரண பரிணாமவாதி நிராகரணம்

திறம்பெற நீஇங் கறைந்தமை கருதில்
புவனம் யாவையும் புனிதன தருளனில்

---

அறிவு - சாக்கிரஞ் சொற்பனம் சுழுத்தி துரியமென்று சொல்லப்பட்ட நாலு அவதரத்திலும் அறிகிற அறிவுகருவிகள் அந்த அவத்தைகள்தோறும் ஏற்றக்குறைச்சல்களாக நின்று அறிகிறதா யிருக்கும். ஆகையால் இந்தக் கருவிகளெல்லாங் கழன்று ஒன்றும் அறியாமற் கிடக்கிற அவதரம் துரியாதீதம். இது கேவலம்.

துரியாதீதம் திரியாத் தன்மையில் இறையருள் உதவுங் கறையற மாறி அறிவேயாகும் - இந்தத் துரியாதீதமாயிருக்கிற ஐஞ்சாம் அவத்தை இவனை விட்டு நீங்காமல் நிற்கிற அவதரத்திலே கர்த்தாவினுடைய திருவருளானது கருவிகளைக் கூட்டி இவனுடைய போதத்தைச் சீவிக்கப்பண்ணும் பொழுது ஆணவமலமானது நீங்கிக் கருவிகளோடுங் கூடி அறிவாக நிற்கும். இது சகலம்.

மேல் சுத்தாவத்தை : பிறியாக் கருவிகள் நிறை முதல் அவத்தையில் அறிவிலதாகத் துரியாதீதந் தோற்றத் திரியாதது நற்சிவகதித் திறனே - இவனை விட்டு நீங்காமல் நிற்கிற கருவிகள் முப்பத்தாறும் நிறைந்து நிற்கிற சாக்கிராவத்தையிலே எல்லாக் கருவிகளுங் கழன்றிருக்கிற துரியாதீதம் தோன்றினவிடத்து அந்த அவதரம் நீங்காமல் நிலைபெற்றிருக்கிறது சிவகதியினுடைய பகுதி. கக

மேல் அவனைச் சைவன் மறுக்கிறான் :

(உரை) திறம்பெற நீ இங்கு அறைந்தமை கருதில் - நீ நன்றாகக்கொண்டு இவ்விடத்து உன் பெத்த முத்திகள் சொன்ன

*அவன்முதற் காரணம் அன்ரும் என்னில்*
*நிமித்த காரணம் *இனிநிகழ்த் தெனநீ*
*அவனே காரணம் அனைத்துமென் றறைந்தனை*
*மண்தனிக் குலாலன் தண்டசக் கராதி*
*காரணம் மூன்றும் ஓர்பே ரணைந்ததித்*
*தாரணி அதனிற் கண்டது சாற்றுக*
*அத்தன் இயற்றும் இத்தொழில் பிறர்க்கோ*
*தனக்கோ வீணே எனக்கீ தியம்புக*

---

வற்றை விசாரிக்குமிடத்தில் எப்படியிருந்தது? ஏன், இதற்குக்குற்ற மென்னே? புவனம் யாவையும் புனிதனது உருவெனில் - இந்தப் பிர பஞ்சமாகக் காணப்பட்டிருக்கிற உலகங்களெல்லாம் சுத்தனுயுள்ள சிவனுடைய சொரூபமென்று சொல்லில்—அவன் முதற் காரணம் - விசுவாதீதனுயுள்ள அந்தச் சிவன் முதற் காரணமாக வேண்டும்— அன்ருமென்னில் - அவன் முதற்காரணமல்லவென்று நீ சொல் லின்—நிமித்த காரணம் இனி நிகழ்த்தென நீ அவனே காரணமனைத் தும் என்று அறைந்தனை - அவனை நிமித்த காரணமென்று சொல் லென்று நான் சொல்ல நீ பின்னையும் அந்த விசுவாதீதனுயுள்ள சிவன் தானே நிமித்தகாரணமும் துணைக்காரணமும் முதற்காரணமு மெல்லாமென்று சொன்னுய்—மண் தனிக் குலாலன் தண்டசக்கராதி காரண மூன்றும் ஓர் பேர் அணைந்தது இத் தாரணியதனிற் கண்டது சாற்றுக - மண்ணுகிய முதற்காரணமும் ஒப்பில்லாத குசவனுகிய நிமித்தகாரணமும் அவனுக்குக் கருவியென்று சொல்லப்பட்ட தண்ட சக்கராதியாயுள்ள துணைக்காரணமும் இவை மூன்றும் மூன்று காரண மாயிருப்ப தொழிந்து மூன்று காரணமும் ஒருகாரணமா யிருக்கிறது இந்தப் பூமியினிடத்துக் கண்டதுண்டாகிற் சொல்லுவாயாக. நிமித்த காரணமென்றது சிவனை, துணைக்காரண மென்றது சத்திகளை, முதற் காரண மென்றது விந்து மோகினி மான் என்கிற உபாதானங்களை, இதன்றியும்—அத்தன் இயற்றும் இத்தொழில் பிறர்க்கோ தனக்கோ வீணே எனக்கு ஈது இயம்புக - கர்த்தாச் செய்கிற இந்தப் பஞ்ச கிருத்தியம் பிறர் நிமித்தமாகச் செய்து வருகிருனே, அல்லது தன் நிமித்தமாகச் செய்து வருகிருனே, இவை யிரண்டுமன்றிச் சும்மா பயனற்றதாகச் செய்து வருகிருனே இத்தை எனக்குத் தெரியச்

*நிகழ்த்துக எனநீ - பாடபேதம்.

வீண்எனிற் பித்தர் *மாணுறு தொழில்போல்
தலைமையும் அறிவும் இலதென இகழ்வர்
தனக்கெனில் அஃதும் இசைப்பதொன் றன்றே
தன்போல் அறிஞருந் தலைவரும் இலரால்
கரு மின்போல் நிலைமையை வேண்டலும் பழுதே
பிறர்க்கெனிற் பிறரும் பிறர்க்காம் பொருளும்
பொருட்கமை கருவியும் அதற்குபா தானமும்
செய்கையும் என்றோர் ஐவகைத் தாெனாடு
மாறாச் சைவர் கூறார் என்றால்

சொல்லுவாயாக. சொல்லமாட்டாயாகில் நான் சொல்லக் கேட்பாயாக—வீண் எனில் பித்தர் மாணுறு தொழில்போல் தலைமையும் அறிவும் இலதென இகழ்வர் - சும்மா பயனற்றதாகச் செய்தானுமாகிற் பித்தராயுள்ளவர்கள் மாட்சிமைப்படச் செய்த தொழிலினைப் போல இருக்கையாற் கர்த்தாவுக்குச் சர்வ முதன்மையும் சர்வஜ்ஞத்துவமுமில்லை யென்று சொல்லிப் பெரியோர்கள் இகழாநிற்பர்கள். ஆகையால் வீணாகச் செய்தானென்று சொல்ல வொண்ணாது—தனக்கெனில் அஃதும் இசைப்பதொன் றன்றே - கர்த்தாத் தன் நிமித்தமாகச் செய்தா னென்னில் அதுவும் முன் சொன்னதுபோலே பொருந்துவ தொன்றன்று. அதேனென்னில்—தன்போல் அறிஞருந் தலைவரும் இலரால் மின்போல் நிலைமையை வேண்டலும் பழுதே - தன்னைப் போலச் சர்வஜ்ஞத்துவமுஞ் சர்வ முதன்மையும் பிறரொருவர்க்கு இல்லாதபடியாலே இவன் மின்போலுந் தோன்றிம்மறைந்து போகிற பிரபஞ்ச இயற்கையை வேண்டிச் செய்தா னென்னும் அது மிகவும் பழுதாம். ஆகையால் தன் நிமித்தமாகச் செய்தானென்று சொல்லவு மொண்ணாது—பிறர்க்கெனில் பிறரும் பிறர்க்காம் பொருளும் பொருட்கு அமை கருவியும் அதற்கு உபாதானமும் செய்கையும் என்று ஓர் ஐவகைத்தானொடு மாறாச் சைவர் கூறார் - இந்தத் தொழில் கர்த்தா பிறர் நிமித்தமாகச் செய்தா னென்னில் தன்னையொழிந்து பிறரென்று ஒரு பொருளும், அந்தப் பிறரென்று சொல்லப்பட்டவர்களுக்கு வேண்டின விஷயமும், அந்த விஷயங்களைப் பிறர் பொசிக்கத்தக்கதாக அதற்கேற்ற கருவிகளும், அந்த இந்திரியங்கள் தோன்றுதற்கு ஓர் உபாதானமும், இந்த உபாதானத்

*மாண்பறுங் - பாடபேதம்.

உ0 நின்சித் தாந்த மவசித் தாந்தம்
என்சித் தான்ற வசித்தைமற் றீறு
தசித்தில தென்னில் வசித்ததென் உலகில்
உலகா யதனும் பூதக் கூட்டஞ்
சலமேற் கொப்புள் தகுமெனச் சாற்றினன்
உரு தீய கருமச் சீனர்சா வகர்பிறர்
நேயம் இல்லென நிகழ்த்தினர் இலரே
காண்டல் விரோத நிற்பிறர் *கதித்திலர்

திலேநின்றும் பிரபஞ்சத்தைத் தோற்றுவிக்கிற சிவனோடேங்கூட இந்த ஐந்துவகைக்கும் மாறுபாடாகச் சைவராயுள்ளவர்கள் சொல்லார்கள்—என்றால் நின் சித்தாந்தம் அவசித்தாந்தம் என் - என்று இப்படியிருக்கையால் நீ கொண்டிருக்கிற சித்தாந்தம் சித்தாந்தமல்லவென்று நீதானே சொல்லு. இதன்றியும்—சித்து ஆன்ற அசித்தை மற்று ஈறுது-பிரபஞ்சமெல்லாஞ் சிவனிடத்திலேதோன்றுமென்றாய்,சித்தாயுள்ள சிவம் அசித்தாயுள்ள பிரபஞ்சத்தைத் தன்னிடத்திலே நின்றுந் தோற்றுவியாது—அசித்து இலது என்னில் - அசித்தென்கிற வசனம் பிரபஞ்சத்துக்கில்லைக் காணும் எல்லாஞ் சிற்சொரூபந் தானேயென்னில்—வசித்தது என் உலகில் - இந்த உலகத்தின்கண்ணே பிரபஞ்சம் சடமாயிருப்ப தொன்றென்று சாத்திரங்கள் சொல்லுவானேன்? இதன்றியும்—உலகாயதனும் பூதக்கூட்டஞ் சலமேற் கொப்புள் தகுமெனச் சாற்றினன் - உலகாயத னளவாகப் பூதக் கூட்டமாயிருக்கிற தேகாதிப் பிரபஞ்சத்தை நீர்க்குமிழிபோல நிலைநிற்பதொன்றல்லவென்று சொன்னான்; அப்படி யிருக்கச்செய்தே நீ இந்தப் பிரபஞ்சத்தைச் சிற்சொரூபமென்று சொன்னது அர்த்தமன்று.

மேல் அவன் ஆன்மா இல்லையென்ன உண்டென்று மறுக்கிறான்: தீய கருமச் சீனர் சாவகர் பிறர் நேயம் இல்லென நிகழ்த்தினர் இலரே- பொல்லாத் தொழிலுக்கு ஏதுவாயிருக்கிற புத்தர்கள் சமணர்கள் மற்றுமுண்டான சமயிகள் இவர்கள் அனைவரும் இந்தச் சரீரத்திலே ஓர் அறிவு உண்டென்று சொல்லுவார்கள்; அத்தனை யொழிந்து உன்னைப்போலே ஆன்மா இல்லையென்று சொல்லுவார் இல்லை—காண்டல் விரோதம் நிற்பிறர் கதித்திலர் - பிரத்தியக்ஷ விரோதம் நீ நாட்டினாற் போலப் புறச்சமயத்தி லுள்ளவர்களும் இப்படிச் சொன்னவர்கள்

*கணித்திலர் - பாடபேதம்.

ஈண்டுன துரைக்குமற் றியார்கரி உடலும்
சித்தோ சித்தின் சேர்வாற் சித்தெனில்
கடப டாதியும் உடற்கட் சிதைவென்
தாவர உயிர்போல் தனுஒழிந் தவற்றுள்
மேவிய உணர்வு விரவிடும் என்னிற்
சடத்துயிர் போலெனச் சாற்றினை ஆகலின்
உடற்குயிர் இறையை ஒழிந்துண் டன்றே
தருதிட் டாந்தமுந் தாட்டாந் திகமும்
ஒருபொரு ளாகில் உவமை பெறாதே

---

இல்லை—ஈண்டு உனது உரைக்கு மற்று யார் கரி-இவ்விடத்து நீ ஆன்மா இல்லையென்று சொல்லுகிற இதற்கு ஆர் சாட்சி? இன்னார் சாட்சி யென்று ஒருவரைக் காட்டு. இதன்றியும்—உடலும் சித்தோ - இந்தச் சரீரமும் அறிவோ அல்லவோ?—சித்தின் சேர்வாற் சித்தெனில்-அறிவோடுங் கூடி வாதனைப்பட்டு வருகையினாலே இந்த உடலும் அறிவென்று நீ சொல்லில்—கடபடாதியும் உடற்கண் சிதைவு என் - சால் குடஞ் சட்டி யாதியா யுள்ளவையும் புடைவை சீலை யாதியாயுள்ளவையும் இந்த உடலைப்போல அவையும் ஓர் உடல்களா யிருக்கச்செய்தே இந்த உடலைப்போலே சஞ்சாரமின்றிக் கிடப்பானேன்?—தாவர உயிர் போல் தனு ஒழிந்தவற்றுள் மேவிய உணர்வு விரவிடும் என்னில் - இந்த உடலிலே பொருந்திநிற்கிற பேரறிவு எல்லா உருபங்களிலுங் கலந்துகொண்டு நிற்கும்படி நிற்கச்செய்தேயும் இந்த உயிர் கூட நிற்கிற உடம்பிலே தாக்கி நிற்கிறாப்போல மற்றுள்ள உருபங்களிடத்திலே தாக்கி நில்லாதென்று நீ சொல்லில்—சடத்து உயிர்போலெனச் சாற்றினையாகலின் உடற்கு உயிர் இறையை ஒழிந்துண்டன்றே - உயிர் நிற்கிற உடம்புபோல உயிரில்லாத உடம்புகளில் அந்தப் பேரறிவு பொருந்தாதென்று நீ சொன்னாயாகையால், இந்த உடலுக்குக் கர்த்தாவை யொழிந்து ஓர் உயிர் உண்டாகவேணும். நான் திட்டாந்தஞ் சொன்னது கொண்டு என் அப்படிச் சொல்லுகிறீரென்று நீ சொல்லில்—தரு திட்டாந்தமுந் தாட்டாந்திகமும் ஒரு பொருளாகில் உவமை பெறாதே - ஒன்றுக்கு உவமையாகச் சொல்லப்பட்ட திட்டாந்தமும் அந்த உவமைபற்றி நின்ற தாட்டாந்தமும் ஒரு பொருளா யிருக்குமாயின் பொன்போலுங் கொன்றை என்கிற உவமை

ஒன்றே ஆகில் உடற்கிறை தாபரத்
தொன்றிய நிலையில் விசேடமென் உரைக்க
பூதச் சேர்வைப் பேதமென் றறையிற்
சேர்வைப் பேதம் என்கொடு செப்புக
கருமத் தளவில் வருமெனிற் பித்தர்
உரையில் திகழும் உணர்வொழிந் தனையே
கருமஞ் செய்வோன் கடவுளன் றுடலும்
மருவிநின் றிருவினை வாளா நுகரா
கடவுளும் உடலின் கண்படல் துஞ்சல்
இடர்நலம் உறுதல் இறங்குதல் ஏறுதல்

---

இந்த உலகத்தின்கண் உண்டாகாது—ஒன்றேயாகில் உடற்கு இறை தாபரத்து ஒன்றிய நிலையில் விசேடம் என் உரைக்க - நீ சொன்னாப் போலே பசுமுதலின்றிப் பதிமுதல் ஒன்றுமேயாக அந்தப் பதி முதல் எங்கும் ஒத்துநிற்கச்செய்தே தாபரங்களைப் பார்க்க இந்த உடலுக்கு விசேஷமுண்டானது ஏதென்று சொல்லுவாயாக—பூதச்சேர்வைப் பேதமென்று அறையில் - பூதங்கள் உரூபங்களாகக் கூடுகிற கூட்டத்தில் உண்டாகிய பேதங்கள்கொண்டு இருக்கும் இந்த உடலுக்கு விசேஷமுண்டானதென்று நீ சொல்லில்—சேர்வைப் பேதம் என்கொடு செப்புக - பூதங்கள் கூடுகிற இடத்திலே பேதந்தான் வந்தது ஏதுகொண்டென்று நீ சொல்லுவாயாக—கருமத்தளவில் வருமெனில் - கன்மத்தைச் செய்தபடியினாலே அந்தக் கன்மத்துக்கீடாக விசேஷமும் விசேஷ ஹீனமும் உண்டானதென்று நீ சொல்லில்—பித்தர் உரையில் திகழும் உணர்வு ஒழிந்தனையே - நீ கன்மத்துக்கீடாக வருமென்றது பித்தர் சொல்லுஞ் சொல்லுப்போல விளங்காநின்றது. நீயும் அறிவு கெட்டவனாயிருந்தாய்—கருமஞ் செய்வோன் கடவுளன்று - யாதொரு கருமத்தைச் செய்து வருகிறவனைக் கர்த்தாவென்று சொல்லப்படாது, ஆகையால் இந்தக் கன்மஞ் செய்தது சிவமல்ல—உடலும் மருவி நின்று இருவினை வாளா நுகரா - இந்த உடலுஞ் சடமாயிருந்தபடியாலே ஓர் ஏதுவின்றிப் பிராரத்த கன்மத்தைத் தானாகப் பொசிக்க மாட்டாது. சிவன் கூடிநின்று பொசித்தானென்னில்—கடவுளும் உடலின்கண் படல் துஞ்சல் இடர் நலம் உறுதல் இறங்குதல் ஏறுதல் எவ்வகையேனுஞ் செய்கை இன்றாதலும் -

எவ்வகை யேனுஞ் செய்கைஇன் றாதலும்
பலகலை உலகில் நிலவுத லானும்
எண்ணரும் பொருளும் இரவியும் ஒழியக்
கண்ணென ஒன்று காண்கையி னாலும்
பாசப் பகுதியும் ஈசனும் ஒழியப்
பசுவும் உண்டென் றிசையவேண் டின்றே
இதுவெனும் ஒன்றை அதுவாய்ப் படுத்தது
பொதுமையில் நிற்கும் மாயையின் பொற்பெனப்

---

வாக்குமனாதீதனா யிருக்கிற சிவனும் கன்மத்துக் கீடாக ஓர் உடலினிடத்து வந்து பொருந்துதல், பிராரத்தம் பொசித்துத் தொலைந்தவாறே அந்த உடலை விட்டு விடுதல், இந்த உடலோடுங் கூடி நின்று புண்ணிய பாவங்களைப் பொசித்துக் கொண்டு வருதல், சாக்கிராதியாயுள்ள அவத்தைகளிலே இறங்கி யதீதப்பட்டுக் கிடத்தல், மீளவும் உணர்த்து முறைமையினாலே ஏறிச் சாக்கிரத்தானத்திலே வருதல் இவை யெல்லாம் எந்தப் பிரகாரத்திலுங் கடவுளுக்கில்லாத படியாலும்—பலகலை உலகில் நிலவுதலானும் - கடவுள் சர்வஞ்ஞான படியாலே அவனுக்கு வேண்டுவதில்லை, பாசஞ் சடமானபடியாலே அதற்கும் வேண்டுவதில்லை, இந்த இரண்டு வகைக்குமின்றிப் பலவகையாகச் சொல்லப்பட்டிருக்கிற சாத்திரங்கள் இந்தப் பிரபஞ்சத்திலே பொருந்தி வருகையினாலும்—எண்ணரும் பொருளும் இரவியும் ஒழியக் கண்ணென ஒன்று காண்கையினாலும் - எண்ணிறந்த பொருள்களாயிருக்கிற பிரபஞ்சப் பதார்த்தங்களும், இவையிற்றை யெல்லாம் விளக்கஞ் செய்துகொண்டு நிற்கிற ஆதித்தனும் இவை யிரண்டையுமின்றிக் கண் என்று ஒரு முதல் நடுவே நின்று கண்டு வருகையினாலும்—பாசப் பகுதியும் ஈசனும் ஒழியப் பசுவும் உண்டென்று இசையவேண்டின்றே - பாசத்தினுடைய பகுதியும் பதியினுடைய பகுதியும் இரண்டு மொழியப் பசுவினுடைய பகுதியும் உண்டென்று நீ பொருந்த வேண்டும்—இதுவெனும் ஒன்றை அதுவாய்ப்படுத்து அது பொதுமையில் நிற்கும் மாயையின் பொற்பு என-இதுவென்று சுட்டப்பட்டதொரு விஷயத்தை யனுபவிக்குமிடத்து அந்த விஷயந்தானேயாய் அந்த அறிவானது பொதுவிலே நிற்குமென்னும் அதை மாயா

பொற்பணி யாவும் பொன்னாந் தன்மையின்
நிட்கள சகளத் திருவுரு நிலையும்
ஈச னேஎனப் பேசுவர் அன்றி
அருஉரு வாகி வரும்உல கென்னில்
அனைத்தும் மாயை எனத்தெளி கிலையே
ஆவதும் ஆகா தொழிவதும் இலதெனும்
பாவகம் உலகா யதனது பான்மை
கட்கொலை வெகுளி காமம் களவுகள்
உட்படும் இவைவிட மொழியா தார்இலர்

---

மயக்கினுடைய பெருமையென்று அறிவாயாக—பொற்பணி யாவும் பொன்னாந் தன்மையின் நிட்களசகளத் திருவுரு நிலையும் ஈசனே எனப் பேசுவர் - பொன்னிலேநின்றும் உண்டாகப்பட்ட பணிகளெல்லாம் அந்தப் பொன்னையின்றி வேறொரு முதலா யிராமல் அந்தப் பொன்னேயா யிருந்த தன்மைபோல, அந்தமா அரூபமாயுள்ள நிட்களமும் அந்த நிட்களத்திலேநின்றுந் தோன்றின சகளமாகிய இச்சா ஞானக் கிரியா சொரூபமும் இவை யிரண்டுஞ் சிவனுடைய சொரூபமாயிருக்குமென்று பெரியோர்கள் சொல்லுவார்கள்—அன்றி அரு உருவாகி வரும் உலகு என்னில் - அதன்றி அருவாயுள்ள சிவம் உருவாயுள்ள பிரபஞ்சமா யிருக்குமென்று நீ சொல்லில்—அனைத்தும் மாயையெனத் தெளிகிலையே - பிரபஞ்சம் மாயையா யிருக்கையால் இந்தப் பிரபஞ்சத்துக்கு உபாதானமாயிருக்கு மென்ற சிவமும் மாயையென்று தெளிகிறாயில்லை. என்னவே பிரபஞ்சத்துக்கு உபாதானம் சிவமல்ல மாயை யென்பது கருத்து. இதன்றியும்—ஆவதும் ஆகாது ஒழிவதும் இலதெனும் பாவகம் உலகாயதனது பான்மை - இது ஆம்பகுதி இது ஆகாப்பகுதி இவை யிரண்டுமில்லை என்கிற பாவகம் சைவராயுள்ளவர்கள் கொள்ளும் பகுதியல்ல, உலகாயதனுடைய பக்ஷமாயிருக்கும். ஞானவான்களுக்கு ஒன்றுமில்லை யென்னில்—கள் கொலை வெகுளி காமம் களவுகள் உட்படும் இவைவிட மொழியாதார் இலர் - மதுபானஞ் செய்கிறது, கொன்று பறிக்கிறது, கோபித்துச் சொல்லுகிறது, பாதாரகமனஞ் செய்கிறது, பிறருடைய சொத்தைக் களவு காண்கிறது, இப்படி இன்னுஞ் சொல்லப்பட்ட பொல்லாங்குக ளெல்லாவற்றையும் ஆகாது இவை

சோம பானம் சுராபா னங்கள்
ஆமென *நூல்கள் ஆர்செவிப் பறைந்தன
மறையோன் புலைச்சியை மருவும் என்பது
முறையோ எனில்அது புனைமொழி யென்னில்
சாதி பேத †நீயினித் தவிரினும்
மேதியை ஏறு விழையா விரும்பும்
கண்ணின துருவும் அதிற்கதிர் ஒளியும்
நண்ணரும் சத்தின் நாடகம் எனில்அதற்
கேதுவும் பயனும் ஓத வேண்டும்

---

யிற்றை விட்டு விடுங்கோளென்று சொல்லாமலிருப்பார் ஒருவரு மில்லை. இப்படிக் கொத்தவை யெல்லாத்தையுஞ் செய்தாலும் ஞான வான்களுக்குத் தோஷம் ஏறுதென்று சாத்திரஞ் சொல்லுமெனில்— சோமபானம் சுராபானங்கள் ஆம் என நூல்கள் ஆர் செவிப் பறைந்தன - சோமபானஞ் செய்கிறது சுராபானஞ் செய்கிறது இவை இரண்டுங் கொள்ளுகிறது ஆமென்று ஒருத்தரும் அறியாமல் நூல்க ளானது ஆருடைய செவியிலே சொல்லிவைத்துப் போச்சு? இவை யிருக்க—மறையோன் புலைச்சியை மருவுமென்பது முறையோ வெனில் - பிராமணனாயுள்ளவன் பறைச்சிக்கு ஆசைப்பட்டு அவளைக் கிரீடிக்கிறது முறைமையோ முறைமைக்கீனமோ வென்று நான் கேட்க—அது புனைமொழி யென்னில் - பிராமணன் பறைச்சியைப் பரிசிக்கலாகாதென்று சொல்லுகிறது ஒரு வரம்புகட்டிச் சொன்ன தொழிந்து பிராமணன் பறைச்சியோடுங் கூடினால் அவளிடத்திலே இவனுக்கு இன்பம் விளைந்ததில்லையோ என்று நீ சொல்லில்— சாதிபேதம் நீ இனித் தவிரினும் மேதியை ஏறு விழையா - பிராமண னென்றுஞ்சண்டாளனென்றும் இத்தனைகாலமும் வழங்கிவந்த சாதித் தன்மையை நீ தவிர்ந்துவிட்டாயாயினும் எருமையை இடபமானது விஷயமாக விரும்பாது. ஆகையால் ஞானவான்களுக்கு எல்லாம் ஆம் என்கிறது அர்த்தமாகாது—விரும்புங் கண்ணினது உருவும் அதிற் கதிரொளியும் நண்ணருஞ் சத்தின் நாடகமெனில் - நீ விரும்பப்பட்ட கண்ணினுடைய வடிவும் அதிலுண்டாகிய ஆதித்தனுடைய காட்சியும் மனதினாற் கிட்டவொண்ணாதிருக்கிற சத்தாகிய சிவத்தினுடைய நடிப்பாயிருக்குமென்று நீ சொல்லில்—அதற்கு ஏதுவும் பயனும் ஓத

*மறைகள். †நீதிநீ - பாடபேதம்.

நின்மொழி *விரோதம் நீடுல கியற்கையும்
தன்மசாத் திரமுஞ் சகலமும் என்செயும்
உலகே ழெனஇறை பலவாந் தன்மை
கடமொடு சராவம் †கலச மாதிகள்
அடலுறு குயவன் ஆயினன் என்றால்
தாமே யாகா அவைதான் ஆகான்
ஆயினன் என்ப தாக்கினன் எனவே
ஆனாய் என்ப தனைத்தும் அவ்வவை

வேண்டும் - அப்படிச் சிவன் கண்கொண்டு ஒரு ரூபத்தைக் கண்டு வந்தானுமாயின் சிவனுக்கு அப்படி ஒரு குற்றமுண்டென்றும், அந்தக் குற்றம் நீங்கிக் கொள்ளுகைக்கு இப்படிப் பொசித்தானென்றும் சொல்லவேண்டும்—நின் மொழி விரோதம் நீடுலகியற்கையும் தன்ம சாத்திரமுஞ் சகலமும் என் செயும் - சிவன் விசுவாதீதனா யிருக்கச் செய்தே அவன் இப்படிப் பொசித்து வருவனென்று நீ சொல்லுகிற சொல் விரோதம். இன்னான் நல்லவன் இன்னான் பொல்லாதவனென்று நிலைபெற்று வாராநிற்கிற உலகிலுள்ளார் அங்கீகரித்துக் கொண்டு வருகிற முறைமையும், இன்னது செய்யப் புண்ணியம் இன்னது செய்யப் பாவம் இந்தப் பாவஞ் செய்தவர்களை இராசாவானவன் தண்டஞ் செய்யக்கடவனென்று தன்மசாத்திரஞ் சொல்லுகிற முறைமையும் மற்று இப்படிச் சொல்லப்பட்டவையும் ஆன்மாவென்று ஒன்றில்லையாயின் இவையெல்லாம் என்ன செய்யும்? இதன்றி—உலகேழென இறைபலவாம் தன்மை - 'உலகே ழெனத்திசை பத்தெனத்தா னொருத்தனுமே, பலவாகி நின்றவா' என்ற திருவாக்கின் தன்மை—கடமொடு சராவம் கலசமாதிகள் அடலுறு குயவன் ஆயினனென்றால் தாமே ஆகா அவைதான் ஆகான் ஆயினன் என்பது ஆக்கின னெனவே-குடத்தோடே கூடச் சட்டிகள் கலசங்கள் இவையாதியாகச் சொல்லப்பட்டு வருகிற பாத்திரங்களெல்லாம் வெற்றிபொருந்தியிருக்கிற குசவனாயினானென்று சொன்னால் இந்தக் குசவன் அந்தப் பாத்திரங்களாகினானல்லன், அந்தப் பாத்திரங்கள்தான் இந்தக் குசவனாகிறதல்ல; ஆயினனென்பது ஆக்கினனெனவே என்று இலக்கணங்களிற் சூத்திரஞ் சொல்லுகையால்—ஆனாயென்பது அனைத்தும் அவ்வவை தான் ஆகாமையைச் சாற்றிடுமென்க - வானாய் மண்ணாய்

*விரோதமும். †அகல்சால் கரகம், கலசாதி கணங்கள் - பாடபேதம்.

தான்ஆ காமையைச் சாற்றிடும் என்க
தாமே எனும்இத் தனியே காரம்
அழிந்திலர் அதுவே ஆய்த்திலர் அதுவிட்
டொழிந்திலர் பிறிவிலர் எனும்இவை உணர்த்தும்
அரு காயும் பழமும் சுவையும் நுகர்வ
தாயவன் தானும் அவன்முதற் றென்னும்
அகிலமுந் தெளிய அறிவோன் தானும்
அகிலமும் அறிஞரை அறிவிப் போனும்
அறிஞர்க் கறிவாய் அறிகின் றோனும்
கூo அறிவிற் கறிபொருள் ஆவோன் தானும்
அகிலமும் மேனி யானவ னென்னும்

---

என்று இப்படி ஆனய் ஆனய் என்று சொல்லப்பட்டதெல்லாம் அந்தச் சிவன்தான் அந்த வானும் மண்ணுமாகானென்பதனைச் சொல்லியிடுமென் றறிக—தாமே யெனும் இத் தனியேகாரம் - தாமேதாமாய்ச் செய்யுமென்கிற ஒப்பில்லாத ஏகாரத்தோடுங் கூடிக்கொண்டிருக்கிற திருவாக்கு—அழிந்திலர் அதுவே யாய்த்திலர் அதுவிட்டு ஒழிந்திலர் பிறிவிலர் எனும் இவை உணர்த்தும் - தாங்கள் அழிந்தார்களுமில்லை, அந்தச் சிவமுதலானர்களுமில்லை, அந்தச் சிவமுதலையின்றிக் காரியப்பட்டார்களுமில்லை, அந்தச் சிவமுதலுக்கு வேறாயிருந்தார்களுமில்லையென்று இப்படியிருக்கும் சொல்லு—காயும் பழமும் சுவையும் நுகர்வதாயவன்தானும் அவன் முதற்று என்னும்-'காயாகிப் பழமாகிப் பழத்துள்நின்ற இரதங்கள் நுகர்வானுந் தானே யாகி' என்ற திருவாக்குக் காயும் அவனாலே உண்டானது, பழமும் அவனாலே உண்டானது, பழத்தின் இரதமும் அவனாலே உண்டானது, அந்த இரதங்களை நுகர்வானும் அவனாலே உண்டானவன், ஆகையாலே அவையெல்லாஞ் சிவன்முதலாக உண்டானதென்று சொல்லும்—அகிலமுந் தெளிய அறிவோன்தானும் அகிலமும் அறிஞரை அறிவிப்போனும் அறிஞர்க்கு அறிவாய் அறிகின்றோனும் அறிவிற்கு அறிபொருளாவோன் தானும் அகிலமும் மேனியானவன் என்னும்-எல்லாத்தையும் மயக்கமற அறிவானு முள்ளவனும், அறியும் பகுதியை யுள்ளவர்களுக்கு எல்லாத்தையும் அறிவிப்பவனு முள்ளவனும், அறியும் பகுதியை யுள்ளவர்களுக்கு அவர்களுடைய அறிவாய் நின்று அறியும் பகுதியை

தருபொருள் கொள்பொருள் தருவோன் கொள்வோன்
ஒருபொரு ளாயின் *உவப்புண் டென்க
நுகர்வோன் தனக்கு நுகர்பொருள் வேண்டில்
கூ௫ இகலறக் கிடையா தொழிந்ததென் நிரயமும்
வேண்டா ராயினும் மெய்யுறு வியாதிகள்
ஈண்டா தொழியா திறைக்கிவை ஈடல
சத்தியுஞ் சிவமும் தாமே நுகருமென்

யுடையவனும், அறிகிறவர்களுடைய அறிவிற்கு அறியப்படும் பொருளாயுள்ளானும் என்ற திருவாக்குச் சர்வத்தையுஞ் சிவன் திருமேனியாக உடையவனென்று சொன்னதாயிருக்கும்—தருபொருள் கொள்பொருள் தருவோன் கொள்வோன் ஒருபொரு ளாயின் உவப்பு உண்டென்க - ஒருவன் கொடுக்கப்பட்ட பொருள், தான் கொள்ளப்பட்ட பொருள், ஒரு பொருளைக் கொடுக்கிறவன், அந்தப் பொருளைக் கொள்ளப்பட்டவன் இவையெல்லாம் ஒரு பொருளாயிருக்குமாயின் மிகவும் பிரியம் வருமென்க. இப்படியுஞ் சொல்லுவார்களோ!—நுகர்வோன் தனக்கு நுகர்பொருள் வேண்டில் இகலறக் கிடையாது ஒழிந்ததென் நிரயமும் - பொசிப்பானொருவனுக்கு ஒரு பொருளைப் பொசிக்க வேண்டினவிடத்து அந்தப் பொருள் அவனுக்கு மாறுபாடின்றி வந்து கூடுவதில்லை ; எல்லாப் பொருளும் ஒரு பொருளாயிருக்குமாயின் அவன் நினைத்தபொழுதே பொசிக்கவேண்டாமோ ? அது கண்டோமில்லை. ஆகையால் எல்லாம் ஒன்றாயிருக்குமாயின் நரகதுக்கமுண்டாகாது. அதேதெனனில்—வேண்டாராயினும் மெய்யுறு வியாதிகள் ஈண்டா தொழியாது - குன்மம் சூலைமுதலாயின வியாதிகளை அனுபவிக்க வேண்டா என்றிருப்பர்கள் இருந்தாலும் சரீரத்திலே உண்டாகப்பட்டிருக்கிற வியாதிகள் இவர்களை வந்து பொருந்தி அனுபவியாமல் விடாது. ஆகையால் நீ எல்லாம் ஒன்றென்று சொன்னது அர்த்தமன்று. ஆன்மா இல்லை எல்லாஞ் சிவமே அனுபவிக்கிறதென்றாய்—இறைக்கு இவை ஈடல - வேண்டின பொருள் கிட்டாமலும் வேண்டாத வியாதிகள் வந்து கிட்டியும் இவையிற்றினால் உண்டாகிய வருத்தம் ஆன்மாவுக்கொழிந்து கர்த்தா வாக்குமனாதீதகோசரமா யிருக்கையினாலே அவனுக்கு உண்டாகாது. இப்படி இருக்கச்செய்தே—சத்தியுஞ் சிவமுந் தாமே நுகரு

*உவப்பின் றென்க - பாடபேதம்.

றித்திறன் உணர்வுவந் தெய்துவ தெவர்க்கே
தமக்கே என்னில் தாம்உண ராமையும்
அமைப்பற உணர்தலும் அவர்க்கடை வன்றே
நானும் அவனும் நவையும் நலனும்
தான்அவன் ஆகையும் நின்சா தனத்தில்
சகயோ கத்தைச் சாயுச்சி யம்எனப்
பகர்வது பதிபசு பாசத் தவர்க்கே
யாதொரு வகையென ஓதிய திறைநூல்

---

மென்று இத்திறன் உணர்வு வந்து எய்துவது எவர்க்கே - ஆன்மா இல்லைச் சத்தி சிவங்கள் எல்லாச் சுகதுக்கங்களையும் அனுபவிக்குமென்று நீ சொன்ன இந்தப் பகுதியிலுண்டாகிய ஞானம் இந்தப் பிரபஞ்சத்துக்குள்ளே ஆர்க்குத்தான் வந்துண்டாவது? என்றது ஆக்ஷேபம்—தமக்கே என்னில் தாம் உணராமையும் அமைப்பற உணர்தலும் அவர்க்கு அடைவன்றே - சத்தி சிவங்களுக்கே இந்த அனுபோகமென்னில், அந்தச் சத்தி சிவங்கள் இந்தப் பிரபஞ்சத்தை அறியாதபடியாலும் அறியுமிடத்துச் சுட்டியறியாமல் தடையற எல்லாத்தையும் ஒக்க அறிகையினாலும் இந்தச் சுகதுக்கங்களால் உண்டாகிய அனுபோகம் ஆன்மாவுக்கொழிந்து அந்தச் சத்தி சிவங்களுக்கு உண்டாவதொன்றல்ல. இது பெத்தத்தை மறுத்தது.

மேல் முத்தியை மறுக்கிறான்: நான் ஒருமுதல் அவன் ஒருமுதலென்று நிற்கிற இது குற்றத்தையுடைய வழியென்றும் இவன் அவனாய் விடுகிற இது சாயுச்சியமாகிய நல்வழியென்றுஞ் சொன்னாய்.—நானும் அவனும் நவையும் நலனும் தான் அவனாகையும் நின் சாதனத்து இல்-நானென்கிற ஆன்மாவும், அவன் என்கிற சிவனும், நவையென்கிற குற்றமும், நலனென்கிற நன்மையும், இந்த ஆன்மா அந்தச் சிவனாக வேணுமென்கையும் நீ எல்லாம் ஒன்று என்கிறவனாகையால் உன்னுடைய சாதனத்துக்குட்பட்டதல்ல. இதன்றியும்—சகயோகத்தைச் சாயுச்சியம் எனப் பகர்வது பதிபசுபாசத்தவர்க்கே - யோகமார்க்கத்துக் குண்டான முறைமையை நீ சாயுச்சிய மார்க்கமாகச் சொல்லுகிற இது திரிபதார்த்த நிண்ணயம் வந்தவர்கள் கொள்ளும் பகுதியாமே. இதன்றி—யாதொரு வகையென ஓதியது இறைநூல் சொன்னவற்று ஒன்றன்று - இந்த முத்தித் தன்மை கூடுமெனவும் மக்க

சொன்னவற் றென்றன் றென்னில்வீ டெளிதே
தான்அறி வழியே தலைப்பொருள் பிடிக்கின்
மேல்நிகழ் பலமும் வீடளித் திடுமே
௧௧0 நிலையாக் கருவியை நிலையாக் கருதிப்
புலையா டுதலும் உலகா யதன்பொருள்
குட்டியம் இன்றிநற் கோலம் எழுதுதல்
இட்டம தாயிற் கருவியும் இடங்களுங்
கருத்துற உரைக்கத் தெரித்திடும் மதித்த

---

ளொக்கல் சமுசாரத்தோடுங் கூடித்தான் இருப்பான், இவையிற்றை விட்டுத்தானிருப்பான், நின்றதே நிலையாகக் கொண்டு சாதித்து வரக் கடவனென்று நீ சொன்னது, சிவாகமம் மோக்ஷத்துக்குகேதுவாயுள்ளவர்கள் சரிக்கவேண்டின முறைமை பலவழியுஞ் சொல்லும் அவையிற்றில் ஒருவழிக் குட்பட்டதல்ல—என்னில் வீடு எளிதே - அப்படிச் சரிக்கிறதுதான் காணும் முத்தி சாதனமென்னில், மோக்ஷத்தை அரிதென்று சொல்லவேண்டுவதில்லை, எல்லார்க்கும் எளிதாகப் பெற்றுவிடலாமென்று சொல்லு. இதன்றியும்—தான் அறி வழியே தலைப்பொருள் பிடிக்கின் மேல் நிகழ் பலமும் வீடளித்திடுமே - ஒரு ஆசாரியன் நல்லவழி கற்பிக்க அந்த வழியே ஒழுகிவாராமல் தன்னுடைய போதத்துக்குத் தோன்றின வழியே தலையான பொருளாகப் பிடித்து அந்த வழியே ஒழுகிவா அதனால் உண்டாகிய பலமும் வீட்டின்பத்தைத் தருமே—நிலையாக் கருவியை நிலையாக் கருதிப் புலையாடுதலும் உலகாயதன் பொருள் - நிலைநில்லாமைக்குச் சாக்ஷியாயுள்ள தேகாதிப் பிரபஞ்சத்தை நிலைநிற்குமென்று கருதிச் செய்யாக் காரியத்தைச் செய்துகொண்டு வருகிறது உலகாயதன் கொள்ளும் பொருளாமொழிந்து சைவராயுள்ளவர்கள் கொள்ளும் பொருளல்ல—குட்டியமின்றி நற்கோல மெழுதுதல் இட்டமதாயின் - சுவரில்லாமற் சித்திரமெழுதுகிறது ஒருவருஞ் செய்யவொண்ணாதது, உனக்கு இட்டமாயிருக்குமாயின்—கருவியும் இடங்களுங் கருத்துற உரைக்க - தனுவுங் கரணமும் புவனமும் போகமும் ஆன்மாவுக்கே யென்று சாத்திரஞ் சொல்லச்செய்தே—தெரித்திடும் மதித்தது - மதித்தது தெரித்திடும் என மாறுக. இதன் பொருள்: சிவன் விசுவாதீதனா யிருக்கையினாலே அவனுக்கு இவை வேண்டுவதில்லை. இவை வேண்டினது ஆன்மா

௧௧௫ தறிவொன் றில்லோர்க் கிறையருள் உதவுதல்
பிறிவறி வரிய செறிஇருள் இடத்தோர்
அந்தகர்க் காண வந்தோர் எம்மை
நீவிரும் காண வேணும் என்றுங்
கெடுத்தொரு தீபம் கொடுத்ததை ஒக்கும்
௧௨௦ இச்செயற் கிறைவன் கொச்சையன் அன்றே
கருவி வசத்தில் தெரிவுறக் காண
வேண்டுநர் இலரால் ஈண்டறி வியாவுஞ்
சிவமே என்று செப்பினை அவம்உறு

---

வுக்கா யிருக்கச்செய்தே, ஆன்மா இல்லை, இவை அந்தாத்தே நிற்கு மென்று உன்னுடைய போதம் சற்றும் கூசாமல் நினைத்துச் சொல் லும். இதன்றி—அறிவொன்றில்லோர்க்கு இறையருள் உதவுதல் - ஓர் ஏகதேசமும் அறிவில்லாத ஆன்மாக்களுக்குக் கர்த்தாவினுடைய அருள் அறிவைக் கொடுக்குமென்றாய், அங்ஙனம் அது செய்தல்—பிறி வறிவரிய செறியிருளிடத்து ஓர் அந்தகர்க் காணவந்தோர் எம்மை நீ விருங் காணவேணும் என்றுங்கு எடுத்து ஒரு தீபம் கொடுத்ததை ஒக் கும் - ஒரு சற்றும் நீக்கிக் காணவொண்ணமற் செறிந்துகொண்டிருக் கிற இருளினிடத்திலே யிருக்கிற அந்தகராயுள்ளவரைக் காணவந்தவ ரொருவர் விளக்கைக் கொண்டுவந்து கண்டு அந்த விளக்கை அந்தகர் கையிலே கொடுத்து என்னையும் நீர் காணவேணுமென்று சொல்ல, அவரை இவர் கண்டாரென்கிறதுக்கொக்கும் அறிவில்லாத ஆன்மா வுக்கு அருள் அறிவைக் கொடுக்க அறிந்ததென்று நீர் சொன்னது— இச் செயற்கு இறைவன் கொச்சையனன்றே - அறிவில்லாத ஆன்மா வுக்குத் தன்னுடைய அருளைக்கொண்டு அறிவைக் கொடுத்தான் என் கிறது கர்த்தாவும் இந்த ஆன்மாவைப்போல அறிவில்லாதவனுக வேண்டும். இதன்றியும்—கருவி வசத்தில் தெரிவுறக் காண வேண்டு நர் இலரால் - கருவிகள் சடமா யிருந்தபடியாலே இவையிற்றைக் கொண்டு தேகாதிப் பிரபஞ்சத்தை நன்றாகக் காண்கிற காட்சி சிவ ஞானிகளா யுள்ளவர்களுக்குள் ஒருவரும் வேண்டியிருப்பார் இல்லை. அப்படியிருக்கச்செய்தே—ஈண்டு அறிவு யாவுஞ் சிவமேயென்று செப் பினை - இவ்விடத்துக் கருவிகளைக் கொண்டு தேகாதிப் பிரபஞ்சத்தை அறிந்துவருகிற அறிவெல்லாஞ் சிவமேயென்று நீ சொன்னுய்—அவம்

பொறிபுலன் அறியா அறிவது பிரமம்
என்றோர்க் குன்போல் இடர்ப்படல் இலதே
ஏற்றம் கருவி இருபதோ டிரண்டும்
போற்றும்ஓர் அவத்தையும் புகல்திரி மலமும்
ஈசனும் உயிரும் பேசினை அஃதொழிந்
தொன்றே யாகும் என்ற நின்இயல்பு
தாயர் மனைவியர் தாதியர் தவ்வையர்
ஆயவர் எவரையும் ஓர்மையிற் காணும்
கோகழி * தூர்த்தர் கொடுந்தொழில் தருமே

---

உறு பொறிபுலன் அறியா அறிவது பிரமம் என்றோர்க்கு உன்போல் இடர்ப்படல் இலதே - இந்திரியங்கள் தானாக விஷயங்களை அறியமாட்டாதது கொண்டு சடமாயிருந்தபடியாலே எல்லாத்தையும் அறிகிறது பரப்பிரமமென்று சொன்ன மாயாவாதிக்கும் உன்னைப்போலக் குற்றஞ் சொல்லத்தக்கது இல்லை. அதேனென்னில், அவன் பிரமத்தை அறிவென்றும் பிரபஞ்சத்தைச் சடமென்றுஞ் சொன்னான், நீ எல்லாத்தையுஞ் சித்தென்கையினாலே. இதன்றியும்—ஏற்றம் கருவி இருபதோடு இரண்டும் போற்றும் ஓர் அவத்தையும் புகல் திரிமலமும் ஈசனும் உயிரும் பேசினை - அந்த மாயாவாதி பதினாலு கருவியும் நாலவத்தையுஞ் சொன்னான். நீ அவனிலும் பார்க்க ஏற இருபத்திரண்டு கருவியுஞ் சைவராயுள்ளவர்கள் பரிகரித்துக் கொண்டு வருகிற ஓர் அவத்தையும் இவர்களாலே சொல்லப்பட்டு வருகிற மூன்று மலமும் கர்த்தாவும் ஆன்மாவும் உண்டென்று சொன்னாய்—அஃது ஒழிந்து ஒன்றே யாகும் என்ற நின் இயல்பு - அவையிற்றை யெல்லாம் விட்டு இப்பொழுது எல்லாம் அந்தச் சிவமொன்றுமே யென்று நீ சொல்லுகிற இயல்பு எதுக் கொக்கும்?—தாயர் மனைவியர் தாதியர் தவ்வையராயவர் எவரையும் ஓர்மையிற் காணுங் கோகழி தூர்த்தர் கொடுந் தொழில் தருமே - தன்னுடைய தாய் சிறியதாய் பெரிய தாயானவர்கள், தன் பெண்சாதி தமையன் பெண்சாதி தம்பி பெண் சாதியா யுள்ளவர்கள், தன் வெள்ளாட்டி முன் சொன்னவர்களுடைய வெள்ளாட்டியா யுள்ளவர்கள், தன்னுடைய தங்கைமார் தமக்கைமார் இங்ஙனஞ் சொல்லப்பட்டவர்க ளெல்லாரையுந் தன்னுடைய பெண் சாதியைப் பார்க்குமாப்போலே இவர்களெல்லாரையும் ஒக்க விஷயப்

---

* தூர்த்தக் - பாடபேதம்.

ஆக மற்றதன் அருள்நிலை தன்நிலை
ஏக நாயகன் ஆகிய இறைநிலை
நாசமில் பாசம் வீசிய வியன்நிலை
இனையவை யொன்றும் நினைவினும் இன்றி
உண்டெனும் உணர்விற் கண்டது கருதில்
இழுக்கெனும் புலன்வழி ஒழுக்கமும் அதுவாய்க்
கொண்டு பண்டையில் எண்தரு மடங்கு
வந்தவா செய்யத் தந்ததை யன்றே
புன்மைகள் நீங்க உண்மை கேண்மதி.

---

பார்வையாகப் பார்க்கும் கோகழியுள் நடுக்கண்ணனது தன் எல்லையில் நில்லாமல் இறந்து கண்டு வருகிற தூர்த்தனுடைய கொடிய தொழிலை யொக்கும்—ஆக மற்றதன் - நீ சொல்லி வந்த ஞானத்தினது தன்மை இப்படித் தவறாகக் கிடக்க—அருள்நிலை தன்நிலை ஏகநாயக னாகிய இறைநிலை நாசமில் பாசம் வீசிய வியன்நிலை - அருள் சர்வத்தையுங் காரியப்படுத்தி வருகிற முறைமை, ஆன்மாத் தனக்கென ஓர் சுதந்தர மில்லாமல் நிற்கிற முறைமை, கர்த்தா எல்லாத்திலும் நிறைந்து நிற்கச்செய்தே ஒன்றிலுந் தாக்கற நிற்கிற முறைமை, அழிவில்லாம லிருக்கிற பாசம் சர்வான்மாக்களைப் பந்தித்துக் கொண்டு நிற்கிற முறைமை—இனையவை ஒன்றும் நினைவினும் இன்றி - இங்ஙனஞ் சொல்லப்பட்டவை யொன்றும் உன்னுடைய நினைவிலுங் கூட இல்லாமல்—உண்டெனும் உணர்விற் கண்டது கருதில் - ஆன்மாவுக்கு அறிவில்லை சிவனே எல்லாத்தையும் அறிகிறவனென்று நீ நாட்டப் பட்ட அறிவினாலே நீ அனாசாரமாகச் சொன்னதை விசாரிக்கில்—இழுக்கெனும் புலன்வழி ஒழுக்கமும் அதுவாய்க் கொண்டு - இந்திரிய வாதனை பொல்லாதென்று சொல்லச்செய்தே அந்த இந்திரிய வாதனை தானே நீ ஞானாசாரமாகக் கொண்டு—பண்டையில் எண் தரு மடங்கு வந்தவா செய்யத் தந்ததை யன்றே - நீ பெத்த தசை யிலே நிற்கிற நாள் செய்து வந்த அனாசாரத்திலும் பார்க்க முத்தி தசையிலே எண்மடங்கு அனாசாரத்தைச் செய்துகொண்டு திரியத் தக்கதாக உனக்கு இந்த மயக்கந் தந்த அஜ்ஞானத்தை வெறுக்கிற தல்லது உன்னை வெறுக்க வழக்கில்லை—புன்மைகள் நீங்க உண்மை கேண்மதி - இப்படிக் கொத்த அஞ்ஞானங்கள் உனக்கு நீங்கத்தக்க

## சைவவாதி சங்கற்பம்

அறிவாய் அறியும் அறிவுயிர் கேவலத்
தறிவிலன் இருளொடும் பிறிவிலன் அண்ணல்
கலைமுத லாக நிலவிய கருவிகள்
கசரு விளக்கென உதவும் துளக்கறப் பொருந்தி
இருவினை நுகர்வில் வருவினை செய்து
மாறிப் பிறந்து வருநெடுங் காலத்
திருள்மல பாகமும் சத்திநி பாதமும்
மருவுழி அருளுரு மன்னவன் அணைந்து

---

தாக நான் சத்தியத்தைச் சொல்லுகிறேன், அத்தைப் புத்திபண்ணிக் கேட்பாயாக. மதியென்றது அசை.

மேற் சைவவாதி தன்மதம் கூறுகின்றான் :

அறிவாய் அறியும் அறிவு உயிர் - அனுதியே அறிவாய் அறிந்து கொண்டு வருகிற அறிவாயிருப்பதொன்று ஆன்மா—கேவலத்து அறிவிலன் இருளொடும் பிறிவிலன் - இப்படி அறிவாயுள்ள ஆன்மா வுக்குக் கேவலாவத்தையில் ஒரு சற்றும் அறிவில்லை ; அவ்விடத்து ஆணவமலத்தோடுங் கூடி நீக்கமின்றி யிருக்கும்—அண்ணல் கலைமுத லாக நிலவிய கருவிகள் விளக்கென உதவும் - இப்படி ஒன்றும் அறி யாமற் கேவலப்பட்டுக் கிடக்கிற அவதாரத்திலே கர்த்தாவானவன் கலை முதலாகப் பொருந்தப்பட்டு வருகிற கருவிகள் முப்பத்தொன்றையுங் கண்ணுக்கு விளக்குக் காட்டான தன்மைபோல இந்த ஆன்மாவுக்குக் காட்டாகக் கொண்டு கூட்டும்—துளக்கறப் பொருந்தி இருவினை நுகர்வில் வருவினை செய்து - அந்தக் கருவிகளோடும் அசைவறக் கூடிப் பிராரத்த கன்மமான புண்ணிய பாவங்களைப் பொசிக்கச் செய்தே ஆகாமியத்தை ஆர்ச்சித்துக் கொள்ளும்—மாறிப் பிறந்து வரு நெடுங்காலத்து - இந்தக் கன்மத்துக் கீடாக அச்சுமாறிப் பிறந்து வாராநிற்கும் ; இப்படி நெடுங்காலம் பிறந்து இறந்து வரச்செய்தே— இருள் மலபாகமுஞ் சத்திநிபாதமும் மருவுழி - சிவபுண்ணியம் உண் டாயதனாலே ஆணவமலத்துக்குப் பாகமும் சத்திநிபாதமும் பொருந் தினவிடத்து. இது பெத்தம்.

செல்கதி ஆய்ந்து பல்பணிப் படுத்திக்
கருவியும் மலமும் பிரிவுறப் பிரியா
ஞானம் நல்கலும் தான்அது நோக்கித்
தன்னையும் அதனையும் தன்முதற் பொருளையும்
இன்னவென் றறியா இருவரும் முயங்கி
ஒன்றாய் உறுபயன் உவப்பும்
இன்றாய் நிற்கும் இதுசிவ கதியே. கஉ

---

## கரு. சைவவாதி நிராகரணம்

இதுகதி யாக முதல்அறி வுயிரேல்
பொறிபுலன் நீங்க அறிவுயிர் அன்றே

---

மேல் முத்தி : அருளுரு மன்னவன் அணைந்து செல்கதி ஆய்ந்து பல்பணிப் படுத்தி-கர்த்தா அருளே திருமேனியாகக் கொண்டு ஆசாரிய மூர்த்தமாக எழுந்தருளி வந்து இவன் சென்று பொருந்தப்பட்ட கதிக்கு ஏதுவா யுள்ளவையிற்றை ஆராய்ந்து பல் பணியாகிய சரியை கிரியாயோகங்களிலே நிறுத்தி—கருவியும் மலமும் பிரிவுறப் பிரியா ஞானம் நல்கலும் - அந்தச் சரியை கிரியாயோகங்களை முற்றச் செய்கையிலே கேவல சகல மிரண்டையும் நீக்கி அநாதியே இவனைவிட்டு நீங்காமல் உபகரித்துக்கொண்டு வருகிற உண்மை ஜ்ஞானத்தைப் பிரசாதியாநிற்கும்,அப்படி செய்தமாத்திரத்திலே—தான் அது நோக்கித் தன்னையும் அதனையும் தன்முதற் பொருளையும் இன்னவென் றறியா இருவரும் முயங்கி-இந்தஆன்மா அந்த உண்மை ஜ்ஞானத்தைத் தரிசித்து ஞாதுருவாகிய தன்னையும் ஞானமாகிய அந்த உண்மை ஜ்ஞானத்தையும் அந்த ஞானத்துக்கு முதலாயுள்ள நேயத்தையும் இந்த மூன்று முதலையும் அவ்விடத்திற்சுட்டி யறியாமல் இந்த ஆன்மாவுஞ் சிவமுந் தன்னிலே கூடி—ஒன்றாய் உறு பயன் உவப்பும் இன்றாய் நிற்கும் இது சிவகதியே - இரண்டும் ஒரு முதலாய் அவ்விடத்து உற்றதொரு பயனும் பிரியமும் இரண்டும் இல்லையாய் இப்படி நிற்கிற அவதாத்தைச் சிவசாயுச்சியமென்று சொல்லப்படுவது. கஉ

மேல் சித்தாந்தியார் மறுக்கிறார் :

**(உரை)** இது கதியாக முதலறிவு உயிரேல் - நீர் இப்பொழுது சொல்லி முடித்த இது முத்தியானாலும், அது பின்பு சொல்லுகிறோம். ஆன்மா அநாதியே அறிவாயிருப்பதொன்றாகில்—பொறிபுலன் நீங்க

அடைகாய் நூறி னிடைசேர் சிவப்பென
இந்தியத் தொகையின் வந்தறி வொன்றுநின்
றின்றாம் என்றல் அன்றே எந்தை
அறிவிலன் அதீதச் செறிவில்என் றுரைத்த
நின்மொழி விரோதமும் பின்முன் மலைவும்
மன்வயின் நிகழா மலம்இருள் இறையொளி
தான்அமர் விளக்கில் தரும்மருட் கலாதிகள்
ஈனமில் இவனிடத் தெவ்வா றிசைந்தன

---

அறிவு உயிரன்றே-இந்திரியங்களும் அதனாலே அறியப்பட்ட விஷயங்களும் இரண்டு வகையும் நீங்க ஆன்மாவானதற்கு அறியும் பகுதி உண்டாமே! அது இந்திரியங்கள் கூடினபோது அறிந்தும் அவை நீங்கினபொழுது அறியாமையும் ஆன்மாவுக்குள்ள முறைமையென்று நீ சொல்லின்—அடைகாய் நூறின் இடை சேர் சிவப்பென இந்தியத் தொகையின் வந்து அறிவொன்று நின்று இன்றாமென்றலன்றே எந்தை - பாக்கும் வெற்றிலையும் சுண்ணாம்பும் கூடி மத்திச்சவிடத்திலே அவையிற்றினுடைய தன்மையின் நடுவே ஒரு சிவப்பு எழுந்தாற்போலச் சடமாயுள்ள இந்திரியங்களினுடைய கூட்டத்தின் நடுவே ஓர் அறிவு தோன்றி உடனே அழியுமென்று கணபங்கஞ்சொன்ன புத்தனையொப்பீர் தேவரீர். இதன்றியும்—அறிவு இலன் அதீதச்செறிவில் என்று உரைத்த நின்மொழி விரோதமும் பின்முன் மலைவும் மன்வயின் நிகழா - அறிவாய் அறிந்துவருகிற ஆன்மாவானதற்கு மலத்தினாலே நெருங்கியிருக்கிற அதீதத்தானத்தில் அறிவில்லையென்று சொன்ன உம்முடைய சொல்விரோதமும் ஒருக்கால் அறிவென்றும் ஒருக்கால் அறிவல்லவென்றும் நீர் முன்னொடு பின் மலையச் சொன்ன இவையும் நிலைபெற்று வாராநிற்கிற நல்லோர்களுடைய கூட்டத்தினிடத்துக் கொள்ளப்படாது. இதன்றியும்—மலம் இருள்-ஆணவமோ என்றாற் சுத்த இருளாயிருப்பதொன்று—இறை ஒளிதான்-கர்த்தாத் தானோ என்னில் மகாப் பிரகாசமா யிருப்பானொருத்தன்—அமர் விளக்கில் தரும் மருட்கலாதிகள்-பொருந்தப்பட்ட விளக்குப்போலும் இவனுக்குக் காட்டாயுள்ள கலை முதலாகிய முப்பத்தொரு தத்துவமும் மாயா கருவிகளா யிருக்கையினாலே மயக்கமா யிருப்பதொன்று. ஆகையால் இந்தக் கருவிகள்—ஈனமில் இவனிடத்து எவ்வாறு

இசைந்த தாயினும் இசையா தாயினும்
அசைந்திடும் முத்தி சாதனம் அவமே
சத்தினி பாதமோ தருமல பாகமோ
உய்த்த காரண காரியம் ஓதுக
பாகம் காரண மாகில் மற்றது
காலா வதியிற் காயா வதியில்
மேலா மென்னும் வினையுறும் அவதியில்
துயரென உயிர்க்குத் தோன்றிடும் அவதியில்
நயமிகும் இறையவன் நல்கிடும் அவதியில்
எதிற் கூடும் ஓதுக இருவினை

---

இசைந்தன - இருளா யிருக்கிற கேவலத்தானத்திலே ஆன்மா அழிவின்றி நிற்க இவனிடத்திலே மகாப்பிரகாசமா யிருக்கிற சிவனுலே மயக்கமாயிருக்கிற கருவிகள் சென்று பொருந்தினபடி எப்படி?—இசைந்ததாயினும் இசையாதாயினும் அசைந்திடும் முத்தி சாதனம் அவமே - அந்தக் கருவிதான் கூடி யுணர்ந்தாலுயினுங் கருவிகள் கூடாமற் கேவலந் தன்னிலே கிடந்தாலுயினும் அது நிற்குதும் நீர் நிலை நிற்கமாட்டாமல் முத்தி சாதனஞ் சொன்னது மிகவும் நன்று யிருந்ததில்லை. இது பெத்தத்தை மறுத்தது.

மேல் முத்தியை மறுக்கிறுர்: சத்தினிபாதமோ தரு மலபாகமோ உய்த்த காரண காரியம் ஓதுக - முன்னே இருண்மல பாகமும் சத்தினி பாதமும் மருவுழி என்றீர், இதில் சத்தினிபாதங் காரணமாக மலபாகம் உண்டாச்சுதோ, மலபாகம் காரணமாகச் சத்தினிபாதம் உண்டாச்சுதோ, இவையிற்றைச் செலுத்தப்பட்ட காரண காரியம் யாதென்று சொல்லுவீராக—பாகம் காரணமாகில் - மலபாகம் காரணமாகச் சத்தினிபாதம் உண்டான தென்னில்—மற்றது காலாவதியிற் காயாவதியின் மேலா மென்னும் வினையுறும் அவதியில் துயரென உயிர்க்குத் தோன்றிடும் அவதியின் நயமிகும் இறையவன் நல்கிடும் அவதியில் எதிற் கூடும் ஓதுக - அந்த மலபாக மென்று சொன்னது எண்ணிறந்த காலஞ் செல்லச்செய்தே அதிலே இன்ன காலத்திலே இவனுக்கு முத்தி யென்றிருக்குமே அந்தக் காலத்தினுடைய எல்லையிலேயோ, எண்ணிறந்த சரீரம் எடுத்துப்போட்டு வருகிறதுக்குள்ளே இன்ன சரீரத்திலே முத்தியென்றிருக்குமே அந்தச் சரீரத்தி

ஒத்த எல்லையில் வைத்தனர் என்னில்
அருவினை தூக்க உருவினை நில்லா
தொருவினை புரிகால் இருவினை ஆகா
ஒப்புறு மாறு செப்புக தேசிகன்
௨௫ அருளுரு என்ற பொருளினை ஆயின்
மாயா உருவினன் மாயா உருவினை
ஏயான் ஏய்ந்தவர் எம்ம னோரே

---

னுடைய எல்லையிலேயோ, ஒன்றுக் கொன்று மேலாய் வருகிற புண்ணிய பாவங்கள் இரண்டுந் துலையொப்பு வந்த எல்லையிலேயோ, எண்ணிறந்த காலம் பிறந்திறந்து வருகிற ஆன்மாவுக்கு இந்தச் செனனம் ஆக்கமென்று தோன்றிற்று அந்த எல்லையிலேயோ, இந்த ஆன்மாக்கள்மேலே மிகவும் பிரியத்தையுடைய கர்த்தா இவனை இன்ன அவதாரத்திலே இரட்சிப்பனென்று உண்டே அந்த எல்லையிலேயோ, இவையிற்றில் எந்த அவதாரத்திலே கூடுமென்று சொல்லுவீராக—இருவினை ஒத்த எல்லையில் வைத்தனரென்னில் - புண்ணிய பாவமிரண்டுந் துலையொத்த அவதாரத்திலே மலபாகம் உண்டாமென்று பெரியோர்கள் சொல்லுவர்களென்று நீ சொல்லின்—அருவினை தூக்க உருவினை நில்லாது - கன்மம் அருவமாயிருந்தபடியாலே புண்ணியம் ஒரு தட்டிலும் பாவம் ஒரு தட்டிலும் போட்டு இரண்டும் ஒத்ததோவென்று தூக்கிப் பார்க்க உருவாகக் காணப்படாது. இதன்றியும்—ஒருவினை புரிகால் இருவினை ஆகா - ஒரு புண்ணியத்தைச் செய்யுமிடத்து அதிலே பாவம் பாதியாகவும் புண்ணியம் பாதியாகவும் பகுத்து நில்லாது, ஒரு பாவத்தைச் செய்யு மிடத்திலே புண்ணியம் பாதியாகவும் பாவம் பாதியாகவும் பகுத்து நில்லாது, புண்ணியமும் புண்ணியமாகவே வரும் பாவமும் பாவமாகவே வரும்—ஒப்புறுமாறு செப்புக - புண்ணிய பாவம் இரண்டுந் துலையொக்கிறபடி எப்படியென்று நீர் சொல்ல வேண்டும். இதன்றியும்—தேசிகன் அருளுரு என்ற பொருளினை ஆயின் - ஆசாரியனுடைய வடிவு அருள்வடிவா யிருக்குமென்று நீர் சொன்னதினுடைய அர்த்தத்தை விசாரிக்கு மிடத்து—மாயா உருவினன் மாயா வுருவினை ஏயான் - கர்த்தாவோ என்றால் ஒருக்காலும் அழியாத திருமேனியினை யுடையவன், அவன் அழிந்து போவதாயிருக்கிற இந்த மாயா சரீரத்

பல்பணி ஞான காரணம் என்னில்
தொல்பணி தொறும்பயன் தொடுப்பத னாலும்
ஒருபணி செய்யாச் சிரபுரச் சிறுவரும்
அரச ராகிய தருணத் தலைவரும்
முதிர்பர சமயத் திதமுறும் அரசரும்
ஞானம் பெற்ற நன்மையி னாலும்
ஈனமில் பணிஅருட் கேதுவன் றென்றால்
ஞானோற் பத்தி நிமித்தம்இத் தொழிலென

---

தைப் பொருந்தான். அப்படியன்று காணும், ஆன்மாக்களை இரக்ஷிப்பான் பொருட்டாக இந்த மாயா சரீரத்தைப் பொருந்துவன் என்னில்—எய்ந்தவர் எம்மனோரே - யாதொருத்தர் இந்த மாயா சரீரத்தைப் பொருந்தினவர்கள் ஆன்ம வர்க்கத்திலே ஒருத்தரொழிந்து வேறொன்றாகச் சொல்லப்படாது. இதன்றி—பல்பணி ஞான காரணம் என்னில் - பலவாகச் சொல்லப்பட்ட சரிதை கிரியை யோகங்களைச் செய்வது காரணமாக ஞானம் உண்டாம் என்னில்—தொல்பணி தொறும் பயன் தொடுப்பதனாலும் - பழைதாகச் சொல்லப்பட்டு வருகிற சரிதை கிரியா யோகங்களைச் செய்து அது காரணமாகச் சாலோக சாமீப சாரூபங்கள் உண்டாமென்று திருவாக்குச் சொல்லியிருக்கையினாலும்—ஒரு பணி செய்யாச் சிரபுரச் சிறுவரும் அரசராகிய தருணத் தலைவரும் முதிர் பரசமயத்து இதமுறும் அரசரும் ஞானம் பெற்ற நன்மையினாலும் - சரிதைக்குள்ளுங் கிரிகைக்குள்ளும் யோகத்துக்குள்ளும் இவையொன்றுக்குள்ளும் ஒரு தொழிலுஞ் செய்யாத சீகாழிக்குத் தலைவரா யிருந்துள்ள நல்ல சம்பந்தரும், இராச குமாரராய் வாலிபத்துக்கெல்லாந் தலைவரா யிருந்துள்ள சேரமான்பெருமாள் நாயனாரும், மிக்க அமண் சமயத்திலே நின்றும் அது சமயமல்லவென்று போந்து சைவமே சமயமென்று அறுதியிட்டுக்கொண்டு நிற்கிற திருநாவுக்கரசு நாயனாரும், இவர்கள் ஒரு தொழிலுஞ் செய்யாமல் ஞானத்தைப் பெற்று நின்ற நன்மைப் பகுதியினாலும்—ஈனமில் பணி அருட்கு ஏதுவன்று என்றால்-குற்றமற்றிருக்கிற சரிதை கிரியை யோகங்கள் ஞானத்துக் கேதுவென்று சொல்லப்படாது என்றால் ஞானல்லவென்று சொல்லி யிருக்கச்செய்தே நீர் ஆமென்று சொன்னால்—ஞானோற்பத்தி நிமித்தம் இத்தொழில் என ஏனோர்க்கு இறை

ஏனோர்க் கிறைநூல் இயம்பிற் றென்னும்
கருவியும் மலமும் பிரிவுற அருள்தரும்
என்றனை கேவலத் தேதும் அறிவிலன்
துன்றிய சகலத் தருள்நிலை தோன்றா
தெவ்வவத் தையில் இறையருள் பெறுகுவம்
செவ்விய ஞான தெரிசன மாவது
நால்வகை மாயைப் பால்வரு ஞானம்
பண்டை ஞானம் இதுபறி தாவரக்
கண்ட ஞானம் இதுவாக் காணில்
ஈனமில் ஞானிக ளென்போர் யாருமில்

---

நூல் இயம்பிற்று என்னும் - ஞானோற்பத்திக்கு நிமித்தமாயிருப்ப தொன்று இந்தத் தொழில்கள், ஞானத்துக்குக் காரணமன்று என்று உம்மை யொழிந்துள்ளோ ரெல்லார்க்குங் கர்த்தா நூல்களிலே அருளிச்செய்து வைத்தது என்னவாக முடியும்? இதன்றியும்—கருவியும் மலமும் பிரிவுற அருள்தரும் என்றனை - அறிவாயுள்ள கருவிகளும் அறியாமையாயுள்ள மலமும் இரண்டும் நீங்கத் தக்கதாக அருட்பிரகாச முண்டாமென்று நீ சொன்னாய்—கேவலத்து ஏதும் அறிவிலன் - மல சம்பந்தமாயிருக்கிற கேவலாவத்தையில் ஆன்மா ஒன்றும் அறியானாகையால் இவ்விடத்து அருட்பிரகாசம் உண்டாகாது—துன்றிய சகலத்து அருள்நிலை தோன்றாது - கருவிகளோடுங் கூடிச் சத்தாதி விஷயங்களினாலே நெருங்கியிருக்கிற சகலாவத்தையில் அருட்பிரகாச முண்டாகாது—எவ்வவத்தையில் இறையருள் பெறுகுவம் - முன் சொன்ன இரண்டு அவதரத்திலும் அருட்பிரகாச முண்டாகாதென்றால் பின்னை எந்த அவதரத்திலேதான் நாம் கர்த்தாவினுடைய திருவருளைப் பெறுவோம்?—செவ்விய ஞானதெரிசனமாவது - மயக்கமற நீர் தெரிசித்த ஞானமாவது—நால்வகை மாயைப்பால் வரு ஞானம் - தனு கரண புவன போகமென்கிற நால்வகையோடுங் கூடிக் கொண்டிருக்கிற மாயையின் பகுதியிலேநின்றும் அறிந்துவருகிற ஞானமாகவேண்டும்—பண்டை ஞானமிது பறிதாவரக் கண்ட ஞானம் இதுவாக் காணில் - இந்த மாயையினாலே அறிந்துவருகிற ஞானமிது எப்பொழுதும் உள்ள ஞானம், இது நீங்கத் தக்கதாக மேல் வருகிற ஞானம் இதுதானாகக் காணப்படில்—ஈனம் இல் ஞானிகளென்போர்

ஞான வேற்றுமை நாடலும் அரிதே
தானும் ஞானமுந் தலைவனும் என்றனை
ஆனபின் இவனும் இவனது ஞானமும்
பாசமும் பாச ஞானமும் என்றிவை
பேசுவர் ஒன்றாப் பெற்றிய ஆகலின்
மும்மைப் பொருட்கும் மும்மைத் தன்மை
செம்மைத் தென்னிற் செலவுகள் எழுதுக
இருவரும் கூடி ஒருபயன் ஆய்த்தென்
றருளினை இவ்வா றபேதிகள் நிலையே

---

யாரும் இல் - ஞானவான்கள் மூன்று லோகத்திலும் இல்லையென்று ஒருத்தரும் சொல்லுவாருமில்லை, நீர் சொல்லுகிற வழக்கெல்லாம் ஞானவான்களாக வேண்டும். ஞானந் திரிலோக்கிய துல்லபமென்கிற திருவாக்குப் பழுதாம். என்னவே, இவர்கள் மடமும் மடப்புறமும் மடவடியாருந் தேவாரமுந் திருமுட்டுந் திருவாபரணமும் இவை தானே ஞானமாகக் கொண்டு நிற்பர்கள் என்பது கருத்து—ஞான வேற்றுமை நாடலும் அரிதே - ஞானத்தினுடைய வேறுபாடறியும் பொழுது எத்தனை பாக்கியஞ் செய்யவேணும், எளிதாக உண்டாகாது. இதன்றியும்—தானும் ஞானமுந் தலைவனும் என்றனை - ஆன்மாவும் சிவனுடைய ஞானமும் சிவனும் என்று மூன்றாகச் சொன்னாய்— ஆனபின் இவனும் இவனது ஞானமும் பாசமும் பாசஞானமும் என்றிவை பேசுவர் ஒன்றாப் பெற்றிய ஆகலின் - சிவனும் சிவனுடைய ஞானமுமென்கையால் ஆன்மாவும் ஆன்மாவினுடைய ஞானமும் பாசமும் பாசத்தினுடைய ஞானமும் இவையெல்லாம் ஒன்றாகக் கூட்டிப் பெரியோர்கள் சொல்லுகிறது முறைமையானபடியாலே— மும்மைப்பொருட்கும் மும்மைத்தன்மைசெம்மைத்தென்னில் செலவுகள் எழுதுக - இவை மூன்று முதலுக்கும் மூன்று ஞானமும் உள்ள தொன்றாகில் அந்தப் பசுஞானமும் பாசஞானமும் போனபடி எப்படியென்று சொல்லவேண்டும். இதன்றியும்—இருவருங் கூடி ஒரு பயன் ஆய்த்து என்று அருளினை - ஆன்யாவுஞ் சிவனுங் கூடி ஒரு முதலாச்சு என்று நீ சொன்னாய்—இவ்வாறு அபேதிகள் நிலையே - இப்படிப் பெத்தத்தில் இரண்டாய் முத்தியில் ஒன்றாயிருக்குமென்கிற சித்தாந்தம் அபேத சித்தாந்தஞ் சொல்லுகிற மாயாவாதிகள்

பதிபசு பாசம் முதிர்அறி வுகளுடன்
ஆறு முன்னர்க் கூறுப் பின்னர்
இருபொருள் நீத்துமற் றொருநால் வகையையும்
ஈனமில் ஞாதுரு ஞானம் ஞேயம்என்
றிசைய மூன்றாய்ப் பசுபதி என்றவற்
றிரண்டாய் இரண்டும் ஒன்றின்ஒன் றாகத்
திரண்டாம் பயனெனும் திருவருள் தெளியில்
சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றும்
என்றிறை இயற்கை இயம்புதல் தருமே

---

சித்தாந்தமா யிருக்கும்—பதி பசு பாசம் முதிர் அறிவுகளுடன் ஆறு முன்னர்க் கூறு - பதியும் பசுவும் பாசமும் பதியினுடைய ஞானமும் பசுவினுடைய ஞானமும் பாசத்தினுடைய ஞானமும் இந்த மிக்க ஞானங்களோடே ஆறுவகையாக முன்னே சொல்லி—பின்னர் இரு பொருள் நீத்து மற்றொரு நால்வகையையும் - அந்த ஆறினும் பசு ஞானத்தையும் பாசஞானத்தையும் விட்டுப் பின்பு நாலாக்கி அந்த நாலுவகையையும்—ஈனமில் ஞாதுரு ஞானம் ஞேயம் என்று இசைய மூன்றாய் - இதிலே பாசமொன்றையும் விட்டுக் குற்றமில்லாத ஞாதுரு வென்றும் ஞானமென்றும் ஞேயமென்றும் இங்ஙனம் பொருந்தத் தக்கதாக மூன்றாக்கி—பசுபதி யென்று அவற்று இரண்டாய் - அவை யிற்றில் ஞானத்தை நீக்கிப் பசுவென்றும் பதியென்றும் இரண் டாக்கி—இரண்டும் ஒன்றின் ஒன்றாகத் திரண்டாம் பயனெனுந் திரு வருள் தெளியில்-இந்த இரண்டும் ஒன்றினிடத்திலே ஒன்று சென்று கூடி இரண்டும் ஒரு பயனாய் நிற்குமென்று நீ சொல்லுந் திருவரு ளின் பகுதியைத் தெளியுமிடத்து—சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றும் என்று இறையியற்கை இயம்புதல் தருமே - திருவாசகம், 'இன்றெனக் கருளி யிருள்கடிந் துள்ளத் தெழு கின்ற ஞாயிறே போன்று, நின்றநின் றன்மை நினைப்பற நினைந்தே நீயலாற் பிறிதுமற் றின்மை, சென்றுசென் றணுவாய்த் தேய்ந்து தேய்ந் தொன்றுந் திருப்பெருந் துறையுறை சிவனே, யொன்றுநீ யல்லை யன்றியொன் றில்லை யாருன்னை யறியகிற் பாரே' என்று திருவாதவூர் நயினார் கர்த்தாவினுடைய தன்மையை அருளிச் செய்தது நீர் சொன்ன அர்த்தத்துக்குத் தருமே! என்ன, தகா

ஒன்றாம் என்ற லன்றியும் உவப்பும்
இன்றாம் என்றால் என்பயன் இயம்புக
என்றனை வினவும் யாவும் விளங்க
வென்றிகொள் கருத்தில் வேண்டினை யாயின்
நதிக்கரை ஆன்எனக் கொதித்தல் மறந்து
வெண்ணெயம் பதிதிகழ் மெய்கண் டவன்அருள்
உள்நிலை யுடையோ னொருவன் உரைத்த
தவப்பிர காசத் தன்மையில் விரித்த
சிவப்பிர காசச் செழுந்தமிழ் உண்மையை

---

தென்பது கருத்து. இதன்றியும்—ஒன்றாமென்ற லன்றியும் உவப்பும் இன்றாம் என்றால் என் பயன் - பசுமுதலும் பதிமுதலும் இரண்டு முதலாயிருக்க, இரண்டு முதலுங் கூடி ஒரு முதலாமென்று நீ சொன்ன தோஷமன்றி அவ்விடத்து ஓர் இன்பமும் இன்பத்தாலுண்டாகிய பிரியமும் இல்லையாமென்றால் இதனால் உனக்குப் பிரயோசன மென்னை? என்னவே, பெறுவானில்லை யென்பது கருத்து—இயம்புக - நான் சொன்ன அர்த்தத்தைத்தானே அல்லவென்றீரே பின்னை இந்தச் சித்தாந்த அர்த்தம் எப்படியிருப்பதொன்றென்று நீர் சொல்லுவீராக—என்றனை வினவும் யாவும் விளங்க வென்றி கொள் கருத்தில் வேண்டினையாயின் - பின்னை எப்படியென்று என்னை நீ கேட்கிறவை யெல்லாந் தெரியத் தக்கதாக உன்னுடைய திடமுள்ள கருத்திலே வேண்டு மென்ப தொன்று உண்டாயின்—நதிக்கரை ஆன் எனக் கொதித்தல் மறந்து - காவேரிக் கரையிற் பசுப்போலே அங்காமோ இங்காமோவென்று நீ பதறிக் கொண்டு திரிகிறதை விட்டு—வெண்ணெயம் பதி திகழ் மெய்கண்டவன் அருள் உள்நிலை யுடையோ னொருவன் உரைத்த - திருவெண்ணெய்நல்லூரென்கிற திருப்படைவீட்டிலே திருவவதாரஞ் செய்யப்பட்டிருக்கிற மெய்கண்டதேவ தம்பிரானாருடைய கடாக்ஷத்தில் உண்மையினைப் பெற்றுடையனா யிருந்துள்ள மறைஞானசம்பந்த நாயனார் எனக்கு அருளிச்செய்த அர்த்தத்தைக் கொண்டு—தவப்பிரகாசத் தன்மையில் விரித்த சிவப்பிரகாசச் செழுந்தமிழ் உண்மையை-முற்செனனத்திலே செய்த தவத்தின் மிகுதிகொண்டு நான் செயப்பட்ட சிவப்பிரகாசமென்கிற நாமத்தோடுங் கூடிக்கொண் டிருக்கிற செழுவிய தமிழி

அருளுடன் ஆய்ந்து கொள்ளத்
திருவருள் வினவல் திருந்திடும் அன்றே.

வெண்பா

தராவலயத் துள்ளோர்கள் தந்தசங் கற்ப
நிராகரணம் என்னல் நிகழ்த்தும்—பிரானை இனி
வெம்பந்தம் நீங்கத் தொழுமின் வியன்மருதச்
சம்பந்தன் வந்தருளும் தான்.

---

லுண்டாகிய அர்த்தத்தை—அருளுடன் ஆய்ந்து கொள்ள - ஆசாரிய னுடைய அனுக்கிரகத்துடனே கூடி ஆராய்ந்து கொள்ளவே—திருவருள் வினவல் திருந்திடுமன்றே - இந்தத் திருவருளின் பகுதி எப்படியிருப்ப தொன்றென்று என்னை நீ கேட்ட சந்தேகங்களெல்லாம் நன்றாக உனக்கு விளங்காநிற்கும். ௧௩

பாயிரத்திலே ஆறுபேரென்று சொல்லி அகவலிலே எட்டுப் போனது பாடாணவாதி பேதவாதி சமவாதி இவர்கள் மூன்று பேருடைய பெத்தம் மூன்றும் ஒன்றாயிருக்கையினாலும் மூன்று பேருடைய மூத்தியும் பேதவாதமா யிருக்கையினாலும் இவர்கள் மூன்று பேரும் ஒன்று, அவிகார வாதம் ஒன்று, சங்கிராந்தவாதம் ஒன்று, ஐக்கியவாதம் ஒன்று, பரிணாம வாதம் ஒன்று, சைவர் ஒன்று ஆகச் சமயிகள் ஆறு.

**(உரை)** தராவலயத்து உள்ளோர்கள் தந்த - இந்தப் பூமியிலுண்டான சமயிகளாலே சொல்லப்பட்ட—சங்கற்ப நிராகரணம் - சங்கற்ப நிராகரண மென்கிற சாத்திரத்தை—என்னல் நிகழ்த்தும் பிரானை இனி வெம்பந்தம் நீங்கத் தொழுமின் - ஒன்றும் அறியாத என்னைக் கொண்டு சொல்லுவிக்குஞ் சுவாமியாயுள்ள என்னுடைய ஆசாரியனை இனி உங்களுடைய வெவ்விய செனன துக்கங்களெல்லாம் நீங்கத்தக்கதாகத் தெண்டன்பண்ணி வழிபட்டு வாருங்கோள்—வியன்மருதச் சம்பந்தன் வந்து அருளும் தான் - மிக்க சிறப்போடுங் கூடியிருக்கிற மருதத்தூர்க்கு கர்த்தாவாயிருந்துள்ள மறைஞான சம்பந்தனென்கிற திருநாமத்தினையுடையவன் எழுந்தருளி உங்களுக்கு அனுக்கிரகத்தைச் செய்யாநிற்கும்.

பொற்பம ராப்பல சொற்றுறை யோரைப் பொதிந்தனசங்
கற்ப நிராகர ணத்துரை காட்டினன் காற்றியங்கி

லற்ப விராவிடை மங்கைபங் கின்றி யணைந்தஎங்கோன்
சிற்பன் நிராமயன் ஞானப்ர காசன்நம் தேசிகனே.

திருச்சிற்றம்பலம்

---

[**சங்கற்பநிராகரணம்** கொ. சண்முகசுந்தர முதலியாராலும் காஞ்சி - நாகலிங்க முதலியாராலும் உரையோடு பதிப்பிக்கப்பட்டிருப்பினும் இருவரும் 'உரையிட்டார் பெயர் கிடைத்திலது' என்று எழுதி வைத்தனர். இரண்டு பதிப்பிலும் காணப்படும் உரைகளுட் பேதம் சிறிதும் இல்லை. இரண்டுக்கும் மூலமாய் உரைப்பிரதி இராசாங்கக் கையெழுத்து நூல் நிலயத்தி லுள்ளது. சிறிதும் மாறுதலின்றி அதிலுள்ளபடியே உரை இங்குப் பதிப்பிக்கப்படுகின்றது. இது ஞானப்பிரகாச தேசிகர் உரையென அப் பிரதியிறுதியிற் காணப்படும் செய்யுள் கூறுகின்றது. ஞானப்பிரகாசரென்னும் பெயருடையார் பல்லோர் விளங்கியிருக்கின்றனராகலின், இவர் இன்னாரென்று துணிந்துரைக்கக் கூடவில்லை. சீகாழிச் சிற்றம்பலநாடிகள் சீடர்களுள் ஒருவரும் காஞ்சி ஞானப்பிரகாசராதீன முதல்வரும் ஒரு ஞானப்பிரகாசர். **இருபாவிருபதிற்கும் சிவப்பிரகாசத்திற்கும்** உரையிட்ட மதுரைச் சிவப்பிரகாசர்க்குக் குரு ஒரு ஞானப்பிரகாசர். தருமபுராதீன ஸ்தாபகராகிய ஸ்ரீ ஞானசம்பந்த தேசிகர்க்கு ஞான குருவாகிய கமலை ஞானப்பிரகாசரென்னும் பெரியார் திருவாரூரில் இருந்தவர். சிவஞானசித்தியார் பரபக்கத்துக்கு உரையிட்டார் திருவொற்றியூர் ஞானப்பிரகாசரென்று தெரிகிறது. சுபக்ஷத்துக்கு உரையிட்டாருள் ஒருவர் யாழ்ப்பாணம் ஞானப்பிரகாசர். இவர் ஐவரும் வேறு வேறு இடத்தையும் மரபையுஞ் சார்ந்தவர்கள். இவ்வுரை இயற்றியவர் இறுதியகவலில் 'நதிக்கரை ஆன் என' என்றதற்குக் காவேரிக் கரையிற் பசுப்போலே என்று வேறு நதியைக் குறிக்காது, காவேரியைச் சுட்டலால், அவர் தேசம் காவேரிக் கரையி லுள்ளதொன்றாக வேண்டுமென்று தோன்றுகிறது.

—S. **அனவரதவிநாயகம் பிள்ளை**]

# உமாபதிசிவாசாரியார் வரலாறு

[இவ்வரலாறு, திரு. ஆ. சிங்காரவேல் முதலியாரவர்கள் தொகுத்த 'அபிதான சிந்தாமணி' என்னும் நூலில் கீழ்வருமாறு குறிக்கப்பட்டுள்ளது.]

இவர் சோழநாட்டில் திருப்புலியூரில் சைவவேதியர் குலத்தில் அவதரித்து வேதசிவாகமங்களை யோதி யுணர்ந்து மூவாயிர நாட்களுக்கு ஒரு நாளில் நடராஜன் பூசை புரிந்து சிவிகையூர்ந்து செல்வோர், திருக்கடந்தை மறைஞான சம்பந்தர் ஆண்டு மதுகர விருத்தி செய்வாரை நோக்காது செல்லுகையில் பகற்குருடன் போகிறான் என அவர் கூறக்கேட்டு, அவரது திருவடி பணிந்திருக்கையில் ஒரு நாள் இவரது பரிபாகமறிய மறைஞான சம்பந்தர் நெய்வார் தெருவில் சென்று அக்காருகர் பாவிற்கு இடும் கஞ்சியினைக் கையேற் றுண்கையில் உமாபதியாரும் அக்கையினின்றும் ஒழுகிய கூழையுண்டு உடன் வதிந்தனர். மறைஞான சம்பந்தர் இவரது பரிபாகமறிந்து சிவஞானபோதத்தை யுபதேசித்தனர். இவ்வகையிருக்கையில் இவரைத் தில்லை மூவாயிரவர் ஆசாரபிரஷ்டனென்று, விலக்கக் கண்டு அரசனால் கொற்றவன் குடியில் ஓர் மடங் கொண்டு அதில் தாம் நிட்டை புரிந்திருக்கையில் தமக்கு நடராஜன் பூஜை முறைவர அக்காலத்து உமாபதியார் பூசிக்கச் செல்ல அத்தில்லை மூவாயிரவர் விலக்க உமாபதியார் மீண்டும் மடமடைந்து மானதத்தால் பூசித்திருந்தனர். தடுத்த அந்தணர் திருக்கோயிலடைந்து திருக்கதவம் நீக்கிப் பூசைப் பெட்டகத்தை நோக்கப் பெட்டகம் காணாதவராய்த் திகைத்து வருந்துகையில் நாம் உமாபதிப்பால் இருக்கின்றோமென அசரீரியாய்க் கூறக்கேட்டு அந்தணரனைவரும் உமாபதியாரைப் பணிந்து அழைத்து வந்து பூசை புரிவித்தனர். இவ்வகை இவர் கொற்றவன் குடியில் எழுந்தருளியிருக்கையில் பூர்வஞ்செய்த பாபவசத்தால் வேதியன் ஒருவன் புலையனாய்ப் பெற்றான் எனும் பெயருடன் வளர்ந்து ஒரு புலைச்சியை மணந்து தன் பிறப்பில் அருவருப் படைந்து பூருவ புண்ணியத்தால் சுற்றத்தை விட்டுத் தன்னூரை

விட்டு நீங்கித் தில்லையடைந்து கட்டைவெட்டித் திருச்சிற்றம்பலமுடையார் திருமடைப் பள்ளிக்கு வேதியர் வழியாகக் கொடுத்து வருகையில் பரிபாகமடையச் சிவபெருமான் பெற்றான் சாம்பான் கனவிடைத் தோன்றி உமாபதிசிவாசாரியருக்குக் கொடுக்கும்படி திருமுகப் பாசுரம் "அடியார்க் கெளியன் சிற்றம்பலவன் கொற்றங், குடியார்க் கெழுதிய கைச்சீட்டுப், படியின்மிசைப்—பெற்றான் சாம்பானுக்குப் பேதமறத் தீக்கை செய்து, முத்தி கொடுக்க முறை" என எழுதிய திருமுகங் கண்டு சிரமேற்றாங்கி அதனைப் பத்திரப்படுத்திக் கொற்றவன் குடிவந்து அங்குச் சில நாள் மடத்தில் விறகு வெட்டித் தரும் திருப்பணி செய்துவரு நாட்களில் ஒருநாள், மழையால் பெற்றான் சாம்பான்வரத் தாமதித்ததால் போஜன வேளை தாமதிக்க உமாபதியார் காரணங் கேட்க அந்தணர்கள் மடைப்பள்ளிக்கு நாடோறும் ஒருவர் விறகு தந்து வருவர்; அவர் இன்றைக்கு வாராததனால் தாமதித்தது என்றனர். இதனைக் கேட்ட உமாபதியார் நாளை அவர் வரின் நம்மிடைக் கூறுக என்றனர். அவ்வாறே பெற்றான் சாம்பான் மறு நாள் இரண்டு நாள் விறகும் கொண்டுவரக் கண்டோர் உமாபதியாரிடங் கூற உமாபதியார் பெற்றானை யழைத்து நீ யார் எனப் பெற்றான் இறைவன் தந்த திருமுகத்தை வைத்துத் தொழலும் அத்திருமுகத்தை வேதியர் உமாபதியார்க்குத் தர அதனை நோக்கிச் சிரத்தில்வைத்துத் திருநயனங்களில் ஒற்றி ஆராணையை யெண்ணி அப் பெற்றான் சாம்பானுக்குச் சத்தியோநிருவாண தீக்ஷையால் முத்தியளித்தனர். இவர் சிதம்பரத்தில் துவசாரோகணம் தடைபட்டிருக்கக் கொடிக்கவி அருளிச்செய்து அதை யேற்றினர். இவர், பௌஷ்கர வியாக்யானம், கோயிற் புராணம், திருத்தொண்டர் புராணசாரம், திருமுறைகண்ட புராணம், சேக்கிழார் நாயனார் புராணம், திருப்பதிக் கோவை, சிவப்பிரகாசம், திருவருட் பயன், வினாவெண்பா, போற்றிப் பஃறொடை, நெஞ்சுவிடு தூது, உண்மை நெறிவிளக்கம், சங்கற்ப நிராகரணம், சிவபுண்ணியத் தெளிவு முதலிய அருளிச் செய்தனர். இவர் காலம் சாலிவாகனசகம் (கஉஉஅ) என்பர்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சீகாழிச் சிற்றம்பல நாடிகள்

அருளிச்செய்த

# துகளறுபோதம்

---

## காப்பு

[1]எல்லாம்பொய் என்றே எனைக்காட்டி எம்பிரான்
சொல்லாத பேரறிவு தான்சொல்லி—நல்லதொரு
அற்புதமா மானந்த மாங்கருத்தல் செப்புதற்குக்
கற்பகத்தின் தாளிணையென் கண்.

## பாயிரம்

1. பதிபசு பாசந் தெரிந்தந்தப் பாச
விதிவழியை வென்றதனின் வேறும்—கதிவழங்கும்
மெய்கண்டான் சந்தான [2]மேவிச் சிவானந்தங்
கைகண்டார் காணார் கரு. க

2. உற்ற சரியை ஒழியாத நற்கிரியை
குற்றமிலா யோகக் குறிநெறியும்—முற்றிப்
பிறந்தார்கள் தாமறியப் பேசுகேன் அன்றிப்
பிறந்தார் அறியாத பேறு. உ

3. எல்லாங் கழற்றி இறைவ [3]னுடன்கலக்க
வல்லார்கள் [4]சொன்ன வழிபலவும்—சொல்லரிய

---

[1]இச்செய்யுள் ஒரு பிரதியில் மாத்திரம் காணப்படுவது.
(பிரதிபேதம்)—[2]மேவிற். [3]னொடுங்கலக்க. [4]கண்ட.

[1]தம்பிரான் ஆகமத்திற் சாற்றும் அவதாரமும்
எம்பிரான் தந்தான் எமக்கு. ௩

## பூதப் பழிப்பு

4. மண்ணுக் குயிராகி வந்துரத்துத் தான்தரிக்கும்
எண்ணும்உரோ மாதிஇதன் காரியமாம்—கண்ணிற்
பிறவுங் கடினமாய்ப் பேசியது தானும்
துறவுமுதற் பூதத் தொழில். க

5. நீர்க்குயிராய் நின்றே நெகிழ்ந்து குளிருமே
பார்க்கில்நீ ராதி பகர்கருமம்—கார்க்குரிய
[2]வெள்ள முதலாகும் மெய்யுணரின் அப்புத்தான்
அள்ள விடப்படா தாம். உ

6. வன்னிக் குயிராகி [3]வந்துசுட் டொன்றுவிக்கும்
பன்னுபசி யாதி பயில்கருமம்—[4]மன்னும்
விளக்காகிப் பந்தமாய் [5]வேருக நிற்குந்
துளக்கமிலாத் தேயுத் தொழில். ௩

7. தேடப் பிரித்துத் திரட்டுவிக்குஞ் செய்கருமம்
ஓடல்முத லோவா உயிர்மருத்து—நாடில்இவை
[6]யல்லவாம் வாயு அருட்குருவாற் காண்பதன்றிச்
சொல்லவா ராதே துணிந்து. ௪

8. இரந்தரமாய் நின்றே இடங்கொடுக்கும் வானம்
பரந்த குரோதமுதற் பார்க்கில்—விரிந்த
கருமமாய் வேருகுங் காணலாம் உண்மைக்
குரவனு லென்றே குறி. ரு

9. வட்டம் அறுகோணம் மாயாத முக்கோணம்
இட்ட பிறைசதுர மேவடிவம்—எட்டரிய
வேதன்மால் மிக்க விடையோன் மகேசனுடன்
ஆதி அதிதெய்வ மாம். சு

(பி - ம்)—[1]தம்பிரான் ருள்க டணவாத வாதனையும். [2]வெள்ளமுத லாதியுமாம். [3]வந்துசுட்டிங் கொன்றுவிக்கும். [4]மென்றும். [5]வேருகி. [6]யல்லவாய்.

10. இப்படியே பூதத் தியல்பு தனைத்தெளிந்தே
அப்படிநீ [1]நில்லாமல் ஆங்கறிந்திட்—டெப்படியுந்
தோன்றாமல் [2]தேசிகன்முன் சொன்னபடி கண்டிருந்தால்
ஊன்றா யதுவாம் உடம்பு. எ

## பொறியற வுணர்தல்

11. பூத [3]மிடமாய்ப் பொருந்தும் பொறிபுலன்கள்
நாதனரு ளாலேநீ நாடியவை—ஏதமெனத்
தத்தம் உருவுணரத் தானகலும் அப்போதே
சத்தமுத லாதிவிடும் தான். க

12. சத்தாதி யைந்தினையுஞ் சந்தித்து நீஅகல
அத்தால் வரும்பயன்கள் [4]ஆங்ககலும் —எத்தாலுங்
காணாமல் அவ்விடயங் கைகழலக் கைகழலும்
நாணாப் பிறப்பின் நவை. உ

13. வாக்காதி அத்துடனே நீங்கவச னாதிவிடும்
நீக்காத உட்கரணம் நீங்குமே—தாக்கி
மனது முதலாக வந்தவந்த போது
தனது செயலுணரத் தான். ௩

## அந்தக்கரண சுத்தி

14. மன்னும் மகாரம் மனஞ்செலுத்தும் புத்தியினை
உன்னும் உகாரம் உபகரிக்கும்—முன்னாகும்
ஆங்காரந் தன்னை அகாரம் செலுத்தியிடும்
நீங்காத சித்தம்விந்து நேர். க

15. அந்தக் கரணம் அகல அதிற்கூடுந்
தொந்தக் கலாதித் துரிசறுமே—பந்திக்குஞ்
சித்த [5]மலமறுத்துத் தீர உனக்கேற
ஒத்த படியே உணர். உ

(பி - ம்)—[1]யல்லாமல். [2]தேசிகன்றான். [3]வுடம்பாய்ப். [4]ஆறும், ஆறுமே. [5]மயலறுத்துத்.

## கலாதிஞான நிராகரணம்

16. போங்கு புலனருந்தப் போதந் தருமாயை
தங்குகலை யாதி தருஞானம்—இங்கிதனை
நீங்குபடி மாணவக நின்போதம் [1]ஒன்றிரண்டு
தூங்குபடி நில்லாய் துணிந்து. க

17. கால நியதி கலையாதி தத்துவங்கள்
சாலஅறி விச்சைதொழில் [2]தானமுத்தல்—மூலமாம்
மாயை மயக்கல் வரைத்தல் [3]வினைகூட்ட
லாயவிட லாமென் றறி. உ

## சுத்ததத்துவ தூடணம்

18. ஆன அதனால் அழுந்தினால் [4]ஆசதற்கேன்
ஈன வயிந்தவத்தின் எல்லைகாண்—ஊனமிலாப்
போகங் கருமானாற் பொல்லாதோ புண்ணியத்தின்
ஆகந் துணையானார்க் காம். க

19. சுத்தவித்தை யாதிமுதற் சொன்னஎழ் தத்துவமும்
ஒத்து நடத்தியிடும் ஓவாமல்—வித்தைசெயல்
ஏறிக் குறைந்தொத்தல் எப்போதும் பார்த்திடவே
மாறிப் பிறந்தகலு மாறு. உ

## தத்துவாதீதம்

20. மண்முதலாம் நாதாந்த மாய்வந்த தத்துவத்தின்
உண்மையறிந் தெல்லாம் ஒழிந்தாயே—எண்ணில்இவை
தத்துவா தீதமெனச் சாற்றுங்காண் சைவமறை
அத்துவா எல்லாம் அற. க

21. இப்பரிசே ஐந்துசுத்தி எய்தியதால் எப்போதுஞ்
செப்பரிய மாயாதி தீருமே—அப்பரிசே
ஆங்கவற்றி னோடே அழியும் வினைமலந்தான்
நீங்கவற்றோ நீங்கா நிலை. உ

---

(பி - ம்)—[1]ஒன்றிரண்டுந். [2]தான்பூத்தல். [3]வினைக்கூட்ட. [4]ஆசறற்கே.

## சகல தரிசனம்

22. நின்றுநின்று வந்த நிலைதோறும் நீஅறிந்த
தன்றிஅவை தன்னை அகன்றாயே—இன்றிவைதான்
முத்தி படுஞ்சகலம் முன்னம் படுஞ்சகலம்
பெத்தமது வென்றுநீ பேசு. க

23. அஞ்சு வகையாக ஆறாறும் நீத்ததற்பின்
விஞ்சிவரும் ஆணவத்தின் மேலீடு—வஞ்சமறச்
சாற்றில்அது கேவலமாம் தான்கழித்துப் போந்தநிலை
சாற்றில் அதுசகலந் தான். உ

## கேவலம்

24. அன்றிவந்த தத்துவங்களெல்லாம் அகன்றிடவே
ஒன்றிநின்ற ஆணவந்தான் ஒன்றுமே—என்றுந்தான்
நீங்கா இருள்விழிபோல் நிற்குமே ஆன்மாவும்
பாங்காக ஆங்கே பதிந்து. க

25. பகலிழந்த வான்போற் பாவுமலம் நீயாய்
இகலறவே நின்றாய் இழந்தாய்—அகலறிவு
வாடாத முத்தியினில் [1]வாய்த்தஅருட் கேவலம்நீ
நாடாத கேவலமுன் னாள். உ

## கேவல தரிசனம்

26. ஒன்றுந் தெரியா ஒழியா இருளாகி
இன்றளவும் நின்ற [2]திதுவோதான்—ஒன்றாகிச்
செம்பிற் களிம்புபோற் சேர்ந்துநின்ற ஆணவந்தான்
அம்புநிழற் போலென் றறி. க

27. கருவி கரணங் கழன்றுங் கழலா
இருளின் பெருமையிது என்னே—இருள்தான்
விடிகைக் கிருண்ட மிகுதிபோல் மாசு
மடிகைக் கிருண்டதுகாண் மற்று. உ

## கேவலாதீதம்

28. வானில் இரவிவர வல்லிருள்போ மாறுபோல்
ஈன இருள்அகல்வ தெக்காலம்—மானே

---

(பி - ம்)—[1]வாய்ந்தஅருட். [2]திசைவோதான்.

அறிந்தாய் இருளென் றறியாமை தன்னைப்
பிறிந்தாயோ இல்லையோ பேசு. க

29. இந்த இருள்ஒழிய ஏதும்நான் காண்கிலேன்
இந்த இருள்அகல்வ தெப்படியோ—இந்த
அறியாமை நின்றால் அதனைநீ காணாய்
அறியா தறிந்தனையோ அன்று. உ

## தன்னுண்மை

30. அந்த மலமாம் அறியாமை கண்டாயே
அந்த அறிவுநீ ஐயனே—தொந்தஇருள்
போனதே [1]உன்னைவிடப் போக்கித் [2]திரோதையரு
ளானதே கண்டாய் அறி. க

31. வைத்த அவதாரங்க ளெல்லாம் உடன்வந்தும்
அத்தகைமை கண்டும் அறியாயால்—முத்தனுப்
பாச அறிவும் பதியறிவு மன்றியே
ஆசறவே நின்றவன்நீ யாம். உ

## சைதன்னிய தரிசனம்

32. கண்ணில்இருள் போனாலுங் கண்தன்னைக் காணாபோல்
எண்ணும்இருள் போனால் எனைஅறிய—வொண்ணாதோ
கண்போற் சடமோநீ காட்டியதுங் கண்டறிந்த
ஒண்போதம் நீயென் றுணர். க

33. இருட்கும் ஒளிக்கும் இடமாகும் வான்போல்
அருட்கும் மருட்கும் அகமாய்ச்—சுருக்கமிலா
நீசத் தசத்தன்று நேரே சதசத்த
னாய்சத் ததுவசத்த தாம். உ

34. அறியும் அறிவுநீ யன்றோ உனக்குச்
செறியுமலம் நின்றதோ செப்பாய்—அறிவுதனைப்
பாராதே பார்த்தறிந்து பாசப் பழக்கமதில்
வாராத தன்றோ வழக்கு. ந

---

(பி - ம்)—[1]உன்னைவிட்டுப். [2]திரோதைமரு.

## ஞான தரிசனம்

35\. அறிந்தறிந்து வந்த அவதாரங்கள் தோறுஞ்
[1]செறிந்தறிய நின்றதெது தேரின்—[2]பிறிந்தகனின்
நின்ற [3]தறியாமல் நிகழ்த்தியது நீக்கிஉனை
இன்றறிய வைத்ததருள் என். க

36\. அந்த அருள்உனக்கிங் காதார மாய்அல்லின்
இந்து வெனஎறித்திட் டேகமாய்—முந்தி
உனைஉனக்குத் தான்விளக்கி ஓவா துணர்த்தும்
தனைஉனக்குக் [4]காட்டுமே தான். உ

37\. எல்லாம்பொய் [5]என்றிங் கிருந்தேனும் நானன்றோ
நல்லாய் எனைஅறிந்தேன் நானன்றோ—சொல்லாடும்
நான்பிரம மன்றி நடுவே உணர்த்துதற்கு
வான்பிரமம் உள்ளதோ மற்று. ங

38\. அன்றுமுதல் இன்றளவும் அண்ணல்அறி விப்பதன்றி
இன்றறிவேன் நான்என் றியம்புவதென்—என்றும்
அவத்தை தனில்உணர்த்தி ஆங்கருத்தி இன்றித்
தவத்தில் உணர்த்தினர்ஆர் தான். ச

39\. உன்அறிவை நீயே உணர்வையே யாமாகில்
இங்கெடுநாட் பாசத் திவையாயே—உன்அறிவை
நீங்கா அறிவாகி நீரும் இரதமும்போல்
ஆங்காண் அரனூர் அருள். ரு

40\. உன்அறிவுக் குள்ளே உணர்வாய் ஒழியாத
தன்அறிவு தான்உனக்குத் தாரகமாய்ப்—பின்னமற
ஒன்றாய் ஒழியாமல் உள்ளடங்கி உள்ளபடி
நின்றால் அதுவாவை நீ. சு

41\. இச்சை உயிர்க்கிரங்கல் ஞானம் இசைந்துணர்த்தல்
வைச்ச கிரியை வயநடத்தல்—நிச்சயமாஞ்

(பி - ம்)—[1]செறிந்தறிந்து. [2]பிறிந்தகனை. [3]தறியாமை.
[4]த் - தான்விளக்கும். [5]என்றே - யி.

சத்தியிவை மூன்றினையுந் தந்ததொரு சத்திகாண்
முத்தனே பார்நீ முயன்று. எ

## பரைதரிசனம்

42. கிரியைஅறி விச்சை கிளர்ந்தசத்தி ஏதோ
பெரியபரா சத்தியெனப் பேசாய்—[1]தெரியிலதிங்
காரும் அறியா அகண்டபரி பூரணமாய்ப்
பேரறிவாய் நிற்கும் பெற. க

43. அந்த அறிவும் அறிவன்றோ இப்போது
தந்த அறிவும்அது தானன்றோ—வந்த
அறிவிற் கிளைத்ததுகாண் அவ்வறிவிங் கேதோ
நிறைவிற் கிளைப்பற்ற நேர். உ

44. அறிவார்க் [2]கறிவித்திங் கல்லாத தாகா
அறிவாய் விகற்ப மறியா—அறிவேகாண்
கண்பெற்றார் கண்ட கதிரொளிபோற் கண்டதனை
விண்பற்றாய் நில்லதிலே மேல். ங

## பரையில் வியாத்தம்

45. விண்ணிற் கதிரோன் விளங்கி விரிந்ததுபோல்
கண்ணிற் கதிரோன் கலந்ததுபோல்—நண்ணிப்
பரைநிறைவில் நீயும் பதிவையே யாகில்
உரையிறந்திட் டொன்றாவை யுற்று.

## பரையில் யோகமும் போகமும்

46. விண்ணில் விகற்பமற மேவியகால் நின்றதுபோல்
நண்ணும் பரையதனில் நண்ணியே—எண்ணிறந்து
நீர்உறங்குந் தன்மைபோல் நிற்கைபரை யோகம்அதிற்
சீருறலே போகமெனச் செப்பு.

---

(பி - ம்)—[1]தெரியிலது வாரும். [2]கறிவித்தங்.

## [1]சுத்த பராயோகமும் சாக்கிரமும்

47. *நீங்காத [2]பேரறிவு நீங்காமற் [3]கண்டநீ*
*நீங்காமல் நின்றபடி நின்றதனின்—நீங்காமல்*
*நின்றுவிட லன்றோதான் நின்மலன்தன் பேரறிவில்*
*ஒன்றுபடல் [4]என்னும் உரை.* க

48. எத்திசையும் [5]ஒன்றாம் இறையறிவி லேஅழுந்தல்
*சுத்தபரா [6]யோகமெனச் சொல்லுமே—[7]நித்தமறை*
*யத்தன்மை [8]கண்டால் அதுமுத்தி சாக்கிரமாம்*
*சித்த மயல்அறவே தேர்.* உ

## [9]சாக்கிராதீதம்

49. *நின்ற [10]அறிவறிகை நீங்காமை சாக்கிரமாம்*
*அன்றி அவிழ்தல் அதீதமாம்—[11]சென்றறிவை*
*நீங்காமை நின்று நெடிது துயில்கொளவே*
*வாங்கா தறிவாய் வர.*

## [12]பரையி லதீதம்

50. *இவ்வறிவு [13]காண்டல் இருள்தீருஞ் சாக்கிரமாம்*
*அவ்வறிவு காணா ததீதமாம்—இவ்விரண்டும்*
*பாராமல் நிற்றல் பரையி லதீதமாம்*
*ஆரா அறிவகன்ற தால்.* க

51. *ஈசனறி வாகிஎல்லாம் இன்று கழன்றகன்றாய்*
*பாசம்மிக வைத்தனிற் பற்றாதே—கூசாமல்*
*நேராக நீங்கிஅதில் நின்ற சுவடறவே*
*வாராய் சிவமேல் வர.* உ

---

(பி - ம்)[1]*முத்திசாக்கிரம், சுத்தபராயோகமும் முத்திசாக்கிரமும்.* [2]*பேரறிவின்.* [3]*கண்டுநீ.* [4]*என்றறிநீ யுற்று.* [5]*ஒன்றாய்.* [6]*யோகமெனத் துணிநீ.* [7]*சத்தியமே.* [8]*காண்டல்.* [9]*முத்திசொற்பனம் சாக்கிராதீதம்.* [10]*அறிவறிவை.* [11]*சென்றறிவி னீங்காமல்.* [12]*முத்தி சுழுத்தி பரையிலதீதம்.* [13]*கண்டால்.*

## [1]சுத்தாவத்தை

52. அறிவடையச் சென்றங் கதீதமாய் நின்ற
குறியிறந்திட் டொன்றுங் குறியா—நெறியேது
சுத்தவத்தை மைந்தாஉன் தொல்லைமலம் இல்லைஇல்லை
[2]அத்துடனே செல்வததுவாம்.

## [3]சுகரூபம்

53. பைய இருந்து பதைப்பற்ற பின்உனக்குத்
துய்ய சுகப்பிரபை தோன்றுமே—ஐயனே
கண்டாய் சிவபூமி காட்சி யறக்கலந்து
கொண்டாள்வன் கண்டாய் குறித்து. க

54. விழுந்த அவதாரத்தில் விஞ்சு சுகந்தான்
எழுந்ததிது எங்கே இறைவா—மொழிந்தருளாய்
மாமணியிற் சோதி மலர்ந்த பிரபைபோ
லாம்அரன்தன் பாலே அது. உ

55. துன்பமற்ற [4]இந்தச் சுகப்பிரபை தன்னையே
இன்பசத்தி [5]என்றறிநீ எப்போதும்—அன்புறவே
நின்றதிலே ஆறி நிலாவு நிலாவும்போல்
மன்றல் தரமணந்து வாழ். ங

56. தேனூறும் இன்பச் சிவவடிவம் இப்படியோ
வானோர் காணாத மன்னவனே—ஞானா
இதுவும்ஒரு சத்தி [6]இறைவர்க்க தானால்
எதுமுத்தி சொல்லாய் இனி. ச

## [7]சுகாதீதம்

57. இந்தச் சுகத்தில் இனிநீ விழியாமல்
அந்த அறிவின் அயர்ந்ததுபோல்—தொந்தமறப்

---

(பி - ம்)—[1]முத்திதுரியம் சுத்தாவத்தை. [2]அத்தனுடன். [3]சுகரூபம் துரியம். [4]இன்பச். [5]என்னு மிருக்காதி. [6]இறைவற் கிதனால், இறைவர்க் கதனால். [7]முத்திதுரியாதீதம் சுகாதீதம்.

போதாய் இதுவே சுகாதீதம் பொய்யற்றோர்க்
காதார மான அருள். ௧

58. ஒன்றுஞ் சுகவடிவுக் குள்ளான தம்பிரா
னன்றி ஒருபொருளும் ஆகாதே—நின்றமுழ்ந்திச்
சொல்லரிய இந்தச் சுகத்துக் கதீதமாய்
நில்அவன் தா னேமே நிலை. ௨

## [1]சிவப்பேறு

59. எல்லாங் கழன்ற இடமே சிவமென்று
சொல்லா [2]டுவர்கழன்ற தூயோர்கள்—நல்லாய்கேள்
நின்றபடி தானே நிலையா நிலையதனில்
நின்றுவிடு நேராக நீ. ௧

60. வானகத்தில் வானும் மணத்தில் மணமும்போல்
[3]ஆனசுகப் பேற்றில் [4]அழுந்திஅது—தானாகும்
ஆண்டகுரு நாதா அடியேன் பெருவாழ்வை
மீண்டுசொல உண்டோ விதி. ௨

61. நீயுஞ் [5]சிவமுமாய் நின்றாயோ நின்றிலையோ
ஆயஅடி யேனே அதிகாரம்—நாயனே
ஒன்றன் றிரண்டன் றிரண்டொன்று தானன்று
நின்றதொரு தன்மை நிலை. ௩

62. சாற்றில் அதற்குவ்மை தாடலைபோற் சன்மார்க்க
வேற்று விதிபலவும் வேண்டாவே—போற்றரிய
நித்தனே சுத்தனே நித்தியா னந்தனே
அத்தனே முத்தனே ஆங்கு. ௪

63. அந்தச் சுகத்துக் கதீத அவத்தை யென்பர்
பந்தமற்ற முத்திப் பயனறியார்—அந்தோ
பிறியாத இன்பப் பெருமானைப் பெற்றும்
அறியாத வாதனையால் ஆங்கு. ௫

---

(பி - ம்)—[1]சுகப்பேறு. [2]டு - முன்னே சுருதிமறை. [3]லான சிவப். [4]அழுந்தியவா. [5]சிவமாகி.

## பரமானந்த தரிசனம்

64. நின்ற நிலைசிவமாய் நின்றாயே நின்மலனும்
என்றும் பயனாய் இருந்தானே—அன்றோ
அவனுக் கிதமே தவனாகி நின்ற
இவனுக் கிதமே இனி. க

65. அன்றே தொடங்கி அனைத்துயிரும் தானாகி
ஒன்றாகி நின்றவருக் கின்பூட்டிக்—குன்றாமற்
கொண்டுவிட லன்றோநம் கோமாற் கிதமென்று
[1]கண்டுகொள்நீ இந்தக் கருத்து. உ

66. பார்க்கரிய இந்தப் பரம சுகந்தன்னைச்
சேர்ப்பன்உயிர்க் கென்றிறைவா செப்பினையே—மாற்ற
ஆனந்தம் ஆருயிர்கட் கண்ணல் அருத்துவது [ரிய
தான்எங்குப் பெற்றவா சாற்று. ங

67. பெற்றருந்தி இன்பம் பிறர்க்கும் அருத்தினனோ
உற்றபர மானந்தம் உள்ளதோ—மற்றிதுதான்
என்றுநீ கேட்கில் இறையுருவம் ஆனந்த
[2]மன்றிவே றொன்றில்லை யாம். ச

68. ஆனபர மானந்த மாகின்ற எல்லையே
ஊனமிலா உண்மைதனில் ஒன்றுபடல்—ஈனமறத்
தானான போது தணவா தெழுந்தசுகம்
மானே அதுவா மதி. ரு

## பரமானந்த யோகம்

69. விளைந்தபர மானந்த வெள்ளந் தனிலே
துளைந்துதுளைந் தாடியதில் தோன்றா—வளைந்துன்னை
நீர்போல் அமிழ்த்தியதன் நீள்நிழல்போல் தான்கரந்
பார்போல் தரிப்பாகும் பார். [து

(பி - ம்)—[1]பண்டைமறை சொல்லும் பரிந்து. [2]மென்றுரைக்கு மாகமநூ லின்று.

70. பாராதே அந்தப் பரம சுகந்தன்னை
நேராகத் தானு [1]நிழல்போலத்—தீராச்
சுபாவம் [2]அதுவாகத் தோன்றிமறை யாதே
அபாவமாய் நில்லாய் அதில். உ

## பரமானந்த போகம்

71. நின்றபர மானந்தம் நேரே அநுபவித்தங்
கொன்றுபட உள்ளுருகி ஓவாமல்—என்றும்
மதுவுண்ட வண்டுபோல் மாளாச் சுகத்தைப்
புதிதுண் டிருந்துவிடிப் போது. க

72. பருகத் தொலையாப் பரபோகந் தன்னை
உருகிஅடி யேன்அருந்த ஊட்டும்—குருவே
அழியாத இன்பம் அரன்அருந்தான் என்னும்
வழிஎது சொல்லீர் மகிழ்ந்து. உ

73. சற்கரை தான் ஆர்க்கும் தரும்இரதம் அவ்விரதம்
சற்கரை தான் கொள்ளுமோ சாற்றுங்கால்—சற்கரைக்
றின்புருவ மன்றி எழிலுருவம் வேறுண்டோ [கின்
இன்புருவ மேஇறைக்கும் என். ௩

74. நாவா ரிரதமது நாஅருந்த லல்லாதிங்
காவா இரதம் அறியுமோ—ஓவாப்
பரமசுகம் உன்பாற் பலிப்பதே யன்றிப்
பரமசுகங் கொள்ளா பயன். ௪

75. இந்தச் [3]சுகம்ஆன்ம லாப மெனஅறிநீ
அந்தச் சுகமொழிந்திங் காராதே—இந்தச்
சுகமெலாம் அந்தச் சுகமாக்கில் உன்றன்
அகமெலாம் ஆனந்த மாம். ௫

## பரமானந்த மேலீடு

76. அண்ணலும்ஆ னந்தம் அருளும்ஆ னந்தம்உயிர்
எண்ணிலா ஆனந்தம் எவ்வுலகும்—பண்ணி

---

(பி - ம்)—[1]நிலைபோலத். [2]அதுவாகித். [3]சுகமாகில்.

அளித்தழிப்பா ராகும் அவர்களும்ஆ னந்தம்
களித்ததுவே எப்போதும் காண். க

77. எங்குநிறைந் தானந்த மெல்லாம் அமிழ்த்திமிகப்
பொங்கிக் கரைபுரண்டு பூரணமாய்—[1]அங்கு
விளைத்த உலகுயிரும் வாய்த்த சுகமாம்
அளத்திற் புகுந்ததுபோல் ஆங்கு. உ

78. கண்ட இடமெல்லாம் கருணைக் கடலமுதம்
மொண்டுகொள லாய்நிறைந்த முத்திதனைப்—பண்டே
திருமா லயனறியாத் தேசிகனார் பாதம்
தருமாம் [2]அடியேற்குத் தான். ந

பரமானந்த அவசம்

79. பரமபர மானந்தம் பார்கீழ்மேல் மற்றும்
அரவம்வா ராதே அகலும்—புரணமாய்
ஆங்கே அமிழ்ந்தி அவசமாம் ஆனந்தம்
நீங்கா ததுவாகி நில். க

80. உற்றபர மானந்தத் தொன்றாய் அதில்உறங்கி
முற்றுவதே முத்திமுடி வென்றுரைக்கும்—குற்றமிலா
வைதிக சைவம் வழிநூல் புராணமற்றுஞ்
செய்வனநூ லெல்லாம் தெளி. உ

அணுவகை

81. ஒன்றிரண்டு மூன்றுமல முள்ளஉயிர் மூவர்க்குஞ்
சென்றிவன்போல் நேரே சிவமாகி—நின்றநிலை
இவ்வகையே ஆளும் எழிற்குருவாம் ஈசனே
அவ்வகையை நீஅங் கறி.

பஞ்சாக்கர தரிசனம்

82. அஞ்செழுத்தும் அண்ணலருள் ஆன்மாத் திரோதமலம்
மிஞ்சி நமத்துரந்து மெய்யருள்வாத்—தஞ்சச்

(பி - ம்)—[1]எங்கு. [2]அடியேற்குந்.

சிகாரத்தில் யவ்வைவிடுந் தீதிலா இன்பப்
புகாரிற் புகுந்தருந்தப் போய்.

## குருத்துதி

83. பற்றிநின்ற பாசம் பறித்தகல வேவிழித்திட்
டுற்றஉயிர் காட்டி உணர்வுணர்த்தி—மற்றுஞ்
சிவப்பேறு தந்து சிவபோக வாரி
புகப்பே றளித்தவரைப் போற்று.

## சீடவிலக்கணம்

84. இரவு பகல்நிழல்போல் இட்டபணி செய்து
குரவர்புகழ் வாயாரக் கூறித்—திருமுன்
விழுந்துவிழி நீர்பொழிய மெய்விதிர்த்து நின்று
தொழுந்தவத்தோர் காணுஞ் சுகர்.

## [1]முத்தனுக்கு முத்தியின்மை கூறல்

85. ஆகமுதல் நீங்கி அருளிற் கலந்துசிவ
போகம் விளையப் புணர்ந்தாலும்—வேகத்
தெரிவாய் நிரயத் திருப்பார் குருச்சொற்
பிரிவார் உலகிற் பிறந்து.

## குரு வழிபாடே பொருளெனக் கூறல்

86. ஆகம் உயிர்பொருள்கொண் டன்றே அருள்அளித்துச்
சோகமெனப் பாவிக்கச் சொன்னானைத்—தாகத்தோர்
வேண்டும் பொழுதெல்லாம் வேண்டுபொருள் வந்தது
பூண்டுதொழ லன்றோ பொருள். [போற்

## திருமேனி யருமை கூறல்

87. அன்றுமுத லாகவே ஆருயிர்கட் காருயிராய்
நின்றருளும் தம்பிரான் நீங்காமல்—என்றுங்
கருவாய்ப் பிறப்பைக் கழற்றினரோ தாமே
குருவாய் அருளாமற் கூறு.

---

(பி - ம்)—[1]முத்தனுக்கு முத்தியின்பங் கூறல்.

## குருவே சிவமென்றல்

88. பாசம் பசுபதியைப் பாரித்துப் பார்த்தனரே
ஆசில் அகலறிவாய் ஆங்ககன்று—பேசரிய
ஆனந்தம் பெற்ருர் அருட்குருவே ஈசனென்பர்
மோனமே முற்றும் முயன்று.

## குருபணி செய்வாரை வழிபடுதல்

89. கருவேலை தன்னைக் கடப்பர் உலகில்
மருவாத இன்பத்துள் வைத்த—குருவின்
அடியார் அடியார் அடியார் அடியார்
அடியாரைச் சார்ந்த அவர்.

## யோகம்

90. சன்மாற்கம் ஈதாம் சகமாற்கம் சாற்றுங்கால்
பன்மார்க்கம் வாயுப் பகர்கருவி—தன்மாற்கஞ்
சால ஒடுக்கித் தடுத்து வளியிரண்டும்
மாலறவே நிற்கை மகிழ்ந்து. க

91. அந்த மனத்தாலே ஆதாரம் ஆறினையும்
சந்தித் ததிற்பொருள்கள் தான்அறிந்தி—டிந்துவில்
ஓவா ஒளிவைத் தருகும்அமு துள்நிறைக்கில்
ஓவா ஒளியாம் உரு. உ

92. நின்ற ஒளியுருவின் நீங்காமல் நிற்கவே
என்றும் அழியாமல் இன்புற்றுக்—கொன்றையந்தார்த்
தாணுவுருப் போலேபின் சாரூப் பியத்திலே
மாணவக வாழ்வாய்காண் மற்று. ந

## கிரியை

93. புத்திர மாற்கம் புகைஒளி மஞ்சனம்பூ
வைத்தமுது தாம்பூலம் மற்றெவையும்—உத்தமமாய்த்
தேடிவைத்துப் பின்னைச் சிவபூசை செய்வதற்கு
நாடவத்திற் செல்லாமல் நாள். க

94. சுத்திஐந்து செய்து துகள்தீரும் மந்திரத்தால்
அத்தமது பத்துமுகம் ஐந்தாக—வைத்துவைத்து
வித்தியா தேகம் விதிப்படியிற் ரூபித்துப்
பத்தியால் மேனிதனைப் பார். ௨

95. பார்த்ததிரு மேனிப் படிகந் தனிற்பரனைக்
கோத்ததிரு மந்திரத்தாற் கொண்டுவந்து-பார்த்தருளச்
சொல்லிப் பராக்கறுத்துச் சோதிச் சிவாகமத்தின்
சொல்லிற் படியே துடங்கு. ௩

96. சோராமற் பூசித்துச் சொன்னபடி நில்இதழித்
தாரார் சமீபத்தில் தான்இருந்து—வாராமல்
தானே பரன்அளிக்குஞ் சங்கரனார் அம்முத்தி
தானே தரினுந் தரும். ௪

சரியை

97. தாதமாற் கஞ்சாற்றிற் சங்கரனார் இன்புற்ற
பூதி திருவேடம் போற்றியே—நீதியினாற்
பூங்கா வனஞ்சமைத்துப் பூமாலை புண்ணியற்குப்
பாங்காகச் செய்கை பரிந்து. ௧

98. அலகு திருமெழுக்கிட் டாலயத்தில் அன்பால்
இலகு திருவிளக்கும் ஏற்றிப்—பலகாலும்
சென்று வணங்கித் திருவடிவா ரஞ்சேர்த்தி
நின்றிடுகை தொண்டர்பணி நேர். ௨

99. கொன்றையந்தார் வேணியற்குக் கோயில் பலசமைத்துப்
பொன்றியவை முற்றும் புதுக்குவித்து—நின்றார்
அவலோகந் தன்னில் அடையார் அடைவர்
சிவலோகந் தன்னிற் சிறந்து. ௩

100. அந்த மலம்அறுத்திங் கான்மாவைக் காட்டியதற்
கந்த அறிவை அறிவித்தங்—கிந்தறிவை
மாறாமல் மாற்றி மருவுசிவப் பேறென்றுங்
கூறாமற் கூறக் கொடி. ௪

## வெண்பா

சாக்கிரம் பத்தொன் பதுகனவு தாறொன்று
தூக்குசுழி யொன்று துரியமெட்டு—நீக்கு
துரியாதீ தம்மொன்று சுத்தவத்தை முப்பான்
சரியித் துகள றுபோ தம்.

[இவ் வெண்பாவும் கீழ் வரும் குறிப்பும் என்னிடத்திலுள்ள மெய்கண்ட சாத்திர மூலப் பிரதியில் மாத்திரம் இந்நூல் முடிந்த விடத்துக் காணப்படுகின்றன.]

## துகளறுபோதத்தில் அவதரம் முப்பதுக்கு வகை

1. பூதப் பழிப்பு
2. பொறியறவுணர்தல்
3. அந்தக்கரண சுத்தி
4. கலாதிஞான நிராகரணம்
5. சுத்ததத்துவ தூடணம்
6. தத்துவாதீதம்
7. சகல தரிசனம்
8. கேவலம்
9. கேவல தரிசனம்
10. கேவலாதீதம்
11. தன்னுண்மை
12. சைதன்னிய தரிசனம்
13. ஞானதரிசனம்
14. பரைதரிசனம்
15. பரையில் வியாத்தம்
16. பராயோகம்
17. பராபோகம்
18. சுத்தபராயோகம்
19. சுத்தபராபோகம்

முத்திசாக்கிர மென்பதும் இவை.

20. சாக்கிராதீதம்: சொப்பன மென்பதும் இது.
21. பரையி லதீதம்: சுழுத்தி யென்பதும் இது.
22. சுத்தவவத்தை
23. சுகசொரூபம்

: துரியமென்பதும் இவை.

24. சுகாதீதம்: துரியாதீதமென்பதும் இது.

ஆக முத்திவரையில் இருபத்து நாலு.

'வானகத்து வானு' மென்னுங் (60) திருப்பாட்டில் துரிய வவத்தையி லின்னு மீண்டு சொல்லவுண்டேல் விதிப்பாயாக வென்று மாணக்கன் கேட்ப ஆசிரியர் அருளிச் செய்தது:

25. சுகப்பேறு
26. பரமானந்த தரிசனம்
27. பரமானந்த யோகம்
28. பரமானந்த போகம்
29. பரமானந்த மேலீடு
30. பரமானந்த அவசம்

ஆக - 30

[**துகளறுபோதம்** மதுரைச் சிவப்பிரகாசர் திராவிடமாபாடியகாரர் முதலிய சித்தாந்த சாத்திர வுரையாசிரியர்களால் எடுத்தாளப் பட்ட அரிய நூல். மெய்கண்ட சாத்திரம் பதினுன்கெனக் கணக்குக் காட்டும் 'உந்திகளிறு' என்னும் வெண்பாவுக்கு மாருக என்னிடத்திலுள்ள மெய்கண்ட சாத்திர ஓலைச் சுவடியிலும், திரு. வையாபுரிப் பிள்ளையவர்கள் நன்முயற்சியாற் கிடைத்த ஓலைச் சுவடியிலும் **உண்மைநெறி விளக்கம்** காணப்படாது **துகளறுபோதம்** காணப்படுகிறது. அதனால் மெய்கண்ட சாத்திரப் பதிப்பில் அதனைச் சேர்த்தல் ஒழுங்காம்.

**துகளறுபோத** மருளிச் செய்தவர் சீகாழிச் சிற்றம்பல நாடிகள். உமாபதிசிவாசாரியர் சீடர் அருணமச்சிவாயர் என்றும், அவர் சீடர் காழிக் கங்கை மெய்கண்டார் என்றும், அவர் சீடர் சிற்றம்பல நாடிகள் என்றும் உரைப்பர். இவர் **தத்துவப்பிரகாச** ஆசிரியர் தத்துவப் பிரகாசர், காஞ்சி ஞானப்பிரகாசர் முதலிய அறுபத்துமூவர் சீடரையுடையரா யிருந்து மாயூரத்தை யடுத்த சித்தர்வனத்திலே சமாதியாயினர். இவரையன்றிக் காழிக் கங்கை மெய்கண்டார் சீடர் காழிப் பெரும்பழுதைகட்டி சிற்றம்பலவர் மதுரையிலிருந்தனர் என்றும், காழிச் சிறுபழுதைகட்டி சிற்றம்பலவர் திருச்செந்தூரிலிருந்தனர் என்றும் உரைப்பர். முதலவர் சீடர் சீகாளத்தியிலிருந்த பழுதைகட்டி ஞானப்பிரகாசர் என்றும், அவர் சீடர் தருமையாதீனத்து ஸ்தாபகராகிய ஞானசம்பந்த தேசிகர்க்குக் குருவாகிய கமலை ஞானப்பிரகாசரென்றும் கூறுவர். பின்னவர் **திருச்செந்தூரகவல்** பாடியவர் என்பர். சீகாழிச் சிற்றம்பலநாடிகள் காலம் கி. பி. பதினுன்காம் நூற்றாண்டாகும். இவ் விவரங்கள் சீகாழி வித்துவச் சிகாமணி ப. அ. முத்துத்தாண்டவராய பிள்ளையவர்கள் எனக்குத் தந்தவை. **திருச்செந்தூரகவலில்** சிற்றம்பலவர் தமக்கு முருகப்பிரானே குருவாக வந்து உபதேசித்தாரென் றுரைத்தமை இங்குக் குறிக்கத்தக்கது. **துகளறுபோதம்** திருநெல்வேலி பால்வண்ண முதலியாரவர்களாலும், நாகபட்டினம் வேதாசலம் பிள்ளையவர்களாலும் [1898], திருமயிலை சண்முகம் பிள்ளையவர்களாலும் [1904] முன்னமே வெளியிடப்பட்டுள்ளது. ஆயினும் பிரதிகள் கிடைப்பது அருமை. இப் பதிப்பிற்கு ஆதாரமாயிருந்த பிரதிகள் என்னிடத்திலுள்ள இரண்டு ஓலைச் சுவடிகளிலும், திரு. வையாபுரிப் பிள்ளை யவர்கள் நன்முயற்சியாற் கிடைத்த ஓலைச்சுவடியிலும், இராசாங்கக் கையெழுத்து நூல் நிலயத்துள்ள ஓலைச் சுவடியிலும் உள்ளவை. அச்சிலுள்ள பிரதிகளும் உபகாரப் பட்டன.

**—S. அனவரதவிநாயகம் பிள்ளை.**]

சிவமயம்

# பாட்டு முதற்குறிப்பகராதி



